# செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி

# A COMPREHENSIVE ETYMOLOGICAL DICTIONARY OF THE TAMIL LANGUAGE

மூன்றாம் மடலம் - இரண்டாம் பாகம்

## சி - சூ

Vol. III - Part - II


பு.ஏ. இராமையா இ.ஆ.ப.,
அரசு செயலாளர்,
தமிழ் வளர்ச்சி - பண்பாடு மற்றும் அறநிலையத்துறை

தா. சந்திரசேகரன் இ.ஆ.ப.,
இயக்குநர் (முழுக்கூடுதல் பொறுப்பு)
செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்



செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட
இயக்கக வெளியீடு

2004

# செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி

# A COMPREHENSIVE ETYMOLOGICAL DICTIONARY OF THE TAMIL LANGUAGE

மூன்றாம் மடலம் - இரண்டாம் பாகம்

சீ - தௌ

**Vol. III - Part - II**


**பு.ஏ. இராமையா இ.ஆ.ப.,**

அரசு செயலாளர்,

தமிழ் வளர்ச்சி - பண்பாடு மற்றும் அறநிலையத்துறை

**தா. சந்திரசேகரன் இ.ஆ.ப.,**

இயக்குநர் (முழுக்கூடுதல் பொறுப்பு)

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்

**மேற்பார்வையாளர்**

**முனைவர் சா. கிருட்டினமூர்த்தி**

இயக்குநர், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்



செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட

இயக்கக வெளியீடு

2004

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித்திட்ட இயக்கக வெளியீடு - 8

முதற் பதிப்பு : 2004

A Comprehensive Etymological Dictionary of the Tamil Language, Vol. III, Part - II

பதிப்புரிமை : தமிழ்நாட்டரசு

விலை : உருபா 300/-

குறியீட்டெண் : Colon No. P.J1-J, 314" K.M4

வெளியிட்டோர் : செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்
சி-48, முதல் தளம்,
தமிழ்நாட்டு வீட்டுவசதி வாரிய அலுவலக வளாகம்
அண்ணாநகர், சென்னை - 600 040

அச்சீடு : உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சி.பி.டி. வளாகம், தரமணி
சென்னை - 600 113

நூல் கிடைக்குமிடம் : உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சி.பி.டி. வளாகம், தரமணி
சென்னை - 600 113

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்
சி-48, முதல் தளம்,
தமிழ்நாட்டு வீட்டுவசதி வாரிய அலுவலக வளாகம்
அண்ணாநகர், சென்னை - 600 040

# செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி

## A COMPREHENSIVE ETYMOLOGICAL DICTIONARY OF THE TAMIL LANGUAGE

**Vol. III - Part - II**

**மூன்றாம் மடலம் - இரண்டாம் பாகம்**

**(சி முதல் சூ வரை)**

**பதிப்புக் குழு**


திரு. பு.ஏ. இராமையா இ.ஆ.ப.,
அரசு செயலாளர்,
தமிழ் வளர்ச்சி - பண்பாடு மற்றும் அறநிலையத்துறை

திரு. **தா. சந்திரசேகரன்** இ.ஆ.ப.,
அரசு சிறப்புச் செயலாளர்,
தமிழ் வளர்ச்சி - பண்பாடு மற்றும் அறநிலையத்துறை
மற்றும்
இயக்குநர் (முழுக்கூடுதல் பொறுப்பு)
செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்

**மேற்பார்வையாளர்**

முனைவர் **சா. கிருட்டினமூர்த்தி**
இயக்குநர், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்

**கூர்ந்தாய்வாளர்**

புலவர் **த. சரவணத் தமிழன்**

**தொகுப்பாளர்கள்**

திரு. **முத்து. பிச்சை**
முனைவர் மு. **கண்ணன்**
முனைவர் பா. **வெற்றிச்செல்வன்**
முனைவர் ச. **செந்திலாண்டவன்** (பகுதிப்பொறுப்பாளர்)
முனைவர் இரா.கு. **ஆல்துரை**
திரு. கா. **இளமுருகு**
திரு. **ச.கி. கணேசன்** (ஓவியர்)



செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்

ஜெ ஜெயலலிதா




22.12.2004

## அணிந்துரை

'ஒண்டமிழ்த்தாய் சிலம்படியின் முன்னேற்றம் ஒவ்வொன்றும் உன் முன்னேற்றம்' என்னும் வைர வரியில் தமிழின் முன்னேற்றமே தமிழர் முன்னேற்றம் என்பதை எடுத்துக் காட்டினார் பாவேந்தர் பாரதிதாசன் அவர்கள்.

பாவேந்தர் பணித்தபடி, ஒல்லும் வகையில் எல்லாம் அந்த ஒண்டமிழை வளர்க்க உற்ற பணி புரியும் நற்றமிழ் அரசே தமிழ் நாடு அரசு.

காலத்தை வென்று நிற்கும் நம் கன்னித் தமிழை இந்திய அரசின் ஆட்சி மொழியாக ஆக்குவதற்கும், உயர்தனிச் செம்மொழியாம் தமிழ் மொழியின் ஒப்பற்ற இலக்கியமாகவும், உலக சிந்தனையின் உச்சமாகவும் விளங்கும் திருக்குறளைத் தேசிய இலக்கியமாக ஆக்குவதற்கும், இடையறா முயற்சிகளை எடுத்து வருகிறது எனது அரசு. அனைத்து மாணவரும் தமிழைப் பயில வேண்டும் என்பதற்காக மழலையர் வகுப்பு முதல் பன்னிரண்டாம் வகுப்பு வரை அறிவியல் தமிழைக் கற்பிக்க ஏற்பாடு செய்ததும் எனது அரசே.

வளர்ந்து வரும் அறிவியலுக்கு ஈடு கொடுக்கும் வகையிலும், இலக்கண இலக்கிய மரபுகளைப் பேணிக் காக்கும் முறையிலும் மொழியின் சொல்வளத்தை அறிந்து கொள்வதும், பெருக்குவதும் இன்றியமையாததாகும். இப் பயன்பாட்டு நோக்கில் 'செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகர முதலி' (A comprehensive Etymological Dictionary of Tamil Language) நூல்களை உருவாக்கும் திட்டம் தோற்றுவிக்கப்பட்டது. இப் பணியின் தனித் தன்மை கருதி, பன்மொழிப் புலமையும், ஆய்வு நுட்பமும், தமிழ்ப் புலமையும், ஒருங்கே அமையப் பெற்றிருந்த மொழி ஞாயிறு தேவநேயப் பாவாணர் அவர்களை இயக்குநராகக் கொண்டு இத் திட்டம் தொடங்கப்பட்டது. பைந்தமிழ் அறிஞர் பாவாணர் அவர்கள் 'தனித் தமிழ் இயக்கம்' கண்ட மறைத்திரு மறைமலை அடிகளார் வழியில் தமிழ் ஆய்ந்து தமிழே உலக முதன்மொழி என்பதை உலகுக்கு உணர்த்தியவர் ஆவார்.

அவர் தொடங்கி வைத்த செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்டம், அருந்தமிழின் வளர்ச்சிக்கு அடிப்படையான தலையாய பணிகளில் ஒன்றாகும் என்பதைக் கருத்திற் கொண்டு எனது அரசு இத் திட்டத்திற்கு ஆக்கமும் ஊக்கமும் அளித்து வருகிறது. இத் திட்டம் தொடங்கப்பட்ட நாளிலிருந்து 6 பகுதிகள் மட்டுமே முடிக்கப்பட்டிருந்தன. இவற்றில் 'அ' முதல் 'ஙௌ' வரையிலான எழுத்துக்களில் அமையும் சொற்கள் பற்றிய விளக்கங்கள் இடம் பெற்றுள்ளன. தற்பொழுது 'ச' வரிசையில் மூன்று பகுதிகளும் 'த' வரிசையில் மூன்று பகுதிகளும் ஆக மேலும் 6 பகுதிகள் முடிக்கப்பட்டு வெளியிடப் பெறுவதை அறிந்து நான் மிக்க மகிழ்ச்சி அடைகிறேன்.

இயல், இசை, நாடகம் எனும் முத்தமிழோடு இந்த யுகத்தின் நான்காவது தமிழாகிய 'அறிவியல் தமிழ்' வளர, அறிவியலைத் தமிழில் கூறுவதற்கான சொற்களைக் கண்டறிய வேண்டியது இன்றியமையாததாகும். அதற்காக ஏற்கெனவே தமிழில் உள்ள சொல்வளத்தை அறியவும், புழக்கத்தில் இல்லாத சொற்களைப் புதுப் பயன்பாட்டிற்குக் கொண்டு வரவும், புதிய சொற்களை உருவாக்கவும், சொற்களின் வேர்களை ஆராய்ந்து புதியன படைக்கவும் இன்றைய தமிழ் வளர்ச்சியின் உடனடித் தேவையை நிறைவு செய்வதாக செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகர முதலி நூல் மடலங்கள் அமைகின்றன.

இம் மடலங்கள் தமிழின் அழிவிலாச் சொத்தாக விளங்கும் என்பது உறுதி.

இப் பகுதிகள் வெளிவர அயராது உழைத்த அறிஞர் பெருமக்களையும், அலுவலர்களையும் நான் மனமாரப் பாராட்டுகிறேன்.

**வாழ்க தமிழ்!**
**வளர்க தமிழ்ப் பணி!**

**ஜெ ஜெயலலிதா**
**தமிழக முதலமைச்சர்**



மாண்புமிகு தமிழ்நாடு முதலமைச்சர்

டாக்டர் செல்வி ஜெ ஜெயலலிதா

சி.வி. சண்முகம்
கல்வி மற்றும்
வணிக வரித்துறை அமைச்சர்



தலைமைச் செயலகம்
சென்னை - 600 009

# அணிந்துரை

“ஒரு மொழிக்குட்பட்ட சொற்களை ஆராயும் சொல்லாராய்ச்சியும் பல மொழிகளை ஒப்பு நோக்கும் மொழியாராய்ச்சியும் மேனாட்டாரிடமிருந்து நாம் அறிந்தவை.

இயற்சொல் திரிசொல் திசைச்சொல் வடசொல் என்று
அனைத்தே செய்யுள் ஈட்டச் சொல்லே (தொல்.சொல்.எச்.1)

என்று தொல்காப்பியர் காலத்திலேயே சொல்லாராய்ச்சியும் மொழியாராய்ச்சியும் ஓரளவு தமிழ்நாட்டிலிருந்ததேனும் விரிவான முறையிலும், நெறிப்பட்ட வகையிலும் சொன்னூலும் (Etymology), மொழிநூலும் (Philology) நாம் பெற்றது மேலையரிடமிருந்தே”. இது, மொழிஞாயிறு தேவநேயப் பாவாணர் அவர்கள் தம் சொல்லாராய்ச்சிக் கட்டுரைகள் என்ற நூலைச் சேலத்திலிருந்து 1948-இல் வெளியிட்டபோது, அந்நூலில் அவரே எழுதிய முகவுரை. ஆகப் பல்லாண்டுகளாகச் சொல்லாராய்ச்சியிலேயே தம்மை ஆட்படுத்திக் கொண்டு, நுணுகி நுணுகித் துருவித் துருவிப் பார்த்ததன் தெள்ளிய வெளிப்பாடுதான் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலி. அதன் வாயிலாகத் தமிழின் சொல்வளத்தை நாம் அறிகின்றோம். அத்துடன் நில்லாது தொன்றுதொட்டு இன்று வரையுமுள்ள பண்பாடு, நாகரிகம், வரலாறு ஆகியவற்றையும் அறிய முடிகிறது.

தமிழ் பிறமொழியின் கலப்பில்லாமல் தனித்தியங்கும் ஆற்றலுடைய தன்னிகரில்லா மொழி என்று உலக மொழியறிஞர்களெல்லாம் ஒப்புக் கொள்கின்றனர். செந்தமிழின் நீண்ட நெடிய சொல்வள வரலாற்றில் சொல்லும் பொருளும் பெருகியுமுள்ளன; அருகியுமுள்ளன! வழக்கிழந்த சொற்களை மீட்பதற்கும், அனைத்துச் சொற்களையும் காப்பதற்கும் அகரமுதலிகள் இன்று வழிவகுக்கின்றன.

இலக்கியச் சொல்லாட்சிகள் முதலாக இன்றைய பேச்சு வழக்குச் சொல்லாட்சிகள் ஈறாக அனைத்தையும் உள்ளடக்கிச் சொற்களின் வடிவம், பொருள், பிறப்பு போன்றவை பற்றிய தேவையான செய்திகளுடன் விளக்கமுற உரைப்பவையாக இருப்பவையே செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலியின் மடலங்கள்.

மொழிஞாயிறு தேவநேயப் பாவாணரின் நூற்றாண்டு விழா கண்ட நம் **புரட்சித் தலைவி மாண்புமிகு முதலமைச்சர் அம்மா** அவர்களின் சீரிய தலைமையில் அமைந்த அரசு, அவரின் தனித்தமிழ்ப் பற்றினைப் பேணிக் காத்திடவும், அவர் காட்டிய நெறிமுறைகளின்படி அகரமுதலி மடலங்கள் வெளிவரவும் ஆக்கமும் ஊக்கமும் அளித்து வருகிறது. தமிழகத்தை முன்னேற்றப் பாதையில் கொண்டு சென்று இந்தியாவிலேயே தலைசிறந்த முதன்மை மாநிலமாக மாற்றிடச் சூளுரைத்துச் செயற்பட்டு வரும் **புரட்சித் தலைவி மாண்புமிகு முதலமைச்சர் அம்மா** அவர்களின் சீரிய வழிகாட்டுதல்படி தமிழக அரசு முனைந்து பீடுநடை போடுகின்றது.

'செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலியின் எஞ்சிய பகுதிகள் யாவும் நான்காண்டுக்கால வரம்பெல்லைக்குள் வெளிக்கொணரப்படும்' எனச் சட்டப்பேரவையில் அறிவித்தபடி 'ச'கர மடலத்தின் 3 பகுதிகளும், 'த'கர மடலத்தின் 3 பகுதிகளும் இப்போது ஒருசேர வெளிவருவது, மிகவும் மகிழ்ச்சிக்குரியதாகும். முன் எப்போதும் இல்லாதவாறு 6 பகுதிகள் ஒருசேர முடிக்கப்பெற்று வெளியிடப்பெறுவது அருஞ்சாதனையே! அதற்கு முதற்காரணம் நம் **புரட்சித் தலைவி மாண்புமிகு முதலமைச்சர் அம்மா** அவர்களே என்பது மறுக்க முடியாத உண்மை. 6 பகுதிகள் சீரிய முறையில் வெளிவர அரும்பங்காற்றிய தமிழ் வளர்ச்சி - பண்பாடு மற்றும் அறநிலையத்துறைச் செயலாளர் திரு. பு.ஏ. இராமையா இ.ஆ.ப., அவர்களுக்கும், அகரமுதலித் திட்டப் பொறுப்பு இயக்குநர் திரு. தா. சந்திரசேகரன் இ.ஆ.ப., அவர்களுக்கும், அகரமுதலி மேற்பார்வையாளர் முனைவர் சா. கிருட்டினமூர்த்தி அவர்களுக்கும், கூர்ந்தாய்வுப் புலமையாளர்களுக்கும் மற்றும் அகரமுதலித் தொகுப்பாளர்களுக்கும் என்னுடைய பாராட்டுகள். இதேபோல மற்றப் பகுதிகளையும் விரைந்து முடித்து வெளியிடத் தொடர்ந்து பாடுபடுமாறு கேட்டுக்கொள்கிறேன்.

31.8.04

**சென்னை**

**சி.வி. சண்முகம்**
**கல்வி மற்றும்**
**வணிக வரித்துறை அமைச்சர்**

பு.ஏ. இராமையா, இ.ஆ.ப.,
அரசு செயலாளர்



தமிழ் வளர்ச்சி-பண்பாடு
(ம) அறநிலையத்துறை
தலைமைச் செயலகம்
சென்னை - 600 009

# அணிந்துரை

"கல்தோன்றி மண்தோன்றாக் காலத்தே வாளொடு
முன்தோன்றி மூத்த குடி" (பு.வெ.மாலை)

என்று தமிழ்க்குடி பாராட்டப்பெறும். அவ்வகையில் எத்திசையும் புகழ்மணக்க இருந்த பெருந்தமிழணங்கின் சீரிளமைத்திறம் வியந்து தம்முடைய வாழ்நாள் பணியாகச் சொல்லாராய்ச்சியை மேற்கொண்டவர் மொழிஞாயிறு ஞா. தேவநேயப் பாவாணர் அவர்கள்.

முதல் மாந்தன் தோன்றிய இடம் குமரி; உலக முதன் மொழி தமிழ். என்ற கோட்பாட்டில் திளைத்து, அக்கோட்பாட்டின் அடிப்படையில் தம் ஆராய்ச்சியை அமைத்து முதன்மொழியாகிய தமிழின் சொற்பிறப்பாய்வைத் துருவித்துருவியாய்ந்து மிகத் துல்லியமாக வேர் விளக்கம் கண்டவர் பாவாணரே.

இப்பெருமகனாரைப் போலத் தனித்தமிழ் ஆய்வுக் கருத்துகளை இதுவரை எந்தவோர் அறிஞரும் வழங்கிடவில்லை; பெருஞ்சித்திரனார் கூறுவதைப்போலத் "தமிழ்த் துறைக்கு அவர் தொண்டு புதியது; தமிழர்க்கு அவர் கருத்துகள் மயக்கறுப்பன; மேனாட்டார்க்கு அவர் நூல்கள் வியப்பளிப்பன; அவர் எடுத்துக் கொண்ட முயற்சி அரியது. தொல்காப்பியர் காலத்திற்குப் பின் தமிழ் தன்னை நிலைப்படுத்திக் கொள்ளும் ஒட்டுமொத்த முயற்சிக்குப் பாவாணர் என்றே பெயரிடலாம்". இவ்வுரைக்கு ஏதும் மறுப்புரையுண்டோ?

"கதிர்தரு ஒளியென மொழிதரு மலையே!
முதிர்முகி லெனவே வேர்பொழி விளைவே
தமிழ்ச்சுட ரணிதலைப் பாவா ணர்தான்
தமிழ்மகள் பெறுதவப் பேரறிவாளன்!

வேர்ச்சொல் லாய்வின் வித்தகன்! மொழியின்
போர்ப்படைத் தலைவன்! புலமைப் புதையல்!
தலைவ! நீதரும் ஒளியே பாதை
விலைமதிப் பில்லா வெற்றியைத் தருமே!"

என்றொரு பாவலர் பாடியதற்கேற்பப் பாவாணர் பெரும்புகழ் பெற்ற அமுதப்படையல்!

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி 12 மடலங்களில் 31 தொகுதிகளாக வெளியிடத் திட்டமிடப்பட்டதாகும். கடந்த 28 ஆண்டுகளில் 6 தொகுதிகள் மட்டுமே வெளிவந்துள்ள நிலையில், சுணக்கமுற்றிருந்த அகரமுதலித் திட்டத்திற்கு மாண்புமிகு முதலமைச்சர் அவர்கள் புதுத்தெம்பு ஊட்டியதன்விளைவாய், எஞ்சிய 25 தொகுதிகளை நான்காண்டுக் கால வரம்பெல்லைக்குள் வெளிக்கொணரப் பணிகள் முடுக்கிவிடப்பட்டன. அதன் வெளிப்பாடே இப்போது 'ச' மற்றும் 'த' மடலங்களின் 6 தொகுதிகள் ஒருசேர வெளிவருகின்றன. இது ஓர் அரும்பெருஞ் செயல் என்றால் மிகையாகாது.

இத்தொகுதிகளில் காட்டப்பெறும் தமிழ்ச் சொற்களின் விரிவும் விளக்கமும் நம்மை வியப்பிலாழ்த்துகின்றன. எடுத்துக்காட்டிற்கு ஒன்றிரண்டினைக் குறிப்பிட விரும்புகிறேன்.

'ச'கர மடலத்தின் முதற்பகுதியில் (ச, சா) வரும் **'சக்கரம்'** என்ற சொல்லிற்கு 27 வகையான பொருள் விளக்கங்கள் தரப்பட்டுள்ளன. அதுமட்டுமல்லாது இலக்கிய மேற்கோள்களும் வேர் விளக்கமும் அருமையாக எடுத்துரைக்கப்பட்டுள்ளன.

**சருக்கு - சருக்கரம் - சக்கரம்** (வே.க. 239)

அதேபோல் **'சத்தம்'** என்ற சொல்லுக்கான விளக்கமும் அருமை.

சாத்து = பண்டங்களைக் கொண்டு விற்கும் வணிகர் கூட்டம். சாத்துவண்டிக்குக் கொடுக்கும் கூலி சாத்தம் எனப்பட்டது. வண்டிச்சாத்தம் = வண்டிக்கூலி. சாத்தம் - சத்தம் ஆயிற்று.

அடுத்து, இரண்டாவது தொகுதியில் (சி-சூ), 'சிலை' என்ற சொல்லிற்குக் காட்டப்பட்டுள்ள விளக்கம் அழகுற அமைந்துள்ளது. 'சீரகம்' என்ற சொல்லிற்குப் பொருள் - வேர் விளக்கம் - விரிவுப் பொருள் காட்டியிருப்பது திகைக்க வைக்கிறது.

**சீர் - சீரம் - சீரகம்**

உலகில் முதன்முதலாகச் சிறந்த முறையில் சமையல் தொழில் தொடங்கியதும் அதற்குச் சீரகத்தைப் பயன்படுத்தியதும் தமிழகமே! என்பதற்குச் சான்றுகள் பல உள.

"சிறுபிள்ளை இல்லா வீடும், சீரகம் இல்லாத கறியும் செவ்வையாயிரா" என்பது தொன்று தொட்டுவரும் பழமொழி.

சீரகக்கோரை, சீரகச்சம்பா, சீரகவள்ளி என்பன ஒப்புமை பற்றிப் பெயர்பெற்ற நிலைத் திணை வகைகள். பொன்னளவையிற் சீரகம் என்பது ஓர் அளவு.

**5 கடுகு = 1 சீரகம்; 5 சீரகம் = 1 நெல்**

**"அளவிற்கும் நிறையிற்கும் மொழிமுதலாகி**
**உளவெனப் பட்ட வொன்பதிற்றெழுத்தே**
**அவைதாம்**
**கசதப வென்றா நமவ வென்றா**
**அகர உகரமோ டவையென மொழிப"** **(தொல்.எழுத். 170)**

என்னும் தொல்காப்பிய எழுத்ததிகார நூற்பா உரையில் கழஞ்சு, சீரகம், தொடி, பலம், நிறை, மா, வரை, அந்தை என்று இளம்பூரணரும், 'கழஞ்சு, சீரகம், தொடி, பலம், நிறை, மா, வரை, அந்தை, இவை நிறை' என்று நச்சினார்க்கினியரும் கூறியிருத்தலையும் நோக்குக.

**செரி - செரியகம் - சீரகம்**

என்றுமாம். வடவர் மூலம் காட்டும் வகை. ஜீரக - ஜீரண; ஜ்ரு - ஜீரண, ஜ்ரு - கிழமாக்கு, கட்டுக்குலை, கரை, செரிக்கச் செய். ஜ்ரு என்பது கிழ என்னும் தென்சொற்றிரிபே (வ. மொ. வ.153).

அடுத்து, மூன்றாம் தொகுதியில் (செ - சௌ) 'செம்பியன்' என்ற சொல்லின் பொருள் விளக்கம் சிறப்புடையதாயிருக்கின்றது. அதைப்போலச் 'செஞ்சம்' என்ற சொல்லுக்கு அளிக்கப்பட்டுள்ள பொருள் விளக்கமும் சிறப்பாயுள்ளது. செஞ்சு - செம்மை, செவ்வை, நிறைவு, செஞ்சு - செஞ்சம்.

அடுத்து, 'த்'கர மடலத்தின் முதற் தொகுதியில் (த, தா) 'தமிழ்' என்ற சொல்லுக்குக் காட்டப்பெற்றிருக்கும் விளக்கம் விரிவானதாகவும் பொருத்தமானதாகவும் நுட்பமானதாகவும் அமைந்துள்ளது. அதைப்போலத் 'தா' என்னும் சொல்லுக்கும் அருமையான விரிவான விளக்கம் கொடுக்கப்பட்டுள்ளது, 'தா' என்ற சொல் தந்தை என்பதனையும் குறிக்கும் என்று நிறுவியிருப்பது ஆராய்ச்சியாளரின் சான்றாண்மையைக் காட்டுகிறது.

அதே மடலத்தின் இரண்டாவது தொகுதியில் (தி-தூ) 'திறம்' என்ற சொல்லுக்கும், 'துடி' என்ற சொல்லுக்கும் தரப்பட்டுள்ள விளக்கங்கள் பயனுடையவையாகும்.

மூன்றாவது தொகுதியில் (தெ-தௌ), 'தெரு' என்னும் சொல்லின்கீழ், முடுக்கு சிறுசந்து; சந்து தெருவின் கிளை; தெரு சிறுவீதி; மறுகு போக்குவரத்து மிகுந்த பெருந்தெரு அல்லது வீதி; ஆவணம் கடைத்தெரு; அகலுள் அகன்ற மறுகு; சாலை பெருவழி; சந்தி மூன்று தெருக்கள் கூடுமிடம்; சதுக்கம் நான்கு தெருக்கள் கூடுமிடும் என்ற வகையில் பதிவு செய்துள்ளமை பாராட்டுக் குரியதாகும்.

அடுத்து, 'தொல்காப்பியர் காலம்' என்னும் தலைப்பின்கீழ்க் காட்டப்பட்டுள்ள சான்றுகள் ஆய்வாளர்களுக்கு மிக்கப்பயனுடையனவாகும். இந்த ஆறு தொகுதிகளிலும் தேவையான சொற்களுக்குப் பொருத்தமான பட விளக்கங்கள் கொடுக்கப்பட்டிருப்பதும் அழகுக்கு அழகு சேர்ப்பதாயுள்ளது.

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்டப்பணிகள் விரைந்து நடைபெற பலவகையிலும் பெரிதும் ஆக்கமும் ஊக்கமும் அளித்துவரும் **மாண்புமிகு முதலமைச்சர்** அவர்களுக்கும், **மாண்புமிகு கல்வி அமைச்சர்** அவர்களுக்கும் எனது நெஞ்சார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். அரசு அறிவித்தவண்ணம் 6 தொகுதிகளை ஒருசேர அணியமாக்கி வெளியிடும் பணியைச் சிரமேற்கொண்டு செவ்விய முறையில் வெளிவர அரும்பணியாற்றிய தமிழ் வளர்ச்சி பண்பாடு மற்றும் அறநிலையத்துறை அரசு சிறப்புச் செயலாளரும் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் **திட்டப்பொறுப்பு இயக்குநருமான திரு. தா. சந்திரசேகரன் இ.ஆ.ப.,** அவர்களுக்கும், அகரமுதலி மேற்பார்வையாளராகச் செயற்பட்ட உலகத் தமிழாராய்ச்சி நிறுவன இயக்குநர் முனைவர் சா. கிருட்டினமூர்த்தி அவர்களுக்கும், அகரமுதலித் திட்டப் பணியாளர்கள் மற்றும் கூர்ந்தாய்வுப் புலமையாளர்களுக்கும் எனது மனமுவந்த பாராட்டுகள். பாராட்டுகளைப் படிக்கற்களாகக் கொண்டு தொடர்ந்து நன்கு உழைத்து எஞ்சிய தொகுதிகள் அனைத்தையும் அரசு விரும்பிய வண்ணம் வெளிக்கொணர வேண்டுமென விழைகிறேன்.

**சென்னை** **பு.ஏ. இராமையா**

**23-10-2003** **அரசு செயலாளர்**

தா. சந்திரசேகரன், இ.ஆ.ப.
இயக்குநர் (முழுக்கூடுதல் பொறுப்பு)



செந்தமிழ்ச் சொற்பிறப்பியல்
அகரமுதலித் திட்ட இயக்ககம்
சென்னை - 600 008

# பதிப்புரை

*வாழ்வினில் செம்மையைச் செய்பவள் நீயே*
*மாண்புகள் நீயே என் தமிழ்த் தாயே*
*வீழ்வாரை வீழாது காப்பவள் நீயே*
*வீரனின் வீரமும் வெற்றியும் நீயே*

- பாவேந்தர் (இசையமுது - 19)

உலக முதன்மொழி தமிழே! இந்திய மொழிகளுக்கு மூலமும் வேரும் தமிழ்; திரவிட மொழிகளுக்குத் தாய்மொழி தமிழ் என்று வாழ்நாள் முழுவதும் ஆய்வு செய்து நிறுவிய **செந்தமிழறிஞர், மொழிஞாயிறு தேவநேயப் பாவாணர்** ஆவார். உலகின் முதல் மாந்தன் தமிழன் என்பதும்; தமிழன் தோன்றிய இடம் குமரிக் கண்டமே; மொகஞ்சதாரோ, அரப்பா நாகரிகம் பழந்தமிழ் நாகரிகமே என்பதும் பாவாணரது ஆய்வுப் புலத்தின் இரு கண்களாகும்.

உலகின் முதன்மொழி தோன்றியதற்கான அடிப்படைகளை மேனாட்டு அறிஞர்கள் பல்வகையில் ஆராய்ந்திருப்பினும் அ, இ, உ என்னும் முச்சுட்டுகளே ஞால முதன்மொழி தோன்ற வழி வகுத்தன என்னும் சுட்டடிக் கொள்கையை (Deictic Theory) முதன்முதல் பாவாணர் கண்டறிந்தார். சுட்டு விளக்கம், முதல் தாய்மொழி, ஒப்பியன் மொழி நூல், வேர்ச்சொற்கட்டுரைகள் ஆகிய தமது நூல்களில் பாவாணர் இதனைத் தெளிவாக விளக்கியுள்ளார். உகரச் சுட்டிலிருந்தே பெரும்பான்மையான சொற்கள் பிறந்திருப்பதை அவருடைய ஆய்வு காட்டுகின்றது. மேலும் ஊகாரச் சுட்டடிப் பிறந்த சொற்களே மிகுதி. குறில் நெடிலாயிற்று என்பது பலர் கருத்து. நெடிலே குறிலாயிற்று என்பது பாவாணர் கருத்து. இதற்குப் பிற திரவிட மொழிகள் வலுவூட்டுகின்றன.

''சொற்பிறப்பியல் பணிக்கென்றே தம்மை இறைவன் படைத்தனன்'' என உளங்கூர்ந்துரைத்து அப்பணிக்கே தம்மை முழுதுற ஒப்படைத்து உழைத்த உரவோர்'' என்று பாராட்டப்படுபவர் பாவாணர்.

ஞால முதன்மொழி தமிழ் என்பதைப் பாவாணர் "குமரிக் கண்டத் தமிழ் வடக்கே சென்று திரவிடமாய்த் திரிந்தது. வடகோடித் திரவிடம் நாளடைவில் பிராகிருதமாய் மாறியது. வேத காலத்தில் விந்திய மலைக்கு வடக்கில் பைசாசம், சூரசேனம், மாகதம் என்று மூன்று பிராகிருதங்களும் அதற்குத் தெற்கில் தமிழ், ஆந்திரம் (தெலுங்கு) கன்னடம், மகாராட்டிரம், கூர்ச்சரம் என்னும் ஐந்து திரவிடங்களும் (பஞ்ச திரவிடம்) வழங்கிவந்தன. பிற்காலத்தில் ஐந்து திரவிடங்களுள், மகாராட்டிரம் ஒரு பிராகிருதமாகக் கொள்ளப்பட்டது. மாகதத்தின் பிற்காலத் திரிபு பாலி. பிராகிருதம் என்னும் சொல் தமிழில் பாகதம் எனத் திரியும். வேத ஆரியம் வழக்கற்றுப் போனபின், அதனோடு ஐம்பிராகிருதங்களையும் கலந்து சமற்கிருதம் என்னும் இலக்கிய மொழியை அமைத்தனர். பிராகிருதம் முந்திச் செய்யப்பட்டது; சமற்கிருதம் நன்றாய்ச் செய்யப்பட்டது. ஆகவே சமற்கிருதத்திற்கு முந்தியது பிராகிருதம், பிராகிருதத்திற்கு முந்தியது திரவிடம்; திராவிடத்திற்கு முந்தியது தமிழ்" (செ.அக.சீர். பக். 32) என உரைத்துள்ள தன்மை சிந்திக்கத் தக்கது.

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலியின் மூன்றாம் மடலத்தின் இரண்டாம் பகுதி (சி முதல் சூ வரை) அரிய விளக்கங்களுடன் பாவாணர் காட்டிய வேர் வரலாறுகள், இனச்சொற்கள், மறுவழக்குச் சொற்கள், பழமொழிகள், இலக்கிய மேற்கோள்கள் ஆகியவற்றுடன் அனைவரும் பயன்கொள்ளும் வகையில் அகரமுதலித் திட்ட ஆய்வாளர்களின் கடின உழைப்பின் சீரிய விளைவாகச் சிறந்த முறையில் வெளிவருகின்றது. அரிய சொல்விளக்கமாகச் 'சிதம்பரம்' என்னும் தலைப்புச் சொல்லின் கீழ், விளக்கமாக, தில்லையிற் சிற்றம்பலம் பேரம்பலம் என ஈரம்பலங்களுண்டு. அவற்றுள் சிற்றம்பலமே இறைவன் திருக்கோயில். "சிறைவான் புனற்றில்லைச் சிற்றம்பலத்தும்" (திருக்கோ.) வடவர் திரிவு வடிவை இயல்பு வடிவாகக் கொண்டு அறிவு வெளி (ஞானாகாசம்) என்று பொருள் புணர்க்க முயல்வர். அம்பலம் (மன்றம்) வேறு; அம்பரம் (வானம்) வேறு. மேலும் 'சித்', 'அம்ர' என்னும் இருசொற்களும் தென் சொற்றிரிபே. சித்து - சித். அம்பரம் - அம்ர (வடமொழி வரலாறு, 149, 150).

த. சிதம்பரம் —> Skt. Cidambara

என்று பாவாணர் கூறியவாறே சேர்த்திருப்பது நினைக்கத்தக்கது. இன்னும் சுட்டடிக் கொள்கை, சீரகம், சும்மா முதலிய சொற்களின் விளக்கங்களும் மடலத்திற்குப் பெருமை சேர்க்கின்றன.

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் துறையின் பணிகள் வளர்ந்து பெருகிட வள்ளண்மை சுரந்து வண்டமிழுக்கு வாழ்வளிக்கும் **மாண்புமிகு முதலமைச்சர்** அவர்களுக்கு என்றென்றும் எங்கள் நன்றி உரியதாகும்.

எங்களைத் தக்காங்கு வழி நடத்துவதோடு, தக்கதொரு அணிந்துரை வழங்கிச் சிறப்பித்திருக்கும் **கல்வி (ம) வணிகவரித்துறை அமைச்சர் மாண்புமிகு சி.வி. சண்முகம்** அவர்களுக்கும், பல்வேறு பணிகளுக்கிடையிலும் அவ்வப்போது ஊக்கமும் ஆக்கமும் தந்து அகரமுதலித் தொகுதிகள் வெளிவரப் பெருந்துணை புரிந்த **தமிழ் வளர்ச்சிப் பண்பாட்டுத்துறைச் செயலர் திரு. பு.ஏ. இராமையா** இ.ஆ.ப. அவர்களுக்கும், அகரமுதலி மேற்பார்வையாளராகப் பணியாற்றிய உலகத் தமிழாராய்ச்சி நிறுவன இயக்குநர் முனைவர் சா. கிருட்டினமூர்த்தி அவர்களுக்கும் எனது நெஞ்சார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். இப்பகுதி வெளிவர அயரா துழைத்த தொகுப்பாளர்களுக்கும் கூர்ந்தாய்வுப் புலமையாளர்களுக்கும் எனது நன்றி கலந்த பாராட்டுகள்.

**தா. சந்திரசேகரன்**

சென்னை

15-10-2003

# செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி

## மூன்றாம் மடலம் - இரண்டாம் பாகம்

## சி - சூ

# செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி

## A COMPREHENSIVE ETYMOLOGICAL DICTIONARY OF THE TAMIL LANGUAGE

# சி

**சி**[1] *ci/śi*, 'ச'கர மெய்யும் 'இ'கர உயிரும் சேர்ந்த உயிர்மெய்யெழுத்து; syllable formed by adding the short vowel 'i' to the consonant 'c/ś'.

*[ச் + இ]*

**சி**[2] *śi*, இடை. (part.) *1.* தொழிற்பெயரீறு; suff. of vbl. nouns. எழுச்சி, வளர்ச்சி, அழற்சி. *2.* பெண்பாலீறு; a feminine suffix, as in ஆய்ச்சி.

**சிக்க** *śikka*, கு.வி.எ. (adv.) *1.* சுருக்கமாக; in brief, in a nut-shell. "சிக்க வுரைத்தேம்" (கம்பரா. நிந்த. 79). *2.* நன்றாய்; soundly. "சிக்கவொறுத்தா லல்லதை யுண்மை செப்பான்" (திருவிளை. பழியஞ். 26).

ம. சிக்க (சிறிய, முதிராத), செக்க, செறுக்க; க. சிக்க (சிறிய); தெ. சிக்கசிக (சிறிய, சிறிதளவு); து. சிக்க (சிறிய); குட. சிக்க (இளைய); Pkt. cikka

*[சிறு → சிறுக்கு → சிக்கு → சிக்க]*

**சிக்கங்கோல்** *śikkaṅgōl*, பெ. (n.) சிடுக்கு வாரி; forked comb for dressing the hair. "சீப்பு சிக்கங்கோலுந் தேன்மொழிக்கு வாங்கலுற்றாள்" (கோவ. க.88)

மறுவ. சிக்குவாரி; மயிர்கோதி; சிறுக்கணி, ஈர்கொல்லி.

*[சிக்கு + அம் + கோல்]*

**சிக்கட்டி** *śikkaṭṭi*, பெ. (n.) அவரை; country bean (சா.அக.).

*[சிக்கடி[1] → சிக்கட்டி]*

**சிக்கடம்** *śikkaḍam*, பெ. (n.) பறவையைப் பிடிக்கும் வலை; snare. "பறவை சிக்கடத்திற் பட்டவெனத் தேய்ந்தனவே" (பஞ்ச. திருமுக. 167).

*[சிக்குதல் = ஒன்றனுள் அகப்படுதல். சிக்கு → சிக்கடம்]*

**சிக்கடி**[1] *śikkaḍi*, பெ. (n.) அவரை (பிங்.); field-bean.

தெ. சிக்குடு

**சிக்கடி**[2] *śikkaḍi*, பெ. (n.) சிக்கல்[1] பார்க்க (வின்.); see *śikkal*[1].

*[சிக்கு[3] → சிக்கல் → சிக்கலி → சிக்கடி]*

**சிக்கடி[3]-த்தல்** *śikkaḍi-*, 4 செ.கு.வி. (v.i.) சிக்கு நாற்றமடித்தல் (வின்.); to give out bad smell, as of oily stink.

*[சிக்கு = நாற்றம். சிக்கு[5] + அடி-,]*

**சிக்கடி[4]-த்தல்** *śikkaḍi-*, 4 செ.கு.வி. (v.i.) குழறுபடி செய்தல்; to complicate, confuse.

*[சிக்கு[1] + அடி-,]*

**சிக்கடிமுக்கடி** *śikkaḍi-mukkaḍi*, பெ. (n.) சிக்கல்[1] பார்க்க; see *śikkal*[1].

*[சிக்கடி[2] + முக்கடி]*

**சிக்கணப்பதம்** *śikkaṇa-p-padam*, பெ. (n.) சிக்குப்பாகம் பார்க்க; see *śikku-p-pāgam*.

ம. சிக்கணபதம்

*[சிக்கணம் + பதம்]*

**சிக்கணப்பாகம்** *śikkaṇa-p-pāgam*, பெ. (n.) சிக்குப்பாகம் பார்க்க; see *śikku-p-pāgam*.

ம. சிக்கணபாகம்

*[சிக்கணம் + பாகம்]*

**சிக்கணம்** *šikkaṇam,* பெ. (n.) மழமழ வென்றுள்ளது (நன். 273, மயிலை.); that which is glossy or slippery.

ம. சிக்கணம்; Skt. cikkaṇam

[சிக்கு → சிக்கணம். 'அணம்' சொ.ஆ. ஈறு]

**சிக்கத்துப்புழுதி** *šikkattu-p-puḻudi,* பெ. (n.) உழுதும் விதைக்கப்படாதுள்ள நன்செய் (C.G.); wet land ploughed but not sown.

[சிக்கறுத்தபுழுதி → சிக்கறுத்துப்புழுதி → சிக்கத்துப்புழுதி (மரூஉ.). பூழ்தி = மண் துகள். பூழ்தி → புழுதி]

**சிக்கம்**[1] *šikkam,* பெ. (n.) சீப்பு; comb. "சிகைத் தொழிற் சிக்கமும்" (பெருங். உஞ்சைக். 57:36).

க. சிக்கடி; தெ. சிக்கண்டெ

[சிக்கு[3] → சிக்கம்]

[ஒ.நோ. அக்கு – அக்கம்]

**சிக்கம்**[2] *šikkam,* பெ. (n.) மெலிவு (திவா.) emaciation, waste.

[சிக்கு[2] → சிக்கம்]

**சிக்கம்**[3] *šikkam,* பெ. (n.) சிறைச்சாலை (வின்.); prison.

[சிக்கு[1] → சிக்கம்]

**சிக்கம்**[4] *šikkam,* பெ. (n.) 1. ஈயம்; lead. 2. வெள்ளி; silver. 3. செம்பு; copper.

**சிக்கம்**[5] *šikkam,* பெ. (n.) 1. உறி; a net-work of rope or a string-loop for suspending pots. "தூதையிற் சிக்கங் கரஞ்சேர்த்து" (பதினொ. ஆளு. திருவந். 66). 2. வலை; net. 3. வலைப்பை முதலியன (வின்.); net-work, bag of net-work. 4. பின்னல்; net of hair. 5. வால்மிளகு; tail-pepper, cubeb. 6. மூக்கணாங் கயிற்றுக்கு மாறாகக் கன்றுக்குட்டியின் வாயைச் சுற்றிக் கட்டும் கயிறு; rope tyed around the face of calf.

மறுவ. முகரைக் கயிறு

க. சிக்க.

[சிக்கு[1] → சிக்கம்]

**சிக்கம்**[6] *šikkam,* பெ. (n.) 1. குடுமி. (பிங்.); tuft of hair on the crown of the head. 2. உச்சி (அக.நி.); crown of the head.

[சிக்கு[3] → சிக்கம்]

**சிக்கம்பலகை** *šikkam-palagai,* பெ. (n.) சிக்குப் பலகை (இவ.) பார்க்க; see *šikku-p-palagai.*

[சிக்குப்பலகை → சிக்கம்பலகை]

**சிக்கம்போடு**[1]**-தல்** *šikkam-pōḍu-,* 18 செ. குன்றாவி. (v.t.) ஓகப்பயிற்சியில், காலினையும் கழுத்தையும் அசையா வண்ணம் இணைத்து முடிச்சுப்போடல்; a string-hoop fastening to the legs and the neck with a view to restrict the movements of the body so as to support the posture in yoga practice.

[சிக்கம்[5] + போடு-,]




**சிக்கம்போடு**[2]**-தல்** *šikkam-pōḍu-,* 14 செ.குன்றாவி. (v.t.) மூக்கணாங் கயிற்றுக்கு மாறாகக் கன்றுகுட்டியின் வாயைச் சுற்றிக் கயிறு கட்டுதல்; to tie a rope around the face of calf.

[சிக்கம்[5] + போடு-,]

**சிக்கர்**[1] *šikkar,* பெ. (n.) சிக்கரத்தெளியல் (திவா.) பார்க்க; see *šikkara-t-teḷiyal.*

ம. சிக்கிர்

[சீக்கிரி → சிக்கர். சீக்கிரி = ஒருவகை மரம்]

**சிக்கர்**[2] *šikkar,* பெ. (n.) தலைநோவுடையார்; persons suffering from headache. "சிக்கர் சிதடர்" (சிறுபஞ். 76)

[சிக்கல்[3] → சிக்கர். 'அர்' – பலர்பாலீறு]

**சிக்கரத்தெளியல்** *šikkara-t-teḷiyal,* பெ. (n.) உசிலம்பட்டையிலிருந்து இறக்குங் கள்; toddy extracted from sirissa bark. "உக்கிர வூறலுஞ் சிக்கரத் தெளியலும்" (பெருங்.இலாவாண. 2:180)

*[சிக்கர் + தெளியல். தெளி → தெளிவு, தெளியல் = பதநீர்]*

**சிக்கரத்தெளிவு** *šikkara-t-teḷivu,* பெ. (n.) சிக்கரத்தெளியல் பார்க்க; see *šikkara-t-teḷiyal.*

*[சிக்கரத்தெளியல் → சிக்கரத்தெளிவு]*

**சிக்கல்**[1] *šikkal,* பெ. (n.) 1. தாறுமாறு; tangle. 2. பின்னல்; plaiting. 3. கோளாறு; complication. 4. அருமைப்பாடு; முட்டுப்பாடு; difficulty. 5. குழப்பம், தடுமாற்றம்; embarrassment.

ம. சிக்கல்

*[சிக்கு[1] → சிக்கல்]*

**சிக்கல்**[2] *šikkal,* பெ. (n.) இளைக்கை (சூடா.); leanness, emaciation.

*[சிக்கு[2] → சிக்கல்]*

**சிக்கல்**[3] *šikkal,* பெ. (n.) காந்தக் கல்வகையைச் சேர்ந்த காக்கைக்கல் (யாழ்.அக.); a kind of black load-stone.

**சிக்கல்**[4] *šikkal,* பெ. (n.) தலைநோய்; head ache.

*[சிக்கு[6] → சிக்கல்]*

**சிக்கல்**[5] *šikkal,* பெ. (n.) மாட்டிக்கொள்ளல் (கழ.அக.); entangling, ensnaring.

*[சிக்கு[3] → சிக்கல்]*

**சிக்கல்நெய்** *šikkal-ney,* பெ. (n.) நாட்பட வைத்திருப்பதால் சிக்குநாற்றம் ஏற்பட்ட நெய்; stale-ghee from age or long keeping.

*[சிக்கு[5] → சிக்கல். சிக்கு + நெய்]*

**சிக்கல்பிக்கல்** *šikkal-pikkal,* பெ. (n.) சிக்கல்[1] (இ.வ.) பார்க்க; see *šikkal[1].*

*[சிக்கல் + பிக்கல்]*

**சிக்கலாட்டம்** *šikkalāṭṭam,* பெ. (n.) சிக்கல்[1] (இ.வ.) பார்க்க; see *šikkal[1].*

*[சிக்கல் + ஆட்டம்]*

**சிக்கவுரை-த்தல்** *šikka-v-urai-,* 4 செ.குன்றாவி. (v.t.) சுருக்கமாகக் கூறுதல்; to speak shortly.

*[சிக்கம் + உரை-,]*

**சிக்கவை-த்தல்** *šikkavai-,* 4 செ.குன்றாவி. (v.t.) மாட்டச் செய்தல்; to cause oneself to be caught, to be caught. வகையாகச் சிக்கவைத்து வேடிக்கை பார்க்கிறார்.

க. சிக்கிசு

*[சிக்கு → சிக்க + வை-,]*

**சிக்கறு-த்தல்** *šikkaṟu-,* 4 செ.குன்றாவி. (v.t.) 1. நூல் முதலியவற்றிற் சிக்குவிடுத்தல்; to unite a knot, disentagle. 2. சிக்கலானதைத் தீர்த்தல்; to settle an intricate business; to cut the gordian knot. 3. துறவறம்புகுதல் (வின்.); to give up wordly attachment; to become an ascetic.

*[சிக்கு[1] + அறு[1]-,]*

**சிக்கறுக்கி** *šikkaṟukki,* பெ. (n.) சிடுக்குவாரி (வின்.); a kind of comb.

ம. சிக்கறுக்கி; க. சிக்கடிகெ, சிக்கணிகெ, சிக்கடி; தெ. சிக்கண்டு, சிக்கண்டெ

*[சிக்கு[1] + அறுக்கி]*

**சிக்கறுப்பான்** *šikkaṟu-p-pāṉ,* பெ. (n.) சிடுக்குவாரி பார்க்க; see *šiḍukku-vāri.*

*[சிக்கு[1] + அறுப்பான்]*

**சிக்கறுப்பு** *šikkaṟuppu,* பெ. (n.) முடிவு; decision.

*[சிக்கு + அறுப்பு. அறு → அறுப்பு = அறுத்தல், தீர்வு, முடிவு]*

**சிக்கனப்பாகம்** *šikkaṉa-p-pāgam,* பெ. (n.) சிக்குப்பாகம் (பைஷஜ. 6) பார்க்க; see *šikku-p-pāgam.*

ம. சிக்கணபாகம்

*[சிக்குப்பாகம் → சிக்கனப்பாகம்]*

**சிக்கனப்பாகம்** *šikkaṉa-p-pāgam,* பெ. (n.) கல்கத்தைத் திரட்டும்போது கையில் ஒட்டாமல் மாத்திரை உருட்டுவதற்குப் பதமாகவிருக்கும் நிலை; that stage to which a thick consistence of medicine is so rendered as to be free from being sticky with a view to make them into pills.

*[சிக்கனம் + பாகம்]*

**சிக்கனம்**[1] *šikkaṉam,* பெ. (n.) செட்டு (உ.வ.); thrift.

*[சிக்கு[1] + அனம்]*

**சிக்கனம்**[2] *šikkaṉam,* பெ. (n.) கஞ்சத்தனம்; niggardness.

*[சிக்கு + அனம்]*

**சிக்கனம்**[3] *šikkaṉam,* பெ. (n.) பாக்கு; areca-nut (சா.அக.).

ம. சிக்க, சிக்கணி, சிக்கனம்

*[சிக்கு + அணம் = சிக்கணம் → சிக்கனம்]*

**சிக்கனவு** *šikkaṉavu,* பெ. (n.) *1.* திண்மை (ஈடு, 5.8:3); வலிமை; hardness, strength. *2.* மனவன்மை; hardness of heart. "அஞ்சத்தக் கதுன் சிக்கனவே" (திருக்கோ. 343). *3.* மனவுறுதி; firmness of mind. "சிக்கனவுடனே நின்று" (திருவாலவா. 56:8). *4.* சிக்கனம்[1] பார்க்க; see *šikkaṉam*[1].

*[சிக்கனம் → சிக்கனவு]*

**சிக்காரம்** *šikkāram,* பெ. (n.) அழுகை (சா.அக.); lamentation, weeping.

*[சிக்கு → சிக்கம் + ஆரம் = சிக்காரம்]*

**சிக்கிமுக்கி** *šikkimukki,* பெ. (n.) நெருப்புண்டாக்குங் கல்; flint used in producing fire.

மறுவ. தீத்தட்டி

*[சக்கிமுக்கி → சிக்கிமுக்கி]*

**சிக்கு[1]-தல்** *šikku-,* 5 செ.குவி. (v.i.) *1.* சிக்குப் படுதல்; to become entangled, complicated. *2.* இறுகுதல்; to be tightened, as a knot. "புயஞ் சிக்கயாத்தபின்" (பாரத. வாரணா.5). *3.* ஒன்றனுள் அகப்படுதல்; to be caught, ensnared. "பொதிந்து சிக்க... மறையக்காப்பின்" (சீவக. 1890). *4.* கிடைத்தல்; to be obtained. "தரிப்பிடந்தான் — தெருவாச் சிக்கினதும்" (தனிப்பா. 1, 323, 18)

ம., சிக்குக; க. சிக்கு, சிகு, சிர்கு, சிலிகு, சிலுகு; தெ., கோத. சிக்கு; து. சிக்குனி, திக்குனி; பட., குவி. சிக்கு; துட. திக்க்; கூ. செக்ப; கொண். சிர்கானா; கொலா. சிக்க் (தொங்குதல்); பர். சிர்ங்க்

*[சிலுக்கு → சிக்கு-,]*

**சிக்கு[2]-தல்** *šikku-,* 5 செ.குவி. (v.i.) இளைத்தல் (சூடா.); to become lean or emaciated.

தெ. சிக்கு

**சிக்கு**[3] *šikku-,* பெ. (n.) *1.* நூல் முதலியவற்றின் சிக்கு, முறுக்கு; tangle, twist. "சிக்கறத் தெரிந்த நூல்" (கம்பரா. சித்திர. 32). *2.* சிக்கலாயிருப்பது; intricry, complication. *3.* கண்ணி (இ.வ.); snare, entanglement. *4.* மாட்டிக்கொள்ளுகை; being caught or entangled. *5.* தடை; obstacle, impediment.

ம. தெ. சிக்கு; க., து., பட. சிக்கு

*[சிலுக்கு → சிக்கு]*

**சிக்கு**[4] *šikku-,* பெ. (n.) *1.* ஐயம்; doubt. "சிக்கறத் தெளிந்தேன்" (கம்பரா. அனுமப். 21). *2.* உறுதி; firmness. "சிக்குறச் சேமஞ் செய்தாள்" (கம்பரா. சடாயு. 69).

**சிக்கு**[5] *šikku-,* பெ. (n.) *1.* எண்ணெய்ச்சிக்கு; stickiness of hair, due to oil. *2.* சிக்குநாற்றம்; rancid smell of oil or ghee on clothes, etc., "கூந்தறானுஞ் சிக்குமே னாறுமே" (திருவாலவா. 16:23). *3.* மாசு (யாழ்ப்.); stain.

*[சிலு → சிலுத்தல் = சோறு பதனழிதல், பதனழிதல். சிலு → சிலுக்கு → சிக்கு = பதனழிதலினின்று தோன்றும் முடை நாற்றம்]*

**சிக்கு**[6] *šikku-,* பெ. (n.) வெட்கம் (இ.வ.); modesty, shame.

க., பட. சிக்கு; தெ. சிக்கு

*[வெட்கு → வெக்கு → எக்கு. க. எக்கு = நாணம். எக்கு → (செக்கு) → சிக்கு]*

**சிக்குக்கழித்தல்** *šikku-k-kaḻittal,* பெ. (n.) திருமணக்காலத்தில் மணமகனுக்குச் செய்யும் மயிர்கழி சடங்கு; ceremony of shaving the hair of the bridegroom, preliminary to marriage.

*[சிக்கு + கழித்தல்]*

**சிக்குச்சிலுகு** *šikku-c-cilugu,* பெ. (n.) *1.* தொல்லை (தொந்தரவு); hindrance, trouble. *2.* தடை (வில்லங்கம்); encumbrance. *3.* சிக்கலானது; intricacy.

தெ. சிலுகு

*[சிக்கு[3] + சிலுகு. மீமிசைப் பொருள் மரபிணை மொழி]*

**சிக்குச்சிலுவு** *šikku-c-ciluvu,* பெ. (n.) சிறு தொடர்பு (இ.வ.); slight connection.

*[சிக்கு³ + சிலுவு]*

**சிக்குச்சிறகு** *šikku-c-ciṟagu,* பெ (n.) சிக்கல்; tangle. "மேலேயிருக்கிற சிக்குச் சிறகெல்லாம் அறுத்துவிட்டு" (தமிழறி. 38).

*[சிக்கு + சிறகு. மோனை நோக்கி வந்த இணைமொழி]*

**சிக்குண்டாக்கு-தல்** *šikkuṇḍākku-,* 5 செ.குன்றாவி. (v.t.) சிக்கு ஏற்படுத்துதல்; to cause to become entangled or ensured, to entangle, ensnare.

க. சிக்குசு

*[சிக்கு + உண்டாக்கு-,]*

**சிக்குண்(ணு)-தல்** *šikkuṇṇu-,* 12 செ.கு.வி. (v.i.) 1. படுமுடிச்சுப்படுதல்; to be entangled; to form into an inextricable knot. 2. அகப்படுதல்; to be caught.

*[சிக்கு + உண்-,]*

**சிக்குத்தலை¹** *šikku-t-talai,* பெ (n.) முடை நாற்றமுள்ள தலை; rancid smell of hair.

*[சிக்கு + தலை]*

ஈரத்தோடு எண்ணெய்யைத் தடவுதலாலும் பதனழிந்த எண்ணெயைத் தடவுதலாலும் அளவுக்கதிகமாக தலையில் வேர்வை சுரந்து அதனை உரிய முறையில் தூய்மைப்படுத்திக் கொள்ளாமையாலும் ஏற்படும் முடைநாற்றம், சிக்கு நாற்றமாகும்.

**சிக்குத்தலை²** *šikku-t-talai,* பெ (n.) 1. சிக்குப் பிடித்த தலை; an entangled head of lair. 2. சடைமுடி; matted locks of hair.

க. சிக்குதலெ

*[சிக்கு + தலை]*

**சிக்குப்படு-தல்** *šikku-p-paḍu-,* 20 செ.கு.வி. (v.i.) வெட்கப்படுதல்; to be ashamed, to beshy or baseful.

தெ., பட. சிக்கு படு

*[சிக்கு + படு-,]*

**சிக்குப்பலகை** *šikku-p-palagai,* பெ. (n.) பொத்தகத்தைப் பிரித்து வைத்துப் படிப்பதற்கு ஏந்தாகவிருக்கும் பலகைச் சட்டம்; wooden folding frame for keeping book while reading.

*[சிக்கு + பலகை]*

இரு பலகைகளை ஒன்றுடனொன்று நடுவில் சிக்கவைத்து அமைக்கப்பட்ட பலகை. மேலானதெனக் கருதும் நூலைத் தரையில் வைத்துப் படிப்பது குற்றமெனக் கருதி, இப் பலகையின் மீது வைத்துப் படிப்பர். இங்ஙனம் செய்வது, நூலின் கட்டுகோப்புக் குலையாமலிருக்கவும் உதவும்.




**சிக்குப்பாகம்** *šikku-p-pāgam,* பெ. (n.) மருந்தெண்ணெய்ப் பக்குவத்துள் கையில் ஒட்டிக் கொள்ளக்கூடியதான பக்குவம் (தைலவ. பாயி. ஷ43); viscous condition, as of a medicinal preparation.

ம. சிக்கணபாகம்

*[சிக்கு³ + பாகம்]*

**சிக்குப்பாடு** *šikku-p-pāḍu,* பெ. (n.) சிக்குப்பிக்கு (இ.வ.) பார்க்க; see *šikku-p-pikku.*

*[சிக்கு³ + பாடு]*

**சிக்குப்பிக்கு** *šikku-p-pikku,* பெ. (n.) 1. சிக்கலாயிருப்பது (இ.வ.); complication. 2. விளங்காப்புதிர்; intricacy.

*[சிக்கு³ + பிக்கு. எதுகை நோக்கி வந்த இணைமொழி]*

**சிக்குமுக்கி** *šikku-mukki,* பெ. (n.) சிக்கிமுக்கி பார்க்க; see *šikki-mukki.*

ம. சக்குமுக்கி, சக்கிமுக்கி, சக்குமுக்கு; க. சக்கமுக்கி; தெ. சக்கிமுக்கி; Turk. cakmuk.

*[சக்கிமுக்கி → சிக்குமுக்கி]*

சிக்குமுக்கி = தேய்த்துத் தீமூட்டிப் பயன் படுத்தப்படுஞ் சிக்கிமுக்கிக்கல், தொல் பழங்காலத்திலேயே புழக்கத்திலிருந்தது.

**சிக்குயத்தி** *šikkuyatti,* பெ. (n.) *சதகுப்பி;* bishop's weed *(சா.அக.).*

**சிக்குரு** *šikkuru,* பெ. (n.) முருங்கை (பிங்.); drum-stick tree *(சா.அக.).*

**சிக்குருப்பூ** *šikkuru-p-pū,* பெ. (n.) முருங்கை *மலர்;* flowers of drum-stick tree *(சா.அக.).*

**சிக்குவலை** *šikku-valai,* பெ. (n.) வலை வகையுளொன்று *(மீனவ.);* a kind of trap net.

*[சிக்கு + வலை]*

சிக்கு = அகப்படு, பிடி, கிட்டு.

**சிக்குவாங்கி** *šikku-vāṅgi,* பெ. (n.) **சிக்குவாரி** (வின்.) பார்க்க; see *šikku-vāri.*

*[சிக்கு³ + வாங்கி. வாங்கு → வாங்கி. 'இ' வினை முதலீறு]*

**சிக்குவாங்கு-தல்** *šikku-vāṅgu-,* 5 செ.குன்றாவி. (v.t.) *1.* *மயிர் முதலியவற்றிற் சிக்கலெடுத்தல்* *(வின்.);* to disentagle. *2.* *முடிச்சவிழ்த்தல், தளர்த்துதல்;* unravel, untie.

க. சிக்குபிடிசு; பட. சிக்குபுடிசு

*[சிக்கு³ + வாங்கு-,]*

**சிக்குவாரி** *šikku-vāri,* பெ. (n.) ஒரு வகைச் சீப்பு; a kind of comb.

*[சிக்கு³ + வாரி. வாரி = வார்கருவி]*




**சிக்குவை¹** *šikkuvai,* பெ. (n.) *1.* நாக்கு; tongue. *2.* *தண்ணீர் விட்டான் கிழங்கு* (தைலவ. தைல. 73); climbing as paragus.

*[சிகுவை → சிக்குவை]*

**சிக்கெடு-த்தல்** *šikkeḍu-,* 4 செ.குன்றாவி. (v.t.) *சிக்குவாங்கு-* பார்க்க; see *šikkuvāṅgu-.*

க. சிக்குபிடிசு; பட. சிக்கெந்து, சிக்குபுருசு

*[சிக்கு + எடு-,]*

**சிக்கென்(னு)-தல்** *šikkeṉṉu-,* 2 செ.குவி. (v.i.) *இறுகுதல்;* to become hardened, as the ground. "நிலனாய்ச் சிக்கென்பதுவும்" *(மணிமே. 27:143)*

*[சிக்கு³ + என்-,]*

**சிக்கென** *šikkeṉa,* கு.வி.எ. (adv.) *1.* *உறுதியாக;* firmly tenaciously. "எய்ப்பிடத் துன்னைச் சிக்கெனப் பிடித்தேன்" *(திருவா. 37:5).* *2.* *இறுக;* tightly, closely. "கண்ணெனும் புலங்கொள் வாயுஞ் சிக்கென வடைத்தேன்" *(கம்பரா. உலா. 14).* *3.* கையிறுக்கமாக (கருமியாக); niggardly. "பெரும் பொருளை......... பிறர்க்கு வழங்காதே சிக்கெனக் கட்டிவையா தொழிமின்" *(பு.வெ. 10: காஞ்சிப். 2, உரை).* *4.* *விரைவாக;* quickly, promptly. "அக்கமுங் காசுஞ் சிக்கெனத் தேடு" *(கொன்றைவே.)*

ம. சிக்கனெ, சிக்கனே; க. சக்கன, செக்கனெ, சக்கனை; தெ. செச்ச. து. சக்க; துட. திக்ச்ன் (எதிர்பாராமல்) Pkt. šigkh

*[சிக்கு³ + என]*

**சிக்கெனப்பிடி-த்தல்** *šikkeṉa-p-piḍi-,* 4 செ.குன்றாவி. (v.i.) *1.* *உறுதியாகப் பிடித்தல்;* to catch firmly, tenaciously. *2.* *இறுக்கமாகப் பிடித்தல்;* to catch tightly. 'சிலவேளைகளில் பழமையை நாம் சிக்கெனப் பிடித்துக் கொள்ளுகிறோம்' *(உ.வ.).*

*[சிக்கு³ + என + பிடி-,]*

**சிக்கெனவு** *šikkeṉavu,* பெ. (n) *1.* *உறுதி;* firmness, tenacity. *2.* *கையிறுக்கம்;* niggardliness, closefistedness.

க. சிகணி; தெ. சிக்கனி

*[சிக்கு³ + எனவு]*

**சிக்கோளிக்குழல்** *šikkōḷi-k-kuḻal,* பெ. (n.) ஆதொண்டை; Ceylon caper *(சா.அக.).*

*[சிக்கோளி + குழல்]*

**சிகண்டி**[1] *śigaṇḍi,* பெ. (n) *1.* துருபதனுக்குப் பெண்ணாகப் பிறந்து பின் தேவன் ஒருவனால் ஆணுருவடைந்து பாரதப்போரில் வீடுமன் உயிர் நீங்குதற்குக் காரணமாயிருந்த கதை மாந்தர்; a character as son of Drupada who, originally a female exchanged sex with a Yakṣa and brought about the death of Bhīṣma in the Bhārata war. *2.* அலி; hermaphrodite.

**சிகண்டி**[2] *śigaṇḍi,* பெ. (n) *1.* பாலைப்பண்ணுள் ஒன்று (பிங்.); a secondary melody-type of the pālai class. *2.* இசை நுணுக்கம் என்ற நூலின் ஆசிரியர் (சிலப். உரைப்பாட்டு மடை); a sage, author of Iśai-nuṇukkam. *3.* தொல்லை கொடுப்பவன்; troublesome, obstinate person. *4.* கஞ்சன்; miser.

**சிகண்டி**[3] *śigaṇḍi,* பெ. (n.) சிற்றாமணக்கு (மலை.); castor plant.

**சிகண்டி**[4] *śigaṇḍi,* பெ. (n.) மயில்; peacock. "நீலச் சிகண்டியிலேறும் பிரான்" (கந்தரலங். 26). *2.* கொண்டையுடன் கூடிய திருமால் (இலக்.அக.); Tirumal, as having a knotted tuft of hair on his head.

**சிகண்டிகை** *śigaṇḍigai,* பெ. (n.) கருங்குன்றி (மூ.அ.); a black species of bead vine.

**சிகத்துப்புழுதி** *śigattu-p-puḻudi,* பெ. (n) சிக்கத்துப்புழுதி (R.T.) பார்க்க; see *śikkattu-p-puḻudi.*

*[சிக்கத்துப்புழுதி → சிகத்துப்புழுதி]*

**சிகதம்** *śigadam,* பெ. (n.) சிகதை பார்க்க; see *śigadai.* "சிகதத்தினா லிலிங்கமு மாற்றி" (வேதாரணி. மணவாள. 19).

*[சிகதை → சிகதம்]*

**சிகதாமூத்திரம்** *śigadā-mūttiram,* பெ. (n.) சிறுநீரில் கல்விழும் நோய் (இங்.வை.); gravel, a disease of the kidneys.

**சிகதை** *śigadai,* பெ. (n.) *1.* வெண்மணல்; white sand. "சிலையி னீரிற் சிகதையில்" (சிவதரு. பாவவி. 60). *2.* மணற்குன்று; sand-hill.

**சிகப்பகில்** *śigappagil,* பெ. (n.) மலைக் கொன்றை (L.); shingle tree.

*[சிவப்பு → சிகப்பு + அகில்]*

**சிகப்பு** *śigappu,* பெ. (n.) சிவப்பு பார்க்க; see *śivappu.*

ம. சிகப்பு, செமப்பு; க. கெம்பு; பட. கெப்பு

*[செவ் → செவ → சிவ → சிவப்பு → சிகப்பு]*

**சிகப்புக்கலவாய்** *śigappu-k-kalavāy,* பெ. (n.) மூன்றடிக்குமேல் வளரக்கூடியதும் உடலில் வெள்ளைப்புள்ளிகளைப் பெற்றதுமான கடல்மீன் வகை; a species of white - spotted sea - fish attaining more than 3 ft. in length.

*[சிகப்பு + கலவாய்]*



சிகப்புக்கலவாய்

**சிகரியந்தம்** *śigari-y-andam,* பெ. (n.) புல்லுருவி (மலை.); species of loranthus.

**சிகல்**[1](லு)-தல் *śigal-,* 13 செ.கு.வி. (v.i.) *1.* குறைதல்; to diminish, decrease. *2.* கெடுதல்; to perish.

*[சிதை → கெடு. சிதை → சிகை → சிகல்-,]*

**சிகல்**[2] *śigal,* பெ. (n.) *1.* குறைவு; want. *2.* கேடு; ruin.

*[சிறுகுதல் → சிகல்]*

**சிகல்**[3] *śigal,* பெ. (n.) தொழில்; action, deed. "அச்சிகலாலே..... நாதனானவன்" (திருவிருத். 68, பக்.358).

*[செயல் → சியல் → சிகல்]*

**சிகை**[1] *šigai,* பெ. (n.) *1. எஞ்சியது;* that which is left; remainder. *"சிகை கிடந்த வூடலில்" (பரிபா. 7:70). 2. வட்டி;* interest on money lent. *"இவனிட்ட காசு......சிகைக்கு அடிப்பிக்கும்" (ஈடு, 49.6).*

*[இகை → சிகை]*

**சிகை**[2] *šigai,* பெ. (n.) *1. தொடர்பு;* wordly ties. *"பிறவிச் சிகையறவே" (கந்தரந். 50). 2. உண்டிக் கவளம்;* mouthful of cooked rice. *"மறுசிகை நீக்கி யுண்டாரும்" (நாலடி, 1).*

*[சிக்கு → சிகை]*

**சிகை**[3] *šigai,* பெ. (n.) *நிலுவை;* arrears. *"கீழாண்டைச்சிகை வாசியா நின்றார்" (ஈடு, 14:7).*

**சிகைக்காய்** *šigai-k-kāy,* பெ. (n.) *1. சீயக்காய் மரம் (பதார்த்த.721);* soap pod wattle. *2. சீயக்காய் பார்க்க;* see *šīya-k-kāy.*

ம. *சீக்கக்காய், சீவக்காய், சீவய்க்க, சீனிக்கா, சீயக்கா, சீக்கக்காயி;* க. *சீகெகாயி;* தெ. *சீகாய;* து. *சீகெகாயி, சீகெ;* துட. *சிங்க்.*

*[சீய்க்காய் → சிகைக்காய்]*

**சிகையறு-தல்** *šigai-y-aṟu-,* 4 செ.கு.வி. (v.i.) *முற்றும் அழிதல்;* to be ruined or destroyed completely. *"ப்ராரப்த பாபவிசேஷஞ் சிகையறுகிறதென்கிற ஸந்தோஷமும் நடையாடிற் றாகில்" (ரஹஸ்ய. 478).*

**சிகையானகாசு** *šigai-y-āṉa-kāšu,* பெ. (n.) *1. மொத்தமாகச் சேர்ந்த காசு;* accumulated money. *2. ஒரு தொகையாகத் தங்கி நின்ற காசு;* the accumulation of money to the required amount. *"கணக்கு கெட்டு, இப்பெயரால் சிகையான காசு தண்ட" (தெ.க.தொ. 12, க.199)*

**சிங்கசல்லியம்** *šiṅga-šalliyam,* பெ. (n.) *கருங்காலி மரவகை;* black sundara tree *(சா.அக.).*

**சிங்கட்டான்** *šiṅgaṭṭāṉ,* பெ. (n.) *முள் வேங்கை (L);* thorny blue-druped featherfoil.

**சிங்கடாபருப்பு** *šiṅgaḍa-paruppu,* பெ. (n.) *ஒரு கொட்டையின் பருப்பு;* the pulp in the seed of the plant trapa bispinosa *(சா.அக.).*

**சிங்கடியப்பன்** *šiṅgaḍi-y-appaṉ,* பெ. (n.) *சிங்கடியென்ற பெண்ணுக்குத் தந்தையாகக் கொள்ளப்பட்ட சுந்தரமூர்த்தி நாயனார்;* Šundaramūrtti-nāyaṉār, as the foster-father of Siṅgaḍi. *"சித்தம் வைத்த புகழ்ச் சிங்கடி யப்பன்" (தேவா. 735, 11).*

*[சிங்கடி + அப்பன்]*

**சிங்கணம்** *šiṅgaṇam,* பெ. (n.) *வீரராசேந்திரன் வென்ற நாடுகளுள் ஒன்று; இந்நாடு கங்க நாட்டிற்குக் கீழ்த்திசையிலிருந்தது;* a country conquered by the Choḻa king Vīrarājendra, which is located by the east of 'Gaṅga nāḍu'. *"சேரனைச் சிறைகொண்டு சிங்கண தேசம் அடிப்படுத்து" (தெ.க.தொ. 17, க. 301).*

**சிங்கமெழுது-தல்** *šiṅgam-eḻudu-,* 5 செ.கு.வி. (v.i.) *உடம்பில் தோன்றும் வெப்பு நோயான அக்கியைப் போக்க குயவரால் செம்மண் பூசப் பெறுதல்;* to paint with red ochre on the herpes as a cure, generally done by a potter.

*[செக்கர் → செங்கர் → செங்கம் → சிங்கம் + எழுது-,]*

**சிங்கரந்தகம்** *šiṅgarandagam,* பெ. (n.) *இரு மலையும் நாட்பட்ட சளியையும் போக்கும் தூதுவளை என்னும் மூலிகை;* three-lobed night shade.

**சிங்கல்**[1] *šiṅgal,* பெ. (n.) *1. குறைகை;* diminishing, drooping. *"சிங்கலி வருமறை" (கம்பரா. கடிமண. 48). 2. இளைப்பு (பிங்.);* weakness, exhaustion

*[சிக்கு → சிக்கல் → சிங்கல்]*

செங்காரித்தல் பார்க்க.

**சிங்கல்**[2] *šiṅgal,* பெ. (n.) *1. இளைத்தல்;* fainting, drooping. *2. இளைப்பு நோய்;* exhaustion *(சா.அக.).*

*[சிங்கு → சிங்கல். 'அல்' தொ.பெ. ஈறு]*

**சிங்கலாட்டம்** *šiṅgal-āṭṭam,* பெ. (n.) *சிக்கல்*[1] *பார்க்க;* see *šikkal*[1].

*[சிக்கல் + ஆட்டம் → சிக்கலாட்டம் → சிங்கலாட்டம்]*

**சிங்கலை** *śiṅgalai*, பெ. (n.) தொல்லை, தடை, சொத்துரிமையிலுள்ள தடை முதலியன (இ.வ.); incumbrance; tangle of difficulties.

*[சிக்கல் → சிக்கலை → சிங்கலை]*

**சிங்கவல்லி** *śiṅgavalli*, பெ. (n.) தூதுவளை (தைலவ. பாயி. 57); three-lobed night shade.

*[சிக்கு → சிங்கு + வல்லி]*

**சிங்கவாழை** *śiṅga-vāḻai*, பெ (n.) சிங்கன் வாழை (யாழ்ப்.) பார்க்க; see *śiṅgaṉ-vāḻai*.

*[சிங்கன் வாழை → சிங்கவாழை]*

**சிங்களத்தி** *śiṅgaḷatti*, பெ. (n.) சிங்கள நாட்டவள்; Sinhalese woman.

*[சிங்களம் → சிக்களத்தி]*

சிங்களன் (ஆ.பா.) - சிங்களத்தி (பெ.பா.)

**சிங்களம்** *śiṅgaḷam*, பெ (n.) 1. இலங்கை (நன். 272, மயிலை); Ceylon. 2. பதினெண் மொழிகளுள் ஒன்றாகிய சிங்களமொழி (திவா.); Siṅhalese language. 3. சிங்களவர்க்குரியதாய்த் தமிழில் வழங்குங் கூத்துவகை (சீவக. 672, உரை.); a mode of dancing with gesticulation peculiar to the Siṅhalese.

**சிங்களமருந்து** *śiṅgaḷa-marundu*, பெ. (n.) சிங்கள மருத்துவர் செய்து தரும் மருந்து வகை (யாழ்ப்.); a medicine prepared by Siṅhalese physicians, said to be very effective, dist. for Tamiḻ-marundu.

*[சிங்களம் + மருந்து]*

**சிங்களர்** *śiṅgaḷar*, பெ (n.) சிங்களத் தீவில் வாழ்வோர்; the Siṅhalese. "சிங்களர் வங்களர்" (கலிங். 318).

*[சிங்களம் → சிங்களர். 'அர்' பலர்பாலீறு]*

**சிங்களவன்** *śiṅgaḷavaṉ*, பெ. (n.) சிங்கள நாட்டான்; man of Siṅhaḷa country.

*[சிங்களம் → சிங்களவன். 'அன்' - ஆண் பாலீறு]*

**சிங்களன்** *śiṅgaḷaṉ*, பெ. (n.) சிங்களவன் (வின்.) பார்க்க; see *śiṅgaḷavaṉ*.

*[சிங்களவன் → சிங்களன்]*

**சிங்களாந்தகன்** *śiṅgaḷāndagaṉ*, பெ. (n.) ஈழத்தை வென்ற சோழமன்னன்; name of the Cōḻa king.

**சிங்கன்** *śiṅgaṉ*, பெ. (n.) குறவன் (குற்றா.குற.); man of the fowler tribe.

தெ. சிங்கடு

**சிங்கன்வாழை** *śiṅgaṉ-vāḻai*, பெ. (n.) சிங்கள நாட்டிலிருந்து வந்த வாழை வகை; a variety of plantain introduced from Ceylon.

*[சிங்களம் + வாழை]*

**சிங்கா** *śiṅgā*, பெ. (n.) அகவையைக் குறிப்பதாய்க் குதிரைப் பற்களிலுண்டாம் நிற வேறுபாடு (அசுவசா. 6); change in the coloration of horse's teeth indicating its age.

**சிங்காடி** *śiṅgāḍi*, பெ. (n.) சிங்காணி (வின்.) பார்க்க; see *śiṅgāṇi*.

ம. சிங்காடி; க. சிங்காடி

*[சிங்காணி → சிங்காடி]*

**சிங்காடிக்காய்** *śiṅgāḍi-k-kāy*, பெ. (n.) வேங்கைக்காய்; the fruit of kino tree.

*[சிங்காடி + காய்]*

**சிங்காணகம்** *śiṅgāṇagam*, பெ. (n.) 1. மூக்குச் சளி; mucous from the nose. 2. மாழைகளின் மாசு; the scoria of molten metals (சா.அக.).

*[சிங்காணம் → சிங்காணகம்]*

**சிங்காணசில்லி** *śiṅgāṇa-silli*, பெ. (n.) 1. குடல், வயிறு முதலியவற்றில் உள்ளுறையாய்க் காணப்படும் ஊரற்சவ்வு; the serous membrance which lines the intestines and other internal viscera of the abdominal cavity. 2. மூக்கினுளிருக்கும் சவ்வு; the mucous membrane of the nose (சா.அக.).

*[சிங்காணம் + சில்லி]*

**சிங்காணம்** *śiṅgāṇam*, பெ. (n.) மூக்குச்சளி (யாழ்.அக.); mucous.

*[சிக்கு → சிக்கணம் = மழமழ வென்றிருப்பது. சிக்கணம் → சிங்கணம் → சிங்காணம்]*

**சிங்காணி** *śiṅgāṇi*, பெ. (n.) உண்டை வைத்து அடிக்கும் ஒருவகை வில் (வின்.); bow for shooting small balls, pellet-bow.

மறுவ. சுண்டுவில்

ம. சிங்காடி; க. சிங்காடி; தெ. சிங்காணி, சிங்கிணி; து. சிங்காணி பிரு, சிங்கணி பிரு; Skt. śiñjini

[சிலும்பு = மரச்சிறாய். சிலும்பு → சிலுங்கு → சிங்கு → சிங்காணி]

**சிங்காரக்கிழங்கு** *śiṅgāra-k-kiḻaṅgu*, பெ. (n.) சருக்கரை வள்ளிக்கிழங்கு; sweet potato.

[சிங்காரம் + கிழங்கு]

**சிங்காரக்கொட்டை** *śiṅgāra-k-koṭṭai*, பெ. (n.) 1. வேங்கைமரத்தின் கொட்டை; the nut of a kino tree. 2. முந்திரிக்கொட்டை; cashew nut.

[சிங்காரம் + கொட்டை]

**சிங்காரக்கோட்டை** *śiṅgāra-k-kōṭṭai*, பெ. (n.) இளமஞ்சள் மலர்ச்செடிவகை; (M.M. 995); primrose willow.

[சிங்காரம் + கோட்டை]

**சிங்காரக்கோளி** *śiṅgāra-k-kōḷi*, பெ. (n.) வெளுத்த அரளி; common caper.

[சிங்காரம் + கோளி]

**சிங்காரம்** *śiṅgāram*, பெ. (n.) செந்நிறம்; red colour.

[சம் → செம்பு → செப்பு. செம் → செவ் → செவப்பு → சிவப்பு. செம் + காரம் → செங்காரம் → சிங்காரம். 'காரம்' ஒரு ஈறு. ஒ.நோ. வெண்காரம், அதிகாரம்]

**சிங்காரவல்லிக்கொடி** *śiṅgāra-valli-k-koḍi*, பெ. (n.) கரும்பசுமை நிறமுள்ள கம்மாறு வெற்றிலை வகை; a kind of betel leaf, dark green and pungent.

**சிங்கி**[1] *śiṅgi*, பெ. (n.) பின்னல்; that which is woven or plaited. "சிங்கிசெய் கூட்டின்" (ஞானவா.தாம. 4).

[சிங்கு → சிங்கி]

**சிங்கி**[2] *śiṅgi*, பெ. (n.) 1. கடுக்காய் (மூ.அ.); gall nut. 2. நன்னீரில் வாழ்வதும் ஓரடி நீளம் உடையதுமான மீன்வகை; a fresh-water fish, leaden, attaining more than one ft. in length. 2. நஞ்சு; poison "கோளரா வெயிற்றுச் சிங்கி" (உபதேசகா. சிவ புண்ணிய. 348).

**சிங்கி**[3] *śiṅgi*, பெ. (n.) 1. குறத்தி (குற்றா.குற.); woman of the fowler tribe. 2. துணங்கைக் கூத்து (சிலப். 5:70, உரை.); a mode of dancing. 3. இராகுவின் தாய் (இலக்.அக.); mother of Rāhu, the ascending node. 4. நாணமற்றவள்; forward, immodest woman.

**சிங்கி**[4] *śiṅgi*, பெ. (n.) 1. வல்லாரை (மலை.); Indian pennywort. 2. மான்கொம்பு (மூ.அ.); stag's horn.

**சிங்கி**[5] *śiṅgi*, பெ. (n.) 1. கட்டியினின்று ஊனீர் கசியும் தசை நோய்; an ulcer or sore with a serious discharge. 2. நாவில் வரும் புண் வகை; ulceration of the tongue. 3. மகிழம்பூ; ape-face flower. 4. முப்பத்திரண்டு வைப்பு நஞ்சு வகையுளொன்று; a chemically prepared compound with lead and salpetre as ingredients (சா.அக.). "கலக்குகின்ற வங்கத்தில் இணங்கன் சேர்த்துக் கலந்ததினால் சிங்கி யென்ற பேருமாச்சு" (உ.ரோமரிஷி.சூத். 100).

ம. சிங்கி (நஞ்சு); து. சிங்கி (நஞ்சு)

**சிங்கிக்கணமாந்தம்** *śiṅgi-k-kaṇa-māndam*, பெ. (n.) குழந்தைகளுக்குச் சரிவரச் செரியாமையினால் ஏற்படும் மாந்தநோய்; aphthae in children tongue due to indigestion.

[சிங்கி + கணம் + மாந்தம்]

**சிங்கிகம்** *śiṅgigam*, பெ. (n.) 1. கறிமுள்ளிக்கீரை; prickly greens (சா.அக.). 2. சிறுவழுதலை (மலை.); Indian nightshade.

**சிங்கிக்குரு** *śiṅgi-k-kuru*, பெ. (n.) செம்பின் களிம்பை அகற்றித் தங்கமாக்க, பொன்னாக்க முறைப்படி உருவாக்கப்பட்ட மருந்து; litharage quintessence prepared by an alchemical process. It removes verdigria from copper and as such, can very easily transmute copper into gold (சா.அக.).

**சிங்கிகொள்(ளு)-தல்** *śiṅgi-koḷḷu-*, 7 செ.குன்றாவி. (v.t.) வயப்படுத்தி, மகிழ்ச்சிக் கூத்தாடச் செய்தல்; to make one dance with joy, to fascinate, charm. "தேராத சிந்தையரைச் சிங்கி கொளுமல்லாமல்" (பிரபோத. 27, 14).

**சிங்கிச்செம்பு** *śiṅgi-c-cembu*, பெ. (n.) பொன்னாக்க முறைப்படி மிருதார சிங்கியினின்று எடுக்குஞ் செம்பு; copper extracted form litharage by alchemical process (சா.அக.).

[சிங்கி + செம்பு]

**சிங்கிச்செயநீர்** *śiṅgi-c-ceyanīr*, பெ. (n.) தாரம், வீரம் முதலானவற்றையரைத்து ஈயத்திற்குப் பூசி மலர்ந்த பின், இவ்வெடைக்கு ந்காரஞ் சேர்த்து இறக்குஞ் செயநீர்; a strong pungent liquid prepared by exposing lead coated with orpiment and corrosive sublimate to night's dew after adding to it a sufficient quantity of borax.

[சிங்கி + செயநீர்]

**சிங்கிட்டம்** *śiṅgiṭṭam*, பெ. (n.) குடசப்பாலை (மூ.அ.); green wase-flower.

**சிங்கித்தைலம்** *śiṅgi-t-tailam*, பெ. (n.) மிருதார சிங்கியுடன் கெந்தகம், நீலம், இதளியம், படிகாரம், பால்துத்தம், நாலி, பரங்கிப் பட்டை, கடுக்காய், வசம்பு, வெங்காரம், துத்தம் முதலியவற்றைச் சமனெடை சேர்த்து இவற்றுடன் புங்கம்பால், ஒதியம்பால், தேங்காய் எண்ணெய் முதலானவற்றைக் கூட்டிக் காய்ச்சி வடிக்கும் எண்ணெய்; a healing balm prepared with litharge, sulphur, indigo, mercury, alum, white vitriol, aconite, china-bark, gall-nut, sweet flag, borax etc., by grinding the mixture with the juices of poongam, and Indian ash trees together with a sufficient quantity of coconut oil (சா.அக.).

[சிங்கி + தைலம்]

**சிங்கிப்பிளவை** *śiṅgi-p-piḷavai*, பெ. (n.) தசைப் பிளவை நோய் வகையுளொன்று; a kind of anthurax in men; carbuncle (சா.அக.).

[சிங்கி + பிளவை]

**சிங்கிபற்பம்** *śiṅgi-paṟbam*, பெ. (n.) நெஞ்செரிவு, உட்காய்ச்சல், நீர் எரிப்பு முதலான நோய்களைப் போக்கும் சிங்கி பற்பம்; the calcined śiṅgi powder is prescribed for burning of chest, internal fever, high coloured urine, etc.

[சிங்கி + பற்பம்]

**சிங்கிமாதழுவாள்** *śiṅgi-mādaḻuvāḷ*, பெ. (n.) கவிழ்தும்பை; stooping leucas (சா.அக.).

**சிங்கிமாந்தக்கணை** *śiṅgimānda-k-kaṇai*, பெ. (n.) குழந்தைகளது உடம்பை இளைக்கச் செய்யும் கணைநோய் வகையுளொன்று; a kind of congenital heat affecting children. It is a wasting disease (சா.அக.).

[சிங்கி + மாந்தம் + கணை]

**சிங்கிமாந்தசுரம்** *śiṅgimānda-śuram*, பெ. (n.) குழந்தைகளுக்கு ஏற்படும் காய்ச்சல் நோய் வகை; a kind of convulsive fever of children (சா.அக.).

[சிங்கி + மாந்தம் + சுரம்]

**சிங்கிமார்க்கம்** *śiṅgimārkkam*, பெ. (n.) பொன்னாக்கத்திற்கு மந்தண முறையில் சிங்கிவைப்பு நஞ்சைக் கொண்டு செய்யும் மருந்து; a secret process of alchemical preparation with the aid of litharge (சா.அக.).

[சிங்கி + மார்க்கம்]

**சிங்கிமுப்பு** *śiṅgi-muppu*, பெ. (n.) சிங்கிவைப்பு நஞ்சைக் கொண்டு மந்தண முறையிற் செய்யப்படும் உப்பு வகை; a quintessence salt prepared out of litharge by a secret process (சா.அக.).

[சிங்கி + உப்பு. உப்பு → முப்பு]

**சிங்கியடி-த்தல்** *śiṅgi-y-aḍi-*, 4 செ.கு.வி. (v.i.) 1. முடக்கிய இருகைகளாலும் விலாப் புறங்களை அடித்துக் கொண்டு கூத்தாடுதல்; to beat the sides with the elbows and dance. 2. வறுமையால் முட்டுப்படுதல்; to be in straightened circumstances; to suffer from poverty. சோற்றுக்குச் சிங்கியடிக்கிறான். 3. பெண்மைக் குணமின்றியொழுகுதல் (வின்.); to behave shamelessly, as a virago. 4. கோலி விளையாட்டிற் கோலியைக் கைமுட்டியால் குழியில் தள்ளுதல் (இவ.); to push marbles with knuckles, in the children's game of marbles.

ம. சிங்கியடிக்குக

[சிங்கி[3] + அடி]

சிங்கியடித்தல் = இரப்போன் தாளம் தட்டி இரப்பது போல் திண்டாடுதல் (செல்வி 1943, சுறவம் பக். 108). சிங்கி = தாளம்.

**சிங்கிரம்** *śiṅgiram,* பெ. (n.) குடசப்பாலை (மலை.); green wax flower.

**சிங்கிலி** *śiṅgili,* பெ. (n.) *1.* குன்றி (மலை.); crab's-eye. *2.* புலிதொடக்கி (மலை.); Mysore thorn. *3.* இண்டு; a species of sensitive tree. *4.* விளையாட்டில் மிகையாக ஒருமுறை ஆடும் ஆட்டம் (இ.வ.); extra turn which a person is entitled to in games.

**சிங்கிவிளையாட்டு** *śiṅgi-viḷaiyāṭṭu,* பெ. (n.) மாய விளைவுகளை உருவாக்கும் விளையாட்டு வகையுளொன்று; a kind of magic (சா.அக.).

*[சிங்கி + விளையாட்டு]*

**சிங்கிவைப்பு** *śiṅgi-vaippu,* பெ. (n.) சிங்கிவைப்புநஞ்சு,[1] பார்க்க; see *śiṅgi-vaippu-nañju,*[1] (சா.அக.).

*[சிங்கி + வைப்பு]*

**சிங்கிவைப்புநஞ்சு[1]** *śiṅgi-vaippu-nañju,* பெ. (n). மச்சமுனி 800இல் சொல்லியபடி அரிதாரம், பச்சை, சிவலிங்கம், வெள்ளை, வீரம், நாகம், சிலை, காரம், சாரம், சூதம் ஆகியவற்றை ஒன்றாய்ப் பொடித்துச் செய்யும் வைப்பு நஞ்சு; a poisonous compound prepared as per process of machamuni as dealt with in his work '800' (சா.அக.).

*[சிங்கி + வைப்புநஞ்சு]*

**சிங்கிவைப்புநஞ்சு[2]** *śiṅgi-vaippu-nañju,* பெ. (n.) மிருதார சிங்கி வைப்பு நஞ்சு; impure oxide of lead or litharge (சா.அக.).

*[சிங்கி + வைப்புநஞ்சு]*

**சிங்கிறால்** *śiṅgiṟāl,* பெ. (n.) ஈர்க்கிறால் (M.M.); lobster.

*[சிங்கி[2] + இறால்]*



சிங்கிறால்

**சிங்கினி[1]** *śiṅgiṉi,* பெ. (n.) *1.* வில் (வின்.); bow. *2.* வில்லின் நாண் (யாழ்ப்.); bow string.

*[சிங்காணி → சிங்கனி → சிங்கினி]*

**சிங்கினி[2]** *śiṅgiṉi,* பெ. (n.) *1.* கண்டங்கத்திரி; yellow berried night shade. *2.* ஒதியமரம்; odinawodier. *3.* கொள்ளுப் பயறு (காணப் பயறு); jungle horse-gram (சா.அக.).

**சிங்கு[1]-தல்** *śiṅgu-,* 5 செ.கு.வி. (v.i.) *1.* குன்றுதல்; to diminish, wane, decrease. "சிங்கா வண்புகழ்ச் சிங்கபுரத்து" (சிலப். பதி. 47). *2.* இளைத்தல் (பிங்.); to faint, fail, droop. *3.* அழிதல்; to decay, perish. "சிங்காமைத் தங்கள் கவசமாய்" (கம்பரா. சரபங்க. 26). *4.* கழிந்து போதல்; to elapse, pass away, as time. "சிங்குமாற் காலம்" (கம்பரா. மருத்து. 63).

ம. சிங்கு (பதர்); து. சிங்கு

*[இங்குதல் = அழுந்துதல், துன்புறுதல். இங்கு → சிங்கு]*

**சிங்கு[2]-தல்** *śiṅgu-,* 5 செ.கு.வி. (v.i.) சிக்கிக் கொள்ளுதல்; to be caught. "சிங்கினா ரிரு முதுகுரவ ரென்பவே" (சீவக. 2832).

*[சிக்கு → சிங்கு-.]*

**சிங்கு[3]** *śiṅgu,* பெ. (n.) நாக்கு; tongue (சா.அக.).

**சிங்குவை** *śiṅguvai,* பெ. (n.) *1.* உள்நாக்கு; root of the tongue. *2.* ஐம்பொறியிலொன்று; one of the five sensory organs, the mouth including the tongue.

*[சிங்கு[3] → சிங்குவை]*

**சிங்குவைநோய்** *śiṅguvai-nōy,* பெ. (n.) நாக்கில் ஏற்படும் புண் முதலான நோய்கள்; a term applied to all diseases, wounds or ulcers etc., of the tongue.

*[சிங்குவை + நோய்]*

**சிங்கை** *śiṅgai,* பெ. (n.) *1.* இண்டு; prickly brasilletta climber. *2.* சிங்கை முள்; rusty mimosa.

**சிங்கையாரியர்** *śiṅgai-y-āriyar,* பெ. (n.) யாழ்ப்பாணத்தை ஆண்ட தமிழரசர்கள்; ancient rulers of Jaffna.

*[சிங்கை + ஆரியர்]*

இரகுவமிசம் இயற்றிய அரசகேசரி, தட்சிண கைலாச புராணம் பாடிய செகராசசேகரன், அந்தகக் கவி வீரராகவ முதலியாரால் புகழப்பெற்ற பரராசசேகரன் ஆகியோர் இம்மரபினரே.

**சிச்சி** *šicci*, இடை. (int.) சிச்சீ பார்க்க; see *šiccī*. "சிச்சியெனத் தன்மெய்ச் செவி பொத்தி" (கம்பரா. மாரீச. 76).

து. சிச்சி (மலம்)

**சிச்சிரம்** *šicciram*, பெ. (n.) மீன்கொத்தி (சங்.அக.); king-fisher.

**சிச்சிலி**[1] *šiccili*, பெ. (n.) 1. மீன்கொத்தி (சீவக. 2499, உரை); king-fisher. 2. பறவை வகை; a species of partridge. "அருமறையைச் சிச்சிலிபண் டருந்தத் தேடும்" (திருமுறைகண். 17).

ம. சிச்சிலி; த. சிச்சிலி → Skt. tittri

**சிச்சிலி**[2] *šiccili*, பெ. (n.) கோப்பிரண்டைக் கொடி; a species of adamantine creeper (சா.அக.).

**சிச்சிலிப்பான்** *šiccilippān*, பெ. (n.) சிச்சிலிர்ப்பான் பார்க்க; see *šiccilirppān* (சா.அக.).

[சிச்சிலிர்ப்பான் → சிச்சிலிப்பான்]

**சிச்சிலிப்பொறி** *šiccili-p-pori*, பெ. (n.) சிச்சிலி வடிவாகச் செய்து கோட்டை மதிலில் அமைக்கப்படுவதும் பகைவரை அழித்தற் குரியதுமான எந்திர வகை (சிலப். 15: 214, உரை); a destructive machine in the form of a king-fisher, mounted on the walls of a fortress for defence.

[சிச்சிலி + பொறி]

**சிச்சிலியாதனம்** *šiccili-y-ādanam*, பெ. (n.) ஒகநிலை (தத்துவம். 109, உரை.); a yogic posture.

**சிச்சிலிர்ப்பான்** *šiccilirppān*, பெ. (n.) 1. தட்டம்மை; measles. 2. நீர்க்கொள்ளுவான்; chicken pox (சா.அக.).

**சிச்சிலுப்பான்**[1] *šicciluppān*, பெ. (n.) மீன் கொத்திப்பறவை; king-fisher (a sparrow) (சா.அக.).

மறுவ. சிரற்புள்; பொன்வாய்ப்புள், சிச்சிரம்; சிச்சிலி.

ம. சிச்சிலி

[சிச்சிலி → சிச்சிலுப்பான்]


சிச்சிலுப்பான்

**சிச்சிலுப்பான்**[2] *šicciluppān*, பெ. (n.) சிச்சிலுப்பை (வின்.) பார்க்க, see *šicciluppai*.

**சிச்சிலுப்பை** *šicciluppai*, பெ. (n.) அம்மை வகை; chicken-pox or measles.

**சிச்சீ** *šiccī*, இடை. (int.) இகழ்ச்சிக் குறிப்பு; expr. meaning fie! used in contempt "சிச்சீ வயிறு வளர்க்கைக்கு மானமழியாது" (நல்வழி, 14).

ம. சிச்சீ; க., தெ., சிசீ

**சிசுகம்** *šišugam*, பெ. (n.) 1. மரவகை; a kind of tree. 2. முதலை; crocodile. 3. திமிங்கலம்; whale (சா.அக.).

**சிசுபாலன்** *šišubālan*, பெ. (n.) 1. இடை வள்ளல்களெழுவருள் ஒருவன்; a liberal chief, one of seven idai-vallalkal. 2. கண்ணனால் கொல்லப்பட்ட ஒரு மன்னன். "தெழித்துரப்புஞ் சிசுபாலன்" (கலிங்.580).

இடைவள்ளல்கள் எழுவர்: அக்குரன், சந்திமான், அந்திமான், சிசுபாலன், தந்தவக்கிரன், கன்னன், சந்தன்.

**சிசுமரம்** *šišu-maram*, பெ. (n.) நூக்க மரம்; sissum tree (சா.அக.).

**சிசுமாரம்** *šišu-māram*, பெ. (n.) 1. முதலை; crocodile, the gangetic dolphin. 2. முதலையைப் போன்று வடிவுள்ள பெரிய மீன் வகையுளொன்று; a large fish of the species of whale (சா.அக.).

**சிசுமூலிகம்** *śiśu-mūligam,* பெ. (n.) *1.* நூலாஞ் செடி; cotton tree. *2.* நூலிலைச் செடி; doodooga *(சா.அக.).*

*[சிசு + மூலிகம்]*

**சிசுமூலிகா** *śiśu-mūligā,* பெ. (n.) சிசுமூலிகம் பார்க்க; see *śiśu-mūligam (சா.அக.).*

*[சிசுமூலிகம் → சிசுமூலிகா]*

**சிஞ்சபாகம்** *śiñja-bāgam,* பெ. (n.) சிஞ்சுபாகம் பார்க்க; see *śiñju-bāgam (சா.அக.).*

*[சிஞ்சுபாகம் → சிஞ்சபாகம்]*

**சிஞ்சம்** *śiñjam,* பெ. (n.) *1.* புளி (வின்.); tamarind. *2.* புளிமா (மலை.); Indian hog-plum.

ம. சிஞ்ச; Skt. ciñcā

புளியம்பழம் வற்றிச்சுருங்கும் இயல்புடைமையால் இஞ்சு என்னும் சொல் சு-சிஞ்சம் என்று திரிந்தது. இஞ்சுதல் - வற்றுதல். ஒ.நோ. இறப்பு → சிறப்பு.

**சிஞ்சாதிஇளகியம்** *śiñjādi-iḷagiyam,* பெ. (n.) இரும்புத்தூள் முதலியவற்றையும் பல மூலிகைகளையும் சேர்த்துக் காய்ச்சிப் பாண்டுநோயினுக்குக் கொடுக்கும் ஆயுள் வேத மருந்து; an ayurvēdic medicine prepared with iron dust as a chief ingredient mixed with other herbs and prescribed for dropsy *(சா.அக.).*

*[சிஞ்சாதி + கூழ்]*

இதனைச் சிஞ்சாதி லேகியம் என சா.அக. குறித்துள்ளது.

**சிஞ்சாரி** *śiñjāri,* பெ. (n.). சிஞ்சாரிகம் பார்க்க; see *śiñjārigam (சா.அக.).*

*[சிஞ்சாரிகம் → சிஞ்சாரி]*

**சிஞ்சாரிகம்** *śiñjārigam,* பெ. (n.) புளியமரம்; tamarind tree *(சா.அக.).*

**சிஞ்சிகம்** *śiñjigam,* பெ. (n.) இசைபாடும் கேகயப் புள்; a bird charmed by music *(சா.அக.).*

**சிஞ்சிகாநீர்** *śiñjiga-nīr,* பெ. (n.) காடி; vinegar; any fermented liquid *(சா.அக.).*

*[சிஞ்சிகம் + நீர்]*

**சிஞ்சிமாரம்** *śiñji-māram,* பெ. (n.) முதலை; crocodile *(சா.அக.).*

**சிஞ்சிரணி** *śiñjiraṇi,* பெ. (n.) மிளிறை என்னும் அரிவாள் மூக்குப் பூண்டு; sickle plant *(சா.அக.).*

**சிஞ்சிரம்** *śiñjiram,* பெ. (n.) சிஞ்சிகம் பார்க்க; see *śiñjigam (சா.அக.).*

**சிஞ்சிலி** *śiñjili,* பெ. (n.) மரவகை; a kind of tree. "சிஞ்சிலிவேலியோடும்" *(தெ.க.தொ vii. 62).*

**சிஞ்சினி** *śiñjiṇi,* பெ. (n.) புளிகரணை; a plant probably of the vitex genus *(சா.அக.).*

**சிஞ்சுகம்** *śiñjugam,* பெ. (n.) *1.* சிஞ்சிகம் பார்க்க; see *śiñjigam. 2.* கலியாண முருக்க மரம்; Indian coral tree.

**சிஞ்சுபாகம்** *śiñju-bāgam,* பெ. (n.) மஞ்சள் காமாலை நோயகற்றும் செடி; an unidentified plant supposed to cure jaundice *(சா.அக.).*

**சிஞ்சுமாரம்** *śiñju-māram,* பெ. (n.) *1.* ஒரு பெண் தெய்வம்; a Goddess. *2.* முதலை (பிங்.); crocodile.

**சிஞ்சைவித்துரி** *śiñjai-vitturi,* பெ. (n.) புளியங்கொட்டைத் தோல்; the outer skin of the tamarind seed *(சா.அக.).*

*[சிஞ்சைவித்து + உரி]*

**சிட்டக்கல்** *śiṭṭakkal,* பெ. (n.) செங்கற்கிட்டம்; over-burnt brick *(சா.அக.).*

*[சிட்டம் + கல்]*

**சிட்டங்கட்டு-தல்** *śiṭṭaṅ-gaṭṭu-,* 5 செ.குன்றாவி. (v.i.) *1.* செங்கல் உருகி உருக்குக் கல்லாதல்; to be overburnt as a brick. *2.* திரி எரிந்து கருகிப் போதல்; to be burnt up, as wick.

*[கிட்டம் → சிட்டம் + கட்டு-,]*

**சிட்டப்பட்டார்** *śiṭṭa-p-paṭṭār,* பெ. (n.) அடியார்; devotees. "சிட்டப்பட்டார்க் கெளியான்" *(தேவா. 33, 6).*

*[சிட்டு → சிட்டம் + பட்டார்]*

**சிட்டம்**[1] *śiṭṭam,* பெ. (n.) *1.* 2520 அடி நீளமுள்ள நூலை 4 1/2 அடி நீளமுள்ள சுற்றளவில் சுற்றிய வட்டநூற் சுருள்; hank. *2.* நூல் சுற்றப்

பயன்படும் மரத்தாலான சட்டகம்; a wooden instrument for hank.


சிட்டம்

சிட்டம்[2] *šiṭṭam*, பெ. (n.) 1. இரும்பூறல்; iron rust. 2. உருக்கு அல்லது கற்சிட்டம்; over-burnt brick, charred brick. 3. இருப்புக்கிட்டம்; இரும்பை நெருப்பிற் காய்ச்சுவதால் உதிரும் பொடி; the extraneous matter thrown off in the process of heating or melting iron (சா.அக.).

[கிட்டம் → சிட்டம்]

சிட்டம்[3] *šiṭṭam*, பெ. (n.) 1. பெருமை; eminence, greatness. "சிட்ட மார்ந்த மும்மதிலும்" (தேவா. 540, 8). 2. மதிப்பானது, மரியாதைக்குரியது; that which is estimable, sacret. "சிட்டமாஞ் சிவசின்னங்கள்" (சிவரக. சிவரகசியவாலா. 9).

ம. சிட்டம்

[சிட்டு → சிட்டம்]

த. சிட்டம் → Skt. šiṣṭa

சிட்டாய்ப்பற-த்தல் *šiṭṭāy-p-paṟa-*, 3 செ.கு.வி. (v.i.) சிட்டுக்குருவி போல விரைந்தோடிப் போதல் (இ.வ.); to run or fly like a house sparrow.

[சிட்டு ' + ஆய் + பற-,]

சிட்டி[1] *šiṭṭi*, பெ. (n.) 1. சிறுமட்கலம்; a small earthern vessel. 2. ஓர் அளவுக் கருவி (வின்.); a small measure. 3. சூது கருவியை உருட்டுஞ் செப்பு (வின்.); small dice-case.

க. சிட்டி; தெ. சிட்டி

[சுள் = சிறுமை. சுள் → சுள்ளாணி = சிறிய ஆணி. சுள் → (சுட்டு) → சிட்டு = சிறியது, சிறுகுருவி. சிட்டு → சிட்டி (மு.தா.129)]

சிட்டி[2] *šiṭṭi*, பெ. (n.) சீழ்க்கை (இ.வ.); whistle.

[சீழ்க்கை → சீக்கை → சீக்கி → சீட்டி → சிட்டி]

சிட்டி[3] *šiṭṭi*, பெ. (n.) சிற்றிலைச் செடியெனப் படும் நெய்ச்சிட்டி; fleabane (சா.அக.).

சிட்டி[4] *šiṭṭi*, பெ. (n.) 1. நொடி; snap of fingers. 2. இரண்டு விரலின் நடுக்கொண்ட அளவு; as much as is taken with the finger and the thumb-pinch, said of medical powder and snuff (சா.அக.).

து. சிடுகு

[சின் → சிட்டி]

சிட்டிகை *šiṭṭikai*, பெ. (n.) 1. கைந்நொடி; snap of the fingers. 2. கைந்நொடிப் பொழுது; moment, as measured by snap of the finger. 3. விரற்பிடியளவு; a pinch, as of snuff. 'ஒரு சிட்டிகைப் பொடி கொடு' (உ.வ.).

க. சிடிகெ; தெ. சிடிக; து. சிடிகி; பட. சிடுகு; குட. செடி

[சிட்டி → சிட்டிகை]

சிட்டிதட்டு-தல் *šiṭṭitaṭṭu-*, 5 செ.கு.வி. (v.i.) கைப்பெரு விரலையும் நடுவிரலையும் அழுத்தி உராயச் செய்து ஒலியுண்டாக்குதல்; to snap of the fingers.

து. சிடுகு பாடுனி; பட. சிடகு ஆகு;

[சிட்டி + தட்டு-,]

சிட்டிதும்மியிலை *šiṭṭitummi-y-ilai*, பெ. (n.) தும்பியிலை; leaves of river ebony (சா.அக.).

[சிட்டி + தும்மியிலை]

சிட்டிப்பாம்பு *šiṭṭi-p-pāmbu*, பெ. (n.) பாம்பு வகையுளொன்று; a species of snake (சா.அக.).

[சிட்டி + பாம்பு]

சிட்டிப்பால் *šiṭṭi-p-pāl*, பெ. (n.) ஆடை கட்டிய பால்; cream milk (சா.அக.).

[சிட்டி + பால்]

சிட்டிமந்தாரம் *šiṭṭi-mandāram*, பெ. (n.) மயிற்கொன்றை (இங்.வை.); peacock's crest (சா.அக.).

[சிட்டி + மந்தாரம்]

**சிட்டிமந்தாரை** *śiṭṭi-mandārai,* பெ. (n.) சிட்டி மந்தாரம் பார்க்க; see *śiṭṭi-mandāram* (சா.அக.).

*[சிட்டி + மந்தாரை]*

**சிட்டிலிங்கு** *śiṭṭiliṅgu,* பெ. (n.) காட்டு மரவகை (வின்.); a forest tree.

*[சிட்டு + இலிங்கு]*

**சிட்டு**[1] *śiṭṭu,* பெ. (n.) பெருமை; eminence. "சிட்டாய சிட்டற்கே" (திருவாச. 10:7).

ம. சிட்டு (பெரிய, மேலான)

*[சுள் → (சூர்) → சீர் → சிற → சிறப்பு (மு.தா.217) சுள் → சிள் → சிட்டு]*

**சிட்டு**[2] *śiṭṭu,* பெ. (n.) 1. சிறியது (வின்.); anything little, that which is small. 2. சிட்டுக்குருவி பார்க்க; see *śiṭṭu-k-kuruvi.* 3. சிலுப்பாக்குடுமி (வின்.); hair grown about the ears.

ம., க. சிட்டு; து. சிட்டெ; தெ. சிட்டா

*[சுள் = சிறுமை. சுள்ளாணி = சிறிய ஆணி. சுள் → சுண்டு = சிறியது, சிறிய முகவைக் கருவி (வீசம்படி). சுள் → (சுட்டு) → சிட்டு (மு.தா.140)]*




**சிட்டுக்குடுமி** *śiṭṭu-k-kuḍumi,* பெ. (n.) உச்சியிலுள்ள சிறுகுடுமி (வின்.); small hair-tuft on the crown of the head.

ம., தெ. சுட்டு; து. சிட்டு; கொலா. சுட்டி.

*[சிட்டு + குடுமி]*

**சிட்டுக்குருவி** *śiṭṭu-k-kuruvi,* பெ. (n.) சிறுகுருவி வகை (பதார்த்த. 882); a kind of sparrow. 'சிட்டுக் குருவியின் தலையில் பனங்காய் வைத்தது போல' (பழ.).

ம. சிட்டுகுருவி; து. சிட்டெபக்கி

*[சுள் → (சுட்டு) → சிற்று → சிட்டு + குருவி]*

சிட்டு வகைகள்

1. சிட்டு
2. மஞ்சள் சிட்டு
3. மஞ்சள் தொண்டைச் சிட்டு
4. பச்சைச் சிட்டு
5. நீலச் சிட்டு
6. கருஞ் சிட்டு
7. கருப்பு வெள்ளைப் புதர்ச்சிட்டு
8. சின்ன மின்சிட்டு
9. மின்சிட்டு
10. தேன் சிட்டு
11. ஊதா தேன் சிட்டு
12. தையச் சிட்டு

**சிட்டுக்குருவியிளகியம்** *śiṭṭu-k-kuruvi-iḷakiyam,* பெ. (n.) உடல் வலிமைக்கும் சிற்றின்ப நுகர்ச்சிக்கும் சிட்டுக்குருவியைப் பதப்படுத்திக் கடைச்சரக்குகளுடன் சேர்த்துச் செய்யும் இளகியம்; an electuary prepared with the flesh of house sparrow as chief ingredient amongst other bazaar drugs it also improves bodily beauty and invigorates the system (சா.அக.).

*[சிட்டுக்குருவி + இளகியம். உள் → (இள்) → இள → இளகு → இளகியம்]*

**சிட்டுக்குருவிலேகியம்** *śiṭṭu-k-kuruvi-ilēgiyam,* பெ. (n.) சிட்டுக்குருவியிளகியம் பார்க்க; see *śiṭṭu-k-kuruvi-iḷagiyam* (சா.அக.).

த. இளகியம் → Skt. lēhya

*[சிட்டுக்குருவி + லேகியம்]*

**சிட்டுணம்** *śiṭṭuṇam,* பெ. (n.) ஆதொண்டை; climbing caper (சா.அக.).

**சிட்டுலா** *śiṭṭulā,* பெ. (n.) காடை; quail (சா.அக.).

*[சிட்டு → சிட்டுலா. சிட்டு = சிறுகுருவி]*

சிட்டு[2] பார்க்க

**சிட்டை**[1] *śiṭṭai,* பெ. (n.) ஆடைக் கரைவகை (இ.வ.); short striped border of a cloth.

து. சிட்டெபட்டி (கூத்தாடுவோர் தலையில் கட்டும் துணி)

*[சிட்டு → சிட்டை. சிட்டு = சிறிய, குறுகிய]*

# சிட்டு வகைகள்



புதர்ச்சிட்டு



நீலச்சிட்டு






கருஞ்சிட்டு



ஊதாபிட்டத் தேன்சிட்டு



ஊதாத் தேன்சிட்டு



மின்சிட்டு



லோடென் தேன்சிட்டு



மஞ்சள் தொண்டைச்சிட்டு

**சிட்டை**[2] *šiṭṭai,* பெ. (n.) 1. நாள்வழி வரவு செலவுக் கணக்கிற்கான சிற்றேடு; day book. 2. வரவு செலவு விளத்தம் காட்டும் தனிக் கணக்குப் பொத்தகம்; memorandum of account containing details of major items of expenses.

மறுவ. கைசிட்டை

ம. சிட்ட; து. சிட்டெ

**சிட்டை**[3] *šiṭṭai,* பெ. (n.) கேட்போர்க் கினிமையாகச் செய்திகளைத் தொகுத்துப் பாடம் பண்ணிக் கோவையாகக் கூறும் முறை (உ.வ.); set mathodical style in singing, speaking, etc.

**சிட்டை**[4] *šiṭṭai,* பெ. (n.) சிட்டம்,[1] பார்க்க; see *šiṭṭam,*[1].

**சிட்டைக்கரி** *šiṭṭai-k-kari,* பெ. (n.) சிறிய கரித்துண்டு; small piece of charcoal. "ஊதழலிற் சிட்டைக் கரியை யிட்டு" (பஞ்ச. திருமுக. 1280)

[சிட்டை + கரி. சிட்டி = சிறுகலம், சிறிய அளவு, சிற்றளவை; சிட்டி → சிட்டை]

**சிட்டைமரம்** *šiṭṭai-maram,* பெ. (n.) இருவரால் தூக்கியெடுத்துச் செல்லப்பெறும் காவடிமரம் (யாழ்ப்.); yoke for load carried on the shoulders between two persons, dist. fr. kā-maram carried by a single person.

**சிட்டையிசை** *šiṭṭai-išai,* பெ. (n.) நிறவாளத்தி; an elaboration of musical modes.

**சிடம்** *šiḍam,* பெ. (n.) சாதிக்காய் (மூ.அ.); nutmeg.

[சிதம் → சிடம்]

**சிடிகை** *šiḍigai,* பெ. (n.) ஒருசார் நோயின் மருத்துவமாகச் சூடு இடுகை (C.G.); cauterigation.

க. சிடிகெ.

[சுடுகை → சிடுகை → சிடிகை]

**சிடிகைவேதை** *šiḍigai-vēdai,* பெ. (n.) வெடியுப்பைக் கட்டிப் பொன்னாக்கம் செய்யும் வழி; the alchemical method usually adoped by consolidating nitre (சா.அக.).

[சிடிகை + வேதை]

**சிடிமுகிவேர்** *šiḍi-mugi-vēr,* பெ. (n.) இன்னதென அறியப்படாத ஒருவகை மருந்துச் செடியின் வேர்; the root of an unknown plant (சா.அக.).

[சிடி + முகிவேர்]

**சிடுக்கு**[1] *šiḍukku,* பெ. (n.) 1. சிக்கு; tangle. 2. மகளிர் அணிவகை; a kind of ornament for women. "முத்தின் சிடுக்கு ஒரணையிற் கோத்த முத்து" (தெ. க. தொ. 2, 211).

[சிக்கு[1] → சிடுக்கு]

**சிடுக்கு**[2] *šiḍukku,* பெ. (n.) சிடுசிடுப்பு,[1] பார்க்க; see *šiḍu-šiḍuppu,*[1].

**சிடுக்குப்பிடுக்கு** *šiḍukku-p-piḍukku,* பெ. (n.) சிடுசிடுப்பு பார்க்க; see *šiḍu-šiḍuppu.*

**சிடுக்குவாரி** *šiḍukku-vāri,* பெ. (n.) மயிர்ச் சிக்கலெடுக்குங் கருவி; forked comb for disentangling the hair.

[சிடுக்கு[1] + வாரி]

**சிடுசிடு-த்தல்** *šiḍu-šiḍu-,* 4 செ.கு.வி. (v.i.) சினக் குறிப்புக் காட்டுதல்; to knit the brow in anger, scowl, frown. "சிடுசிடுத்த ராட்சதர் தம்மை" (இராமநா. உயுத். 16)

**சிடுசிடுப்பு** *šiḍu-šiḍuppu,* பெ. (n.) 1. சினக்குறி; knitting the brow in anger, frowning. 2. காய்ச்சும் எண்ணெய்யில் நீரிருப்பதை உணர்த்தும் ஒலிக்குறிப்பு (தைலவ.பாயி. 56, உரை.); onom. expr. of hissing noise, as of a burning wick when it contains particles of water.

[சிடுசிடு → சிடுசிடுப்பு]

**சிடுமூஞ்சி** *šiḍu-mūñji,* பெ. (n.) 1. கடுகடுத்த முகம்; frowning face. 2. கடுகடுத்த முக முடையவன்; one having a frowning face.

[சிடு + மூஞ்சி

முகம் → மூஞ்சி (உ.வ.)]

**சிண்**[1] *šiṉ,* பெ. (n.) கையாள் (யாழ்.அக.); personal attendant.

[சில் → சின் → சிண்]

**சிண்**[2] *šiṇ*, பெ. (n.) 1. சூதாட்டத்திற் கூட்டாளி; mate, partner in playing dice. 2. கூட்டாளி; substitute in a game. 3. விளையாட்டிற் பின்னும் ஒருமுறை ஆடுகை; extra turn which a person is entitled to in a game.

**சிண்டா** *šiṇḍā*, பெ. (n.) சிண்டு[1] பார்க்க; see *šiṇḍu*.

*[சிண்டு → சிண்டா]*

**சிண்டி** *šiṇḍi*, பெ. (n.) செம்முள்ளி; created purple nail-dye (சா.அக.).

**சிண்டு**[1] *šiṇḍu*, பெ. (n.) குடுமி (உ.வ.); hair-tuft.

ம. சிண்டி

*[சுண்டு → சுண்டான் = சிறுமொந்தை. சுண்டெலி, சுண்டுவிரல் முதலிய புணர்ப் பெயர்களில், சுண்டு என்பது சிறுமையைக் குறிக்கும். சுண்டு → சுண்டை = சிறிய காய்வகை. சுண்டு → சிண்டு = சிறிய குடுமி]*

**சிண்டு**[2] *šiṇḍu*, பெ. (n.) 1. ஒரு சிற்றளவு (வின்.); a small measure of capacity. 2. சிறு ஏனவகை; a small narrow - necked vessel. எண்ணெய்ச் சிண்டு.

ம. சிண்டு

*[சுள் → சுண்டு = சிறியது, சிறுமுகவைச் சுருவி (வீசம்படி) சுண்டு → சிண்டு (மு.தா. 128)]*

**சிண்டு**[3]**-தல்** *šiṇḍu-*, 5 செ.கு.வி. (v.i.) சருவுதல்; to touch with mischievous intention.

*[சீண்டு → சிண்டு-,]*

**சிண்டுமுடி**[1]**-தல்** *šiṇḍu-muḍi-*, செ.குன்றாவி. (v.t.) அவிழ்ந்த கூந்தலை முடிச்சுப்போடுதல்; to tie, fasten, to make into a knot, as of hair. 'தலையைச் சிண்டு முடிந்து கொண்டு வேலையைச் செய்' (உ.வ.)

**சிண்டுமுடி**[2]**-தல்** *šiṇḍu-muḍi-*, 4 செ.கு.வி. (v.i.) சண்டை மூட்டுதல் (உ.வ.); to incite persons to a quarrel. 'இவன் சிண்டுமுடிதலில் கைதேர்ந்தவன் (உ.வ.).

*[சிண்டு + முடி-,]*

**சிண்டூரி** *šiṇḍūri*, பெ. (n.) சிறுகீரை; pig greens (சா.அக.).

**சிணாட்டிப்பார்-த்தல்** *šiṇāṭṭi-p-pār-*, 4 செ.கு.வி. (v.i.) சண்டைக்கிழுத்தல் (வின்.); to create mischief; to attempt a quarrel.

*[சிணாட்டி + பார்]*

**சிணாட்டு**[1]**-தல்** *šiṇāṭṭu-*, 5 செ.குன்றா.வி. (v.t.) நோய் திரும்பவும் வருதல்; to relapse, as a disease. நீங்கின நோய் இவனைச் சிணாட்டிக் கொண்டிருக்கிறது (இவ.).

*[சில் → சிள் + ஆட்டு = சிளாட்டு → சிணாட்டு]*

**சிணாட்டு**[2] *šiṇāṭṭu*, பெ. (n.) சிணாறு (இ.வ.) பார்க்க; see *šiṇāṟu*.

**சிணாற்றைக்கழி-த்தல்** *šiṇāṟṟai-k-kaḻi*, 4 செ.கு.வி. (v.i.) 1. மரத்தினின்று சிறு கிளைகளை வெட்டுதல்; to prune, lop off branches. 2. வழக்குத் தீர்த்தல்; to settle a dispute.

*[சிணாறு + கழி-,]*

**சிணாறு** *šiṇāṟu*, பெ. (n.) அடர்ந்த சிறு கிளை (இ.வ); small close-set branch of trees and bushes.

*[சிள் → சிண் + அறு = சிணறு → சிணாறு]*

**சிணி** *šiṇi*, பெ. (n.) கெட்ட நாற்றம் (வின்.); unpleasant or offensive smell.

**சிணுக்கம்** *šiṇukkam*, பெ. (n.) 1. மூக்கால் அழுகை (வின்.); whining, whimpering. 2. சுருக்கம் விழுகை (இ.வ.); shrinking, as of cloth; becoming wrinkled. 3. உடன்பாடன் றென்பதையுணர்த்தும் முகக்குறி (உ.வ.); facial expression of disapproval or protest.

ம. சிணுக்கம்

*[சிணுங்கு → சிணுக்கம்]*

**சிணுக்கறுக்கி** *šiṇukkaṟukki*, பெ. (n.) சிடுக்குவாரி (இ.வ.) பார்க்க; see *šiḍukku-vāri*.

*[சிணுக்கு + அறுக்கி]*

**சிணுக்கன்** *šiṇukkaṉ*, பெ. (n.) பயனற்றவன்; worthless person, as always whining. "அம்பலத் தாடிக் கல்லாச் சிணுக்கரை" (திருவிசை. திருமா. 4; 4,).

*[சிணுங்கு → சிணுக்கன்]*

**சிணுக்காட்டம்** *šiṇukkāṭṭam,* பெ. (n.) மூக்காலழுகை; whining, whimpering. "சிந்தை யுமக்கேன் சிணுக்காட்டம்" (பஞ்சதிருமுக. 493).

ம. சிணுங்ஙாட்டம் (இன்பக் கேளிக்கை யாட்டம்)

[சிணுக்கு + ஆட்டம்]

**சிணுக்கிருமல்** *šiṇukkirumal,* பெ. (n.) 1. அடிக்கடி வரும் இருமல்; a short, frequent and feeble cough. 2. சிற்றிருமல்; slight cough (சாஅக.).

[சிணுக்கு + இருமல்]

**சிணுக்கு[1]-தல்** *šiṇukku-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. சிக்குப்படுத்துதல்; to complicate, entangle. 2. உடன்பாடன்மையையுணர்த்த முகத்தைக் கோட்டுதல்; to show facial signs of dis approval or protest. 3. பிள்ளையைத் திருடுதல்; to kidnap.

ம. சிணுக்குக

[சிக்கு → சிணுக்கு-,]

**சிணுக்கு[2]-தல்** *šiṇukku-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. சீண்டுதல்; to be mischieveous. 2. சிறிது சிறிதாகத் தருதல்; to yield in small quantities.

தெ. சிநுகு

**சிணுக்கு[3]-தல்** *šiṇukku-,* 5 செ.கு.வி. (v.i.) 1. விட்டுவிட்டு வருதல்; to linger, relapse, as intermittent fever. 2. துளித்தல் (வின்.); to ooze, issue in drops; to drizzle.

**சிணுக்கு[4]** *šiṇukku-,* பெ. (n.) சீண்டுகை; playful or wanton mischief. 'சிணுக்கெல்லாம் பிணக்குக் கிடம்' (வின்).

**சிணுக்கு[5]** *šiṇukku-,* பெ. (n.) சிக்கு (சங்அக.); tangle, intricacy.

[சிக்கு → சிணுக்கு]

**சிணுக்கு[6]** *šiṇukku-,* பெ. (n.) 1. உழலைமரம் (யாழ்அக.); block of wood to the neck of straying cattle. 2. விரல் முதலியவற்றின் நொடிப்பு (புதுவை.); fillip.

**சிணுக்கு[7]** *šiṇukku-,* பெ. (n.) அழுகிப் போகை; decaying.

**சிணுக்குச்சிணுக்கெனல்[1]** *šiṇukku-c-ciṇukkeṉal,* பெ. (n.) சிறிதுசிறிதாக வெளிவருதற் குறிப்பு; onom. expr. of issuing in drops.

[சிணுக்கு + சிணுக்கு + எனல்]

**சிணுக்குச்சிணுக்கெனல்[2]** *šiṇukku-c-ciṇukkeṉal,* பெ. (n.) 1. சிடுசிடுப்புக் குறிப்பு; onom. expr. of scowling. 2. அடிக்கடி அழுது தொந்தரவு செய்தற் குறிப்பு; worrying with frequent crying.

[சிணுக்கு + சிணுக்கு + எனல்]

**சிணுக்குவலி[1]** *šiṇukku-vali,* பெ. (n.) 1. சிடுக்கு வாரி (நெல்லை.); forked comb or dressing the hair.

[சிணுக்குவாரி → சிணுக்குவாலி → சிணுக்குவலி (கொச்சை)]

**சிணுக்குவலி[2]** *šiṇukku-vali,* பெ. (n.) குழந்தை பெறுவதற்கு முன்பு ஏற்படும் சிறு வலி (இவ.); slight pains at the commencement of child-birth.

[சிணுக்கு + வலி]

**சிணுக்குவாங்கி** *šiṇukku-vāṅgi,* பெ. (n.) சிடுக்குவாரி (இவ.) பார்க்க; see *šiḍukkuvāri.*

[சிணுக்கு + வாங்கி]

**சிணுக்குவாதம்** *šiṇukku-vādam,* பெ. (n.) குளிர்ச்சியால் மூட்டுகளுக்கு அடிக்கடி ஏற்படும் ஊதை (வாத) நோய்; a kind of recurrent rheumatism due to exposure (சாஅக.).

Skt. vādam - த. ஊதை.

[சிணுக்கு + வாதம்]

**சிணுக்குவாரி** *šiṇukku-vāri,* பெ. (n.) சிடுக்குவாரி (இவ.) பார்க்க; see *šiḍukkuvāri.*

[சிணுக்கு + வாரி]

**சிணுங்கி** *šiṇuṅgi,* பெ. (n.) 1. அழும் குழந்தை; crying child. 2. சிணுங்கும் பெண்; she who whines or whimpers. 3. தொட்டாற்சுருங்கி; a sensitive plant as toṭṭāṟ-siṇuṅgi, niṉṟāṟ siṇuṅgi, etc., plants that are sensitive to mere touch or by standing near it (சாஅக.).

ம. சிணுங்கி

[சிணுங்கு → சிணுங்கி]

**சிணுங்கு-தல்** *šinuṅgu-*, 5 செ.கு.வி. (v.i.) 1. மூக்காலழுதல்; to whine, whimper. "ஏங்கியிருந்து சிணுங்கி விளையாடும்" (திவ். பெரியதி. 10.5:1). 2. விட்டுவிட்டு மழை தூறுதல் (இவ.); to drizzle, intermittingly. 3. கொஞ்சுதல் (சங்.அக.); to caress, fondle.

ம. சிணுக்குக, சிணுங்நுக; க. சினுகு (முணுமுணுத்தல்); தெ. சனுகு

**சிணுசிணு-த்தல்** *šinu-šinu-*, 4 செ.கு.வி. (v.i.); சிணுங்கு- பார்க்க; see *šinuṅgu-*.

*[சிணுங்கு → சிணுசிணு-,]*

**சித்தக்கல்** *šitta-k-kal*, பெ. (n.) 1. குறுஞ்சிலைக் கல் (வின்.); a red stone. 2. நாகக் கல்வகையுள் ஒன்று; a kind of zinc stone. 3. ஈரற்கல்; gall stone (சா.அக.).

*[செந்தூள் → செந்தூளம் → செந்தூரம்→ சிந்தூரம் = செந்நீறு. செம்பொடி, சிவப்பு. சிந்தூரம் → சிந்துரம் = சிவப்பு. சிந்து → சித்து → சித்த = சிவப்பு. சித்த + கல்]*

**சித்தகத்தி** *šittagatti*, பெ. (n.) 1. சிற்றகத்தி பார்க்க; see *širragatti*. 2. வெண்செம்பை; white sesbane (சா.அக.).

*[சிற்றகத்தி → சித்தகத்தி]*

**சித்தகம்** *šittagam*, பெ. (n.) மஞ்சள் மெழுகு; yellow wax.

**சித்தகல்பம்** *šitta-kalbam*, பெ. (n.) சித்தகற்பம் பார்க்க; see *šitta-karbam*.

*[சித்தகற்பம் → சித்தகல்பம்]*

**சித்தகற்பம்** *šitta-karbam*, பெ. (n.) சித்தர்கள் உண்ணும் உடலுக்கு வலிமை தரும் மருந்து (காயகற்பம்); rejuvenating drug or medicine taken by Sittar (சா.அக.).

*[சித்தர் + கற்பம்]*

**சித்தகாயகற்பம்** *šitta-kāyakarbam*, பெ. (n.) சித்தகற்பம் பார்க்க; see *šitta-karbam* (சா.அக.).

*[சித்தர் + காயகற்பம்]*

**சித்தநாதி** *šitta-nādi*, பெ. (n.) முருங்கை; drum-stick tree (சா.அக.).

**சித்தநூற்றெளிவு** *šitta-nūrreḷivu*, பெ. (n.) சித்த மருத்துவ நூலில் சொல்லியவாறு, ஊடுருவத் தெளிந்து குறிக்கப்பட்ட வழலை அல்லது முப்பு; the mystic three salts expounded with great care and caution as mentioned in Sittar's science (சா.அக.).

*[சித்தநூல் + தெளிவு]*

**சித்தநெறி** *šitta-neri*, பெ. (n.) சிவவழி பாடியற்றும் சித்தர்கள் மேற்கொண்டதும், தென்பாண்டி நாட்டிலுண்டாகியதுமான சிவநெறி; the Šittar's school of thought in respect of the affairs relating to worship of God Šivan. It started from southern part of Pāṇdiya-nāḍu. 2. அறிவுக் கொள்கை வழி; way of Šittar's concept.

*[சித்தர் + நெறி]*

**சித்தப்பா** *šittappā*, பெ. (n.) சிற்றப்பன் பார்க்க; see *širrappan*.

*[சிற்றப்பன் → சித்தப்பன் → சித்தப்பா]*

**சித்தபத்திரி** *šitta-pattiri*, பெ. (n.) கஞ்சா; ganjah leaves used by Sittars (சா.அக.).

**சித்தம்**[1] *šittam*, பெ. (n.) 1. மனம்; mind, will. "பத்தர் சித்தம்" (திவ்.திருச்சந்.110). 2. முடிவான மனக்கொள்கை; determination, firm conviction. "தெய்வமென்பதோர் சித்தமுண்டாகி" (திருவாச. 4,42). 3. அகக்கருவி (அந்தக்கரணம்) நான்கனுள் உறுதிப்படுத்தும் தொழில் உடையது; determinative faculty, one of four anta-k-karaṇam. "சிந்தித்தாய்ச் சித்தம்" (சி.போ.சிற். 4,1,2). 4. திடம் (சூடா.); courage firmness.

*[செத்தல் = கருதுதல். செ → செத்து = கருத்து, அறிவு. செத்து → சித்து = கருத்து, அறிவு. சித்து → சித்தம் = கருத்து, மனம், அறிவு]*

த. சித்தம் → Skt. šitta

**சித்தம்**[2] *šittam*, பெ. (n.) 1. உப்பு வகை; any kind of salt. 2. முருங்கை; drum stick tree. 3. 28 தோன்றிய(ஆகம)ங்களில் ஒன்று; one of 28 saiva-āgamās (சா.அக.).

**சித்தமணி** *šitta-maṇi,* பெ. (n.) *1.* பொன்னாங் கண்ணி; sessile. *2.* இதளிய மணி; consolidated mercurial pill. *3.* பத்து வகை இதளிய ஆற்றல்களுள் ஒன்றான கிளர்ச்சியூட்டும் தன்மை தீர்ந்த குளிகை; one of the ten animated mercurial pills *(சா.அக.).*

**சித்தமருத்துவம்** *šitta-maruttuvam,* பெ. (n.) சித்தர்கள் கையாண்ட மருத்துவ முறை; a kind of healing art ascribed to Šittar.

மறுவ. தமிழ் மருத்துவம், மூலிகை மருத்துவம், வீட்டு மருத்துவம், நாட்டு மருத்துவம், பாட்டி மருத்துவம், கை மருத்துவம்

*[சித்தர் + மருத்துவம்]*

**சித்தமருத்துவமுறை** *šitta-maruttuva-muṟai,* பெ. (n.) சித்தர்தம் நூலின் துணையுடன், வைப்புச் சரக்குகளைக் கொண்டு செய்யும் மருந்துகள்; the following are the medicine and medical preparations, according to Sitta system *(சா.அக.).*

*[சித்தமருத்துவம் + முறை]*

**சித்தமருந்து** *šitta-marundu,* பெ. (n.) சித்த முறைப்படி *212* மூலப் பொருள்களினின்று செய்யும் மருந்துகள்; medicines in Sitta system are prepared from out of the mineral substances which are 212 in number *(சா.அக.).*

*[சித்தர் + மருந்து]*

**சித்தமார்க்கம்** *šitta-mārkkam,* பெ. (n.) சித்தநெறி பார்க்க; see *sitta-neṟi.*

*[சித்தர் + மார்க்கம். மார்க்கம் = நெறி]*

Skt. mārga → த. மார்க்கம்

**சித்தர்** *šittar,* பெ. (n.) *1.* ஒகத்தின்மூலம் உலகை உணரும் நுண்ணறிவு பெற்றவர்; mystic. *2.* பதினெண்கணத்துள் ஒருசாரார் (கம்பரா. நிந்தனை.10); supernals unhabiting the inter mediate region between the earth and the sun, one of padineṉ-kaṇam. *3.* முழு அருளை யடைந்தோர்; perfected ones. *4.* எண் பெரும் பேரறிவுடையோர் (அஷ்டமா சித்தியுடையோர்); mystics who have acquired the asṭa-ma-šitti. "ஏறுயர்த்தோர் சித்தராய் விளையாடிய செயல்" *(திருவிளை. எல்லாம் வல்ல.1).*

மறுவ. அறிவர், பெற்றியர்

*[சித்து → சித்தர். உண்மை கண்டவிடத்து மரபையும் மீறும் இயல்பினர்]*

**சித்தர்கல்வி** *šittar-kalvi,* பெ (n.) பண்டைக் காலத்தில், இந்தியாவிலிருந்த குரு மாணவத் தொடர்பிலமைந்த மரபுவழிக் கல்வி முறை; the Šitta system of education in ancient India followed hereditary *(சா.அக.).*

*[சித்தர் + கல்வி]*

**சித்தர்களஞ்சியம்** *šittar-kaḷañjiyam,* பெ (n.) சித்தர் தம் மந்தணச் செயல்முறையையும், அறிவுத்திறனையும் விளக்கமுறவுரைக்குந் தமிழ்நூல் திரட்டு; a full and exhaustive treatise in Tamil revealing all about Šittar's secrets and their activities *(சா.அக.).*

*[சித்தர் + களஞ்சியம்]*

**சித்தர்கற்பம்** *šittar-kaṟpam,* பெ (n.) சித்தர்கள், நலமுடனும், வலிவுடனும் நீடூழிக் காலம் வாழ்வதற்காக உட்கொண்ட சாகா மருந்து; a very rare medicinal preparation taken generally by Šittars for rejuvenation and for prolonging life it is also known ambrosial medicine *(சா.அக.).*

மறுவ. காயகல்பம்

*[சித்தர் + கற்பம்]*

**சித்தர்காலம்** *šittar-kālam,* பெ (n.) சித்த மருந்துகளைப் பயன்படுத்திய காலமான கி.மு. *10,000* முதல் கி.மு. *4,400*க்கும் இடைப்பட்ட காலம்; the period 10,000 B.C. to 4,400 B.C. in which siddha medicines were used by ancient people *(சா.அக.).*

*[சித்தர் + காலம்]*

**சித்தர்குடியிருப்பு** *šittar-kuḍiyiruppu,* பெ. (n.) இரவெரி மரம் (இருளில் ஒளிவிடும் மரம்); a luminous tree in the dark like burning bush *(சா.அக.).*

மறுவ. சோதி மரம்

*[சித்தர் + குடியிருப்பு]*

**சித்தர்குளிகை** *šittar-kuligai,* பெ. (n.) சித்தர் வானவெளியில் பறப்பதற்குப் பயன்படுத்தும் இதளியக் (பாதரச) குளிகை; the animated mercurial pill used for travelling in the serial regions. These pills were prepared and used by the Šittars in various ways (சா.அக.).

[சித்தர் + குளிகை]

**சித்தர்கூட்டம்** *šittar-kūttam,* பெ. (n.) ஒரு பொருள் குறித்துச் சித்தர்கள் பலர் ஒரே இடத்தில் கூடும் கூட்டம்; the meeting of several Šittars to form an assembly for some object in view.

[சித்தர் + கூட்டம்]

**சித்தர்கூனி** *šittar-kūni,* பெ. (n.) கட்டுக் காடை; a bird of large size of the coracidae family (சா.அக.).

[சித்தர் + கூனி]

**சித்தர்கொள்கை** *šittar-kolgai,* பெ. (n.) பொன்னாக்கம், மருத்துவம், ஓகம், மெய்ப் பொருளியல் (தத்துவம்) முதலானவை பற்றித் தெளிவாக அமைந்த சித்தர் கோட்பாடுகள்; every one of Šittars has written clearly in their works on four subject viz, alchemy, medicine, yoga, and philosophy (சா.அக.).

[சித்தர் + கொள்கை]

**சித்தர்சமாதி** *šittar-šamādi,* பெ (n.) சித்தர்கள் தங்கள் உயிரை நீத்து, இலிங்க வடிவமாகி நிலைபெற்ற இடம்; Šittars who attained success metamosphosed their bodies into linga (phallus) form (சா.அக.).

[சித்தர் + சமாதி]

**சித்தர்சிகிச்சை** *šittar-šigiccai,* பெ (n.) சித்த மருத்துவம் பார்க்க; see *šitta-maruttuvam.*

[சித்தர் + சிகிச்சை]

**சித்தர்சூரணம்** *šittar-šūranam,* பெ (n.) சித்தர் பொடி பார்க்க; see *šittar-podi.*

வ. சூரணம்; த. பொடி, தூள்

[சித்தர் + சூரணம்]

**சித்தர்ஞானம்** *šittar-ñānam,* பெ (n.) தன்னைத் தானறியும் சித்தர்தம் பேரறிவு; Šittars wisdom insisted on self-knowledge (சா.அக.).

[சித்தர் + ஞானம்]

**சித்தர்தங்கம்** *šittar-tangam,* பெ. (n.) பொன்னாக்கத்தினாலுண்டான தங்கம்; the synthetic gold obtained through alchemical process (சா.அக.).

[சித்தர் + தங்கம்]

**சித்தர்தமிழ்** *šittar-tamil,* பெ. (n.) பொன்னாக்கம், மருத்துவம், ஓகம், மெய்யறிவு, கணியம் பற்றித் தெளிவான நடையில் இலக்கணப் பொருத்தத்துடன் எழுதப்பெற்ற பாடல்கள்; Sittar Tamil usually deals with medicines, yōga, philosophy and astrology in highly grammatic form with clearly understandable verses (சா.அக.).

[சித்தர் + தமிழ்]

**சித்தர்நாடி** *šittar-nādi,* பெ. (n.) மருத்துவமும் கணியமும் (சோதிடம்) இணைந்து வருமாறு சித்தர்களால் பாடப் பெற்ற நூல்கள்; poetics composed by Sittars dealing with medicines and astrology (சா.அக.).

[சித்தர் + நாடி]

**சித்தர்நுட்பம்** *šittar-nutpam,* பெ. (n.) சித்தர்தம் நுண்மாண் நுழைபுலத்தினால், பல் திறப்பட்ட பொருள் பற்றி எழுதப்பட்ட நூற் சுருக்கம்; synopsis or summary exhibiting only the principle and intricate points of several subjects on a general view such a kind of keen compilation is possible only by siddhars endowed with spiritual knowledge (சா.அக.).

[சித்தர் + நுட்பம்]

**சித்தர்நூல்** *šittar-nūl,* பெ. (n.) பதினெண் சித்தர்கள் இயற்றிய ஊதை (வாத) மருத்துவம், ஓகம், கணியம் குறித்த நூல்கள்; the several treatises compiled by Šittars on alchemy, medicine, yoga, philosophy, astrology etc. (சா.அக.).

[சித்தர் + நூல்]

**சித்தர்நூற்சிறப்பு** *šittar-nūr-širappu,* பெ. (n.) சித்தர்கள் தங்கள் முறைப்படி இயற்றிய நூல்களும், அவற்றின் மேம்பட்ட கொண்முடிபுகளும்; the superiority of the sience under the Siddha system in all its branches, as composed with the other science leading one to the following higher conclusions (சாஅக.).

[சித்தர் + நூற்சிறப்பு]

**சித்தர்நெறி** *šittar-neri,* பெ. (n.) சித்தநெறி பார்க்க; see *šittaneri.*

**சித்தர்நோக்கம்** *šittar-nōkkam,* பெ. (n.) மக்களுக்காக இவ்வுலகின் கண் வரையறுத்த பொருள் பற்றியும், அவர்கள் யாதோர் இடையூறுமின்றி உயிர் வாழ்வதற் குண்டான பொருள்கள் பற்றியும், சித்தர்கள் கொண்ட கருத்துகள்; the following are the end and aims of Siddhars regarding the positive assertions towards the welfares of mankind to enable them to live in this world without any hindrance (சாஅக.).

[சித்தர் + நோக்கம்]

**சித்தர்பட்டை** *šittar-pattai,* பெ. (n.) சித்திர மூலம்; black flowered lead wort (சாஅக.).

[சித்தர் + பட்டை]

**சித்தர்பதினெண்மர்** *šittar-padinenmar,* பெ. (n.) திருமூலர், நந்திதேவர், இடைக்காடர், புலத்தியர், அகத்தியர், புண்ணாக்கீசர், போகர், புலிக்கீசர், கொங்கணவர், அழுகண்ணி, பாம்பாட்டி, குதம்பை, கருவூரார், அகப்பேய், தேரையர், சட்டைமுனி, பூனைக்கண்ணர், காலாங்கி ஆகிய பதினெட்டுச் சித்தர்கள்; the eighteen Šittars viz., Thirumūlar, Nandidēvar, Idaikkādar, Pulatutiyar, Agattiyar, Punnākkīcar, Bōgar, Pulikkīcar, Konganavar, Aluganni, Pāmbātti, Kudambai, Karuvūrār, Aagappēy, Tēraiyar, Sattaimuni, Pūnaikkannār, Kālāngi (சாஅக.).

[சித்தர் + பதினெண்மர்]

**சித்தர்பொடி** *šittar-podi,* பெ. (n.) சித்த மருந்துத் தூள்; medicinal powder of Šittars.

[சித்தர் + பொடி]

**சித்தர்போக்கு** *šittar-pōkku,* பெ. (n.) சித்தர்கள் தங்கள் நூல்களில், ஒவ்வொரு பொருள் பற்றியும் விளக்குங்கால், மேற்கொள்ளும் முறை; the method or ways adopted by the Šittars on every subjects in their works (சாஅக.).

[சித்தர் + போக்கு]

**சித்தர்மந்தணம்** *šittar-mandanam,* பெ. (n.) குருவருளின் துணையுடன் சித்தர் இயற்றிய நூலில் அமைந்துள்ள மந்தணச் செய்திகள்; the secret methods which ought to be learnt through the inspiration of a guru on several matters contained in the works (சாஅக.).

[சித்தர் + மந்தணம்]

**சித்தர்மறைப்பு** *šittar-maraippu,* பெ. (n.) தவறாகப் பயன்படுத்தப்பட்டுவிடக் கூடாதென்று கருதித் தகுதியுடையார்க்கன்றி ஏனையோர் எளிதில் கைக்கொள்ளவும் கடைப்பிடிக்கவும் முடியாதவாறு சித்தர்களால் மறைக்கப்பட்ட நூல்களும் மருத்துவச் செய்முறைகளும்; the several sciences and scientific methods of preparing medicine of high repute (சாஅக.).

[சித்தர் + மறைப்பு]

**சித்தர்முறை** *šittar-murai,* பெ. (n.) மக்கள் வாழ்விற்கு இன்றியமையாத, சித்தர்களால் இயற்றப்பட்ட மருத்துவமுறைகள்; the Šittar's medical system can be learnt from the works compiled by them they have mentioned all that is required for a man's career in life (சாஅக.).

[சித்தர் + முறை]

**சித்தர்மூலம்** *šittar-mūlam,* பெ. (n.) சித்திர மூலம்,1 பார்க்க; see *šittira-mūlam,1.*

[சித்தர் + மூலம்]

**சித்தர்மூலி** *šittar-mūli,* பெ. (n.) சித்திரமூலம்,1 பார்க்க; see *šittara-mūlam,1.*

[சித்தர் + மூலி]

**சித்தர்வர்க்கம்** *šittar-varkkam,* பெ. (n.) சித்தர் வகுப்பைச் சார்ந்த நவநாத சித்தர், மூல வர்க்க சித்தர் என்ற இரு பிரிவினர்; the two schools of Šittars viz 1. Navanāda [nine siddhar]. 2. the eighteen Mūlavarkka-Šittars (சாஅக.).

[சித்தர் + வர்க்கம்]

**சித்தர்வாக்கியம்** *šittar-vākkiyam,* பெ. (n.) *சித்தர்தம் அறிவுரைகள்;* the sacred sayings of Šittars *(சா.அக.).*

*[சித்தர் + வாக்கியம்]*

**சித்தர்விளையாட்டு** *šittar-viḷaiyāṭṭu,* பெ. (n). *சித்தர்கள் புரியும் எண்வகை விளையாட்டுகள் (சித்துகள்);* the eight miracle or supernatural powers played by Šittars *(சா.அக.).*

*[சித்தர் + விளையாட்டு]*

**சித்தர்வேதியல்நூல்** *šittar-vēdiyal-nūl,* பெ. (n) *சரக்கு வைப்பின் வேதிம இயல்பை விளக்கும் நூல்;* science of Šittars describing the chemical nature of substances *(சா.அக.).*

*[சித்தர் + வேதியல்நூல்]*

**சித்தரகசியம்** *šitta-ragašiyam,* பெ. (n.) *சித்தர்மந்தணம் பார்க்க;* see *šittar-mandaṇam.*

*[சித்தர் + ரகசியம்]*

Skt. rahasya → *த. இரகசியம்*

**சித்தரத்தை** *šittarattai,* பெ. (n). *சிற்றரத்தை பார்க்க;* see *širṟarattai.*

*[சிற்றரத்தை → சித்தரத்தை]*

**சித்தராரூடம்** *šittar-ārūḍam,* பெ. (n) *நஞ்சு பற்றிய மருத்துவ நூல் (சீவக. 1287, உரை.);* a treatise describing poisonous snakes, effect of their bite and remedies there of.

*[சித்தர் + ஆருடம்]*

**சித்தரி** *šittari,* பெ. (n). *சிறுகுளம் (W.G.);* a small tank.

*[சிற்றேரி → சித்தேரி → சித்தரி]*

**சித்தரி-த்தல்** *šittari-,* 4 செ.கு.வி. (v.i.) *சித்திரி-த்தல் பார்க்க;* see *šittiri-.*

**சித்தருண்ணுங்கற்பத்தி** *šittar-uṇṇuṅ-garpatti,* பெ. (n.) *திருகுக் கள்ளியின் வேர்;* twist spurge *(சா.அக.).*

*[சித்தருண்ணும் + கற்பத்தி]*

**சித்தருண்ணுங்கற்பம்** *šittar-uṇṇuṅ-karpam,* பெ. (n.) *சித்தர்கற்பம் பார்க்க;* see *šittar-karbam.*

*[சித்தர் + உண்ணும் + கற்பம்]*

**சித்தருண்ணும்புகைமூலி** *šittar-uṇṇum-pugai-mūli,* பெ. (n.) *கஞ்சா;* Indian hemp *(சா.அக.).*

*[சித்தருண்ணும் + புகைமூலி]*

**சித்தருண்ணுமூலி** *šittar-uṇṇum-mūli,* பெ. (n.) *தம் வாணாளை நீட்டிப்பதற்காகச் சித்தர் உட்கொள்ளும் மூலிகைகள்;* the drugs taken in by Šittars for purposes of rejuvenation *(சா.அக.).*

*[சித்தருண்ணும் + மூலி]*

**சித்தல்** *šittal,* பெ. (n.) *சீலை (வின்.);* cloth.

**சித்தலை** *šittalai,* பெ. (n.) *சிற்றலை;* wavelet.

*[சிற்றலை → சித்தலை]*

**சித்தவைத்தியம்** *šitta-vaittiyam,* பெ. (n.) *சித்த மருத்துவம் பார்க்க;* see *šitta-maruttuvam.*

*[சித்தர் + வைத்தியம்]*

**சித்தன்**[1] *šittaṉ,* பெ. (n.) 1. *நுண்ணறிவு பெற்றவன்;* mystics. 2. *அருள் பெற்றோன்;* one endowed with supernatural powers and capable of performing miracle. 3. *முருகன் (திருமுரு. 176, உரை);* Murugan. 4. *வைரவன் (பிங்.);* Bhairava. 5. *அருகன் (பிங்.);* Arhat. 6. *சிவன் (சங்.அக.);* Šivan. 7. *பிள்ளையார்;* Lord Ganesh.

*[சித்து → சித்தன்]*

வடவர் சித்தன் என்னும் சொல்லை, ஸாத் (dh) என்பதன் திரிபான ஸித் (dh) என்பதனொடு தொடர்புபடுத்தி ஸித்த (siddha) என்றும், சித்தியை ஸித்தி (siddhi) என்றும் காட்டுவர்.

ஸித் = முடி., கைகூடு. ஸித்தி = முடிவு, முடிபு, கைகூடல். ஸித்த = அரும்பேறு பெற்றவன்.

சித்தன் ஆற்றலைத் தமிழிற் சித்து என்பதே மரபு. சித்து விளையாடல் என்பது உலக வழக்கு. கலம்பகவுறுப்பும் சித்து என்றே பெயர் பெற்றிருத்தல் காண்க. (வ.வ. 148).

**சித்தன்**[2] *šittaṉ,* பெ. (n.) *வியாழன் (பிங்.);* Jupiter.

*[சித்து → சித்தன்]*

**சித்தன்**[3] *šittaṉ,* பெ. (n.) *நேர்மையுள்ளவன் (வின்.);* upright man.

*[சித்து → சித்தன்]*

**சித்தன்**[4] *šittaṉ*, பெ. (n.) *1.* இலவு (மலை.); red-flowered silk-cotton tree. *2.* காந்தக்கல் (சங்.அக.); loadstone.

**சித்தன்**[5] *šittaṉ*, பெ. (n.) கரடி; bear.

**சித்தன்சாபக்கல்** *šittaṉ-šāba-k-kal*, பெ. (n.) தவளைக்கல் (யாழ்.அக.); laterite slab of iron stone.

*[சித்தன் + சாபக்கல்]*

**சித்தன்வாழ்வு** *šittaṉ-vāḻvu*, பெ. (n.) முருகக் கடவுள் வாழ்விடமான திருவாவினன்குடி (திருமுருகு. 176, உரை.); *Thiru-v-āviṉaṉ-kuḍi*, as the abode of Murugaṉ.

*[சித்தன் + வாழ்வு]*

**சித்தாச்சிரமம்** *šittāccirамam*, பெ. (n.) வாமனனாகப் பிறப்பெடுத்த திருமால் தவஞ்செய்த இடம்; a hermitage where Thirumal- performed penance during His Dwarf-incarnation.

*[சித்தன் + ஆசிரமம்]*

**சித்தாசனம்** *šittāšaṉam*, பெ. (n.) இடக்குதி காலை உள்ளடக்கி வலக்குதி காலை எதிரில் வைத்து உட்கார்ந்து புருவத்தின் நடுவில் நாட்டம் வைத்திருக்கையாகிய ஓகவகை (சங்.அக.); yōgic posture which consists in placing the left heel under the body and the right heel in front of it and fixing the sight between the eyebrows in meditation.

*[சித்து + ஆசனம்]*

**சித்தாடு-தல்** *šittāḍu-*, *5* செ.கு.வி. (v.i.) சித்து விளையாடு-தல் பார்க்க; see *šittu-viḷai-y-āḍu.*

**சித்தாந்தத்தொகை** *šittānda-t-togai*, பெ. (n.) தமிழ்மொழியிற் செய்த ஒரு புத்த நூல் (சி.சி. பர.சௌத். 2, உரை.); a treatise in Tamiḻ on Buddhism.

*[சித்தாந்தம் + தொகை]*

**சித்தாந்தப்பஃறொடை** *šittānda-p-paḵṟoḍai*, பெ. (n.) அம்பலவாண தேசிகரியற்றிய நூல்; a Šaiva Šiddhānda treatise by Ambala-vāṇa-Dēšigar.

*[சித்தாந்தம் + பஃறொடை]*

**சித்தாந்தம்** *šittāndam*, பெ. (n.) *1.* முடிந்த முடிபு; well-established conclusion, settled opinion or doctrine, received or admitted truth. "மறையின் வைத்த சித்தாந்த வருத்தமதாலே" (திருக்காளத். பு. 29:37). *2.* வானநூல் (வின்.); astronomical treatise. *3.* சிவக்கொண்முடிபு (சைவ சித்தாந்தம்); Šaiva Šiddhānda. *4.* சிவனறிவு நூல் (சிவாகமம்); Šaiva Āgamās. "சிவாகமங்கள் சித்தாந்தமாகும்" (சி.சி.8:15). *5.* விடாப்பிடி (பிடிவாதம்); obstinacy. இந்தச் சித்தாந்தம் ஆகாது.

*[சித்து → சித்தாந்தம்]*

**சித்தாந்தன்** *šittāntaṉ*, பெ. (n) சிவன் (யாழ்.அக.); Šivaṉ.

**சித்தாந்தி** *šittāndi*, பெ. (n.) *1.* தன் கொள்கையை நாட்டுபவன் (சங்.அக.); one who establishes or proves his theory logically. *2.* வானநூலார்; astronomer. *3.* கணக்கியலார்; mathematician. *4.* சிவக்கொண்முடிபைச் சார்ந்தவன் (உ.வ.); a follower of the Šaiva Šiddhānda system, dist. fr. Vēdāndi. *5.* விடாப்பிடியன்; an obstinate person.

*[சித்தாந்தம் → சித்தாந்தி]*

**சித்தாமணக்கு** *šittāmaṇakku*, பெ. (n.) சிற்றாமணக்கு பார்க்க; see *šiṟṟāmaṇakku* (சா.அக.).

*[சிற்றாமணக்கு → சித்தாமணக்கு]*

**சித்தாமல்லி** *šittāmalli*, பெ. (n.) சிற்றாமல்லி பார்க்க; see *šiṟṟāmalli* (சா.அக.).

*[சிற்றாமல்லி → சித்தாமல்லி]*

**சித்தாமுட்டி** *šittāmuṭṭi*, பெ. (n.) சிற்றாமுட்டி பார்க்க; see *šiṟṟāmuṭṭi* (சா.அக.).

*[சிற்றாமுட்டி → சித்தாமுட்டி]*

**சித்தாள்** *šittāḷ*, பெ. (n.) சிற்றாள் பார்க்க; see *šiṟṟāḷ.*

*[சிற்றாள் → சித்தாள்]*

**சித்தி**[1]**-த்தல்** *šitti-*, *4* செ.கு.வி. (v.i.) *1.* கைகூடுதல்; to be gained, accomplished, to be realised. "சித்தாந்தத்தே நிற்பர் முத்தி சித்தித்தவர்" (திருமந். 2394). *2.* மருந்தினை முழுமையாகச் செய்து

முடித்தல்; to succeed in the preparation of medicine of high repute.

[சித்து → சித்தி; சித்து = அறிவு, முழுமை. சித்தி → சித்தித்தல்]

**சித்தி**[2] *šitti,* பெ. (n.) சிறிய தாய்; சித்தப்பாவின் மனைவி, தாயின் தங்கை; mother's younger sister; father's younger brother's wife.

[சிற்றாய் → சிற்றாய்த்தி → சித்தி]

**சித்தி**[3] *šitti,* பெ. (n.) சித்தியா (தஞ்சைமாலியஅந்) பார்க்க; see *šittiya.*

[சித்தியா → சித்தி]

**சித்தி**[4] *šitti,* பெ. (n.) சித்தை[1] பார்க்க; see *šittai.*

[சித்தை → சித்தி]

**சித்தி**[5] *šitti,* பெ. (n.) செடில்; hook - swinging festival.

**சித்தி**[6] *šitti,* பெ. (n.) நிலக்குமிழ்; small Cashmere tree.

**சித்திக்கண்** *šitti-k-kaṇ,* பெ. (n.) அறிவுக்கண்; the eye of wisdom (சா.அக.).

[சித்து → சித்தி + கண்]

**சித்திக்கண்ணன்** *šitti-k-kaṇṇaṉ,* பெ. (n.) துறவி; sage (சா.அக.).

[சித்து → சித்தி + கண்ணன்]

**சித்திக்கல்** *šitti-k-kal,* பெ. (n.) 1. செடிலாட்டத்திற்காக நாட்டப்பட்ட தூண். (G. Sm. D.. I. i, 122); stone or wooden pillar set up for hook - swinging. 2. குறுஞ்சிலைக்கல் (வின்.); kind of red stone.

[சித்தி[4] + கல்]

**சித்திக்கலை** *šitti-k-kalai,* பெ. (n.) சித்திக்கல் பார்க்க; see *šitti-k-kal* (சா.அக.).

**சித்திக்குளிகை** *šitti-k-kuḷigai,* பெ. (n.) எண் வகை இறும்பூதுகளை (அற்புதங்களை) நிகழ்த்தும் குளிகை; a magic pill peculiar to Tamiḻ Sitta medicine prepared to enable one to attain success in the performance of eight miracles (சா.அக.).

[சித்தி + குளிகை. குள் → குளிகை = உருண்டை மாத்திரை]

**சித்திக்குறி** *šitti-k-kuṟi,* பெ. (n.) எட்டிக் கொட்டை; nux vamica nut (சா.அக.).

**சித்திடு** *šittiḍu,* பெ. (n.) சித்துடு[2] (மலை.) பார்க்க; see *šittuḍu*[2].

[சித்துடு[2] → சித்திடு]

**சித்திநெறி** *šittineṟi,* பெ. (n.) சித்தநெறி பார்க்க; see *šittaneṟi,1.*

[சித்தநெறி → சித்திநெறி]

**சித்திமல்லி** *šitti-malli,* பெ. (n.) வெதுப்படக்கி; stinking plant (சா.அக.).

**சித்திமூலம்** *šittimūlam,* பெ. (n.) 1. கொடுவேலி; Ceylon lead-wort. 2. நிலப் பனையின் கிழங்கு; moosly root.

ம. சித்திரமூலம்

[சித்திரமூலம் → சித்திமூலம்]

**சித்தியம்** *šittiyam,* பெ. (n.) கோரி (யாழ்.அக.); turret.

**சித்தியர்**[1] *šittiyar,* பெ. (n.) தெய்வமங்கையர் வகையினர்; a class of celestial women. "சித்திய ரிசைப்பத் தீஞ்சொல்" (கம்பரா. ஊர்தேடு. 186).

[சித்தன் (ஆ.பா.) - சித்தி (பெ.பா.). 'இ' பெ.பா. ஈறு. சித்தி + அர் → சித்தியர். 'அர்' ப.பா. ஈறு]

**சித்தியர்**[2] *šittiyar,* பெ. (n.) சித்திபெற்றவர்கள்; one who attained spiritual power.

**சித்தியா** *šittiyā,* பெ. (n.) சிற்றப்பன்; தந்தையின் தம்பி, அம்மாவின் தங்கை கணவர் (மாலிய அந்தணர்); father's younger brother; mother's younger sister's husband.

[சிற்றையா → சித்தையா → சித்தியா]

**சித்தியாகு-தல்** *šittiyāgu-,* 5 செ.குவி. (v.i.) பயன்படல்; to become useful (சா.அக.).

[சித்தி + ஆகு]

**சித்தியார்** *šittiyār,* பெ. (n.) சிவஞான சித்தியார்; a treatise on Šaiva Šiddhāntā. "உந்திகளி றுயர் போதஞ் சித்தியார்" (திராவிடப். 384).

[சித்தி → சித்தியார்]

**சித்திரக்கடம்** *šittira-k-kaḍam,* பெ. (n.) பெருங்காடு (வின்.); wild jungle, wilderness.

*[சித்திரம் + கடம்]*

**சித்திரக்கண்டகம்** *šittira-k-kaṇḍagam,* பெ. (n.) சித்திரகண்டம் பார்க்க; see *šittira-kaṇḍam* (சா.அக.).

*[சித்திரகண்டம் → சித்திரகண்டகம்]*

**சித்திரக்கண்டம்** *šittira-k-kaṇḍam,* பெ. (n.) 1. அழகிய கழுத்து; beautiful neck. 2. பல வண்ணக் கழுத்துடைய மாடப் புறா; house pigeon.

*[சித்திரம் = ஓவியம், அழகு. கண்டம் = கழுத்து; சித்திரம் + கண்டம்]*

**சித்திரக்கம்மம்** *šittira-k-kammam,* பெ. (n.) அழகிய நுண்கலை வேலைப்பாடு; artistic workmanship. "செந்நூ னிணந்த சித்திரக் கம்மத்து" (பெருங். உஞ்சைக் 35:98)

*[சித்திரம் + கம்மம்]*

**சித்திரக்கம்மி** *šittira-k-kammi,* பெ. (n.) ஓவியத் தொழிலமைந்த ஆடைவகை. (சிலப். 14:108, உரை.); a kind of cloth.

*[சித்திரம் + கம்மி]*

**சித்திரக்கருங்கல்** *šittira-k-karuṅgal,* பெ. (n.) கோடுகளுள்ள கருங்கல் வகை; graphic granite.

*[சித்திரம் + கருங்கல்]*

**சித்திரக்கவி** *šittira-k-kavi,* பெ. (n.) 1. நால்வகைப் பாக்களுள் சித்திரத்தில் அமைத்துப் பாடும் மிறைப்பா (பிங்.); a variety of metrical composition filled into fanciful figures, one of nāṟ-pā. 2. சித்திரப்பா பாடுவோன் (சங்.அக.); one claver in composing šittira-p-pā.

*[சித்திரம் + கவி]*

**சித்திரக்கா** *šittirakkā,* பெ. (n.) சித்திரக்கவி வகை; a kind of šittira-k-kavi. "சித்திரக்காவே விசித்திரக்காவே" (யாப்.வி.96).

*[சித்திரம் + கா]*

**சித்திரக்காரன்** *šittira-k-kāraṉ,* பெ. (n.) 1. ஓவியம் எழுதுவோன்; painter, portrait-painter. "சித்திரகாரருஞ் செய்கெனச் சொல்லி" (பெருங். வத்தவ. 3:28). 2. சிற்பி (சூடா.); sculptor, engraver.

ம. சித்ரக்காரன், சித்ரகான்

*[சித்திரம் + காரன்]*



சித்திரக்காரன்

**சித்திரக்காரை** *šittirakkārai,* பெ. (n.) புள்ளிகளையுடைய மீன் வகை; a kind of fish (சேரநா.).

*[சித்திரம் + காரை]*

**சித்திரக்காலி** *šittira-k-kāli,* பெ. (n.) 1. காரத் தன்மையுள்ள கொடிவகை; an unknown pungent creeper. 2. நெல்வகை (சங்.அக.); a kind of paddy.

**சித்திரக்கிழங்கு** *šittira-k-kiḻaṅgu,* பெ. (n.) கொடுவேலிக் கிழங்கு; the root of plumbago zeylarica (சேரநா.).

ம. சித்திரக்கிழங்நு

**சித்திரக்குண்டலி** *šittira-k-kuṇḍali,* பெ. (n.) கூத்து வகை (கல்லா. 27, உரை, பக்.222); a kind of dance.

*[சித்திரம் + குண்டலி]*

**சித்திரக்குத்தன்** *šittira-k-kuttaṉ,* பெ. (n.) கூற்றுவனிடம் உயிர்களின் நல்வினை தீவினைகளைக் கணக்கெழுதிப் படிப்போனாகக் கருதப்படுவான்; one who believes Yama's officer who records the good end evil deeds of human beings. "சித்திரகுத்த னெழுத்தால்" (திவ். பெரியாழ். 5. 2:2).

**சித்திரக்குள்ளன்** *šittira-k-kuḷḷaṉ,* பெ. (n.) உடற் குறையோடுகூடிய குள்ளன்; chandroplatic dwarf with bodily defects *(சா.அக.).*

*[சித்திரம் + குள்ளன். சித்திரம் = குறைவு]*

**சித்திரக்கூடக்கல்** *šittirakūḍa-k-kal,* பெ. (n.) நாக வடிவாகச் செய்யப்பட்ட கல்; a stone idol of serpent god *(சேரநா.).*

ம. சித்ரகூடக்கல்லு

*[சித்திரம் + கூடம் + கல்]*

**சித்திரக்கூடம்**[1] *šittira-k-kūḍam,* பெ. (n.) 1. ஓவியச் சாலை; decorated or painted hall, hall hung with pictures. "செல்வப் பொற்கிடுகு சூழ்ந்த சித்திரக்கூடம்" *(சீவக. 2139).* 2. தெற்றியம் பலம் *(திவா.);* raised platform. 3. தில்லைத் திருமால் கோயில்; a Tirumāl shrine in Chidambaram. "தில்லைத் திருச்சித்திரக்கூடஞ் சென்று சேர்மின்களே" *(திவ். பெரியதி. 3:2).*

*[சித்திரம் + கூடம்]*

**சித்திரக்கூடம்**[2] *šittira-k-kūḍam,* பெ. (n.) இராமன் காட்டில் வாழ்ந்த போது தங்கியிருந்த ஒரு மலை; a mountain in Bundlekh and where Ramaṉ stayed during his exile. "சித்திர கூடத் திருப்பச் சிறுகாக்கை முலை தீண்ட" *(திவ். பெரியாழ். 3.10:6).*

*[சைத்ரம் → சித்திரம் + கூடம்]*

**சித்திரக்கொடி** *šittira-k-koḍi,* பெ. (n.) கொடுவேலி *(பிங்.);* ceylon leadwort.

*[சித்திரம் + கொடி]*

**சித்திரக்கோலம்** *šittira-k-kōlam,* பெ. (n.) 1. நச்சுப் பல்லி *(யாழ். அக.);* a kind of poisonous lizard. 2. பாம்பு; cobra *(சா.அக.).*

*[சித்திரம் + கோலம்]*

**சித்திரகம்** *šittiragam,* பெ. (n.) 1. கொடுவேலி *(மலை.);* Ceylon leadwort. 2. ஆமணக்கு *(சூடா.);* castor plant.

**சித்திரச்சபை** *šittira-c-cabai,* பெ. (n.) திருக் குற்றாலத்துச் சிவன் நடனமாடும் கோயில் *(குற்றா. தல. கடவுள் வண.3);* dancing - hall of Naṭrāja at Tiru-k-kuṟṟālam in Tirunelveli district.

*[சித்திரம் + சபை. அவை → சவை → சபை]*

**சித்திரச்சாலை** *šittira-c-cālai,* பெ. (n.) சித்திர மண்டபம் பார்க்க; see *šittira-maṇḍabam.* "பத்தியிற் குயிற்றிய சித்திரச் சாலையும்" *(பெருங். மகத. 4:15).*

*[சித்திரம் + சாலை]*

**சித்திரச்சிலந்தி** *šittira-c-cilandi,* பெ. (n.) ஒரு வகைச் சிலந்தி; a kind of spider *(சா.அக.).*

*[சித்திரம் + சிலந்தி]*

**சித்திரச்சூடகம்** *šittira-c-cūḍagam,* பெ. (n.) அழகிய வேலைப்பாடமைந்த விரற்செறி. *(குற்றா.குற. 51);* a ring of fine workman ship.

*[சித்திரம் + சூடகம். சூடு → சூடகம் = கைவளை]*

**சித்திரச்சோறு**[1] *šittira-c-cōṟu,* பெ. (n.) புளிச்சோறு, சருக்கரைச் சோறு, எட்சோறு முதலியன கலந்து செய்த பலவண்ணச் சோறு *(சங்.அக.);* boiled rice mixed with spicy condiments, as tamarind, sesamum, suger, etc. "சித்திரச் சோற்றிற் செருக்கினேன்" *(அருட்பா, vi, அவாவறுப்பு. 7)*

மறுவ. சித்திரான்னம்

*[சித்திரம் + சோறு]*

**சித்திரத்தண்டகம்** *šittira-t-taṇḍagam,* பெ. (n.) பருத்தி *(யாழ்.அக.);* cotton.

*[சித்திரம் + தண்டகம்]*

**சித்திரத்தாரணை** *šittira-t-tāraṇai,* பெ. (n.) ஒன்பதுவகை ஆற்றல்களுளொன்று *(யாப்.வி96, பக். 516);* one of nava-tāraṇai *(சா.அக.).*

**சித்திரத்தாளம்** *šittira-t-tāḷam,* பெ. (n.) ஒன்பது வகை தாளத்தொன்று *(பரத.தாள. 6);* a variety of time-measure one of nava-tāḷam.

*[சித்திரம் + தாளம்]*

**சித்திரத்தையல்** *šittira-t-taiyal,* பெ. (n.) ஆடைகளில் பூ வேலைப்பாடுகள் அமைந்த தையல்; embroidary *(சேரநா.).*

மறுவ. சித்திரத் துன்னல்

ம. சித்ரத்தய்யல்

*[சித்திரம் + தையல்]*

**சித்திரநாடி** *śittira-nāḍi,* பெ. (n.) நடு முதுகிலோடும் சுழிமுனை நாடி; one of the passages of nerve-centre at the top of the vertebral column running down the spinal cord (சா.அக.).

**சித்திரநோய்** *śittira-nōy,* பெ. (n.) குடல் நோய்; a disease of the intestines (சா.அக.).

**சித்திரப்படம்** *śittira-p-paḍam,* பெ. (n.) 1. எழுதிய ஓவியம்; picture. 'சித்திரத்துக் கொக்கே, ரத்தினத்தைக் கக்கு' (பழ.). 2. பூந்துகில்; variegated, painted or printed cloth. 3. யாழ் முதலியவற்றில் பல நிறமுள்ள அல்லது பூத்தொழிலமைந்த உறை; decorated cloth-cover. "சித்திரப்படத்துட் புக்கு" (சிலப். 7:1).

ம. சித்ரபடம்

*[சித்திரம் + படம்]*

**சித்திரப்படாம்** *śittira-p-paḍām,* பெ. (n.) சித்திரப்படம், 2 பார்க்க (யாழ். அக.); see *śittira-p-paḍam, 2.*

*[சித்திரம் + படாம். படம் → படாம்]*

**சித்திரப்பணி** *śittira-p-paṇi,* பெ. (n.) 1. வியப்பிலாழ்த்தும் வேலைப்பாடு; decorative or ornamental work. 2. ஓவியம் (சிலப். 6:169, அரும்.); painting.

ம. சித்ரப்பணி

*[சித்திரம் + பணி]*

**சித்திரப்பலகை** *śittira-p-palagai,* பெ. (n.) ஓவியம் வரையப் பயன்படும் பலகை; a board used for painting a picture, painted board or plank (சேரநா.).

ம. சித்ரப்பலக

*[சித்திரம் + பலகை]*

**சித்திரப்பா** *śittira-p-pā,* பெ. (n.) சித்திரக்கவி (திவா.) பார்க்க; see *śittira-k-kavi.*

*[சித்திரம் + பா]*

**சித்திரப்பாலடை** *śittira-p-pālaḍai,* பெ. (n.) 1. பூடுவகை; painted-leaved tailed tick-trefoil. 2. அம்மான்பச்சரிசி (சங்.அக.); species of euphorbia.

*[சித்திரம் + பால் + அடை. அடை = இலை]*

**சித்திரப்பாலாடை** *śittira-p-pālāḍai,* பெ. (n.) சித்திரப்பாலடை பார்க்க; see *śittira-p-pālaḍai.*

*[சித்திரம் + பாலாடை]*

**சித்திரப்பாலாவி** *śittira-p-pālāvi,* பெ. (n.) அம்மான்பச்சரிசி; species of euphorbia.

மறுவ. சித்திரவல்லாதி, சீதேவியார்

*[சிற்றிலைப் பாலாவி → சித்திரப்பாலாவி]*

**சித்திரப்பாலை** *śittira-p-pālai,* பெ. (n.) சிற்றம்மான் பச்சரிசி (பாலவா. 364); species of euphorbia.

*[சித்திரம் + பாலை]*

**சித்திரப்பாவை** *śittira-p-pāvai,* பெ. (n.) சித்திரத்தில் தீட்டப்பட்ட பெண் வடிவம்; picture, portrait, carved image, especially of a woman. "சித்திரப் பாவையி னத்தக வடங்கி" (நன். 41).

*[சித்திரம் + பாவை. பார்ப்பு = பறவைக் குஞ்சு, மக்கட்குழவி. பார்ப்பு → பாப்பு. ஒ.நோ. கோர்வை → கோவை. பார்வை → பாவை = கண்ணில் தோன்றும் உருவம். பாவை = படிமை, பொம்மை, அழகிய உருவம், பெண் வடிவம்]*

**சித்திரப்பாளை** *śittira-p-pāḷai,* பெ. (n.) கேரளத்துத் தெய்யம், கோலம், துள்ளல் முதலிய ஆட்டங்களில் பாக்குமரப் பட்டைகளில் வண்ணந்தீட்டி அணியப்படும் முகமூடி; a painted mask made of spathe of the areca nut palm (worn by actors in teyyam and kolam tuḷḷal) (சேரநா.).

ம. சித்ரப்பாள

*[சித்திரம் + பாளை]*

**சித்திரப்பிரதிமை** *śittira-p-piradimai,* பெ. (n.) சித்திரப்பாவை (யாழ்ப்.) பார்க்க; see *śittira-p-pāvai.*

*[சித்திரம் + பிரதிமை]*

Skt. pratimā → த. பிரதிமை

**சித்திரப்புடைவை** *śittira-p-puḍaivai,* பெ. (n.) 1. அச்சடிசேலை (இ.வ.); printed cloth, chintz. 2. பல வண்ண ஓவிய வேலைப்பாடுடைய புடைவை; damask.

*[சித்திரம் + புடைவை]*

**சித்திரப்புணர்ப்பு** *šittira-p-puṇarppu*, பெ. (n.) இசை கொள்ளும் எழுத்துகளின் மேல் வல்லெழுத்து வந்தபோது மெல்லொற்று போலப் பண்ணீர்மை நிறுத்துகை (சிலப். 3: 56, உரை.); nasalising the hard consonants in singing a musical piece.

*[சித்திரம் + புணர்ப்பு. புணர் → புணர்ப்பு]*

**சித்திரப்புல்** *šittira-p-pul*, பெ. (n.) ஓவியத் தூரிகையிற் பயன்படுத்தும் ஒருவகைப் புல்; a kind of grass or reed used as a painter's brush.

ம. சித்ரப்புல்லு

*[சித்திரம் + புல்]*

**சித்திரப்புறா** *šittira-p-puṟā*, பெ. (n.) புள்ளிப் புறா (சீவக. 564, உரை); spotted dove.

*[சித்திரம் + புறா]*

**சித்திரப்பூச்சு** *šittira-p-pūccu*, பெ. (n.) ஓவிய வேலைப்பாடமைந்த வெள்ளி அல்லது தங்கப் பூச்சு; decorative plating (சேரநா.).

ம. சித்ரப்பூச்சு

*[சித்திரம் + பூச்சு]*

**சித்திரப்பூமி** *šittira-p-pūmi*, பெ. (n.) அழகும் வியப்பும் நிறைந்த சோலை, செய்குன்று முதலிய இடங்கள்; beautiful landscape. "சித்திரப்பூமி வித்தக நோக்கி" (பெருங். உஞ்சைக். 33:7.).

*[சித்திரம் + பூமி]*

Skt. bhūmi → த. பூமி

**சித்திரப்பெண்** *šittira-p-peṇ*, பெ. (n.) 1. வெற்றிலை; betel leaf. 2. வெற்றிலைக் கொடி; betel vine (சாஅக.).

*[சித்திரம் + பெண். சித்திரம் = அழகு]*

**சித்திரப்பேச்சு**[1] *šittira-p-pēccu*, பெ. (n.) அழகான பேச்சு; rhetorical utterance.

*[சித்திரம் + பேச்சு]*

**சித்திரப்பேச்சு**[2] *šittira-p-pēccu*, பெ. (n.) தந்திரப் பேச்சு; artful speech.

*[சித்திரம் + பேச்சு]*

**சித்திரம்**[1] *šittiram*, பெ. (n.) 1. ஓவியம்; picture, painting. "சித்திரம் பயின்ற செம்பொன் விதானத்து" (பெருங். உஞ்சைக். 37:14). 'சித்திரமும் கைப்பழக்கம், செந்தமிழும் நாப்பழக்கம்' (பழ.). 2. சிறப்பு (பிங்.); excellence. 3. அழகு; beauty. "சித்திரமாக...... செய்த....... பூங்காவின்" (பெருங். வத்தவ. 7:149). 4. அணியழகு; decoration, embelishment. 5. வியப்பானது; object of wonder, surprise. "சித்திர மிங்கிது வொப்பது" (கம்பரா. கார்முக. 19). 6. சித்திரப்பேச்சு[1] பார்க்க; see *šittira-p-pēccu*[1]. 7. சித்திரக்கவி (பிங்.) பார்க்க; see *šittira-k-kavi*. 8. ஒரு சிற்பநூல்; a treatise on architecture. 9. காடு (பிங்.); forest.

ம. சித்திரம்

*[செத்தல் = ஒத்தல். செத்து = ஒத்து, போல. (தொல்.பொருள். 286, உரை.) செ + திரம் - செத்திரம் → சித்திரம் = ஒப்பு, ஓவியம், பலவண்ணம், திறமை, புதுமை. ஒ.நோ. செந்தூரம் → சிந்தூரம். செத்தல் = ஒத்தல் 'திரம்' தொழிற் பெயரீறு. எ.டு. மாத்திரம், மோட்டிரம் → மோத்திரம் = மூத்திரம் வடவர் சித்ர என்பதைச் சித் என்பதன் திரிபாகக் கொண்டு, தெளிவாய்த் தெரிதல், விளக்கமான நிறம், வண்ண வேறுபாடு, வண்ணப்படம் என்று வலிந்து பொருத்திக் காட்டுவர் (வ.வ.149)]*

த. சித்திரம் → Skt. citra

**சித்திரம்**[2] *šittiram*, பெ. (n.) புலி; tiger, panther. "சுதியில் வந்த சித்திரமென" (பாரத. பதின்மூ. 125).

**சித்திரம்**[3] *šittiram*, பெ. (n.) 1. ஓட்டை; hole, slit, opening. 2. குறைவு; ignominy, blot. "மெலிவு தோன்றிய சித்திரம் பெறுதலில்" (கம்பரா. கும்பகரு. 293). 3. வெளி (மாறனலங். 261. உதா. 626); void. 4. பொய்; unreality. "சித்திரமிக் கனவில் வாழ்வென" (கந்தரந். 50). 5. மந்தணம்; secret. "பகைவெல் சித்திரம் பலதிறம் பயிற்றி" (பெருங். உஞ்சைக். 37:43). 6. சித்திரப்பேச்சு[2] பார்க்க; see *šittira-p-pēccu*[2]. 7. உட்கலகம்; discord, as in a family.

*[இல் → இல்லி = துளை, சிறுதுளை. இல் → சில் → சில்லி = ஓட்டை. சில் → சின் → சிந்திரம் → சித்திரம்]*

**சித்திரம்**[4] *šittiram*, பெ. (n.) *1.* கொடுவேலி; Ceylon leadwort. *2.* சிறுகுறிஞ்சா; species of gymnema. *3.* ஆமணக்கு; castor plant.

**சித்திரம்**[5] *šittiram*, பெ. (n.) *1.* புதுமைப் பொருள்; novelty. *2.* பல நிறம்; varied colours.

**சித்திரம்பேசு-தல்** *šittiram-pēšu-*, 5 செ.குவி. (v.i.) போலியாகப் பேசுதல், பொய்யாகச் சொல்லுதல்; to utter false with rhetorical style to speak falsehood (சாஅக.).

*[சித்திரம் + பேசு-,]*

**சித்திரம்வெட்டு-தல்** *šittiram-veṭṭu-*, 5 செ.குவி. (v.i) கல்லில் ஓவியவேலை செய்தல் (C.E.M.); to engrave on stones.

*[சித்திரம்*[1] *+ வெட்டு]*

**சித்திரமண்டபம்** *šittira-maṇḍabam*, பெ. (n.) *1.* ஓவியச்சாலை; painted chamber, hall decorated with pictures, picture-gallery. *2.* ஓலக்க மண்டபம் (சீவக. 2370); royal audience - hall.

*[சித்திரம் + மண்டபம். முள் → முண்டு → மண்டு. மண்டுதல் = கூடுதல். மண்டு → மண்டகம் → மண்டபம்]*

**சித்திரமண்டலம்** *šittira-maṇḍalam*, பெ. (n.) நச்சுப் பாம்பு வகைகளுள் ஒன்று; a venamous kind of snake (சேரநா.).

*[சித்திரம் + மண்டலம். மண்டுதல் = வளைதல். மண்டு → மண்டலம் = வட்டம், வட்டவடிவம், வட்டமாய்ச் சுற்றி வருகை]*

**சித்திரமண்டலச்சிலந்தி** *šittira-maṇḍala-c-cilandi*, பெ. (n.) நச்சுத் தன்மையுள்ள சிலந்தி; a kind of poisonous spider (சாஅக.).

*[சித்திரம் + மண்டலம் + சிலந்தி]*

**சித்திரமாடம்** *šittira-māḍam*, பெ. (n.) ஓவிய வேலைப்பாடமைந்த, அணியழகு செய்யப் பட்ட மாளிகை; beautiful hall or palace artistically decorated with pictures and paintings. "சித்திர மாடத்துத் துஞ்சிய நன்மாறன்" (புறநா. 59).

*[சித்திரம் + மாடம்]*

**சித்திரமூலப்பற்று** *šittira-mūla-p-paṟṟu*, பெ. (n.) கடைச் சரக்குகளாற் செய்யப்படுவதும் வீக்கத்தைப் போக்குவதுமாகிய களிம்பு; an ointment prepared from the bazar ingredients. It is used for reducing swelling for purposes of cure.

*[சித்திர மூலம் + பற்று]*

**சித்திரமூலம்** *šittira-mūlam*, பெ. (n.) *1.* கொடுவேலி; Ceylon leadwort. *2.* செங்கொடு வேலி; rosy-flowered leadwort. *3.* நீலக்கொடு வேலி; blue lead - wort. *4.* நிலப்பனை; ground-palm. *5.* காட்டாமணக்கு; English physic nut (சாஅக.).

ம. சித்திரமூலம்

*[சித்திரம்*[4] *+ மூலம்]*

**சித்திரமூலி** *šittira-mūli*, பெ. (n.) சித்திரமூலம்,[2] (மலை.) பார்க்க; see *šittira-mūlam*,[2].

*[சித்திரம் + மூலி]*

**சித்திரமெழுதுமண்** *šittira-meḻudu-maṇ*, பெ. (n.) *1.* செம்மண்; red ochre. *2.* செம்மணல்; red sand.

*[சித்திரம் + எழுதும் + மண்]*

**சித்திரமேகத்தடாகம்** *šittira-mēga-t-taḍāgam*, பெ. (n) மகேந்திரவர்மன் மாமண்டூரில் உண்டாக்கிய ஓர் ஏரி; a lake made by the Pallava king Mahēndravarmaṉ.

*[சித்திரம் + மேகம் + தடாகம்]*

**சித்திரமேகலை** *šittira- mēgalai*, பெ. (n.) மயில்; pea-cock (சாஅக.).

*[சித்திரம் + மேகலை]*

**சித்திரமேழி** *šittirameḻi*, பெ. (n.) *1.* கலப்பைக் குறி; a plough-emblem cut in stone. "திருவாழியும் சித்திர மேழியும் இட்ட கல்நட்டு" (தெ.க.தொ. 5, 199). *2.* ஊரவை (I.M.P.N.A.149); village assembly.

*[சித்திரம் + மேழி]*

மேழி பார்க்க

**சித்திரர்** *šittirar*, பெ. (n.) கலகம் விளைப்போர், குழப்பம் விளைப்போர்; quarrelsome, factious people. "சித்திரர்க்கெளி யேனலேன்" (தேவா. 859, 3)

**சித்திரரதன்** *šittira-radaṉ,* பெ. (n.) அழகிய தேரையுடைய கதிரவன் *(சங்.அக.);* Sun, as riding in a beautiful chariot.

*[சித்திரம் + இரதன்]*

**சித்திரவண்ணச்சேலை** *šittira-vaṇṇa-c-cēlai,* பெ. (n.) வண்ணந்தீட்டிய புடைவை வகை *(பஞ்ச. திருமுக. 1160);* a kind of saree.

*[சித்திரம் + வண்ணம் + சேலை]*

**சித்திரவண்ணம்** *šittira-vaṇṇam,* பெ. (n.) நெடிலும் குறிலும் ஒப்பவிரவிய சந்தம் *(தொல். பொருள். 534);* a rhythmic verse characterised by euphonic alternation of long and short syllables.

*[சித்திரம் + வண்ணம்]*

**சித்திரவரி** *šittira-vari,* பெ. (n.) கண்விழி; pupil of the eye.

*[சித்திரம் + வரி]*

**சித்திரவரைவு** *šittira-varaivu,* பெ. (n.) கையிலுள்ள வரைவு *(ரேகை);* streaks or lines on the palms.

*[சித்திரம் + வரைவு]*

**சித்திரவல்லாரி** *šittira-vallāri,* பெ. (n.) சேங்கொட்டை; common marking- nut.

*[சித்திரம் + வல்லாரி]*

**சித்திரவல்லி** *šittira-valli,* பெ. (n.) கசப்பு வெள்ளரி வகை; a species of bitter cucumber.

*[சித்திரம் + வல்லி]*

**சித்திரவிதழ்** *šittira-v-idaḻ,* பெ. (n.) துத்தி *(மலை.);* country mallow.

*[சித்திரம் + இதழ்]*

**சித்திரவிதை** *šittira-vidai,* பெ. (n.) ஆமணக்கு, முத்துக்கொட்டை; castor seed *(சா.அக.).*

*[சித்திரம் + விதை]*

**சித்திரவெழுத்து** *šittira-v-eḻuttu,* பெ. (n.) ஓவியக் கலை; the art of painting *(சேரநா.).*

*[சித்திரம் + எழுத்து]*

**சித்திரவேளாகொல்லி** *šittira-vēḷā-kolli,* பெ. (n.) யாழ்த்திறவகை *(திவா.);* a secondary melody-type.

*[சித்திரம் + வேளாகொல்லி]*

**சித்திரவேளாவளி** *šittira-vēḷā-vaḷi,* பெ. (n.) பண்வகை *(பரத. ராக.104.);* a specific melody - type.

**சித்திரவோடாவி** *šittira-v-ōḍāvi,* பெ. (n.) ஓவியம் எழுதுவோன் *(யாழ்.அக.);* painter.

*[சித்திரம் + ஓடாவி]*

**சித்திரவோரை** *šittira-vōrai,* பெ. (n.) உள்ளங்கை வரிகை (ரேகை)களுள் ஒன்று *(வின்.);* a line in palm of hand significant in palmistry.

*[சித்திரம் + ஓரை]*

**சித்திரன்** *šittiraṉ,* பெ. (n.) *1.* ஓவியன்; painter, artist. *2.* தச்சன்; carpenter.

*[சித்திரம் → சித்திரன்]*

**சித்திராங்கதை** *šittirāṅgadai,* பெ. (n.) அருச்சுனன் மனைவியான பாண்டியன் மகள்; the Pandiayan princess who married Aruccuṉaṉ. "சித்திராங்கதை யென்னுஞ் செஞ்சொல் வஞ்சி" *(பாரத. அருச்சுனன்றீர். 26)*

**சித்திராசனம்** *šittirāšaṉam,* பெ. (n.) *1.* ஏந்தாக இருத்தலாகிய ஒக வகை *(காசிக. யோக. 15);* a yōgic posture which consists in sitting as best suits one's comfort. *2.* உட்காரப் பயன்படும் சிறிய அரத்தினக் கம்பளம் *(சிசி. 8, 33, நிரம்ப);* small coloured corpet for sitting.

*[சித்திரம் + ஆசனம்]*

**சித்திரான்னம்** *šittirāṉṉam,* பெ. (n.) சித்திரச் சோறு பார்க்க; see *šittira-c-cōṟu.*

*[சித்திரை + அன்னம்]*

**சித்திரி[1]-த்தல்** *šittiri-,* 4 செ.குவி. (v.i.) *1.* சித்திர மெழுதுதல்; to paint, make fancy work. *2.* வண்ணித்துப் (அழகாகப்) பேசுதல் *(வின்.);* to paint in words, use rhetorical tricks in speech. *3.* கற்பனை செய்தல்; to fashion, invent, as arguments; to fabricate. "வஞ்சனை தெரிந்து

*சித்திரிப்பார்" (பெரியபு. திருநாவுக். 82).* 4. ஒப்பனை செய்தல்; to beautify. "திகழொளி தோன்றச் சித்திரித் தியற்றிய" *(பெருங். வத்தவ. 17:76).*

*[சித்திரம் → சித்திரி → சித்திரித்தல்]*

வடவர் 'சித்ர' என்பதைச் 'சித்' என்பதன் திரிபாகக்கொண்டு தெளிவாய்த் தெரிதல், விளக்கமான நிறம், வண்ணவேறுபாடு, வண்ணப்படம் என்று வலிந்து பொருத்திக் காட்டுவர். சித்திரித்தல் என்னும் வினை வடமொழியில் இல்லை (வ.வ.149).

**சித்திரி²** *šittiri,* பெ. (n.) செந்தலவணம் *(யாழ்.அக.);* mineral salt.

**சித்திரிகத்திரி** *šittiri-kattiri,* பெ. (n.) மகப்பேற்றிற்குப் பயன்படும் கருவி வகையு ளொன்று; an instrument or scissors used for removing the child *(சா.அக.).*

*[சித்திரி + கத்திரி]*

**சித்திரிகன்** *šittirigaṉ,* பெ. (n.) ஓவியன்; artist. "வரைவுறு சித்திரிகன் சித்திர சக்தியைப் போல்" *(வேதா. சூ. 26).*

*[சித்திரம் → சித்திரி → சித்திரிகன்]*

**சித்திரிகை** *šittirigai,* பெ. (n.) 1. வீணை வகை *(பரத. ஒழிபி. 15);* a kind of lute. 2. நல்லாடை வகை *(திவா.);* good, valuable clothes.

*[சித்திரி' → சித்திரிகை]*

**சித்திரை¹** *šittirai,* பெ. (n.) 1. பதினான்காம் விண்மீனாகிய நெய்ம்மீன் *(பிங்.);* the 14th naksatra, part of Virgo. 2. தமிழாண்டின் முதல் மாதமாகக் கருதப்படும் மேழம்; known as the first month of the Tamiḻ year, April-May. "சித்திரைச் சித்திரைத் திங்கள் சேர்ந்தென" *(சிலப். 5:64).*

*சுறவமே தமிழாண்டின் தொடக்கம்; மேழத்தைக் கொள்வது பொருத்தமன்று*

**சித்திரை²** *šittirai,* பெ. (n.) அம்மான்பச்சரிசி *(வின்.);* species of euphorbia.

**சித்திரை³** *šittirai,* பெ. (n.) நாகணவாய்ப் புள்; common myna.

**சித்திரைக்கஞ்சி** *šittirai-k-kañji,* பெ. (n.) மேழ வெள்ளுவா (சித்திரா பௌர்ணிமை) நாளில் சித்திரகுத்தன் மனநிறைவடையும் பொருட்டு வழங்கும் கஞ்சி *(யாழ்ப்.);* rice gruel distributed on the fullmoon - day of Šittirai to propitiate Šitragupta.

*[சித்திரை' + கஞ்சி]*

**சித்திரைக்கடப்பு** *šittirai-k-kaḍappu,* பெ. (n.) சீகாழிவட்டத்தில் பெரும்பாலும் கோடையில் விளைவிக்கப்படும் பெருநெல் வகை *(இ.வ.);* a kind of paddy generally cultivated in summer in Sïrkāḻi taluk.

*[சித்திரை + கடப்பு]*

**சித்திரைக்கதை** *šittirai-k-kadai,* பெ. (n.) மேழவெள்ளுவா நாளில் கோயில்களிலும் வீடுகளிலும் படிக்கப்படுவதும் நன்மை தீமைகளைக் கூறுவதுமான சித்திரகுப்தன் கதை *(யாழ்ப்.);* story of Šitragutta describing rewards and punishments for various good and bad actions, read in temples and houses on Šittirāpūraṇai.

*[சித்திரை + கதை]*

**சித்திரைக்கரந்தை** *šittirai-k-karandai,* பெ. (n.) சித்திரைக்கருந்தலை (நெல்லை) பார்க்க; see *šittirai-k-karundalai.*

*[சித்திரை + கரந்தை]*

**சித்திரைக்கருந்தலை** *šittirai-k-karundalai,* பெ. (n.) விளைச்சல் (சாகுபடி) முற்றுப் பெற்றதும் பின்னேற்பாடுகளை நடத்தற்குரிய மேழ (சித்திரை) மாத முடிவு; the closing part of šittirai when the agricultural season ends and plans are made for cultivation in the ensuing season.

*[சித்திரை + கருந்தலை. கருந்தலை = முடிவு]*

**சித்திரைக்கார்** *šittirai-k-kār,* பெ. (n.) மேழ (சித்திரை) மாதத்தில் அறுவடையாகும் நெல்வகை. (G.T.D. I. *94);* a kind of coarse paddy harvested in šittirai.

*[சித்திரை + கார்]*

**சித்திரைக்காலி** *šittirai-k-kāli,* பெ. (n.) நெல் வகை *(யாழ்ப்.);* a kind of paddy.

*[சித்திரை + காலி]*

**சித்திரைக்குழப்பம்** *šittirai-k-kuḻappam,* பெ. (n.) மேழ (சித்திரை) மாதத்துப் பெருங்

காற்று (வின்.); stormy weather of šittirai, the fore-runner of the S.W. monsoon.

[சித்திரை + குழப்பம்]

**சித்திரைச்சிலம்பன்** *šittirai-c-cilampan,* பெ. (n.) காவிரியில் உண்டாம் மேழ (சித்திரை)ப் பெருக்கு (இ.வ.); April freshes in the Kāviri.

[சித்திரை + சிலம்பன். சிலம்பன் - புதுவெள்ளம்]

**சித்திரைச்சுழி** *šittirai-c-culi,* பெ. (n.) மேழ மாதத்துச் சுழல் காற்று (இ.வ.); wind-storm occurring in April.

[சித்திரை + சுழி]

**சித்திரைச்சுழியன்** *šittirai-c-culiyan,* பெ. (n.) 1. சித்திரைச்சுழி பார்க்க; see *šittirai-c-culi.* 2. குறும்பன் (இ.வ.); mischievous urchin.

[சித்திரை + சுழியன்]

**சித்திரைப்பால்** *šittirai-p-pāl,* பெ. (n.) 1. ஆவிரை; tanners cassia. 2. அம்மான் பச்சரிசி; species of euphorbia (சா.அக.).

[சித்திரை + பால்]

**சித்திரைப்பூ** *šittirai-p-pu,* பெ. (n.) மே (சித்திரை)த் திங்களில் முழுநிலாவன்று நிலத்தில் பூக்கும் நீறு; the salt found on the soil of fuller's earth on the full moon night in the month of Šittirai (சா.அக.).

[சித்திரை + பூ]

**சித்திரைமுழுநிலவு** *šittirai-mulu-nilavu,* பெ. (n.) மேழ மாதத்து முழு நிலவில் நிகழுந் திருவிழா; festival celebrated on the fullmoon-day in the month of Šittirai.

[சித்திரை + முழுநிலவு]

**சித்திரையன்நெல்** *šittiraiyan-nel,* பெ. (n.) நெல்வகை (A); a kind of paddy.

**சித்திரைவெயில்** *šittirai-veyil,* பெ. (n.) சுட்டெரிக்கும் மேழ (சித்திரை) மாதத்துக் கடும் வெயில்; burning April Sun (சா.அக.).

[சித்திரை + வெயில்]

**சித்திரோடாவி** *šittirōdāvi,* பெ. (n.) கல்லில் சிலை முதலியன செய்யும் சிற்பி (யாழ்ப்.); sculpture, artisan who carves images, statues, etc.

[சித்திரம் + ஓடாவி]

**சித்தில்** *šittil,* பெ. (n.) அறிவு (R); knowledge.

[சித்து → சித்தல் → சித்தில்]

**சித்திலி** *šittili,* பெ. (n.) சிற்றெறும்பு (யாழ்.அக.); a species of ant.

[சில் = சிறுமை. சில் → சித்து → சித்தில் → சித்திலி]

**சித்திலிகை** *šittiligai,* பெ. (n.) அச்சடிசீலை. (வின்.); printed or painted cloth.

**சித்திலைச்செடி** *šittilai-c-cedi,* பெ. (n.) குன்றிமணி; crab's eye (சா.அக.).

[சிற்றிலை → சித்திலை. சித்திலை+ செடி]

**சித்திவலை** *šitti-valai,* பெ. (n.) சித்திவலையம் பார்க்க; see *šitti-valaiyam* (சா.அக.).

**சித்திவலையம்** *šittivalaiyam,* பெ. (n.) அம்மான் பச்சரிசி; an annual with erect or procumbent branches (சா.அக.).

[சித்தி + வலையம்]

**சித்தின்பம்** *šittinbam,* பெ. (n.) அறிவால் விளையும் பேரின்பம்; perfect bliss, as the result of true knowledge. "நித்தியானந்த மாகிய சித்தின்பம்" (சி.போ. பா. 6: 2, பக்.330).

[சித்து + இன்பம்]

**சித்தினி** *šittini,* பெ. (n.) நால்வகைப் பெண்களுள் பதுமினிவகைக்கு அடுத்த தரத்தவள் (கொக்கோ. 17.10); woman of the class inferior only to padumini, one of four peṇ.

**சித்து**[1] *šittu,* பெ. (n.) 1. அறிவு; intellect, intelligence. "சித்தென வருமறைச் சிரத்திற் றேறிய" (கம்பரா. இரணியன். 60). 2. அறிவுடைப் பொருள் (சூடா.); intelligent being. 3. ஆதன்; soul. "சித்த சித்தொ டீசனென்று" (பாரத. பதினைந்தாம். 1)

[செ → செத்து → சித்து (முதா. 202). ஒ.நோ: செந்துரம் → சிந்துரம்.

செத்தல் = 1. கருதுதல். "அரவுநீருணல் செத்து" (கலித். 45). 2. அறிதல் "துதிக்கா லன்னந் துணைசெத்து" (ஐங். 106).

*சித்து = கருத்து, அறிவு, கருதியதை அடையும் திறம்]*

**சித்து**[2] *šittu,* பெ. (n.) 1. மாயவித்தை; magic. 2. கலம்பகத்தின் உறுப்புகளுள் ஒன்று. (பன்னிருபா. 211); a constituent theme of kalambagam appearing to be a magician's brag but really signifying ordinary things. 3. வேள்வி (பிங்.); sacrifice. 4. வெற்றி (சூடா.); success. 5. ஒருவகை வரிக்கூத்து (சிலப். 3:13, உரை.); a masquerade dance.

**சித்து**[3] *šittu,* பெ. (n.) கொத்தனுக்கு உதவி செய்யும் சிற்றாள்; assisting hand of a brick layer.

*[சிற்றாள் → சித்தாள் → சித்து]*

**சித்துக்காரன்** *šittu-k-kāraṉ,* பெ. (n.) மாயவித்தை கற்றவன்; magician.

*[சித்து² → சித்துக்காரன்]*

**சித்துடு**[1] *šittuḍu,* பெ. (n.) நேர்வாளம்; croton.

**சித்துடு**[2] *šittuḍu,* பெ. (n.) கிலுகிலுப்பை (மலை.); laburnum- leaved rattlewort.

**சித்துநீர்** *šittu-nīr,* பெ. (n.) இதளியம் (பாதரசம்); mercury. "சீருணஞ் சித்துநீர் செறிந்த தொத்தும்" (ஞானா. 45:13).

*[சித்து + நீர்]*

**சித்துப்பொருள்** *šittu-p-poruḷ,* பெ. (n.) அறிவுடைப் பொருள்; intelligent, sentient being, opp. to caḍa-p-poruḷ.

*[சித்து ¹ + பொருள்]*

**சித்துரு** *šitturu,* பெ. (n.) அறிவு வடிவான கடவுள்; god, as the embodiment of intelligence. "மெய்ச் சித்துரு வென்றறி" (காஞ்சிப்பு. வயிர. 9).

*[சித்து ¹ + உரு]*

**சித்துரூபம்** *šittu-rūbam,* பெ. (n.) சிறுமரவகை, நேர்வாளம் (மலை.); croton.

**சித்துவித்தை** *šittu-vittai,* பெ. (n.) செப்படி வித்தை, புரட்டு, ஏமாற்றுவித்தை, மாய வித்தை; magic, jugglery, miracle.

*[சித்து ² + வித்தை]*

**சித்துவிளையாடு-தல்** *šittu-viḷai-y-āḍu-,* 5 செ.குவி. (v.i.) 1. சித்திகள் செய்தல்; to exhibit supernatural powers. 2. இயற்கையிறந்தன செய்தல், மாயவித்தை செய்தல்; to perform magic.

*[சித்து ² + விளையாடு-,]*

**சித்துவிளையாட்டு** *šittu-viḷaiyāṭṭu,* பெ. (n.) மாயவித்தை; magic.

**சித்தேரி** *šittēri,* பெ. (n.) சிற்றேரி பார்க்க; see *šiṟṟēri.*

*[சிற்றேரி → சித்தேரி]*

**சித்தை**[1] *šittai,* பெ. (n.) 1. எண்ணெய்த்துருத்தி (வின்.); leather case for ghee or oil. 2. எண்ணெய் முதலியன வைக்கும் தகர ஏனம் (சென்னை); tin can for oil.

தெ. சித்தே.

**சித்தை**[2] *šittai,* பெ. (n.) மலைமகள் (சிவரக. தாருக. 30); Pārvati.

*[சித்து¹ → சித்தன் (ஆ.பா.) → சித்தை (பெ.பா.)]*

**சிதகலை** *šidagalai,* பெ. (n.) 1. வெட்டை; venereal heat. 2. பெண்களுக்குண்டாகும் வெட்டை நோய்; whites peculiar to woman.

**சிதகம்** *šidagam,* பெ. (n.) தூக்கணாங்குருவி (பிங்.); weaver-bird.

**சிதகு**[1]**-தல்** *šidagu-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. உருவுதல். (பிங்.); to strip off, rub or draw gently. 2. எழுதியதையழித்தல் (வின்.); to erase, strike off.

*[சிதை → சிதகு]*

**சிதகு**[2] *šidagu,* பெ. (n.) குற்றம்; fault. "தன்னடியார் திறத்தகத்துத் தாமரையாளாகிலுஞ் சிதகுரைக்குமேல்" (திவ். பெரியாழ். 4.9:2)

*[சிதை → சிதகு]*

**சிதடன்** *šidaḍaṉ,* பெ. (n.) 1. குருடன்; blind man. "துஞ்சுபுலி யிடறிய சிதடன் போல" (புறநா. 73:7) 2. அறிவிலி; ignorant person. "செம்மை நலமறியாத சிதடரொடும்" (திருவாச. 51:9). 3. பித்தன்; insane person. "சிக்கர் சிதடர்" (சிறுபஞ். 76).

*[சிதடு → சிதடன்]*

**சிதடி**[1] *šidaḍi,* பெ. (n.) சிதடு,2 பார்க்க; see *šidaḍu,*[2] "சிதடியிற் றுவ்வாது" (முதுமொழி. 35).

*[சிதடு → சிதடி]*

**சிதடி**[2] *šidaḍi,* பெ. (n.) சிள்வண்டு பார்க்க; see *šiḻvaṇḍu.* "சிதடி கரையப் பெருவறங் கூர்ந்து" (பதிற்றுப். 23:2)

**சிதடு** *šidaḍu,* பெ. (n.) 1. குருடு; blindness. "சிறப்பில் சிதடும்" (புறநா. 28). 2. பேதைமை (அக.நி.); ignorance, folly. 3. உள்ளீடின்மை; emptiness, hollowness. "சிதட்டுக்கா யெண்ணின்" (குறுந். 261).

*[சிதர் ² → சிதடு]*

**சிதப்பூரம்** *šida-p-pūram,* பெ. (n.) பொன்னாங் காணி (மலை.); species of alternanthera.

**சிதம்**[1] *šidam,* பெ. (n.) 1. வெண்மை; whiteness. "சிதம்படு நற்றுகில்" (ஞானவா. வைரா. 53). 2. வெள்ளி (சங். அக.); silver. 3. வெண்சிவதை (மலை.); white bind weed. 4. விண்மீன் (பிங்.); star.

*[சுதை = வெண்மை. சுதம் → சிதம்]*

**சிதம்**[2] *šidam,* பெ. (n.) வெல்லப்பட்டது (பிங்.); that which is subdued or conquered.

*[சித்தி → சித்தம் → சிதம்]*

**சிதம்**[3] *šidam,* பெ. (n.) மனைவாயில் (பிங்.); door, entrance to a house.

**சிதம்**[4] *šidam,* பெ. (n.) அறிவு (பிங்.); wisdom, intelligence, knowledge.

*[சித்தம் = கருத்து, மணம், அறிவு. சித்தம் → சிதம் = மணம், அறிவு]*

**சிதம்**[5] *šidam,* பெ. (n.) 1. புளியாரை (மலை.); yellow wood sorrel. 2. மால்கரந்தை (மலை.); Indian globe-thistle. 3. சாதிக்காய் (L); true nutmeg.

**சிதம்பர்** *šidambar,* பெ. (n.) இழிந்தோர்; base persons. "செத்தற் கொத்தைச் சிதம்பரை" (திருவிசை. திருமாளிகைத். 4: 4).

*[சிதம்பு → சிதம்பர்]*

**சிதம்பரச்செய்யுட்கோவை** *šidambara-c-ceyyuṭ-kōvai,* பெ. (n.) குமரகுருபர முனிவரால் இயற்றப்பட்டதும் யாப்பிலக்கணத்திற் கூறப்படும் பாவும் பாவினமுமாகிய பல்வகை யாப்புகளுக்கும் எடுத்துக்காட்டுச் செய்யுள்களை யுடையதுமான நூல்; a work by Kumara-kurupara-munivar illustrating the various metres of Tamiḻ prosody.

*[சிதம்பரம் + செய்யுள் + கோவை]*

**சிதம்பரப்பதம்** *šidambara-p-padam,* பெ. (n.) 34 விரலம் அளவுள்ள கோல் (சர்வா. சிற்21); a measuring rod of 34 inches in length.

*[சிதம்பரம் + பாதம் → பதம்]*

**சிதம்பரப்பாட்டியல்** *šidambara-p-pāṭṭiyal,* பெ. (n.) செய்யுளமைதிகளைக் கூறுவதும் 16ஆம் நூற்றாண்டினரான பரஞ்சோதியார் இயற்றியதுமான ஓர் இலக்கண நூல்; a treatise on prosody by Parañjōdiyār 16th C.

*[சிதம்பரம் + பாட்டியல்]*

**சிதம்பரம்**[1] *šidambaram,* பெ. (n.) கடலூர் மாவட்டத்தில் உள்ளதும் பாடல் பெற்ற சிவன் கோயில் உள்ளதுமான ஊர்; a celebrated saiva shrine in Cuddalore district.

ம. சிதம்பரம்

*[சிற்றம்பலம் → சித்தம்பலம் → சிதம்பலம் → சிதம்பரம்]*

தில்லையிற் சிற்றம்பலம் பேரம்பலம் என ஈரம்பலங்களுண்டு. அவற்றுள் சிற்றம்பலமே இறைவன் திருக்கோயில். "இறைவன் புனற்றில்லைச் சிற்றம்பலத்தும்" (திருக்கோ.). வடவர் திரிவு வடிவை இயல்பு வடிவாகக் கொண்டு அறிவுவெளி (ஞானாகாசம்) என்று பொருள் புணர்க்க முயல்வர். அம்பலம் (மன்றம்) வேறு; அம்பரம் (வானம்) வேறு. மேலும் 'சித்', 'அம்ர' என்னும் இரு வடசொற்களும் தென்சொற்றிரிபே. சித்து → சித்; அம்பரம் → அம்ர (வ.வ. 149, 150).

த. சிதம்பரம் → Skt. cidambara

சிதம்பரம்



**சிதம்பரம்**[2] *šidambaram,* பெ. (n.) *1.* இடகலை நாடிக்கும் பிங்கலை நாடிக்கும் நடுவில் அமைந்துள்ள சுழிமுனை நாடி; human microcosum is the region of šulimuṉai, between iḍagalai, piṅgalai nāḍis playing a central part. "சேர்த்தே பிடித்துச் சிதம்பரம் பூமடி" *(சட்டமுனி. 800).*

**சிதம்பரம்**[3] *šidambaram,* பெ. (n.) *தில்லைமரம்;* tiger's milk spurge.

*[சிற்றம்பலம் → சிதம்பரம்]*

*தில்லை மரம் மிகுதியாக இருந்த ஊரான தில்லை சிவன் சிற்றம்பலம் என்னும் அடிப்படையில் சிதம்பரம் எனப்பட்டது. பின்னர்ச், சிதம்பரம் தில்லை மரத்தைக் குறித்தது தில்லையில் தில்லை மரங்கள் நெடுங்காலம் இருந்தமையை வலியுறுத்தி நிற்றல் காண்க.*

**சிதம்பரவெலுமிச்சை** *šidambara-v-elu-miccai,* பெ. (n.) பேரெலுமிச்சை *(யாழ்ப்.);* lemon.

*[சிதம்பரம் + எலுமிச்சை]*

**சிதம்பரன்** *šidambaraṉ,* பெ. (n.) *சிவன்;* lord Šivaṉ.

ம. சிதம்பரன்

*[சிதம்பரம் → சிதம்பரன்]*

**சிதம்பல்** *šidampal,* பெ. (n.) **பதனழிகை;** being softened by soaking or spoiled by too much moisture.

*[சிதம்பு → சிதம்பல்]*

**சிதம்பு**[1]**-தல்** *šidambu-,* 5 செ.கு.வி. (v.i.) *1.* **பதனழிதல்;** to be spoilt by too much moisture; to become rotten. *2.* **நீரில் நெடுநேரம் கிடத்தலால் கைகால்கள் வெளுத்தல்;** to be whitened, as the hands or feet by being dipped in water for a long time. 'கை சிதம்பிப் போயிற்று' *(உ.வ.). 3.* **நீர்ச்சாவியாதல்;** to be damaged or injured by excess of water, as crops, vegetation.

*[சிதை → சிதைவு → சிதம்பு]*

**சிதம்பு**[2] *šidambu,* பெ. (n.) *1.* **தன்மையினழிவு** *(பிங்.);* debasement in quality, spoilt condition. *2.* **இழிவு;** baseness, meaness. "சிதம்ப நாயேன்" *(தேவா. 996, 1). 3.* **பதனழிவு** *(யாழ்ப்.);* excessive maceration.

*[சிதை → சிதைவு → சிதம்பு]*

**சிதமருசம்** *šida-marušam,* பெ. (n.) **வெண்மிளகு** *(மலை.);* white pepper.

*[சிதம் + மருசம். மரிசம் → மருசம் - மிளகு]*

**சிதமை** *šidamai,* பெ. (n.) **வெள்ளாடு** *(தைலவ. தைல.4);* goat.

*[சிதம் → சிதமை]*

**சிதர்**[1]**-தல்** *šidar-,* 2 செ.குன்றாவி. (v.t.) *1.* **சிதறுதல்;** to scatter, strew. *2.* **பரக்கச் சொல்லுதல்;** to dilate upon, narrate, expound in detail. "சிந்தாமணியின் சரிதஞ் சிதர்ந்தேன்" *(சீவக. 3144). 3.* **காலாற்கிளைத்தல்;** to scratch, as a fowl. "சிதர்கால் வாரணம்" *(நற். 389).*

*[சிதை → சிதர்]*

**சிதர்**[2]**-தல்** *šidar-,* 2 செ.கு.வி. (v.i.) *1.* **பரத்தல்;** to spread over, to be diffused. "ஓடரி சிதரிய வொள்ளரி மழைக்கண்" *(பெருங்.இலாவாண. 16:16). 2.* **சிதறி வீழ்தல்;** to be scattered, strewn "ஆரஞ் சிதர்ந்து போகச் சிந்துவார்" *(சீவக. 1106). 3.* **நைதல்;** to be worn out, as cloth. "சிதரின சீரை" *(பெரும்பாண். 468, உரை).*

ம. சிதறுக; க. கெதர், சதறு, செகறு; தெ. செதறு; து. சதருனி; கோத. சித்

*[சிதை → சிதர்]*

**சிதர்**[3]**-த்தல்** *šidar-,* 4 செ.குன்றாவி. (v.t.) *1.* **பிரித்தல்;** to separate, split. "சொற்சிதர் மருங்கின்" *(தொல்.எழுத்து. 132). 2.* **வெட்டுதல்;** to cut, hack. "வாளினாற் சிதர்த்தல் வேண்டும்" *(விநாயகபு. 1:18) 3.* **சிந்துதல்** *(சூடா.);* to shed, scatter.

*[சிதை → சிதர்]*

**சிதர்**[4] *šidar,* பெ. (n.) *1.* **மழைத்துளி;** rain drop. "தண்சிதர் கலாவப் பெய்யினும்" *(புறநா. 105:3). 2.* **பூந்தாது** *(பிங்.);* pollen of flowers. *3.* **பொடி** *(பிங்.);* powder. *4.* **துணி** *(பிங்.);* cloth. *5.* **கந்தை;** rag. "அழுக்கு மூழ்கிய சிதரசைத்து" *(திருவிளை. விறகு. 12). 6.* **உறி** *(சூடா.);* rope-loop for suspending pots. *7.* **வண்டு;** bee, beetle. "கொம்பின்மேற் சிதரின மிறைகொள" *(கலித். 34).*

8. மெத்தனவு; gentleness, softness. "சிதர்வர லசைவளி" (முல்லைப். 52). 9. சிந்துகை; spilling, shedding. "சிதர்நனை முருக்கின்" (சிறுபாண். 254). 10. சிச்சிலிப்பறவை வகை (சிறுபாண். 254, உரை.); a kind of kingfisher.

**சிதர்வு** *šidarvu,* பெ. (n.) வீணாகச் செலவழிக்கை (Pond.); squandering.

[சிதர் → சிதர்வு]

**சிதர்வை** *šidarvai,* பெ. (n.) நைந்து அற்றுப்போன சீரை; cloth worn out or reduced to rag. "பாசி யன்ன சிதர்வை நீக்கி" (பெரும்பாண். 468).

[சிதர் → சிதர்வை]

**சிதரம்** *šidaram,* பெ. (n.) 1. மழைத்துளி (பிங்.); rain drop. 2. உறி (யாழ்.அக.); rope - loop for suspending pots.

[சிதர் → சிதரம்]

**சிதரல்** *šidaral,* பெ. (n.) சிதறுகை; splashing, bespattering. "சிதரற் பெரும்பெயல்" (மதுரைக். 244).

[சிதர் → சிதரல்]

**சிதல்** *šidal,* பெ. (n.) 1. வெண்ணிறமானதும் அரித்துணும் இயல்பினதும் வெப்ப நாட்டில் வாழ்வதும் எறும்பினத்தைச் சார்ந்ததுமான சிற்றுயிர்; termite. "சிதல் மண்டிற் றாயினும்" (நாலடி, 147). 2. சிறகு முளைத்த கறையான் (பிங்.); flying white ant.

மறுவ. கறையான், ஈசல்

ம. சிதல்; க. கெதல், கெத்தலு, கெத்தலி; தெ. செதலு, செத; து. உதலு, உதால்; குட. கெதெ; துட. செகல்; கொலா. செத, செதல்; நா. கெதல்; கோத. கெசல்

[சிதர் → சிதல்]

**சிதல்தின்னி** *šidal-tinni,* பெ. (n.) கறையானை உண்ணும் பறவை; a kind of bird that eats white ant.

ம. சிதல்தின்னி

[சிதல் + தின்னி]

**சிதல்தின்னு-தல்** *šidaltinnu-,* 14 செ.குன்றாவி. (v.t.) சிதலரி-த்தல் பார்க்க; see *šidalari-.*

ம. சிதல் தின்னுக

[சிதல் + தின்னு-,]

**சிதல்புற்று** *šidalpurru,* பெ. (n.) கறையான் ஈர மண்ணைக் கொண்டு உண்டாக்கும் கூடு; termitarium, termitary, ant-hill.

மறுவ. கறையான் புற்று

ம. சிதல் புற்று

[சிதல் + புற்று]

**சிதல்மண்** *šidalman,* பெ. (n.) கறையான் கூட்டும் மண், புற்று மண்; termite soil.

ம. சிதல் மண்ணு

[சிதல் + மண்]

**சிதலம்** *šidalam,* பெ. (n.) 1. தளர்வு; loosening. 2. கீல் (மூட்டு) தளரல்; loosening of joints. 3. சிதைவு; spoil. "சிதரற் பெரும் பெயல்" (மதுரைக். 244).

[சிதிலம் → சிதலம்]

**சிதலரி-த்தல்** *šidalari-,* 4 செ.குன்றாவி. (v.t.) கறையான் சிறிது சிறிதாகக் கடித்து அல்லது குடைந்து குறைத்தல்; to be gnawed by white ants. அரிய நூல்களைச் சிதலரித்துவிட்டது.

ம. சிதலிக்குக, சிதலரிக்குக

[சிதல் + அரி-,]

**சிதலை** *šidalai,* பெ. (n.) 1. கறையான்; termite. "நுண்பல சிதலை" (புறநா. 51:9). 2. துணி (பிங்.); small piece of cloth, rag. 3. நோய்; disease. "சிதலைச்செய் காயம் பெறேன்" (திருவாச. 6: 41).

[சிதர் → சிதல் → சிதலை]

**சிதவல்**[1] *šidaval,* பெ. (n.) 1. சீலைத் துணி; strip of cloth. "தண்டுடைக் கையர் வெண்டலைச் சிதவலர்" (குறுந். 146). 2. கந்தைத்துணி; rag, torn piece of cloth. "சிதவல் சுற்றி" (பதினொ. பொன்வண். 12). 3. கிழிந்த துண்டு; torn piece. "சிதவற் றுணியொடு சேணோங்கு நெடுஞ்சினை" (மணிமே. 3:106). 4. வெட்டுகை; cutting off, cropping. "சிதவல் கொண்டிடு செம்மயிர்க் கொய்யுளை" (கந்தபு. நகரழி. 64). 5. தேரின்கொடி (வின்.); flag of a car or chariot. 6. புரையோடிய புண். (யாழ்ப்.); running sore.

[சிதை → சிதைவல் → சிதவல். 'அல்'. தொ. பெ. ஈறு]

**சிதவல்**[2] *šidaval,* பெ. (n.) மண்சட்டி முதலியவற்றின் உடைந்த துண்டு; broken piece, as of a pot. "சிதவலோடொன் றுதவுழி" (பதினொராந். திருவிடை. மும். 7).

*[சிதை → சிதைவல் → சிதவல். 'அல்' தொ.பெ. ஈறு]*

**சிதவலிப்பு** *šida-valippu,* பெ. (n.) மனவுறுதி; firmness of mind. "சிதவலிப் பீவார்" (சிறுபஞ். 64).

*[சித்தம் = கருத்து, மனம், அறிவு. சித்தம் → சிதம் = மனம். சிதம் + வலிப்பு. வலி → வலிப்பு = உறுதி]*

**சிதள்** *šidal,* பெ. (n.) 1. மீன்செதிள் (யாழ்அக.); fish-scales. 2. புண்ணின் அசடு (யாழ்ப்.); scab of a sore. 3. எலும்பு முதலியவற்றின் துண்டு (வின்.); small bit of bone, chip, splinter.

*[செதிள் → சிதள்]*

**சிதறடி-த்தல்** *šidaradi-,* 4 செ.குன்றாவி. (v.t.) 1. கலங்கச் செய்தல்; to scatter, disperse. 2. முறியடித்தல்; to put to rout.

*[சிதறு + அடி-,]*

**சிதறவடி-த்தல்** *šidara-vadi-,* 4 செ.குன்றாவி. (v.t.) சிதறடி- பார்க்க; see *šidaradi-.*

*[சிதறடி → சிதறவடி-,]*

**சிதறி** *šidari,* பெ. (n.) 1. மழை (திவா.); rain. 2. மூங்கில் (பிங்.); bamboo. 3. பாதிரி (மலை.); trumpet flower.

ம. சிதரி

*[சிதறு → சிதறி]*

**சிதறிப்போ-தல்** *šidari-p-pō-,* 8 செ.குன்றாவி. (v.t.) 1. கூட்டம் கலைந்தோ தவசம் போன்றவை தனித்தனியாகப் பிரிந்தோ பொருள் உடைந்தோ போதல்; to disperse as of a crowd, scatter as of grams etc., break or disintegrate as of solid matters etc., வெடியொலியைக் கேட்ட காக்கைக் கூட்டம் சிதறிப்போனது. சாக்கு பிய்ந்ததால் நெல் மணிகள் சிதறிப் போயின. சிதறிப் போன கண்ணாடித் துண்டுகளைப் பொறுக்கியெடு. 2. நோய் உடம்பைவிட்டகலல்; to leave or quit from the body, as disease.

*[சிதறி + போ. 'போ' து.வி.]*

**சிதறியோடு**[1]**-தல்** *šidari-y-ōdu-,* 5 செ.குன்றாவி. (v.t.) சிதறிப்போ-தல் பார்க்க; see *šidari-p-pō.*

**சிதறியோடு**[2]**-தல்** *šidari-y-ōdu-,* 5 செ.குன்றாவி. (v.t.) மூன்று நாளுள் இறப்பு நிகழுமென்பதன் அறிகுறியாகப் பித்தநாடி நிலைகுலைதல்; disturb to the equilibrium in the pulsation indicating bile, a symptom of death within three days.

*[சிதறி + ஓடு-,]*

**சிதறு**[1]**-தல்** *šidaru-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. இறைத்தல்; to fall in different places, disperse, scatter, as grain. "செந்நூல் யாத்து வெண்பொரி சிதறி" (திருமுருகு. 231). 2. சிறிய பொருள்களாய்த் தெரித்தல்; to be strewn in small particles, to spill, pour, shed. தரையில் சிந்திய இதளியம் (பாதரசம்) சிதறியோடியது. 3. சிறுதுண்டுகளாக உடைந்து போதல்; to be broken into pieces, to explode. 4. மிகுதியாகக் கொடுத்தல்; to give liberally, bountifully. "மாசித றிருக்கை" (பதிற்றுப். 76).

ம. சிதறுக; க. கெதர், சதறு, செதறு; தெ. செதறு; து. சதறுணி; கோத. கித் (தெளித்தல்); துட. கித்

*[சிதை → சிதறு]*

**சிதறு**[2]**-தல்** *šidaru-,* 5 செ.கு.வி. (v.i.) 1. கலைதல்; to be shed, strewn, scattered, as a flock; to disperse, as a company. 2. அழிதல்; to be squandered, wasted. 3. பயன்படாது போதல்; to prove fruitless, become unprofitable. "பதறாத கர்ரியஞ் சிதறாது" (பழ.). 4. களைதல்; removing.

க. கெதறு

*[சிதை → சிதறு-,]*

**சிதறுதேங்காய்** *šidaru-tēngāy,* பெ. (n.) சூறைத் தேங்காய் (வேண்டுதலுக்காகத் துண்டாகத் தெறிக்கும்படி உடைக்கும் தேங்காய்; coconut dashed on the ground and broken, on special occasions in fulfilment of a vow.

மறுவ. விடலைத்தேங்காய்

*[சிதறு + தேங்காய். தெங்கங்காய் → தேங்காய்]*

**சிதறுமணி** *šidaṟu-maṇi,* பெ. (n.) நெற்களத்திற் கதிரடிக்கும்போது தெறித்து விழுந்த தவசம் (இ.வ.); grains that fall scattered on the threshing - floor, while threshing, dist. fr. சிந்துமணி.

*[சிதறு + மணி. முள் → (மள்) → மணி = சிறியது, சிறியதான தவசம்]*

**சிதறை** *šidaṟai,* பெ. (n.) கறையான் நோய்; a skin disease due to the bite of white - ants (சா.அக.).

*[சிதலை → சிதறை]*

**சிதன்¹** *šidaṉ,* பெ. (n.) வெண்மையான நிறமுடைய வெள்ளி (சுக்கிரன்) (பிங்.); the planet Šukkiran, as white.

*[சிதம் → சிதன்]*

**சிதன்²** *šidaṉ,* பெ. (n.) அச்சமுள்ளோன் (பிங்.); timid man.

**சிதனம்** *šidaṉam* பெ. (n.) கோடகசாலை (மலை.); a very small plant.

**சிதார்** *šidār,* பெ. (n.) 1. சீலை; cloth, rag. "பாறிய சிதாரேன்" (புறநா. 150). 2. மரவுரி (வின்.); thin bark of certain trees, used as clothing.

*[சிதர் → சிதார்]*

**சிதாரம்** *šidāram,* பெ. (n.) தேர்க்கொடி. (யாழ்.அக.); flag of a car or chariot.

*[சிதார் → சிதாரம்]*

**சிதாரி** *šidāri,* பெ. (n.) புகை போடும் பண்டம் (I.M.P. Tj. 55); incense.

**சிதிலம்** *šidilam,* பெ. (n.) சிதைவு (வின்.); crumbling, decaying.

*[சிதைவு → (சிதவு) → சிதலம் → சிதிலம்]*

**சிதுமலர்** *šidumalar,* பெ. (n.) தண்ணீர் விட்டான் என்றழைக்கப்பெறும் கொடி வகை (மலை.); climbing asparagus.

**சிதுரம்** *šiduram,* பெ. (n) நேர்வாளம் (மலை.); croton.

**சிதேக்கதிரம்** *šitē-k-kadiram,* பெ. (n) வெள்ளைக்கருங்காலி (மலை.); egg-fruited ebony.

**சிதேகி** *šidegi,* பெ. (n) கடுக்காய் (யாழ்.அக.); chebulic myrobalan.

**சிதை¹-தல்** *šidai-,* 2 செ.கு.வி. (v.i.) 1. தன்மை கெடுதல்; to be injured, spoiled; to deteriorate, decay. "கூம்புவிடு பன்மலர் சிதைய" (அகநா. 36). 2. சிதறுதல்; to be scattered, dispersed. "ஆன்பொருநை வெண்மணல் சிதைய" (புறநா. 36:5). 3. அறுபடுதல்; to be sundered, broken, cut to pieces. "கவசம் பூம்பொறி சிதைய" (புறநா. 13:2). 4. சினத்தல்; to be angry. "நீ யுண்டகாற் சிதையாரோ வுன்னோடு" (திவ்.நாய்ச். 7:9). 5. சொற்சிதைந்து வழங்குதல்; to become corrupt, degenerate by lapse of time, as words. "சிதைந்தன வரினும்" (தொல். சொல். 402). 6. பொய்யாதல்; to prove untrue. "அவனுரையுஞ் சிதைந்ததால்" (கம்பரா. ஊர்தேடு. 232). 7. வரம்பழிதல்; to exceed limit or propriety. "பேதை யுரைப்பிற் சிதைந்துரைக்கும்" (நாலடி. 71). 8. குலைதல் (வின்.); to disperse, scatter, as an army. 9. இசை முதலியன கெடுதல் (வின்.); to become out of tune, as music; to go wrong, as rhythm.

ம. சிதயுக, சிதெயுக; க. சிதகு, சிதுகு; தெ. சிதுகு

**சிதை²-த்தல்** *šidai-,* 4 செ.குன்றாவி. (v.t.) 1. கெடுதல்; to injure, waste. "பூங்கண் மகளிர் புனைநலஞ் சிதைக்கும்" (கலித். 75:31). 2. குலைத்தல்; to disperse. scatter. "சிறந்த நண்பரைக் கொன்றுதன் சேனையைச் சிதைக்க" (கம்பரா. பிரமாத்திர. 187). 3. அழித்தல்; to destroy, ruin, demolish, kill. "தீவளி சென்று சிதைத்தாங்கு" (நாலடி, 179). 4. சிரைத்தல் (யாழ்ப்.); to shave, shear. 5. களைதல் (பிங்.); to pluck out, uproot. 6. தேய்த்தல் (பிங்.); to rub. 7. ஒலித்தல் (திவா.); to sound. 8. நசுங்குதல்; crushing as plants.

ம. சிதய்க்குக.

**சிதை³** *šidai-,* பெ. (n.) 1. சிதைவு,¹ பார்க்க; see *šidaivu,1.* "கொழுமணிச் சிகர கோடி சிதைபட" (திருவிளை. மாயப். 20). 2. கப்பற்பாய்; sail. "தெய்வநீறு மைந்தெழுத்துமே சிதைக்கல னாக" (திருவிளை. திருநகர. 88). 3. இழிசொற்கள்; vulgar words. "சிதையுரையான்" (ஏலா.34).

**சிதை**[4] *šidai-,* பெ. (n.) ஈமவிறகு (யாழ்.அக.); funeral pile, pyre .

**சிதை**[5] *šidai-,* பெ. (n.) கீழ்மக்கள் (அக.நி.); low persons.

*[சீத்தை → சிதை]*

**சிதைக்கரு** *šidai-k-karu,* பெ. (n.) அழிகரு; foetus brought forth in an immature state.

*[சிதை + கரு]*

**சிதைசுற்று** *šidai-cuṟṟu,* பெ. (n.) 1. செக்கு; oil press. 2. ஆலை; sugar-cane press. 3. சக்கரம்; wheel.

*[சிதை + சுற்று]*

**சிதைந்தவேடு** *šidainda-vēḍu,* பெ. (n.) செல்லரித்த ஓலையேடு (யாழ்ப்.); ant-eatan ola book.

*[சிதை → சிதைந்த + ஏடு]*

**சிதையர்** *šidaiyar,* பெ. (n.) கீழ்மக்கள் (அக.நி.); low, mean people.

*[சிதை[5] → சிதையர்]*

**சிதைவு** *šidaivu,* பெ. (n.) 1. கேடு; injury, degeneracy, ruin, defeat. "செப்ப முடையவ னாக்கஞ் சிதைவின்றி" (குறள், 112). 2. குற்றம்; fault, defect. "சிதைவெனப் படுபவை வசையற நாடின்" (தொல். பொருள். 664)

*[சிதை → சிதைவு]*

**சிந்தகம்**[1] *šindagam,* பெ. (n.) புளியமரம்; tamarind tree. "சிந்தகத்துக் கீழமர்ந்து" (பாகவ. சிறப்புப்பாயி. 2).

புளியின் செந்நிறம் பற்றிப் புளியமரத்தைக் குறித்தது.

**சிந்தகம்**[2] *šindagam,* பெ. (n.) சிதகம் (சது.) பார்க்க; see *šidagam.*

**சிந்தகம்**[3] *šindagam,* பெ. (n.) 1. வெள்ளை வெப்பு நஞ்சு; white arsenic. 2. சிறுநாகப்பூ; iron wood of Ceylon.

**சிந்தகி** *šindagi,* பெ. (n.) சொத்து (வின்.); property.

Persn. zindagi

**சிந்தடி**[1] *šindaḍi,* பெ. (n.) இருசீரடி (குறள்)க்கும் நாற்சீரடி (அளவு)க்கும் இடைப்பட்ட முச்சீரடி (தொல்.பொருள். 349); metrical line of three feet.

*[சிந்து + அடி. ஏழும் எட்டும் ஒன்பதும் ஆகிய எழுத்தினால் மூன்று சீராய் வருவது சிந்தடி]*

**சிந்ததியம்** *šindadiyam,* பெ. (n.) கருங்கொள்; black horse-gram.

**சிந்தம்**[1] *šindam,* பெ. (n.) புளியமரம்.(பிங்.); tamarind tree.

தெ. சிந்த

**சிந்தம்**[2] *šindam,* பெ. (n.) சிதகம். (சது) பார்க்க; see *šidagam.*

**சிந்தம்**[3] *šindam,* பெ. (n.) பாவகை; a kind of metre. "அறிவுடைநம்பியார் செய்த சிந்தம்" (யாப். வி. 93, பக். 352).

**சிந்தன்**[1] *šindaṉ,* பெ. (n.) குறளனிலும் சிறிது நெடியவன் (தொல். பொருள். 349, உரை); dwarfish person. "சேயனாய் வந்தொரு சிந்தன் போன்றுலாய்" (கந்தபு. அவைபுகு. 75).

*[சிந்து[2] → சிந்தன். மக்களுள் மிகக் குள்ளமானவனு(குறளன்)க்கும் அளவாக வளர்ந்தவனு(அளவன்)க்கும் இடைப் பட்ட உயரமானவன் சிந்தன்]*

**சிந்தன்**[2] *šindaṉ,* பெ. (n.) சிதகம் (பிங்.) பார்க்க; see *šidagam.*

**சிந்தனை** *šindaṉai,* பெ. (n.) 1. எண்ணம்; thought, idea. "சிந்தனை யுரைசெய்வான்" (கம்பரா. கங்கை. 53). 2. படித்த பாடத்தை மீண்டும் நினைக்கை; revision of lessons. 'படித்தவற்றைச் சிந்தனை செய்யவேணும்' (உ.வ.). 3. ஊழ்கம் (தியானம்); meditation. 'அதே சிந்தனையா யிருக்கிறான்' (உ.வ.). 4. கவலை; care, concern, grief. "சிந்தனை முகத்திற் றேக்கி" (கம்பரா. குகப். 35). 5. கவனம். (வின்.); attention, consideration. 6. குறி கேட்கும் செய்தி; subject about which a person consults a soothsayer. "நட்டமுட்டி சிந்தனை" (சூடா. உள்).

*[சித்து → சிந்து → சிந்தை → சிந்தனை. சித்து = அறிவு, கருத்து, கருதியதை அடையும் திறம் (மு. தா. 184)]*

த. சிந்தனை → Skt. cintanā

**சிந்தாக்கட்டிகை** *śindā-k-kaṭṭigai,* பெ. (n.) அட்டிகை வகை; a kind of necklace.

*[சிந்தாக்கு + அட்டிகை]*

**சிந்தாக்கு¹** *śindākku,* பெ. (n.) சிந்தாக்கட்டிகை பார்க்க; see *śindākkaṭṭigai.* "சிந்தாக்கை யிருமுலையாட் கேன்கழுத்தி லிட்டேன்" *(விறலி விடு. 695).*

க. சிந்தாக; தெ. சிந்தாகு; து. சிந்தாகு

**சிந்தாக்கு²** *śindākku,* பெ. (n.) சிறுவர் விளையாட்டு வகை. (வின்.); a child's game.

மறுவ. தொளாக்கு

**சிந்தாதேவி** *śindā-dēvi,* பெ. (n.) மதுரையில் பழங்காலத்தில் வணங்கப்பட்டு வந்த கலைமகள்; goddes Šarašvadi worshipped in ancient Madurai. "சிந்தாதேவி செழுங்கலை நியமம்" *(மணிமே. 14: 17).*

*[சித்து = அறிவு. சித்து → சிந்து + தேவி]*

**சிந்தாமணி¹** *śindā-maṇi,* பெ. (n.) 1. விரும்பிய வனைத்துங் கொடுக்கவல்ல தெய்வமணி; a mythical gem believed to yield to its possessor everything that is desired. "சிந்தாமணி தெண்கட லமிர்தம்" *(திருக்கோ. 12).* 2. சீவகசிந்தாமணி பார்க்க; see śivaga śindāmaṇi. "சிந்தாமணி யோதி யுணர்ந்தார்" *(சீவக. 3143).* 3. ஒருவகை மருந்து (வின்.); a compound medicament. 4. குளம்புக்கு மேலுள்ள குதிரைச் சுழி (அசுவசா. 12); auspicious curl-mark just above horse's hoofs.

ம. சிந்தாமணி

*[சித்து + மணி. மண்ணுதல் = கழுவுதல். மண் → மண்ணி → மணி = கழுவப்பெற்ற ஒளிக்கல்]*

**சிந்தாமணி²** *śindāmaṇi,* பெ. (n.) பண்வகை (பரத ராக. 103); a specific melody- type.

**சிந்தாமணி³** *śindāmaṇi,* பெ. (n.) 1. சமணர் காலத்தில் தென்னகத்தில் தமிழர் கையாண்டு வந்த சிறந்த மருத்துவ நூல்களின்று திரட்டி எழுதிய உயர்ந்த மருத்துவ நூல்; an excellant treatise on medicine consisting purely of selections from the medical works of Siddars compiled by the Jains of Southern India. 2. தமிழ்ச் சித்த மருத்துவ நூல்களினின்று வடமொழியில் மொழிபெயர்த்த நூல்; a work translated from the Tamil Sittars medical works into Sanskrit. 3. அகத்தியர் செய்த தமிழ் மருத்துவ நூல்களிலிருந்து திரட்டி மலையாளத்தில் இப்போது கையாளப்பட்டு வரும் மருத்துவ நூல்; an abridged edition of the supposed Agattiyar's work on Tamil medicines, used at the present day by the Malayalam. 4. இழிந்த மாழையைப் பொன்னாக்குங் கல்; philosopher's stone capable of transmuting inferior metals into gold.

**சிந்தாமணிக்குளிகை** *śindāmaṇi-k-kuḷigai,* பெ. (n.) நாட்பட்ட மலச்சிக்கல், மிகுவெப்பம், களைப்பு, உடல்வலி முதலானவற்றை அகற்றும் ஆயுள்வேதமாத்திரை (சா.அக.); a pill prepared according to the process of Āyurvēda and prescribed for removing constipation rheumatism through excess of heat all weariness and pain in the system.

*[சிந்தாமணி + குளிகை. குள் → குளிகை]*

**சிந்தாமணிச்சாறு** *śindāmaṇi-c-cāṟu,* பெ. (n.) ஈளை, எலும்புருக்கி, நீர்க்கோவை, மேகம் முதலான பெரிய நோய்களுக்காக, வெள்ளி, தாம்பிரம் அயம், பொன், முத்து முதலான வற்றின் பொடிகளுடன், இஞ்சி, கரிசாலைச் சாறு விட்டு அரைத்துச் செய்யப்படும் ஆயுள் மருத்துவ மருந்து; a medicine prepared as per process of Āyurvēdā by grinding the calcined oxides of silver copper iron, pearl and prescribed for great diseases as asthma, consumption, dropsy, venerel complaints etc.

*[சிந்தாமணி + சாறு]*

**சிந்தாமணிமருத்துவம்** *śindāmaṇi-maruttuvam,* பெ. (n.) தமிழ்நாட்டில் வழங்கி வந்த மருத்துவ முறை. பின்பு மலையாளத்தில் மொழி பெயர்க்கப்பட்டு, அங்குள்ள சரகசுசுருத மருத்துவமுறைக்கு மாறாகக் கையாளப்படும் மருத்துவ முறை; a translation of Tamil Sitta medical works in Malayalam and practised by some of the physicians in Malabar in opposition to Šanskrit Āyurvēdā Šaraka and Šušuruda.

*[சிந்தாமணி + மருத்துவம்]*

**சிந்தாமணிமருத்துவன்** *śindāmaṇi-maruttuvaṉ,* பெ. (n.) அகத்தியர் மருத்துவ நூலில் கூறியவாறு மலையாள மருத்துவத்திற்கு மாறாக நெஞ்சாங்குலை (இருதய) மருத்துவஞ் செய்யுந் தமிழ் மருத்துவன்; the Tamil physicians who follow Agattiyar's work on medicine in opposition to Malayalam physicians.

*[சிந்தாமணி + மருத்துவன்]*

**சிந்தாமணிமாத்திரை** *śindāmaṇi-māttirai,* பெ. (n.) சிந்தாமணிக் குளிகை பார்க்க; see *śindāmaṇi-kuḷigai.* "பிறங்கு சிந்தாமணி மாத்திரையல்லவோ" (தனிப்பா. ii, 149: 375).

*[சிந்தாமணி + மாத்திரை]*

**சிந்தாமணிவிளக்கு** *śindāmaṇi-viḷakku,* பெ. (n.) சிந்தாவிளக்கு-2 பார்க்க; see *śindāviḷakku-2.*

**சிந்தாவிளக்கு** *śindā-viḷakku,* பெ. (n) 1. சிந்தையை விளக்கமாக்கும் கலைமகள்; Šarašvadi, as mind - illuminator. "சிந்தா விளக்கின் செழுங்கலை நியமத்து" (மணிமே. 13: 106). 2. அணையாவிளக்கு; ever burning lamp.

*[சிந்தை + விளக்கு]*

**சிந்தார்மணி** *śindārmaṇi,* பெ. (n.) தென்னிந்தியாவில் குறிப்பாக மலையாளத்தில் வழங்கி வரும் மருத்துவ முறை; a system of medical treatment prevalent in South India (சேரநா.).

ம. சிந்தாமணி

*[சிந்தாமணி → சிந்தார்மணி]*

**சிந்தார்மணியன்** *śintārmaṇiyaṉ,* பெ. (n.) ஒரு வகை நெல்; a variety of paddy (சேரநா.).

ம. சிந்தாமணியன்

*[சிந்தார்மணி → சிந்தார்மணியன்]*

**சிந்தி[1]-த்தல்** *śindi-,* 4 செ.குன்றாவி. (v.t.) 1. நினைத்தல்; to think of, consider. "மறுமையைச் சிந்தியார் சிற்றறிவினார்" (நாலடி., 329). 2. மனனம் பண்ணுதல்; to reflect, ponder. "பொது வியல்பு....கேட்டல் சிந்தித்த லென்னும் இருதிறத்தா னுணரப்படும்" (சி.போ. சிற். பாயி. பக். 4). 3. ஓகம் செய்தல்; to meditate. "எம்பெருமானென் சொல்லிச் சிந்திக்கேனே" (திருவாச. 5:25). 4. கேட்ட பாடத்தை மீண்டும் நினைத்தல்; to revise lessons. 5. விரும்புதல்; to desire. "நம்மிறுதி சிந்தியாதவர் யார்" (கம்பரா. யுத்த. மந்திரப். 106).

ம. சிந்திக்குக

*[சித்து → சிந்து → சிந்தி-,]*

**சிந்தி[2]-த்தல்** *śindi-,* 4 செ.கு.வி. (v.i.) கவலைப் படுதல்; to be concerned, sorrowful. 'கழிந்ததைக் குறித்துச் சிந்திக்கலாகாது' (உ.வ.).

*[சிந்தி[1] → சிந்தி[2]]*

**சிந்தி[3]** *śindi,* பெ. (n.) தலையணி வகையைச் சார்ந்த சுட்டி என்னும் அணி; an ornament forming part of *talai-aṇi.*

**சிந்தி[4]** *śindi,* பெ. (n.) 1. உப்பு; salt in general. 2. வாதமடக்கி; wind killer. 3. எலுமிச்சம்பழச் சாறு; lime-juice.

**சிந்திதம்** *śindidam,* பெ. (n.) நினைக்கப்பட்டது (சங்.அக.); that which is thought of or considered.

*[சிந்தி → சிந்திதம்]*

**சிந்திபிந்தி** *śindi-pindi,* பெ. (n) சின்னா பின்னம்; shred, shattered bit. "கட்டுக்குலைந்து சிந்தி பிந்தியாய்ப் போயிற்றிறே" (திவ். பெரியாழ். 2. 1: 5 வியா - பக். 224).

மறுவ. சின்னாபின்னம்

*[சிந்துதல் = சிதறுதல். சிந்து → சிந்தி. சிந்திபிந்தி = எதுகை நோக்கி வந்த இணைமொழி]*

**சிந்திப்பு** *śindippu,* பெ. (n.) நினைப்பு; thought.

*[சிந்தி → சிந்திப்பு]*

**சிந்தியம்** *śindiyam,* பெ. (n.) 1. நினைக்கத்தக்கது (சங்.அக.); that which is worthy of consideration. 2. சிவத் தோன்றியங்கள் (சிவாகமம்) இருபத் தெட்டனுளொன்று (சைவக.பொது 331, உரை); an ancient saiva scripture in Šanskrit, one of 28 *śivāgamam.*

*[சிந்தி → சிந்தியம்]*

**சிந்தியல்வெண்பா** *śindiyal-veṇbā,* பெ. (n.) மூன்றடியாலமைந்த வெண்பா வகை (காரிகை, செய். 5, உரை); veṇbā verse of three lines.

*[சிந்து[3] + இயல் + வெண்பா]*

**சிந்திராபதி** *šindirāpadi,* பெ. (n.) ஆகாசக் கருடன் கிழங்கு; sky root.

**சிந்தினர்** *šindinar,* பெ. (n.) குள்ளர்; dwarfs. "நெடியர் சிந்தினர் குறியினர்" (கந்தபு. படையெழு.7).

[சிந்து → சிந்தினர்]

**சிந்து[1]-தல்** *šindu-,* 5 செ.கு.வி. (v.i.) 1. சிதறு படுதல்; to be strewn, spilled. 2. சொட்டி யொழுகுதல்; to trickle, stream. கண்ணீர் சிந்தியது. 3. அழிதல்; to be destroyed. "இடர்தொடரா வினையான சிந்தும்" (தேவா.37: 1).

தெ. சிந்து; ம. சிந்துக.

**சிந்து[2]-தல்** *šindu-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. சிதறுதல்; to scatter or strew. "தூயபொன் சிந்தி" (திருவாச. 9:3). 2. நீக்குதல்; to remove. "மறுக்கஞ் சிந்தினார்" (கம்பரா. மருத்து. 105). 3. தெளித்தல்; to spill, sprinkle, shed. 4. செலவழித்தல்; to spend, waste. "சிந்து நெறிக ளகலாமல்" (விநாயகபு. 2:66). 5. பரப்புதல்; to cast on all sides, expand. "கண் சென்றுலாய்ப் பிறழச்சிந்தி..... ஆடும்" (சீவக. 2287). 6. மூக்கைச் சிந்துதல்; to blow the nose. 7. அழித்தல்; to destroy. "புர மூன்றும் . . . மூரல் கொடு சிந்தி" (காஞ்சிப்பு. இருபத். 131) (க. சிந்து). 8. களைதல் (பிங்.); to pluck up, root out. 9. பயனிலவாகச் செய்தல்; to render futile. "பண்டு தானுடை வரங்கள் சிந்துவன்" (கம்பரா. ஒற்றுக். 64). 10. வெட்டுதல்; to cut off. "வாளாற் செறுநர் தங்களுடல் சிந்துவர்" (கந்தபு. இரண்டா. நாட். சூர. உயுத். 341).

தெ. சீது, க. சிந்து

[உல் → இல் → இல்லி = துளை, சிறுதுளை. இல்லிக்குடம் = துளையுள்ள குடம். உல் → உள் → உரை → உகு. உகுதல் = உள்ளிருந்து ஒழுகுதல், தத்தல், சிந்துதல். இல் → சில் ஒழுகுதல். ஒ.நோ. இல்லி மூக்கு → சில்லிமூக்கு = குருதி ஒழுகும் மூக்கு. சில் → சின் → சிந்து]

**சிந்து[3]** *šindu,* பெ. (n.) 1. குறளினுஞ் சிறிது நெடியனாய் மூன்றடியுயரமுள்ளவன்; dwarf, about 3ft. high, dist. fr. *kuṟaḷ.* "குறள் சிந்தினொ டோரு நடந்தன" (சீவக. 631). 2. சிந்தடி (காரிகை, உறுப். 12) பார்க்க; see *šindaḍi.* 3. இசைப்பா வகை. (சிலப். 6:35, உரை); a kind of musical composition. 4. ஒருவகை வரிக்கூத்து (சிலப். 3: 13, உரை.); a masquerade dance.

[சில் → சின் → சிந்து. சிந்துதல் = நீங்குதல், களைதல், குறைதல். சிந்து(தல்) → சிந்து → அளவிலிருந்து சற்றுக் குறைவான நிலை]

இசைத் தமிழ்ப் பாட்டு வகைகளுள் ஒன்று அடிக்குறுமை பற்றிச் சிந்து எனப்பெயர் பெறும்.

**சிந்து[4]** *šindu,* பெ. (n.) 1. கடல்; sea, ocean. "தேர்மிசைச் சென்றதோர் சிந்து" (கம்பரா. ஆற்றுப். 32). 2. நீர் (பிங்.); water. 3. ஆறு (பிங்.); river. 4. சிந்து ஆறு; the river Indus. "கிளர்சே ணிமயமுங் கெங்கையுஞ் சிந்துவும்" (பெருங். நரவாண. 4: 122). 5. ஐம்பத்தாறு நாடுகளுள் ஒன்று; Sindh, as the country of the Indus, one of 56 dēšam. 6. பதினெண்மொழிகளுள் சிந்து நாட்டில் வழங்கும் மொழி (திவா.); the language of Sindh, one of the 18 languages referred to in Tamil works.

[சிந்துதல் = துளி சிதறுதல், நீர் தெளித்தல், நீர் ஒழுகுதல். சிந்து(தல்) → சிந்து]

ஆரியர் வருமுன்பே தமிழரும் திரவிடரும் பனிமலை வரை பரவியிருந்ததால், சிந்தாற்றைத் தமிழர் முன்னரே அறிந்திருத்தல் வேண்டும்.

வடவர் ஸித் (dh) என்னுஞ் சொல்லை மூலமாக ஐயுற்றுக் கூறுவர். ஸித் = செல் (வ.வ.150).

த. சிந்து → Skt. sindhu

**சிந்து[5]** *šindu,* பெ. (n.) பண்; musical note. "சிந்தொக்குஞ் சொல்லினார்" (கம்பரா. இராவணன் சோகப். 38).

ம. சிந்து

[செந்து → சிந்து. செந்து = பெரும் பண்களுள் ஒன்று]

**சிந்து[6]** *šindu,* பெ. (n.) கொடி, பதாகை; flag, banner. "தீமதலை சிந்தா" (கந்தரந். 21).

Mhr. jheṇḍā

**சிந்து[7]** *šindu,* பெ. (n.) 1. சிந்துப்பு; Sindh salt. 2. வைடூரியம்; a precious gem - cat's eye.

**சிந்து**[8] *šindu,* பெ. (n.) *இருவாட்சி (வின்.);* Tuscan jasmine.

**சிந்து**[9] *šindu,* பெ. (n.) *கால்நடைகளின் மேற்றோலில் காணப்படும் ஒரு வகை வெள்ளைப் புள்ளி;* a kind of spot on the skin of cattle *(சேரநா.).*

*ம. சிந்து*

*வெள்ளைப் புள்ளிகளையுடைய ஆடு, மாடுகளையும் 'சிந்து' என்ற சொல் காலப்போக்கில் குறிக்கலாயிற்று.*

**சிந்துக்காணி** *šindu-k-kāṇi,* பெ. (n.) *அசையும் சொத்து (வின்.);* goods, chattels, movables.

u. zindagāni

*[சிந்து + காணி]*

**சிந்துக்கொடி** *šindu-k-koḍi,* பெ. (n.) *சிந்தில் பார்க்க;* see *šindil.*

*[சிந்து + கொடி]*

**சிந்துகம்**[1] *šindugam,* பெ. (n.) *நொச்சி (மலை.);* stalked leaflet chaste-tree.

*[சிந்து → சிந்துகம்]*

**சிந்துகம்**[2] *šindugam,* பெ. (n.) *மூக்கு;* nose.

*[சிந்து → சிந்துகம் = சளி சிந்தும் உறுப்பு]*

**சிந்துகி** *šindugi,* பெ. (n) *சீமையகத்தி;* ringworm shrub.

**சிந்துசம்** *šindušam,* பெ. (n.) *உப்பு;* salt.

*[சிந்து → சிந்துசம்]*

**சிந்துசாரம்** *šindu-šāram,* பெ. (n.) *கடலுப்பு (வின்.);* sea-salt.

*[சிந்து[3] + சாரம்]*

**சிந்துநீர்** *šindu-nīr,* பெ. (n.) *மூக்குச்சளி;* mucous from the nose.

*[சிந்து' + நீர்]*

**சிந்துப்பிழுக்கை** *šindu-p-piḻukkai* பெ. (n.) *வரிக்கூத்து வகை (சிலப்.3: 13, உரை.);* a masquerade dance.

*[சிந்து + பிழுக்கை]*

**சிந்துப்பு** *šinduppu,* பெ. (n.) *சிந்து நாட்டிலுள்ள மலை, பாறை முதலானவற்றில் பனியினால் இயற்கையாய் விளையும் உப்பு; இருபத்தொரு உப்பு வகைகளுள் இதுவும் ஒன்று; வெங்காரமுடையதும், சித்த மருத்துவத்தில் மிகுதியாகப் பயன்படுவதுமான இவ்வுப்பு, பெருங்கட்டிகளாயிருக்கும்;* Sindh salt. It is one of the 2l kinds of salt. It is formed naturally on mountains and rocks being soldified from the felling dew. It is an impure chloride of sodium. It occurs in large masses and is used in šiddha medicine for binding borax.

*[சிந்து + உப்பு]*

**சிந்துப்பூ** *šindu-p-pū,* பெ. (n) *கடலில் தோன்றும் பூவாகிய சங்கு (மூ.அ).;* conch, as flower of the ocean.

*[சிந்து + பூ]*

**சிந்துபலம்** *šindu-palam,* பெ. (n.) *இந்துப்பு;* sindu salt.

**சிந்துபாலவம்** *šindu-pālavam,* பெ. (n.) *கடல் நுரை;* cuttle-fish bone.

**சிந்துபுட்பகம்** *šindu-puṭpagam,* பெ. (n.) *சுரபுன்னை;* soora poon.

**சிந்துமணி** *šindu-maṇi,* பெ. (n.) *களத்தில் உதிர்ந்து கிடக்குந் தவசம் (இ.வ.);* stray grains that lie strewn on the threshing-floor, dist. fr. šidaṟumaṇi.

*[சிந்து' + மணி. முன் → (மன்) → மண் → மணி = தவசமணி]*

**சிந்துரக்கட்டி** *šindura-k-kaṭṭi,* பெ. (n.) *செங்காவி;* lump of lead ochre. *"சந்தனக் குறையுஞ் சிந்துரக் கட்டியும்" (சிலப் 25: 39)*

*[சிந்துரம் + கட்டி]*

**சிந்துரத்தம்** *šindu-rattam,* பெ. (n.) *சிந்து நாட்டில் விளையுஞ் சிவப்பு நிறமுள்ள உப்பு;* a red salt obtained from Sindh.

*[சிந்து + அரத்தம். அர் → அரக்கு = சிவந்த மெழுகு. அர் → அரத்தம் = சிவப்பு, சிவப்பு நிறவுப்பு]*

**சிந்துரத்தாதிகம்** *šinduratta̅digam,* பெ. (n.) *எலுமிச்சை மரம்;* lime tree.

**சிந்துரதம்** *šindu-radam,* பெ. (n.) இந்துப்பு (மூ.அ.); rock-salt.

*[சிந்து [3] + ரதம். அரத்தம் → ரத்தம் → ரதம்]*

சிந்துரத்தம் பார்க்க

**சிந்துரம்**[1] *šinduram,* பெ. (n.) *1.* சிந்தூரம், 1 பார்க்க; see *šindūram*[1]. "சிந்துரச் சேவடியானை" (திருவாச. 18: 5). 2. சிந்தூரம்[1], 3 பார்க்க; see *šindūram*[1], 3. 'சிந்துர மிலங்கத் தன்றிருநெற்றி மேல்" (திவ். பெரியாழ். 3. 4: 6). 3. நெற்றியில் வைக்கும் பொட்டு; round coloured mark put on the forehead, usually of saffron. "சிந்துர வாதித்த வித்தார முடையார்" (கந்தரந். 5).

தெ. சிந்துரமு

*[சிந்தூரம் → சிந்துரம்]*

**சிந்துரம்**[2] *šinduram,* பெ. (n.) யானை (சூடா.); elephant. "கார்கொள் சிந்துரங் காயத்திடை யிடைச் சோரி சோர்தார" (கந்தபு. நகரழி. 61).

ம. சிந்துர்

*[செந்தூரம் → சிந்தூரம் → சிந்துரம்]*

த. சிந்துரம் → Skt. sindhura

புகர் முகம் (செம்புள்ளியுள்ள முகம்) என்பது சினையாகு பெயராய் யானையைக் குறிப்பது போன்றே சிந்துரம் என்பதும் யானையைக் குறிக்கும்.

**சிந்துரம்**[3] *šinduram,* பெ. (n.) *1.* புளியமரம். (சூடா.); tamarind tree. *2.* வெட்சிச் செடிவகை; scarlet ixora.

சிந்துரம் என்பது புளியின் செந்நிறம் பற்றிப் புளியமரத்தைக் குறிக்கும்.

**சிந்துரம்**[4] *šinduram,* பெ. (n.) செவ்வியம்; root of black pepper plant.

**சிந்துரி-த்தல்** *šinduri-,* 4 செ. குன்றாவி. (v.t.) சிந்தூரி –, (சங்.அக.) பார்க்க; see *šindūri-*.

*[சிந்தூரி → சிந்துரி]*

**சிந்துருணி** šinduruṇi, பெ. (n.) புளியம் பட்டை; tamarind bark.

**சிந்துரை** *šindurai,* பெ. (n.) இந்திரன் யானையால் வளர்க்கப்பட்டவளாகிய தெய்வ யானை; *Teyvayāṉai,* consort of Murugan, as brought up by Indra's white elephant. "சிந்துரைபாக" (கந்தரந். 39).

*[சிந்துரம்[2] → சிந்துரை]*

**சிந்துவாரம்**[1] *šinduvāram,* பெ. (n.) *1.* நொச்சி (சூடா.); stalked leaflet chaste - tree. *2.* கரு நொச்சி; three-leaved chaste - tree. "வஞ்சி பித்திகஞ் சிந்துவாரம்" (குறிஞ்சிப். 89)

**சிந்துவாரம்**[2] *šinduvāram,* பெ. (n.) கடல் (அக.நி.); sea.

*[சிந்து + வாரம். வாரி → வாரம். வாரி – கடல், நீர்நிலை]*

**சிந்துவாரம்**[3] *šinduvāram,* பெ. (n.) வில் (பிங்.); bow.

**சிந்துவாரி** *šinduvāri,* பெ. (n.) பெருங்கடல்; ocean.

*[சிந்து + வாரி]*

**சிந்துவெளி** *šinduveḷi,* பெ. (n.) சிந்து ஆறு பாயும் பகுதி, சிந்து பள்ளத்தாக்கு; river belt, Indus valley.

*[சிந்து + வெளி]*

**சிந்துவெளி நாகரிகம்** *šinduveḷi-nāgarigam,* பெ. (n.) சிந்து ஆறு பாய்ந்த பகுதியில் 5,000 ஆண்டுகளுக்கு முன்பு நிலவிய பழந்தமிழர் நாகரிகம்; an ancient Tamilian civilization which prevailed about 5000 years ago in Sindu river belt, Indus valley civilization.

*[சிந்துவெளி + நாகரிகம்]*

**சிந்தூகம்** *šindūgam,* பெ. (n.) சேங்கொட்டை; dhoby's nut.

**சிந்தூரச்சிலை** *šindūra-c-cilai,* பெ. (n.) *1.* மாக்கல்; pot stone. *2.* சிகப்புக்கல்; any red stone. *3.* சிகப்புத்தாதுமண்; any red ore such as, red zinc ore. *4.* செம்மண்; ochre.

*[சிந்தூரம் + சிலை. செந்தூளம் → செந்தூரம் → சிந்தூரம் = சிவப்பு]*

**சிந்தூரத்திலகம்**[2] *šindūra-t-tilagam,* பெ. (n.) சிந்தூரப்பொட்டு பார்க்க; see *šindūra-p-poṭṭu.* "தெறிக்குந் திவலை யழிக்குஞ் சிந்தூரத் திலகத்தையே" (தனிப்பா. ii, 129: 327).

*[சிந்தூரம் + திலகம்]*

**சிந்தூரத்திலதம்** *śindūra-t-tiladam,* பெ. (n.) *நாதவுப்பு;* a kind of negative salt.

**சிந்தூரப்புடம்** *śindūra-p-puḍam,* பெ. (n.) *சிந்தூர மருந்து செய்வதற்காகப் போடும் புடம்;* calcination of metals with a view to obtain red extraneous oxides.

*[சிந்தூரம் + புடம்]*

**சிந்தூரப்பூடணம்** *śindūra-p-pūḍaṇam,* பெ. (n.) *இசிவு, சுரம், மகப்பேறடைந்தோர்தம் நோய்கள் முதலானவற்றைப் போக்கும் ஆயுள்வேத மாத்திரை;* an Āyurvēdic red pill prescribed for diseases of pregnant women and for curing ailments and other evils as apolexy, fever etc.

*[சிந்தூரம் + பூடணம்]*

**சிந்தூரப்பொட்டு** *śindūra-p-poṭṭu,* பெ. (n.) *குங்குமப்பொட்டு (வின்.);* vermilion mark on the forehead.

மறுவ. செந்தூரம்

*[சிந்தூரம் + பொட்டு. சிந்தூரம் = சிவப்பு]*

**சிந்தூரம்**[1] *śindūram,* பெ. (n.) *1. சிவப்பு (பிங்.);* redness. *2. செங்குடை. (பிங்.);* red umbrella. *3. நெற்றியில் அணிதற்குரிய ஒருவகைச் செம்பொடி (பிங்.);* vermilion, red paint, red powder for tilaka. "மதகரியைச் சிந்தூரமப்பிய போல்" (கம்பரா. மிதிலைக். 151). 4. செந்நிறமுள்ள பொடி வகை; red metallic oxide, precipitate of mercury, any chemical or metallic compound used medicinally. "சிந்தூரத்தாது கொடுத்திலரேல்" (உபதேசகா. உருத்திரா. 67). 5. யானைப் புகர்முகம் (பிங்.); elephant's face, as spotted red. 6. வெட்சி. (திவா.); scarlet ixora. 7. சேங்கொட்டை. (மலை.); marking - nut tree. 8. மாவகை; a kind of mango. செந்தூர மாம்பழம்.

*[சும் → செம் → செம்பு → செப்பு. செம்பு → கெம்பு = சிவந்த கல். செந்தூள் = செம்பொடி, செந்நீறு. செந்தூள் → செந்தூளம் → செந்தூரம் → சிந்தூரம் (மு.தா. 153)]*

த. சிந்தூரம் → Skt. sindūra

**சிந்தூரம்**[2] *śindūram,* பெ. (n.) சிந்துரம்[2]. (பிங்.) *பார்க்க;* see *śinduram*[2].

**சிந்தூரம்**[3] *śindūram,* பெ. (n.) சிந்துரம்[3] பார்க்க; see *śindūram*[3].

**சிந்தூரம்**[4] *śindūram,* பெ. (n.) செவ்வீயம் (வின்.); red lead, minium.

**சிந்தூரம்**[5] *śindūram,* பெ. (n.) பறைவகை (பிங்.); a kind of drum.

**சிந்தூரம்**[6] *śindūram,* பெ. (n.) *1. பவளம்;* coral. *2. சாதிலிங்கம்;* vermilion. *3. பாறையுப்பு;* rock-salt.

*[செந்தூள் → செந்தூளம் → செந்தூரம் → சிந்தூரம்]*

**சிந்தூரமணி** *śindūra-maṇi,* பெ. (n.) *ஆண்குறியின் மேற்புறமும் நுனியும் வீங்கியுந் தோல் சிவந்தும் காணப்படும் பால்வினை நோய்;* inflammation and swelling of the glans penis and perpuce due to venereal affections or other causes.

*[சிந்தூரம் + மணி. சிந்தூரம் = சிவப்பு. மணி = ஆண்குறியின் நுனி]*

**சிந்தூரமரம்** *śindūra-maram,* பெ. (n.) *1. செங்கடம்பு;* red Indian oax tree. *2. புளிய மரம்;* tarmarind tree.

*[சிந்தூரம் + மரம்]*

**சிந்தூரமருத்துவம்** *śindūra-maruttuvam,* பெ. (n.) தேவ மருத்துவம்; devas treatment.

*[சிந்தூரம் + மருத்துவம்]*

**சிந்தூரமாக்கு-தல்** *śindūramākku-,* 5 செ.குன்றாவி. (v.i.) *சிவப்பு வண்ணமாக்குதல்;* to make into a red colour.

*[சிந்தூரம் + ஆக்கு-,]*

**சிந்தூரவிதி** *śindūra-vidi,* பெ. (n.) *சிந்தூரம் செய்யும் முறை;* rules relating to calcination of metals into red oxides.

*[சிந்தூரம் + விதி]*

**சிந்தூரி**[1]**-த்தல்** *śindūri-,* 4 செ.குன்றாவி. (v.t.) *மாழைகளைச் (உலோகங்களை) செந்தூள மாக்குதல்;* to calcine, prepare powders of

metals or minerals by the agency of fire. "சுருக்குக் கொடுத்ததைச் சிந்தூரித்து" (பணவிடு. 230).

ம. சிந்தூரிக்குக

[செந்தூளம் → சிந்தூளம் → சிந்தூரம் → சிந்தூரி]

**சிந்தூரி²-த்தல்** *šindūri-,* 4 செ.கு.வி. (v.i.) சிவப்பாக்குதல்; to convert into a red colour.

[சிந்தூரம் → சிந்தூரி-. 'இ' வினையாக்க ஈறு]

**சிந்தூரி³** *šindūri,* பெ. (n.) சிறுபுள்ளடி; bird's feet plant.

**சிந்தூரிகை** *šindūrigai,* பெ. (n.) செவ்வியம்; black pepper root.

[சிந்தூரி → சிந்தூரிகை]

**சிந்தை** *šindai,* பெ. (n.) 1. மனம்; mind, intellect. "கெடுக சிந்தை கடிதிவள் துணிவே" (புறநா.). 2. அறிவு; knowledge. "இரவு பகலுணர்வோர் சிந்தை" (சி.சி.பாயி. விநாயகர்துதி, சிவஞா.). 3. எண்ணம்; thought, idea, intention. "நாகேச்சரம் வலங்கொள் சிந்தையுடையார்" (தேவா.439, 8). 4. ஊழ்கம் (தியானம்); meditation, contemplation. "சிந்தை செய்து" (திவ். திருவாய். 2. 6: 5). 5. கவலை; solicitude, care. "செதுமகப் பலவும் பெற்றுச் சிந்தைகூர் மனத்தையாகி" (சீவக. 1124).

[சித்து → சிந்து → சிந்தை]

**சிந்தைகல-த்தல்** *šindai-kala-,* 3 செ.கு.வி. (v.i.) மனமொத்தல்; to be of one mind. "சிந்தைகலந்த சகியாகச் சேர்ந்து" (உத்தரரா. அனுமப். 45).

[சிந்தை + கல-,]

**சிந்தைகூரியன்** *šindai-kūriyan,* பெ. (n.) 1. அறிவுக் கூர்மையுள்ளவன்; sharp, keen-witted person. 2. அறிவன் (புதன்) (சூடா.); the planet Mercury.

[சிந்தை + கூரியன்]

கூரியன் பார்க்க

**சிந்தைசெய்-தல்** *šindai-šey-,* 2 செ.குன்றாவி. (v.t.) 1. நினைவில் வைத்தல்; to remember, bear in mind. 2. ஊழ்கம் (தியானம்) செய்தல்; to meditate upon, reflect. "உன்னைச் சிந்தைசெய்து" (திவ். திருவாய். 2. 6: 6). 3. கவலை கொள்ளுதல்; to care for, to be anxious about. "எம்மையு மாள்வரோ வென்று சிந்தைசெயும்" (தேவா. 743, 11).

[சிந்தை + செய்-,]

**சிந்தையடக்கு-தல்** *šindai-y-adakku-,* மனத்தை ஒருவழிப்படுத்துதல்; concentration of mind.

[சிந்தை + அடக்கு-,]

**சிந்தையின்மை** *šindai-y-inmai,* பெ. (n.) 1. மனம் ஒன்றாமை; absence of mind. 2. புறப்பொருட்களில் பற்றற்ற நிலை; in attention to external impressions.

[சிந்தை + இன்மை]

**சிப்பம்¹** *šippam,* பெ. (n.) 1. பொட்டலம்; parcel. 2. சிறுமூட்டை; bundle. 3. ஒருவன் சுமக்கும் அளவுள்ள கட்டப்பட்ட சுமை (வின்.); a man's load of tobacco leaves.

ம. சிப்பம்; தெ. சிப்பமு

[சுள் → (சுட்டு) → சிட்டு (மு.தா. 140). சிட்டு → சிறியது. சிட்டு → சிட்டம் → சிப்பம்]

**சிப்பம்²** *šippam,* பெ. (n.) சிறுமை (யாழ்ப்.); a little, trifle.

ம. சிம்மி

[சில் → சிறு → சிற்பம் → சிப்பம்]

**சிப்பம்³** *šippam,* பெ. (n.) சிற்பம்; architecture, statuary art, artistic fancy work. "கடிமலர்ச் சிப்பமும்" (பெருங். உஞ்சைக். 34: 167).

[சில் → சில்பு → சிற்பு → சிற்பம் (வ.வ. 154). சிற்பம் → சிப்பம்]

த. சிற்பம் → Skt. silpa.

**சிப்பமுத்து** *šippa-muttu,* பெ. (n.) செயற்கை முத்து; artificial pearl.

தெ. சிப்பமுத்தமு

[சிப்பம்³ + முத்து]

**சிப்பல்** *šippal,* பெ. (n.) 1. மூங்கில் சிம்பினாலான மூடி; bamboo lid. 2. கஞ்சி

வடித்தல் முதலியவற்றிற்குதவும் தட்டு; colander, perforated rice-strainer.

தெ. சிம்பி; க. சிப்பலு, சிப்பல, சிப்பில், சிப்புல்

[சிம்பு = மூங்கிற்சிம்பு. சிம்பு → சிப்பு → சிப்பல் = மூங்கிற் சிம்புகளால் முடையப் பெற்ற சிறுதட்டு, அதைப்போல் மாழையாலான துளைகளுள்ள தட்டு]



சிப்பல்

**சிப்பலித்தட்டு** *šippali-t-taṭṭu*, பெ. (n.) சிப்பல் பார்க்க; see *šippal*.

[சிப்பல் → சிப்பலி + தட்டு]

**சிப்பற்றட்டு** *šippaṟṟaṭṭu*, பெ. (n.) சிப்பல் பார்க்க; see *šippal*.

[சிப்பல் + தட்டு]

**சிப்பாதிமூலி** *šippādi-mūli*, பெ. (n.) தைவேளை (மலை.); species of cleome.

**சிப்பி**[1] *šippi*, பெ. (n.) 1. சிற்பி பார்க்க; see *šiṟpi*. 2. தையற்காரன், துன்னக்காரன் (சிலப். 5:32, அடிக்குறிப்பு); tailor.

[சிற்பி → சிப்பி]

**சிப்பி**[2] *šippi*, பெ. (n.) 1. முத்து முதலியவை பொதிந்திருக்கும் ஓடு; pearl-oyster, oyster-shell. 2. சிப்பியோடு கூடிய நீர்வாழ் உயிரி; shell-fish. "நண்டு சிப்பி வேய்கதலி" (நல்வழி, 36). 3. தயிர் அளந்துவிடும் கொட்டாங்கச்சி; coconut- shell for measuring out curds.

ம. சிப்பி; க. சிப்பு, சிப்பு, சிம்பு, சிம்பி, சிம்பெ; தெ. சிப்ப; Pkt., Pali. sippī; Skt. šukti; Port. chipo

[சிம்பு → சிப்பு → சிப்பி]



சிப்பி

**சிப்பி**[3] *šippi*, பெ. (n.) 1. உவர்மண்; a secret term used for fullers earth. 2. நச்சுப்பல்; poisonus fang of a serphent.

**சிப்பிச்சி** *šippicci*, பெ. (n.) துத்தம்; white vitriol.

**சிப்பிச்சுண்ணாம்பு** *šippi-c-cuṇṇāmbu*, பெ. (n.) கிளிஞ்சிலை நீற்றியெடுத்த சுண்ணாம்பு. (வின்.); shell-lime.

[சிப்பி [2] + சுண்ணாம்பு. சுள் → சுண்→ சுண்ணம் → சுண்ணாம்பு]

**சிப்பித்தட்டு** *šippi-t-taṭṭu*, பெ. (n.) சிப்பல் (இந்துபாக. 62) பார்க்க; see *šippal*.

[சிப்பல் + தட்டு - சிப்பத்தட்டு → சிப்பித் தட்டு]

**சிப்பித்தான்பழம்** *šippittāṉ-paḻam*, பெ. (n.) சீமை நறுவிலி; foreign sebesten.

[சிப்பித்தான் + பழம்]

**சிப்பித்தைலம்** *šippi-t-tailam*, பெ. (n.) புழுக்கடி வெட்டு, ஊறல் போன்றவற்றின் தொல்லை யகல உடம்பின் மேற்பூசும் மருந்தெண்ணெய்; a medicated oil extracted probably from mollusc and used externally for scold head and itching (சா.அக.).

[சிப்பி + தைலம்]

Skt. tailā → த. தைலம்

**சிப்பிநீற்று-தல்** *šippi-nīṟṟu-*, 5 செ.குன்றாவி. (v.i.) கிளிஞ்சிலைச் சுண்ணாம்பாகத் தாளித்தல்; to roasting or reducing shell into a lime powder (சா.அக.).

[சிப்பி + நீற்று-,]

**சிப்பிநீறு** *šippi-nīṟu,* பெ. (n.) *சிப்பிச்சுண்ணாம்பு (வின்.) பார்க்க;* see *šippi-c-cuṇṇāmbu.*

*[சிப்பி² + நீறு]*

**சிப்பிப்பாறை** *šippi-p-pāṟai,* பெ. (n.) *சிப்பிப் படுகை;* an oyster-bed.

ம. சிப்பிப்பாற

*[சிப்பி + பாறை]*

**சிப்பிமீன்** *šippimīṉ,* பெ. (n.) *1. கிளிஞ்சலின் ஓட்டிற்குள் இருக்கும் மீன் இனம்;* a species of shell fish. *2. நூற்றுக்கண் மீன் என்று ஆங்கிலத்தில் அழைக்கப்படுவதும், அழகான புள்ளிகளமைந்ததுமான கடல் மீன் இனம்;* a kind of sea-fish commonly known as hundred-eyed fish in English because of its innumerable spots on the body.

*[சிப்பி + மீன்]*




**சிப்பிமுத்து** *šippi-muttu,* பெ. (n.) *சிப்பியில் விளையுந் தரங்குறைந்த முத்து;* an inferior kind of pearl obtained from oysters - mother of pearls.

*[சிப்பி + முத்து. முள் → (மள்) → மண் → மணி = உருண்ட கூலம் அல்லது விதை உருண்ட பாசி]*

**சிப்பிமெட்டி** *šippi-meṭṭi,* பெ. (n.) *கிளிஞ்சல் வகையுளொன்று;* a kind of shell.

*[சிப்பி + மெட்டி]*

**சிப்பியச்சு** *šippi-y-accu,* பெ. (n.) *தொடரியில் (சங்கிலியில்) கோத்தற்குரிய மணிகள் செய்ய உதவும் கம்மியர் அச்சு;* goldsmith's mould for making shell - shaped pendants.

*[சிப்பி + அச்சு]*

**சிப்பியம்** *šippiyam,* பெ. (n.) *கத்தியாலறுத்து அரத்தத்தை வெளியேற்றும், அரத்தக்கட்டி வகை;* an abcess bleeding on incision *(சா.அக.).*

**சிப்பியவேலை** *šippiya-vēlai,* பெ. (n.) *அழகிய வேலை (வின்.);* any curious workmanship; fancy needle-work.

சிற்பம் = நுண்டொழில், நுட்பத்தொழில்.

*[சிற்பி → சிப்பி → சிப்பியம் + வேலை]*

**சிப்பியன்** *šippiyaṉ,* பெ. (n.) *1. கம்மியன் (வின்.);* fancy-worker, engraver. *2. துன்னக்காரன், தையற்காரன் (யாழ்.அக.);* tailor.

தெ. சிப்பெவாடு; க. சிப்பிக, து. சிப்பிக.

*[சிற்பி → சிப்பி → சிப்பியன்]*

**சிப்பிரகருப்பம்** *šippira-karuppam,* பெ. (n.) *பூடுவகையுளொன்று;* a kind of plant *(சா.அக.).*

**சிப்பிலி¹** *šippili,* பெ. (n.) *கழிமுகங்களில் வந்துசேரும் கடல்மீன் வகை;* sea-fish in backwaters.

ம. சிப்பிலி

*[சிப்பி → சிப்பிலி]*

**சிப்பிலி²** *šippili,* பெ. (n.) *சிப்பல் பார்க்க;* see *šippal.*

ம. சிப்பிலி; க. சிம்பலு; தெ. சிம்பி

*[சிப்பல் → சிப்பலி → சிப்பிலி]*

**சிப்பிலித்தட்டு** *šippili-t-taṭṭu,* பெ. (n.) *சிப்பல் பார்க்க;* see *šippal.*

*[சிப்பிலி + தட்டு]*

**சிப்புரதிமூலி** *šippuradi-mūli,* பெ. (n.) *வேம்பு;* margosa tree.

*[சிப்பிரதி + மூலி]*

**சிபி** *šibi,* பெ. (n.) *வள்ளன்மையிற் பேர் பெற்ற கதிரவகுல மன்னன்;* a king of the solar race, renowned for his liberality.

**சிம்பட்டை** *šimbaṭṭai,* பெ. (n.) *சிம்பத்தை பார்க்க;* see *šimbattai (சா.அக.).*

*[சிம்பத்தை → சிம்பத்தை → சிம்பட்டை]*

**சிம்பத்தை** *šimbattai,* பெ. (n.) *சிறுபுள்ளடி (மலை.);* species of desmodium.

*[சிம்பதை → சிம்பத்தை]*

**சிம்பதை** *šimbadai,* பெ. (n.) சிம்பத்தை (மலை.) பார்க்க; see *šimbattai.*

*[சிம்பத்தை → சிம்பதை]*

**சிம்பர்** *šimbar,* பெ. (n.) துமுக்கி (துப்பாக்கி) யிலிடும் தக்கை (யாழ்.அக.); ramrod.

*[சிம்பு → சிம்பர்]*

**சிம்பல்¹** *šimbal,* பெ. (n.) ஒலிக்கை (யாழ். அக.); sounding.

*[சிம்பு³ → சிம்பல்]*

**சிம்பல்²** *šimbal,* பெ. (n.) துள்ளுகை (உ.வ.); frisking labout.

600909

*[சிம்பு¹ → சிம்பல்]*

**சிம்பல்³** *šimbal,* பெ. (n.) சிம்பு (யாழ்.அக.); splinter, grain of boards, rough nap on the surface of coarse cloth or of paper.

*[சிம்பு⁶ → சிம்பல்]*

**சிம்பல்சிலும்பல்** *šimbal-šilumbal,* பெ. (n.) கந்தை (வின்.); tatters, shreds.

*[சிம்பல்³ + சிலும்பல். மிமிசைப் பொருள் மரபிணைமொழி]*

494.811321 SEN.3-2

**சிம்பி¹** *šimbi,* பெ. (n.) வாழையிலைத் துண்டு. (இ.வ.); piece of a plantain leaf.

*[சிம்பல்³ → சிம்பி]*

**சிம்பி²** *šimbi,* பெ. (n.) சிறுவிடுகொள்; horse, gram; it is opposed to peruviḍukoḷ (சா.அக.).

*[சிம்பு → சிம்பி]*

**சிம்பிகம்** *šimbigam,* பெ. (n.) *1.* கருங்கொள்; black horse-gram. *2.* அவரை; Indian bean. *3.* மொச்சை; country bean. *4.* உளுந்து; black-gram.

**சிம்பித்தானியம்** *šimbittāṉiyam,* பெ. (n.) இரண்டு பிரிவுகளாகப் பகுக்கப்படும், பருப்பு வகைகளைச் சார்ந்த தவசவகைகள்; pulse of dolichos genus (சா.அக.).

*[சிம்பு → சிம்பி + தானியம்]*

Skt. dhānya → த. தானியம்

**சிம்பிலி** *šimbili,* பெ. (n.) சருக்கரையும் தேங்காயும் கேழ்வரகு மாவுஞ் சேர்த்துச் செய்த பிட்டு; comestibles made of ragi flour mixed with jaggery and coconut.

*[சிம்பு² → சிம்பிலி-²]*

**சிம்பிளி-த்தல்** *šimbiḷi-,* 4 செ.கு.வி. (v.i.) சிம்புளி- (வின்.) பார்க்க; see *šimbuḷi-.*

**சிம்பிளிபொன்** *šimbiḷi-poṉ,* பெ. (n.) கண்ணிமையும் கருவிழியும் ஒட்டிக் கொள்வதால் ஏற்படும் கண்ணோய். (இங்.வை.); a disease of the eye-lids characterised by the adhesion of the eye-lids to the eye-balls.

E. symblepharon

**சிம்பு¹-தல்** *šimbu-,* 5 செ.கு.வி. (v.i.) *1.* துள்ளுதல்; to frisk about. மாடு சிம்புகிறது. *2.* சினக்குறி காட்டுதல்; to be restive, to show signs of anger. "தாராரைச் சிம்பித் துரத்துவார்" (விறலிவிடு. 315).

*[சிலம்பு → சிம்பு]*

**சிம்பு²-தல்** *šimbu-,* 5 செகுன்றாவி. (v.t.) *1.* சுண்டியிழுத்தல் (உ.வ.); to pull hard. 'உன்னாலான மட்டுஞ் சிம்பிப்பார்' (கொ.வ.). *2.* ஒன்று கூட்டுதல்; to gather together. 'விளக்கு மாற்றை நன்றாய்ச் சிம்பிக்கொள்' (இ.வ.). *3.* நன்றாய்த் தேய்த்தல்; to rub well. 'இவ்விடத்தை நன்றாய்ச் சிம்பு' (இ.வ.).

**சிம்பு³-தல்** *šimbu-,* 5 செ.கு.வி. (v.i.) ஒலித்தல் (வின்.); to sound, make noise.

ம. சிம்பல்

*[சிலம்பு → சிம்பு]*

**சிம்பு⁴** *šimbu,* பெ. (n.) எலும்பையொட்டிய சவ்வு; a membrane sticking to the bone (சா.அக.).

**சிம்பு⁵** *šimbu,* பெ. (n.) சுண்டியிழுக்கை; pull. 'ஒரு சிம்புச் சிம்பினான்' (உ.வ.).

**சிம்பு⁶** *šimbu,* பெ. (n.) *1.* சிராய்; small splinter or fibre rising on a smooth surface of wood or metal. *2.* இரும்பு முதலியவற்றின் தெறிப்பு (வின்.); chip, strip, flake from beaten iron; any small mass breaking off in flakes, in scales or in chips. *3.* செதும்பு; fibre, frayed ends of a worn cord. "சிம்பறத் திரண்ட நரம்பு" (சீவக. 559, உரை.). *4.* மூங்கிற்சிம்பு [illegible]; bamboo splints.

5. இளம்விளாறு (வின்.); twig, young stalk. 6. குற்றம் (சீவக. 666, உரை.); fault, defect.

ம. சிம்பு; தெ. சிம்பி

[சிதம்பு → சிம்பு]

**சிம்புக்கட்டு** *šimbu-k-kaṭṭu,* பெ. (n.) ஒடிந்த எலும்பையொட்டுவதற்காக மூங்கிற் பத்தை வைத்துக் கட்டும் கட்டு; splint bandage for fractured bones.

[சிம்பு + கட்டு]




**சிம்புகட்டு-தல்** *šimbu-kaṭṭu-,* 5 செ.கு.வி. (v.i.) ஒடிந்த உறுப்புக்குப் பத்தைவைத்துக் கட்டுதல் (இ.வ.); to bandage fractured limbswith splints.

[சிம்பு⁵ + கட்டு]

**சிம்புதெறி-த்தல்** *šimbu -teṟi-,* 4 செ.கு.வி. (v.i.) சிராய்த்தல் (வின்.); to splinter, break into small flakes.

[சிம்பு⁶ + தெறி-]

**சிம்புபற-த்தல்** *šimbu-paṟa-,* 4 செ.கு.வி. (v.i.) சிராய் கிளம்புதல் (இ.வ.); to rise into splinter or fibre.

[சிம்பு⁵ + பற-,]

**சிம்புரி** *šimburi,* பெ. (n.) கலம் அசையாதபடி அதன்கீழிடும் புரிமணை, சும்மாடு முதலியன (வின்.); coil of straw used for keeping steady a vessel, load etc., as on the ground or head.

க. சிம்பி

[வைக்கோற் புரியாலான சும்மாடு. சும்மாடு + புரி = சும்மாட்டுப்புரி → சிம்மாட்டுப்புரி → சிம்புரி]

**சிம்புவிடு-தல்** *šimbu-viḍu-,* 20 செ.கு.வி. (v.i.) மரக்கன்று தளிர்த்தல் (வின்.); to shoot forth tender leaves.

[சிம்பு⁵ + விடு-,]

**சிம்புவெடி-த்தல்** *šimbu-veḍi-,* 4 செ.கு.வி. (v.i.) சிம்புவிடு-, (வின்.) பார்க்க; see *šimpu-viḍu-.*

[சிம்புவிடு → சிம்புவெடி-,]

**சிம்புள்¹** *šimbuḷ,* பெ. (n.) எட்டுக்காற் பூச்சி; spider (சா.அக.).

**சிம்புள்²** *šimbuḷ,* பெ. (n.) அரிமாவைக் கொல்லும் ஆற்றலுடையது எனப்படும் எண்காற்புள் (சரபம்); a fabulous eight-legged bird. "பறந்து செல் சிம்புள் பையென வைத்தலும்" (பெருங். இலாவாண. 11:65). சிம்புட் பறவையே சிறகை விரி! எழு! - பாவேந்தர்.

**சிம்புளானோன்** *šimbuḷ-āṉōṉ,* பெ. (n.) எண்காற்புள் (சரபம்) வடிவமெடுத்த வீரபத்திரன் (பிங்.); Virabattiraṉ, as one who assumed the form of šimpuḷ.

[சிம்புள்² + ஆனோன்]

**சிம்புளி¹-த்தல்** *šimbuḷi-,* 4 செ.கு.வி. (v.i) 1. கண்ணை மூடிக்கொள்ளுதல்; to close or shut the eyes, as in joy, terror, etc. "சிம்மாந்து சிம்புளித்துச் சிந்தையினில் வைத்துகந்து" (தேவா. 195,1). 2. கண்ணிமை கொட்டுதல்; to flutter the eyelids.

ம. சிம்முக, சிம்புக, சீம்முக; க. சிமுடு; தெ. சிமுடு

**சிம்புளி²** *šimbuḷi,* பெ. (n.) செவ்வாடை (பிங்.); red cloth.

[செம்பு + உள் (மை) → சிம்புளி]

**சிம்புளி³** *šimbuḷi,* பெ. (n.) கம்பளி (வின்.); woollen cloth, blanket.

[சிம்பு → சிம்புளி]

**சிம்புறுகண்¹** *šimbuṟu-kaṇ,* பெ. (n.) கண்ணிற் படலம் உரிவதாகிய நோய் வகை.(வின்.); a disease of the conjunctivea which causes it to become sealy.

[சிம்பு⁵ + உறு + கண்]

**சிம்புறுகண்**[2] *śimbuṟu-kaṇ,* பெ. (n.) *கண்ணிற் சிராய் பாய்வதினாலுண்டாகும் நோய்;* irritation of the eyes due to flakes from a beaten iron striking against cornea of the eye *(சா.அக.).*

*[சிம்புறு + கண்]*

**சிம்பை** *śimpai,* பெ. (n.) *அவரை (சூடா.);* field-bean.

**சிம்மதம்** *śimmadam,* பெ. (n.) *பாம்பு;* snake *(சா.அக.).*

**சிம்மது** *śimmadu,* பெ. (n.) *சிம்பத்தை பார்க்க;* see *simbattai (சா.அக.).*

**சிம்மாங்கவாதம்** *śimmāṅga-vādam,* பெ. (n.) *ஊதைநோய் வகையுளொன்று;* a kind of rheumatism *(சா.அக.).*

Skt. vāta → த. *ஊதை*

**சிம்மமுகி** *śimma-mugi,* பெ. (n.) *ஆடா தோடை (தைலவ. தைல. 16);* malabar nut.

*[சிம்மம் + முகி]*

**சிம்மவிட்டுணு** *śimma-viṭṭuṇu,* பெ. (n.) *காஞ்சிபுரத்தைத் தலைநகராகக் கொண்டு பல்லவ நாட்டையாண்ட மகேந்திரவர்மனின் தந்தை;* father of Mahēndra varmaṉ, a Pallava king, who ruled over from Kañcipuram.

*நாட்டுக்கு அரசனாய்த் திகழ்ந்ததோடு கலைகளுக்கும் அரசனாய்த் திகழ்ந்தான். கற்கோயில்களைக் கட்டினான்; குகைக் கோயில்களையும் உருவாக்கினான்.*

**சிம்மா-த்தல்** *śimmā-,* 6 செ.கு.வி. (v.i.) *இறுமாத்தல்;* to be elated with pride.

*[செம்மா → சிம்மா]*

**சிம்மாங்கவாதாங்குசாறு** *śimmāṅga- vādāṅgu-sāṟu,* சிம்மாங்க ஊதை நோயைப் போக்கும் *ஆயுள்வேத மருந்து;* an Āyurvēdic medicine for rheumatism *(சா.அக.).*

**சிம்மாடு** *śimmāḍu,* பெ. (n.) *சும்மாடு (மதி.கள. ii, 73);* load-pad for the head.

ம. சிம்மாடு

*[சும்மாடு → சிம்மாடு]*

**சிம்மாளம்** *śimmāḷam,* பெ. (n.) *மகிழ்ச்சி (சங்.அக.);* exhilaration, mirth.

க. சுமான; தெ. சுமாளமு

*[கும்மாளம் → கிம்மாளம் → சிம்மாளம்]*

**சிம்மு**[1]**-தல்** *śimmu-,* 5 செ.குன்றாவி. (v.t.) *கொப்புளங் குத்தி விடுதல் (இ.வ.);* to open a blister.

தெ. சிம்மு

*[செம்மு → சிம்மு-,]*

**சிம்மு**[2]**-தல்** *śimmu-,* 5 செ.குன்றாவி. (v.t.) *சிம்பு*[1]*-2 பார்க்க;* see *śimpu*[1]*-2.*

**சிம்மு**[3] *śimmu,* பெ. (n.) *எல்லை (யாழ்.அக.);* limit, border.

**சிம்மை** *śimmai,* பெ. (n.) *அவுரி;* indigo plant *(சா.அக.).*

**சிமட்டி** *śimaṭṭi,* பெ. (n.) *பேய்க் கொம்மட்டி (மலை.);* colocynth, climber.

**சிமந்தாதி** *śimandādi,* பெ. (n.) *பச்சைப் பாக்கு;* raw of green areca-nut *(சா.அக.).*

**சிமந்தாரிகம்** *śimandārigam,* பெ. (n.) *சிறுபுள்ளடி;* species of desmodium *(சா.அக.).*

**சிமந்தூரி** *śimandūri,* பெ. (n.) *சிறுபுள்ளடி (மலை.);* species of desmodium.

சிம்பத்தை பார்க்க

**சிமம்** *śimam,* பெ. (n.) *எல்லாம் (யாழ்.அக.);* all.

**சிமயம்** *śimayam,* பெ. (n.) *1. பனிமலை (பிங்.);* the Himlayas. *2. பொதியமலை (சூடா.);* the mount Podigai in Tirunelveli District.

*[சிமையம் → சிமயம்]*

சிமையம் பார்க்க

**சிமரகம்** *śimaragam,* பெ. (n.) *சுவர் முள்ளங்கி;* wild country radish *(சா.அக.).*

**சிமலி** *śimali,* பெ. (n.) *பூளை;* malabar semul *(சா.அக.).*

**சிமாளம்** *śimāḷam,* பெ. (n.) *சிம்மாளம் (வின்.) பார்க்க;* see *śimmāḷam.*

**சிமாளி[1]-த்தல்** *šimāḷai-*, 4 செ.கு.வி. (v.i) *மிக மகிழ்தல் (யாழ்.அக.);* to rejoice greatly.

*[சிமாளம் → சிமாளி-,]*

**சிமாளி[2]-த்தல்** *šimāḷai-*, 4 செ.குன்றாவி. (v.t.) *சமாளி பார்க்க;* see *šamāḷi.*

*[சமாளி → சிமாளி-,]*

**சிமான்** *šimāṉ,* பெ. (n.) *1. அவுரிவித்து;* seeds of indigo plant. *2. கந்தகம்;* sulphur *(சா.அக.).*

**சிமி** *šimi,* பெ. (n.) *ஆண்மக்களின் குடுமி (பிங்.);* hair-tuft of men.

*[உம் → சும் → சும. சுமத்தல் = தலைமேற் பொறை கொள்ளுதல். சும → சுமை → சிமை → சிமி]*

**சிமிக்கி** *šimikki,* பெ. (n.) *பூச்செடி வகையுள் ஒன்று;* a kind of Bounapart is passion flower.

**சிமிக்கிப்பூ** *šimikki-p-pū,* பெ. (n.) *1. சீமை மல்லிகைக் கொடி;* foreign jasmine creeper. *2. மலைச்சிமிக்கி;* mountain foreign jasmine *(சா.அக.).*

*[சிமிக்கி + பூ]*

**சிமிகம்** *šimigam,* பெ. (n.) *கிளி;* parrot *(சா.அக.).*

**சிமிங்கி** *šimiṅki,* பெ. (n.) *கடுக்காய்;* gallnut *(சா.அக.).*

**சிமிட்டி[1]** *šimiṭṭi,* பெ. (n.) *சிமிட்டுக்கள்ளி பார்க்க;* see *šimiṭṭu-k-kaḷḷi.*

*[சிமிட்டு → சிமிட்டி]*

**சிமிட்டி[3]** *šimiṭṭi,* பெ. (n.) *பேய்க்கொம்மட்டி;* colocynthis *(யாழ்.அக.).*

*[சிமட்டி → சிமிட்டி]*

**சிமிட்டி[4]** *šimiṭṭi,* பெ. (n.) *பேய்த் திமிட்டி;* bitter apple *(சா.அக.).*

மறுவ. சிமிட்டிக் கள்ளி

**சிமிட்டு[1]-தல்** *šimiṭṭu-*, 5 செ.குன்றாவி. (v.t.) *1. கண்ணிமைத்தல்;* to blink, wink. "இருகண்ணுஞ் சிமிட்டாமுன்" *(இராமநா. உயுத். 107). 2. சாடை தோன்றக் கண்சிமிட்டுதல்;* to make a signal with the eyes; to wink. "சிமிட்டிக் கண்களினால்" *(திருப்பு. 553).* 3. தந்திரஞ்செய்து ஏமாற்றுதல் *(வின்.);* to deceive artfully, impose upon by stratagem.

ம. சிமிட்டுக; க. சிமிடு, சிவடு, சிவிடு; து. சிமுடு

*[சிமிழ் → சிமிட்டு-,]*

த. சிமிழ் → Skt. šiml

**சிமிட்டு[3]** *šimiṭṭu,* பெ. (n.) *1. இமைப்பு;* blinking of the eyes. *2. கண்சைகை;* significant wink. "விழிக்கொரு சிமிட்டும்" *(குற்றா. குற.).* 3. சிமிட்டு வித்தை பார்க்க; see *šimiṭṭu-vittai. 4. கள்ள வேலை;* scamped or dishonest work. *5. கைந் நொடி;* snap of the finger.

ம. சிமிட்டு

*[சிமிழ் → சிமிட்டு]*

**சிமிட்டு[4]** *šimiṭṭu,* பெ. (n.) *கவர்ச்சி;* bewitchery *(சா.அக.).*

**சிமிட்டுக்கண்** *šimiṭṭu-k-kaṇ,* பெ. (n.) *கொட்டுங்கண் (இ.வ.);* blinking - eyes.

*[சிமிட்டு + கண்]*

**சிமிட்டுக்கண்ணன்** *šimiṭṭu-k-kaṇṇaṉ,* பெ. (n.) *அடிக்கடி கண்சிமிட்டும் இயல்பினன்;* a person who constantly blinks or has bad eyes *(சா.அக.).*

*[சிமிட்டு + கண்ணன்]*

**சிமிட்டுக்கண்ணி** *šimiṭṭu-k-kaṇṇi,* பெ. (n.) *கண்சிமிட்டிப் பூடு;* a sensitive plant.

மறுவ. கண்சிமிட்டி; தொட்டாற்சுருங்கி

*[சிமிட்டு + கண்ணி]*

**சிமிட்டுக்கள்ளி** *šimiṭṭu-k-kaḷḷi,* பெ. (n.) *1. தந்திரக்காரி (வின்.);* artful woman. *2. கற்புக் குன்றியவள்;* a woman of loose character, fallen woman.

**சிமிட்டுப்பார்வை** *šimiṭṭu-p-pārvai,* பெ. (n.) *மருட்டு அல்லது மயக்குப்பார்வை;* bewitching look *(சா.அக.).*

*[சிமிட்டு + பார்வை]*

**சிமிட்டுப்பால்** *šimiṭṭu-p-pāl,* பெ. (n.) *சிமிட்டுக் கள்ளிப்பால்;* spurge milk *(சா. அக.).*

*[சிமிட்டு + பால்]*

**சிமிட்டுப்போக்கு** *śimiṭṭu-p-pōkku,* பெ. (n.) கண்சைகை; sign by movements of the eye (சாஅக.).

*[சிமிட்டு + போக்கு]*

**சிமிட்டுவித்தை** *śimiṭṭu-vittai,* பெ. (n.) 1. மயக்கு வித்தை; witchcraft. 2. தந்திர வித்தை; magic.

மறுவ. கண்கட்டு வித்தை

த. விச்சை; ச = த, வித்தை; வ. வித்தை

*[சிமிட்டு + வித்தை. வித் → வித்தை]*

த. வித்தை → Skt. vidyā

**சிமிட்டுவேலை** *śimiṭṭu-vēlai,* பெ. (n.) 1. கள்ள வேலை; scamped, dishonest work. 2. வியக்க வைக்கும் வேலைப்பாடு (வின்.); curious piece of workmanship, dexterous workman ship.

*[சிமிட்டு + வேலை]*

**சிமிண்டல்** *śimiṇḍal,* பெ. (n.) கிள்ளல்; pinching (சாஅக.).

*[சிமிண்டு → சிமிண்டல். 'அல்' தொ.பெ. ஈறு]*

**சிமிண்டு[1]-தல்** *śimiṇḍu-,* 5 செ.குன்றாவி. (v.t.) நிமிண்டுதல்; to tickle, pluck, pinch, prod. "கக்கத்திற் சிமிண்டுகிற கை நமனல்லவோ" (யாழ்அக.).

*[நிமிடு → நிமிட்டு → நிமிண்டு → சிமிண்டு-,]*

**சிமிண்டு[2]-தல்** *śimiṇḍu-,* 5 செ.குன்றாவி. (v.t.) சிமிட்டு பார்க்க; see *śimiṭṭu-.*

**சிமிண்டு[3]** *śimiṇḍu,* பெ. (n.) தடி (வின்.); stick, post.

**சிமியம்** *śimiyam,* பெ. (n.) ஒரு வகைக் கெட்டி மூங்கில்; a kind of hard bamboo (சேரநா.).

ம. சிமியம்

**சிமிரி** *śimiri,* பெ. (n.) அறுகம்புல் வகை; a kind of synodon grass (சாஅக.).

**சிமிலம்** *śimilam,* பெ. (n.) மலை (பிங்); hill, mountain.

Skt. saila

*[சிமயம் → சிமிலம்]*

**சிமிலி[1]** *śimili,* பெ. (n.) 1. உறி; rope - loop for suspending pots. "பல்புமரிச் சிமிலி நாற்றி" (மதுரைக். 483). 2. ஆண்மக்களின் குடுமி (திவா.); hair-tuft of men. 3. சிள்வீடு (பிங்.); cricket. 4. தோணி (யாழ்அக.); boat. 5. கருந்தேனீ; a black bee (சேரநா.).

ம. சிமிலி; க. சிமண்டி, சிம்மண்டெ; தெ. சிமட, சிமிட, சிம்மட, சிம்மெட

*[சிமி → சிமிலி]*

**சிமிலி[2]** *śimili,* பெ. (n.) வெல்லங்கலந்த எள்ளின் பொடி (இ.வ.); sesamum powder mixed with jaggery.

*[சிம்மிலி → சிமிலி]*

**சிமிலியுண்டை** *śimili-y-uṇḍai,* பெ. (n.) சருக்கரை, தேங்காய் முதலியவை சேர்த்துச் செய்யும் எள்ளுருண்டைப் பண்ணியம் (இ.வ.); a sweetmeat made of fried sesamum seeds with scrapings of coconut kernal and sugar.

*[சிமிலி[3] + உண்டை]*

உருண்டை → உண்டை

**சிமிழ்[1]-த்தல்** *śimiḻ-,* 4 செ.குன்றாவி. (v.t.) 1. கட்டுதல் (பிங்.); to tie, bind. "பாசப் பிணிப்பினாற் சிமிழ்ப் புண்டு" (பிரபோத. 5:5). 2. அகப்படுத்தல்; to entrap, catch. "வேட்டுவன் புட்சிமிழ்த் தற்று" (குறள். 274).

*[இமிழ்[2] → சிமிழ்-,]*

**சிமிழ்[2]-த்தல்** *śimiḻ-,* 4 செ.குன்றாவி. (v.t.) கண்கொட்டுதல் (பிங்.); to wink, blink.

மறுவ. சிமிட்டுதல்

*[இமை → சிமை → சிமிழ்-,]*

**சிமிழ்[3]** *śimiḻ,* பெ. (n.) 1. செப்பு; small round jewel box, small caskat. "தட்டா னடித்த சிமிழ்போல்" (தனிப்பா. ii, 160, 399). 2. திமில் (இ.வ.); hump.

ம. சிமுழ்

*[திமில் → திமிழ் → சிமிழ்]*

சிமிழ் வகைகள்

1. மருப்பு(தந்த)ச்சிமிழ்
2. கொம்புச்சிமிழ்
3. மரச்சிமிழ்
4. செம்புச்சிமிழ்
5. வெள்ளிச்சிமிழ்
6. மாவிலிங்கச்சிமிழ்

**சிமிழ்ப்பு** *šimilppu,* பெ. (n.) பிணைப்பு; bondage, tie. "காதலில் வரு சிமிழ்ப் பனைத்தும்" (கூர்மபு. இந்திர. 30).

*[இமிழ் → சிமிழ் → சிமிழ்ப்பு]*

**சிமிழிவட்டம்** *šimili-vattam,* பெ. (n.) பனை ஓலையால் செய்யப்பெற்ற கவிப்புக்குடை; a hat umbrella made of palm leaves (சேரநா.).




**சிமிள்வித்தை** *šimil-vittai,* பெ. (n.) மைதடவிச் செய்யும் கண்கட்டுவித்தை; the art of fascinating the eyes of the spectators in the performance of jugglery with the aid of magic paint (சா.அக.).

மறுவ. மயக்குவித்தை

*[சிமிள் + வித்தை]*

**சிமிளல்** *šimilal,* பெ. (n.) கண்சிமிட்டல்; twinkling of the eye (சா.அக.).

**சிமிளி**[1] *šimili,* பெ. (n.) சிமிலி[3] பார்க்க; see *šimili*[3].

*[சிமிளி → சிமிலி]*

**சிமிளி**[2]**-த்தல்** *šimili-,* 4 செ.கு.வி. (v.i.) சிமிழ்[2]- (வின்.) பார்க்க; see *šimil.*

*[சிமிழ் → சிமிள் → சிமிளி]*

**சிமிளிகம்** *šimiligam,* பெ. (n.) பூளைச்செடி; malabar semul (சா.அக.).

**சிமிளிப்பு** *šimilippu,* பெ. (n.) கண்கொட்டுகை (சங்.அக.); winking of the eyes.

*[சிமிழ் → சிமிள் → சிமிளி → சிமிளிப்பு]*

**சிமிறு** *šimiru,* பெ. (n.) அறுகு; synodon grass (சா.அக.).

**சிமுக்கம்** *šimukkam,* பெ. (n.) 1. கைமுட்டியால் குத்துதல், அடித்தல்; a beat (with the fist). 2. அச்சம்; fear. 3. வலிமை; strength. 4. பேச்சு; speech. 5. அசைவு; movement (சேரநா.).

**சிமுக்கிடு-தல்** *šimukkidu-,* 20 செ.கு.வி. (v.i.) 1. எச்சரிக்கைசெய்தல் (வின்.); to give alarm, utter a warning, used only in the negative. 2. அசைதல் (சங்.அக.); to move.

ம. சிமுக்கு.

*[சிமுக்கு + இடு-,]*

**சிமுட்டி** *šimutti,* பெ. (n.) கீழாநெல்லி (மலை); a small plant.

ம. சிமுட்டி

**சிமுடிகம்** *šimudigam,* பெ. (n.) பயற்றங்கொடி என்னும் தட்டைப்பயற்றுக்கொடி; creeper of chinese dolichos (சா.அக.).

**சிமுதை** *šimudai,* பெ. (n.) கொடிமுந்திரி; sweet berry (சா.அக.).

**சிமை** *šimai,* பெ. (n.) 1. மலையுச்சி; summit of a mountain. "தோய்வருஞ் சிமைதொறும்" (பரிபா. 7, 13) 2. குடுமி. (வின்.); hair-tuft.

*[உம் → சும் → சும. சுமத்தல் = தலைமேற் பொறை கொள்ளுதல். சும → சுமை → சிமை (வே.க. 36)]*

ME.,AF.,OF. summe, somme; L. summa, summur (highest); E. sum.

ME., OF. sohmet, sommettc, som (top); L. summum; E. summit.

**சிமையம்** *šimaiyam,* பெ. (n.) 1. உச்சி; top "ஒளிர்கொள் சிமைய வுரவுமலர் வியன்கா" (நெடுநல்.27). 2. மலையுச்சி; summit of a mountain. 3. கொடுமுடி; peak. "சிமையத் திமையமும்" (சிலப். 6, 28). 4. மலை; mountain, hill. "பனிவார் சிமையக் கானம் போகி" (மதுரைக். 148)

*[சிமை → சிமையம்]*

E: summit; Fr: sommet; L: summum; Sp: šima mountain; E: sum; Fr: sume; some; Fr: somme; L: summa.

**சிய்யான்** *śiyyāṉ*, பெ. (n.) *தாய்வழிப் பாட்டன்* (இ.வ.); maternal grandfather *(சா.அக.)*.

*[சேயோன் → சீயோன் → சீயன் → சிய்யான்]*

**சியகு** *śiyagu*, பெ. (n.) *ஏறுகொடி வகையுள் ஒன்று;* a kind of climber *(சா.அக.)*.

**சியச்சினி** *śiya-c-ciṉi*, பெ. (n.) வேலிப்பருத்தி *(மலை) பார்க்க;* see *vēli-p-parutti*.

Skt. srihastini

**சியச்சினிகம்** *śiya-c-ciṉigam*, பெ. (n.) *உத்தாமணி;* hedge cotton plant *(சா.அக.)*.

**சியண்டி** *śiyaṇḍi*, பெ. (n.) *சருக்கரை;* sugar *(சா.அக.)*.

**சியத்தாவி** *śiyattāvi*, பெ. (n.) *பவள மல்லிகை;* coral jasmine *(சா.அக.)*.

**சியத்துத்தம்** *śiyattuttam*, பெ. (n.) *கடுக்காய்;* Indian gallnut *(சா.அக.)*.

**சியநாகம்** *śiyanāgam*, பெ. (n.) *துத்தச்செய்ந் நஞ்சு;* a kind of prepared arsenic *(சா.அக.)*.

**சியநாயகம்** *śiyanāyagam*, பெ. (n.) *சியநாகம் பார்க்க;* see *siyanāgam* *(சா.அக.)*.

*[சியநாகம் → சியநாயகம்]*

**சியபங்கம்** *śiyabaṅgam*, பெ. (n.) *வத்தேக்கு;* sappan wood *(சா.அக.)*.

**சியம்** *śiyam*, பெ. (n.) *சிப்பியாகம் என்னும் மரம்;* lodh tree *(சா.அக.)*.

**சியாமகுலமீன்** *śiyāma-kula-mīṉ*, பெ. (n.) *தெளிவற்ற நிறமுள்ள ஆற்றுமீன்;* dusky-coloured river fish *(சா.அக.)*.

**சியாமரம்** *śiyāmaram*, பெ. (n.) *செழுமலர்க் கொன்றை;* a species of cassia yielding luxuriant flowers *(சா.அக.)*.

**சியாமலதை** *śiyāmaladai*, பெ. (n.) *1. வேலியிற் படரும் வள்ளிச்செடி;* dark-blue creeper. *2. பால்வல்லி;* milk creeper *(சா.அக.)*.

**சியேனம்** *śiyēṉam*, பெ. (n.) *1. பருந்து;* kite, fakon. *2. படைத்தகை (வியூக) வகை;* a kind of kite-shapped military array *(குறள், 767, அடிக் குறிப்பு.)*.

**சிர-த்தல்** *śira-*, செ.குன்றாவி. (v.t.) *1. தேய்த்தல்;* to crush, grind. *2. அழித்தல் (வின்.);* to destroy.

**சிரக்குழி** *śira-k-kuḻi*, பெ. (n.) *நத்தைச் சூரி;* bristly button-weed *(சா.அக.)*.

**சிரக்கொழி** *śira-k-koḻi*, பெ. (n.) *வசம்பு;* sweet flag *(சா.அக.)*.

**சிரக்கோரை** *śira-k-kōrai*, பெ. (n.) *கடலாத்தி;* fragrant trumpet tree *(சா.அக.)*.

**சிரக்கோழி** *śira-k-kōḻi*, பெ. (n.) *1. வசம்பு (மலை.);* sweet flag. *2. குழலாதொண்டை (மலை.);* common caper.

**சிரகசிதம்** *śirakaśidam*, பெ. (n.) *பல்லிப் பூண்டு;* lizard plant *(சா.அக.)*.

**சிரகம்**[1] *śiragam*, பெ. (n.) *1. மழைத்துளி;* rain drops. *2. தூய்மைப்படுத்திய சருக்கரை;* refined sugar *(சா.அக.)*.

*மறுவ. தூறல், சாரல்*

**சிரகம்**[2] *śiragam*, பெ. (n.) *1. திவலை (திவா.);* water drop. *2. கரகம்;* water-pot, ever. *"அடர்பொற் சிரகத்தால் வாக்கு" (கலித். 51).*

*[கரகம் → சிரகம்]*

**சிரகரிதம்** *śiragaridam*, பெ. (n.) *பல்லிப் பூண்டு;* lizard plant *(சா.அக.)*.

**சிரங்காடு** *śiraṅ-kāḍu*, பெ. (n.) *அடர்ந்த காடு (வின்.);* thick forest, imperetrable jungle.

*[சுரம் → சிரம் + காடு]*

**சிரகாதி** *śiragādi*, பெ. (n.) *பறங்கிப்பட்டை;* china root *(சா.அக.)*.

**சிரகாமணக்கு** *śiragāmaṇakku*, பெ. (n.) *வெள்ளை ஆமணக்கு;* croton oil plant *(சா.அக.)*.

**சிரகெந்தா** *śirakanda*, பெ. (n.) *நீர்த்திப்பிலி;* water long pepper *(சா.அக.)*.

**சிரங்கரடி** *śiraṅgaraḍi*, பெ. (n.) *திருநாமப் பாலை;* seven-leaved plant *(சா.அக.)*.

**சிரங்காய்**[1] *śiraṅgāy,* பெ. (n.) தேங்காய்; coconut (சா.அக.).

**சிரங்காய்**[2] *śiraṅkāy,* பெ. (n.) சிறங்கை (வின்.) பார்க்க; see *śiraṅgai.*

**சிரங்காற்றிச்சூரணம்** *śiraṅgāṟṟi-c-cūraṇam,* பெ. (n.) அரிப்பு, சிரங்கு முதலானவற்றைப் போக்கும் கழிச்சல் சூரணம்; a medicinal powder curing itch and other. cutaneous affections through purgation (சா.அக.).

*[சிரங்கு + ஆற்று + சூரணம்]*

**சிரங்கி** *śiraṅgi,* பெ. (n.) வங்கமும், இலிங்கமும் சேர்ந்த கலப்புமருந்து; a compound of lead and vermilion as in. "கலிக்கின்ற வங்கத்தில் இலிங்கஞ்சேர்த்துக் கலக்கினால் சிரங்கி என்ற பேருமாச்சு" (உரோமரிஷி-முப்பு. சூத்.)(சா. அக.).

**சிரங்கிரா** *śiraṅgirā,* பெ. (n.) பேய்க்குமட்டி; bitter apple (சா.அக.).

**சிரங்கிவித்தை** *śiraṅgi-vittai,* பெ. (n.) சிரங்கியைக் கொண்டு அணியமாக்கும் பதங்கத்தைப் பொன்னாக்கத்திற்குப் பயன்படுத்தும் கலை; in alchemy, the art of employing the sublimated compound of lead and vermilion in the transmutation of metals (சா.அக.).

த. வித்தை → வ. வித்யா

*[சிரங்கி + வித்தை]*

**சிரங்கு** *śiraṅgu,* பெ. (n.) *1.* பரு; eruption, pimple. *2.* தோலில் அரிப்புக்காணும் ஒருவகை நோய்; itch, scat.

ம. சிரங்நு; க. கெரகு; து. கேரெ, இரணி; பட. செரங்கு

1. ஆனைச்சிரங்கு; scabby itch.
2. சொறிசிரங்கு; itch with scaly red patches
3. கழுட்டுச்சிரங்கு; itch with pustules.
4. தொடர்சிரங்கு; confluent itch.
5. பெருஞ்சிரங்கு; itch with a wide vesiculation.
6. பரங்கிச்சிரங்கு; syphilitic itch.

**சிரங்குகிள்ளு-தல்** *śiraṅgu-kiḷḷu-,* 5 செ. குன்றாவி. (v.t.) சினைப்புக்கிள்ளுதல்; pinching off the end of a pimple (சா.அக.).

*[சிரங்கு + கிள்ளு-,]*

**சிரங்குகுத்து-தல்** *śiraṅgu-kuttu-,* 5 செகுன்றாவி. *1.* புண்ணைக் குத்திவிடுதல்; to scratch open pimples with nails for relief from itching. *2.* வீண் காலங்கழித்தல்; to waste one's time.

*[சிரங்கு + குத்து-,]*

**சிரங்குச்சொறி** *śiraṅgu-c-coṟi,* பெ. (n.) சொறி சிரங்கு; itch attended with scaly affections (சா.அக.).

*[சிரங்கு + சொறி]*

**சிரங்குப்புண்** *śiraṅgu-p-puṇ,* பெ. (n.) புண்ணான சிரங்கு; itch developed into a sore (சா.அக.).

*[சிரங்கு + புண்]*

**சிரங்கை**[1] *śiraṅgai,* பெ. (n.) *1.* உள்ளங்கையளவு; palmful. *2.* பால்வல்லி; milk creeper (சா.அக.).

**சிரங்கை**[2] *śiraṅgai,* பெ. (n.) சிறங்கை (வின்.) பார்க்க; see *śiṟaṅgai.*

*[சிறு + அங்கை → சிறங்கை → சிரங்கை]*

**சிரசன்** *śiraśaṉ,* பெ. (n.) ஒருவகைச் செய்நஞ்சு; a mineral poison.

**சிரசாலம்** *śiraśālam,* பெ. (n.) வெள்விழியில் சிவப்புத் தழும்புகள், அகலமாய்ப் பரவி வலையைப் போன்று காணப்படும் கண்ணோய்; red and extensive patches of hardened veins spreading over the white coat of the eye and looking like a net work (சா.அக.).

**சிரசின்னு** *śirasiṉṉu,* பெ. (n.) மலை வேம்பு; hill neem (சா.அக.).

**சிரசுவாது** *śirasu-vādu,* பெ. (n.) இலவங்க மரம்; clove tree (சா.அக.)

*[சிரசு + வாது]*

**சிரசோன்** *śiraśōṉ,* பெ. (n.) சேர்பந்த வைப்பு நஞ்சு; kind of native arsenic (சா.அக.).

**சிரஞ்சனம்** *śirañjaṉam,* பெ. (n.) அன்னச் சாற்றை இயல்பிற்கு மாறாக விரைவாகச் செரிமானஞ் செய்யும் பொருள்; that which hurries the chyle or other material for digestion before the usual time (சா.அக.).

**சிரட்குச்சி** *śiraṭ-kucci,* பெ. (n.) நிலவேம்பு; ground neem (சா.அக.).

**சிரட்சி** *śiraṭśi,* பெ. (n.) இலந்தை; indian plum (சா.அக.).

**சிரட்டகப்பை** *śiraṭṭa-kappai,* பெ. (n.) தேங்காய் ஓட்டாலான அகப்பை; coconut shell spoon.

ம. சிரட்டக்கயில

[சிரட்டை + அகப்பை]

**சிரட்டை** *śiraṭṭai,* பெ. (n.) 1. தேங்காய்ப் பருப்பினை மூடியிருக்கும் ஓட்டின் மேற்பாதி, கண்ணுள்ள பகுதி; the upper half of the coconut shell. 2. தேங்காய்ப் பருப்பினை மூடியிருக்கும் கெட்டியான ஓடு (யாழ்.அக.); coconut shell. 3. இரக்குங்கலம், திருவோடு; begging bowl, the hard shell of the coconut.

மறுவ. கொட்டங்கச்சி

ம. சிரட்ட; க. கர; பட. கரட்டலு; குட. செரடெ

[சுர் → சுர → சுரசுர → சுரசுரப்பு. சுர் → சர் → சரு → சருசரு → சருச்சரை. சர் → சரள் = கரட்டுமண். சுர் → (சுரடு) → சுரட்டை → சிரட்டை = கரடான கொட்டாங்கச்சி (மு.தா.122)]

**சிரட்டைக்கருப்பட்டி** *śiraṭṭai-k-karuppaṭṭi,* பெ. (n.) கருப்பட்டி வகை (நாஞ்.); a kind of jaggery (செ.அக.).

[சிரட்டை + கருப்பட்டி]

**சிரட்டைக்கைச்சி** *śiraṭṭai-k-kaicci,* பெ. (n.) கொட்டாங்கச்சி (வின்.); half of a coconut shell.

மறுவ. சிரட்டைக் கையில்

ம. சிரட்டக்கயில், சிரட்டக்கய்யில் (சிரட்டகப்பை)

[சிரட்டை + கைச்சி]

**சிரட்டைக்கையில்** *śiraṭṭai-k-kaiyil,* பெ. (n.) சிரட்டைக்கைச்சி (வின்.) பார்க்க; see *śiraṭṭai-k-kaicci.*

ம. சிரட்டக்கய்யில்

[சிரட்டைக் கைச்சி → சிரட்டைக் கையில்]

**சிரட்டைச்சங்கு** *śiraṭṭai-c-caṅku,* பெ. (n.) இரவலர் பயன்படுத்தும் பெரிய அளவிலான சங்கு; a big size of conch which is used by beggars.

மறுவ. திருவோட்டுச் சங்கு

[சிரட்டை + சங்கு]

சிரட்டை பார்க்க

**சிரடகம்** *śiraḍagam,* பெ. (n.) பூவா மாமரம்; mango tree not bearing flowers (சா.அக.).

**சிரணி** *śiraṇi,* பெ. (n.) ஓமம் (மூ.அ.); bishop's weed.

**சிரத்தக்காளகம்** *śiratta-k-kāḷagam,* பெ. (n.) மருக்காரை (மலை); emetic -nut.

**சிரத்தகாழகம்** *śiratta-kāḻagam,* பெ. (n.) சிரத்தக்காளகம் (வின்.) பார்க்க; see *śiratta-k-kāḷagam.*

**சிரத்தியார்** *śirattiyār,* பெ. (n.) சிறியதாயார்; father's younger brother's wife; mother's younger sister.

[சின்னதாயார் → சிறுதாயார் → சிறத்தயார் → சிரத்தியார் (கொ.வ.)]

**சிரத்து-தல்** *śirattu-,* 5 செ.கு.வி. (v.i & v.t.) சிரற்று- (வின்.) பார்க்க; see *śiraṟṟu-.*

**சிரத்தை** *śirattai,* பெ. (n.) காழகம்; மருக்காரை; a thorny shrub (சா.அக.).

**சிரந்துகம்** *śirandugam,* பெ. (n.) நொச்சி மரம்; five leaved chaste tree (சா.அக.).

**சிரந்தை** *śirandai,* பெ. (n.) உடுக்கை; small x-shaped drum. "நுண்ணூற் சிரந்தை யிரட்டும் விரலன்" (தொல். பொருள். 81, உரை).

[சிரற்று → சிரற்றை → சிரத்தை → சிரந்தை]

**சிரநோய்** *śira-nōy,* பெ. (n.) *தலைநோய்;* head ache *(சாஅக.).*

*[சிரம் + நோய்]*

**சிரப்பலம்** *śirappalam,* பெ. (n.) தேங்காய்; coconut *(சாஅக.).*

*[சிரம் + பலம்]*

**சிரப்புள்** *śirappuḷ,* பெ. (n.) *சிச்சிலிக் குருவி;* a kind of king fisher *(சாஅக.).*

*[சிரல் + புல் - சிரற்புள் → சிரப்புள்]*

**சிரபுரம்** *śira-puram,* பெ. (n.) *சீர்காழி;* sīkāḻi. "சித்தர் வந்து பணியுஞ் செல்வச் சிரபுர மேயவனே" *(தேவா. 99, 10).*

*[சிரம் + புரம்]*

**சிரம்**[1] *śiram,* பெ. (n.) நெடுங்காலம் *(சூடா.);* a long time.

**சிரம்**[2] *śiram,* பெ. (n.) *1. ஆமணக்கு (சங்அக.);* castor plant. *2. கமுகு (சங்அக.);* areca-palm. *3. ஊதையடக்கி (வாதமடக்கி);* wind killer. *4. கூகை நீறு (மூஅ.);* arrow root flour. *5. சீரகம்;* cumin seed.

**சிரமச்சாலை** *śirama-c-cālai,* பெ. (n.) *சிலம்பம் முதலிய படைக்கலப் பயிற்சி செய்யுமிடம்;* place for military exercise and for practice of arms. "காமவேள் சிரமச்சாலையை யொக்கும் *(பரிபா. 18, 29, உரை).*

*[சிலம்பம் → சிரம்பம் → சிரமம் + சாலை]*

**சிரமஞ்செய்-தல்** *śiramañ-cey-,* 1 செ.குன்றாவி. (v.i.) *சிலம்பம் முதலிய பழகுதல் (சூடா.);* to practise arms, fencing, etc.

*[சிலம்பம் → சிரம்பம் → சிரமம் + செய்-,]*

**சிரமடக்கி** *śiramaḍakki,* பெ. (n.) *1. ஊதை யடக்கி (வாதமடக்கி) என்னும் மூலிகை;* wind-killer. *2. வளிநோயைக் கண்டிக்கும் மருந்துகள்;* drugs expelling wind *(சாஅக.).*

*[சிரம் + அடக்கி]*

**சிரமப்பணிக்கன்** *śirama-p-paṇikkaṉ,* பெ. (n.) *சிலம்பக்காரன்;* fencing-master *(செஅக.).*

*[சிரமம் + பணிக்கன்]*

**சிரயசி** *śirayasi,* பெ. (n.) *ஆனைத் திப்பிலி;* elephant long pepper *(சாஅக.).*

**சிரல்**[1] *śiral,* பெ. (n.) *சிச்சிலி;* king fisher. "புலவுக் கயலெடுத்த பொன்வாய் மணிச்சிரல்" *(சிறுபாண். 181).*

**சிரல்**[2] *śiral,* பெ. (n.) *முடிவிடம் (யாழ்அக.);* top, end.

**சிரவஞ்சம்** *śiravañjam,* பெ. (n.) *எலிப்பயறு;* rat pulse *(சாஅக.).*

**சிரவணி** *śiravaṇi,* பெ. (n.) *1. நீர்த்தாரை வழியாய்ச் சிறுநீர்ப்பைக்குப் போக விடும் குழாய்க் கருவி வகையுளொன்று;* a kind of tubular instrument to be introduced through the urethra into the bladder. *2. கொட்டைக் கரந்தை;* Indian globe thistle *(சாஅக.).*

**சிரவணியிடு-தல்** *śiravaṇi-y-iḍu-,* 8 செ.கு.வி. (v.i.) *சிறுநீர்த் துளை வழியாகக் குழாயூசியைச் செலுத்துதல்;* to pass catheter as in cases of obstruction of urine *(சாஅக.).*

**சிரவம்** *śiravam,* பெ. (n.) *கவுதாரி (பிங்.);* partridge.

**சிரவல்** *śiraval,* பெ. (n.) *1. கவுதாரி;* partridge. *2. அதிமதுரம்;* honey creeper *(சாஅக.).*

**சிரற்புள்** *śiraṟpuḷ,* பெ. (n.) *பொன்வாய்ப்புள்;* a kind of king fisher *(சாஅக.).*

**சிரற்று-தல்**[1] *śiraṟṟu-,* 5 செ.கு.வி. (v.i) *உரக்க வொலித்தல்;* to shout, call loudly. "சிரற்றின பார்ப்பினின்.... வெய்துயிர்த் தரற்றின" *(கம்பரா. கும்பக. 268).*

**சிரற்று-தல்**[2] *śiraṟṟu-,* 5 செ.குன்றாவி. (v.t.) *சினத்தல்;* to be angry with. "சிறுபாகராகச் சிரற்றாது" *(கலித். 97.29).*

தெ. சிரசிர

**சிரறு-தல்** *śiraṟu-,* 5 செ.கு.வி. (v.i.) *1. மாறு படுதல்;* to sulk, disagree. "சிரறுபு சீறச் சிவந்த நின் மார்பு" *(கலித். 88, 13).* 2. *சிதறுதல்;* to scatter. "சிரறு சிலவூறிய நீர்வாய்ப் பத்தல்" *(பதிற்றுப். 22, உரை).*

**சிராகம்** *širākam,* பெ. (n.) பல தெருக்கள் கூடுமிடம் (பிங்.); crossings, junction of many roads.

*[சிறகம் → சிரகம் → சிராகம்]*

**சிராநெய்** *širāney,* பெ. (n.) சுறாமீனின் கொழுப்பு; shark's fat (சாஅக.).

**சிராப்பள்ளி** *širā-p-paḷḷi,* பெ. (n.) திருச்சிராப் பள்ளி; Tiruchirappalli. "சிராப்பள்ளிக் குன்றுடை யானை" (தேவா. 367,1).

**சிராபத்திரம்** *širāpattiram,* பெ. (n.) விளாமரம்; wood-apple tree (சாஅக.).

**சிராய்[1]-தல்** *širāy-,* 4 செ.கு.வி. (v.i) உராய்ந்து ஊறுபடுதல்; to get scratched, as in the skin.

**சிராய்[2]** *širāy,* பெ. (n.) 1. மரச்சக்கை; splint, splinter, shivered chip of palmyra or other timber. 2. பனஞ்சிறாம்பு; fibres of palmyra timber. 3. பருவின் முளை; hard and indurated part in a bubo or cancer.

**சிராய்ப்பாக்கு[1]** *širāy-p-pākku,* பெ. (n.) முற்றாத பாக்கு (வின்.); unripe areca -nut.

**சிராய்ப்பாக்கு[2]** *širāy-p-pākku,* பெ. (n.) சீவிய பாக்கு; parings of areca nut for use with betel (சாஅக.).

*[சிராய் + பாக்கு]*

**சிராய்விழு-தல்** *širāy-viḻu-,* 1 செ.கு.வி. (v.i.) நார்ப் பழமாதல் (வின்.); to be fibrous, as blighted mangoes and other fruits.

*[சிராய்[2] + விழு-,]*

**சிராவகயானம்** *širāvaka-yāṉam,* பெ. (n.) புத்தசமய வகை; a school of Buddhism (நீலகேசி, 342, உரை).

**சிராவசம்** *širāvašam,* பெ. (n.) நான்கு திங்களில் அழியும் கரு (சி.சி. 2, 93, மறைஞா. பக். 1347); foetus which is aborted in four months.

**சிரி[1]-த்தல்** *širi-,* 4 செ.கு.வி. (v.i.) 1. ஒலியெழுப்பியோ முகக்குறிப்பின் மூலமோ பல் தெரிய உதடுகளை விரிப்பதன் மூலமோ மகிழ்ச்சி, ஏளனம் முதலியவற்றை வெளிப் படுத்துதல்; to laugh. "சிரித்தது செங்கட் சீயம்" (கம்பரா. இரணியன். 127). 2. கனைத்தல்; to neigh, as a horse. "வாசி சிரித்திட" (கம்பரா. சம்புமா. 8). 3. மலர்தல்; to blossom. "சிரித்த பங்கய மொத்த செங்கண்" (கம்பரா. கைகேசி. 50).

ம. சிரிக்குக; க. சிரிசு; தெ. சிரு, கெரு; துட. சிர்ய (மகிழ்ச்சி)

*[சில் → சிர் → சிரி]*

**சிரி[2]-த்தல்** *širi-,* 4 செ.குன்றாவி. (v.t.) ஏளனம் செய்தல் (பரிகசித்தல்); to ridicule. "சகம்பே யென்று தம்மைச் சிரிப்ப" (திருவாச. 4:68).

*[சில் → சிர் → சிரி]*

**சிரி[3]** *širi,* பெ. (n.) மகிழ்ச்சி, ஏளனம் முதலியவற்றை வெளிப்படுத்தும் மெய்ப்பாடு, நகைப்பு (சேரநா.); laughter, smile.

ம. சிரி

*[சிர்' → சிரி]*

**சிரி[4]** *širi,* பெ. (n.) 1. அம்பு; arrow. 2. வாள்; sword. 3. கொலை செய்வோன்; murderer. 4. வெட்டுக்கிளி; locust.

*[சில் → சிறு → சிறாய் = மரச்சில்லு. சில் → சிர் → சிரி = சில்லு]*

**சிரி[5]** *širi,* பெ. (n.) 1. புளியமரம்; tamarind tree. 2. கருக்குவாமரம்; deccany olive-wood (சாஅக.).

**சிரிக்கி** *širikki,* பெ. (n.) காக்கட்டான் கொடி; smaller morning glory (சாஅக.).

**சிரிகாலக்கொல்லி** *širikāla-k-kolli,* பெ. (n.) சூரையிலந்தை; oblique - leaved jujube (சாஅக.).

மறுவ. சூரைச்செடி

**சிரிகாலகண்டம்** *širikāla-kaṇḍam,* பெ. (n.) குடியோட்டிப் பூடு; yellow thistle (சாஅக.).

**சிரிகிவிதை** *širigi-vidai,* பெ. (n.) காக்கட்டான் விதை; kaladana seed (சாஅக.).

*[சிரிக்கி → சிரிகி + விதை]*

**சிரிங்கசியம்** *širiṅgašiyam,* பெ. (n.) இசங்கு மரம்; small - leaved glory tree (சாஅக.).

**சிரிங்காடகம்** *širiṅgaḍagam,* பெ. (n.) 1. முக்கோண வடிவம்; a triangular or pyramidal figure (சாஅக.). 2. ஒருவகைப்பூடு; a plant.

**சிரிங்கிநஞ்சு** *śiriṅgi-nañju,* பெ. (n.) வசனாவி என்னும் நச்சுச் செடி; aconite (சா.அக.).

மறுவ. பிச்சநாவி

இதை ஆவின் கொம்பில் கட்டி வைக்கப் பால் செந்நிறமாகும்.

**சிரிஞ்சிப்பூ** *śiriñji-p-pu,* பெ. (n.) வண்ண மேற்றப் பயன்படுத்தப்படும் செந்நிறப்பூ; a plant with red flowers used by dyers (சா.அக.).

**சிரிட்டம்** *śiriṭṭam,* பெ. (n.) விளாம்பட்டை (யாழ்.அக.); the bark of the wood-apple tree.

**சிரிடம்** *śiriḍam,* பெ. (n.) 1. வாகைமரம்; common sirissa. 2. குன்றி; Indian liquorice (சா.அக.).

**சிரித்தபிழைப்பு** *śiritta-piḷaippu,* பெ. (n.) ஏளனம் செய்யத்தக்க வாழ்க்கை (உ.வ.); contemptible, ridiculous life.

[சிரித்த + பிழைப்பு]

**சிரிப்பாணி** *śirippāṇi,* பெ. (n.) 1. அடங்காச் சிரிப்பு; excessive or irrepressible laughter. 2. பகடி; jest, fun. 3. ஏளனம்; ridicule.

[சிரி → சிரிப்பாணி]

**சிரிப்பாணிப்படு-தல்** *śirippāṇi-p-paḍu-,* 20 செ.கு.வி. (v.i.) 1. சிரிப்புக்கிடமாதல்; to become a laughing stock. 2. சிறுமைப்படுதல்; to suffer shame, degradation.

[சிரிப்பாணி + படு-,]

**சிரிப்பாய்ச்சிரி-த்தல்** *śirippāy-c-ciri-,* 4 செ. குன்றாவி. (v.t.) இகழ்தல்; to laugh at.

[சிரிப்பாய் + சிரி-,]

**சிரிப்பாய்ச்சிரி-த்தல்** *śirippāy-c-ciri-,* 4 செ.கு.வி. (v.i.) 1. மலிந்து கிடத்தல்; to be abundant and cheap, to be so common as to be despised. 2. நிலை கெட்டுத்திரிதல்; to lead a despicable life. 'அவன் சிரிப்பாய்ச் சிரிக்கிறான்' (தஞ்சை.).

[சிரிப்பு → சிரிப்பாய் + சிரி-,]

**சிரிப்பு** *śirippu,* பெ. (n.) 1. நகைப்பு; laughter. "கொவ்வைச் செவ்வாயிற் குமிண் சிரிப்பும்" (தேவா. 11, 4). 2. ஏளனம்; ridicule. "அன்பர்க்கு மல்லாதவர்க்குஞ் சிரிப்பல்லவோ" (தனிப்பா. i, 198: 12). 3. குதிரைக் கனைப்பு; neigh of horse. "தேரதிர்ப்பினும் புரவியஞ்சிரிப்பினும்" (உ.ப. தேசகா. சிவபுண். 74). 4. பகடி (வின்.); jest, fun.

[சிரி → சிரிப்பு]

**சிரிபரணி** *śiriparaṇi,* பெ. (n.) 1. பேராமல்லி; long tubed Arabian jasmine. 2. குமிழ்; coom teak (சா.அக.).

**சிரிபலம்** *śiripalam,* பெ. (n.) 1. நெல்லிக்காய்; indian gooseberry. 2. வில்வம்; bael fruit tree (சா.அக.).

**சிரிபாசம்** *śiripāśam,* பெ. (n.) பிசின் வகையுளொன்று; resin of pine tree (சா.அக.).

**சிரிபில்லகம்** *śiripillagam,* பெ. (n.) ஆவில் புங்கு; an unknown plant (சா.அக.).

**சிரியக்கிபழஞ்சலாகையச்சு** *śiriyakki-palañcalakai-y-accu,* பெ. (n.) பழைய நாணய வகை; an ancient coin (M.E.R. 117 of 1915).

மறுவ. சிரியக்கியச்சு

**சிரியக்கியச்சு** *śiriyakki-y-accu,* பெ. (n.) சிரியக்கிபழஞ்சலாகையச்சு பார்க்க; see *siriyakki-palañcalākai-y-accu.*

மறுவ. சிரியக்கியச்சு

**சிரியத்தி** *śiriyatti,* பெ. (n.) உத்தாமணி; hedge cotton (சா.அக.).

**சிரியத்தினி** *śiriyattiṉi,* பெ. (n.) சிரியத்தி பார்க்க; see *śiriyatti* (சா.அக.).

[சிரியத்தி → சிரியத்தினி]

**சிரியம்** *śiriyam,* பெ. (n.) வெண்டாமரை; white lotus.

**சிரீடம்** *śirīḍam,* பெ. (n.) 1. வாகை (பிங்.); sirissa. 2. குன்றி (மலை); crab's eye.

**சிரு** *śiru,* பெ. (n.) தோட்பொருத்து (யாழ்.அக.); shoulder-joint (சா.அக.).

**சிருக்கி** *śirukki,* பெ. (n.) கற்றாழை; aloe (சா.அக.).

**சிருக்கு** *śirukku,* பெ. (n.) 1. வேள்வியிற் பயன்படுத்தும் நெய்த்துடுப்பு; wooden ladle

for pouring ghee on sacrifical fire. "கிஞ்சுகபத்திரமே கிட்டுஞ் சிருக்காக" (தேவை. 175). 2. எண்ணெய் காய்ச்சுவதற்குப் பயன் படுத்தும் துடுப்பு; wooden ladle used in the preparation of medicated oil (சா.அக.).

**சிருக்குமுத்திரை** *širukku-muttirai,* பெ. (n.) பூசைக்காலத்துக் காட்டுங் கை முத்திரை வகை (சைவாநு. வி. 20); a hand-pose, in worship.

**சிருகண்ணி** *širuganni,* பெ. (n.) அழுகண்ணி மரம்; Indian weeping tree (சா.அக.).

**சிருகம்** *širugam,* பெ. (n.) 1. அம்பு (யாழ்.அக.); arrow. 2. காற்று; wind. 3. தாமரை; lotus.

**சிருகாரிடம்** *širugāridam,* பெ. (n.) சாதிக்காய்; nutmeg (சா.அக.).

**சிருகாலன்** *širugālan,* பெ. (n.) நரி; fox, jackal (சா.அக.).

**சிருகாலி** *širukāli,* பெ. (n.) 1. சந்தனம்; sandal. 2. காவட்டம் புல்; citronella (சா.அக.).

**சிருகுலி** *širukuli,* பெ. (n.) புளியாரை; sour-sorral (சா.அக.).

**சிருங்கி[1]** *širungi,* பெ. (n.) நச்சுத்தன்மையைப் போக்கும் மருந்து; an antidote for poison. "தீற்றுதுஞ் சிருங்கி யென்பார்" (சீவக. 1277).

**சிருங்கி[2]** *širungi,* பெ. (n.) பொன் (யாழ்.அக.); gold.

**சிருங்கை** *širungai,* பெ. (n.) 1. கண்விழியின் முற்பகுதியிலுள்ள மெல்லிய கருந்திரை; the horny transparant membrane in the fore-part of the eye. 2. உள்ளங்கையளவு; handful (சா.அக.).

மறுவ. ஆணிச் சவ்வு; கருவிழி

**சிருங்கைக்கத்தி** *širungai-k-katti,* பெ. (n.) கண்விழியின் மேற்றோலை அறுக்கப் பயன்படுத்தப்படும் சிறிய கத்தி; knife used for operating the cornea of the eye (சா.அக.).

[சிருங்கை + கத்தி]

**சிருதி[3]** *širudi,* பெ. (n.) பிறப்பு; birth (சா.அக.).

**சிருந்துரமம்** *širunduramam,* பெ. (n.) பொட்டிலுப்பு; nitre (சா.அக.).

**சிருபாடிகை** *širupādigai,* பெ. (n.) பறவை மூக்கு; bird's beak (சா.அக.).

**சிருபரணி[1]** *širupārani,* பெ. (n.) 1. பெருங்குமிழ்; coomteak. 2. முன்னை மரம்; Indian head ache-tree (சா.அக.).

**சிருபாணி[2]** *širupāni,* பெ. (n.) மருள்; hyacinth aloe (சா.அக.).

**சிரும்பவாதம்** *širumba-vādam,* பெ. (n.) முழங் காலிலுண்டாகும் வலி நோய்; rheumatism affecting the knee cap (சா.அக.).

**சிரும்பிதம்** *širumbidam,* பெ. (n.) கொக்கோக முனியால், தமிழிற் கூறப்பட்ட கலவிமுறை களுளொன்று; it is an attitude in tight of it union as described in the Tamil erotic science of Kokkoga Muni (சா.அக.).

**சிரை[1]-த்தல்** *širai-,* 4 செ.குன்றாவி. (v.t.) 1. மயிர் கழித்தல்; to shave. "காம்பறத் தலை சிரைத்து" (திவ். திருமாலை. 38). 2. செதுக்குதல்; to cut with a sickle. "புற்சிரைத்தல் செய்ய மாட்டீர்களோ" (ஈடு 3,9, 6).

ம. சிரய்க்குக; க. கெரெ, கிரி; தெ. கொருகு; து. கெரெபுனி; பட. கெரெ; கொலா. க்வர்க்; மா. க்வெரெ

AS: sceren; OE: schere, shere; E: shear : L.G.: scheren; Du: scheeren; Ice: shera; Dan: shere; Yer: scheren.

[சில் → சிறு → சிறாய். சில் → சிலும்பு → சிலாம்பு → சினாம்பு → சிறாம்பு = மரத்திலும் மீனிலுமுள்ள நுண்பட்டை. சில் → சிர் → சிராய். சிராய்த்தல் = உராய்ந்து, ஊறுபடுதல். சில் → சிர் → சிரை. சிரைத்தல் மேலுள்ளதை நீக்குதல், செதுக்குதல், மழித்தல்]

**சிரை[2]** *širai,* பெ. (n.) நரம்பு (திவா.); nerve, vein.

Skt. sira

**சிரை[3]** *širai,* பெ. (n.) குரங்கு (அக.நி); monkey.

Skt. šira

**சிரை[4]** *širai,* பெ. (n.) தாதுக்களினின்று கழிவுப் பொருட்களை வெளியேற்றும் அரத்தக் குழாய்கள்; any tube or vessal through which

waste matters or secretions are discharged-duct (சா.அக.).

**சிரைத்தொழில்** *širai-t-toḻil*, பெ. (n.) 1. சிரைக்கும் வேலை (யாழ்ப்.); shaving. 2. வீண்வேலை (கொ.வ.); unprofitable task.

*[சிரை + தொழில்]*

**சிரைப்பாசி** *širai-pāši*, பெ. (n.) கடுக்காய்; gall-nut (சா.அக.).

**சிரைப்புண்** *širai-p-puṇ*, பெ. (n.) முடிதிருத்துவோன் சிரைக்குங்காலேற்பட்ட புண்; barber's itch (சா.அக.).

*[சிரை + புண்]*

**சிரையன்** *širaiyaṉ*, பெ. (n.) மயிர் சிரைப்போன் (பிங்.); barber.

ம. சிரயன்

*[சிரை → சிரையன்]*

**சிரைவேலை** *širai-vēlai*, பெ. (n.) 1. சிரைதொழில் (யாழ்ப்.); shaving. 2. அரைகுறைப்பணி; infinished work.

*[சிரை + வேலை]*

**சில்**[1] *šil*, பெ.எ. (adj.) 1. சில; some, few. 2. சிறியதான; small, slight. "விராவு சில்லுணா மிசைந்தனர்" (கந்தபு. வள். 209). 3. நுண்மையான (திருக்கோ. 196, உரை); fine.

*[சல் → சில் = சிற்றளவு]*

**சில்**[2] *šil*, பெ. (n.) 1. சிறுதுண்டு; small piece, as of broken glass. கண்ணாடிச்சில், தேங்காய்ச்சில். 2. ஒட்டுச்சீலை; small patch of cloth. 3. வட்டமானது; anything flat and round, as eye-glass, wheel. 4. உருளை; wheel, as of a car. 5. தலையணி வகை (இ.வ.); a kind of hair-ornament. 6. கடற்சில் (யாழ்ப்.); flat round stone or seed of a sea-plant.

*[சல் → சில் = சிறியது, துண்டு]*

**சில்**[3] *šil*, பெ. (n.) 1. ஆரவாரம் (வின்.), ஒலி; sound. 2. இரைச்சல் (வின்.); noise.

**சில்**[4] *šil*, பெ. (n.) 1. மூடி (இ.வ.); cover. 2. மூக்குக் கண்ணாடி (யாழ்.அக.); spectacles.

**சில்**[5] *šil*, பெ. (n.) குளிர்ச்சி; chillness.

**சில்காற்று** *šil-kāṟṟu*, பெ. (n.) தென்றல்; gentle South wind. "சில்காற் றிசைக்கும் பல்புழை நல்லில்" (மதுரைக். 358).

*[சில் + காற்று]*

**சில்சொல்** *šil-šol*, பெ. (n.) மென்மொழி; soft or gentle speech. "சில்சொற் பெருந் தோண் மகளிரும்" (திரிகடு. 47).

*[சில → சில். சில் + சொல்]*

**சில்பதவுணவு** *šilpada-v-uṇavu*, பெ. (n.) பக்குவப்படுத்துவதற்குச் சிறிதளவாகக் கூட்டப்பெறும் உணவுப்பொருளாகிய உப்பு; salt, as an article used in small quantities for seasoning. "சில்பத வுணவின் கொள்ளை சாற்றி" (பெரும்பாண். 64).

*[சில் + பதம் + உணவு]*

**சில்பி** *šilpi*, பெ. (n.) கடல்மீன் வகை; a kind of sea-fish.

**சில்மூக்கு** *šil-mūkku*, பெ. (n.) 1. மூக்கிலிருந்து அரத்தமொழுகும்நோய்; epistaxis. 2. அரத்தம் வடியும் மூக்கு; bleeding nose.

*[சில்லி → சில் + மூக்கு]*

**சில்லகி** *šillagi*, பெ. (n.) சில்லம் (சூடா.) பார்க்க; see *šillam*.

*[சில்லம் → சில்லகி]*

**சில்லங்கெடு-தல்** *šillaṅ-keḍu-*, 20 செ.குவி. (v.i.) 1. சிதறுண்ணுதல் (யாழ்.அக.); to be scattered, 2. உடைதல்; to be broken.

*[சில்லம் + கெடு-,]*

**சில்லட்டைக்கடி** *šillaṭṭai-k-kaḍi*, பெ. (n.) நச்சுத்தன்மைமிக்க சிறிய அட்டைப்பூச்சியின் கடிவாய்; a poisonous leech-bite (சா.அக.).

*[சில்லட்டை + கடி]*

**சில்லந்தட்டிப்போ-தல்** *šillan-daṭṭi-p-pō*, செ.குவி. (v.i.) வறுமையுட்படுதல் (யாழ்.அக.); to become impoverished.

*[சில்லம்[2] + தட்டிப்போ-,]*

**சில்லந்தராயம்** *šillanda-rāyam,* பெ. (n.) சில்வரி (தெ.க.தொ.5,501) பார்க்க; see *šilvari.*

*[சில் + அந்தராயம்]*

**சில்லபொல்லம்** *šilla-pollam,* பெ. (n.) சிறுதுண்டு; சிறுபகுதி; நுண்மையான சில்; fragments, small pieces.

*[சில்லம் + பொல்லம்]*

**சில்லம்**[1] *šillam,* பெ. (n.) *1.* தேற்றாமரம் (சூடா.); clearing nut tree. *2.* எட்டி (மலை.); nux vomica tree. *3.* தில்லைமரம்; tiger's milk spurge.

க. சில்ல

**சில்லம்**[2] *šillam,* பெ. (n.) *1.* சிறுதுண்டு; shivers, fragments, small pieces. *2.* பொருள் முட்டுப் பாடு (வின்.); extreme or pressing necessity, urgent straits.

க., தெ., சில்ல.

*[சிதிலம் → சில்லம்]*

**சில்லம்**[3] *šillam,* பெ. (n.) தொட்டாற் சுருங்கி; sensitivity plant, touch-me-not (சா.அக.).

**சில்லம்பாய்** *šillam-bāy,* பெ. (n.) கிழிந்தபாய் (யாழ்ப்.அக.); worn-out mat.

*[சில்லம் + பாய்]*

**சில்லர்**[1] *šillar,* பெ. (n.) கிறீச்சென்று ஒலிக்கின்ற பூச்சி வகை (இ.வ.); a kind of screeching insect.

*[சில் = ஒலிக்குறிப்பு; சில் → சில்லர்]*

**சில்லர்**[2] *šillar,* பெ. (n.). வேடர் (சது.); hunters.

மறுவ. வேட்டுவர்.

**சில்லரங்கம்** *šillarangam,* பெ. (n.) முந்திரிப் பழம்; cashew fruit (சா.அக.).

**சில்லரி** *šillari,* பெ. (n.) சிலம்பின் பருக்கைக் கற்கள் (யாழ்.அக.); pebble inserted in tinkling anklets.

*[சில் + அரி]*

**சில்லறை**[1] *šillarai,* பெ. (n.) *1.* சிறுசிறு பகுதிகளாகக் கிடப்பவை; things scattered here and there in small quantities or amounts, sundries. *2.* மீதி எஞ்சியுள்ளவற்றின் தொகுதி; remainder. 'நான் கொடுக்க வேண்டியதை எடுத்துக் கொண்டு சில்லறையைக் கொடு'. *3.* தேவைக்கு மேற்பட்ட கையிருப்பு; surplus. 'சில்லறை ஆசை கல்லறை வரை விடாது' (உ.வ.). *4.* சில்வானம்; fractional quantities over and above a round sum, odd. 'பத்தே சில்லறை உரூபாய்' (உ.வ.). *5.* கீழ்வாய் எண்; an amount less than one, fraction. *6.* சிறுபாகம்; a small fraction. *7.* சிறு தொகையாக மாற்றும் பணம்; change, as of a rupee. நூறு உரூபாய்க்குச் சில்லறை கொடு. *8.* காசு (நாணயம்); change as of coin. என்னிடம் பணமில்லை சில்லறைதான் இருக்கிறது.

ம. சில்லற; க. சில்லற, சில்றெ, சில்லரெ; தெ. சில்லற; து., பட. சில்லரெ; கோத. சில்ர்; துட. சிலொர்

*[சில் + அறு - சில்லறு → சில்லறை]*

**சில்லறை**[2] *šillarai,* பெ. (n.) *1.* மிகவும் சிறுமையானது; trifling, insignificant matter. *2.* மகளிர் காதணிவகை; காதுச் சில்லறை (இ.வ.); woman's small ear-ornament. *3.* தொந்தரவான சிறு செயல்; petty, annoying business. *4.* திருடர் தொந்தரவு; trouble from thieves. "கள்ளர் சில்லறை" (வின்.) *5.* கொடு நோயால் ஏற்படும் இறப்பு (வின்.); death from malignant diseases.

*[சில் + அறு - சில்லறு → சில்லறை]*

**சில்லறைக்கடை** *šillarai-k-kaḍai,* பெ. (n.) *1.* சிறிதளவாக வாணிகஞ் செய்யுங் கடை; shop dealing in miscellaneous things on a small scale, retail shop. *2.* பணமாற்றுக் கடை (இ.வ.); exchange stall.

ம. சில்லறக்கட

*[சில்லறை + கடை]*

**சில்லறைக்கணக்கு** *šillarai-k-kaṇakku,* பெ. (n.) *1.* விளக்கம் அறியப்படாத சிறு தொகைகள் (வின்.); small unaccounted sums. *2.* கணக்குப்பொத்தகத்தில் அங்குமிங்குமாகப் பதிவு செய்யப்பட்ட, சில்லறைக்குறிப்புகள்; sundry items promiscuously arranged in account.

ம. சில்லறக்குற்றி

*[சில்லறை + கணக்கு]*

**சில்லறைக்காசு** *šillarai-k-kašu,* பெ. (n.) 1. மாழையில் வார்க்கப்பட்ட காசு; metal coins. 2. சில்லறையாயுள்ள தொகை; small money change. 3. சிறு கையூட்டு (இ.வ.); petty bribe.

*[சில்லறை + காசு]*

க. சில்லற நாண்ய; து. சில்லரெகாசு

**சில்லறைக்குடி** *šillarai-k-kudi,* பெ. (n.) சிறிதாகப் பயிரிட்டு வாழுங்குடிகள் (R.T.); ryots who hold small holdings.

*[சில்லறை + குடி]*

**சில்லறைகூடுதல்** *šillarai-kūdudal,* பெ. (n.) 1. பலவகைச் சிறு வருமானங்கள்; sundry items. 2. தஞ்சாவூர் மாவட்டத்தில் முகம்மதிய அரசு சுமத்திய தீர்வை மிகுதி; an extra tax imposed by the Muhammadan Government in Tañjāvūr district.

*[சில்லறை + கூடுதல்]*

**சில்லறைச்சாமான்** *šillarai-c-cāmān,* பெ. (n.) உதிரிப்பொருள், மளிகைப் பொருள்; sundry articles of commerce, as grain etc., excluding cloth.

க. சில்லறெ சாமானு, து. சில்லரெ சாமான்

*[சில்லறை + சாமான்]*

**சில்லறைச்செலவு** *šillarai-c-celavu,* பெ. (n.) சிறிய தொகைக்கான செலவு; the non descriot petty expenses.

ம. சில்லறச் செலவு; க. சில்லறகர்சு; து. சில்லரெகர்சு

*[சில்லறை + செலவு]*

**சில்லறைச்செலவினம்** *šillarai-c-celavinam,* பெ. (n.) சில்லறைச்செலவு பார்க்க; see *šillarai-c-celavu.*

*[சில்லறை + செலவினம். செலவு → செலவினம்]*

**சில்லறைத்தட்டுப்பாடு** *šillarai-t-tattu-p-pādu,* பெ. (n.) சில்லறைக் குறைபாடு; lack of coins.

*[சில்லறை + தட்டுப்பாடு]*

**சில்லறைதீர்-த்தல்** *šillarai-tīr-,* 4 செ.குவி. (v.i.). நிலுவை, கடன் முதலியவற்றை முடித்தல் (இ.வ.); to settle outstandings or debts.

*[சில்லறை + தீர்-,]*

**சில்லறைப்பணம்** *šillarai-p-panam,* பெ. (n.). குறிப்பிட்ட முழு எண்ணுக்குக் குறைவான பணம்; small money, change.

க. சில்லறரொக்க; பட. சில்லரெகண.

*[சில்லறை + பணம். படம் → பணம்]*

**சில்லறைப்பணி** *šillarai-p-pani,* பெ. (n.) சிறுசிறு பணிகள்; small works.

க. சில்லறெகெலச; து. சில்லரெ கெலச; பட. சில்லரெ கெலச

*[சில்லறை + பணி]*

**சில்லறைப்புத்தி** *šillarai-p-putti,* பெ. (n.) 1. சிறுமைத்தனம்; silliness, mean-mindedness. 2. மழுங்கியவறிவு (வின்.); shallow wit. 3. கூடாவொழுக்கம் (வின்.); adultery.

து. சில்லரெபுத்தி

*[சில்லறை + புத்தி]*

சிற்றறிவு பார்க்க

**சில்லறையங்காடி** *šillarai-y-angādi,* பெ. (n.) அரிசி, பருப்பு, எண்ணெய் போன்ற பொருள்களை விற்கும் மளிகைக்கடை; a shop of sundry articles, as rice, pulse, oil, etc., with the exclusion of cloth, petty shop.

க. சில்லறெயங்காடி; து. சில்லரெ அங்கடி

*[சில்லறை + அங்காடி]*

**சில்லறைவேலை** *šillarai-vēlai,* பெ. (n.) சில்லறைப்பணி பார்க்க; see *šillarai-p-pani.*

க. சில்லெறெகெலச; து. சில்லரெ கெலச; பட. சில்லரெ கெலச

*[சில்லறை + வேலை]*

**சில்லறையாட்கள்** *šillarai-y-ātkal,* பெ. (n.) 1. சிறப்பற்றவர்; unimportant persons. 2. தொந்தரவு செய்யும் புல்லியர்; troublesome people. 3. எடுபிடி ஆட்கள்; ordinary coolies.

ம. சில்லறக்காரன்; தெ. சில்லறவாண்டுலு; து. சில்ரெசன

*[சில்லறை + ஆட்கள்]*

**சில்லறைவணிகம்** *šillarai-vanigam,* பெ. (n.) மொத்த விற்பனையாளரிடமிருந்து பெற்று நுகர்வோருக்கு விற்கும் வணிகம்; retail trade.

ம. சில்லறகச்சவடம்

*[சில்லறை + வணிகம்]*

**சில்லறைவணிகர்** *šillaṟai-vaṇigar,* பெ. (n.) மொத்த விற்பனையாளரிடமிருந்து பெற்று நுகர்வோருக்கு விற்கும் வணிகர்; a retail merchant.

ம. சில்லறகச் சவடக்காரன்

*[சில்லறை + வணிகர்]*

**சில்லறைவிற்பனை** *šillaṟai-viṟpaṉai,* பெ. (n.) பொருட்களைச் சில்லறையாக விற்கும் வணிகம்; retail trade.

ம. சில்லறவில்பன

*[சில்லறை + விற்பனை]*

**சில்லாக்கோல்பாய்ச்சு-தல்** *šillā-k-kōl-pāyccu-,* 5 செ.கு.வி. (v.i.) முழங்கால்களுக்குள் இரு கைகளையும் விட்டு அவற்றை நிலத்திற் பதிய வைத்து அம்முழங்கால்கைகளிடையே கோலைவிட்டு இறுக்கி அசையாதிருக்கும் படி குற்றவாளியை ஒறுத்தல் (இ.வ.); to punish a person by making him sit with his hands across the knees and with a stick thrust between, making it impossible for him to move.

தெ. ஜில்ல.

*[சில்லாக்கோல் + பாய்ச்சு-,]*




**சில்லாங்குச்சி** *šillāṅkucci,* பெ. (n.) கிட்டிப்புள் (இ.வ.); game of tipcat.

*[சில் + ஆம் + குச்சி]*

**சில்லாட்டு** *šillāṭṭu,* பெ. (n.) சில்லறை[1] (யாழ்ப்.) பார்க்க; see *šillaṟai*[1]

*[சில் + ஆட்டு = சில்லாட்டு]*

**சில்லாட்டை** *šillāṭṭai,* பெ. (n.) பன்னாடை (இ.வ.); fibrous covering around the top of palms.

*[இல் → சில் + ஆடை - சில்லாடை → சில்லாட்டை]*

**சில்லாடை** *šillāḍai,* பெ. (n.) சில்லாட்டை (இ.வ.) பார்க்க; see *šillāṭṭai.*

*[சில்லாட்டை → சில்லாடை]*

**சில்லாவலி** *šillāvali,* பெ. (n.) வீண்கலகம் (இ.வ.); petty infructuous disturbance.

தெ. சில்ல

*[சில் = சில்லறை, சிறியது. வலி = வருத்தம், துன்பம். சில் + வலி = சில்வலி → சில்லாவலி]*

**சில்லான்** *šillāṉ,* பெ. (n.) *1.* ஒருவகைச் சிறிய ஒந்தி (யாழ்ப்.); small blood sucker. *2.* குருவி வகை; a small bird. *3.* சிறுவர் விளையாட்டு, சில்லான் குடுகுடு (யாழ்ப்.); a boy's game. *4.* கறையான் (இ.வ.); white ant.

*[சுல் → சில் = சிறியது, துண்டு. சில் → சில்லான் (மு.தா. 129)]*

**சில்லான்குடுகுடு** *šillāṉ-kuḍukuḍu,* பெ. (n.) சடுகுடு விளையாட்டு (யாழ்ப்.); a boy's game.

*[சில்லான் + குடுகுடு]*

**சில்லி[1]** *šilli,* பெ. (n.) சிள்வண்டு; cricket. "சில்லி சில்லென் றொல்லறாத" *(திவ். பெரியதி. 1, 7:9).*

Skt. jhila.

*[சில் → சில்லி. 'சில்' ஒலிக்குறிப்பு]*

**சில்லி[2]** *šilli,* பெ. (n.) ஒட்டை, விரிசல், துளை; leak, crack, hole.

ம., க., தெ. சில்லி

*[இல்லி → சில்லி]*

**சில்லி[3]** *šilli,* பெ. (n.) *1.* வட்டம் (பிங்.); circle. *2.* தேருருளை; car wheel. " வெள்ளிச் சில்லிபுக் குற்றது" *(கம்பரா. கடிமண. 71).* *3.* சிறுகீரை; field spinach. "சில்லி தங்குமென் யாத்தி" *(திருவிளை. அருச். 29).* *4.* துண்டு; small broken piece of stone etc., "திரிந்தன சிகரச் சில்லி" *(கம்பரா. சேதுபந். 22.)*

க. சல்லி.

*[சில் → சில்லி]*

**சில்லி[4]** *šilli,* பெ. (n.). *1.* புண்துளை; sinus of a wound. *2.* மெல்லியதோல்; membrane (சா.அக.).

**சில்லிக்கரண்டி** *šilli-k-karaṇḍi,* பெ. (n.) *1. மரம் அல்லது இரும்பினாலாகியதும், துளைகள் அமைந்ததும் மருந்து வடிகட்டப் பயன் படுவதுமான சிறிய அகப்பை;* a wooden or iron spoon with small holes for filtering. *2. சில்லியகப்பை;* a colander used in cookery *(சா.அக.).*

*[சல்லி = சிறு சிறுதுளை. சல்லிக் கரண்டி → சில்லிக்கரண்டி]*



சில்லிக்கரண்டி

**சில்லிக்காது** *šilli-k-kādu,* பெ. (n.) *சிறு தொளைக் காது (இவ.);* bored ear dist. fr. toḷai-k-kādu.

*[சில்லி² + காது]*

**சில்லிக்கோல்** *šilli-k-kōl,* பெ. (n.) *ஒருவகைச் சிறுகம்பு;* a kind of small stick. *"சில்லிக்கோ லெடுத்துக் கண்ணிசேர்த்து" (குற்றா. குற. 79.).*

தெ. சில்லகோல

*[சில்லி + கோல்]*

**சில்லிகாதபம்** *šilligādapam,* பெ. (n.) *தொண்டையில் மெல்லியதாய்ச் சதை வளர்ந்ததால், ஏற்படும் அழற்சி;* an inflammatery disease of the throat with the formation of a false membrane-diphtheris *(சா.அக.).*

**சில்லிகுத்தியவோடு** *šillikuttiya-v-ōḍu,* பெ. (n.) *துளைகளிட்ட ஓட்டுப் பாளம்;* a piece of file perforated holes *(சா.அக.).*

*[சல்லி = சிறு துளை. சல்லி → சில்லி. சில்லி + குத்திய + ஓடு]*

**சில்லிகை¹** *šilligai,* பெ. (n.) *சுவர்க்கோழி (சூடா.);* cricket. *2. நல்லாடை வகை (சிலப்.14, 108, உரை.);* a kind of superfine cloth.

*[சில்லி + கை]*

**சில்லிகை²** *šilligai,* பெ. (n.) *கதிரொளி;* sun's rays *(சா.அக.).*

*[சில்லி + கை]*

**சில்லிசாகம்** *šilli-sāgam,* பெ. (n.) *சிறுகீரை;* pigs greens *(சா.அக.).*

**சில்லிட்டுச்சீலைசெய்-தல்** *šilliṭṭu-c-cīlai-šey-* 1 செ.குன்றாவி. (v.i.) *சில்லுப்போடு-தல் பார்க்க;* see *šillu-p-pōḍu-.*

**சில்லிட்டுப்போ-தல்** *šilliṭṭu-p-pō-,* செ.கு.வி. (v.i.) *இறப்பின் அறிகுறியாக உடம்பு முழுதுங் குளிர்ந்து போதல்;* losing the ordinary warmth of the body which becomes chill, as a sign of death *(சா.அக.).*

*[சில் → சில்லிட்டு. சில்லிட்டு + போ-,]*

**சில்லிடல்** *šilliḍal,* 20 செ.கு.வி. (v.i.) *சில்லிடுதல் பார்க்க;* see *šilliḍu-.*

**சில்லிடு-தல்** *šil-l-iḍu-,* 20 செ.கு.வி. (v.i.) *1. குளிர்ந்து போதல்;* to become chill. *2. ஒலித்தல் (சங்.அக.);* to buzz, as bees. *3. அச்சங் கொண்டு நடுங்குதல் (வின்.);* to thrill with a sudden sensation of fear. *4. சினம் நீர்க்கோப்பு முதலியவற்றால் முகஞ்சிவத்தல் (யாழ்ப்.);* to blush, to be flushed with rage, to be red in the face from cold, from weeping.

ம. சில்லிடுக

*[சில் + இடு-,]*

**சில்லிதம்** *šillidam,* பெ. (n.) *தேற்றா மரம்;* water clearing tree *(சா.அக.).*

**சில்லிப்பலம்** *šilli-p-palam,* பெ. (n.) *இலைமேற் காய்;* bridal couch plant *(சா.அக.).*

*[சில்லி + பலம்]*

**சில்லிபூ-த்தல்** *šilli-pū-,* 4 செ.கு.வி. (v.i.) *கண் கூசும்படியிருத்தல் (யாழ்ப்.);* to be dazzled, as eyes.

*[சில்லி³ + பூ-,]*

**சில்லிமூக்கு** *šilli-mūkku*, பெ. (n.) 1. குருதி வடியும் மூக்கு; bleeding nose. 2. மூக்குநுனி (இ. வ.); tip of the nose.

*[சில்லி + மூக்கு]*

**சில்லிமூக்குடை-தல்** *šilli-mūkkuḍai-*, 2 செ.கு.வி. (v.i.) மூக்கினின்று குருதி வடிதல்; to bleed in the nose.

*[சில்லி² + மூக்கு + உடை-,]*

**சில்லியகப்பை** *šilli-y-agappai*, பெ. (n.) சல்லடைக் கண் போன்ற சில்லிகளையுடைய அகப்பை (தைலவபாயி37, உரை) flat perforated ladle.

*[சில்லி + அகப்பை]*



**சில்லியடை-த்தல்** *šilli-yaḍai-*, செ.கு.வி. (v.i.) சில்லிடு-தல் பார்க்க; see *šilliḍu-*, (சா.அக.).

**சில்லியடை** *šilli-y-aḍai*, பெ. (n.) சல்லடை வகை (தைலவ. பாயி. 22); a kind of covered sieve.

*[சில்லி² + அடை. அடு → அடை]*

**சில்லியரத்தம்** *šilli-y-arattam*, பெ. (n.) 1. பொசியும் குருதி (யாழ்.அக.); oozing blood. 2. உரைந்த அரத்தம்; coagulated blood (சா.அக.).

*[சில்லி² + அரத்தம்]*

**சில்லியெடு-த்தல்** *šilli-y-eḍu-*, 4 செ.கு.வி. (v.i.) முடமாக்கல்; to break the leg by taking off the knee-cap, said by person in fury (சா.அக.).

*[சில்லி + எடு-,]*

**சில்லிவாயன்** *šillivāyaṉ*, பெ. (n.) வாயில் வந்ததைப் பிதற்றுபவன்; a babbler, as leaky-mouthed "சில்லிவாயர் சொல்லுவார்" (பெரியபு. திருஞான. 776).

மறுவ. சல்லிவாயன்

*[சில்லி² + வாயன்]*

**சில்லிறை** *šilliṟai*, பெ. (n.) சில்லறை வரி (தெ.க.தொ. 3,142); petty taxes.

*[சில்லி³ + இறை]*

**சில்லு¹** *šillu*, பெ. (n.) 1. துண்டு, உடைந்த கற்சில்; broken piece, as of stone. "கல்லுச் சில்லுப் பொருநாசிக் கேழல்" (திருப்போ. சந். அலங். 18). 2. வட்டமாயுள்ள விளையாட்டுக் கருவி; a round piece used by children in play. 3. கண்ணாடிச் சில்லு; glass pane. 4. சக்கரம் (இ. வ.); wheel. 5. முழங்காற் சில்லு; knee cap, as being round. 6. நொண்டி விளையாட்டு; a game of hopscotch played with potsherd. உடைந்த புதியவோடு; broken piece of a new pot (சா.அக.).

ம., து. சில்ல

*[சில்¹ → சில்லு]*

**சில்லு²** *šillu*, பெ. (n.) பெருங்கொடி வகை (L.); a kind of scimitar-pod.

மறுவ. இரிக்கி

**சில்லுக்கருப்பட்டி** *šillu-k-karuppaṭṭi*, பெ. (n.) தூய்மைப்படுத்திய பனைவெல்லச் சிறுகட்டி; a superior kind of spiced jaggery.

*[சில்லு¹ + கருப்பட்டி. கல் → சில் = சிறியது. துண்டு, சிற்றளவு. சில்லுக் கருப்பட்டி = சிறு கருப்புக்கட்டி. கருப்பு + கட்டி → கருப்புக்கட்டி → கருப்பட்டி (மு.தா. 140)]*

**சில்லுக்குந்து-தல்** *šillu-k-kundu-*, செ.கு.வி. (v.i.) பாண்டிவிளையாடுதல் (வின்.); to play hopscotch.

*[சில்லு + குந்து-,]*

**சில்லுசெய்-தல்** *šillucey-*, 1 செ.கு.வி. (v.i.) சில்லுப்போடு-தல் பார்க்க; see *šillu-p-pōḍu-*. (சா. அக.).

*[சில்லு¹ + செய்-,]*

**சில்லுண்டி** *šillundi,* பெ. (n.) 1. சிறுமையானது; trifling thing. 2. புல்லன் (இ.வ.); mean person. 3. சிறுகுழந்தைகள் (வின்.); little children.

*[சில் + உண்டி]*

**சில்லுணா** *šil-l-unā,* பெ. (n.) சிற்றுண்டி (இலக்.அக.); light refreshments.

*[சில்' + உண்டி; உணவு = உணா]*

**சில்லுப்போடு-தல்** *šillu-p-pōdu-,* 20 செ.கு.வி. (v.i.) 1. மருந்திட்ட பாண்டத்தை ஓடு வைத்து மூடிய பின் சீலை மண் செய்தல்; to lute a vessel containing medicine by covering the lid with a piece of tile (சா.அக.).

*[சில்லு + போடு-,]*

**சில்லுப்பு** *šilluppu,* பெ. (n.) கல்லுப்பு; crystallised salt (சா.அக.).

*[சில் = சிறுதுண்டு, சில் + உப்பு]*

**சில்லுமாங்கொட்டை** *šillu-mān-kottai,* பெ. (n.) மாங்கொட்டை வகை (இ.வ.); a kind of mango seed which resembles the stone of a mango.

*[சில்லு + மாங்கொட்டை]*

**சில்லுமூடு-தல்** *šillu-mūdu-,* செ.கு.வி. (v.i.) சில்லுப்போடுதல் பார்க்க; see *šillu-p-pōdu-* (சா.அக.).

*[சில் → சில்லு; சில்லு + மூடு-,]*

**சில்லுமூடிசீலைசெய்-தல்** *šillu-mūdi-šīlaišey-* செ.கு.வி. (v.i.) சில்லுப்போடு-தல் பார்க்க; see *šillu-p-pōdu-* (சா. அக.).

*[சில்லு + மூடி + சீலை + செய்-,]*

**சில்லூறு** *šillūru,* பெ. (n.) சிள்வண்டு; cricket.

*[சில் + ஊறு. உறு → ஊறு]*

**சில்லெடு-த்தல்** *šilledu-,* 4 செ.கு.வி. (v.i.) சட்டப்படி ஒருவரைப் பிடித்து, முறைமன்றம், காவல் நிலையம் முதலியவற்றில் ஒப்படைக்க ஆணை பெறுதல் (இ. வ.); to take out a warrant.

*[சில்+ எடு-,]*

**சில்லெலும்பு** *šillelumbu,* பெ. (n.) முழங்காற் சில்லெலும்பு; knee-cap bone (சா.அக.).

*[சில் = சிறுதுண்டு. சில் + எலும்பு]*

**சில்லெனல்** *šillenal,* பெ. (n.) 1. குளிர்ந்திருக்கைக் குறிப்பு; onom. expr. of being very chill. "சில்லென் றென்னு டம்பும் .......... குளிர் வித்த தாண் மலர்கள்" (அருட்பா. 4, அருட்பிர. 74). 2. புலன்களுக்கு இன்பமூட்டுங் குறிப்பு; being pleasant to the senses. "மழலைச் சில்லென் கிளவி" (கூர்மபு. திருக்கல்யாண. 47). 3. முக மலர்ச்சிக் குறிப்பு; being cheerful in countenance 4. ஒலியின்மைக் குறிப்பு; absence of bustle. 'இரவில் ஊர் சில்லென்றிருக்கிறது' (உ.வ.). 5. ஒலிக் குறிப்பு வகை; shrill sound. "சில்லி சில்லென் றொல்லறாத" (திவ். பெரியதி. 17:9).

*[சில்² + எனல்]*

**சில்லை**[1] *šillai,* பெ. (n.) 1. சிள் வண்டு (பிங்.); cicada. 2. கிலுகிலுப்பை; rattle wort.

த. சில்லி → Skt. jhillī

*[சில்லிடுதல் = ஒலித்தல். சில் → சில்லி → சில்லை]*

**சில்லை**[2] *šillai,* பெ. (n.) 1. இழிவு; humbleness. 2. கஞ்சத்தனம், கயமை; meanness. "சில்லைச் சிறுகுடி லகத்திருந் தோனென" (சிலப். 16:147). 3. பழிச்சொல்; slander. "சில்லை வாய்ப் பெண்டுகள்" (திவ். திருவாய். 6.7:4). 4. முரட்டுத் தனம்; unruly mischievous disposition, as of a bull "சில்லைச் செவிமறைக் கொண்டவன்" (கலித். 107). 5. சிற்றின்பம் மிகுதியாகவுடைய கொடு மனத்தள்; wicked and libidinous woman. "சில்லைக்க ணன்பினை யேமாந் தெமதென் றிருந்தார்" (நாலடி, 377).

*[சில் → சில்லை]*

**சில்லை**[3] *šillai,* பெ. (n.) 1. தமிழ்நாட்டில் கிழக்குக்கடற்கரைப் பகுதிகளில் காணப்படும் பறவை வகை; munia. 2. நீர்ப்பறவை வகை (மணிமே. 8, 29); a kind of water-bird. 3 சிவல் வகை (பிங்.); a species of partidge.

1. சிவப்புச் சில்லை
2. வெண்தொண்டைச் சில்லை
3. வெண்முதுகுச் சில்லை
4. கருந்தொண்டைச் சில்லை
5. புள்ளிச் சில்லை
6. கருந்தலைச் சில்லை

## சில்லை வகைகள்



சிவப்புச் சில்லை



புள்ளிச் சில்லை



கருந்தொண்டைச் சில்லை



கருந்தலைச் சில்லை





வெண்தொண்டைச் சில்லை



வெண்முதுகுச் சில்லை



சிரால் மீன்கொத்தி



சின்னக் கொக்கு



சிலந்தி பிடிப்பான்



சிட்டான்



சிரிப்பான்



வெண்மார்புச் சிரிப்பான்

**சில்லை**[4] *šillai,* பெ. (n.) பிரண்டை; square-stalked wild grape.

**சில்லொலி** *šil-l-oli,* பெ. (n.) கீச்சுக்குரல் (புதுவை.); shrill; squeak.

சில் = ஒலிக்குறிப்புச் சொல்

*[சில் + ஒலி]*

**சில்வண்டு** *šil-vaṇḍu,* பெ. (n.) 'கிறிச்' என்று ஒலியெழுப்பும் வண்டு; cicada.

*[சில்' + வண்டு]*

**சில்வரி** *šil-vari,* பெ. (n.) சிறிய வரிகள் (தெ.க. தொ. i, 87); small taxes or cesses.

*[சில் = சில; சில் + வரி]*

**சில்வநோய்** *šilvanōy,* பெ. (n.) உகிர் (நக)க் கண்ணைச் சுற்றியேற்படும் உகிர்ச் சுற்றுநோய்; it is a swelling of the nail-bed. It is known by several names-felon, panaris etc. (சா.அக.).

மறுவ. நகச்சுற்று, உகிர்ச்சுற்று, விரற்சுற்று

**சில்வாய்** *šil-vāy,* பெ. (n.) கடைவாய் (நெல்லை.); corners of mouth.

*[சில் + வாய்]*

**சில்வாய்ப்பிடி** *šilvāy-p-piḍi,* பெ. (n.) இரு கன்னங்களையும், கை விரல்களால் உள்ளழுத்தி, வாய் திறந்த வண்ணமாயிருக்கும்படி செய்யுந் தண்டனை (வின்.); the punishment of keeping one's mouth open by pressing in the cheeks with fingers.

*[சில்வாய் + பிடி]*

**சில்வாரி** *šilvāri,* பெ. (n.) செவ்வலரி; red oleander (சா.அக.).

**சில்வான்** *šilvāṉ,* பெ. (n.) சில்வானம் பார்க்க; see *šilvāṉam.*

க. சிலவடு

*[சில்வானம் → சில்வான்]*

**சில்வானஞ்சேர்-த்தல்** *šilvāṉañ-jēr-,* செ.கு.வி. (v.i.) வீட்டுப் பொருள்களைப் பிறர் காணா வண்ணம் விற்றுச் சிறுவாடு சேர்த்தல் (இ.வ.); to scrape up small illegitimate earnings by secretly selling house hold things.

*[சில்வானம் + சேர்-,]*

**சில்வானம்**[1] *šilvāṉam,* பெ. (n.) *1.* சில்லறை[3] பார்க்க; see *šillaṟai*[3]. *2.* வீட்டுச் செலவுக்குக் கொடுத்த தொகையில் சிறு தனிச் சொத்தாக மிகுத்து வைக்கும் பணம் (இ.வ.); savings effected from the sum allotted for household expenses.

ம. சில்வானம்; சில்லுவானம், சில்லானம்; க. சிலவான்; து. சில்வான, சிலுவான.

*[சில் + மானம் - சில்மானம் → சில்வானம்; மா + அனம் - மானம் = அளவீடு, அளவு, அளவை, மதிப்பு]*

**சில்வானம்**[2] *šil-vāṉam,* பெ. (n.) சிறிது; that which is small or little, thing of minor importance. "சில்வான பிரயோஜனங்களைப் பற்ற" (ரஹஸ்ய. 49).

*[சில் + மானம் - சில்மானம் → சில்வானம்]*

**சில்வானம்**[3] *šilvāṉam,* பெ. (n.) சிறுதூறல் (இ.வ.); drizzle.

*[சில்' + வானம்]*

**சில்வானம்வில்-தல் (சில்வானம்விற்றல்)** *šilvāṉam-vil-,* 4 செ.கு.வி. (v.i.) சிறுவாடு சேர்த்தற்காக வீட்டுப் பொருள்களைக் கமுக்கமாக விற்றல் (இ.வ.); to sell household things secretly and effect small illegitimate savings.

*[சில்வானம் + வில்-,]*

**சில்விடம்** *šil-viḍam,* பெ. (n.) சிறு பூச்சிகளின் கடிநஞ்சு; poison due to bite of small insects. "சில்விடம தொப்பான்" (பிரபோத. 26:47).

*[சில் + விடம்]*

Skt. viṣa → த. விடம்

**சில** *šila,* பெ. (n.) சின்மையானவை; some, a few. "சிலசொல்ல றேற்றா தவர்" (குறள், 649).

ம. சில; க. கெலவி, கெல; தெ. சிலுபி, சிலுவ; து. கெல, கெலவு, கிக்; கோத. கில்கட்

*[சல் → சில் = சிறியது, துண்டு, சிற்றளவு. சில் → சில்வான் = குட்டி ஓணான். சில் → சின் → சின்னான் = சிறியவன். சில் → சின்மை. சில் → சில. அளவுச் சிறுமை குறித்த சொல் தொகைச் சிறுமையும் குறித்தது (மு.தா. 129)]*

**சிலக்கு** *śilakku,* பெ. (n.) இன்னும் கொஞ்சம் (இ.வ.); something more.

U. silak.

**சிலக்குணம்** *śila-k-kuṇam,* பெ. (n.) திமிங்கிலம் (யாழ்அக.); whale.

**சிலகம்**[1] *śilagam,* பெ. (n.) 1. சட்டுவம் (பிங்.); a kind of ladle. 2. நாவழுத்திப் பிடிக்கும் மாழையிற் செய்த குறடு (பிங்.); metal spatula.

*[சல் → சூல் → சூலம். சூல் = சூலம். சல் → சில் சிலகம் = குத்துவது போன்று இறுக்கிப் பிடிக்குங் கருவி]*

**சிலகம்**[2] *śilagam,* பெ. (n.) சாதிக்காய்; nutmeg (சாஅக.).

**சிலகயம்** *śilagayam,* பெ. (n.) அரத்தத்தை முறிக்குந்தன்மை வாய்ந்த சிவப்புச் சதுரக்கள்ளி; a red variety of square; it destroys the richness of blood (சாஅக.).

**சிலசியம்** *śilaśiyam,* பெ. (n.) கருநெல்லி மரம்; black-barried feather foil (சாஅக.).

மறுவ. உச்சிலிந்தி

**சிலங்கம்**[1] *śilaṅgam,* பெ. (n.) விளாம்பட்டை (வின்.); bark of the wood-apple tree.

**சிலங்கம்**[2] *śilaṅgam,* பெ. (n.) வெள்ளி மரப்பட்டை; lodhra bark (சாஅக.).

**சிலங்கை** *śilaṅgai,* பெ. (n.) சலங்கை; tinny bells used as ornaments.

*[சலங்கை → சிலங்கை (மு.தா.3)]*

**சிலத்திற்கடுகு** *śilattiṟ-kaḍugu,* பெ. (n.) திமிங்கிலம் (யாழ்அக.); whale.

மறுவ. சிலக்குணம்.

**சிலதன்**[1] *śiladaṉ,* பெ. (n.) 1. மருதநிலவாணன் (பிங்.); inhabitant of the agricultural tract. 2. ஏவலாளன்; servant, labourer. "சிலதர் காக்குஞ் சேணுயர் வரைப்பின்" (பெரும்பாண். 324). 3. தூதன்; messenger. "சேறி யாலெனச் சிலத ரோதினார்" (கந்தபு. தெய்வயா. 53).

**சிலதன்**[2] *śiladan,* பெ. (n.) தோழன் (பிங்.) கூட்டாளி; male companion, associate.

**சிலதி** *śiladi,* பெ. (n.) நம்பகத்தன்மை மிக்க தோழி, பெண் பணியாள்; a confident female servant or companion "அங்கொரு சிலதியை" (பெருங். வத்தவ. 14:172).

*[சிலதன் - ஆண்பால்; சிலதி - பெண்பால்]*

**சிலதை** *śiladai,* பெ. (n.) நீண்டு மெலிந்து கரு நிறத்தளாய காமமிக்க பெண்; a tall and lean woman, black in complexion and highly lustful. "பேசலஞ் சிலதை யென்றே" (கொக்கோ. 4:6).

**சிலந்தி**[1] *śilandi,* பெ. (n.) 1. பரு; pimple. 2. சிறு கட்டி; small boil. 3. கட்டி, நச்சுக்கட்டி; abscess, ulcer, venereal boil. 4. நடன முத்திரைக்குரிய ஆண் கையுள் ஒன்று (சிலப். பக். 92,); a hand-pose expressive of the emotions of men.

ம. சிலன்னி; Skt. granthi.

*[சில→சிலந்தி (வேக.) உடம்பில் தலைக்குக் கீழ் எங்கேனும் புறப்படும் கொப்புளம் சிலந்திப்பூச்சியின் உடல் போல் திரண்டிருத்தல் தன்மை பற்றிச் சிலந்தியெனப் பெயர்பெற்றது]*

**சிலந்தி**[2] *śilandi,* பெ. (n.) 1. மரவகை; panicled golden-blossomed pear tree. 2. கருஞ்சிலந்தி; small-leaved golden-blossomed pear tree. 3. சிலந்தியரிசி; edible sedge. 4. கோரை வகை; sedge.

**சிலந்தி**[3] *śilandi,* பெ. (n.) தன் வாயிலுள்ள சுரப்பைக் கொண்டு பூச்சிகளைச் சிக்க வைக்கும் வகையில் வலை பின்னக்கூடியதும் எட்டுக் கால்களை உடையதுமான சிறுபூச்சி; spider. "சிலந்தி யுண்பதோர் குரங்கின்மேல்" (கம்பரா. பஞ்சசேனா1).

ம. சிலந்தி, சிலன்னி; க. செலதி, செலந்தி; தெ. செலதி

*[சில் → சிலந்தி = வட்டமான நூல்வலை யமைக்கும் பூச்சி]*


சிலந்தி

**சிலந்தி**[4] *šilandi,* பெ. (n.) தொண்மணிகளுள் ஒன்றான கோமேதக வகை (தெ.இ.க.தொ. 8. 53); sardonyx.

**சிலந்திக்கடி** *šilandi-k-kaḍi,* பெ. (n.) நச்சுத் தன்மையுள்ள சிலந்திப் பூச்சியாலேற்பட்ட கடி; spider-bite; it is very poisonous and troublesome in nature (சா.அக.).

*[சிலந்தி + கடி]*

**சிலந்திக்கரப்பான்** *šilandi-k-karappāṉ,* பெ. (n.) தோலிலேற்படுங் கரப்பான் புண் வகை (தஞ்.சர.iii,92); ulcerating eruption of the skin.

*[சிலந்தி + கரப்பான்]*

**சிலந்திக்கழலை** *šilandi-k-kaḻalai,* பெ. (n.) உடம்பிலுண்டாகும் மிகு வெப்பத்தினால் முதலிற் பருத்து வீங்கி, வரவரப் பெரிதாகிச் சீழ்ப் பிடித்துக் கட்டியாக மாறுங் கழலை; a sebaceous tumor arising from excess of heat in the body.

*[சிலந்தி + கழலை]*

**சிலந்திக்கூடு** *šilandi-k-kūḍu,* பெ. (n.) பஞ்சினைப்போல் வெண்மையாகவும், மென்மையாகவும் அமைந்ததும், அரத்தப் போக்கினை நிறுத்துந்தன்மை மிக்கதுமான சிலந்தியின் கூடு; the spider-web of a house spider. It is white and soft like cotton and is a useful application for checking the flow of blood (சா.அக.).

மறுவ. கோலான்

*[சிலந்தி + கூடு]*

**சிலந்திக்கொடி** *šilandi-k-koḍi,* பெ. (n.) ஈசுரமூலி; Indian birthwort.

*[சிலந்தி + கொடி]*

**சிலந்திநாயகம்** *šilandi-nāyagam,* பெ. (n.) சொறி, புண்களை நீக்கும் மருந்துவகை (பதார்த்த. 290); a plant as curing cutaneous eruptions.

*[சிலந்தி + நாயகம்]*

**சிலந்திப்பூச்சி** *šilandi-p-pūcci,* பெ. (n.) வாயின் கீழ் வளைந்த, நச்சுத்தன்மை மிக்க கொடுக்கினையுடையதும், கூடுகட்டுந் தன்மையுடையதுமான எட்டுக்காற் பூச்சி; an eight-legged insect known as spider. It has four parts of legs attached fore-parts of the body. mandibles furnished with a curved claw perforated at the extremity like poison fang.

*[சிலந்தி + பூச்சி]*



சிலந்திபூச்சி

**சிலந்திகம்** *šilandigam,* பெ. (n.) வாலுளுவை மரம்; spindle tree (சா.அக.).

**சிலந்திமரம்** *šilandimaram,* பெ. (n.) 1. அத்தி மரவகையுளொன்று; a kind of fig tree. 2. செருந்திமரம்; fire fly (சா.அக.).

*[சிலந்தி + மரம்]*

**சிலந்தியரிசி** *šilandi-y-ariši,* பெ. (n.) 1. பூங்கோரை (வின்.); edible sedge. 2. கோரை வகை (மூ.அ); a kind of weed.

*[சிலந்தி + அரிசி]*

**சிலப்பதிகாரம்** *šilappadigāram,* பெ. (n.) ஐம் பெருங்காப்பியத்துள் பழைமை வாய்ந்ததும் இளங்கோவடிகளால் இயற்றப் பெற்றதும் கோவலன் கண்ணகியின் வரலாற்றைக் கூறுவதுமாகிய ஓர் இலக்கியம்; an ancient historic poem by Iḷaṅgōvaḍigaḷ dealing with the story of Kōvalaṉ and Kaṇṇagi, one of Aimberuṅgāppiyam.

*[சிலம்பு + அதிகாரம்]*

**சிலம்** *šilam,* பெ. (n.) 1. பொதுவகையுப்பு; salt in common. 2. இந்துப்பு; rock-salt (சா.அக.).

**சிலம்பக்காரன்** *šilamba-k-kāraṉ,* பெ. (n.) சிலம்பக்கலை வல்லவன்; person clever in the use of quarterstaff.

ம. சிலம்பி

*[சிலம்பம் + காரன்]*

**சிலம்பக்கூடம்** *šilamba-k-kūḍam,* பெ. (n.) சிலம்பம் பயிலுமிடம் (வின்.); palaestra, fencing school.

*[சிலம்பம் + கூடம்]*

**சிலம்பங்கட்டு-தல்** *šilambaṅ-kaṭṭu-,* 5 செ.கு.வி. (v.i.) சிலம்பக் கலையில் கழி முதலியவற்றை வீசுதல் (வின்.); to brandish quarter-staff in the art of fencing.

*[சிலம்பம் + கட்டு-,]*

**சிலம்பங்காட்டு-தல்** *šilambaṅ-kāṭṭu-,* 5 செ.கு.வி. (v.i.) 1. சிலம்பக்கலை (வித்தை) காட்டுதல்; to brandish staff in fencing. 2. அச்சுறுத்துதல் (இ.வ.); to menace, threaten. 3. செயற்கரிய செயலைச் செய்வது போல் நடித்தல் (இ.வ.); to pretend to be active in the accomplishment of a difficult task.

*[சிலம்பம் + காட்டு-,]*

**சிலம்பப்பயிற்சி** *šilamba-p-payiṟci,* பெ. (n.) சிலம்பாட்டம் பார்க்க; see *šilambāṭṭam* (சா.அக.).

*[சிலம்பம் + பயிற்சி]*

**சிலம்பம்** *šilambam,* பெ. (n.) 1. கழியை இருகையாலும் பிடித்து முன்னும் பின்னும் பக்கவாட்டிலும் சுழற்றித் தாக்கவும் தாக்குதலைத் தடுக்கவும் மேற்கொள்ளும் பயிற்சி (பதார்த்த. 1294); a kind of martial art where fencing is done with a staff. 2. சூழ்ச்சி; trick, stratagem. "சிலம்பத்திற் றிரிந்துற் றிட்டு" (திருப்பு. 1076).

ம. சிலம்பம்

*[சிலம்பு → சிலம்பம் (த. வ. 79)]*

**சிலம்பம்பண்ணு-தல்** *šilambam-paṇṇu-,* 5 செ.கு.வி. (v.i.) 1. சிலம்பமாடு- பார்க்க; see *šilambam-āḍu-.* 2. சிலம்பங்காட்டு- (இ.வ.) பார்க்க; see *šilambaṅ-kāṭṭu-*

*[சிலம்பம் + பண்ணு-,]*

**சிலம்பமாடு-தல்** *šilambam-āḍu-,* 5 செ.கு.வி. (v.i.) சிலம்பம் விளையாடுதல்; to fence, brandish, parry with quarterstaff.

*[சிலம்பம் + ஆடு-,]*

**சிலம்பல்** *šilambal,* பெ. (n.) 1. யாழினோசை (பிங்.); sound of a lute. 2. ஓயாது, வீண் பேச்சுப் பேசுபவ–ன்–ள் (இ.வ.); a vulger chatter box, chatterer.

ம. சிலம்பல்

*[சிலம்பு → சிலம்பல்]*

**சிலம்பவித்தை** *šilamba-vittai,* பெ. (n.) சிலம்பாட்டம் பார்க்க; see *šilambāṭṭam* (சா.அக.).

த. விச்சை; வ. வித்தை

**சிலம்பன்**[1] *šilambaṉ,* பெ. (n.) 1. குறிஞ்சித் தலைவன்; chief of a hilly tract. "அயந்திகழ் சிலம்ப" (ஐங்குறு. 264). 2. முருகன் (பு. வெ. 12, இருபாற்.10, கொளு.); Muruga, as lord of the hilly tract. 3. காவேரியின் புதுவெள்ளம்; the freshet in the river Kāvēri, as in the month the Chittirai. 'சித்திரைச் சிலம்பன்' (இ. வ.).

மறுவ. மலையன், வெற்பன், பொருப்பன்.

ம. சிலம்பன்; Eng. sherha, sherrif['

*[சிலம்பு = மலை. சிலம்பு → சிலம்பன். 'அன்' ஆண்பாலீறு]*

**சிலம்பன்**[2] *šilambaṉ,* பெ. (n.) பழைய காசு (நாணய) வகை (சரவண. பணவிடு, 56); an ancient coin.

*[சிலம்பு → சிலம்பன்]*

**சிலம்பன்**[3] *šilambaṉ,* பெ. (n.) குருவி வகை; babbler.

*[சிலம்பு → சிலம்பன் = ஒலித்துக் கொண்டேயிருக்கும் பறவை]*

தமிழ்நாட்டின் மலைப்பகுதிகளும், புல்வெளிகளிலும், புதர்க்காடுகளிலும் காணப் படும் குருவி வகை, இது உடலமைப்பாலும், வண்ணத்தாலும் பலவகைகளாகக் காணப் படுகின்றன.

**சிலம்பன் வகைகள்**

1. வளைந்த அலகுச் சிலம்பன்
2. வெண் தொண்டைச் சிலம்பன்
3. கருந்தலைச் சிலம்பன்
4. மஞ்சள்கண் சிலம்பன்
5. தவிட்டுச் சிலம்பன்
6. பெரிய சாம்பற் சிலம்பன்

# சிலம்பன் வகைகள்





பெரிய சாம்பல் சிலம்பன்



வளைந்த அலகுச் சிலம்பன்



கருஞ்சிவப்புச் சிலம்பன்



கலகலப்பான் சிலம்பன்



காட்டுச் சிலம்பன்



புள்ளிச் சிலம்பன்



கருந்தலைச் சிலம்பன்



வெண் தொண்டைச் சிலம்பன்

7. கருஞ்சிவப்புச் சிலம்பன்
8. காட்டுச் சிலம்பன்
9. வெண்தலைச் சிலம்பன்
10. கலகலப்பான் சிலம்பன்
11. புள்ளிச் சிலம்பன்

**சிலம்பாட்டம்** *šilambāṭṭam,* பெ. (n.) கம்பை முறைப்படிச் சுழற்றி எதிரிகளிடமிருந்து தற்காத்துக் கொள்வதற்காகவும் தளர்ந்த உடல் இறுகுவதற்காகவும், பசியேற்படுவதற் காகவும் பயிலுங்கலை; an orderly method of rotating the long role either to defend or to offend, it is a tiring exercise by which the body is hardened, appetite is increased (சாஅக.).

*[சிலம்பம் + ஆட்டம்]*


சிலம்பாட்டம்

**சிலம்பாறு** *šilambāṟu,* பெ. (n.) மதுரை மாவட்டத்தில் அழகர்மலையில் உருவாகுஞ் சிற்றாறு; the sacred stream of the Aḻagar hills, in Madurai district. "நிலம்பக வீழ்ந்த சிலம்பாற் றகன்றலை" (சிலப். 11:108).

*[சிலம்பு + ஆறு]*

**சிலம்பி** *šilambi,* பெ. (n.) சிலந்தி; spider. "சிலம்பி வானூல் வலந்த மருங்கில்" (பெரும்பாண். 236).

*[சிலந்தி → சிலம்பி (வே.க.)]*

**சிலம்பிநூல்** *šilambi-nūl,* பெ. (n.) சிலந்திப்பூச்சி நூல்; spider web (சாஅக.).

*[சிலம்பி + நூல்]*

**சிலம்பியாதனம்** *šilambi-y-ādaṉam,* பெ. (n.) ஒக வகையுளொன்று (தத்துவப்.109); yogic posture.

*[சிலம்பு + ஆதனம். ஆசனம் → ஆதனம்]*

**சிலம்பு[1]-தல்** *šilambu-,* 5 செ.கு.வி. (v.i.) 1. ஒலித்தல்; to sound, make a tinkling noise. "சீரார் ஞெகிழஞ் சிலம்ப" (கலித். 90). 2. எதிரொலித்தல்; to echo, resound. "வளநகர் சிலம்பப் பாடி" (அகநா. 22).

ம. சிலம்புக

*[சில் - ஒலிக்குறிப்பு. சில் → சிலம்பு]*

**சிலம்பு[2]** *šilambu-,* பெ. (n.) 1. ஒலி (சூடா.); sound. 2. இரைச்சல்; noise. 3. ஒலியலை எதிர்வு; resonance. 4. வண்டின் மென் முரலொலி; buzz.

ம. சிலம்பு; க. கெலெ; கோண். கிலி; குயி. க்லா, க்லாத்

*[சில் → சிலம்பு]*

**சிலம்பு[3]** *šilambu-,* பெ. (n.) பூசாரிகள் கைச் சிலம்பு; blong hollow ring of brass filled with pebbles and shaken before an idol in worship.

*[சில் → சிலம்பு]*


சிலம்பு

**சிலம்பு[4]** *šilambu-,* பெ. (n.) உள்ளீடு அற்ற பொன்னாலோ வெள்ளியாலோ ஆனதுமான் வளைகூட்டில் பரலிடப்பட்டு ஒலியெழுப்பு வதுமான மகளிர் காலணி; a kind of tinkling hollow anklet made of gold, silver, copper, etc. and filled with granules for tinkling worn by women in former times. "ஒன்றின வோவவ ளஞ்சிலம் படியே" (ஐங்குறு. 389.)

ம. சிலம்பு

*[சில் → சிலம்பு]*

**சிலம்பு**[5] *šilambu,* பெ. (n.) *1. மலை;* mountain. "நளியிருஞ் சிலம்பிற் சீறூர்" *(புறநா. 143:10.). 2. பக்கமலை;* mountain slope. "மால்வரைச் சிலம்பின்" *(பெரும்பாண். 330).* 3. *மலை, முழைஞ்சு;* mountain cave, cavern. "சிலம்பிற் சிலம்பிசை யோவாது" *(பரிபா. 15 : 44).*

மறுவ. வெற்பு, பொருப்பு

*[சில் → சிலை. சிலை - கல், மலை, கரடு. சிலை → சிலைம்பு → சிலம்பு]*

**சிலம்புகழிநோன்பு** *šilambu-kaḻi-nōṉbu,* பெ. (n.) *மணவினைக்குமுன் பெண்ணிற்கு நடத்தும் சிலம்புகழற்றலாகிய சடங்கு வகை (ஐங்குறு.399,உரை.);* ancient ceremony preliminary to marriage, probably consisting in removing the anklets of a bride.

*[சிலம்பு + கழி + நோன்பு]*

**சிலம்புகூறல்** *šilambu-kūṟal,* பெ. (n.) கோவலன் *சிலம்புவிற்ற கதை (யாழ்.அக.);* story of Kōvalaṉ selling the anklet.

*[சிலம்பு + கூறல்]*

**சிலம்புப்பாட்டு** *šilambu-p-pāṭṭu,* பெ. (n.) *சிலப்பதிகாரக் கதையடிப்படையில் காளியைப் புகழ்ந்து பாடும் பாட்டு;* a song in praise of Kāḷi based on the story of Silappadigāram *(சேரநா.).*

ம. சிலம்பு பாட்டு

*[சிலம்பு + பாட்டு]*

**சிலம்புரி** *šilamburi,* பெ. (n.) *அயல்நாட்டுத் துணி வகை (இ.வ.);* a kind of foreign long-cloth.

*[சிலம்பி + புரி. புரி = நூல்]*

சிலந்திநூல் போல் மெல்லிய இழையால் நெய்யப்பட்ட துகில்.

**சிலம்பொலி** *šilamboli,* பெ. (n.) *சிலம்பின் ஓசை;* tinkling sound of an anklet.

ம. சிலம்பொலி

*[சிலம்பு + ஒலி]*

**சிலமம்** *šilamam,* பெ. (n.) *சிலம்பம்-2 பார்க்க;* see *šilambam-*[2]. 'சிலமத்திலே காரியம் பார்க்க' *(யாழ்ப்.).*

*[சிலம்பம் → சிலமம்]*

**சிலமன்** *šilamaṉ,* பெ. (n.) *சாடை;* indication by noise, stir, etc. 'அவர் வந்த சிலமனில்லை' *(யாழ்ப்.).*

*[சிலம்பு → சிலமன்]*

**சிலமான்கல்** *šilamāṉ-kal,* பெ. (n.) விலையுயர்ந்த கல்வகையுளொன்று (M.M.); agate, a variegated form of silica.

U. sulaimāṉ.

**சிலமி**[1] *šilami,* பெ. (n.) *1. சிலம்பக்காரன் (சங்.அக.);* person clever in the use of quarter-staff. *2. அடாவடிக்காரன் (யாழ்ப்);* bully, blusterer.

*[சிலமம் → சிலமி]*

**சிலமி**[2]**-த்தல்** *šilami-,* 4 செ.குன்றாவி. (v.t) *1. சிலம்பம் பண்ணுதல் (யாழ்.அக.);* to fence with the quarter-staff. *2. அச்சுறுத்துதல்;* threaten.

*[சிலம்பம் = கழி கொண்டு சண்டை யிடுதல். சிலம்பம் → சிலமம் → சிலமி-.]*

சண்டையிடுதற் பொருள் அச்சுறுத்தலுக்கும் புடை பெயர்ந்தது.

**சிலமூலகாரம்** *šilamūlakāram,* பெ. (n.) *சிலைமூலகாரம் பார்க்க;* see *šilai-mūlagāram (சா.அக.).*

*[சிலைமூலகாரம் → சிலமூலகாரம்]*

**சிலர்** *šilar,* பெ. (n.) *1. சிலபேர்;* some, a few persons. opp. to palar. "நோற்பார் சிலர் பலர் நோலாதவர்" *(குறள், 270).*

ம. சிலர்; க. கெலபர்

*[சில் → சில + அர்]*

**சிலவங்கம்** *šilavaṅgam,* பெ. (n.) மீனெலும்பு *(யாழ்.அக.);* fish bone.

Skt. gila + vaṅga

**சிலவர்**[1] *šilavar,* பெ. (n.) *சிலர் பார்க்க;* see *šilar.* "அழுதனர் சிலவர்" *(கம்பரா. திருவடி. 4).*

க. கெலபர்

*[சில + அர்]*

**சிலவர்**[2] *šilavar,* பெ. (n.) *1. பாலைநில மக்கள் (திவா.);* people of the desert tract. *2. பாலை நிலத் தலைவர் (திவா.);* chiefs of the desert tract. *3. வேடர் (அக.நி.);* hunters.

*[சிலர் → சிலவர்]*

**சிலவிரிஞ்சம்** *šilavirińjam*, பெ. (n.) *தாமரை மலர்;* lotus flower *(சா.அக.).*

**சிலவெதுப்பு** *šila-veduppu*, பெ. (n.) *மாட்டு நோய்வகை (மாட்டுவா. 156);* a disease of cattle.

**சிலனி** *šilani*, பெ. (n.) *ஊமத்தை வகையுளொன்று;* a kind of datura burdock *(சா.அக.).*

**சிலாகு** *šilāgu*, பெ. (n.) *1. இரும்பூசி;* needle. *2. அறுவை மருத்துவர் பயன்படுத்தும் கருவி;* surgeon's probe *(சா.அக.).*

**சிலாகை**[1] *šilāgai*, பெ. (n.) *சலாகை (வின்.) பார்க்க;* see *šalāgai.*

**சிலாகை**[2] *šilāgai*, பெ. (n.) *1. செம்பாறைக்கல், தேக்கல்;* gravel stone. *2. தொட்டிச்செய்ந்நஞ்சு (சங்.அக.);* a mineral poison. *3. நீலக்கல் (யாழ்.அக.);* a blue stone.

**சிலாங்கன்** *šilāṅgan*, பெ. (n.) *விளாம்பட்டை;* the bark of wood apple tree *(சா.அக.).*

**சிலாசத்து** *šilāšattu*, பெ. (n.) *1. எழுவகை துணைத் தாதுக்களில் மாழை வகை (பதார்த்த. 1130);* an inferior mineral, one of seven upa-datu. *2. கோடைக் காலத்து மிகு வெப்பத்தின் விளைவாக மலைப் பகுதிகளிலிருந்து உருகி வழியும் இரும்பு கலந்த கல்மதம்;* a bituminous substance containing from exuded by rocks during summer *(சா.அக.). 3. கனிக்கல் வகை;* foliated crystallized gypsum.

*[சிலை → கல், கற் குன்று, மலை. சிலை → சிலா. சிலா + சத்து]*

**சிலாசம்** *šilāšam*, பெ. (n.) *1. இரும்பு செம்பு முதலிய மாழை;* metal such as iron, copper etc., *2. மலைபடு பொருள்;* that which is procured from a mountain *(சா.அக.).*

**சிலாசாசனம்** *šilā-šāšanam*, பெ. (n.) *கொடை (தானம்) முதலியவற்றைக் குறித்து வரையப் படும் கல்வெட்டு;* stone inscription.

**சிலாசாதனம்** *šilā-šātanam*, பெ. (n.) *சிலாசாசனம் பார்க்க;* see *šilā-šāsanam.*

**சிலாசாரம்** *šilā-šāram*, பெ. (n.) *கல்லைப் போன்ற வன்மையுடைய இரும்பு (மூ.அ.);* iron, a hard as rock.

மறுவ. *சிலாத்துமசம்*

**சிலாசிலாவாக** *šilā-šilā-v-āga*, வி.எ. (adv.) *சிறிது சிறிதாக;* little by little. *'தான் வாங்கிய கடனைச் சிலாசிலாவாகக் கொடுக்கிறான்' (சென்னை).*

மறுவ. கொஞ்சங் கொஞ்சமாக

*[சில் → சில → சிலா. சிலா + ஆக]*

**சிலாஞ்சனம்** *šilāñjanam*, பெ. (n.) *நீலமணி வகை (வின்.);* a blue stone, lapis - lazuli.

**சிலாடா** *šilāḍa*, பெ. (n.) *நெல்லிக்காய்;* Indian gooseberry *(சா.அக.).*

**சிலாத்தஞ்சனம்** *šilāttañjanam*, பெ. (n.) *கட்களிம்பு;* eye-ointment *(சா.அக.).*

**சிலாத்திக்குமரி** *šiladi-k-kumari*, பெ. (n.) *கௌரி வைப்பு நஞ்சு;* a prepared arsenic *(சா.அக.).*

**சிலாத்துமசம்** *šilattumašam*, பெ. (n.) *(கல்லிற் பிறந்த தாது) இரும்பு (யாழ்.அக.);* iron, as born of stone.

*சிலாசாரம் பார்க்க*

**சிலாதரன்** *šilātaran*, பெ. (n.) *சிலாதன் பார்க்க;* see *šilādan. "சிலாதரன் புதல்வன் சொல்வான்" (சிவரக. வில்வவன. 30).*

**சிலாதலம்** *šilādalam*, பெ. (n.) *1. பாறை;* rock. *"சிலாதலத்தின் மேலிருந்த மந்தி" (திவ். இயற். 3, 58). 2. கற்பாவிய இருக்கைமேடை;* a raised stone paved seat. *"இலகொளிச் சிலாதல மேலிருந் தருளி" (சிலப். 15:154).*

**சிலாதன்** *šilātan*, பெ. (n.) *நந்திதேவரின் தந்தை;* the father of Nandi-dēvar. *"தேக்கு மன்பிற் சிலாதனற் செம்மலை" (கந்தபு. அயனைச் சிறை நீக்கு. 8).*

**சிலாதைலம்** *šilā-tailam*, பெ. (n.) *பாறையில் வடியும் மண் நெய்மம்;* bitumen, as exuding from rocks.

*[சிலை + தைலம். சிலை → சிலா]*

**சிலாந்தி** *šilāndi,* பெ. (n.) *சீந்தில் (மலை.);* gulancha.

Skt. jivanti

**சிலாந்திகம்** *šilāndigam,* பெ. (n.) *கருஞ்சிலந்தி மரம்;* a kind of pear tree *(சா.அக.).*

**சிலாநஞ்சு** *šilānañju,* பெ. (n.) *கன்மதம் (யாழ்.அக.);* rock-alum.

*[சிலை → சிலா. சிலா + நஞ்சு]*

**சிலாநாகக்கல்** *šilā-nāga-k-kal,* பெ. (n.) *சூடாலைக் கல் (வின்.);* a kind of stone.

*[சிலை → சிலா. சிலா + நாகக்கல்]*

**சிலாநாகம்** *šilā-nāgam,* பெ. (n.) சிலாநாகக்கல் (வின்.) பார்க்க; see *šilā-nāga-k-kal.*

*[சிலை → சிலா. சிலா + நாகம்]*

**சிலாப்பி** *šilāppi,* பெ. (n.) *கழப்புவோன் (யாழ்ப்.);* idler, one who whiles away his time in idleness.

*[சிலாப்பு → சிலாப்பி]*

**சிலாப்பு-தல்** *šilāppu-,* 5 செ.கு.வி. (v.i.) *1. கழப்புதல் (யாழ்ப்.);* to idle away one's time. *2. நடித்தல்;* to profess, pretend.

*[சிலம்பு → சிலப்பு → சிலாப்பு-,]*

**சிலாப்புட்டி** *šilā-p-putti,* பெ. (n.) *நீரிறைக்கப் பயன்படும் தோற்பை அல்லது இறைகூடை (இராட்.);* leather bag or bucket for baling water.

*[சலம் + புட்டி → சலப்புட்டி → சிலாப்புட்டி]*

**சிலாபம்** *šilābam,* பெ. (n.) *முத்துக் குளிக்கை (வின்.);* pearl fishery.

ம. சிலாபம்

*[சலாபம் → சிலாபம்]*

**சிலாபேசி** *šilā-pēši,* பெ. (n.) *சிவப்பு நெருஞ்சி;* red cow-thorn.

**சிலாபேதி** *šilābēdi,* பெ. (n.) *1. செப்பு;* trailing indigo. *2. கலப்பு வெள்ளி;* inferior silver *(சா.அக.).*

**சிலாம்பு** *šilāmbu,* பெ. (n.) *1. சிறாம்பு (இ.வ.);* splinter. *2. கூடை முடைவதற்குரிய மூங்கிற் சிம்பு;* splint.

மறுவ. சிலும்பு; சிராய்

*[சிலும்பு → சிலம்பு → சிலாம்பு]*

**சிலாம்பேதம்** *šilāmbēdam,* பெ. (n.) *1. சிறு பூனைக்காலி;* common cowich, cowhage. *2. கல்லுருவி;* gravel plant *(சா.அக.).*

**சிலாமணி**[1] *šilāmaṇi,* பெ. (n.) *செல்லக்கூடியது;* that which is in currency.

U. calāoni.

*[செலாவணி → சிலாவணி → சிலாமணி]*

**சிலாமணி**[2] *šilāmaṇi,* பெ. (n.) *கனிக்கல் வகை (வின்.);* a variety of gypsum.

*[சிலை → சிலா. சிலா + மணி]*

**சிலாமதம்** *šilā-madam,* பெ. (n.) *1. பிறவி வைப்பு நஞ்சு வகையுளொன்று;* a kind of mineral poison. *2. கன்மதம் (சங்.அக.);* rock alum.

*[சிலை → சிலா. சிலா + மதம்]*

**சிலாமுகம்** *šilā-mugam,* பெ. (n.) *வண்டு (பிங்.);* bee.

*[சில் → சிலா + முகம். துளையுடைய கையை முகத்திற் கொண்ட வண்டு. சுல் - துளைத்தல் கருத்து வேர்]*

**சிலாமேனி** *šilā-mēṉi,* பெ. (n.) *திருமால் உருவமாகக் கொண்டு பூசித்தற்குரிய கண்டகிச் சிலை;* black fossil ammonite worshipped as a form of Tirumāl chiefly found in the silver Gandak.

**சிலார்**[1] *šilār,* பெ. (n.) *1. சச்சரவு, பூசல், சண்டை;* quarrel. *2. குழப்பம் (வின்.);* confusion. *3. தொல்லை;* trouble.

**சிலார்**[2] *šilār,* பெ. (n.) *நன்கொடை;* reward, recompense.

U. sila.

**சிலாரு** *šilāru,* பெ. (n.) *குழப்பம் (யாழ்.அக.);* confusion.

**சிலாலம்** *šilālam,* பெ. (n.) *சிறுநீரகத்தில் உண்டாகும் கல்லை நீக்கச் செய்யும் அறுவை மருத்துவம்;* the operation of cutting into the bladder in order to extract a calculus of stone *(சா.அக.).*

**சிலாவி**[1] *šilāvi,* பெ. (n.) *உத்தரத்துக்கு மேல் கூரையைத் தாங்குவதற்கான வளைவு (C.E.M);* collar-piece.

**சிலாவி**[2] *šilāvi,* பெ. (n.) *சிலாவிந்து பார்க்க;* see *šilā-vindu.*

**சிலாவி**[3] *šilāvi,* பெ. (n.) *சிற்பி;* artisan.

Skt. šilpin

**சிலாவி**[4] *šilāvi,* பெ. (n.). *கட்டடவுறுப்பு வகை (இ.வ.);* a part of a building.

**சிலாவிந்து** *šilāvindu,* பெ. (n.) *கல்நார் (யாழ்.அக.);* asbestos.

Skt. šilābindu

**சிலாவு**[1]**-தல்** *šilāvu-,* 5 செ.கு.வி. (v.i.) *சுழலுதல் (வின்.);* to whirl, revolve.

*[சலவு → சலாவு → சிலாவு-,]*

**சிலாவு**[2]**-தல்** *šilāvu-,* 5 செ.கு.வி. (v.i.) *வட்டமாய் வார்த்தல் (இ.வ.);* to pour circularly.

*[சலவு → சலாவு → சிலாவு-,]*

**சிலிசிமம்** *šili-šimam,* பெ. (n.) *சிறிய மீன்;* a small fish *(சா.அக.).*

**சிலிட்டம்** *šiliṭṭam,* பெ. (n.) *1.* செறிவு *(தண்டி. 15; உரை.);* compactness. *2. மணிச்சுருக்கம்;* terseness. *3.* இரட்டுற மொழிதலுளொன்று; that which admits of two or more meanings. சிலிட்ட வுருவகம்.

Skt. šlisṭa

*[சில் = நெருக்கம். சில் → சிலிட்டம்]*

**சிலிந்தியரிசி** *šilindi-y-arišì,* பெ. (n.) சிலந்தியரிசி *(சங்.அக.)* பார்க்க; see *šilandi-y-arišì.*

*[சிலந்தியரிசி → சிலிந்தியரிசி]*

**சிலிபதம்** *šilipadam,* பெ. (n.) *ஆனைக்கால் நோய்;* elephantiasis *(சா.அக.).*

**சிலிம்பி** *šilimbi,* பெ. (n.) *கருஞ்சிலந்தி மர வகையுளொன்று;* a kind of pear tree *(சா.அக.).*

*[சிலம்பி → சிலிம்பி]*

**சிலியாக்கை** *šili-y-ākkai,* பெ. (n.) *சிலியானை பார்க்க;* see *šili-y-āṉai (சா.அக.).*

**சிலியானை** *šili-y-āṉai,* பெ. (n.) *முடக்கொற்றான் (மலை.);* balloon vine.

**சிலிர்**[1]**-த்தல்** *šilir-,* 4 செ.கு.வி. (v.i.) *1. தளிர்த்தல் (திவா.);* to sprout, shoot. *2. உடல் புல்லரித்தல்;* to get the goose-skin, from intense emotion.

E: shiver

*[உல்லரி = தளிர். உல்லரி → (உலிர்) → இலிர். இலிர்த்தல் = தளர்த்தல். இலிர் → சிலிர்]*

**சிலிர்**[2]**-த்தல்** *šilir-,* 4 செ.குன்றாவி. (v.t.) *மயிர் கூச்செறிதல்;* to bristle, as the hair on the body. "மெய்ம்மயிர் சிலிர்த்த தன்றே" *(கம்பரா. மிதிலை. 98).*

*[இலிர் → சிலிர்]*

**சிலிர்**[3]**-த்தல்** *šilir-,* 4 செ.கு.வி. (v.i.) *சில்லிடுதல் (வின்.);* to be chilled, to run cold,as blood.

E. chill

*[சில் → சிலிர்-,]*

**சிலிர்**[4] *šilir-,* பெ. (n.) *மரவகையுளொன்று (தொல். எழுத்து. 363, உரை.);* a kind of tree.

**சிலிர்சிலிர்-த்தல்** *šilir-šilir-,* 4 செ.கு.வி. (v.i.) *மெய்சிலிர்த்தல்;* to get the goose-skin, from intense emotion. "திருமேனி திகழநோக்கிச் சிலிர்சிலிர்த்து" *(திருவாச. 27, 8.).*

*[சிலிர் → சிலிர்சிலிர்-,]*

**சிலிர்ப்பு** *šilirppu,* பெ. (n.) *குளிராலோ அச்சத்தாலோ மயிர் குத்திட்டு நிற்றல்;* bristiling of the hair occasioned by cold or fear *(சா.அக.).*

*[சில் → சிலிர் → சிலிர்ப்பு]*

**சிலிரிடல்** *šiliriḍal,* பெ. (n.) *அச்சத்தினால் உடம்பு குளிர்கை;* becoming chill through fear *(சா.அக.).*

*[சில் → சிலிர் + இடல்]*

**சிலீபதம்** *šilīpadam,* பெ. (n.) *யானைக்கால் நோய் (யாழ்.அக.);* elephantiasis.

**சிலீமுகக்கை** *šilīmuga-k-kai,* பெ. (n.) *பெரு விரலின் உகிர் நுனியினைச் சுட்டு விரலின் முன்வரை ஊன்றி, ஏனைய விரல்களின் உகிர் நுனிகளை உள்ளங்கையிலூன்றும் முத்திரை வகை (பரத. பாவ. 27);* hand-pose in which the tip of the thumb touches the first line of the

forefinger and the tips of the other fingers touch the palm.

**சிலீமுகம்** *šilīmugam,* பெ. (n.) 1. அம்பு; arrow. "சிலையிது சிலீமுகங்க ளிவை" (பாரத. திரௌ. 31). 2. வண்டு (பிங்.); bee. 3. முலைக்கண் (பிங்.); nipple of woman's breast. 4. போர் (யாழ். அக.); battle, fight.

**சிலீர்சிலீரெனல்** *šilīr-šilīr-enal,* பெ. (n.) சிலீரெனல் பார்க்க; see *šilīr-enal.* "ரோம குச்சு நிறைந்து சிலீர் சிலீரென" (திருப்பு. 296).

[சிலீர் + சிலீர் + எனல்]

**சிலீரிடு-தல்** *šilīridu-,* 20 செகுவி. (v.i.) குளிர்ந்து போதல்; to become chill.

[சில்லெனல் = குளிர்தல். சில் → சிலிர் → சிலீர் + இடு-,]

**சிலீரெனல்** *šilīr-enal,* பெ. (n.) 1. குளிரா லுண்டாம் உணர்ச்சிக் குறிப்பு; onom. expr. of being benumbed with cold, being chill. 2. மகிழ்ச்சிக் குறிப்பு ; onom. expr. of getting the goose-skin. "மெய்யுஞ் சிலீரென்ன" (பணவிடு. 324).

[சில் → சிலிர் → சிலீர் + எனல்]

**சிலு¹-த்தல்** *silu-,* 4 செகுவி. (v.i.) 1. பதமாதல்; to be properly boiled, as rice. "செவ்வித் தினையரிசியால் ஆக்கின சிலுத்த சோற்றை" (பெரும்பாண். 168, உரை). 2. சோறு பதனழிதல் (தஞ்சை.); to be spoiled, as cooked rice. 3. சோறளிதல் (யாழ்ப்.); to overboil, as rice. 4. கனிதல் (யாழ்ப்.); to ripen as fruits. 5. சினத்தல் (இ.வ.); to get angry. 6. விள்ளுதல் (இ.வ.); to open split. 7. குலுங்கக் காய்த்தல் (வின்.); to bear fruit in abundance, as a tree.

[சில் → சிலு-,]

**சிலு²-த்தல்** *šilu-,* 4 செ.குன்றாவி. (v.t.) சிறிது சிறிதாய்ச் சொரிதல் (வின்.); to pour in small quantities, as grain; to pour in drops, as fluid.

[சில் → சிலு-,]

**சிலுக்கன்** *šilukkan,* பெ. (n.) தொந்தரை செய்பவன் (இ.வ.); troublesome or quarrelsome man.

ம. சிலுகன்

[சிலுகு → சிலுக்கு → சிலுக்கன்]

**சிலுக்கி** *šilukki,* பெ. (n.) வல்லாரை; Indian penny wort (சா.அக.).

**சிலுக்கு¹-தல்** *šilukku-,* செ.கு.வி. (v.i.) சிக்கு¹-தல் பார்க்க; see *šikku-.*

க. சிலுகு, சிலிகு, சிக்கு

[இல் → இல்லி = பொள்ளல், துளை. இல் → சில் → சில்கு → சிலுக்கு = துளையுள் புகுதல், மாட்டுதல், சிக்குப்படுதல்]

**சிலுக்கு²-தல்** *šilukku-,* 5 செ.கு.வி. (v.i.) பகட்டுதல்; to make a display. "செய்யுள் பலகற்றுச் சிலுக்கி யிறுமாந்து" (பஞ்ச. திருமுக 884).

[சில் → சிலு → சிலுகு → சிலுக்கு-,]

**சிலுக்கு³** *šilukku,* பெ. (n.) 1. இரும்பு வளையம் இரும்பு மோதிரம் (வின்.); iron staple, iron-ring. 2. வாள் முதலியவற்றின் பல் (வின்.); tooth of a saw, barb of an arrow. 3. சிலும்பு (வின்.); splint or fibre rising on a smooth surface of wood. 4. வெட்டிய சிறுதுண்டு (வின்); chipping, cutting. 5. சிலுக்கு வெட்டு (இ. வ.) பார்க்க; see *šilukku-vettu.*

[கல் → சில் = துண்டு. வட்டம், வட்டப் பொருள். சில் → சிலுக்கு = வெட்டின துண்டு]

**சிலுக்கு⁴** *šilukku,* பெ. (n.) 1. தொந்தரவு (வின்.); trouble. 2. சண்டை; quarrel.

க. சிலுகு

[சிலுகு → சிலுக்கு]

**சிலுக்குவெட்டு** *šilukku-vettu,* பெ. (n.) சிறு காயம் (வின்.); slight notch, gash or wound (சா.அக.).

[சிலுக்கு + வெட்டு]

**சிலுகன்** *šilugan,* பெ. (n.) சிலுக்கன் (யாழ்.அக.) பார்க்க; see *šilukkan.*

[சிலுகு → சிலுக்கன் → சிலுகன்]

**சிலுகி** *šilugi,* பெ. (n.) கலகக்காரி (வின்.); quarrelsome woman.

[சிலுகன் → சிலுகி]

**சிலுகிடு-தல்** *šilugiḍu-*, 20 செ.குவி. (v.i.) 1. நிலை குலைதல்; to become disorderly, confused. "ஸம்ஸாரம் . . . சிலுகிடாதபடி . . . வேலியிட்டு வர" (குருபரம். 151, ஆறா.). 2. சண்டையிடுதல்; to quarrel. "சிலுகிடுகையே . . . ஸுவபாவமான. . ஸ்திரீகள்" (ஈடு, 6.7:4, ஜீ). 3. கூச்சலிடுதல் (ஈடு. 1,8,5); to raise a hue and cry.

*[சிலுகு + இடு-,]*

**சிலுகு**[1] *šilugu*, 5 செ.குவி. (v.i.) 1. துன்பம் (பிங்.); trouble, affliction. 2. குழப்பம்; perplexity. "அறச்சிலு குடைத்து நின்றிற முரைக்கின்" (உத்தரரா. தோத்திர. 22). 3. சண்டை (ஈடு, 6:7:4, ஜீ); quarrel. 4. கூச்சல்; hue and cry. "கள்ளனென்று சிலுகிட்ட வாறே" (ஈடு, 1:8:5). 5. குறும்பு (இ.வ.); mischief. 6. தடை; obstacle. "கன்மலோகச் சிலுகும்" (கந்தரந். 47). 7. தோல்வி (வின்.); failure.

ம., க., தெ. சிலுகு

**சிலுகு**[2] *šilugu*, பெ. (n.) சிலுகுபாக்கி பார்க்க; see *šilugu-pākki*.

தெ. சிலுகு

**சிலுகுசிலுகெனல்** *šilugu-silugenal*, பெ. (n.) 1. விரைவுக்குறிப்பு (யாழ்ப்.); onom. expr. of rapidity. 2. இடைவிடாது பேசுதற்குறிப்பு; garrulousness. "சிலுகுசிலுகென்னும் ஸ்திரீகள்" (ஈடு, 6:7:4).

*[சிலுகு + சிலுகு + எனல்]*

**சிலுகுபாக்கி** *šilugu-pākki*, பெ. (n.) கையிருப்பு (C.G.); balance on hand.

*[சிலுகு + பாக்கி]*

**சிலுகை** *šilugai*, பெ. (n.) கஞ்சாக்குடுக்கை; bowl for smooking gañja.

**சிலுசிலு-த்தல்** *šilu-šilu-*, 4 செ.கு.வி. (v.i.) 1. ஒலித்தல் (யாழ்ப்.); to sound, as in frying. 2. படபடவென்று பேசுதல்; to rattle away, talk without restraint. "சிற்றுணர்வோ ரென்றுஞ் சிலுசிலுப்பர்" (நீதிவெண். 35). 3. சினத்தல் (இ.வ.); to get angry. 4. சுறீரென்று ஒலித்தல் (வின்.); to make a hissing noise, as water in contact with a burning wick. 5. தூறுதல் (வின்.); to rain gently, drizzle. 6. சுரக்குளிர் வருதல்; to feel chill. 7. குளிர்ந்திருத்தல்; to be cool. 8. மயிர்க் கூச்செறிதல்; bristling (சா.அக.).

**சிலுசிலுப்பான்** *šilu-šiluppāṉ*, பெ. (n.) அம்மை நோய் வகை (யாழ்.அக.); a kind of small pox.

*[சிலுசிலு → சிலுசிலுப்பான்]*

**சிலுசிலுப்பு** *šilu-šiluppu*, பெ. (n.) 1. குளிர்ச்சி; cold, chill. 2. சிறுசினம் (இ.வ.); querulousness. 3. குறும்பு (இ.வ.); mischief.

*[சிலுசிலு → சிலுசிலுப்பு]*

**சிலுசிலெனல்** *šilu-šileṉal*, பெ. (n.) 1. ஒலிக் குறிப்பு வகை (யாழ்ப்.); onom. expr. of chattering, crackling. 2. குளிரால் நடுங்குதற் குறிப்பு; shivering, shaking with cold.

*[சிலுசிலு + எனல்]*

**சிலுநீர்** *šilu-nīr* பெ. (n.) இலையில் தங்கி விழும் மழைத்துளி (யாழ்.அக.); rain drop dripping from leaves.

*[சில் → சிலு + நீர்]*

**சிலுப்பட்டை** *šiluppaṭṭai*, பெ. (n.) 1. அலப்புகிறவன் (இ.வ.); chatterbox, applied especially to children. 2. குறும்பு செய்யுஞ் சிறுவன்; mischievous brat.

தெ. சிலிபி.

*[சிலு + பட்டை]*

**சிலுப்பல்** *šiluppal*, பெ. (n.) சிலும்பல் (வின்.); roughness, as of a surface.

*[சிலும்பு → சிலும்பல்; சிலும்பல் → சிலுப்பல்]*

**சிலுப்பா** *šiluppā*, பெ. (n.) 1. தொங்கும் பக்கக் குடுமி; side locks on the temples, especially of boys and young men. 2. கத்தரித்துக்கொண்ட தலைமயிர் (யாழ்ப்.); cropped hair.

U. zulf.

**சிலுப்பிக்குடல்** *šiluppikkuḍal*, பெ. (n.) மணிக்குடலின் ஒரு பகுதி; a part of the small intestines.

*[சிலுப்பு → சிலுப்பி + குடல்]*

**சிலுப்பு**[1]**-தல்** *šiluppu*, 5 செ.குன்றாவி. (v.t.) 1. மயிர் நெறிக்கச் செய்தல் (வின்.); to bristle,

erect the hair, raise the quills, as a porcupine, to dishevel. 2. சுழற்றுதல்; to whirl round. "ஒரு செண்டு சிலுப்பி" (திவ்.பெரியதி. 10:8:2) 3. அசைத்தல்; to shake, as one's head in disdain or displeasure. ஏன் தலையைச் சிலுப்புகிறாய்? 4. தயிர்கடைதல் (உ.வ.); to churn. 5. கலக்குதல் (வின்.); to stir, agitate.

[சில் → சிலு → சிலுப்பு]

**சிலுப்பு**[2] *šiluppu,* பெ. (n.) 1. சினங் காட்டுகை; show of anger. 'இவன் உம்முடைய சிலுப்புக் கெல்லாம் அஞ்சுபவனல்லன்'. 2. அடங்கா நடை (இ.வ.); unruly behaviour.

[சில் → சிலு → சிலுப்பு]

**சிலும்பல்** *šilumbal,* பெ. (n.) 1. சிலிர்த்திருக்கை; roughness, shagginess, as the body, of bear dog. 2. சீலை முதலியவற்றின் கரடு; uneveness, as of cloth, uneveness in thatching, matting or hedging. 3. துணி முதலியவற்றின் பீறல்; tear, as in garment.

[சிலு → சிலுப்பு → சிலுப்பல் → சிலும்பல்]

**சிலும்பலி** *šilumbali,* பெ. (n.) அழகற்ற, அருவருக்கத்தக்க உருவினள் (இ.வ.); ugly woman.

[சிலுப்பல் → சிலும்பல் → சிலும்பலி]

**சிலும்பி** *šilumbi,* பெ. (n.) கஞ்சாக் குடிக்கும் குழாய்; pipe for smoking bhang.

U. cilm.




**சிலும்பு**[1]**-தல்** *šilumbu-,* 5 செ.கு.வி. (v.i.) 1. மயிர் முதலியன சிலிர்த்தல்; to stand on end, as man's hair, porcupine's quill, etc., "உன்னரு மயிர் சிலும்ப" (திருவாலவா. 27:39). 2. கட்டை முதலியவற்றில் தும்பு முதலியன வெளிப் பட்டு நிற்றல்; to have an uneven surface by the rise of splinters, fibres etc. 'கட்டை சிலும்பி யிருக்கிறது' (உ. வ.). 3. பெருகி வருதல்; to flow out, gush out. "மார்பங் குருதி சிலும்பிட" (உபதேசகா. அயமுகி. 71). 4. ஒலித்தல் (சூடா.); to sound. 5. கலங்குதல் (வின்.); to be agitated, excited; to be shaken. 6. அசைதல்; to move restively. 'மாடு சிலும்புகிறது' (உ. வ.).

[சில் → சிலு → சிலுப்பு → சிலும்பு-,]

**சிலும்பு**[2] *šilumbu,* பெ. (n.) மரச்சிறாம்பு; small splinter or splint rising on the smooth surface of wood.

**சிலும்பு**[3] *šilumbu,* பெ. (n.) களிம்பு (வின்.); verdigris.

க. கிலுபு; தெ. சிலுமு; பட. கிலும்பு

**சிலும்பு**[4] *šilumbu,* பெ. (n.) சுருட்டு வகை; hookha. "பீடி சிலும்பு குடாக்கும் பிடிப்பார்கள்" (மதி.க. ii, 116).

**சிலும்பு**[5] *šilumbu,* பெ. (n.) மீன் முதுகிலுள்ள துடுப்பு போன்ற முள்ளெலும்பு; the spinal portion of the dorsal in the fish (சா.அக.).

**சிலுவட்டை** *šiluvaṭṭai,* பெ. (n.) சிறுமையான-வன்-வள்-து; anything small, a little creature, an insignificant person or thing. 'சிலு வட்டைகளோடு சேராதே' (இ. வ.).

[சில் → சிலு + அட்டை]

**சிலுவணி** *šilu-vaṇi,* பெ. (n.) காதணி வகையு ளொன்று (மீனவ.); a kind of ear-ornament.

[சில் → சிலு + அணி]

**சிலுவல்** *šiluval,* பெ. (n.) 1. கந்தை (யாழ்ப்.); rags, tatters. 2. எளிமை (யாழ்ப்.); poorness, thinness. 3. அழகின்மை (யாழ்ப்.); ugliness. 4. ஒழுங்கின்மை (யாழ்.அக.); disorderliness. 5. மதிப்புரவின்மை (யாழ்.அக.); want of decorum, 6. தகுதியின்மை; impropriety. 7. ஒழுங்கற்றவள் (யாழ்ப்.); slut.

[சில் → சிலு → சிலுவல்]

**சிலுவலி** *šiluvali,* பெ. (n.) *இழிமகள் (யாழ்ப்.);* slut.

*[சிலுவல் → சிலுவலி]*

**சிலுவாணம்** *šiluvāṇam,* பெ. (n.). *சில்வானம்*[1]*-2* (C.G.) *பார்க்க;* see *silvāṉam*[1]*, -2.*

*[சில்வானம் → சிலுவாணம்]*

**சிலுவைக்கடப்பு** *šiluvai-k-kaḍappu,* பெ. (n.) *கடப்ப நெல் வகை;* a kind of paddy.

*[சிலுவை + கடப்பு]*

**சிலேயம்**[1] *šilēyam,* பெ. (n.) *கல்போலக் கடினமாயிருப்பது (சங்அக.);* anything hard like a stone.

*[சிலை → சிலையம் → சிலேயம்]*

**சிலேயம்**[2] *šilēyam,* பெ. (n.) *மலையில் விளையும் மூலிகை, கனிமம் முதலானவை;* herbs, mineral etc, obtained from a mountain *(சாஅக.).*

**சிலேற்பம்** *šilēṟpam,* பெ. (n.) *நறுவிலி மரம்;* sebesten tree *(சாஅக.).*

**சிலேற்பனநாடி** *šilēṟpaṉa-naḍi,* பெ. (n.) *மணிக்கட்டிலுள்ள மூவகை நாடியுளொன்று;* one of the three beats, felt at the wrist *(சாஅக.).*

**சிலேற்பின்பால்** *šilēṟpiṉ-pāl,* பெ. (n.) *தேங்காய்ப்பால்;* milky juice of coconut milk *(சாஅக.).*

**சிலை**[1]**-த்தல்** *šilai-,* செகுவி. (v.i.) *1. ஒலித்தல்;* to sound, resound. *"காவலர் கொடுங்கோடு சிலைப்ப" (பெருங். உஞ்சைக். 58:25). 2. முழங்குதல்;* to roar, bellow. *"ஆமா நல்லேறு சிலைப்ப" (திருமுரு. 315). 3. யாழொலித்தல் (திவா.);* to twang, as musical instrument. *4. கொட்டுதல்;* to beat, as a drum. *"வலி துரந்து சிலைக்கும்.....துடி" (புறநா.170). 5. சினங் கொள்ளுதல்;* to be angry. *"செற்றங் கொண்டாடிச் சிலைத் தெழுந்தார்" (பு.வெ.3:7).*

*[சில் → சிலை-,]*

**சிலை**[2]**-த்தல்** *šilai-,* 4 செகுவி. (v.i.) *பின்னிடல்;* to retreat. *"செருச்சிலையா மன்னர்" (பு.வெ. 1:16).*

**சிலை**[3] *šilai,* பெ. (n.) *1. முழக்கம்;* sound, roar, bellow, twang. *"கடுஞ்சிலை கழறி" (பதிற்றுப். 81:4). 2. பாடும்போது கலகலவென்றிலங்கும் ஒலி;* rattling sound (of singing). *3. வில்;* bow. *"கொடுஞ்சிலைக் கைக்கூற்றினை" (பு. வெ. 1:10). 4. சிலையோரை (தனுராசி) (விதான. யாத். 13.);* sagittarins of the zodiac. *5. சிலை (மார்கழி) மாதம்;* the month Mārgaḻi. *"சிலையில் வெங்கதிரைத் திங்க ளொன்றிய" (பாரத. முகூர்த்தங்கேள். 4.). 6. பத்தொன்பதாவது விண்மீனான குருகு (சூடா.);* the 19th Mūla nakṣatra. *7. வானவில்;* rainbow *"சிலைத் தராகலம்" (புறநா.61:14). 8. ஒளி;* lustre, light. *"சிலையிலங்கு மணிமாடத்து" (திவ். பெரியதி. 3.9:4). 9. வால்;* tail. *"பைஞ்சிலைச் சேலை" (கல்லா. 26:24).*

*[சில் → சிலை]*

**சிலை**[4] *šilai,* பெ. (n.) *1. கல் (பிங்.);* rock, stone. *2. மலை;* hill, mountain. *"வணங்காச் சிலையளித்த தோளான்" (பு.வெ. 2:12). 3. அம்மி;* horizontal stone for macerating spices. *"தரைத் தடஞ் சிலையதாக" (கந்தபு. தாரகன் வதை. 48). 4. கலுவம்;* apothecary's stone-mortar. *"இரதமாங் கொருசிலையிலிட்டு" (கந்தபு. மார்க்கண். 132). 5. சிலை வாகை;* stone sirissa. *"வணங்குசிலைச் சாபம்" (பெருங். மகத. 20. 8). 6. மனோசிலை என்னும் செய் நஞ்சு;* a mineral poison. *7. சூதமென்னும் செய்நஞ்சு;* a mineral poison. *8. கருநிறம்;* black colour. *9. உஞ்சை மர வகையுளொன்று;* a kind of sirissa tree.

*[சில் → சிலம்பு, எதிரொலிக்கும் மலை. ஒலிக்கும் சிலம்பக் கழி. சில் → சிலை = மலை, கல்]*

சிலை என்பதற்கு வடமொழியில் கல் என்னும் பொருட்படும் வேர் அல்லது முதனிலை இல்லை. மானியர் வில்லியம்சு தம் அகர முதலியில், ஒருகா. 'சி' மூலமாயிருக்கலாம் என்பர். 'சி' என்பதற்கு நல்கு, பொந்திகை (திருப்தி)ப்படுத்து, கூராக்கு என்னும் பொருள்கள்தாம் உண்டு. அவை பொருந்தா. தமிழிலும் திட்டமாகவோ, தேற்றமாகவோ மூலங்காட்டுதற்கில்லை. சிலை என்னுஞ் சொற்குச் சில் என்பதுதான் மூலமாயிருத்தல் வேண்டும்.

இனி, சிலை என்பது சிலம்பு என்பது போல் மலை என்றும் தமிழில் பொருள் கொண்டிருப்பதால், மலை என்னும் பொருளினின்றே கல் (மலைப் பிஞ்சு) என்னும் முதலாகுபெயர்ப் பொருளும் தென்மொழியிலும் வடமொழியிலும் தோன்றிற்று என்று கொள்ளவும் இடமுண்டு. *(நாகைத் தமிழ்ச் சங்க மறைமலையடிகள் நினைவு மலர் 1969).*

**சிலை**[5] *šilai,* பெ. (n.) **நினைவுகூர்தற்கு ஒருவரைப் போல் செய்துவைத்த உருவம்;** statue, idol.

*[சுலவுதல் = வளைதல், துண்டு. சுல் → சில் → சிலை = வெட்டின அல்லது செதுக்கின உருவம்]*

சிலை என்னும் சொல் வடமொழியில் கல் அல்லது பாறை என்றே பொருள்படும். silex என்னும் இலத்தீன் சொல்லும் அதனின்று திரிந்த silica என்னும் ஆங்கிலச் சொல்லும் வன்கல்லை (second stone) யன்றி உருவச் சிலையைக் குறியா. நாம்தான் அதைக் கருவி யாகுபெயராய் உருவம் என்னும் பொருளில் வழங்குகின்றோம்.

சிலா சாசனம் = கல்லில் எழுதப்பட்ட கட்டளை, கற்பட்டயம், விக்கிரகம், மூர்த்தம் என்பனவே உருவத்தைக் குறிக்கும் வட சொற்கள். மூர்த்தம் உடையவன் மூர்த்தி. ப்ரதிமா என்பது தென் சொற்றிரிபு.

நாம் கற்சிலை என்பதுபோல் வடவர் சிலாசிலா என்ன முடியாது. இருப்புச் சிலை, வெள்ளிச்சிலை, செப்புச்சிலை, பொற்சிலை, வெண்கலச் சிலை என்று உருவப் பொருளில் தான் வழங்குகின்றோம். கற்பொருளில் என்றும் வழங்குவதில்லை. தெய்வ உருவம் தெய்வச் சிலை எனப்படும். (நாகை தமிழ்ச் சங்க மறைமலையடிகள் நினைவு மலர், 1969).

சிலை என்னும் உருவப்பொருட் சொற்குத் தமிழ் மூலம் சற்று வலிந்து கொள்வதாகவே இருப்பினும் பின்வரும் ஏதுக்களால் அதைத் தென்சொல் என்று கொள்ளவும் இடமுண்டு. 1. வடமொழியில் சிலை என்னும் சொற்கு மூலமில்லை. ஆரியர் இந்தியாவிற்கு வரும் முன்பே தமிழகத்தில் உருவக் கலை இருந்தது. 2. உருவம், படிமை என்னும் தென்சொற்களும் வடசொல்லாகக் காட்டப்படுகின்றன. அவை போன்றே சிலை என்பதும். 3. வேத ஆரியர்க்கு வேள்வி வழிபாடேயன்றி உருவ வணக்கமில்லை. 4. தென்னாடு வந்த பின்னரே தமிழரிடமிருந்து மேற்கொண்டனர். 5. சிலா என்னும் வடசொல்லில் இருமொழிப் பொதுவெழுத்தேயன்றி வடமொழிச் சிறப்பெழுத்தில்லை. 6. தமிழ் ஐகாரவீறு வடமொழியில் ஆகார ஈறாய்த் திரிவது இயல்பே. எ.டு: மாலை → மாலா; வடை→ வடா. 7. சிலா என்னுஞ் சொல் இருக்கு வேதத்திற்குப் பிற்பட்ட வடநூல்களிலேயே ஆளப் பட்டுள்ளது. 8. சிலம்பு, சிலை என்னும் இரு (மலைப் பொருட்) சொற்களும், தமிழில் சில் என்னும் ஒரே மூலத்தையும், ஒலித்தல் என்னும் ஒரே வேர்ப்பொருட்கரணியத்தையும் கொண்டுள்ளன. 9. தமிழ் மேலை ஆரியத் திற்கும் அடிப்படைச் சொற்களை உதவிய பெருவளமொழி.

**சிலை**[6] *šilai,* பெ. (n.) *சினம்;* anger. "பொய்ச்சிலைக் குரலேற் றெருத்தமிறுத்த" *(திவ். பெருமாள். 2:5, வியா. பக். 33).*

*[சில் → சிலை]*

**சிலை**[7] *šilai,* பெ. (n.) *1.* **புண்புரை;** sore or wound or ulcer. *2.* **புண்ணின் உட்டுளை;** sinus of an ulcer or abscess *(சா.அக.).*

**சிலைக்கல்** *šilai-k-kal,* பெ. (n.) *1.* **செங்கற் கிட்டம்;** over burnt brick. *2.* **உருகிய கல்;** molten rock of the volcanic region. *3. காகச் சிலை;* black load stone. *4. ஈரக்கல் (யாழ்.அக.);* corundum.

*[சிலை + கல்]*

**சிலைக்கல்லிச்சி** *šilai-k-kallicci,* பெ. (n.) **கற்பாங்குள்ள இடத்தில் முளைக்கும் இச்சி மரம்;** yellow barked fig found grown in stoney soil *(சா.அக.).*

*[சிலை + கல் + இச்சி]*

**சிலைக்காரம்**[1] *šilai-k-kāram,* பெ. (n.) செந்நாயுருவி; a red variety of nāyuruvi *(சா.அக.).*

*[சிலை + காரம்]*

**சிலைக்காரம்**[2] *šilai-k-kāram,* பெ. (n.) வெடிகாரம் (மூ.அ.); a kind of salt - Caustic potash.

*[சிலை + காரம்]*

**சிலைக்காரி** *šilai-k-kāri,* பெ. (n.) அஞ்சன செய்நஞ்சு வகையுளொன்று (யாழ்.அக.); a mineral poison.

*[சிலை + காரி]*

**சிலைக்கால்** *šilai-k-kāl,* பெ. (n.) சித்தர் பயன்படுத்திய நூற்று இருபது இயற்கை மருந்துச் சரக்கு வகைகளுளொன்று; an unknown stone, which is classified as one of the 120 kinds of natural substances in Tamil Šitta medicine (சா.அக.).

மறுவ. முடவாட்டுக்கால்

*[சிலை + கால்]*

**சிலைக்கால்தூய்மை** *šilai-k-kāl-tūymai,* பெ. (n.) வைப்பு நஞ்சு வகையுளொன்று; a kind of native arsenic (சா.அக.).

*[சிலைக்கால் + தூய்மை]*

**சிலைக்குள்தீட்டு** *šilai-k-kuḷ-tīṭṭu,* பெ. (n.) சிலையொழுக்கு பார்க்க; see *šilai-y-oḷukku* (சா.அக.).

*[சிலைக்குள் + தீட்டு]*

**சிலைக்கெந்தி** *šilai-k-kendi,* பெ. (n.) கந்தகம் சேர்ந்த கல் (யாழ்.அக.); sulphur ore.

*[சிலை + கெந்தி]*

**சிலைச்சத்து** *šilai-c-cattu,* பெ. (n.) கல்மதம்; bitumen, fossil exudation.

மறுவ. சிலைநஞ்சு, சிலைத்தாது

*[சிலை + சத்து]*

**சிலைச்சாசனம்** *šilai-c-cāšaṉam,* பெ. (n.). கொடை முதலியவற்றைக் குறித்துப் பொறிக்கப்படும் கற்பட்டயம்; stone inscription.

*[சிலை + சாசனம். சிலை = கல். சாசனம் = ஆவணம்]*

த. சிலைச்சாசனம் → Skt. சிலாசாசனம்

**சிலைச்சூதம்** *šilai-c-cūdam,* பெ. (n.) எளிதில் உடையுந்தன்மையுள்ள நீலக்கல்; sulphate of antimony (சா.அக.).

*[சிலை + சூதம்]*

**சிலைச்செம்மண்** *šilai-c-cemmaṇ,* பெ. (n.) செம்மையும் மஞ்சளுங் கலந்த கற்காவி; red-ochre.

*[சிலை + செம்மண்]*

**சிலைத்தண்ணீர்** *šilai-t-taṇṇīr,* பெ. (n.) சிலைநீர் பார்க்க; see *šilai-nīr.*

*[சிலை + தண்ணீர்]*

**சிலைத்தாசி** *šilai-t-tāsi,* பெ. (n.) திருமால் உருவமாகக்கொண்டு பூசித்தற்குரிய கண்டகிச் சிலை; black fossil ammonite worshipped of a form a Tirumāl chiefly found in the river Gandak.

மறுவ. சாளக்கிராமம்

**சிலைத்தைலம்**[1] *šilai-t-tailam,* பெ. (n.) 1. மருந்தெண்ணெய் வகையுளொன்று; a kind of essential medicinal oil. 2. பாறை யெண்ணெய்; rock oil. 3. நிலத்தடி எண்ணெய், மண்ணெண்ணெய்; earth oil or crude oil. 4. மண் நெய்மம்; bitumen. 5. புண் புரைகளுக் கிடும் மருந்தெண்ணெய்; a medicated oil or ointment used chiefly for putrified sores (சா.அக.).

*[சிலை + தைலம்]*

Skt. taila → த. தைலம்

**சிலைநாகம்** *šilai-nāgam,* பெ. (n.) சூடாலைக் கல் (வின்.); a mineral.

*[சிலை + நாகம்]*

**சிலைநார்** *šilai-nār,* பெ. (n.) கல்நார் (சங்.அக.); asbestos.

*[சிலை + நார்]*

**சிலைநிறக்கல்** *šilai-niṟa-k-kal,* பெ. (n.) கருநிறக்கல் (மாமிசசிலை) வகை (யாழ்.அக.); a kind of black stone.

*[சிலை + நிறம் + கல்]*

**சிலைநீர்** *šilai-nīr,* பெ. (n.) காயம் பட்ட புண்ணினின்று வடியும் நீர்; a thin and coloured discharge issuing out from wounds, etc. (சா.அக.).

*[சிலை + நீர்]*

**சிலைநீர்சொரி-தல்** *šilai-nir-sori-,* தொ. பெ. (n.) புண்புரையினின்று நீர் வடிதல்; a thin watery acrid humour or discharge from sinus of sores, wounds, ulcers etc.,

*[சிலை + நீர் சொரி-,]*

**சிலைப்பலா** *šilai-p-palā,* பெ. (n.) கற்பலா; stone jack *(சா.அக.).*

*[சிலை + பலா]*

**சிலைப்பாசி** *šilai-p-pāši,* பெ. (n.) பாறைகளின் மேல் படருந்தன்மையுள்ள புல்லுருவி வகையைச் சார்ந்த பூடு; rock-moss or lichen or order of cryptogenic plant *(சா.அக.).*

*[சிலை + பாசி]*

**சிலைபாரி-த்தல்** *šilai-pāri,* 4 செ.குவி. (v.i.) வில் வளைத்தல் *(சீவக. 2286, உரை.);* to bend the bow.

*[சிலை + பாரி-,]*

**சிலைப்புல்** *šilai-p-pul,* பெ. (n.) மலைப்புல்; mountain grass *(சா.அக.).*

*[சிலை + புல்]*

**சிலைமா** *šilai-mā,* பெ. (n.) மாக்கல் *(யாழ்.அக.);* soap-stone.

*[சிலை + மா]*

**சிலைமான்கல்** *šilai-mān-kal,* பெ. (n.) அரத்தின மணிவகையுளொன்று; agate or solomon stone.

*[சிலைமான் + கல்]*

**சிலைமூலக்காரம்** *šilai-mūlak-kāram,* பெ. (n.) படிகாரம் (சீனக்காரம்); alum stone.

*[சிலை + மூலக்காரம்]*

**சிலைமெழுகு** *šilai-meḻugu,* பெ. (n.) தலைச்சூட்டு வள்ளி; Indian birth-wort.

*[சிலை + மெழுகு]*

**சிலையடி-த்தல்** *šilai-y-aḍi-,* 4 செ.குன்றாவி. (v.t.) கல்லில் உருவம் அமைத்தல் *(உ.வ.);* to carve in a stone.

*[சிலை + அடி-,]*

**சிலையரசன்** *šilai-y-arasaṉ,* பெ. (n.) மணிகளுள் அரசனாகிய வைரம் *(யாழ்.அக);* diamond, as the king of stones.

*[சிலை + அரசன்]*

**சிலையாதனம்** *šilai-y-ādaṉam-,* பெ. (n.) சிவனிய வோக நிலையு ளொன்று *(தத்துவப். 109, உரை.);* a yogic posture.

*[சிலை + ஆதனம்]*

**சிலையாவி** *šilai-y-āvi,* பெ. (n.) சிலைநார் (வின்.) பார்க்க; see *šilai-nār.*

*[சிலை + ஆவி]*

**சிலையிராசன்** *šilai-y-irāsaṉ,* பெ. (n.) சிலையரசன் பார்க்க; see *šilai-y-arasaṉ.*

மறுவ. சிலையரசன்

*[சிலை + இராசன்]*

**சிலையுஞ்சை** *šilai-y-uñjai,* பெ. (n.) நறுமண மிக்க மரவகை; fragrant sirissa.

*[சிலை + உஞ்சை]*

**சிலையுடம்பு** *šilai-y-uḍambu,* பெ. (n.) புண் கட்டிகள் அடிக்கடி புறப்படுதற்குரிய உடல் அமைப்பு; bodily constitution which has a tendency to skin eruptions.

*[சிலை + உடம்பு]*

**சிலையுருக்குக்கல்** *šilai-y-urukku-k-kal,* பெ. (n.) 1. உருக்காங்கல் *(யாழ்.அக.);* overburnt brick. 2. செங்கல்; brick.

*[சிலை + உருக்கு + கல்]*

**சிலையூஞ்சில்** *šilai-y-ūñjil,* பெ. (n.) காட்டுத் துரிஞ்சல்; fragrant acacia.

*[சிலை + ஊஞ்சில்]*

**சிலையெண்ணெய்** *šilai-y-eṇṇey,* பெ. (n.) புண்ணிற்கிடும் மருந்தெண்ணெய்; medicated oil used externally for wounds *(சா.அக.).*

*[சிலை + எண்ணெய்]*

**சிலையெழும்பு-தல்** *šilai-y-eḻumbu-,* 10 செ.குவி. (v.i.) எதிரொலியுண்டாதல்; to echo. "பறையர்கொட்டு முழக்காலும் ... பாட்டாலும் எங்கும் சிலையெழும்பிற்று" *(எங்களூர், 104).*

*[சிலை[3] + எழும்பு-,]*

**சிலையொழுக்கு** *šilai-y-oḻukku,* பெ. (n.) கல் மதம்; bitumen exuding from rocks during summer.

**சிலையோடு¹-தல்** *šilai-y-ōḍu,* 5 செ.கு.வி. (v.i.) *புரையோடுதல் (வின்.);* to burrow into the flesh, as a fistula.

*[சில்லி² + ஓடு-,]*

**சிலையோடு²-தல்** *šilai-y-ōḍu,* செ.கு.வி. (v.i.) *எதிரொலித்தல் (வின்.);* to echo, as rocks.

*[சில்லி³ + ஓடு-,]*

**சிலையோட்டம்** *šilai-y-ōṭṭam,* பெ. (n.) *புரையோடுகை;* formation of sinuses in a wound or abscess.

*[சிலை + ஓட்டம்]*

**சிலையோடுபுண்** *šilai-y-ōḍu-puṇ,* பெ. (n.) *1. புரையோடும் புண்;* a deep-seated sore. *2. உள் மூல நோய்;* internal fistula *(சா.அக.).*

*[சிலை + ஓடு + புண்]*

**சிலைவங்கம்** *šilai-vaṅgam,* பெ. (n.) *1. செய் நஞ்சு வகையுளொன்று (யாழ்.அக.);* a mineral poison. *2. ஈயக் கல்;* lead sulphide.

*[சிலை + வங்கம்]*

**சிலைவாகை** *šilai-vāgai,* பெ. (n.) *பீலி வாகை;* stipulate srissa.

*[சிலை + வாகை]*

**சிலைவாழை** *šilai-vāḻai,* பெ. (n.) *கல் வாழை;* stone plantain.

*[சிலை + வாழை]*

**சிலைவிந்து** *šilai-vindu,* பெ. (n.) சிலைநார் (வின்.) பார்க்க; see *šilai-nār.*

மறுவ. கல்நார்

*[சிலை + விந்து]*

**சிலைவைரம்** *šilai-vairam,* பெ. (n.) வயிரக்கல் (வின்.); diamond.

*[சிலை + வைரம்]*

**சிவ்வல்** *šivval,* பெ. (n.) *கடற்பாசி (மூ.அ);* sea-weed.

**சிவ்வெனல்¹** *šiv-v-eṉal,* பெ. (n.) *சிவத்தற் குறிப்பு;* expr. of being red. *'கண் சிவ்வென் றிருந்தது' (நெல்லை.).*

*[சிவ் + எனல்]*

**சிவ்வெனல்²** *šiv-v-eṉal,* பெ. (n.) *1. விரைவுக் குறிப்பு;* onom. expr. of being quick. *2. இறுகற் குறிப்பு (இ.வ.);* being tough, firm or viscid.

**சிவ-த்தல்** *šiva-,* 3 செ.கு.வி. (v.i.) *1. செந்நிற மாதல்;* to redden, blush, to be red. *"காமர் நெடுங்கண் கைம்மீச் சிவப்ப" (பெருங். இலாவாண. 14, 63). 2. சினத்தல்;* to become angry. "தேற்றாய் சிவந்தனை காண்பாய்நீ தீ தின்மை" *(கலித். 91).*

*[சிவ் → சிவ → சிவ-. (வே.க.)]*

**சிவக்குறி** *šiva-k-kuṟi,* பெ. (n.) *சிவனியர் வழிபடும் இலிங்க வடிவமான சிவனுருவம்;* cylindrical stone rounded off at the top worshipped by saivites as an emblem of Šiva. *"தகுசிவக்குறி யர்ச்சிப்பர்" (சூத. முத்தி. 1:18: சங். அக.).*

ம. சிவக்குக

*[சிவ் → சிவ → சிவம் + குறி (வே.க.)]*

**சிவகணம்** *šiva-gaṇam,* பெ. (n.) *சிவபெரு மானுடைய திருவருட் கூட்டம்;* Šivan's celestial hosts. *"சிவகணத்துளோர். . . சீறி" (உபதேசகா. உருத்திரா. 109).*

*[சிவன் + கணம்]*

**சிவகணமுதல்** *šiva-gaṇa-mudal,* பெ. (n.) *சிவகணத் தலைவரான நந்திதேவர் (பிங்.);* Nandi as the leader of Šivan's hosts.

*[சிவகணம் + முதல். கன் → கண். கண்ணுதல் = பொருந்துதல். கண் → கண. கணத்தல் = கூடுதல். கண → கணம் = கூட்டம், படைப்பகுதி]*

**சிவகதி** *šivagadi,* பெ. (n.) *வீடுபேறு (முத்தி);* salvation, final deliverance of the soul. *"சிவகதி நாயகன்" (சிலப். 10: 180).*

*[சிவம் + கதி]*

**சிவகதிக்கிறை** *šivagadi-k-kiṟai,* பெ. (n.) *சிவகதிக்குத் தலைவனான அருகன் (சூடா.);* Arugan, as lord of Šiva-gadi.

*[சிவகதிக்கு + இறை]*

**சிவகம்** *šivagam,* பெ. (n.) *1. சாதிக்காய் (மலை.);* true-nutmeg. *2. நாய்ச்சீரகம்;* purple fleabane.

**சிவகரணம்** *śiva-garaṇam,* பெ. (n.) *ஆதனின் செயலற்ற நிலையில் தன்முனைப்பறுக்கும் (ஆணவம்) இறையின் செயல்;* action of god manifested in a person who has attained the stage of complete self effacement.

*[சிவம் + கரணம்]*

**சிவகரந்தை** *śiva-karandai,* பெ. (n.) *கரந்தை வகை (பதார்த்த. 314);* fever basil.

*[சிவம் + கரந்தை]*

**சிவகாமி** *śiva-gami,* பெ. (n.) *சிதம்பரத்தில் வழிபடப் பெறும் அம்மன்;* Pārvadi as worshipped at Chidambaram. "சிவகாமி நல்கிய சேயே" *(திருப்பு. 553).*

*[சிவம் + காமி]*

**சிவகீதை** *śiva-kīdai,* பெ. (n.) *அகத்தியர் செய்ததாகக் கூறப்படும் தமிழ் நூல் (சி.சி. 8:16, சிவஞா.);* a devotional work in Tamiḻ attributed to Agattiyar.

*[சிவன் + கீதை]*

Skt. gīta → *த. கீதை*

**சிவகூர்ச்சம்** *śiva-kūrccam,* பெ. (n.) *ஆவினின்று பெறப்படும் ஐவகைப் பொருள்கள்;* mixture of the five products of the cow.

மறுவ. ஆனைந்து (பஞ்சகவ்யம்)

ஐம்பொருள்களாவன: பால், தயிர், நெய், மூத்திரம், சாணம்.

**சிவகோணம்** *śiva-kōṇam,* பெ. (n.) *சிவபெருமானைக் குறிப்பதாகத் தாமிரம் முதலியவற்றில் வரையும் கோணம் (சௌந்தர்ய. 11);* a mystic diagram believed to represent Šivan.

*[சிவன் + கோணம். கோள் → கோண் → கோணம் = வளைவு, மூலை]*

**சிவங்கரன்** *śivaṅgaraṉ,* பெ. (n.) *ஆதனுக்குப் (ஆன்மா) பேரின்பப் பெருவாழ்வை வழங்கும் சிவன் (சங்.அக.);* Šivan as the dispenser of bliss.

**சிவங்கரி** *śivaṅgari,* பெ. (n.) *மங்கலத்தைச் செய்பவளான மலைமகள் (திருவானைக். கோச்செங்.81);* Pārvadi, as the dispenser of bliss.

**சிவச்சி** *śivacci,* பெ. (n.) *சாதிக்காய் (மூ.அ.);* nutmeg.

**சிவசத்தி** *śiva-śatti,* பெ. (n.) *1. ஐவகைச் சிவ ஆற்றல்கள் (சி.சி. 1:61, சிவஞா.);* the five energies of Šivan. *2. துரிசு (யாழ்.அக.);* verdigris.

*[சிவன் + சத்தி]*

**ஐவகைச் சிவ ஆற்றல்கள்**

1. விழைவாற்றல் (இச்சா சத்தி)
2. செயலாற்றல் (கிரியா சத்தி)
3. அறிவாற்றல் (ஞான சக்தி)
4. மறைப்பாற்றல் (திரோதான சத்தி)
5. அருளாற்றல் (பராசத்தி)

**சிவசமவாதசைவம்** *śiva-śama-vāda-śaivam,* பெ. (n.) *அகச்சமயம் ஆறனுள் மலங்கள் நீங்கிய வழி, அறிவு மாத்திரையாய் நிற்கும் ஆதனை, இறைவன், தன் வடிவாக்கித் தன் ஐந்தொழில்களை இயற்றும்படிச் செய்வன் என்று கூறும் சிவனிய வகை (சி. போ. பா. பக். 22, சுவாமிநா.);* a Šaiva sect which holds that the soul when it is freed from *malam* becomes Pure Intelligence, and that in such a condition Šivan transmutes it into a Being like Himself enabling it to perform His five-fold functions, one of six aga-c-camayam.

*[சிவம் + சமவாதம் + சைவம்]*

**சிவசன்** *śivaśaṉ,* பெ. (n.) *சிவனிடம் பிறந்தவனாகிய சுக்கிரன்;* Šukraṉ, as born of Šivan.

*[சிவன் + (சேயன் → சேன் →) சன்]*

**சிவசாதனம்** *śiva-śādaṉam,* பெ. (n.) *அக்கமணி திருநீறு முதலிய சிவனியத்திற்குரிய சின்னங்கள்;* emblems of Šaiva religion, as rudrākṣa beads and sacred ashes. "சிவசாதனந் தனி லன்பு மிக்கவன்" *(திருவிளை. நாக. 3).*

*[சிவன் + சாதனம்]*

**சிவசித்தர்** *śivaśittar,* பெ. (n.) *சிவனிய (சைவ) சமயத்திற் கூறியவாறு கட்டுகளினின்று நீங்கிப் பரமுத்தியை அடைந்தவர்;* those who have obtained the highest form of salvation.

*[சிவம் + சித்தர்]*

**சிவசிவ** *śiva-śiva,* இடை. (int.) *1.* வழிபடற் குறிப்பு; a sign of worship. "சிவசிவ என்றிடத் தீவினைமாளும்" *(திருமந்.).* *2.* ஓர் இரக்கக் குறிப்பு; an exclamation of pity. "சிவசிவ மற்றென் செய்வாய்" *(அருட்பா. i, நெஞ்சறி, 401).*

*[சிவ + சிவ]*

**சிவசின்னம்** *śiva-śiṉṉam,* பெ. (n.) சிவசாதனம்[1] பார்க்க; see *śivasādaṉam[1]*. "சிட்டமாஞ் சிவ சின்னங்கள் சேர்ந்துளீர்" *(சிவரக. சிவரகவரலா. 9).*

*[சிவம் + சின்னம்]*

**சிவஞானகோசம்** *śiva-ñāṉa-kōśam,* பெ. (n.) சிவாகமம் பார்க்க; see *śivāgamam.* "பொருவில் - பரம சிவஞானகோசம்" *(சிவதரு. சிவஞானதா. 50).*

*[சிவம் + ஞானம் + கோசம்]*

**சிவஞானசித்தியார்** *śiva-ñāṉa-śittiyār,* பெ. (n.) அருணந்தி சிவாசாரியரால், சிவஞான போதத்தை முதனூலாகக் கொண்டு, விரிவாகச் செய்யப் பெற்றதும், மெய்கண்ட நூல்களுள் பதினான்கனுளொன்றுமாகிய சிவனியக் கொண்முடிபு நூல்; a text-book of the Śaiva Śittānda philosophy by Aruāṇandi - Śivācāriyar, based on Śiva-ñāṉa-bōdam, one of 14 meygaṇḍa-śāttiram.

*[சிவஞானம் + சித்தியார்]*

**சிவஞானபோதம்** *śivañāṉa-bōdam,* பெ. (n.) மெய்கண்ட தேவரால் இயற்றப்பட்டதும், மெய்கண்ட நூல்கள் பதினான்கனுள் ஒன்றும் அவற்றுள் பன்னிரண்டு நூல்களுள் முதன்மையாயுள்ளதுமாகிய சிவனியக்கொண் முடிபு நூல்; a text book of the Śaiva Siddhānda philosophy composed by Mey-kaṇḍa-dēvar, the basis of twelve of the fourteen textbooks one of 14 mey-kanda-nūl.

*[சிவஞானம் + போதம்]*

**சிவஞானம்** *śiva-ñāṉam,* பெ. (n.) பதியுணர்வு; knowledge of god. "சிவஞானந் தனக்கு மேலாம்" *(சி. சி. 2:2).*

*[சிவம் + ஞானம்]*

**சிவஞானமுனிவர்** *śiva-ñāṉa-muṉivar,* பெ. (n.) சிவஞான போதத்திற்குத் திராவிட மாபாடியம் என்னும் பேருரை செய்தவரும், சிவஞான சித்தியார், தொல்காப்பியப் பாயிரம் முதல் நூற்பா முதலியவற்றிற்கு உரை வகுத்தவரும், காஞ்சிப்புராணம் முதற்காண்டத்தின் ஆசிரியரும், சிவசமவாத மறுப்பு முதலிய கண்டன நூல்கள் எழுதியவரும், 18ஆம் நூற்றாண்டில் திருவாவடுதுறை மடத்தில் வாழ்ந்தவருமாகிய சிவனியத் துறவி; a celebrated ascetic of the Tiruvāvaḍurai mutt, 18th century A.D. author of many minor poems, the first part of Kāñjippūrāṇam, some polemic treatises and commentaries on the pāyiram and the 1st nūrpā of Tolgāppiyam, Śiva-ñāṉa-bōdam and Śiva-ñāṉa-śittiyār.

*[சிவஞானம் + முனிவர்]*

**சிவஞானி** *śiva-ñāṉi,* பெ. (n.) சிவனறிவு பெற்றோன்; Śaiva saint as one who has obtained knowledge of God.

*[சிவம் + ஞானி]*

**சிவணு[1]-தல்** *śivaṇu-,* 11 செ.குவி. (v.i.) *1.* நட்புக் கொள்ளுதல்; to make friends. "தன்னோடு சிவணிய வேனோர்" *(தொல். பொருள். 27).* *2.* பொருந்துதல்; to go with. "பல்லோ ரறியுஞ் சொல்லோடு சிவணி" *(தொல். சொல். 2.)* *3.* அளவளாவுதல் *(பிங்.);* to hold intimate intercourse, to show intimacy.

ம. சிவணன் (சேர்தல், இணைதல், இயைபு)

*[சுவள் → சுவண் → சிவண் → சிவணுதல் (இந்தியால் தமிழ் எவ்வாறு கெடும் பக். 26)]*

**சிவணு[2]-தல்** *śivaṇu-,* 10 செ.குன்றாவி. (v.t.) *1.* அணுகுதல் *(திவா.);* to approach. *2.* ஒத்தல்; to resemble. "நெடுவரையெவையு மொரு வழித்திரண்டன சிவண" *(கம்பரா. நிந்தனை. 1.)* *3.* பெறுதல்; to receive. "தனங்கிடைக்குமேற் சிவணுறாதவர் யாரே" *(தணிகைப்பு. திருநா. 16).*

*[சுவள் → சுவண் → சிவண் → சிவணுதல் (வ.வ. 211)]*

**சிவத்ததாசி** *śivatta-tāśi,* பெ. (n.) *1.* சிவந்த வேசை பார்க்க; see *śivanda-vēśai.* *2.* செம்பருத்தி; tree cotton.

**சிவத்தம்** *šivattam,* பெ. (n.) செம்முருங்கை (மலை.); red Indian laburnum.

*[சிவந்தம் → சிவத்தம்]*

**சிவத்தமண்** *šivatta-maṇ,* பெ. (n.) *1.* செம்மண்; red soil. *2.* காவி மண்; red ochre (சா.அக.).

*[சிவந்த → சிவத்த + மண்]*

**சிவத்தமுள்ளங்கி**[1] *šivatta-muḷḷaṅgi,* பெ. (n.) காசினி விரை; chicory.

*[சிவப்பு முள்ளங்கி → சிவத்த முள்ளங்கி]*

**சிவத்தமுள்ளங்கி**[2] *šivatta-muḷḷaṅgi,* பெ. (n.) சிவப்புமுள்ளங்கி பார்க்க; see *šivappu-muḷḷaṅgi* (சா.அக.).

*[சிவப்பு முள்ளங்கி → சிவத்த முள்ளங்கி]*

**சிவத்தாசிகம்** *šivattāšigam,* பெ. (n.) செம்பரத்தை; chinese rose mallow (சா.அக.).

**சிவத்தாட்சி** *šivattāṭci,* பெ. (n.) சிவத்தாசிகம் பார்க்க; see *šivattāšigam* (சா.அக.).

**சிவத்தானம்** *šivattāṉam,* பெ. (n.) வெற்றிலை; betel leaf (சா.அக.).

**சிவத்தி** *šivatti,* பெ. (n.) சாதிலிங்கம்; vermilion (சா.அக.).

**சிவத்திருமி** *šivattirumi,* பெ. (n.) தான்றி மரம்; devil's abode (சா.அக.).

**சிவத்திருவம்** *šivattiruvam,* பெ. (n.) சிவத்துருமம் பார்க்க; see *šiva-t-turumam* (சா.அக.).

**சிவத்திறை** *šivattiṟai,* பெ. (n.) சிவகதிக்குத் தலைவனான அருகன் (சூடா.); Arugan, as lord of Šiva-gadi. "சிவத்திறை யுறையுஞ் சித்தாயதனம்" (மேருமந். 620).

*[சிவம் (சிவத்து) + இறை]*

**சிவத்துருமம்** *šiva-t-turumam,* பெ. (n.) வில்வம்; bael tree.

*[சிவம் + துருமம்]*

**சிவத்துவிசர்** *šiva-t-tuvišar,* பெ. (n.) சிவன் கோயில்களிற் பூசைக்கு அதிகாரிகளாகிய சிவப்பார்ப்பனர்; Brāhmans who conduct service in Šivan temples.

**சிவத்தை** *šivattai,* பெ. (n.) *1.* சிவப்பு; redness in colour. *2.* பொன்னிறப்பெண்; fair complexed girl. *3.* செந்நிறக் காளை; red colour bull.

*[சிவ் → சிவ → சிவத்தை (வே.க.222)]*

**சிவத்தோன்றியம்** *šiva-t-tōṉṟiyam,* பெ. (n.) சிவனிடமிருந்து தோன்றியவை எனப்படும் காமிகம், ஒகசம், சிந்தியம், காரணம், அசிதம், தீபதம், சூக்குமம், சகச்சிரம், அஞ்சுமான், சுப்பிரபேதம், விசயம், நிசுவாசம், சுவாயம்புவம், ஆக்கினேயம், வீரம், இரௌரவம், மகுடம், விமலம், சந்திரஞானம், முகவிம்பம், புரோற்கீதம், இலளிதம், சித்தம், சந்தானம், சர்வோத்தம், பாரமேசுவரம், கிரணம், வாதுளம் ஆகிய இருபத்தெட்டு தோன்றியங்கள் (ஆகமங்கள்) (சைவச, பொது, 78); ancient Āgamas or šaiva scriptures in Sanskrit believed to have originated from Šiva Himself 28 in number, viz, Kāmigam, Ōgasam, Šindiyam, Kāraṇam, Acidam, Tīptam, Cūkkumam, Sagacciram, Añjumāṉ, Cuppirabēdam, Visayam, Nisubāsam, Suvāyambuvam, Ākkiṉēyam, Vīram, Irauravam, Magudam, Vimalam, Candirañāṉam, Mugavimbam, Purōṟkīdam, Ilaḷidam, Cittam, Sandāṉam, Sarvōttam, Pāramēsuvaram, Kiraṇam, Vāduḷam.

*[சிவம் + தோன்றியம்]*

**சிவதகி** *šivadagi,* பெ. (n.) வெள்ளரி; cucumber (சா.அக.).

**சிவதகை** *šivadagai,* பெ. (n.) எழுத்தாணிப் பச்சிலை; style plant (சா.அக.).

**சிவதங்கை** *šivadaṅgai,* பெ. (n.) சிவதகை பார்க்க; see *šivadagai* (சா.அக.).

**சிவதடி**[1] *šivadaḍi,* பெ. (n.) வெள்ளரி (மலை.); cucumber.

**சிவதடி**[2] *šivadaḍi,* பெ. (n.) வெள்ளி; silver (சா.அக.).

**சிவதத்துவம்** *šiva-tattuvam,* பெ. (n.) அறிவாற்றலின் இருப்பிடமும் தூய மாயை மெய்ம்மங்களுள் ஒன்றுமாகிய மெய்ப்

பொருள் (சி.போ.பா.2:2. பக்.139); sphere or region of knowledge presided over by Šivan's ñāna-satti.

[சிவம் + தத்துவம்]

**சிவதத்துவம்**[2] *šiva-tattuvam*, பெ. (n.) 1. ஒளி (விந்து); semen. 2. தோன்றியத்தில் கூறப் பட்டுள்ள ஐவகைச் சிவமெய்ப்பொருள்கள்; in Āgama philosophy the five degrees of development or attainment in the spiritual power derived from Šivan as šuttavittai, īsuram, sadākkiyam, šatti, šivam (சா.அக.).

[சிவம் + தத்துவம்]

**சிவதம்** *šivadam*, பெ. (n.) இருக்கு வேதம் (வின்.); the Rig-Vēda.

Skt. šiva-da

**சிவதரம்** *šiva-daram*, பெ. (n.) அதிக மங்கலமானது; that which is highly auspicious. "தலைவா நின்னிற் சிவதரமாம் பொருள் வேறின்மையால்" (திருக்காளத். 4. 5:51).

**சிவதரிசனம்** *šiva-darisanam*, பெ. (n.) சிவப்பார்வை பார்க்க; see *šiva-p-pārvai*.

[சிவம் + தரிசனம்]

Skt. daršana → த. தரிசனம்

**சிவதரு** *šivadaru*, பெ. (n.) சிவதாரம் பார்க்க; see *šiva-dāram*.

**சிவதருமம்** *šiva-darumam*, பெ. (n.) பதினெண் வகைத் துணைத் தொன்மப் பிரிவுகளுள் ஒன்று; a secondary purāṇa one of 18 uba-purāṇam.

[சிவம் + தருமம்]

**சிவதருமிணி** *šiva-darumiṇi*, பெ. (n.) அறிவொழுக்கத்திலுயர்ந்து திகழும் முத்தி பெற்றவர்கட்கு மறைப்பு நிலையில் தலை மழித்துச் செய்யும் குருவின் அருள் வழங்கல் முறை (சைவச. ஆசாரி. 62, உரை.); a way or religious initiation accompanied with the removal of hair-tuft, which is believed to represent the obscuring principle, a kind of šapīša-dīṭcai.

[சிவம் + தருமிணி]

**சிவதலம்** *šiva-dalam*, பெ. (n.) சிவன் கோயில் கொண்ட இடம்; place or shrine sacred to Šivan.

**சிவதன்மம்** *šiva-danmam*, பெ. (n.) சிவதருமம் (திவா.) பார்க்க; see *šiva-darumam*.

[சிவம் + தன்மம்]

**சிவதா** *šivadā*, பெ. (n.) அடைக்கலக்கூற்று (பெரியபு. எறி. 16); an expression crying forhelp.

**சிவதாகம்** *šivadāgam*, பெ. (n.) முருங்கை மரம்; drumstick tree.

**சிவதாகிதம்** *šivadāgidam*, பெ. (n.) மாசிக்காய்; nut gall oak (சா.அக.).

**சிவதாசு** *šivadāsu*, பெ. (n.) திருநாமப்பாலை; poon tree (சா.அக.).

மறுவ. சீரானயிருசுவம்

**சிவதாது** *šivadādu*, பெ. (n.) 1. இதளியம்; mercury. 2. ஒருவகைக் கல்; a stone (சா.அக.).

[சிவம் + தாது]

**சிவதாரம்** *šiva-dāram*, பெ. (n.) தேவதாரு (மலை.); red-cedar.

மறுவ. செம்மரம், சிவதாரி

**சிவதாரிகம்** *šivadārigam*, பெ. (n.) பாலை; milk-tree (சா.அக.).

**சிவதீட்சை** *šiva-tīṭcai*, பெ. (n.) சிவ பூசையையும் சமயவொழுகலாறுகளையும், மேற் கொள்ளுதற்குமுன், சிவனியனுக்குக் குருவினாற் செய்யத்தகுஞ் சமய நிகழ்வு (அருட்பாலிப்பு); initiation of a disciple into the mysteries of the Šaiva religion.

[சிவன் + தீட்சை]

**சிவதும்பை** *šiva-dumbai*, பெ. (n.) சிறு தும்பை; small leucas (சா.அக.).

[சிவன் + தும்பை]

**சிவதுரியம்** *šiva-duriyam*, பெ. (n.) தோன்றியத்துள் கூறப்படும் மேலான பேருறக்க (துரிய)நிலை; in āgama philosophy the highest degree in which the yogi attains entire quiescence (சா.அக.).

[சிவன் + துரியம்]

**சிவதுளசி**[1] *śiva-tulaśi,* பெ. (n.) 1. திருநீற்றுப் பச்சை; sweet basil. 2. வெண் துளசி; white basil (சா.அக.).

*[சிவன் + துளசி]*

**சிவதூசி** *śiva-dūśi,* பெ. (n.) பாற்குறண்டி; milk coranday (சா.அக.).

*[சிவம் + தூசி]*

**சிவதை** *śivadai,* பெ. (n.) வயிற்றுப்பூச்சி, மலச்சிக்கல், கால் வீக்கம், தோல்நோய் முதலானவற்றைப் போக்கும் மருந்துக் கொடி; Indian jalap turpath root; it is a good remeady against worms, swellings of the limbs and diseases of the skin (சா.அக.).

மறுவ. பகன்றை

**சிவதையிளகியம்** *śivadai-y-iḷagiyam,* பெ. (n.) பெருநோய், மலச்சிக்கல் போன்றவற்றைப் போக்குவதற்காகக் கடைச்சரக்குகளுடன் சிவதை மூலிகையைச் சேர்த்துச் செய்யப்படும் இளகியம்; an electuary prepared with jalap as a chief ingredient along with other bazār drugs. It is removes costipation by helping a free motion of bowels and cures dyspepsia (சா.அக.).

*[சிவதை + இளகியம்]*

**சிவதைச்சர்க்கரை** *śivadai-c-carkkarai,* பெ. (n.) சீந்திற் கொடியினின்று எடுக்கப்படும் மருந்துப்பு; a medicinal salt prepared from gulancha stalk (சா.அக.).

*[சிவதை + சர்க்கரை]*

**சிவதைப்பொடி** *śivadai-p-podi,* பெ. (n.) சிவதையை ஆவின் பாலில் அவித்தெடுத்து உலர்த்திய பொடி; purification of jalap by boiling it in milk and then drying (சா.அக.).

*[சிவதை + பொடி]*

**சிவதைவேர்** *śivadai-vēr,* பெ. (n.) மலம் போக்கிவேர்; turpith root (சா.அக.).

*[சிவதை + வேர்]*

**சிவதைவேர்ச்சூரணம்** *śivadai-vēr-c-cūraṇam,* பெ. (n.) பகன்றை மருந்துப் பொடி; Indian jalap powder (சா.அக.).

*[சிவதை + வேர் + சூரணம்]*

**சிவதோதிகம்** *śivadōdigam,* பெ. (n.) திருநீற்றுப் பச்சை; holy ashes leaf (சா.அக.).

**சிவந்தகஞ்சா** *śivanda-kañja,* பெ. (n.) சிவப்பு நிறக் கஞ்சா வகை; a red variety of kañja (சா.அக.).

*[சிவந்த + கஞ்சா]*

**சிவந்தகதிர்நிறத்தி** *śivanda-kadir-niṟatti,* பெ. (n.) இக்காலத்தில் அறியப்படாத சேந்தாடுபாவை என்னும் கற்பமூலிகை வகையு ளொன்று; a rejuvenating drug unidentified at present (சா.அக.).

*[சிவந்த + கதிர் + நிறத்தி]*

**சிவந்தகரிசாலை** *śivanda-kariśālai,* பெ. (n.) பொற்றலைக் கையாந்தகரை; Ceylon verbesina (சா.அக.).

*[சிவந்த + கரிசாலை]*

**சிவந்தகன்னிப்பால்** *śivanda-kaṉṉi-p-pāl,* பெ. (n.) மருந்திற்குப் பயன்படும் சிவப்புப் பெண்ணின் முலைப்பால்; the breast milk of a woman of red complexion and it is considered an important medium in the use of medicine.

*[சிவந்த + கன்னி + பால்]*

**சிவந்தகுளிகை** *śivanda-kuḷigai,* பெ. (n.) சிந்தூரக் குளிகை; pills prepared out of red - oxides of metals (சா.அக.).

*[சிவந்த + குளிகை]*

**சிவந்தகையான்** *śivanda-kaiyāṉ,* பெ. (n.) சிவந்தகரிசாலை பார்க்க; see *śivanda-kariśālai.*

*[சிவந்த + கையான்]*

**சிவந்தகோழிக்காரம்** *śivanda-kōḻi-k-kāram,* பெ. (n.) செந்நிறக் கோழியின் மலம்; the drug of a red fowl.

*[சிவந்த + கோழி + காரம்]*

**சிவந்தசதுர்முகி** *śivanda-śadurmugi,* பெ. (n.) சிவப்புச் சதுரக்கள்ளி; a red variety of square spurge (சா.அக.).

*[சிவந்த + சதுர்முகி]*

நான்கு பட்டை உள்ளதைச் சதுர முகம் என்பது உலக வழக்கம். சதுர முகத்தை உடைய கள்ளி சதுர்முகி ஆயிற்று.

**சிவந்தசந்தம்** *šivanda-šandam,* பெ. (n.) செஞ்சந்தனம்; red sandal *(சா.அக.).*

*[சிவந்த + சந்தம். சந்தனம் → சந்தம்]*

E: sandal.

**சிவந்தசோறு** *šivanda-šōṟu,* பெ. (n.) தீய்ந்து போன சோறு *(யாழ்ப்.);* rice burnt reddish in cooking.

*[சிவந்த + சோறு]*

**சிவந்தநாயுருவி** *šivanda-nāyuruvi,* பெ. (n.) செந்நாயுருவி; a red variety of Indian burr *(சா.அக.).*

*[சிவந்த + நாயுருவி]*

**சிவந்தநிறவல்லி** *šivanda-niṟavalli,* பெ. (n.) சிவந்தவல்லி பார்க்க; see *šivanda-valli.*

*[சிவந்தவல்லி → சிவந்தநிறவல்லி]*

**சிவந்தநீர்** *šivanda-nīr,* பெ. (n.) முத்தின் சிவந்த நீரோட்டம்; red water of a pearl. "சிவந்த நீரும் பாணிச்சாயு முடைய முத்து" *(தெ.இ.க. தொ.2, 171).*

*[சிவந்த + நீர்]*

**சிவந்தபசு** *šivanda-pašu,* பெ. (n.) சேதா; red cow.

ம. சேதா; துட. கெபாப்.

*[சிவந்த + பசு]*

**சிவந்தபத்திரி** *šivanda-pattiri,* பெ. (n.) சாதிப்பத்திரி; nut meg *(சா.அக.).*

*[சிவந்த + பத்திரி]*

**சிவந்தபாலி** *šivanda-pāli,* பெ. (n.) சிவந்த சதுர்முகி பார்க்க; see *šivanda-šaturmugi.*

*[சிவந்த + பாலி]*

கள்ளிச் செடி பாலுள்ளதாகையால் பாலி எனப்பட்டது.

**சிவந்தபோத்தக்காய்விதை** *šivanda-pōtta-k-kāy-vidai,* பெ. (n.) சிவப்புக் கசகசாச் செடியின் விதை; red seed.

*[சிவந்த + போத்தக்காய் + விதை]*

**சிவந்தமண்** *šivanda-maṇ,* பெ. (n.) செப்பு மணல்; copper ore *(சா.அக.).*

*[சிவந்த + மண்]*

செந்நிறமாயுள்ள மண்ணைச் செம்மண் என வழங்குவது உலக வழக்கு. செந்நிறமாயுள்ள செம்பு கலந்த மணலையோ மண்ணையோ சிவந்தமண் என்பது மருத்துவ வழக்கு.

**சிவந்தமல்லி** *šivanda-malli,* பெ. (n.) பொன்னிறமல்லி அல்லது செப்பு மல்லிகை; golden jasmine *(சா.அக.).*

*[சிவந்த + மல்லி]*

இஃது இருபத்தெட்டு பெரு மூலிகைகளுள் ஒன்றாகும்

**சிவந்தமலர்** *šivanda-malar,* பெ. (n.) செம்பு; copper.

*[சிவந்த + மலர்]*

செம்பு செந்நிறத்தது. மருத்துவக்குழூஉக் குறியாக இம்மாழையை மலரெனச் சொல்லியிருப்பர் போலும்.

**சிவந்தமலர்ப்பருத்தி** *šivanda-malar-p-parutti,* பெ. (n.) செம்பருத்தி, கம்பளிப்பருத்தி; Bengal cotton, spence cotton.

*[சிவந்த + மலர் + பருத்தி]*

**சிவந்தவரிதாரம்**[1] *šivanda-v-aridāram,* பெ. (n.) பிறவி வைப்பு நஞ்சு *(மூ.அ.);* red arsenic.

*[சிவந்த + அரிதாரம்]*

**சிவந்தவரிதாரம்**[2] *šivanda-v-aridāram,* பெ. (n.) சிவப்பரிதாரம் பார்க்க; see *šivapparidāram (சா.அக.).*

*[சிவப்பரிதாரம் → சிவந்தவரிதாரம்]*

**சிவந்தவல்லி** *šivanda-valli,* பெ. (n.) செவ்வரளி; red oleander.

*[சிவந்தவரளி → சிவந்தவள்ளி → சிவந்தவல்லி]*

**சிவந்தவாலனரிசி** *šivanda-vālaṉ-ariši,* பெ. (n.) *1.* பெருநோயைப் போக்குந் தன்மைமிக்க சிவப்பு வால் நெல்லரிசி; a species of red paddy considered to be a good diet for leprosy. *2.* செவ்வாலுளுவை; a red variety of spindle tree *(சா.அக.).*

*[சிவந்த + வாலன் + அரிசி]*

**சிவந்தவேசை** *šivanda-vēšai,* பெ. (n.) செம்பரத்தை; Chinese rose mallow *(சா.அக.).*

*[சிவந்த + வேசை]*

பொது மகளிரை வேசையெனவும், பரத்தை யெனவும் வழங்குவதுண்டு. மருத்துவக் குழூஉக் குறியாகப் 'பரத்தை' என்பதற்குப் பகரமாய வேசை கையாளப்படுகிறது.

**சிவந்தவைப்புநஞ்சு** *šivanda-vaippu-nañju,* பெ. (n.) செந்நிற வைப்பு நஞ்சு (யாழ்.அக.); red arsenic.

*[சிவந்த + வைப்பு நஞ்சு]*

**சிவந்தாடு** *šivandāḍu,* பெ. (n.) செம்மறியாடு; a brown wooly sheep (சா.அக.).

*[சிவந்த + ஆடு]*

**சிவந்தி**[1] *šivandi,* பெ. (n.) 1. கொடிப்பாலை (மலை.); green wax flower. 2. தான்றிமரம்; devil's abods (சா.அக.).

**சிவந்தி**[2] *šivandi,* பெ. (n.) செவ்வந்தி; garden chrysanthemum.

*[செவந்தி → சிவந்தி]*

**சிவந்திக்கடுக்காய்** *šivandi-k-kaḍukkāy,* பெ. (n.) ஊதை, மூலம் போன்ற நோய்க்கு மருந்தாவதும், பொன் வண்ணமுடையதும், காட்டில் விளைவதுமான செங்கடுக்காய்; a wild red golden-coloured gallnut and it is a cire against rheumatism and hemorrhoids (சா.அக.).

*[சிவந்தி + கடுக்காய்]*

**சிவந்திக்கருப்பூரம்** *šivandi-k-karuppūram,* பெ. (n.) இதளியக் (இரச) கருப்பூரம்; bichloride of mercury (சா.அக.).

*[சிவந்தி + கருப்பூரம்]*

**சிவந்திகம்** *šivandigam,* பெ. (n.) நரிநாவல் அல்லது சிறுநாவல்; ruddy black plum (சா.அக.).

**சிவந்திடுமாழைமண்** *šivandiḍu-māḻai-maṇ,* பெ. (n.) 1. செப்புமணல்; copper ore. 2. பூங்காவி; red ochre (சா.அக.).

*[சிவந்திடு + மாழை + மண்]*

**சிவநாபம்** *šivanābam,* பெ. (n.) ஒருவகைச் சிவலிங்கம்; a variety of linga. "நாசமில் செழுஞ் சிவநாபந் தன்னையும்" (சேதுபு. சேதுபல. 126).

**சிவநிசி** *šivaniši,* பெ. (n.) சிவராத்திரி பார்க்க; see *šivarāttiri.* "நன்று சிவநிசியி னன்மை" (பிரமோத். 4, 60).

**சிவநெறிப்பிரகாசம்** *šiva-neṟi-p-piragāšam,* பெ. (n.) ஒரு சிவனியக் கொண்முடிபு நூல் (பெரியபு. உபோற். பக். 2); a treatise on the Šaiva Šittānda philosophy.

**சிவப்பகத்தி** *šiva-p-pagatti,* பெ. (n.) செவ்வகத்தி; West Indian sesban (சா.அக.).

**சிவப்பகாதிதம்** *šiva-p-pagādidam,* பெ. (n.) குன்றிமணி; crab's eye (சா.அக.).

**சிவப்பகில்** *šivappagil,* பெ. (n.) செந்நிறம் உள்ள அகிற்கட்டை; agallocha (சா.அக.).

*[சிவப்பு + அகில்]*

**சிவப்படுக்கலரி** *šivappaḍu-k-kalari,* பெ. (n.) செம்மைநிறமுள்ள குங்குமவலரி; double red oleander.

*[சிவப்பு + அடுக்கு + அலரி]*

**சிவப்பணு** *šivappaṇu,* பெ. (n.) குருதியிலுள்ள சிவப்பணுத் திரள்; red cells in blood (சா.அக.).

*[சிவப்பு + அணு]*

**சிவப்பந்திமல்லிகை** *šivappandi-malligai,* பெ. (n.) செவ்வந்தி மந்தாரை; evening twilight flower (சா.அக.).

*[சிவப்பு + அந்தி + மல்லிகை]*

**சிவப்பப்பிரகாரம்** *šivappa-p-piragāram,* பெ. (n.) சிவப்புநிறமுள்ள காக்காய்ப்பொன்; a red variety of mica (சா.அக.).

*[சிவப்பு + அப்பிரகாரம்]*

**சிவப்பம்மான்பச்சரிசி** *šivapp-ammāṉ-paccarisi,* பெ. (n.) வெள்ளிமாழையைத் துகளாக்கவும், ஆண் விந்துவினை பெருக்கி, முடக்கு நோயைப் போக்கவும் பயன்படும் செம்மை நிறமுள்ள ஒருவகை யரிசி; a red variety of rice which is used for calcining silver, secretion of semen against rhumatism and urinary disease.

மறுவ. சிறுசித்திரப் பாலடை

*[சிவப்பு + அம்மான் + பச்சரிசி]*

**சிவப்பம்மை** *śivappammai,* பெ. (n.) உடம்பில் சிவந்த கொப்புளங்களையுருவாக்கி அவற்றின் விளைவாக மிகுதியான காய்ச்சலை யேற்படுத்தும் அம்மைநோய் வகை; a kind of variola attended with red eruptions or rash and fever (சா.அக.).

*[சிவப்பு + அம்மை]*

**சிவப்பரக்கு** *śivapparakku,* பெ. (n.) 1. செவ்வரக்கு; wax red or red sealing wax. 2. செம்பரக்கு; lac dye or cake lac (சா.அக.).

ம. க. கெம்பரகு

*[சிவப்பு + அரக்கு]*

**சிவப்பரசிகா** *śivapparaśigā,* பெ. (n.) செவ்வாம்பல்; red Indian water lily (சா.அக.).

**சிவப்பரிசி** *śivappariśi,* பெ. (n.) 1. மட்டையரிசி; red rice of an inferior kind of paddy. 2. பத்தியத்திற்கு (மருந்துணவுக்குப்) பயன்படும் கருங்குருவையரிசி; black paddy, the red rice of which is used in diet (சா.அக.).

*[சிவப்பு + அரிசி]*

**சிவப்பரிதகிக்காய்** *śivapparidagikkāy,* பெ. (n.) சிவந்திக்கடுக்காய் பார்க்க; see *śivandi-k-kaḍukkāy* (சா.அக.).

*[சிவப்பு + அரிதகிக்காய்]*

**சிவப்பரைக்கீரை** *śivapparai-k-kīrai,* பெ. (n.) செந்நிறமுள்ள அரைக்கீரை; red garden greens (சா.அக.).

*[சிவப்பு + அரைக்கீரை]*

**சிவப்பல்லி** *śivappalli,* பெ. (n.) செவ்வாம்பல்; red Indian water lily.

*[சிவப்பு + அல்லி]*

**சிவப்பல்லிக்கிழங்கு** *śivappalli-k-kiḻaṅgu,* பெ. (n.) செம்பின் களிம்பைப் போக்கிச் செந்தூரவண்ணமாக்குந் தன்மையுள்ள செங்கழுநீர்க் கிழங்கு; root of red Indian water lilly. It is useful for purifying and calcining copper.

*[சிவப்பு + அல்லி + கிழங்கு]*

**சிவப்பலரி** *śivappalari,* பெ. (n.) செவ்வரளி; red oleander (சா.அக.).

*[சிவப்பு + அலரி]*

**சிவப்பலி** *śivappali,* பெ. (n.) செம்மரம்; red wood (சா.அக.).

**சிவப்பவரை** *śivappavarai,* பெ. (n.) குங்கும நிறமுடைய சிவந்த அவரைக்கொடி, இதன் இலைச்சாறு பொன்னைச் சிந்தூரமாக்குந் தன்மையது; red bean creeper the juice of the leaves is used for calcining gold (சா.அக.).

*[சிவப்பு + அவரை]*

**சிவப்பன்** *śivappaṉ,* பெ. (n.) செந்நிறமுள்ளவன்; a man of ruddy or fair complexion. "பேர் கறுப்பனிறஞ் சிவப்பன்" (தனிப்பா. i, 216:1).

கோத்த: கெம்பன்

*[சிவ் → சிவ → சிவப்பு → சிவப்பன் (வே.க. 222)]*

**சிவப்பாக்கல்** *śivappākkal,* தொ. பெ. (vbl.n.) செந்தூரமாகச் செய்தல்; calcining into a red powder (சா.அக.).

**சிவப்பாதளை** *śivappādaḷai,* பெ. (n.) 1. சீமையாதளை; foreign physic nut. 2. செவ்வாமணக்கு; red castor plant (சா.அக.).

**சிவப்பாம்பல்** *śivappāmbal,* பெ. (n.) செந்நிற மலர்தரும் ஆம்பல்; water-lily having red flower.

ம. சுவன்னஆம்பல்

*[சிவப்பு + ஆம்பல்]*

**சிவப்பாமணக்கு** *śivappāmaṇakku,* பெ. (n.) ஆமணக்குவகை; a variety of castor-plant.

*[சிவப்பு + ஆமணக்கு]*

**சிவப்பார்வை** *śiva-p-pārvai,* பெ. (n.) இறைவனது பத்து வகையருளிச் செயல்களுள், ஆதனது (ஆன்மா) சிறுமையையும், தன் முயற்சியாலன்றித் தனக்கருள் புரிந்த இறைவனது பெருமையையும் தெளிய வுணர்ந்து கொள்ளுதலாகிய ஆதனின் அருளுணர்வு நிலை (சிவப்.கட்.); spiritual experience of the soul in which it understands its own limitations and perceives the Divine wisdom which, of its own accord, bestows grace one of dasa-kāriyam.

*[சிவம் + பார்வை]*

**சிவப்பாற்றுச்சவுக்கு** *šivappāṟṟu-c-cavukku*, பெ. (n.) *சிவப்பான காயினையுங் கசப்புத் தன்மை வாய்ந்த பட்டையையுமுடைய சிவந்த ஆற்றுச் சவுக்கு மரம்;* red Indian tamarisk galls are employed as an astringent and tonic and bark is bitter *(சா.அக.).*

*[சிவப்பு + ஆற்று + சவுக்கு]*

**சிவப்பானபசளை** *šivappāṉa-pašaḷai*, பெ. (n.) *செம்பசளைக்கீரை;* red Indian spinach *(சா.அக.).*

*[சிவப்பு + பசளை]*

**சிவப்பானந்தவல்லி** *šivappāṉanda-valli*, பெ. (n.) *கோழித்தலைக் கந்தகம்;* red sulphur *(சா.அக.).*

*[சிவப்பு + ஆனந்தவல்லி]*

**சிவப்பானவெள்ளைச்சி** *šivappāṉa-veḷḷaicci*, பெ. (n.) *புற்றாம்பழம் (யாழ்.அக.);* a kind of ore.

**சிவப்பி**[1] *šivappi*, பெ. (n.) *1. சிவப்பு நிறமுள்ளவள்;* woman of ruddy or fair complexion. *2. செந்தெங்கு (யாழ். அக.);* reddish coconut.

கோத்த: கெம்பய்

*[சிவ → சிவப்பி (வே. க. 222)]*

**சிவப்பி**[2] *šivappi*, பெ. (n.) *1. செவ்வாமணக்கு;* red castor plant. *2. செந்திராய்;* red Indian chickweed. *3. தொட்டி வைப்புநஞ்சு;* a prepared arsenic. *4. அரத்த வைப்புநஞ்சு;* red arsenic. *5. செவ்வகத்தி;* west Indian sesban *(சா.அக.).*

*[சிவப்பு → சிவப்பி. 'இ' உடைமைப் பொருளீறு]*

**சிவப்பிப்பால்** *šivappi-p-pāl*, பெ. (n.) *சிவந்த பெண் முலைப்பால்;* breast milk of a fair woman *(சா.அக.).*

*[சிவப்பி + பால்]*

**சிவப்பிரகாசம்**[1] *šiva-p-piragāsam*, பெ. (n.) *மெய்கண்ட பதினான்கனுள் உமாபதி சிவாச்சாரியாரால் இயற்றப்பெற்ற சிவனியக் கொண்முடிபு நூல் (சிவப்பிர. பாயி. 11);* a text book of the Šaiva Šittānda philosophy by Umāpadi-Šivāccāriyār, one of 14 mey-kaṇḍa-šāttiram.

**சிவப்பிரகாசர்** *šivappiragāšar*, பெ. (n.) *பதினேழாம் நூற்றாண்டிலிருந்தவரும், பிரபுலிங்கலீலை, நன்னெறி முதலிய நூல்களின் ஆசிரியரும், வீரச் சிவனிய மதத்தைச் சார்ந்தவருமாகிய ஒரு துறவி;* a Vira-Šaiva ascetic, author of Prabuliṅga-līlai, Naṉṉeṟi and some other works, 17th century.

**சிவப்பிராமணர்** *šiva-p-prāmaṇar*, பெ. (n.) *சிவன்கோயிற் பூசை, முதலான ஒழுகலாறுகளை மேற்கொண்ட அதிகாரிகள்;* Brāhmans, who conduct service in Šiva temples. "வீரசோழன் திருமடை விளாகத்தில் குடியிருந்த தவசியர்க்கும் சிவப்பிராமணர்க்கும்" *(தெ.க.தொ. 3, 47).*

*[சிவன் + பிராமணர்]*

**சிவப்பிரியம்** *šiva-p-piriyam*, பெ. (n.) *அக்கமணி (சங்.அக.);* rudrākṣa bead.

*[சிவன் + பிரியம். புரியம் → பிரியம்]*

குமரி நாட்டுக் காலந்தொட்டுச் சிவநெறித் தமிழரால் அணியப்பட்டு வரும் அக்கமணி (முள்மணி) சிவனுக்கு விருப்பமானது என்னும் அடிப்படையில் சிவப்பிரியம் என வழங்கப்பெற்றது.

**சிவப்பிரியா** *šiva-p-piriyā*, பெ. (n.) *கருப்பு வண்ண ஊமத்தை;* black datura *(சா.அக.).*

**சிவப்பிரியை** *šiva-p-piriyai*, பெ. (n.) *சிவபிரானது அன்புடைய உமையம்மை;* Umai, as the beloved of Šivaṉ.

*[சிவன் + பிரியை]*

**சிவப்பிவேர்** *šivappi-vēr*, பெ. (n.) *நச்சுப்புல்;* a species of poisonous grass *(சா.அக.).*

*[சிவப்பி + வேர்]*

**சிவப்பீயம்** *šivappīyam*, பெ. (n.) *செம்மண் நிறமுள்ள ஈயத்தூள்;* a heavy bright red powder of lead *(சா.அக.).*

ம. சுவப்பீயம்

*[சிவப்பு + ஈயம்]*

**சிவப்பு**[1] *šivappu,* பெ. (n.) 1. செந்நிறம் (பிங்.); ruddiness, red colour. 2. சிவப்புக்கல்; ruby. 3. கறுப்பு (அக.நி.); blackness.

ம. சிவப்பு, செமப்பு; க. கெம்பு; தெ. செம்; து. கெம், கெஞ்ச, கெஞ்சி, கெம்பு; பட. கெப்பு; குரு. கேசொ; மா. கெசோ.

*[செம் → செவ் → சிவ் → சிவ → சிவப்பு (வே.க.222)]*

**சிவப்பு**[2] *šivappu,* பெ. (n.) சினம்; anger, "கறுப்புஞ் சிவப்பும் வெகுளிப் பொருள" (தொல். சொல். 372).

*[செம் → செவ் → சிவ் → சிவ → சிவப்பு. (வே. க. 222)]*

**சிவப்பு**[3] *šivappu,* பெ. (n.) 1. சாதிலிங்கம்; vermilion. 2. மகளிர் (சூதகம்) தீட்டு; menstrual blood. 3. செந்தூரம்; red-oxide. 4. சிவப்புக் கல்நார்; red variety of asbestos. 5. அரக்கு; sealing wax.

*[செம் → செவ் → சிவ் → சிவ → சிவப்பு]*

**சிவப்பு**[4] *šivappu,* பெ. (n.) சீட்டு முதலிய விளையாட்டுகளில் வென்ற குழுவினருக்கு இடுங்குறியீடு; score of a winning party in a game of cards, etc.,

*[சிவ → சிவப்பு]*

**சிவப்புக்கசகசா** *šivappu-k-kašakašā,* பெ. (n.) செந்நிறக் கசகசா; red poppy seed (சா.அக.).

*[சிவப்பு + கசகசா]*

**சிவப்புக்கடுக்காய்** *šivappu-k-kaḍukkāy,* பெ. (n.) செங்கடுக்காய்; red gallnut (சா.அக.).

மறுவ. சிவந்திக்கடுக்காய், சிவப்புச்சிந்தாதி

*[சிவப்பு + கடுக்காய்]*

**சிவப்புக்கத்தரிக்காய்** *šivappu-k-kattarikkāy,* பெ. (n.) 1. சிவந்த கத்தரிக்காய்; red brinjal plant. 2. செங்கத்தரி; caper shrub (சா.அக.).

*[சிவப்பு + கத்தரிக்காய்]*

**சிவப்புக்கத்திரகம்** *šivappu-k-kattiragam,* பெ. (n.) மதிமயக்கிப் பூடு; a plant supposed to cause bewilderment if trodden upon or interfered with (சா.அக.).

மறுவ. திகைப்பூடு

**சிவப்புக்கத்திரி** *šivappu-k-kattiri,* பெ. (n.) சிவப்புக்கத்தரிக்காய் பார்க்க; see *šivappu-k-kattarikkāy.*

*[சிவப்புக் கத்தரிக்காய் → சிவப்புக் கத்திரி]*

**சிவப்புக்கந்தகம்** *šivappu-k-kandagam,* பெ. (n.) செயற்கைப் பொன் மற்றும் வெள்ளி செய்யப் பயன்படும் கந்தகம்; red sulphur used to preparing artificial gold and silver (சா.அக.).

*[சிவப்பு + கந்தகம்]*

**சிவப்புக்கந்தி** *šivappu-k-kandi,* பெ. (n.) கோழித்தலைக் கந்தகம் (வின்.); a mineral poison.

*[சிவப்பு + கந்தி]*

**சிவப்புக்கந்திகா** *šivappu-k-kandigā,* பெ. (n.) பூனைவணங்கி; rubbish plant (சா.அக.).

மறுவ. குப்பைமேனி

*[சிவப்பு + கந்திகா]*

**சிவப்புக்கரிசாலை** *šivappu-k-karišālai,* பெ. (n.) பொற்றளைக் கையாந்தகரை; Ceylon verbesina.

மறுவ. சிவந்த கரிசலாங்கண்ணி, சிவப்புக் கரிசலாங்கண்ணி, சிவப்புக் கையான்.

*[சிவப்பு + கரிசாலை]*

**சிவப்புக்கரு** *šivappu-k-karu,* பெ. (n.) முட்டையிலுள்ள மஞ்சட்கரு (வின்.); yolk of an egg.

*[சிவப்பு + கரு]*

**சிவப்புக்கல்** *šivappu-k-kal,* பெ. (n.) 1. ஈரற்கல் (வின்.); a red stone. 2. கெம்புக்கல் (உ.வ.); ruby.

க. கெம்புகல்லு

*[சிவப்பு + கல்]*

**சிவப்புக்கலவாய்** *šivappu-k-kalavāy,* பெ. (n.) சிவப்புக்களவாய் பார்க்க; see *šivappu-k-kaḷavāy.*

*[சிவப்புக்களவாய் → சிவப்புக்கலவாய்]*

**சிவப்புக்கழற்சி** *šivappu-k-kaḻarci,* பெ. (n.) செந்நிறமுள்ள கழற்சிக்காய்; a red variety of bonduc nut (சா.அக.).

*[சிவப்பு + கழற்சி]*

**சிவப்புக்கழி-தல்** *śivappu-k-kaḻi-,* 2 செ.கு.வி. (v.i) *1.* மாதவிடாயாதல்; to menstruate. *2.* மட்டுமீறிய மாதவிடாயாதல்; to menorrhagia (சா.அக.).

*[சிவப்பு + கழி-,]*

**சிவப்புக்களவாய்** *śivappu-k-kaḷavāy,* பெ. (n.) மிக்க செந்நிறமுள்ளதும், மூன்றடி நீளம் வளர்வதுமாகிய கடல்மீன் வகை; sea fish, lake, attaining 3 ft. in length.

*[சிவப்பு + களவாய்]*

களவாய் பார்க்க.

**சிவப்புக்கற்பூரம்** *śivappu-k-kaṟpūram,* பெ. (n.) இதளியக் கற்பூரம்; a red arsenic camphor (சா.அக.).

*[சிவப்பு + கற்பூரம்]*

**சிவப்புக்கற்றாழை** *śivappu-k-kaṟṟāḻai,* பெ. (n.) செங்கற்றாழை; red aloe (சா.அக.).

*[சிவப்பு + கற்றாழை]*

**சிவப்புக்காசரைக்கீரை** *śivappu-k-kāśarai-k-kīrai,* பெ. (n.) புளிச்சைக்கீரை; red Indian brown hemp.

மறுவ. சீமைக் காசரைக் கீரை

*[சிவப்பு + காசரை + கீரை]*

**சிவப்புக்காசற்கீரை** *śivappu-k-kāśaṟkīrai,* பெ. (n.) சிவப்புக்காசரைக்கீரை பார்க்க; see *śivappu-k-kāśarai-k-kīrai.*

**சிவப்புக்காசித்தும்பை** *śivappu-k-kāśi-t-tumbai,* பெ. (n.) செந்நிறமான காசித்தும்பை; a red tumbay flower (சா.அக.).

*[சிவப்பு + காசித்தும்பை]*

**சிவப்புக்காசினிக்கீரை** *śivappu-k-kāśiṉi-k-kīrai,* பெ. (n.) செந்நிறமான காசினிக்கீரை வகை; endive plant (சா.அக.).

*[சிவப்பு + காசினிக்கீரை]*

**சிவப்புக்காஞ்சொறி** *śivappu-k-kāñjoṟi,* பெ. (n.) செந்தொட்டிப் படர்கொடி; climbing nettle (சா.அக.).

*[சிவப்பு + காஞ்சொறி]*

**சிவப்புக்காட்டுக்கோழி** *śivappu-k-kāṭṭu-k-kōḻi,* பெ. (n.) *1.* செந்நிறமுள்ள காட்டுச் சம்பங் கோழி; red jungle fowl. *2.* சிறகுக்கோழி; red spur fowl.

*[சிவப்பு + காட்டுக்கோழி]*




**சிவப்புக்காதி** *śivappu-k-kādi,* பெ. (n.) செம்பசளை; red Malabar night shade.

*[சிவப்பு + காதி]*

**சிவப்புக்காந்தள்** *śivappu-k-kāndaḷ,* பெ. (n.) செங்காந்தள்; flame flower (சா.அக.).

*[சிவப்பு + காந்தள்]*

**சிவப்புக்காய்ச்சுரை** *śivappu-k-kāy-c-curai,* பெ. (n.) சீமைக்காய்ச்சுரை; red sorrel (சா.அக.).

மறுவ. செம்புளிச்சை

*[சிவப்பு + காய்ச்சுரை]*

**சிவப்புக்காய்வேளை** *śivappu-k-kayvēḷai,* பெ. (n.) செங்கீரை வகை; red cleome (சா.அக.).

*[சிவப்பு + காய்வேளை]*

**சிவப்புக்கார்கண்டல்** *śivappu-k-kārgaṇḍal,* பெ. (n.) சேற்றுநிலத்தில் விளையும் மரவகை; tree mangrove (சா.அக.).

*[சிவப்பு + கார்கண்டல்]*

**சிவப்புக்காவி** *śivappu-k-kāvi,* பெ. (n.) பூங்காவிக்கல்; red ochre containing much oxide of iron, used by dyers as red paint (சா.அக.).

*[சிவப்பு + காவி]*

**சிவப்புக்கி** *śivappukki,* பெ. (n.). சிவகரந்தை பார்க்க; see *śivagarandai* (சா.அக.).



சிவப்புக் குன்றிமணி



சிவப்புக் கொடிவேலி



சிவப்பு மந்தாரை



சிவனார்வேம்பு

**சிவப்புக்கிலுகிலுப்பை** *šivappu-k-kilu-kiluppai,* பெ. (n.) செங்கிலுகிலுப்பை; red crotolaria (சா.அக.).

*[சிவப்பு + கிலுகிலுப்பை]*

**சிவப்புக்கீழ்க்காய்நெல்லி** *šivappu-k-kīḻ-k-kay-nelli,* பெ. (n.) அடித்தண்டு செந்நிறமாயிருக்கும் ஒருவகைக் கீழ்க்காய் நெல்லி; red neeroory (சா.அக.).

*[சிவப்பு + கீழ்க்காய் + நெல்லி]*

**சிவப்புக்கீழாநெல்லி** *šivappu-k-kīḻānelli,* பெ. (n.) சிவப்புக்கீழ்க்காய்நெல்லி பார்க்க; see *šivappu-k-kīḻ-k-kay-nelli* (சா.அக.).

*[சிவப்பு + கீழாநெல்லி (உ.வ.) இதனைக் கீழ்க்காய் நெல்லி என வழங்குவதே திருந்திய வடிவம்]*

**சிவப்புக்குங்கிலியம்** *šivappu-k-kuṅgiliyam,* பெ. (n.) குங்கிலிய மரவகையுளொன்று (மூ.அ); red dammer.

*[சிவப்பு + குங்கிலியம்]*

**சிவப்புக்குத்தாளை** *šivappu-k-kuttāḷai,* பெ. (n.) நெல்வகை; a kind of paddy (சா.அக.).

*[சிவப்பு + குத்தாளை]*

குத்தாளை = நெல்வகை, வானவாரியாக விளையக்கூடியது

**சிவப்புக்கும்மிட்டி** *šivappu-k-kummiṭṭi,* பெ. (n.) சிவப்புக்கொம்மட்டி பார்க்க; see *šivappu-k-kommaṭṭi* (சா.அக.).

*[சிவப்புக்கொம்மட்டி → சிவப்புக் கும்மட்டி → சிவப்புக்கும்மிட்டி]*

**சிவப்புக்குன்றி** *šivappu-k-kuṉṟi,* பெ. (n.) சிவப்புநிறமுள்ள குன்றிமணி; crab's eye (சா.அக.).

மறுவ. குன்றிமுத்து, குண்டுமணி

*[சிவப்பு + குன்றி]*

**சிவப்புக்கூத்தன்** *šivappu-k-kūttaṉ,* பெ. (n.) சிவப்புநிறமுள்ள காதணிவகையு ளொன்று; a red variety of ear-ring (சா.அக.).

*[சிவப்பு + கூத்தன்]*

**சிவப்புக்கெண்டை** *šivappu-k-keṇḍai,* பெ. (n.) 1. சேற்கெண்டை; red carp. 2. பூமீன்கெண்டை; red masheer or salmon of India (சா.அக.).

*[சிவப்பு + கெண்டை]*

**சிவப்புக்கெந்தி** *šivappu-k-kenḍi,* பெ. (n.) சிவப்புக்கந்தகம் பார்க்க; see *šivappu-k-kandagam* (சா.அக.).

*[சிவப்பு + கெந்தி. கந்தகம் → கெந்தி]*

**சிவப்புக்கையான்** *šivappu-k-kaiyāṉ,* பெ. (n.) சிவப்புக்கரிசாலை பார்க்க; see *šivappu-k-karišālai* (சா.அக.).

மறுவ. பொற்றலைக் கையாந்தகரை, சிவந்த கரிசாலை

*[சிவப்பு + கையான்]*

**சிவப்புக்கொட்டைக்கரந்தை** *šivappu-k-koṭṭai-k-karandai,* பெ. (n.) சிறு நீரடைப்பைப் போக்குங் கரந்தைச் செடி; Indian globe thistle (சா.அக.).

*[சிவப்பு + கொட்டை + கரந்தை]*

**சிவப்புக்கொடிப்பசலை** *šivappu-k-koḍi-p-pašaḷai,* பெ. (n.) இரவில் பூக்கும் கொடி வகை (மூ.அ.); red malabar nightshade (சா.அக.).

*[சிவப்பு + கொடிப்பசலை]*

**சிவப்புக்கொடிவேலி** *šivappu-k-koḍivēli,* பெ. (n.) செங்கொடி வேலி; rosy coloured leadwort (சா.அக.).

*[சிவப்பு + கொடிவேலி]*

**சிவப்புக்கொம்மட்டி** *šivappu-k-kommaṭṭi,* பெ. (n.) செங்கொம்மட்டி; red bitter water melon (சா.அக.).

*[சிவப்பு + கொம்மட்டி]*

**சிவப்புக்கொய்யா** *šivappu-k-koyyā,* பெ. (n.) செங்கொய்யா; red guava (சா.அக.).

*[சிவப்பு + கொய்யா]*

**சிவப்புக்கொன்றை**[1] *šivappu-k-koṉṟai,* பெ. (n.) வரிக்கொன்றை; red Indian laburnum (சா.அக.).

*[சிவப்பு + கொன்றை]*

**சிவப்புக்கொன்றை**[2] *šivappu-k-konrai*, பெ. (n.) அழகிற்காகத் தோட்டங்களிற் பயிராக்கப் படும் செங்கொன்றை; red Indian laburnum planted in garden for ornamental purposes (சா.அக.).

*[சிவப்பு + கொன்றை]*

**சிவப்புக்கோடைச்சவுக்கு** *šivappu-k-kōḍai-c-cavukku*, பெ. (n.) இறகுபோன்ற கிளைகளை உடைய ஆற்றுச்சவுக்கு; tamarisk (சா.அக.).

*[சிவப்பு + கோடை + சவுக்கு]*

**சிவப்புச்சங்கு** *šivappu-c-caṅgu*, பெ. (n.) வெண் சிவப்புநிறமுள்ள சங்குவகை; pink coloured conch (சா.அக.).

*[சிவப்பு + சங்கு]*

**சிவப்புச்சத்திசாரணை** *šivappu-c-cattišāraṇai*, பெ. (n.) செந்நிறமும் சிறியதும் சதைப்பற்றும் வாய்ந்த இலையினையுடையதும், உணவிற்குக் கீரையாகப் பயன்படுவதுமான சத்திசாரணை மூலிகை; red shauranay. It is a procumbent herb with fleshy red leaves and it is used in food like vegetable greens (சா.அக.).

*[சிவப்பு + சத்திசாரணை]*

**சிவப்புச்சதுரக்கள்ளி** *šivappu-c-cadura-k-kaḷḷi*, பெ. (n.) செங்கள்ளி; a red variety of square spurge (சா.அக.).

*[சிவப்பு + சதுரக்கள்ளி]*

**சிவப்புச்சந்தனம்** *šivappu-c-candaṉam*, பெ. (n.) செஞ்சந்தன மரவகை; a kind of red sandals (சா.அக.).

*[சிவப்பு + சந்தனம்]*

**சிவப்புச்சந்தானிகம்** *šivappu-c-candāṉigam*, பெ. (n.) செம்மாதுளை; red pomegranate.

*[சிவப்பு + சந்தானிகம்]*

**சிவப்புச்சவ்வீரம்** *šivappu-c-cavvīram*, பெ. (n.) இதளியஞ் சேர்த்துருவாக்கப்பட்ட வீரவைப்பு நஞ்சு வகையுளொன்று; a prepared sublimate of mercury (சா.அக.).

*[சிவப்பு + சவ்வீரம்]*

**சிவப்புச்சாமந்தி** *šivappu-c-cāmandi*, பெ. (n.) கொத்தாக மலரும் சாமந்தி வகை; red chrysanthemum (சா.அக.).

*[சிவப்பு + சாமந்தி. சாமம் + அந்தி → சாமந்தி = அந்தி வண்ணம் போன்ற நிறமுடைய பூவகை]*

**சிவப்புச்சாமை** *šivappu-c-cāmai*, பெ. (n.) செஞ்சாமை; red species of little millet (சா.அக.).

மறுவ. மத்தங்காய்ப்புல்

*[சிவப்பு + சாமை. சமை → சாமை]*

**சிவப்புச்சாரணை** *šivappu-c-cāraṇai*, பெ. (n.) சிவப்புச்சத்திசாரணை பார்க்க; see *šivappu-c-cattišāraṇai* (சா.அக.).

*[சிவப்புச்சத்திசாரணை → சிவப்பு சாரணை]*

**சிவப்புச்சாரம்** *šivappu-c-cāram*, பெ. (n.) மருந்துச்சரக்குகளைக் கொல்லுந் தன்மை மிக்க சாரம்; an unknown alkaline potash supposed to kill some of the drugs (சா.அக.).

*[சிவப்பு + சாரம். காரம் → சாரம்]*

**சிவப்புச்சாறு** *šivappu-c-cāṟu*, பெ. (n.) தேட் கொடுக்குப்பூடு; scorpion sting plant (சா.அக.).

*[சிவப்பு + சாறு]*

**சிவப்புச்சிக்கு** *šivappu-c-cikku*, பெ. (n.) புளி யிண்டு; rosy-flushed assitello climber (சா.அக.).

*[சிவப்பு + சிக்கு]*

**சிவப்புச்சிங்கிரா** *šivappu-c-ciṅgirā*, பெ. (n.). செவ்வரளி; red oleander.

*[சிவப்பு + சிங்கிரா]*

**சிவப்புச்சிங்கொனா** *šivappu-c-ciṅgoṇā*, பெ. (n.) சிவப்புச்சுரப்பட்டை பார்க்க; see *šivappu-c-curappaṭṭai* (சா.அக.).

*[சிவப்பு + சிங்கொனா]*

**சிவப்புச்சித்திரமூலம்** *šivappu-c-cittira-mūlam*, பெ. (n.) செங்கொடிவேலி; rosy-flowered leadwort (சா.அக.).

*[சிவப்பு + சித்திரமூலம்]*

**சிவப்புச்சிந்தாதி** *šivappu-c-cindādi,* பெ. (n.) *சிவந்திக்கடுக்காய் பார்க்க;* see *šivandi-k-kaḍukkāy (சா.அக.).*

*[சிவப்பு + சிந்தாதி]*

**சிவப்புச்சிவதை** *šivappu-c-civadai,* பெ. (n.). குடலிளக்க மருந்தாகப் பயன்படும் செஞ்சிவதை வேர்; a red variety of turbith root.

*[சிவப்பு + சிவதை]*

**சிவப்புச்சிற்றகத்தி** *šivappu-c-ciṟṟāgatti,* பெ. (n.) *சிவப்பு வகை அகத்தி;* red sesbana *(சா.அக.).*

*[சிவப்பு + சிற்றகத்தி]*

**சிவப்புச்சிற்றாமரை** *šivappu-c-ciṟṟāmarai,* பெ. (n.) *முளரிமலர் (உரோசா);* rose-flower *(சா.அக.).*

*[சிவப்பு + சிற்றாமரை]*

**சிவப்புச்சிறுசவுக்கு** *šivappu-c-ciṟu-šavukku,* பெ. (n.). *கோடைச்சவுக்கு;* common tamarisk *(சா.அக.).*

*[சிவப்பு + சிறுசவுக்கு]*

**சிவப்புச்சிறுமணியன்** *šivappu-c-ciṟumaṇiyaṉ,* பெ. (n.) *சம்பாநெல் வகை (தஞ்சை.);* a variety of cambā paddy *(சா.அக.).*

*[சிவப்பு + சிறுமணியன். சிறுமணி → சிறுமணியன்]*

**சிவப்புச்சிறுமுறியன்** *šivappu-c-ciṟu-muṟiyaṉ,* பெ. (n.) *நெல்வகை;* a kind of paddy *(சா.அக.).*

*[சிவப்பு + சிறுமுறியன்]*

**சிவப்புச்சீதாசெங்கழுநீர்** *šivappu-c-cīdā-šeṅgaḻunīr,* பெ. (n.) *சிவப்பு நெய்ச்சிட்டிக் கீரை;* a red variety of ash coloured fleabane *(சா.அக.).*

*[சிவப்பு + சீதா + செங்கழுநீர்]*

**சிவப்புச்சீபிகம்** *šivappu-c-cībigam,* பெ. (n.). *சிவப்புக்கழற்சி பார்க்க;* see *šivappu-k-kaḻaṟci (சா.அக.).*

**சிவப்புச்சீமைப்பிச்சி** *šivappu-c-cīmai-p-picci,* பெ. (n.) 1. *சீனப்பவளப்பிச்சி;* China coral jasmine. 2. *பாரசீகப்பழம்;* Persian fruit *(சா.அக.).*

*[சிவப்பு + சீமைப்பிச்சி]*

**சிவப்புச்சுரப்பட்டை** *šivappu-c-curappaṭṭai,* பெ. (n.) *சிவப்புச் சின்கொனாப்பட்டை;* California cinchona bark *(சா.அக.).*

*[சிவப்பு + சுரப்பட்டை]*

**சிவப்புச்சோளம்** *šivappu-c-cōḷam,* பெ. (n.) *செஞ்சோளம்;* red maize.

*[சிவப்பு + சோளம்]*

**சிவப்புச்சோற்றுக்கற்றாழை** *šivappu-c-cōṟṟu-k-kaṟṟāḻai,* பெ. (n.) *செங்கற்றாழை;* curacoa aloes *(சா.அக.).*

*[சிவப்பு + சோற்றுக்கற்றாழை]*

**சிவப்புத்தண்டுக்கீரை** *šivappu-t-taṇḍu-k-kīrai,* பெ. (n.) *தண்டுக்கீரை;* a pot-herb *(சா.அக.).*

மறுவ. தண்டங்கீரை

*[சிவப்பு + தண்டுக்கீரை]*

**சிவப்புத்தம்பட்டை** *šivappu-t-tampaṭṭai,* பெ. (n.) *வாளவரை வகை;* ovate-leaved red-flowered sword-bean *(சா.அக.).*

*[சிவப்பு + தம்பட்டை]*

**சிவப்புத்தலைக்கிளி** *šivappu-t-talaikkiḷi,* பெ. (n.) *செந்நிறக்கொண்டையுள்ள கிளி;* rose-headed parrot *(சா.அக.).*

*[சிவப்புத்தலை + கிளி]*

**சிவப்புத்தில்லை** *šivappu-t-tillai,* பெ. (n.) *மலைமூலிகை இருபத்துமூன்றுள் ஒன்றாகிய சிவப்புத் தில்லை மரம்;* a red variety of tigermilk tree which is one of the twenty three mountain herbs *(சா.அக.).*

**சிவப்புத்துத்தி** *šivappu-t-tutti,* பெ. (n.) *செந்துத்தி;* devil's cotton *(சா.அக.).*

மறுவ. துத்தி, வட்டத்துத்தி, வட்டக்கண்ணி

*[சிவப்பு + துத்தி]*

**சிவப்புத்துவரை** *šivappu-t-tuvarai,* பெ. (n.) *துவரை வகை;* red gram *(சா.அக.).*

*[சிவப்பு + துவரை]*

**சிவப்புநண்டு** *šivappu-naṇḍu,* பெ. (n.). *கடற்கரையோரமாகக் காணப்படும் சிவப்பு நிறமுள்ள நண்டு;* red - crab found in sea-shore.

*[சிவப்பு + நண்டு]*

**சிவப்புப்பசலை** *śivappu-p-paśalai,* பெ. (n.) கீரை வகை (சங்.அக.); a variety of Indian spinach.

மறுவ. பசளைக்கீரை, செம்பசளைக் கீரை

க. கெபுபசளெ

*[சிவப்பு + பசலை]*

**சிவப்புப்பனையேறி** *śivappu-p-paṉaiyēṟi,* பெ. (n.) கிச்சிலிநிறமும் மஞ்சள் புள்ளிகளும் உடைய ஒரு வகை மீன்; a variety of orange colour and yellow spots (சா.அக.).

*[சிவப்பு + பனையேறி]*

**சிவப்புப்பூலா** *śivappu-p-pūlā,* பெ. (n.) 1. பூலா; feather foil, a large shrub. 2. பவளப்பூலா; coral berry tree.

*[சிவப்பு + பூலா]*

**சிவப்புமந்தாரை** *śivappu-mandārai,* பெ. (n.) மந்தாரை வகையுளொன்று (மூ. அ.); a variety of purple variegated mountain ebony.

க. கெம்புமந்தார

*[சிவப்பு + மந்தாரை]*

**சிவப்புமரம்** *śivappu-maram,* பெ. (n.) 1. செம்மரம்; Coromandel redwood. 2. விளாரி; bastard cedar.

*[சிவப்பு + மரம்]*

**சிவப்புமருதோன்றி** *śivappu-marudōṉṟi,* பெ. (n.) செம்மருது; a red variety of nail dye (சா.அக.).

*[சிவப்பு + மருதோன்றி]*

**சிவப்புமிளகு** *śivappu-miḷagu,* பெ. (n.) சம்பா நெல் வகையுளொன்று; a kind of cambā paddy (சா.அக.).

மறுவ. மிளகுச் சம்பா

*[சிவப்பு + மிளகு. மிளகு = மிளகுச் சம்பா]*

நீண்டு மெலிந்த மணியுடைய நெல்லைச் சீரகச்சம்பா என்றும், உருண்டை வடிவ மணியுடைய நெல்லை மிளகுச்சம்பா என்றும், தடித்த மணியுடைய நெல்லைக் கட்டைச்சம்பா என்றும் வழங்குவர்.

சம்பா பொதுவாய்க் கூலத்தையும், சிறப்பாய் நெல்லையும் குறிக்கும்.

**சிவப்புமுள்ளங்கி** *śivappu-muḷḷaṅgi,* பெ. (n.) செந்நிறமுள்ள முள்ளங்கிக்கிழங்கு வகை (இ.வ.); red country radish.

*[சிவப்பு + முள்ளங்கி]*

**சிவப்புமூக்குள்ளான்** *śivappu-mūkkuḷḷāṉ,* பெ. (n.) உள்ளான் வகை; painted snipe.

*[சிவப்பு மூக்கு + உள்ளான்]*




**சிவப்புமொச்சை** *śivappu-moccai,* பெ. (n.) மொச்சை வகை; red bean.

*[சிவப்பு + மொச்சை]*

**சிவப்புவாடாமல்லிகை** *śivappu-vāḍā-malligai,* பெ. (n.) செம்மல்லிகை வகையுளொன்று; a red variety of globe everlasting jasmine.

*[சிவப்பு + வாடாமல்லிகை]*

**சிவப்புவெட்சி** *śivappu-veṭci,* பெ. (n.) வெட்சி வகை; pink ixora.

*[சிவப்பு + வெட்சி]*

**சிவப்புவேர்** *śivappu-vēr,* பெ. (n.) நச்சுப் புல் வகையுளொன்று; a red variety of poisonous grass (சா.அக.).

*[சிவப்பு + வேர்]*

**சிவப்பூ** *śivappū,* பெ. (n.) மரவகை; bastard cedar (சா.அக.).

**சிவப்பூர்-தல்** *śivappūr-,* 2 செ.கு.வி. (v.i.) சிவந்த நிறமடைதல்; to redden. "செவ்விரல் சிவப்பூர" (கலித். 76).

*[சிவப்பு + ஊர். உறு-தல் → ஊர்-,]*

**சிவப்பெலிச்செவி** *śivap-peli-c-cevi,* பெ. (n.). *சிவப்பு நிறமுள்ள எலிச்செவிக்கீரை வகை;* a red variety of rat's ear green plant *(சா.அக.).*

*[சிவப்பு + எலி + செவி]*

**சிவப்பேறு-தல்** *śiva-p-pēṟu-,* 5 செ.குன்றாவி. (v.t.) *செந்நிறமடைதல்;* to redden.

*[சிவப்பு + ஏறு-,]*

**சிவப்பேறு** *śivappēṟu,* பெ. (n.). *சிவமாந் தன்மையை அடைகை;* realization of God-head. "*ஆன்மசுத்திப்பின் சிவப்பேறாமாறு உணர்த்துகின்றது*" *(சி.போ.பா.அவை. பக்.4).*

*[சிவம் + பேறு]*

**சிவப்பொட்டடை** *śivappoṭṭaḍai,* பெ. (n.) *செந்நிறமுள்ள ஒட்டடை நெல்வகை;* a red variety of oṭṭaḍai paddy.

*[சிவப்பு + ஒட்டடை]*

**சிவப்போணான்** *śivappōṇāṉ,* பெ. (n.) *சித்தியோணான் (வின்.);* a species of small blood-sucker.

*[சிவப்பு + ஓணான்]*

**சிவப்போளகம்** *śiva-p-pōḷagam,* பெ. (n.) *அரத்தபோளம்;* red dammer *(சா.அக.).*

*[சிவப்பு + போளகம்]*

**சிவபண்டாரி** *śiva-paṇḍāri,* பெ. (n.) 1. *சிவாலயக் கருவூலக்காரன்;* treasurer of Śaiva temple. "*சிவபண்டாரிகள் வசமும்*" (தெ.க.தொ. 1,140). 2. *சிவாலயத்தின் சரக்கறைக்காரன்* (இ.வ.); store keeper of a Śivaṉ temple.

*[சிவன் + பண்டாரி]*

*பண்டம் = சரக்கு, பணம், கருவூலம், பொன். பண்டத்தையுடையவனும், காப்பவனும் பண்டாரி எனப்பட்டனர்.*

*ஒ.நோ. அதிகாரமுடையவன், அதிகாரி.*

*பண்டாரி என்னும் சொல் மக்கட் பெயராக இந்தியாவிலும் இந்தியாவிற்கு வெளியிலும் சென்றுள்ளது.*

*எ. கா. ரமேஷ் பண்டாரி: வ. இந்தியா*
*பண்டார நாயகா: இலங்கை*

*கடற்கரைத்துறைமுகங்கள் அருகில் சரக்குகள் உள்ள பண்டாரக் குடில்கள் ஏராளமாக இருந்தமையால், துறைமுகங்களே பண்டார் எனப்பட்டன.*

*எ. கா. அப்பாஸ் பண்டார்.*

*இது பந்தர் எனச் சுருங்கி வட இந்தியாவில் உள்ளது.*

*எ. கா. போர் பந்தர், மஜித் பந்தர்.*

**சிவபதம்** *śiva-padam,* பெ. (n.) *சிவ பத்தர்கள் தத்தம் பக்குவத்திற்கு (பரிபாகத்திற்கு) ஏற்ப அடையும் தானாளுலகிருத்தல், தன் பாலிருத்தல், தானாம்பதம் பெறல், தானாகுதல் என்ற நால்வகைச் சிவபதவி (பிங்.);* Śiva's plane, comprising four states of bliss, viz, tāṉ-āḷ-ulagiruttal, taṉpāl-iruttal, tāṉ-ām-padam-peṟal, tāṉ-āgudal. "*செம்மையேயாய சிவபத மளித்த செல்வமே*" *(திருவாச. 37:3).*

*[சிவன் + பதம்]*

**சிவபாத்தியன்** *śiva-pāttiyaṉ,* பெ. (n.) *சிவனடியான்;* Śivaṉ's devotee as attached to the feet of Śivaṉ. "*திருவாதவூர்ச் சிவபாத்தியன்*" *(பதினொ. கோயிற்றிருப்பண். 58).*

*[சிவன் + பாத்தியன்]*

**சிவபிரான்** *śiva-pirāṉ,* பெ. (n.) *சிவபெருமான்;* Śivaṉ. "*முனிவர் நாகருஞ் சென்று காணரிய சிவபிரானை*" *(சேதுபு. நைமிசா. 20).*

*[சிவன் + பிரான். பெருமகன் → பெருமான் → பிரான்.]*

**சிவபீசம்** *śiva-pīśam,* பெ. (n.) *இதளியம் (சங்.அக.);* quick silver.

**சிவபுண்ணியத்தெளிவு** *śiva-puṇṇiya-t-teḷivu,* பெ. (n.) *உமாபதிசிவாசாரியர் இயற்றியதாகக் கருதப்படும் சிவனிய அறநூல்;* a treatise on Śaiva dharma considered to be authorised by Umāpadi-śivācāriyār, 13th C.

**சிவபுண்ணியம்** *śiva-puṇṇiyam,* பெ. (n.) *சிவனே முழுமுதற்கடவுளெனக் கொண்டு அக்கடவுளுவப்பச் செய்யும் நற்கருமங்கள்* *(சி.போ.பா. 8:1, பக். 356);* meritorious acts done in reference to Śivaṉ, as the Supreme Being.

*[சிவன் + புண்ணியம்]*

**சிவபுரம்** *śiva-puram,* பெ. (n.). *சிவவுலகம்;* Śivaṉ's abode. "*பார்மேற் சிவபுரம்போற் கொண்டாடும்*" *(திருவாச. 19:3).*

*[சிவன் + புரம்]*

**சிவபுராணம்** *šiva-purāṇam,* பெ. (n.) 1. பதினெண் தொன்மங்களுள் (புராணத்துள்) சிவனைப் பற்றிக்கூறும் பத்துத் தொன்மங்கள் (கந்தபு. பாயி. 54); ten of the eighteen chief purāṇās. 2. மாணிக்கவாசகர் அருளிய திருவாசகத்துள் ஒரு பகுதி; a poem in Tiruvāšagam by Māṇikkavāšagar.

*[சிவன் + புராணம்]*

Skt. purāṇa → த. புராணம்

**சிவபூசை** *šiva-pūšai,* பெ. (n.) நெறிமுறைப்படி செய்யும் சிவவழிபாடு; worship of Šivan usually ceremonial. "சிவபூசையின் பேற்றினால்" (சிவரக. தேவிநாட்டிய. 24).

*[சிவன் + பூசை. பூசு → பூசை]*

Skt. pūjā

**சிவபெருமான்** *šiva-perumāṉ,* பெ. (n.) சிவபிரான் பார்க்க; see *šivapirāṉ.* "செல்வமே சிவபெருமானே" (திருவாச. 37:1).

*[சிவன் + பெருமான். பெருமகன் → பெருமான்]*

**சிவபோகம்** *šiva-pōgam,* பெ. (n.) ஆதனின், பத்துவகைச் செயல்களுள் ஒன்றானதும், ஆதன் தன்னையிழந்து இறையுடனொன்றி நிற்பதுமான பெருமகிழ்வுப் பெருவாழ்வு (உண்மை நெறி. 6.); spiritual experience of the soul in which it merges its individuality in Šivan, the Supreme Being, one of taša-kāriyam.

*[சிவன் + போகம்]*

**சிவபோளம்** *šiva-pōḷam,* பெ. (n.) வெள்ளைப் போளம்; myrrh.

*[சிவன் + போளம்]*

**சிவம்**[1] *šivam,* பெ. (n.) 1. வீடுபேறு (முத்தி) (பிங்.); final deliverance. 2. சித்துருவாகித் தற்பேரொளியாய் நிற்கும் சிவவடிவம்; highest state of God in which He exists as pure intelligence. "சித்தமல மறுவித்துச் சிவமாக்கி" (திருவாச. 51:1). 3. சிவதத்துவம் பார்க்க; see *šiva-tattuvam.* 4. ஓகம் இருபத்தேழனுள் ஒன்று; a division of time, one of 27 ōgam. 5. குறுணி; a measure of capacity = 8 paḍi. "ஒல்லைக்கொடுத்த மதுச்சிவ மென் றுரைத்தான் (உபதேசகா. சிவநாம. 8).

*[செம் → செவ் → சிவ் → சிவ → சிவம் (த.ம.39)]*

"சிவம் என்ற சொல்லிற்கு நன்மை என்று செ.அக. பொருள் கூறியிருப்பது, வடநூல் வழக்கைத் தழுவியதாகும். சிவன், தென்னவர் தெய்வமாதலால், அப்பொருள் பொருந்தாது. நல்ல அல்லது மங்கல என்னும் பொருளில் உருத்திரனுக்கும் இந்திரனுக்கும் அக்கினிக்கும் பொதுவாக வழங்கிய, 'சிவ' என்னும் அடை மொழியாகிய வடசொல் வேறு; நெருப்பின் கூறாகக் கொள்ளப்பட்டு அழல்வண்ணன் எனப்பட்ட இறைவன் பெயராகிய சிவன் என்னும் தென்சொல் வேறு." (வே. க. 225)

'தென்னாடுடைய சிவனே போற்றி!' என்பது மேற்கூறிய கருத்தை அரண்செய்யும். தட்சிணாமூர்த்தி என்ற சொல்லாட்சியும் இதனையே வலியுறுத்தும்.

**சிவம்**[2] *šivam,* பெ. (n.) 1. கொடிவேலி; Ceylon redwort. 2. வழலையுப்பு; mystric salt. 3. கறியுப்பு; common salt. 4. வெண்காரம்; borax. 5. வேம்பு; margosa tree. 6. திருகு கள்ளி; twisted spurge. 7. மழையோடு சேர்ந்துவிழும் ஆலங்கட்டி; frozen drops of rain. 8. கடுக்காய்; gall-nut. 9. இதளியம்; mercury. 10. நெல்லிக் காய்; Indian gooseberry. 11. தண்ணீர்; water. 12. செயற்கை உப்பு வகையுளொன்று; a kind of synthetic salt (சா.அக.).

**சிவம்**[3] *šivam,* பெ. (n.) சிவக்கொண்முடிபு (சைவ சித்தாந்தம்); Šaiva Šittānda philosophy. "சிவமென்னு மந்தந்தரம் (சி. போ. 12:4, வெண்பா.).

*[சிவனியம் → சிவம்]*

**சிவமகாபுராணம்** *šiva-magā-purāṇam,* பெ. (n.) பதினெண் தொன்மத்தொன்று; a chief Toṉma one of padiṉeṇ-toṉmam.

*[சிவன் + மகாபுராணம்]*

**சிவமயம்** *šiva-mayam,* பெ. (n.) 1. சிவமாந் தன்மை; Šiva in essence. "அவர் சிவமயமே யாகலின்" (சி. போ. பா. அவை. பக். 4). 2. கடிதம், நூல் முதலியவற்றின் தொடக்கத்தில் சிவ சமயிகளால் வழங்கப்பெறும் மங்கலமொழி; an invocation meaning "All to the glory of Šiva", used by Šaivites at the head of a letter or document or over the title of a book.

*[சிவன் + மயம்]*

**சிவமரம்** *šiva-maram,* பெ. (n.) 1. வெள்ளைக் கடம்பு; bridal-couch plant. 2. சவுக்கு; whip tree.

*[சிவன் + மரம்]*

**சிவமல்லி** *šiva-malli,* பெ. (n.) கொக்கு மந்தாரை (மலை.); taper-pointed mountain ebony.

*[சிவன் + மல்லி, மல்லி = மல்லிகை]*

**சிவமல்லிகா** *šiva-malligā,* பெ. (n.) வெள்ளை வெங்காயம்; white onion (சா.அக.).

*[சிவன் + மல்லிகா. மல்லிகை → மல்லிகா]*

**சிவமாக்கு-தல்** *šivam-ākku-,* 5 செ.குவி. (v.i.) பற்பமாக்குதல், துகள்துகளாக்குதல்; calcining into an oxide, it is so called from its being turned into ashes (சா.அக.).

*[சிவம் + ஆக்கு-,]*

**சிவமாதிகம்**[1] *šiva-mādigam,* பெ. (n.) சிவகரந்தை பார்க்க; see *šiva-karandai* (சா.அக.).

**சிவமாதிகம்**[2] *šiva-mādigam,* பெ. (n.) மாமரம்; mango tree (சா.அக.).

**சிவமாதுகம்** *šiva-mādugam,* பெ. (n.) வேம்பு; margosa tree (சா.அக.).

**சிவமாலை** *šiva-mālai,* பெ. (n.) தலைமாலை; Indian shot (சா.அக.).

**சிவமுப்பு** *šiva-muppu,* பெ. (n.) 1. மண்டை யோட்டிலிருந்து செய்யப்படும் உப்புவகை; a salt prepared by a secret process from the skull. 2. விந்து; semen (சா.அக.).

**சிவமுறை** *šiva-murai,* பெ. (n.) ஐவேலி; species of bryonia (சா.அக.).

**சிவமூலக்காரம்** *šiva-mūla-k-kāram,* பெ. (n.) ஊதைநோய், பல்லரணை, உட்சூடு போன்றவற்றைப் போக்கும் சீனக்காரம்; alum imported from China as distinguished from indegenous one (சா.அக.).

*[சிவமூலம் + காரம்]*

**சிவமூலி** *šiva-mūli,* பெ. (n.) கஞ்சா; gunjah plant (சா.அக.).

*[சிவம் + மூலி]*

**சிவயோகத்தங்கம்** *šiva-y-ōgat-t-tangam,* பெ. (n.) சிவவோகத்தங்கம் பார்க்க; see *šiva-v-ōga-t-tangam* (சா.அக.).

**சிவயோகம்** *šiva-y-ōgam,* பெ. (n.) சிவவோகம் பார்க்க; see *šiva-v-ōgam* (சா.அக.).

**சிவயோகி** *šiva-y-ōgi,* பெ. (n.) சிவவோகி பார்க்க; see *šiva-v-ōgi.*

**சிவரகசியம்** *šiva-ragašiyam,* பெ. (n.) 18 ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் ஒப்பிலாமணி தேசிகரால் இயற்றப்பட்டதும் சிவபூசை முதலியவற்றின் பெருமைகளை வனப்பு இலக்கிய முறையில் கூறுவதுமான செய்யுணூல்; a treatise in Tamil verse dealing with the importance of Šivan worship and illustrating it by means of stories, by Oppilā maṇi dēsigar, 1718 A.D.

*[சிவன் + ரகசியம்]*

Skt. rahasya.

**சிவரசம்** *šiva-rašam,* பெ. (n.) 1. மூன்று நாள் ஊறிய கஞ்சி; rice gruel for three days. 2. மூல நோயகல செம்பு முதலிய மாழைகளைப் பற்பமாக்கி, மாதுளம் பழச்சாறு, இதளியம் போன்றவற்றைச் சமநிலையிற் சேர்த்துக் கொடுக்கும் ஆயுள்வேதமருந்து; a kind of Āyurvēdic medicine prepared by mixing the calcined powders of mercury, copper and mica taken in equal weights and then grinding them with the pomegranate juice. It is prescribed for piles (சா.அக.).

வ. ரசம்

*[சிவன் + ரசம்]*

**சிவராசவோகி** *šiva-rāša-v-ōgi,* பெ. (n.) மாபெருஞ்சித்தரும், அகத்தியர் மாணவருமான புலத்தியர்; the name of a Šitta known as Pulathiar, the disciple of the great Šittar Agattiya (சா.அக.).

**சிவராசத்தங்கம்** *šiva-rāša-t-tangam,* பெ. (n.) உப்பைச் சேர்த்துச் செயற்கைப் பொன்னாக்க முறையிற் செய்த தங்கம்; a synthetic gold prepared out of consolidated common salt by alchemical process (சா.அக.).

**சிவராசவெள்ளி** *śiva-rāsa-veḷḷi,* பெ. (n.) *இதளிய (பாதரச) வெள்ளி;* a synthetic silver prepared from consolidated mercury.

*[சிவராசம் + வெள்ளி. சிவரசம் → சிவராசம்]*

**சிவராத்திரி** *śiva-rāttiri,* பெ. (n.) *சிவனிரவு பார்க்க;* see *śivaniravu.* "சிவராத்திரிப் போது துயிலோமென்ற விரதியரும்" *(தாயு. பரிபூ. 3).*

*[சிவன் + இராத்திரி. இரவு → இரா]*

**சிவராயன்** *śiva-rāyaṉ,* பெ. (n.) *1. பழைய காசு (நாணய) வகை (பணவிடு. 117);* an ancient coin. *2. துணிவகை (இ.வ.);* a kind of cloth.

**சிவராளம்** *śivarāḷam,* பெ. (n.) *இலவங்கப்பூ;* clove flower *(சா.அக.).*

**சிவரி** *śivari,* பெ. (n.) *கழுதை;* ass *(சா.அக.).*

**சிவரோகம்** *śiva-rōgam,* பெ. (n.) *கற்கடகச் சிங்கி;* crab's horn *(சா.அக.).*

**சிவல்** *śival,* பெ. (n.) *1. கவுதாரி என்னும் பறவை (திவா.);* Indian partridge. *2. காடை வகை (வின்.);* quail. *3. கிலுகிலுப்பைச் செடி (மலை.);* laburnum-leaved rattlewort. *4. செவ்வனிலம்;* redsoil.

மறுவ. செவல், செவல்மண், செவலை.

*[சிவ் → சிவ → சிவல் (வே.க. 223)]*

**சிவல்கறி** *śival-kaṟi,* பெ. (n.) *பித்தம், கோழை போன்றவற்றைப் போக்கும் கவுதாரி இறைச்சி;* partridge flesh is greatly useful in cases of bilious and phlegmatic *(சா.அக.).*

*[சிவல்+ கறி]*

**சிவலிங்கக்காய்** *śivaliṅga-k-kāy,* பெ. (n.) *ஐவேலி மரத்தின் காய்;* the fruit of Ivēli tree *(சா.அக.).*

*[சிவலிங்கம் + காய்]*

**சிவலிங்கப்பூசை** *śivaliṅga-p-pūśai,* பெ. (n.) *சிவ சமயத்தவரால் பூசிக்கப்படும் சிவலிங்க வழிபாடு;* cylindrical stone rounded off at the top, worshipped by Śaivites as an emblem of Śivaṉ *(சா.அக.).*

*[சிவலிங்கம் + பூசை]*

**சிவலிங்கம்** *śivaliṅgam,* பெ. (n.) *சிவனியர் வழிபடும் இலிங்க வடிவமான சிவனுருவம்;* cylindrical stone rounded off at the top, worshipped by Śaivites as an emblem of Śivaṉ.

*[சிவன் + இலிங்கம். இலங்கம் → இலிங்கம்]*

**சிவலிங்கமரம்** *śiva-liṅga-maram,* பெ. (n.) *மாவகம்;* nitta tree *(சா.அக.).*

*[சிவலிங்கம் + மரம்]*

**சிவலை** *śivalai,* பெ. (n.) *1. செந்நிறமான எருது போன்ற விலங்கு (உ.வ.);* reddish animal, as a bull. *2. சிவப்பான ஆள் (யாழ்ப்.);* person of light complexion. *3. சிவப்புநிறமுள்ளது;* that which is red. "நெற்றிச் சிவலை" *(கலித். 104:65).*

**சிவலோகச்சிவன்** *śiva-lōga-c-civaṉ,* பெ. (n.) *காந்தம் (இராட்.);* load stone.

**சிவலோகத்தி** *śiva-lōgatti,* பெ. (n.) *திப்பிலி;* long pepper *(சா.அக.).*

**சிவலோகம்**[1] *śiva-lōgam,* பெ. (n.) *சிவன் வாழும் இடமென்று கருதப்படும் கைலாயம்;* Kailāyam, as Śivaṉ's abode. "அப்பாண்டி நாட்டைச் சிவலோக மாக்குவித்த வப்பார் சடையப்பன்" *(திருவாச. 8:11).*

*[சிவன் + உலகம் - சிவனுலகம் → சிவலோகம்]*

**சிவலோகம்**[2] *śiva-lōgam,* பெ. (n.) *இதளியம்;* mercury *(சா.அக.).*

**சிவவடிவம்** *śiva-vaḍivam,* பெ. (n.) *ஆதனின் பத்து வகைச் செயற்பாடுகளுள் ஒன்றாய், 'அருள்மயமான ஐந்தொழிலால், தன்னைக் கட்டுண்ட மலங்களை நீக்கி, இறைவன் முத்தியளிப்போன்' என்றுணர்ந்து கொள்ளும் ஆதனின் துய்ப்பு நிலை (உண்மை நெறி. 3);* spiritual experience of the soul in which it clearly understands that Śivaṉ, by His five gracious functions cleanses it of malam and bestows salvation, one of tasa-kāriyam.

*[சிவன் + வடிவம்]*

**சிவவல்லபம்** *śiva-vallabam,* பெ. (n.) *1. எருக்கு;* madar. *2. நாவல் வகை;* a species of jambolona.

3. செவ்வந்தி; chrysanthemum. 3. மாமரம்; mango tree (சா.அக.).

*[சிவன் + வல்லபம்]*

வல்லபம் பார்க்க.

**சிவவல்லி** *śiva-valli*, பெ. (n.) கோவைக் கொடி வகை (சங்.அக.); a kind of climber.

*[சிவம் + வல்லி. வல்லி = கொடி. வள்ளி → வல்லி]*

**சிவவாக்கியம்**[1] *śiva-vākkiyam*, பெ. (n.) சிவவாக்கியர் இயற்றிய செய்யுள் நூல்; a collection of mystic verses ascribed to Śiva-vākkiyar.

*[சிவவாக்கியர் → சிவவாக்கியம்]*

ஒ.நோ. தொல்காப்பியர் → தொல்காப்பியம்

**சிவவாக்கியம்**[2] *śiva-vākkiyam*, பெ. (n.) திருவைந்தெழுத்து; the five mystic letters (சா.அக.).

*[சிவம் + வாக்கியம். வாக்கு → வாக்கியம்]*

**சிவவாக்கியர்** *śiva-vākkiyar*, பெ. (n.) சிவத் துறவி; a Śaiva devotee.

இவர் மெய்ப்பொருட் கருத்தடங்கிய சிவ வாக்கியம் என்ற நூலை இயற்றியவர்.

**சிவவீசம்** *śiva-vīsam*, பெ. (n.) சிவலோகம் பார்க்க; see *śiva-lōgam*.

**சிவவுலகச்சேவகன்** *śiva-v-ulaga-c-cēvagan̲*, பெ. (n.) காந்தம்; load-stone.

*[சிவவுலகம் + சேவகன்]*

**சிவவேகை** *śiva-vēgai*, பெ. (n.) செம்பருத்தி; red cotton (சா.அக.).

**சிவவேடம்** *śiva-vēḍam*, பெ. (n.) அக்கமணி முதலான சிவச்சின்னம் பூண்ட கோலம்; distinctive external marks of a Śaiva consisting of akkamaṇi beads and sacred ashes. "சிவ வேடந் தரித்தவர்" (காசிக. பாயி. 12).

*[சிவன் + வேடம்]*

**சிவவோகத்தங்கம்** *śiva-vōga-t-taṅgam*, பெ. (n.) சிவவோகி தம்முடைய குண்டலத்திற்குப் பயன்படுத்தும் உயர்ந்த வகைத் தங்கம்; a superior refined synthetic gold used as an ear ornament by a vōgi addicted to worship of Śiva (சா.அக.).

*[சிவவோகம் + தங்கம்]*

**சிவவோகம்** *śiva-vōgam*, பெ. (n.) ஆதனது (ஆன்மாவின்) பத்து வகைச் செயற்பாட்டி னொன்று. இந்நிலையில் ஆதன் தன்னை யிழக்காது இறைவனின் எல்லாமாந் தன்மையை உணர்ந்து அவனோடு இயைந்து நிற்கும் துய்ப்பு நிலை (உண்மை நெறி. 5); spiritual experience of the soul in which it realises the omnitude of Śiva and sets itself in tune with Him with out losing its individuality, one of taśa-kāriyam.

*[சிவன் + ஓகம்]*

**சிவவோகி**[1] *śiva-v-ōgi*, பெ. (n.) சிவவோகத்தால் முத்தி நிலையடைந்தோர்; yogins who by meditation on Śivan̲ have attained salvation.

*[சிவன் + ஓகி]*

**சிவவோகி**[2] *śiva-v-ōgi*, பெ. (n.) வசம்பு (பாலவா. 317); sweet flag.

**சிவளிகை** *śivaḷigai*, பெ. (n.) பெருஞ்சூட்டு (அக.நி.); a kind of head-ornament.

*[சிகழிகை → சிவளிகை]*

**சிவளிகைக்கச்சு** *śivaḷigai-k-kaccu*, பெ. (n.). உடைமேற் கட்டுங்கச்சு; sash tied round the waist over the dress. "செவ்வரத்த வுடையாடை யதன்மேலோர் சிவளிகைக்கச்சென்கின்றாளால்" (திவ். பெரியதி. 8,1,7).

*[சிவளிகை + கச்சு]*

**சிவறாங்கம்** *śivaṟāṅgam*, பெ. (n.) உருத்திரனைக் குறிக்கும் திருவைந்தெழுத்துள் ஒன்றான சிகாரம்; the middle of the Śivan mystic letters representing the power Rudran (சா.அக.).

**சிவறாமவிந்து** *śivaṟāma-vindu*, பெ. (n.) முலைப்பால்; woman's breast milk (சா.அக.).

**சிவன்**[1] *śivan̲*, பெ. (n.) சிவனியர்க்கு வழங்கிய சிறப்புப் பெயர்; title of śaiva devotees. "கயிலாயன் ஆரூரான் தர்மம் சிவனக்கு நிசதம் நெல்லு முக்குறுணி" (தெ.க.தொ. 2, 254).

ம. சிவன்; க. சிவ, சிவு; தெ. சிவுடு

[சிவ → சிவம் → சிவன். (த.ம.)]

த. சிவன் → Skt. śiva

சிவன் என்னும் பெயர் சிவந்தவன் என்று பொருள்பட்டுச் சேயோன் என்னும் முருகனை முன்னும் முத்தொழிலிறைவனைப் பின்னும் குறிக்கும் தூய தமிழ்ச்சொல். வேதத்தில் அக்கினிக்கும் இந்திரனுக்கும் உருத்திரனுக்கும் பொது அடைமொழியாக வரும் சிவ என்னும் சொல், மங்கல அல்லது நல்ல என்று பொருள்படும் பெயரெச்சம், இவ்விரண்டிற்கும் தொடர்பில்லை (வ.வ.இன்.34)

**சிவன்**[2] *śivaṉ*, பெ. (n.) பூனைக் கண்மணி (வயிடூரியம்) (மூ.அ.); cat's eye, a variety of quartz.

[(சிவப்பு) → சிவ → சிவன்]

**சிவன்**[3] *śivaṉ*, பெ. (n.) 1. இதளியம்; mercury. 2. சிவகரந்தை; sweet basil (சா.அக.).

**சிவன்**[4] *śivaṉ*, பெ. (n.) 1. தந்தை; father. 2. குரு; master.

**சிவன்சொத்து**[1] *śivaṉ-śottu*, பெ. (n.) சிவன் கோயில், திருமேனி, அணிகலன்கள், முதலியன; property of sivan viz. temple, statue, ornament, etc. 'சிவன் சொத்து குலநாசம்' (பழ.).

**சிவன்சொத்து**[2] *śivaṉ-śottu*, பெ. (n.) செயற்கைப் பொன்; synthetic gold (சா.அக.).

[சிவன் + சொத்து]

**சிவன்மாலை** *śivaṉ-mālai*, பெ. (n.) சிவதுளசி பார்க்க; see *śiva-tuḷasi* (சா.அக.).

[சிவன் + மாலை]

**சிவன்முடிக்கன்னி** *śivaṉ-muḍi-k-kaṉṉi*, பெ. (n.) சிவகரந்தை பார்க்க; see *śiva-karandai* (சா.அக.).

[சிவன் + முடிக்கன்னி]

**சிவன்முடிச்செல்வி** *śivaṉ-muḍi-c-celvi*, பெ. (n.) நாறுகரந்தை; Indian globe thistle (சா.அக.).

[சிவன் + முடிச்செல்வி]

**சிவன்மூலி** *śivaṉ-mūli*, பெ. (n.) அழற்சி மிகு குளிர்ச்சி, பெருநோய், பிளவை, பல்வலி, வாய்ப்புண் போன்றவற்றைப் போக்கும் படர் கொடி மூலிகை; Śivaṉ's neem, wiry indigo. It is a spreading shrub, decoction is prescribed for sever cold, leprous, and cancerous affections the chewed root when given has the virtue of easing tooth ache and etc (சா.அக.).

[சிவன் + மூலி]

மறுவ. சிவனார்வேம்பு, சிவவீரியம், சிவனார் சேவிகம்.

**சிவன்விந்து** *śivaṉ-vindu*, பெ. (n.) 1. வழலை; a mystic name for quintessence salt used in Alchemy. 2. மூளை; brain. 3. தலைப்பிண்ட மூளை; the brain of the first foetus of a woman's womb. 4. வன்னிமரம்; suma trees (சா.அக.).

[சிவன் + விந்து]

**சிவன்வீரியம்** *śivaṉ-vīriyam*, பெ. (n.) இதளியம்; mercury.

[சிவன் + வீரியம்]

**சிவன்வேசை** *śivaṉ-vēsai*, பெ. (n.) செம்பருத்தி; red-cotton (சா.அக.).

[சிவன் + வேசை]

செம்பரத்தை பார்க்க

**சிவன்வேம்பு** *śivaṉ-vēmbu*, பெ. (n.) சிவனார் வேம்பு (வின்.) பார்க்க; see *śivanār-vēmbu*.

[சிவன் + வேம்பு]

**சிவனடியார்** *śivaṉaḍiyār*, பெ. (n.) 1. சிவனை வழிபடுவோர்; devotees of Śiva. 2. நாயன்மார்கள் (வின்.); the Nāyaṉmārs.

[சிவன் + அடியார்]

**சிவனந்தி** *śivanandi*, பெ. (n.) அடுக்கு நந்தியாவட்டம்; double wax flower (சா.அக.).

**சிவனம்** *śivaṉam*, பெ. (n.) 1. குன்றிமணி; jewellers bead. 2. பொருத்து; suture (சா.அக.).

**சிவனமிர்தம்** *śivaṉamirdam*, பெ. (n.) கடுக்காய்; gall nut (சா.அக.).

**சிவனாகம்** *śivaṉāgam*, பெ. (n.) உப்புமணி; salt beads (சா.அக.).

**சிவனாகினி** *śivaṉāgiṉi*, பெ. (n.) வெற்றிலைக் கொடி; betel creeper (சா.அக.).

**சிவனாடல்** *šivan̲-āḍal,* பெ. (n.) பாண்டரங்கம், கொடுகொட்டி, காபாலம் என்று கூறப்படும் சிவபெருமானது ஆடல்; dance of Šivan̲, three in number, viz. pāṇḍaraṅgam, koḍu-kōṭṭi, kābālam.

*[சிவன் + ஆடல்]*

**சிவனாதியுப்பு** *šivan̲āḍi-y-uppu,* பெ. (n.) பூரணாதி உப்பு; a quintesence salt (சா.அக.).

**சிவனாம்பு** *šivan̲āmbu,* பெ. (n.) மருந்துப் பூடுவகை; a kind of medicinal shrub.

*[சிவன் → சிவனாம்பு]*

**சிவனார்கிழங்கு** *šivan̲ār-kiḻaṅgu,* பெ. (n.) கார்த்திகைக் கிழங்கு (மலை.); Malabar glory-lily.

*[சிவனார் + கிழங்கு]*

**சிவனார்கொடி** *šivan̲ār-koḍi,* பெ. (n.) செங்காந்தள் (திவ்.பெரியாழ். 3.3:1, ஜீ); Malabar glory-lily.

**சிவனார்சேவிகம்** *šivan̲ār-šēvigam,* பெ. (n.) சிவன்மூலி பார்க்க; see *šivan̲-mūli* (சா.அக.).

*[சிவனார் + சேவிகம்]*

**சிவனார்தலை** *šivan̲ār-dalai,* பெ. (n.) இலிங்கம்; phallus.

*[சிவனார் + தலை]*

**சிவனார்பாகல்** *šivan̲ār-pāgal,* பெ. (n.) *1.* ஐவிரலி; a creeper bearing a red fruit. *2.* கோவை (மலை.); a common creeper of the hedges.

*[சிவனார் + பாகல்]*

**சிவனார்பாவை** *šivan̲ār-pāvai,* பெ. (n.) கொவ்வைக் கொடி; Indian creeper (சா.அக.).

*[சிவனார் + பாவை]*

**சிவனார்விந்து** *šivan̲ār-vindu,* பெ. (n.) இதளியம்; mercury (சா.அக.).

*[சிவனார் + விந்து]*

**சிவனார்வேம்பு** *šivan̲ār-vēmbu,* பெ. (n.) செடிவகை (பதார்த்த. 267); wiry indigo.

மறுவ. இறைவன் வேம்பு

*[சிவனார் + வேம்பு]*




**சிவனி**[1] *šivan̲i,* பெ. (n.) கழுதை (யாழ்.அக.); ass.

**சிவனி**[2] *šivan̲i,* பெ. (n.) *1.* மருளூமத்தை; Indian xanthium. *2.* பாலை; edible paulay.

**சிவனிப்பால்** *šivan̲i-p-pāl,* பெ. (n.) கழுதைப் பால்; ass's milk.

*[சிவனி + பால்]*

**சிவனிரவு** *šiva-rāttiri,* பெ. (n.) கும்ப (மாசி) மாதத்துக் காருவா பதினான்காம் நாளில் (கிருஷ்ண சதுர்த்தசி) சிவனடியார்கள் நாள் முழுதும் உண்ணாநோன்பிருந்து இரவெல்லாம் கண்விழித்துச் சிவனைப் பூசித்துக் கொண்டாடும் நோன்பு; a popular religious observance in honour of Šivan̲ on the l4th titi of the dark fortnight of the month of Māsi, when Šaiva devotees perform pūjās several times at night without having any sleep.

*[சிவன் + இரவு]*

**சிவனுப்பு** *šivan̲-uppu,* பெ. (n.) செயற்கையுப்பு; an artificial salt (சா.அக.).

*[சிவன் + உப்பு]*

**சிவனுள்மலை** *šivan̲uḷ-malai,* பெ. (n.) அயமலை; mountain containing iron ore (சா.அக.).

**சிவனெண்குணம்** *šivan̲-en̲-kuṇam,* பெ. (n.) சிவபெருமானுடைய எண் வகைக் குணங்களான தன் வயத்தனாதல், தூய வுடம்பினனாதல், இயற்கையுணர்வினனாதல், முற்றுமுணர்தல் இயல்பாக, பாசங் களினீங்குதல், பேரருளுடைமை, முடிவிலா ஆற்றலுடைமை, வரம்பிலின்பமுடைமை

முதலியன (குறள், 9, உரை); the eight attributes of Šivan, viz, tan-vayattanādal, tūya-v-udambinanādal, iyarkai-y-uṇarvinanādal, murrumuṇardal, iyalpāgavē pāšangaḷi niṅgudal, pēraruḷudaimai, mudivilā-ārraludaimai, varambilinpamudaimai.

[சிவன் + எண் + குணம்]

**சிவனேயென்றிரு-த்தல்** *šivanē-y-enriru-,* 3 செ.குவி. (v.i.) முயற்சியின்றி அடங்கியிருத்தல் (உ.வ.); to keep quiet or peaceful.

[சிவன் + ஏ+ என்றிரு-,]

**சிவனைம்முகம்** *šivanai-m-mugam,* பெ. (n.) கிழக்கு, மேற்கு, வடக்கு, வடகிழக்கு, தெற்கு நோக்கி யருள்பாலிக்கும் சிவபெருமானுடைய ஐந்து முகங்கள் (ஈசானம், தற்புருடம், அகோரம், வாமம், சத்தியோசாதம்); the five faces of Šivan in His Sadā Šivan from, viz, īšānam, tarpurudam, akōram, vāmam, šattiyōsātam.

[சிவன் + ஐம்முகம்]

**சிவனோங்கிவள்ளி** *šivanōṅgi-vaḷḷi,* பெ. (n.) காந்தம்; magnet (சாஅக.).

**சிவாக்கிரயோகி** *šivākkira-y-ōgi,* பெ. (n.) சிவஞானசித்தியார் உரைகாரருளொருவர்; a commentator on Šiva-ñāna-šittiyār.

**சிவாகம்** *šivāgam,* பெ. (n.) கடுக்காய்; galnut (சாஅக.).

**சிவாகமம்** *šivāgamam,* பெ. (n.) சிவத்தோன்றியம் பார்க்க; see *šiva-t-tōnriyam.*

[சிவன் + ஆகமம்]

Skt. āgama → த. ஆகமம்

**சிவாகிதம்** *šivāgidam,* பெ. (n.) பாதிரி; trumpet flower tree (சாஅக.).

**சிவாங்கம்** *šivāṅgam,* பெ. (n.) 1. வில்வம்; bael. 2. இலவங்கப் பத்திரி; cinnamon (சாஅக.).

**சிவாச்சகம்** *šivāccagam,* பெ. (n.) கீழ்க்காய் நெல்லி; niruri (சாஅக.).

**சிவாச்சிரமத்தெளிவு** *šivāccirama-t-teḷivu,* பெ. (n.) பண்டாரசாத்திரத் தொன்றும், அம்பலவாண தேசிகரியற்றியதுமான சிவனியக்கொண்முடிபு நூல்; a Šaiva Šittānda treatise by Ambalavāṇa tēšigar, one of paṇḍāra-cāttiram.

[சிவாசிரமம் + தெளிவு]

**சிவாசாரியர்** *šivā-šāriyar,* பெ. (n.) சிவன் கோயில் குருக்கள்மார்தம் பட்டப்பெயர்; title of saiva Āccāryās especially Ādi-saiva priests.

[சிவன் + ஆசாரியர்; சிவனாசாரியார் → சிவாசாரியர்]

**சிவாட்சம்** *šivāṭcam,* பெ. (n.) அக்கமணி (மலை.); rudrākka bead.

[சிவன் + அட்சம் (அக்கமணி). அள் = கூர்மை. அள் → அங்கு → அக்கு. அக்கு = கூர்மை, முனை, முண்முனை, முண்முனை யாடிள்ளமணி. அக்கு → அக்கம் → அக்சம் → அக்சம் → அட்சம்]

**சிவாத்துவிதசைவம்** *šivāttuvida-šaivam,* பெ. (n.) அகச்சமயம் ஆறனுள், துணை காரணனாகிய இறைவனே உலகிற்கு முதற் காரணனும் ஆவன் என்று கூறும் சிவனியப் பிரிவு (சி.போ.பா. 7:1, பக். 337); šaiva doctrine which holds that Šiva, the efficient cause, is also the material cause of the universe one of six aka-c-camayam.

[சிவன் + அத்துவைதம் + சைவம்; சிவனத்துவைத சைவம் → சிவாத்துவைத சைவம்]

**சிவாத்துவிதம்** *šivāttuvidam,* பெ. (n.) சிவாத்துவிதசைவம் பார்க்க (சி. போ. பா. 2:1. பக். 106); see *šivāttuvida-šaivam.*

[சிவன் + அத்துவைதம்]

அத்துவைதம் → அத்துவிதம்

**சிவாத்துவைதம்** *šivāttuvaidam,* பெ. (n.) சிவாத்துவிதசைவம் பார்க்க (சி. போ. பா. 2:1. பக். 106); see *šivāttuvida-šaivam.*

[சிவன் + அத்துவைதம்]

**சிவாதகி** *šivādagi,* பெ. (n.) வன்னிமரம்; suma tree (சாஅக.).

**சிவாதமுள்ளி** *śivāda-muḷḷi*, பெ. (n.) *செம்முள்ளி;* thorny nail dye *(சா.அக.).*

*[சிவந்தமுள்ளி → சிவாதமுள்ளி (கொ. வ.)]*

**சிவாதாயம்** *śivādāyam*, பெ. (n.) பல சில்லறை வகைகளிலும் வரும் வருமானம் (R.T.); miscellaneous revenue.

*[சிவன் + ஆதாயம். சிவனாதாயம் → சிவாதாயம்]*

**சிவாதிகம்** *śivādigam*, பெ. (n.) பேயத்தி; devil fig *(சா.அக.).*

**சிவாநந்திமூலம்** *śivā-nandi-mūlam*, பெ. (n.) *வெடியுப்புச் சுண்ணம்;* calcium compound prepared from nitre *(சா.அக.).*

**சிவாம்பரத்தம்** *śivām-parattam*, பெ. (n.) *செம்பரத்தம்;* Chinese rose mallow *(சா.அக.).*

*[சிவப்பு + செம்பரத்தம். சிவப்புச் செம்பரத்தம் → சிவாம்பரத்தம்]*

**சிவாமதானு** *śivāmadāṉu*, பெ. (n.) வெந்தயம்; dill seed *(சா.அக.).*

**சிவாயநம** *śivāyanama*, பெ. (n.) சிவனியர்களால் போற்றப்படும் திருவைந்தெழுத்து மந்திரம்; the tiruvaindeḻuttu mantra of the śaivaites, held to be most sacred. *"நானேயோ தவஞ்செய்தேன் சிவாய நமவெனப் பெற்றேன்"* (திருவாசகம்).

**சிவார்ப்பணம்** *śivār-p-paṇam*, பெ. (n.) செயல் முடிவில், அதன் பயனைச் சிவனுக்குரிய தாக்குவதைக் குறிக்குந் தொடர்; expression used by śaivites generally at the close of rituals, ablutions, etc., dedicating them to Śivaṉ. "சிவார்ப்பணம் எனக்கருதாத வழிக் குற்றமென்று ஆகமங்கள் கூறியதூஉம்" *(சி.போபா.11:1, பக். 224).*

*[சிவம் + அர்ப்பணம்]*

**சிவாரகம்** *śivāragam*, பெ. (n.) ஆட்டாங் கொடி; a kind of medicinal plant *(சா.அக.).*

**சிவாராதி** *śivārādi*, பெ. (n.) நாய்; dog *(சா.அக.).*

**சிவாருகம்** *śivārugam*, பெ. (n.) ஆல் (மலை.); banyan tree.

*[சிவ + ஆருகம்]*

**சிவாலயம்**[1] *śivālayam*, பெ. (n.) சிவன் கோயில்; Śivaṉ temple.

*[சிவன் + ஆலயம்]*

Skt. ālaya.

**சிவாலயம்**[2] *śivālayam*, பெ. (n.) செந்துளசி; red basil *(சா.அக.).*

*[சிவன் + ஆலயம்]*

**சிவாலு** *śivālu*, பெ. (n.) நரி; fox *(சா.அக.).*

**சிவானந்தி** *śivānandi*, பெ. (n.) சிறுதுத்தி; small leaved rose mallow *(சா.அக.).*

**சிவி-தல்** *śivi-*, 4 செ.கு.வி. (v.i.) *1.* பிஞ்சாய் உதிர்தல் (நெல்லை.); to wither as fruits. *2. சுருங்குதல், சிறுத்தல் (திருக். தமிழ் மரபுரை. 742).*

**சிவிகரம்** *śivigaram*, பெ. (n.) சாதிக்காய் (மலை.); nutmeg.

**சிவிகாதிதம்** *śivigādidam*, பெ. (n.) வேங்கை மரம்; kino tree *(சா.அக.).*

**சிவிகை** *śivigai*, பெ. (n.) *1.* பல்லக்கு; palanquin, covered litter. "சிவிகை பொறுத்தானொ டூர்ந்தானிடை" *(குறள், 37). 2.* எருது பூட்டிய ஊர்தி (திவா.); bullock-cart.

*[சில் → சிவ் → சிவி → சிவிகை]*

**சிவிகையார்** *śivigaiyār*, பெ. (n.) பல்லக்குத் தூக்கும் பிரிவினர்; a caste of palanquin - bearers.

*[சிவிகை + ஆர்]*

**சிவிகையார்வழக்கு** *śivigaiyār-vaḻakku*, பெ. (n.) பெருஞ்சண்டை (இராட்.); violent quarrel.

*[சிவிகையார் + வழக்கு]*

**சிவிங்கி**[1] *śiviṅgi*, பெ. (n.) *1.* ஒருவகை விலங்கு; Indian lynx. *2.* சிறுத்தை (வின்.); hunting leopard.

*[சிவி → சிவிங்கி]*

தெ. க. சிவிங்கி; ம. சிவின்னி

**சிவிங்கி**[2] *śiviṅgi*, பெ. (n.) சிவிங்கி மீன்; a felix species of fish *(சா.அக.).*

**சிவிங்கி**[3] *šivingi*, பெ. (n.) *பறவை வகை;* a kind of bird *(சா.அக.).*

**சிவிங்கிநாய்** *šivingi-nāy*, பெ. (n.) *வேகமாய் ஓடக்கூடிய சோணங்கி நாய் (வின்.);* a swift-footed hunting dog.

*[சிவிங்கி + நாய்]*

**சிவிங்கிப்பூனை** *šivingi-p-pūnai*, பெ. (n.) *பூனை வகை;* leopard cat.

*[சிவிங்கி + பூனை]*

**சிவிட்கு** *šivitku*, பெ. (n.) *சினம்;* anger. *"புலியினுடைய சிவிட்கும்"* (திவ். திருப்பா. 23, வியா. 205).

தெ. சிவிக்கு

**சிவிட்கெனல்** *šivitkenal*, பெ. (n.) 1. *பொறுமையின்மைக் குறிப்பு;* onom. expr. of being impatient. "பின்னையும் உணரக் காணாமையாலே சிவிட்கென்று உன் மகள் தான் ஊமையோ வென்கிறார்கள்" *(திவ். திருப்பா. 9, வியா. 114).* 2. *விரைவுக்குறிப்பு;* being quick, hasty. *'பூனைபோ லொடுங்கிச் சிவிட்கென் றெழுந்து" (குருபரம். 197).*

தெ. சிவ்ன்க்குனா

*[சிவிட்கு + எனல்]*

**சிவிடு** *šividu*, பெ. (n.) 1. 360 *நெல் பிடிக்கும் அளவு;* a measure of 360 paddy grains. 2. *சிறிது;* that which is small.

*[செவிடு (யாழ்.அக.) → சிவிடு]*

**சிவித்திரம்** *šivittiram*, பெ. (n.) *வெண்குட்டம்;* white leprosy *(சா.அக.).*

**சிவிப்பறவை** *šivi-p-paravai*, பெ. (n.) *சிறவிப் புலி;* a small variety of panther *(சா.அக.).*

**சிவிபோகணம்** *šivibōganam*, பெ. (n.) *வெள்ளை நாகணம்;* white croton plant *(சா.அக.).*

**சிவியார்** *šiviyār*, பெ. (n.) 1. *சிவிகையார் பார்க்க;* see *šivigaiyār.* "பரியெங்கே சிவியா ரெங்கே" *(தண்டலை.சத.34).* 2. *மீன்பிடி தொழிலால் வாழுமினம்;* a caste whose profession is fishing.

*[சிவிகையார் → சிவியார்]*

**சிவிரம்** *šiviram*, பெ. (n.) *படையெடுத்த அரசன் தங்கும் பாசறை;* camp of an invading king.

Skt. šibira.

**சிவிறி** *šiviri*, பெ. (n.) 1. *விசிறி (பிங்.);* fan. *"தேயுமிடைப் பாங்கியர்கள் சிவிறி யால் வீசி" (குசேலோ. குசே. வைகுந். 58).* 2. *நீர்வீசுங்கருவி;* syringe. "நெய்ம்மாண் சிவிறியர் நீர்மணக் கோட்டினர்" *(பரிபா. 6:34).*

தெ. சிவிறி; குய். ஜிப்பெரி, ஜின்ஜெரி

*[விசிறி → சிவிறி]*

**சிவிறி**[2] *šiviri*, பெ. (n.) *பெருந்துருத்தி;* bellows *(சா.அக.).*

**சிவிறு-தல்** *šiviru-*, 5 செ.கு.வி. (v.i.) 1. *பரத்தல்;* to spread as water. *"ஊடுறு கமலக் கண்ணீர் திசைதொறுஞ் சிவிறியோட" (கம்பரா. மீட்சி. 348).* 2. *விசிறு-தல் பார்க்க;* see *viširu-.*

*[விசிறு → சிவிறு-,]*

**சிவீரெனல்**[1] *šivīr-enal*, பெ. (n.) *தொட்டாற் சில்லென்றிருத்தற் குறிப்பு (இ.வ.);* expr. of being cold to the touch.

*[சிலீர் → சிவீர்]*

**சிவீரெனல்**[2] *šivīrenal*, பெ. (n.) *சிவந்திருக்கை;* become red; blush.

*[செவேர் → சிவீர் + எனல் (வே.க.)]*

**சிவீலெனல்** *šivēl-enal*, பெ. (n.) *பொறாமைக் குறிப்பு;* onom. expr. of being jealous, envious. "நம்முடைய ஸ்வரூபரூபகுண விபூதிகளைச் சொன்ன விடத்தில் சிவீ லென்றிருந்திலை" *(ஈடு, 3.5:6).*

*[சிவ் → சிவீல்; சிவீல் + எனல்]*

**சிவுகம்** *šivugam*, பெ. (n.) *மோவாய் (சூடா.);* chin.

**சிவுடம்** *šivudam*, பெ. (n.) *சிவுகம் பார்க்க;* see *šivūgam.*

**சிவேதை**[1] *šivēdai*, பெ. (n.). 1. *செடிவகை (பிங்.);* square-stalked bindweed. 2. *நாணல்;* kaus.

Skt. svetā

**சிவேதை**[2] *šivēdai*, பெ. (n.) *1. சீந்தில் (மூ.அ.);* gulancha. *2. கொடிவகை;* Indian jalap.

Skt. šiva-dā

**சிவேதை**[3] *šivēdai*, பெ. (n.) தெற்கு *(பிங்.);* south.

Skt. šivētavā

**சிவேரெனல்** *šivēr-eṉal*, பெ. (n.) *சிவந்திருத்தற் குறிப்பு;* exprn. signifying redness.

*[சிவீர் → சிவேர் + எனல் (வே.க.)]*

**சிவை**[1] *šivai*, பெ. (n.). *1. மலைமகள் (பிங்.);* Pārvadi. *"பொருவரிய சிவையாகி யனந்தையாய்" (கூர்மபு. திருக்கலி. 3.).* 2. காளி *(சூடா.);* Durgā.

*[சிவன் (ஆ.பா.) → சிவை (பெ.பா.) சிவன் தேவியாக உருவகிக்கப்பட்ட திருவருள் (வே.க.).]*

**சிவை**[2] *šivai*, பெ. (n.) *1. நரி;* jackal. *"வெந்திறற் சிவையை யெல்லாம் வெம்பரி யாக்கி" (திருவாலவா. 29:16).* 2. நெல்லி *(தைலவ. தைல. 28.);* emblic myrobalan. 3. வேர்; root *'கல்லறச் சிவைக ளூன்றி" (இரகு. இரகுகதி. 7).*

*[சிவன் → சிவ → சிவை]*

**சிவை**[3] *šivai*, பெ. (n.) உலைமூக்கு *(திவா.);* nozzle or bellows. *"சிவையின்வா யென்னச் செந்தீ யுயிர்ப்புறச் சிவந்த மூக்கன்" (கம்பரா. கும்பகரு. 14).*

Skt. jihvā

**சிவைக்கியம்** *šivaikkiyam*, பெ. (n.) சிவனும், ஆதனும் (ஆன்மா) இணைந்து ஒன்றியிருத்தல்; the union of the soul with God Šivan *(சா.அக.).*

*[சிவன் + ஐக்கியம்]*

**சிவோகம்பாவனை** *šivōgam-bāvaṉai*, பெ. (n.) *சிவன் நான் என்று கருதுகை;* meditation suggesting a mystic union with Šivaṉ. *"சிவோகம்பாவனையைத் தலைப்பட்டோனாதல் அறிக" (சி. போ. சிற். 2, 1, 4, பக். 39).*

Skt. šivōham + bhāvanā

*த.* பாவித்தல் - Skt. bhāvanā

*[சிவோகம் + பாவனை]*

**சிழகு-தல்** *šiḻagu-*, 7 செ.கு.வி. (v.i.) விம்முதல்; to choke with sobbing. *"சிழகிச் சிழகி யழுதால்" (ஈடு, 3.2:7).*

*[சிழ்கு → சிழகு. சிழ்குதல் = விம்முதல்]*

**சிள்வண்டு** *šiḷ-vaṇḍu*, பெ. (n.) *சுவர்க்கோழி;* (M. M. 670) cricket.

*[சின் → சிள். சிள் + வண்டு]*

**சிள்வீடு** *šiḷ-vīḍu*, பெ. (n.) *சிள்வண்டு பார்க்க;* see *šiḷ-vaṇḍu*. *"சிள்வீடு கறங்குஞ் சேய் நாட்டத்தம்" (நற். 252).*

*[சின் → சிள். சிள் + வீடு. விடு → வீடு]*

சிள் ஒலிக்குறிப்பு. சிள்ளென ஒலி விடுதலால் இவ்வாறழைக்கப்பட்டது.

**சிள்ளீடு** *šiḷḷīḍu*, பெ. (n.) *சிள்வண்டு (யாழ்.அக.) பார்க்க;* see *šiḷ-vaṇḍu.*

*[சின் → சிள். சிள் + வீடு]*

**சிள்ளுப்புள்ளெனல்** *šiḷḷu-p-puḷḷ-eṉal*, பெ. (n.) சிளுசிளெனல் (உ.வ.) பார்க்க; see *šiḷušiḷeṉal.*

*[சிள்ளு + புள்ளு + எனல்]*

**சிள்ளெனல்** *šiḷḷ-eṉal*, பெ. (n.) *1. விரைவுக் குறிப்பு;* onom. expr. of a rapidity, swiftness. *'சிள்ளெனப் பருந்து வீழ்ந்தெடுத்த பைந்தலை யரவம்" (ஐங்குறு. 501).* 2. ஆரவாரக் குறிப்பு *(திவா.);* boisterous.

*[சின் + எனல்]*

**சிளுசிளு**[1]**-த்தல்** *šiḷu-šiḷu-*, 4 செ.கு.வி. (v.i.) இரைச்சலிடுதல் *(யாழ்.அக.);* to be chattering.

*[சிளு + சிளு-,]*

**சிளுசிளு**[2]**-த்தல்** *šiḷu-šiḷu-*, 4 செ.கு.வி. (v.i.) *பதனழிதல்;* to decay, rot or become decomposed, as vegetables.

*[சிளு + சிளு-,]*

**சிளுசிளெனல்** *šiḷušiḷeṉal*, பெ. (n.) ஒலிக் குறிப்பு வகை *(சங்.அக.);* onom. expr. of bubbling, as boiling water.

*[சிளு + சிளு + எனல்]*

**சிளுபுளு-த்தல்** *šiḷu-puḷu-*, 4 செ.கு.வி. (v.i.) *1. சிளுசிளு-த்தல் பார்க்க (யாழ்.அக.);* see *šiḷu-šiḷu-*. 2. நொதுநொதுத்தல்; to be mashy, as overboiled rice.

*[சிளு + புளு-,]*

**சிளுபுளெனல்** *šiḷu-puḷeṉal*, பெ. (n.). சிளு சிளெனல் *(வின்.)* பார்க்க; see *šiḷu-šiḷeṉal.*

*[சிளு + புளு + எனல்]*

**சிளை-த்தல்** *šilai-*, 4 செ.குன்றா.வி. (v.i.) சோர்தல்; to be weary, become tired. *'அவனைப் போலே பிரிவுக்குச் சிளையாதபடி' (ஈடு, 9,5:3).*

*[இளை → சிளை-,]*

**சிற்குணம்** *šir-kuṇam*, பெ. (n.) இறைவன் அல்லது ஆதனுக்கு (ஆன்மா) அறிவாகிய இயல்பாகவுள்ள பண்பு; attribute of intelligence either of God or individual souls. *"காரண சிற்குணரூப" (பாரத. மூன்றாம் போர். 17).*

*[சித்து + குணம் → சிற்குணம்]*

**சிற்குணன்** *širkuṇaṉ*, பெ. (n.) கடவுள்; God as pure intelligence. *"சிற்குணனுட னிருப்பன்" (சேதுபு. இராமநா. 43).*

*[சித்து + குணன் → சிற்குணன்]*

**சிற்குரு** *šir-guru*, பெ. (n.) பளு, பாரம் (நாமதீப. 794); weight.

*[சில் + குரு]*

**சிற்சத்தி** *šir-šatti*, பெ. (n.) ஐவகையாற்றல்களி லொன்றாய், ஆதன் இருவினைப் பயன்களைத் துய்த்துத் தொலைத்து, முத்தியெய்துமாறு செய்யும் சிவபிரானது ஆற்றல்; Šivaṉ's energy of wisdom which has the virtue of liberating the souls from the bondage of karma and establishing them in bliss one of ai-vagi-c-catti. *"சிற்சத்தியா லுணர்ந்து" (தாயு. பரசிவ. 2).*

*[சித்து + சத்தி → சித்சத்தி → சிற்சத்தி]*

**சிற்சபை** *šir-šabai*, பெ. (n.) சிற்றம்பலம்; hall of wisdom, the sacred dancing - hall at Chidambaram. *"கருதரிய சிற்சபையில்" (தாயு. கருணாகர. 1)*

த. சபை - Skt. sabhā

*[சிறு + சபை. அவை → சவை → சபை]*

**சிற்சில** *širšila*, பெ.அ. (adj.) அளவில் குறைவான; slight or minor. *'அமைச்சரவையில் சிற்சில மாற்றங்கள் வரவிருக்கின்றன' (உ.வ.).*

*[சில + சில]*

**சிற்சிலிர்ப்பான்** *šir-šilirppāṉ*, பெ. (n.) சிச்சிலுப்பை (யாழ்ப்.); chicken pox.

*[சில் + சிலிர் = சில்சிலிர் → சிற்சிலிர் → சிற்சிலிர்ப்பான்]*

**சிற்சுகம்** *šir-šugam*, பெ. (n.) இறையின்பம்; spiritual enjoyment. *"செல்லுவே னந்தச் சிற்சுகத்தே" (தாயு. பாயப். 44).*

*[சித்து + சுகம் → சிற்சுகம்]*

**சிற்சுடர்த்தைலம்** *šir-šuḍar-t-tailam*, பெ. (n.) வெளிப்புறப் பயன்பாட்டிற்குரிய கூட்டு எண்ணெய் (தைலவ.தைல.100); a compound medicinal oil for external application.

*[சில் + சுடர் + தைலம்]*

**சிற்சொரூபம்** *šir-šorūbam*, பெ. (n.) அறிவின் திருவுருவம்; embodiment of pure intelligence.

*[சித்து + சொரூபம் = சிற்சொரூபம்]*

**சிற்சோமன்** *šir-šōmaṉ*, பெ. (n.) சேர்பந்தச் செய்நஞ்சு (மூ.அ.); a mineral poison.

**சிற்பக்கயிறு** *širba-k-kayiṟu*, பெ. (n.) சிற்ப சாத்திரம் பார்க்க; see *širba-šāttiram*. *"யாத்த சிற்பக் கயிற்றின் வாழ்நரும்" (பெருங். வத்தவ. 2:51).*

*[சிற்பம்' + கயிறு]*

**சிற்பசாத்திரம்** *širba-šāttiram*, பெ. (n.) கட்டடக்கலை, சிற்பக்கலை தொடர்பான கல்வி; science of architecture sculpture and other branches of art.

*[சிற்பம் + சாத்திரம்]*

**சிற்பசாத்திரி** *širba-šāttiri*, பெ. (n.) சிற்பாசாரி, பெருந்தச்சன், கலைஞன்; architect, headmason.

*[சிற்பம் + சாத்திரி. சாத்திரம் → சாத்திரி. ஒ. நோ. பரிகாரம் → பரிகாரி]*

**சிற்பசாலை** *širpa-sālai* பெ. (n.) சிலை செய்யுமிடம்; mechanic's shop, manufactory.

*[சிற்பம் + சாலை. சாலுதல் = நிறைதல், கூடுதல். சால் → சாலை = கூடம், பட்டறை, தொழிலகம்]*

**சிற்பத்தொழிற்குறுப்பு** *širpa-t-toḻir-kuṟuppu*, பெ. (n.) கல், மாழை, செங்கல், மரம், மண், சுதை, மருப்பு, வண்ணம், கண்டசருக்கரை, மெழுகு என்னும் சிற்பவேலைக்குரிய உறுப்புகள் (பிங்.); materials required for art production ten in number, viz., stone, metal, brick, wood, soil, lime, ivory, colour, sugar-candy, wax.

*[சிற்பம் + தொழில் + உறுப்பு]*

**சிற்பநூல்** *śiṟpa-nūl*, பெ. (n.) *சிற்பக்கலை பற்றிய நூல்கள்;* ancient treatises on architecture and allied arts.

*[சிற்பம் + நூல்]*

**சிற்பம்**[1] *śiṟpam*, பெ. (n.) 1. தொழிலின்திறமை; artistic skill. "செருக்கயல் சிற்பமாக" *(சீவக. 2716).* 2. நுட்பமானதொழில்; fine or artistic workmanship. "சிற்பந் திகழ்தரு திண்மதில்" *(திருக்கோ. 305).* 3. சிற்பநூல் பார்க்க; see *śiṟpa-nūl.* "தெளிதரு சிற்ப நன்னூல்" *(திருவாலவா. 1:24).*

ம. சில்பம்

*[சில் → சிற் → சிற்பு → சிற்பம்]*

**சிற்பம்**[2] *śiṟpam*, பெ. (n.) சிந்திக்கை; thinking. "அவர்தஞ் சிற்பங்க டரும் புகழும்" *(கோயிற்பு. பாயி. 21).*

*[சிற் → சிற்பி → சிற்பம்]*

**சிற்பம்**[3] *śiṟpam*, பெ. (n.) குறைவு; fewness, shortness, as of duration. "சிற்பங்கொள் பகலென" *(கம்பரா. சடாயுகாண். 8.).*

*[சிற் → சிற்பு → சிற்பம் → Skt. svalpa (வ.வ.152)]*

**சிற்பர்** *śiṟpar*, பெ. (n.) கம்மியர், கலைஞர் முதலான சிற்பிகள் (வின்.); mechanics, artisans, stone-cutters.

*[சிற்பம் → சிற்பர்]*

**சிற்பரக்கூர்மை** *śiṟpara-k-kūrmai*, பெ. (n.) கந்தகவுப்பு (வின்.); salt produced from sulphur.

*[சிற்பரம் + கூர்மை]*

**சிற்பரம்** *śiṟparam*, பெ. (n.) 1. கந்தம்; fragrance. 2. கடல்; ocean, sea. 3. அறிவு; wisdom.

**சிற்பரவுப்பு** *śiṟpara-v-uppu*, பெ. (n.) இந்துப்பு (மூ.அ.); sea-salt.

*[சிற்பரம் + உப்பு]*

**சிற்பரன்** *śiṟparaṉ*, பெ. (n.) அறிவிற்கு எட்டாத கடவுள்; God as transcending human understanding. 'எப்பொருளினுமாஞ் சிற்பரன்" *(திருவாத. பு. திருப்பெருந். 21).*

*[சிற்பரம் → சிற்பரன்]*

**சிற்பரி** *śiṟpari*, பெ. (n.) 1. பொன்னிமிளை; bismuth. 2. வெண்காரம்; borax.

*[சிற்பரம் → சிற்பரி]*

**சிற்பரை**[1] *śiṟparai*, பெ. (n.) மலைமகள்; Pārvadi. "சிற்பரை யிங்கெமையாளு முமையாள்" *(கந்த. க. பாயி. 3.).*

*[சித் + பரை → சிற் + பரை]*

**சிற்பரை**[2] *śiṟparai*, பெ. (n.) 1. வழலைக் கட்டி (வின்.); soap. 2. சிற்பரி (வின்.) பார்க்க; see *śiṟpari.*

**சிற்பவியல்** *śiṟpaviyal*, பெ. (n.) சிற்பஞ்சார் தொழில்; architecture, as an art.

*[சிற்பம் + இயல்]*

**சிற்பன்** *śiṟpaṉ*, பெ. (n.) படைத்தல் தொழிலில் வல்லவனான நான்முகன்; Nāṉmugaṉ as one skilled in the art of creation. "சிற்பனை யெலாஞ் சிருட்டித்த" *(திருமந். 628).*

*[சிற்பம் → சிற்பன்]*

**சிற்பாசாரி** *śiṟpāśāri*, பெ. (n.) சிற்பி (யாழ்.அக.) பார்க்க; see *śiṟpi.*

*[சிற்பம் + ஆசாரி]*

**சிற்பி** *śiṟpi*, பெ. (n.) கம்மியன் (சூடா.) கல் தச்சன், கைவினைஞர்; mechanic, artisan, stone-cutter.

ம. சில்பி

*[சிற்பம் → சிற்பி]*

**சிற்பிடம்** *śiṟpiḍam*, பெ. (n.) பிறர் காணாமல் இருக்கை; being invisible. "சிற்பிடத்தாற் புக்கு" *(நீலகேசி, 236).*

**சிற்பியல்** *śiṟpiyal*, பெ. (n.) சிற்பநூல்; architecture, as an art. "மாசில் கம்மத்துச் சிற்பியற் புலவர்" *(பெருங். இலாவண. 4:50).*

*[சிற்பம் + இயல் → சிற்பவியல் → சிற்பிவியல் → சிற்பியல்]*

**சிற்பிரதானம்** *śiṟpiradāṉam*, பெ. (n.) அறிவின் விளக்கம்; effulgence of wisdom. "பொலிந்த சிற்பிரதானமதனால்" *(வேதா. சூ. 49).*

**சிற்றகத்தி** *śiṟṟagatti*, பெ. (n.) செடிவகை (L); common sesban.

*[சிறு(மை) → சில் + அகத்தி]*

**சிற்றகவை** *širragavai,* பெ. (n.) இளம்பருவம்; nonage, youth.

*[சிறு(மை) + அகவை]*

**சிற்றச்சிறுகாலே** *širra-c-cirukālē,* வி.எ. (adv.) சிற்றஞ்சிறுகாலே பார்க்க; see *širrañ-širu-kālē.* "சிற்றச் சிறுகாலே முனிசென்றான்" (பிரமோத். 10: 10).

*[சிற்றம் சிறு + காலை → சிற்றச்சிறு + காலே]*

**சிற்றஞ்சிறுகாலே** *širrañ-širu-kālē,* வி.எ. (adv.) புலர்காலையில்; early in the morning, in the small hours of the morning. "சிற்றஞ்சிறு காலே வந்துன்னைச் சேவித்து" (திவ். திருப்பா. 29).

*[சின்னஞ்சிறிய → சிற்றஞ்சிறிய → சிற்றஞ் சிறு + காலே → சிற்றஞ்சிறு காலை → சிற்றஞ்சிறுகாலே]*

**சிற்றடி** *širradi,* பெ. (n.) சீறடி; small foot, considered beautiful. "பெருமான் மருகன்றன் சிற்றடியே" (கந்தரலங். 15).

*[சிறு + அடி]*

**சிற்றடிசில்** *širradišil,* பெ. (n.) சிறுசோறு பார்க்க; see *širu-sōru.* "செய்தபூஞ் சிற்றடிசி லிட்டுண்ண வேற்பார்" (பரிபா. 10:105.)

*[சிறுமை + அடிசில்]*

**சிற்றடிப்பாடு** *širradi-p-pādu,* பெ. (n.) ஆள் நடமாட்டம் அதிகமில்லாத ஒற்றையடிப் பாதை; unfrequented foot path. "காட்டில் சிற்றடிப்பாடான வழிகளிலே" (திவ். பெரியாழ். 3, 2:4, வியா. பக். 542).

*[சிற்றடி + பாடு]*

**சிற்றண்டம்** *širrandam,* பெ. (n.) முட்டை (மூ.அ.); egg.

*[சிறு(மை) + அண்டம்]*

**சிற்றணுக்கன்** *širranukkan,* பெ. (n.) விசிறி அல்லது ஈச்சோப்பியாகிய அரசச் சின்னம் (சீவக. 437, உரை); fan or fly-whisk waved before a king.

*[சிறு(மை) + அணுக்கன்]*

**சிற்றப்பன்** *širrappan,* பெ. (n.) 1. தகப்பனின் தம்பி; father's younger brother. 2. தாயின் தங்கை கணவன்; mother's younger sister's husband. சிற்றப்பன் வீட்டுக்குச் சிற்றாடை வாங்கி வரலாம் என்று போனாளாம்; சிற்றப்பன் பெண்சாதி ஈச்சம்பாயைக் கட்டிக் கொண்டு எதிரே வந்தாளாம் (பழ.).

ம. சிற்றப்பன்; க. சிக்கப்ப

*[சிறு(மை) + அப்பன்]*

**சிற்றப்பா** *širrappā,* பெ. (n.) சிற்றப்பன் பார்க்க; see *širrappan.*

**சிற்றம்பலம்** *širrambalam,* பெ. (n.) சிற்சபை; hall of wisdom, the sacred dancing hall at Chidambaram. "செற்றார்வாழ் தில்லைச் சிற்றம்பல மேய" (தேவா. 1, 1).

ம. சிற்றம்பலம்

*[சித்து + அம்பலம் → சித்தம்பலம் → சிற்றம்பலம்]*

**சிற்றம்பலவன்** *širrambalavan,* பெ. (n.) தில்லையில் திருநடமாடுஞ் சிவபெருமான்; Šiva, as dancing in the sacred Hall at Chidambaram. 'தென்பா லுகந்தாடுந் தில்லைச் சிற்றம்பலவன்" (திருவாச. 12:9).

*[சித்து + அம்பலவன் – சித்தம்பலவன் → சிற்றம்பலவன்]*

**சிற்றம்மான்பச்சரிசி** *širrammān-paccariši,* பெ. (n.) 1. செடிவகை; thyme leaved spurge. 2. செவ்வம்மான் பச்சரிசி; red spurge.

*[சிறு(மை) + அம்மான்பச்சரிசி]*

**சிற்றமட்டி** *širramatti,* பெ. (n.). சிற்றாமுட்டி (யாழ்ப்.); rose-coloured sticky mallow.

*[சிறு(மை) + ஆமுட்டி – சிற்றாமுட்டி → சிற்றாமுட்டி → சிற்றாமட்டி → சிற்றமட்டி]*

**சிற்றமட்டியெண்ணெய்** *širramatti-y-enney,* பெ. (n.) சிற்றாமட்டிவேரைக் கூடுதலாகச் சேர்த்து வடிக்கப்படும் மருந்தெண்ணெய் (யாழ்ப்.); a medicinal oil in which the root of širra-matti forms the chief ingredient.

*[சிற்றமட்டி + எண்ணெய்]*

**சிற்றரசன்** *širrarašan,* பெ. (n.) ஒரு பேரரசின் மேலாண்மையை ஏற்று அதற்குக் கீழ்ப்பட்டுக் தண்டம் (கப்பம்) செலுத்தி ஒரு நிலப்



சிற்றரத்தை



சிற்றாமுட்டி



சிறுதேக்கு



சிறுபூனைக்காலி

பகுதியை ஆளும் அரசன்; chieftain (who accepts the overlordship of a king); feudatory.

ம. சிற்றரசன்

[சிறு + அரசன்]

**சிற்றரத்தை** *śiṟṟarattai,* பெ. (n.) அரத்தை வகை (பதார்த்த. 985); lesser galangal.

ம. சிற்றரத்த

[சிறு + அரத்த]

அரத்தை பார்க்க.

**சிற்றரிவாள்** *śiṟṟarivāḷ,* பெ. (n.) கையரிவாள்; small sickle.

[சிறு(மை) + அரிவாள்]

அரிவாள் பார்க்க.




**சிற்றரும்பு** *śiṟṟarumbu,* பெ. (n.) காயரும்பு (பிங்.); bud.

[சிறு(மை) + அரும்பு]

அரும்பு பார்க்க

**சிற்றல்லி** *śiṟṟalli,* பெ. (n.) நீலநிற அல்லி; (M.M. 368) blue Indian water-lily.

[சிறு(மை) + அல்லி]

**சிற்றலை** *śiṟṟalai,* பெ. (n.) வானொலியில் நூறிலிருந்து பத்துமீட்டர் நீளத்துக்குட்பட்ட ஒரு மின்காந்த அலை; shortwave.

[சிறு + அலை]

**சிற்றவரை** *śiṟṟavarai,* பெ. (n.) அவரை வகை (வின்.); a kind of small bean.

[சிறு(மை) + அவரை]

**சிற்றவை** *śiṟṟavai,* பெ. (n.) சிற்றாத்தாள்; mother's younger sister. "சிற்றவை பணியால் முடிதுறந்தானை" (திவ். பெரியதி. 2.3:1).

[சிறு(மை) + அவ்வை = சிற்றவ்வை; சிற்றவ்வை → சிற்றவை]

**சிற்றழிஞ்சில்** *śiṟṟaḻiñjil,* பெ. (n.) அழிஞ்சில் வகை; privet.

[சிறு(மை) + அழிஞ்சில்]

**சிற்றறிவன்** *śiṟṟaṟivaṉ,* பெ. (n.) ஆதன்; jīva or individual soul, as having limited knowledge.

[சிறு(மை) + அறிவன்]

**சிற்றறிவு** *śiṟṟaṟivu,* பெ. (n.) 1. புல்லறிவு; unsound, imperfect knowledge or understanding. 2. சுருங்கிய அறிவு; limited knowledge.

[சிறு(மை) + அறிவு]

**சிற்றறுகு** *śiṟṟaṟugu,* பெ. (n.) அறுகம்புல் வகை (வின்.); a kind of grass.

[சிறு(மை) + அறுகு]

அறுகு பார்க்க

**சிற்றன்னை** *śiṟṟaṉṉai,* பெ. (n.) சித்தி; father's second wife.

ம. சிற்றச்சி, சிற்றம்ம

[சிறு + அன்னை]

**சிற்றாச்சா** *śiṟṟāccā,* பெ. (n.) அத்திமரம்; common mountain ebony.

[சிறுமை → சிறு + ஆச்சா]

**சிற்றாசா** *śiṟṟāśā,* பெ. (n.) சிற்றாச்சா பார்க்க; see *śiṟṟāccā.*

[சிற்றாச்சா → சிற்றாசா (கொ. வ.)]

**சிற்றாட்புள்ளி** *śiṟṟāṭ-puḷḷi,* பெ. (n.) சிற்றாளன் (நாஞ்.) பார்க்க; see *śiṟṟāḷaṉ.*

[சிற்றான் + புள்ளி]

**சிற்றாடை** *śiṟṟāḍai,* பெ. (n.) 1. சிறிய ஆடை; small garment. "சிற்றாடையுஞ் சிறுப்பத்திரமும் (திவ். பெரியாழ். 3.3:5). 2. சிறுபெண்ணின் ஆடை; cloth made for girls. "நற்சிற்றாடைக் காரி" (தனிப்பா. ii 132, 334).

ம. சிற்றாட

[சிறு(மை) + ஆடை]

சிறுமை - அளவிற்சிறிய, வயதிற் சிறிய.

**சிற்றாத்தாள்** *śiṟṟāttāḷ,* பெ. (n.) *சிறியதாய் பார்க்க;* see *śiṟiya-tāy.*

ம. சிற்றம்ம, சிற்றச்சி

*[சிறு(மை) + ஆத்தாள்]*

**சிற்றாதாயம்** *śiṟṟādāyam,* பெ. (n.) *1. சில்லரை வரும்படி;* small income from miscellaneous sources. *2. கள்ளச்சிறுதேட்டு (வின்.);* money gained by embezzlement or fraud.

*[சிறு(மை) + ஆதாயம்]*

ஆதாயம் பார்க்க

**சிற்றாம்பல்** *śiṟṟāmbal,* பெ. (n.) *நீலநிறமுள்ள அல்லி;* blue Indian water lily.

*[சிறு(மை) + ஆம்பல்]*

ஆம்பல் பார்க்க

**சிற்றாமணக்கு** *śiṟṟāmaṇakku,* பெ. (n.) *ஆமணக்கு (பதார்த்த. 154.);* castor-plant.

*[சிறு(மை) + ஆமணக்கு]*

**சிற்றாமரைப்பூ** *śiṟṟāmarai-p-pū,* பெ. (n.) *முளரி மலர் (ரோசா மலர்) (பதார்த்த. 644.);* rose, as a small lotus.

*[சிறு(மை) + தாமரைப்பூ]*

முளரிமலர் தாமரையை ஒருபோகு ஒத்திருத்தலால் இவ்வாறழைக்கப்பட்டது.

**சிற்றாமல்லி** *śiṟṟāmalli,* பெ. (n.) *காட்டு மல்லிகை;* wild jasmine.

*[சிறு(மை) + ஆ + மல்லி]*

**சிற்றாமுட்டி** *śiṟṟāmuṭṭi,* பெ. (n.) *1. மெல்லிலைத் தண்டுகளுடன் கூடிய மஞ்சள்வண்ணச் செடி;* yellow sticky mallow. *2. செவ்வண்ணப் பூச்செடி (பதார்த்த. 470);* rose coloured sticky mallow.

*[சிறு(மை) + ஆ + முட்டி]*

**சிற்றாய்** *śiṟṟāy,* பெ. (n.) *சிறியதாய் பார்க்க;* see *śiṟiya-tāy.*

*[சிறு(மை) + தாய்]*

**சிற்றாயம்** *śiṟṟāyam,* பெ. (n.) *சிற்றூர் வரிவகை (தெ. க. தொ. iii 35);* a village cess.

*[சிறு(மை) + ஆயம்]*

**சிற்றாரால்** *śiṟṟārāl,* பெ. (n.) *சிறியவகை ஆரல் மீன் (பதார்த்த. 920);* a species of small lamprey.

*[சிறு(மை) + ஆரல்]*

**சிற்றால்** *śiṟṟāl,* பெ. (n.) *முட்டைவடிவ இலையினையுடைய அத்திமரம்;* jointed ovate-leaved fig.

ம. சிற்றால்

*[சிறு(மை) + ஆல்]*

**சிற்றாலவட்டம்** *śiṟṟāla-vaṭṭam,* பெ. (n.) *பீலிவட்ட விசிறி (சீவக. 839, உரை);* small circular fan or fly whisk, made of peacock's feathers.

*[சிறு(மை) + ஆலவட்டம்]*

**சிற்றாழாக்கு** *śiṟṟāḻākku,* பெ. (n.) *1. ஒரு நிறுத்தலளவு;* bazaar weight = $^1/_5$ tōlā. *2. ஒரு முகத்தலளவு;* measure of capacity = $^1/_{16}$ pucka seer.

*[சிறு(மை) + ஆழாக்கு]*

**சிற்றாள்** *śiṟṟāḷ,* பெ. (n.). *1. சிறுவன் (பிங்.);* boy. *'சிற்றாள் எட்டாளுக்குச்சரி' (பழ.) 2. ஏவலாள்;* servant. "சிற்றாளில்லாதான் கைம்மோதிரமும்" *(திரிகடு. 66). 3. கொத்தனுக்கு உதவி புரியுங் கூலியாள்;* mason's assistant, boy or girl cooly. "சேர்ந்து சுமக்கின்ற சிற்றாளை" *(திருவாலவா. 30:3). 4. சிற்றாளன் (இ.வ.) பார்க்க;* see *śiṟṟāḷaṉ.*

ம. சிற்றாள்

*[சிறு(மை) + ஆள். ஆள் → ஆளன்]*

**சிற்றாளன்** *śiṟṟāḷaṉ,* பெ. (n.) *சீட்டுப்புள்ளி (நாஞ்.);* subscriber in a chit transaction.

ம. சிற்றாளன்

*[சிறுமை + ஆளன்]*

**சிற்றாறு** *śiṟṟāṟu,* பெ. (n.) *1. சிறு ஓடை;* rivulet. *2. துணை ஆறு (இ.வ.);* tributary stream.

ம. சிற்றாறு

*[சிறுமை + ஆறு]*

**சிற்றி**[1] *śiṟṟi,* பெ. (n.) *பசலை (மலை.);* Indian spinach.

*[சிறு(மை) + இலை → சிற்றிலை; சிற்றிலை → சிற்றி]*

**சிற்றி**[2] *śiṟṟi,* பெ. (n.) சிற்றாத்தாள் பார்க்க; see *śiṟṟāttāḷ.*

*[சிறுமை + ஆய் → சிற்றாய் → சிற்றி]*

**சிற்றிசை**[1] *śiṟṟiśai,* பெ. (n.) இசையைப் பற்றிக் கூறும் கடைக்கழக நூல் (இறை. 1, பக். 5.); a treatise of the last Šaṅgam, bearing on music.

*[சிறு(மை) + இசை]*

சிறுமையாவது நுணுக்கம். இசையின் நுணுக்கம், நுட்பம் கூறும் நூல்.

**சிற்றிசை**[2] *śiṟṟiśai,* பெ. (n.) வெண்டுறைச் செந்துறையுளொருவகை (யாப். வி. 538); a sub-division of veṇḍuṟai-c-cenduṟai.

*[சிறு(மை) + இசை]*

**சிற்றிசைச்சிற்றிசை** *śiṟṟiśai-c-ciṟṟiśai,* பெ. (n.) வெண்டுறைச் செந்துறையுளொருவகை (யாப். வி. 538); a sub-division of veṇḍuṟai-c-cenduṟai.

*[சிற்றிசை + சிற்றிசை]*

**சிற்றிதழ்**[1] *śiṟṟidaḻ,* பெ. (n.) 1. தாமரை மலரின் உள்ளிதழ் (வின்.); corolla, inner petal, as of the lotus. 2. நேர்த்தியான பின்னல் (யாழ்ப்.); fine plaiting, as in mats, baskets, etc.,

*[சிறு(மை) + இதழ்]*

**சிற்றிதழ்**[2] *śiṟṟidaḻ,* பெ. (n.) குறிப்பிட்ட துறைகளில், குறைந்தஅளவு படிப்பாளிகளுக் காக நடத்தப்படும் இதழ்; journal with limited circulation for limited readers.

*[சிறு(மை) + இதழ்]*

**சிற்றியாறு** *śiṟṟi-y-āṟu,* பெ. (n.) சிறுநதி; small river. "சிற்றியாற் றடைகரை" (மணிமே. 15, 82).

*[சிறு(மை) + யாறு]*

**சிற்றிராசிப்பணம்** *śiṟṟirāśi-p-paṇam,* பெ. (n.) பழைய காசு (நாணய) வகை (புதுக் கல். 71.); an ancient coin.

*[சிறு + இராசி + பணம்]*

**சிற்றிரு** *śiṟṟiru,* பெ. (n.) கிலுகிலுப்பைச் செடி (மலை.); laburnum - leaved rattlewort.

**சிற்றிரை** *śiṟṟirai,* பெ. (n.) 1. சிறுவிலங்கினுணவு; prey or food of small animals. 2. மிகச் சிறு அளவு உணவு; small quantity of food, morsel.

*[சிறு(மை) + இரை]*

**சிற்றிரைப்பு** *śiṟṟiraippu,* பெ. (n.) குறுமூச்சு; shortness of breath.

*[சிறு(மை) + இரைப்பு]*

**சிற்றில்** *śiṟṟil,* பெ. (n.) 1. சிறுகுடில், குடிசை; hut, hovel. "சிற்றி னற்றூண் பற்றி" (புறநா. 86). 2. சிறுமியர் கட்டியாடும் மணல்வீடு; toy house of sand built by little girls in play. "நீயாடுஞ் சிற்றில் புனைகோ சிறிதென்றான்" (கலித். 111). 3. சிற்றிற்பருவம் பார்க்க; see *śiṟṟiṟ-paruvam.* "சிறுபறை சிற்றில் சிறுதேரென்ன" (இலக். வி. 806).

*[சிறு(மை) + இல்]*

**சிற்றில்**[2] *śiṟṟil,* பெ. (n.) 1. கந்தை (பிங்.), பீற்றல், துணிக்கீறல்; rags. 2. கிழிசல், கீற்று; tatters.

*[சில் → சிற் → சிற்றில்]*

**சிற்றில்சிதைத்தல்** *śiṟṟil-śidaittal,* பெ. (n.) சிறுமியரிழைத்த மணல்வீட்டைக் குலைத் தாடும் ஆண்மகன் விளையாட்டு (இலக்.வி. 806, உரை.); boy's play of trampling down the toy house of sand built by little girls.

*[சிற்றில் + சிதைத்தல்]*

**சிற்றிலக்கம்** *śiṟṟilakkam,* பெ. (n.) கீழ்வாயிலக்கம்; fraction.

*[சிறு(மை) + இலக்கம்]*

**சிற்றிலக்கியம்** *śiṟṟilakkiyam,* பெ. (n.) உள்ளடக்கத்தின் அடிப்படையிலும் செய்யுள் வடிவ அடிப்படையிலும் பாகுபடுத்தப்பட்ட இலக்கிய வகை; minor literary genre.

*[சிறு(மை) + இலக்கியம்]*

**சிற்றிலிழைத்தல்** *śiṟṟil-iḻaittal,* பெ. (n.) சிறுமியர் மணல்வீடு கட்டி விளையாடுகை; a play in which girls built toy houses with sand.

*[சிற்றில் + இழைத்தல்]*

இழைத்தல் = தேய்த்தல், தேய்த்து மெருகூட்டுதல், மெருகூட்டி அழகுபடுத்துதல்.

நான் இழைத்து இழைத்துக் கட்டியவீடு என்னும்வழக்கு இன்றுமுளது. சிறுமியர் தம் ஆற்றல் முழுதையும் பயன்படுத்தி அழகாய்க் கட்டுவதாய் எண்ணிக் கொள்வர்.

**சிற்றிலுப்பை** *śiṟṟiluppai,* பெ. (n.). இலுப்பை வகை (மலை.); a species of mahwa.

*[சிறு(மை) + இலுப்பை]*

**சிற்றிலை**[1] *šiṟṟilai,* பெ. (n.) சிறியஇலை; tiny leaf.

*[சிறு + இலை]*

**சிற்றிலை**[2] *šiṟṟilai,* பெ. (n.) 1. நெய்ச்சிட்டி (மலை.); purple fleabane. 2. குன்றிமணி; crab's eye. 3. கடுக்காய்; chebulic myrobalan.

*[சிறு(மை) + இலை]*

**சிற்றிலை**[3] *šiṟṟilai,* பெ. (n.) 1. நிலவாகை; medicinal senna. 2. காட்டுச்சீரகம்; vernonia authelmintica. 3. கொழுந்து; tender leaves (சா.அக.).

*[சிறு(மை) + இலை]*

**சிற்றிலைக்கள்ளி** *šiṟṟilai-k-kaḷḷi,* பெ. (n.) சிறிய இலைக்கள்ளி; small leaf spurge (சா.அக.).

*[சிற்றிலை + கள்ளி]*

**சிற்றிலைக்கிரியம்** *šiṟṟilai-k-kiriyam,* பெ. (n.) நீர்ப்பாசம்; duck weed plant (சா.அக.).

*[சிற்றிலை + கிரியம்]*

**சிற்றிலைக்கொடி** *šiṟṟilai-k-kodi,* பெ. (n.) மயிர் மாணிக்கம்; common balah (சா.அக.).

*[சிற்றிலை + கொடி]*

**சிற்றிலைச்சீரகம்** *šiṟṟilai-c-cīragam,* பெ. (n.) காட்டுச்சீரகம்; wild cumin, vernonia anthelmintica (சா.அக.).

*[சிற்றிலை + சீரகம்]*

**சிற்றிலைத்தளை** *šiṟṟilai-t-taḷai,* பெ. (n.) விடத்தளை; ashy babul (சா.அக.).

*[சிற்றிலை + தளை]*

**சிற்றிலைநங்கை** *šiṟṟilai-naṅgai,* பெ. (n.) சிறியாணங்கை என்னும் பூடு; a kind of small milkwort.

*[சிற்றிலை + நங்கை]*

**சிற்றிலைநரம்பு** *šiṟṟilai-narambu,* பெ. (n.) இலைக்காம்பு; pedicle.

*[சிற்றிலை + காம்பு]*

**சிற்றிலைப்பருவம்** *šiṟṟilai-p-paruvam,* பெ. (n.) இளம்பருவம்; juvenile period.

*[சிற்றிலை + பருவம்]*

**சிற்றிலைப்பாதம்** *šiṟṟilai-p-pādam,* பெ. (n.) படர்கொடியினத்தைச் சார்ந்த செருப்படை; a diffuse prostrate herb.

*[சிற்றிலை + பாதம்]*

**சிற்றிலைப்பாலாடை** *šiṟṟilai-p-pālāḍai,* பெ. (n.) மருந்துப் பூடுவகையுளொன்று (சங்.அக.); a kind of medicinal herb.

*[சிற்றிலை + பாலாடை]*

**சிற்றிலைப்பாலாவி** *šiṟṟilai-p-pālāvi,* பெ. (n.) மருந்துச் செடி வகை (சங்.அக.); a medicinal herb.

மறுவ. அம்மான் பச்சரிசி

*[சிற்றிலை + பாலாவி]*

பாலாவிச் செடி இருவகை. ஒன்று சிறிய இலையையுடையது. மற்றது பெரிய இலையையுடையது.

**சிற்றிலைப்பிலவு** *šiṟṟilai-p-pilavu,* பெ. (n.) 1. மரவகை; creamy - leaved lancewood. 2. நீண்ட மரவகை; rusty - leaved lance wood (சா.அக.).

*[சிற்றிலை + பிலவு]*

சிற்றிலைப்பிளவு → சிற்றிலைப்பிலவு (கொ.வ.)

**சிற்றிலைப்புல்** *šiṟṟilai-p-pul,* பெ. (n.) மலையாளத்தில் காணப்படும் கொச்சிலிச்சி யெனும் மூலிகை; medicinal grass - reputed drug of Malabar (சா.அக.).

*[சிற்றிலை + புல்]*

**சிற்றிலைப்பூ** *šiṟṟilai-p-pū,* பெ. (n.) முருங்கைப் பூ; drum stick flower (சா.அக.).

*[சிற்றிலை + பூ]*

**சிற்றிலைப்பூடு** *šiṟṟilai-p-pūḍu,* பெ. (n.) காட்டுக் களைச்செடி; iron weed.

*[சிற்றிலை + பூடு]*

**சிற்றிலைப்பொலவு** *šiṟṟilai-p-polavu,* பெ. (n.) 1. வண்டி அடிக்கட்டைக்குப் பயன்படுத்தப் படுங் கெட்டியான மரவகை; creamy - leaved lance - wood. 2. தூண்டிற்கோல் முதலியன செய்யப்பயன்படும் நீண்ட மரவகை; rusty - leaved lance wood.

*[சிற்றிலை + பிளவு → பொளவு → பொலவு]*

**சிற்றிலைப்போளம்** *šiṟṟilai-p-pōḷam,* பெ. (n.) 1. நீண்ட மரவகை; rusty - leaved lance wood. 2. சிற்றிலைப்பிலவு பார்க்க; see *šiṟṟilai-p-pilavu.*

*[சிற்றிலை + போளம்]*

**சிற்றிலைமடக்கு** *šiṟṟilai-maḍakku,* பெ. (n.) நெய்க்கொட்டை; butterfly soap nut (சா.அக.).

*[சிற்றிலை + மடக்கு]*

**சிற்றிலைமடுக்கு** *šiṟṟilai-maḍukku,* பெ. (n.) சிற்றிலைமடக்கு பார்க்க; see *šiṟṟilai-maḍakku.*

*[சிற்றிலை மடக்கு → சிற்றிலை மடுக்கு]*

**சிற்றிலைவாகை** *šiṟṟilai-vāgai,* பெ. (n.) கருவாகை; fragrant sirissa.

*[சிற்றிலை + வாகை]*

**சிற்றிளைப்பு** *šiṟṟiḷaippu,* பெ. (n.) மெலிதாக இளைத்த நிலை; slight emaciation (சா.அக.).

*[சிறு(மை) + இளைப்பு]*

**சிற்றிற்பருவம்** *šiṟṟiṟ-paruvam,* பெ. (n.) சிறுமியர் இழைத்த மணற் சிற்றிலைத் தலைவன் சிதைக்கும் பருவத்தைப் புனைந்து கூறும் ஆண்பாற் பிள்ளைத்தமிழ்ப் பகுதி; section of āṇpāṟ-piḷḷai-t-tamiḻ, which describes the stage of childhood in which the hero of the poem tramples down the toy houses built by little girls, one of ten.

*[சிற்றில் + பருவம்]*

**சிற்றிறால்** *šiṟṟiṟāl,* பெ. (n.) பூச்சியிறால்; common shrimp (சா.அக.).

*[சிறு(மை) + இறால்]*

**சிற்றின்பநூல்** *šiṟṟiṉba-nūl,* பெ. (n.) கொக்கோக நூல்; sexual science (சா.அக.).

*[சிற்றின்பம் + நூல்]*

**சிற்றின்பப்போகி** *šiṟṟiṉba-p-pōgi,* பெ. (n.) உடலின்பத்தில் மிகையான நாட்டமுடையோன்; one who indulges in sexual enjoyments and pleasures (சா.அக.).

*[சிற்றின்பம் + போகி]*

சிற்றின்பம் பார்க்க

**சிற்றின்பம்**[1] *šiṟṟiṉbam,* பெ. (n.) 1. இம்மை நலம்; earthly pleasures. "சிற்றின்பம் வெஃகி" (குறள். 173). 2. மெய்யுறுவின்பம், காமவின்பம்; sexual pleasure, carnal pleasure. "இவடர வந்தவின்பஞ் சிற்றின்ப மென்பது" (சிவப். பிர. வெங்கைக்கோ. 137). 'அறுக்க ஊறும் பூம்பாளை, அணுக ஊறும் சிற்றின்பம்' (பழ.).

ம. சிற்றின்பம்

*[சிறு(மை) + இன்பம்]*

**சிற்றின்பம்**[2] *šiṟṟiṉbam,* பெ. (n.) உப்புக் கட்டிக் கொடி; a kind of milky medicinal creeper (சா.அக.).

**சிற்றினம்** *šiṟṟiṉam,* பெ. (n.) நல்லறிவில்லாத தாழ்ந்தோர்; company of low people. "செய்ந்நன்றியறிதலுஞ் சிற்றின மின்மையும்" (சிறுபாண். 207).

*[சிறு(மை) + இனம்]*

சிறுமை = தாழ்ந்தது, இழிந்தது, வளர்ச்சியற்றது, தன்னினும் தாழ்ந்த அறிவுடையாரைச் சிற்றினம் என்பர். இங்குத் தாழ்வு என்பது இனத்தாலோ, குலத்தாலோ அன்று. பண்பால், ஒழுக்கத்தால், செயற்பாட்டால், அறிவால் தன்னினும் சிறியர் என்க.

**சிற்றீச்சங்குருத்து** *šiṟṟiccaṅ-kuruttu,* பெ. (n.) பெண்களது வயிற்றில் தேங்கியுள்ள அரத்தக் கட்டினைப் போக்கும் சிற்றீச்ச மரத்தினது வெள்ளைக்குருத்து; tender black dates - Phoenix farinifera which is opposed to large date phoenix a caulis (சா.அக.).

*[சிற்றீச்சம் + குருத்து]*

**சிற்றீச்சை** *šiṟṟiccai,* பெ. (n.). சிற்றீச்ச மரம்; tender block dates - Phoenix farnifera.

*[சிறு(மை) + ஈச்சை]*

**சிற்றீஞ்சு** *šiṟṟiñju,* பெ. (n.) சிற்றீச்சை பார்க்க; see *šiṟṟiccai.*

*[சிறு(மை) + ஈஞ்சு]*

**சிற்றீந்து** *šiṟṟindu,* பெ. (n.) ஈந்து வகை (பதார்த்த. 753); dwarf wild date - palm.

ம. சிற்றீந்து

*[சிறு(மை) + ஈந்து]*

**சிற்று-தல்** *śiṟṟu-,* 5 செ.குன்றா.வி. (v.i.) மனத் துயரடைதல்; to be troubled in mind perplexed. "மாநிலத் தெவ்வுயிர்க்குஞ் சிற்ற வேண்டா" (திவ். திருவாய். 9.1:7).

[சுற்று → சிற்று-,]

**சிற்றுடுப்பை** *śiṟṟuḍuppai,* பெ. (n.) மூலிகை வகையுளொன்று; a kind of medicinal herb (சா.அக.).

[சிறு + உடுப்பை]

**சிற்றுடை** *śiṟṟuḍai,* பெ. (n.) வேலம் முள்; thorn of babul tree (சா.அக.).

**சிற்றுண்டி** *śiṟṟuṇḍi,* பெ. (n.) 1. அப்ப வகை, பண்ணிகாரம் (பிங்.); pastry, cake. 2. தித்திப்புள்ளதாய், உருண்டை வடிவில் அரிசி அல்லது கோதுமை மாவிற் செய்த பண்ணிகார வகை; sweet pastry-ball made of rice or wheat flour. "அப்பங்கலந்த சிற்றுண்டி" (திவ். பெரியாழ். 2.4:5). 3. அயர்வாற்றுஞ் சிற்றுணா; light refreshment. 4. அளவிற் சிறியவுணவு; abstemious meal.

ம. சிற்றுண்டி

[சிறு(மை) + உண்டி. சிறுமை = சிறிய, அளவிற் குறைந்த]

**சிற்றுண்டிச்சாலை** *śiṟṟuṇḍi-c-cālai,* பெ. (n.) சிற்றுண்டியும் காடீர், தேநீர் முதலிய பருகங்களும் சாப்பிடக் கிடைக்குமிடம்; snack restaurant, canteen.

[சிற்றுண்டி + சாலை]

**சிற்றுணவு** *śiṟṟuṇavu,* பெ. (n.) 1. பொரிக்கறிக் குழம்பு, கூட்டுவகை முதலியன; curry preparations added to give relish to the main food. "பொரிக்குஞ் சிற்றுணவு" (திவா. 6:86). 2. சிற்றுண்டி,-1 பார்க்க; see *śiṟṟuṇḍi,*-1 "இனிய சிற்றுண வேதேனு மின்றிநீ வருவாய் கொல்லோ" (குசேலோ. குசே. தந்நகர். 275).

[சிறுமை = அளவிற் குறைந்த; சிறுமை + உணவு]

**சிற்றுதடு** *śiṟṟudaḍu,* பெ. (n.) அல்குலின் இரு மருங்கிலுமுள்ள வுதடு; the internal lips of the female genital organ (சா.அக.).

[சிறு(மை) + உதடு]

**சிற்றுந்து** *śiṟṟundu,* பெ. (n.) பயணிகளுக்குப் போக்குவரத்துக்குதவும் சிறிய இயங்கி; mini bus.

[சிறு(மை) + உந்து; சிறுமை = அளவிற் சிறிய]

**சிற்றுப்புளி** *śiṟṟu-p-puḷi,* பெ. (n.) சிறிதளவான புளி; a small quantity of tamarind. "கறிக்குச் சிற்றுப்புளி சேர்க்க வேண்டும்" (நாஞ்.)

[சிறு(மை) + புளி]

**சிற்றுமரி** *śiṟṟumari,* பெ. (n.) 1. உவர்நிலப் புதர்ச்செடி (வின்.); marsh samphire. 2. பவளப் பூண்டு; coral plant.

[சிறு(மை) + உமரி]

**சிற்றுயிர்** *śiṟṟuyir,* பெ. (n.) 1. சிறிது காலம் வாழும் விலங்கு; short - lived being. 2. மிகச் சிறிய உயிரி (வின்.); minute insect, animalcule.

[சிறு(மை) + உயிர். சிறுமை = சிறியது, குறைந்த அளவுடையது]

**சிற்றுயிரிலக்கணம்** *śiṟṟuyir-ilakkaṇam,* பெ. (n.) பூச்சி புழுக்களின் அமைப்பு, தன்மை, பழக்க வழக்கங்களைப் பற்றிக் கூறும் நூல்; the part of zoology, which treats of the structure habits of insects - entomology.

[சிற்றுயிர் + இலக்கணம்]

**சிற்றுரகம்** *śiṟṟuragam,* பெ. (n.) சிறுகடுகு; Indian mustard (சா.அக.).

**சிற்றுரு** *śiṟṟuru,* பெ. (n.) 1. சிறிய உருவ முடையது; small person or object, miniature. "அண்டங்கள் சிற்றுருவமைந்து" (கந்தபு. திருநகரப். 9). 2. தாலியுடன் கோக்கும் உரு; ornamental pieces appended to the tāli.

ம. சிற்றுரு

[சிறு(மை) + உரு]

உரு = உருவுடையது, உருண்டையானது.

**சிற்றுருவிளக்கி** *śiṟṟuru-viḷakki,* பெ. (n.) உருப்பெருக்கியாடி (பூதக்கண்ணாடி); microscope (சா.அக.).

மறுவ. உருப்பெருக்கி

[சிற்றுரு + விளக்கி. விளக்கு → விளக்கி. 'இ' வினை முதலீறு]

**சிற்றுள்** *śiṟṟuḷ,* பெ. (n.) வீட்டிலுள்ள சரக்கறை *(உவ.);* store-room in a house.

*[சிறு(மை) + உள். உள் = அகம், வீடு]*

**சிற்றுள்ளங்கி** *śiṟṟuḷ-aṅgi,* பெ. (n.) உட்சட்டையின் மேல் இடுஞ் சிறுசட்டை; vest.

*[சிறு + உள் + அங்கி]*

**சிற்றுள்ளாடை** *śiṟṟuḷ-ḷ-āḍai,* பெ. (n.) உள்ளாடை வகையுளொன்று; a kind of under vest.

*[சிறு + உள்ளாடை]*

**சிற்றுள்ளான்** *śiṟṟuḷḷāṉ,* பெ. (n.) உள்ளான் குருவி; small snipe.

*[சிறு + உள்ளான்]*

**சிற்றுளி** *śiṟṟuḷi,* பெ. (n.) கல், மரம் போன்றவற்றைத் தகர்க்கும் தச்சுக்கருவி; small chisel used for cutting stones and wood. "சிற்றுளியாற் கல்லுந் தகரும்" *(நீதிநெறி. 14).*

ம. சிற்றுளி; க. கிட்டுளி

*[சிறு(மை) + உளி]*

உளியின் வகையைப் பிரித்துக் காட்டவே 'சிறுமை' சேர்க்கப்பட்டது.




**சிற்றுழா** *śiṟṟuḻā,* பெ. (n.) அரத்த மூலம், சீழ் மூலம், வெட்டை முதலியவற்றைப் போக்கும் குட்டி விளா எனும் மூலிகை; it is a small plant of the feronia genus; it cures piles, gleet etc., *(சா.அக.).*

**சிற்றூண்** *śiṟṟūṇ,* பெ. (n.) சிற்றுண்டி பார்க்க; see *śiṟṟuṇḍi.* "நெய்ச்சூட் டமைந்த சிற்றூண்" *(பெருங். இலாவாண. 2:81).* 'சிற்றூண் இனிது' *(பழ.).*

*[சிறு(மை) + ஊண்]*

**சிற்றூர்** *śiṟṟūr,* பெ. (n.) 1. சிறிய ஊர் *(சூடா.);* small village, hamlet. 'சிற்றூரிலே பாரிக்கூத்தா' *(பழ.).* 2. குறிஞ்சி நிலத்தூர்; village in the hilly tracts.

*[சிறு(மை) + ஊர்]*

குறிஞ்சி நிலம், மலையும் மலை சார்ந்த பகுதியுமாதலால், பரந்துபட்ட ஊர் தோன்றும் வாய்ப்பு குறைவு; எனவே குறிஞ்சி நிலத்தமைந்த ஊரும் சிற்றூரெனப்பட்டது.

**சிற்றூழியன்** *śiṟṟūḻiyaṉ,* பெ. (n.) 1. வீட்டு வேலையாள்; lacquey. 2. கலப்பற்றுக்காரன்; one whose occupation is the caulking of ships, boats etc., *(செ.அக.).*

*[சிறு(மை) + ஊழியன்]*

**சிற்றெட்டகம்** *śiṟṟeṭṭagam,* பெ. (n.) அகப் பொருளைக் கூறும் ஒரு நூல் *(களவியற். 16);* an ancient poem on Agam.

*[சிறு + எட்டகம்]*

**சிற்றெண்** *śiṟṟeṇ,* பெ. (n.) 1. கீழெண்; fraction. 2. இருசீர் ஓரடியாய் வரும் அம்போதரங்க வகை *(காரிகை, செய். 10, உரை.);* a variety of ambōdaraṅgam consisting of short lines of two feet each. 3. பரிபாடலுறுப்புகளுள் ஒன்று *(பரிபா. 1: 60);* a constituent section of Paripāḍal.

*[சிறு(மை) + எண்]*

**சிற்றெல்லை** *śiṟṟellai,* பெ. (n.) அவ்வச் செய்யுட்குரிய அடிகளின் சிறுமை வரையறை; minimum number of lines, as in a stanza, opp. to pēr-ellai.

*[சிறு(மை) + எல்லை]*

**சிற்றெலி** *śiṟṟeli,* பெ. (n.). சுண்டெலி *(இ.வ.);* mouse, species of small rat.

*[சிறு(மை) + எலி]*

வகை வேறுபாடறிதற்கும், தோற்றம் கருதியும் இப்பெயரமைந்தது.

**சிற்றெலும்பு** *śiṟṟelumbu,* பெ. (n.) மெல்லிய தான சிறிய எலும்பு; small bone *(சா.அக.).*

*[சிறு(மை) + எலும்பு]*

**சிற்றெள்** *śiṟṟeḷ,* பெ. (n.) எள் வகை *(வின்.);* gingelly oil plant, small kind of sesamum.

*[சிறு(மை) + எள்]*

தோற்றத்தினாலும், வகைமையை விதந்தோதுதற்கும் சிறுமை முன்னொட்டானது.

**சிற்றெழுத்தாணிப்பூடு** *śiṟṟeḻuttāṇi-p-pūḍu,* பெ. (n.) *சிறிய வடிவுள்ள எழுத்தாணிப் பூண்டுச் செடி;* small variety of style plant *(சா.அக.).*

*[சிறு + எழுத்தாணிப்பூடு]*

**சிற்றெறும்பு** *śiṟṟeṟumbu,* பெ. (n.) சிவப் பெறும்பு வகை; small red ant. *"பாற்கடலைச் சிற்றெறும்பு பருகநினைப் பதுபோலும்" (சேக்கிழார். பு. பாயி. 9).* *'சிற்றெறும்பைச் சிற்றெறும்பும் கட்டெறும்பைக் கட்டெறும்பும் தேடும்' (பழ.).*

*[சிறு(மை) + எறும்பு]*

வகையை விதந்து கூற சிறுமை முன்னொட்டானது.

**சிற்றேரண்டம்** *śiṟṟēraṇḍam,* பெ. (n.) *சிற்றாமணக்கு (மலை.);* castor plant.

*[சிறு(மை) + ஏரண்டம்]*

**சிற்றேரி** *śiṟṟēri,* பெ. (n.) *சிறிய நீர்நிலை;* a small tank.

**சிற்றேரிகம்** *śiṟṟerigam,* பெ. (n.) பாசி வகையுளொன்றான இலைப்பாசி *(மூ.அ.);* species of duckweed.

*[சிறு + ஏரிகம்]*

**சிற்றேலம்** *śiṟṟēlam,* பெ. (n.) தலைவலி, காய்ச்சல், உமிழ்நீரூறல், வயிற்றுக்கொதிப்பு முதலானவற்றைப் போக்கும், சிறிய ஏலக்காய்; small cardamum, which cures headache, fever, excess salvation etc., *(சா.அக.).*

ம. சிற்றேலம்

*[சிறு(மை) + ஏலம்]*

**சிற்றொடுவை** *śiṟṟoḍuvai,* பெ. (n.) ஒடுவை *மரம்;* a kind of rafle tree *(சா.அக.).*

*[சிறு + ஒடுவை]*

**சிற்றொத்தி** *śiṟṟotti,* பெ. (n.) சிற்றொற்றி பார்க்க; see *śiṟṟoṟṟi.*

*[சிறு(மை) + ஒத்தி]*

ஒற்றி → ஒத்தி. ஒ.நோ: பற்று → பத்து. கற்றுக்குட்டி → கத்துக்குட்டி

**சிற்றொழுக்கம்** *śiṟ-ṟ-oḻukkam,* பெ. (n.) இழிநடத்தை *(நாமதீப. 650);* base conduct.

*[சிறு + ஒழுக்கம்]*

**சிற்றொற்றி** *śiṟṟoṟṟi,* பெ. (n.) *மறுவொற்றி;* sub-mortgage.

ம. சிற்றொற்றி

*[சிறு(மை) + ஒற்றி]*

ஒற்றிக்கு வைத்தல் என்பது ஒரு பொருளை அடைமானமாய் வைத்து வேறொரு பொருளையோ பணத்தையோ மறுதலையாகப் பெறல். இங்குச் சிறுமை, மறுமைப் பொருளில் முன்னொட்டானது.

**சிற்றோலை** *śiṟ-ṟ-ōlai,* பெ. (n.) *தென்னை மட்டையின் நுனிப்பாகத்துள்ள சிறிய ஓலை;* the short blades at the end of the leaf of a coconut tree.

*[சிறு(மை) + ஓலை]*

**சிற-த்தல்** *śiṟa-,* 3 செ.கு.வி. (v.i.) 1. மேன்மையுடையதாதல்; to be eminent, illustrious. *"சிறந்த நான்மறை முனிவர்" (புறநா. 6:19).* 2. மேற்படுதல்; to surpass, excel. *"தாயிற் சிறந்த தயாவான தத்துவனே" (திருவாச. 1, 61).* 3. அளவிற்கதிமாகக் கனத்தல்; to be unbearable heavy. *"சிறியோன் பெறினது சிறந்தன்று மன்னே" (புறநா. 75:5).* 4. *மிகுதல்;* to be abundant. "பெரும் பெயல் சிறத்தலின்" (மதுரைக். 244). 5. இன்றியமையா திருத்தல்; to be indispensable. *"கற்பார்க்குச் சிறந்தது செவி" (தொல். சொல். 76, சேனா.).* 6. *மங்கலமாதல்;* to be auspicious, lucky. 7. *அன்பாதல்;* to be dear. *"சிறந்தானென் றேவற்பாற் றன்று" (குறள், 515).* 8. மகிழ்தல்; to rejoice. *"உளஞ்சிறந்து புகலுவான்" (கந்தபு. யுத்தகாண். ஏமகூ. 31).* 9. அழகாதல் (வின்.); to be graceful. 10. நனிநாகரிகமாதல்; to be elegant. 11. பிறங்கொளி வாய்ந்ததாதல்; to be splendid.

ம. சிறக்குக

*[சுள் → (சுர்) → சீர் → சிற]*

த. சிற → Skt. śras

**சிறக்கணி-த்தல்** *śiṟakkaṇi-,* 4 செ.கு.வி. (v.i.) *1. சிறங்கணி பார்க்க;* see *śiṟaṅgaṇi-,* *"சிறக்கணித் தாள் போல நகும்" (குறள், 1095).* 2. கடைக்

கண்ணாற் பார்த்தல் (சூடா.); to cast a side - look.

[சிறங்கணி → சிறக்கணி-,]

**சிறக்கணித்தல்** *śiṟa-k-kaṇittal*, தொ. பெ. (vbl.n.) குறைத்தல்; to diminish (சா.அக.).

**சிறக்கணிப்பு** *śiṟakkaṇippu*, பெ. (n.) பக்கப் பார்வை; side look (சா.அக.).

**சிறக்கிமுத்து** *śiṟakki-muttu*, பெ. (n.) முத்துவகையுளொன்று; solid pearl.

[சிறக்கி + முத்து]

**சிறகடி-த்தல்** *śiṟagaḍi-*, 4 செ.கு.வி. (v.i.) சிறகடிக்கொள்(ளு)-தல் பார்க்க; see *śiṟakaḍi-k-koḷ-*.

[சிறகு + அடி-,]

**சிறகடிக்கொள்(ளு)-தல்** *śiṟagaḍi-k-koḷ[ḷu]-*, 13 செ.கு.வி. (v.i.) பறத்தற் பொருட்டுச் சிறகடித்தல் (பு.வெ. 9:19, உரை); to flap the wings as birds commencing flight.

[சிறகு + அடித்துக் கொள்ளு-; சிறகடித்துக் கொள்ளு- → சிறகடிக் கொள்ளு-]

**சிறகம்** *śiṟagam*, செ.கு.வி. (v.i.) வளாகத்தின் பகுதி; wings of a complex. i.e., south wing, east wing.

[சிறகு → சிறகம்]

**சிறகர்** *śiṟagar*, பெ. (n.) சிறகு பார்க்க; see *śiṟagu*. "சேவலாய்ச் சிறகர்ப் புலர்த்தியோ" (பரிபா. 3:26).

[சிறகு → சிறகர்]

**சிறகறு-தல்** *śiṟagaṟu-*, 4 செ.கு.வி. (v.i.) 1. வலியழிதல் (இ.வ.); to lose strength. 2. முடமாக்குதல், தளர்வுறச் செய்தல்; to be disabled. 'அவன் சிறகறுந்தான்' (உ.வ.)

[சிறகு + அறு. சிறகு = உறுப்பு, வலிமை, பிரிவு]

**சிறகாற்று-தல்** *śiṟagāṟṟu-*, 5 செ.கு.வி. (v.i.) சிறகினை விரித்தடித்து இளைப்பாற்றிக் கொள்ளுதல் (வின்.); to flap the wings gently and rest, as birds.

[சிறகு + ஆற்று-,]

**சிறகி**[1] *śiṟagi*, பெ. (n.) கிளுவை (வின்.); common teal.

[சிறகு → சிறகி. இ = உடைமைப் பொருள் பின்னொட்டு]

**சிறகி**[2] *śiṟagi*, பெ. (n.) நீர்ப்பறவை; a water bird (சா.அக.).

[சிறகு → சிறகி]

**சிறகிமீன்** *śiṟagi-mīṉ*, பெ. (n.) பறவை மீன் (வின்.); a flying fish.

[சிறகி + மீன். சிறகு → சிறகி]



சிறகிமீன்

**சிறகு**[1] *śiṟagu*, பெ. (n.) 1. பறவை, வௌவால், பூச்சி முதலியன பறப்பதற்கு ஏதுவாக அமையும் உறுப்பு; one of the limbs or organs by which the flight of a bird, bat, insect etc., is efferted, wing. 'சிறகு பறி கொடுத்த பறவை போல' (பழ.). 2. பறவை யிறகுகளின் தொகுதி; plumage. "ஈச்சிற கன்னதோர் தோலறினும்" (நாலடி. 41). 3. மீன் சிறகு; fin.

ம. சிறகு; க. எறகெ, எக்கி, எறங்கெ, றக்கெ, றெக்கெ; தெ. எறக, ரெக்க; து. எதிங்கெ, றெங்கெ; பட. றக்கெ; குட. றெக்கெ, தெறகெ; கோத. ரெக்; துட. தெர்க்ய்; கோண். ரெக; நா. றெப்ப, ரெக்க; கொலா. றெப்பா; பர். ரெக்க.

[சில் → சிற → சிறகு]

**சிறகு**[2] *śiṟagu*, பெ. (n.) 1. படை, கட்டடம் முதலியவற்றின் உறுப்பு (இ.வ.); wing of an army or building. 2. தெருப்பக்கம்; row of houses, side of a street. "தெற்குத் தளிச்சேரி தென்சிறகு" (தெ.க.தொ. 2,216). 3. தெரு; street. 4. கிளைவாய்க்கால் (வின்.); branch channel for

irrigation. 5. பனையோலையிற் பாதி (யாழ்ப்.); half of a palmyra leaf. 6. கதவு முதலியவற்றின் இலை (யாழ்ப்.); leaf of a door, shutter.

[சில் → சிற → சிறகு. சிறகு = உறுப்பு, பிரிவு, கிளை]

**சிறகுகட்டிப்பற-த்தல்** *śiṟagu-kaṭṭi-p-paṟa-*, செ.கு.வி. (v.i.) விரைந்து செல்லுதல்; to move with great swiftness, be in great haste.

[சிறகுகட்டி → பற-,]

பறவையினம் பறந்து செல்வதை விரைவாய்ச் செல்வதாயுணர்ந்தவர்கள், மாந்தனது விரைந்த செலவினையும் பறப்பதாய்க் கூறினர். இது, மிகைப்படுத்துதல் பொருளிலும் வருதலை, ஆலாய்ப் பறக்கிறான், பறவாய்ப் பறக்கிறான் எனும் உலக வழக்கு நோக்கி யறிக.

**சிறகுகதவு** *śiṟagu-kadavu*, பெ. (n.) இரட்டைக் கதவு (யாழ்ப்.); folding - door, two - leaved door.

[சிறகு + கதவு. சிறகு = உறுப்பு, பிரிவு]

**சிறகுகுடில்** *śiṟaku-kuḍil*, பெ. (n.) தூக்குங் குடிசை (யாழ்ப்.); small movable hut.

[சிறகு + குடில். சிறகு = மென்மை]

மென்மையானது இயங்கற்கும் எடுத்துச் செல்லற்கும் இயைபாயது.

**சிறகுகோழி** *śiṟagu-kōḻi*, பெ. (n.) காட்டுக் கோழி வகை; red spur fowl.

[சிறகு + கோழி]

சிறகு = பறக்கும் உறுப்பு. வீட்டுக் கோழிகளை நோக்க, காட்டுக் கோழிகட்குப் பறக்குமாற்றல் மிகுதியாயிருத்தல் கருதி இவ்வாறமைந் திருக்கலாம்.

**சிறகுதெரி-த்தல்** *śiṟagu-deri-*, 4 செ.கு.வி. (v.i.) சிறகுலர்த்துதல் (யாழ்.அக.); to dry or air the wings, as a bird.

[சிறகு + தெரி-, தெரி = தெளி, பரப்பு]

**சிறகுநீண்டோன்** *śiṟagu-nīṇḍōṉ*, பெ. (n.) நீண்ட சிறகையுடைய வௌவால்; long - winged bat (சா. அக.). .

[சிறகு + நீண்டோன். ஓன் = உடைமை குறித்த ஈறு]

**சிறகுமுளைத்தல்** *śiṟagu-muḷai-*, பெ. (n.) 1. தற்காத்துக் கொள்ளும் வலி பெறுகை; being capable of maintaining oneself. 2. வெளியேறி விடுகை (உ.வ.); disappearance; tendency towards waste, as wealth (சா.அக.).

[சிறகு + முளைத்தல். சிறகு = பறக்கும் உறுப்பு, ஆற்றல்]

பறவையினம் பிறக்கும்போதே சிறகுடன்தான் பிறக்கும். எனினும் அவ்வுறுப்பு போதுமான வளர்ச்சியடைந்து, பயிற்சி பெற்றுப் பறக்கும் ஆற்றலையுணர்ந்து கொள்ளும் நிலையைச் 'சிறகு முளைத்தல்' என்பர். மாந்தவினத்திலும் பெரியோரைப் பிரியும் இளையோரைச் 'சிறகு முளைத்ததும் பறந்துவிட்டது' எனும் வழக்கால் குறிப்பதைக் காணலாம்.

**சிறகுமுறி-தல்** *śiṟagu-muṟi-*, செ.கு.வி. (v.i.) சிறுகறு-தல் பார்க்க; see *śiṟagaṟu-*.

[சிறகு + முறி - முறி = அறு, பிரி, ஒடி]

**சிறகை** *śiṟagai-*, பெ. (n.) உண்பவர்க்குச் சொறியினையுருவாக்குந் தன்மையுள்ள பறவை வகை; a bird, the flesh of which causes itching when eaten (சா.அக.).

**சிறகொடிந்தபறவை** *śiṟakoḍinda-paṟavai*, பெ. (n.) 1. துணையிழந்தவள்; widow. 2. துணையிழந்தவன்; widower. 3. நட்பினை இழந்தவர்; one who loose friendship.

[சிறகொடிந்த + பறவை]

சிறகினை இழந்த பறவை பறக்க இயலாதது போன்றது துணை இழந்தாரின் ஆற்றல் என்பதைக் குறிக்கும் கூட்டுச் சொல்.

**சிறங்கணி-த்தல்** *śiṟaṅgaṇi-*, 4 செ.குன்றாவி. (v.t.) 1. கண்ணைச் சுருக்கிப் பார்த்தல்; to squint one's eyes and glance. "குவளைமாலைப் போது சிறங்கணிப்பப் போவார்" (சிலப். கானல்வரி, 1 பாடல், 7.). 2. இழிவாய்க் கருதுதல்; to despise. 3. மதியாதிருத்தல், சிறுமையாய்க் கருதுதல்; to disregard.

[சிறுமை → சிறு → சிற. சிற + கண் → கணி]

வியப்பானதைக் காணும் போது விரித்துப் பார்த்தலும், இழிவானதைக் காணும் போது சுருக்கிப் பார்த்தலும் அனிச்சைச் செயலாய் அமைந்துள்ளதை அறிக.

**சிறங்காடு** *śiṟaṅgāḍu*, பெ. (n.) சிறுகாடு; low jungle.

[சிறுமை → சிறு + காடு = சிறுகாடு → சிறங்காடு]

**சிறங்கி**[1]**-த்தல்** *śiṟaṅgi-,* 4 செ.குன்றாவி. (v.t.) மதியாதிருத்தல், இகழ்ச்சி செய்தல்; to despise.

[சிறங்கணி → சிறங்கி]

**சிறங்கி**[2]**-த்தல்** *śiṟaṅgi-,* 4 செ.குன்றாவி. (v.t.) சிறங்கையாலளத்தல் (யாழ்ப்.); to measure in the hollow of the hand.

[சிறங்கை → சிறங்கி]

சிறங்கை பார்க்க

**சிறங்கை** *śiṟaṅgai,* பெ. (n.) கைந்நிறையளவு; quantity that can be held in the hollow of the hand; palmful, as a measure. "முன்னாழி முச்சிறங்கை நெல்லளந்து கொடுவா" (குமர. பிர. மீனா. குற. 26).

[சிறு + அங்கை. அகம் + கை – அகங்கை]

**சிறட்டை** *śiṟaṭṭai,* பெ. (n.) சிரட்டை பார்க்க; see *śiraṭṭai.*

ம. சிரட்ட

[சிரட்டை → சிறட்டை]

**சிறந்தகற்பகம்** *śiṟanda-kaṟpagam,* பெ. (n.) நாகச் செய்ந்நஞ்சு (மூ.அ.); a prepared arsenic.

**சிறந்தோர்** *śiṟandōr,* பெ. (n.) 1. உயர்ந்தோர்; the great, the renowned, the illustrious. 2. கடவுளர், தேவர்; Gods, Dēvas. "சிறந்தோ ருலகம் படருநர் போல" (பரிபா. 19:11). 3. உறவினர் (திவா.); relatives. 4. துறந்தோர் (வின்.); ascetics.

ம. சிறந்தோர்

[சிற + ந் + த் + ஓர். சுள் → (சூர்) → சிற. சிற → சிறப்பு (பெருமை)]

**சிறப்பசை** *śiṟappaśai,* பெ. (n.) நேரசைகட்கும் நிரையசைகட்கும் ஒதிய எழுத்துகள் மொழியாய் நின்றால் சிறப்பசையாகும் (யாப்.8); a metrical special syllable.

[சிறப்பு + அசை]

**சிறப்பணி** *śiṟappaṇi,* பெ. (n.) 1. இனம், குணம், செயல் என்பவற்றால் ஒரு பொருளைச் சிறப்பித்துக் கூறும் அணி; figure of speech which consists in magnifying the excellence of an object. 2. ஒப்புமையாற் பொதுமையுற் றிருந்த இரண்டு பொருள்களுக்கு ஒரு கரணியத்தால், வேறுபாடு தோன்றுவதைக் கூறும் அணி (அணியி. 82); figure of speech in which a reason is given for differentiating two similar objects taken up for comparison.

[சிறப்பு + அணி]

**சிறப்பில்சீர்** *śiṟappil-śīr,* பெ. (n.) பாட்டில் வகையுளி சேர்ந்து நிற்பரும் சீர்கள் (யாப்.வி.10).

[சிறப்பு + இல் + சீர்]

**சிறப்பிலசை** *śirappil-aśai,* பெ. (n.) நேரசை கட்கும் நிரையசைகட்கும் ஒதிய எழுத்துகள் மொழிக்கு உறுப்பாய் நிற்பின் சிறப்பிலசை எனப்படும் (யாப்.8); an unwanted metrical syllable.

[சிறப்பு + இல் + அசை]

**சிறப்பாங்கல்** *śiṟa-p-pāṅgal,* பெ. (n.) குருந்தக்கல் (வின்.); corundum emery.

[சிறப்பு + ஆம் + கல்]

**சிறப்பாடு** *śiṟappāḍu,* பெ. (n.). மேம்பாடு, சால்பு; excellence, splendour. "சிறப்பாடுடையர்" (தேவா. 500, 4).

[சிறப்பு + பாடு – சிறப்புப்பாடு → சிறப்பாடு]

**சிறப்பியற்பெயர்** *śiṟappiyaṟ-peyar,* பெ. (n.) இனத்தி (சாதியில்)லுள்ளோர் சிறப்பினால் தமக்குத்தாமே வழங்கும் பெயர் (பன்னிருபா. 151); titles assumed by members of a community as a mark of special distinction.

[சிறப்பு + இயற்பெயர்]

**சிறப்பிலாதாள்** *śiṟappilādāḷ,* பெ. (n.) மேம்பாடில்லாதவள், மூதேவி (சூடா.); goddess of ill-luck, as being graceless.

[சிறப்பு + இலாதாள்]

**சிறப்பு**[1] *śiṟappu,* பெ. (n.) 1. தலைமை, தன்னேரில்லாத் தன்மை; pre-emience. "மேவிய சிறப்பின்" (தொல். பொருள்.அகத். 28). 2. மேம்பாடு, உயர்வு; superiority. 3. பகட்டு (ஆடம்பரம்), ஆரவாரம்; pomp. "விழா சிறப்பாக நடை பெற்றது" 4. பேராற்றல், உயர்நிலை; grandeur. 5. நயப்பண்பு; courtesy. 6. விருந்தோம்பும் பண்பு; hospitality. "விழுமியோர் காண் டொறுஞ் செய்வர் சிறப்பு" (நாலடி, 159).

[சிற → சிறப்பு]

**சிறப்பு**[2] *śiṟappu*, பெ. (n.) *சிறப்பணி,1 (வீரசோ. அலங். 12) பார்க்க;* see *śiṟappaṇi,1.*

*[சிற → சிறப்பு]*

**சிறப்பு**[3] *śiṟappu*, பெ. (n.) *1. மிகுதி (பிங்.);* abundance, plenty. *2. செல்வம்;* wealth. *3. வளமை;* prosperity. "*தகைப்பெருஞ் சிறப்பிற் குடுமிக்கோமான்*" *(புறநா. 64, 5). 4. இன்பம்;* happiness. "*காதலர் செய்யுஞ் சிறப்பு*" *(குறள், 1208). 5. வரிசை, நன்மதிப்பு;* honours, privileges. "*தென்னவன் பெயரொடு சிறப்புப் பெற்ற*" *(சிலப். 16: 109). 6. மதிப்பு;* regard, esteem. "*சீர்மை சிறப்பொடும்*" *(குறள், 195). 7. மேன்மை;* superiority, greatness. *8. நன்கொடை;* present, gift. "*சிறப்பறிய வொற்றின்கட் செய்யற்க*" *(குறள், 590). 9. துறக்கம், பேரின்பம், உம்பருலகம்;* heaven, heavenly bliss. "*சிறப்பீனுஞ் செல்வமு மீனும்*" *(குறள், 31).*

ம. சிறப்பு; க. செறபு

*[சிற → சிறப்பு]*

**சிறப்பு**[4] *śiṟappu*, பெ. (n.) *1. வாலாயமான திருவிழா;* periodical festival in a temple. "*சிறப்பொடு பூசனை செல்லாது*" *(குறள், 18). 2. நகரத்தார் கொண்டாடும் ஒரு சடங்கு;* a ceremony observed by Nāṭṭukkōṭṭai Nagarattār.

*[சிற → சிறப்பு]*

**சிறப்புக்கட்டளை** *śiṟappu-k-kaṭṭaḷai*, பெ. (n.) *கோயிலில் ஏற்படுத்தப்பட்ட படையலுக்கான படித்தரம் (தெ.க.தொ.4,103);* institution of naivettiyam in a temple.

*[சிறப்பு + கட்டளை]*

**சிறப்புச்செய்**[1]**-தல்** *śiṟappu-c-cey-*, 1 செ.கு.வி. (v.i.) *1. ஒப்பனைசெய்தல், அழகுபடுத்துதல் (வின்.);* to embellish. *2. வரவேற்று முகமன் கூறுதல், விருந்தோம்பல்;* to welcome, show hospitality.

*[சிறப்பு + செய். 'செய்' து.வி.]*

**சிறப்புச்செய்**[2]**-தல்** *śiṟappu-c-cey-*, 1 செ.கு.வி. (v.i.) *கோயில் திருவிழாவைக் கொண்டாடுதல் (யாழ்ப்.);* to celebrate, as a temple festival.

*[சிறப்பு + செய்-,]*

**சிறப்புடைக்கிளவி** *śiṟappuḍai-k-kiḷavi*, பெ. (n.) *முகமன் மொழிந்து விருந்தோம்புகை;* words of hospitality. "*சிறப்புடைக்கிளவி செவ்விதிற் பயிற்றி*" *(பெருங். உஞ்சைக். 34:44).*

*[சிறப்புடை + கிளவி]*

**சிறப்புடையரசியல்** *śiṟappuḍai-y-araśiyal*, பெ. (n.) *மடிந்த உள்ளத்தோனையும், மகப்பெறாதோனையும் அடிப்பிறக் கிட்டோனையும், பெண் பெயரோனையும், படையிழந்தோனையும், ஒத்த படையோடா தோனையும், பிறவும் இத்தன்மை உடையோரையும், கொல்லாது விடுதலும் கூறிப்பொருதலும் முதலியன. (தொல். பொருள். 238, நச்);* grandeur of politics.

**சிறப்புப்பாயிரம்** *śiṟappu-p-pāyiram*, பெ. (n.) *ஆக்கியோன்பெயர், வழி, எல்லை, நூற்பெயர், யாப்பு, நுதலியபொருள், கேட்போர், பயன், காலம், களம், காரணம் முதலான பொருள்களைப் பற்றிப் புகலு முகத்தான் ஒரு நூலுக்குச் சிறப்பாக அமைக்கப்பட்ட முன்னுரை (தொல். பாயி. உரை.);* introduction to a book, giving particulars of the author, title of the work, subject-matter, etc., opp. to podu-p-pāyiram.

*[சிறப்பு + பாயிரம்]*

**சிறப்புப்பெயர்** *śiṟappu-p-peyar*, பெ. (n.) *1. பொதுப்பெயருக்கு எதிரிடையாக வொன்றற்கே, சிறப்பாக வரும் பெயர் (நன். 62, உரை.);* specific, name, opp. to podu-p-peyar. *2. திணை, நிலம், சாதி, குடி, உடைமை, குணம், தொழில், கல்வி என்ற எண் வகையானும், பொருள்களுக்குச் சிறப்பாகக் கூறும்பெயர் (நன்.393);* descriptive names of eight kinds, viz., tiṇai, nilam, śādi, kuḍi, uḍaimai, kuṇam, toḻil, kalvi. *3. வேந்தன் கொடுக்கும் பட்டப்பெயர் (பன்னிருபா. 150);* title given by a king.

*[சிறப்பு + பெயர்]*

**சிறப்பும்மை** *śiṟappummai*, பெ. (n.) *குறவரு மருளுங் குன்றம் அல்லது புலையனும் விரும்பாத யாக்கை என்று சிறப்பாக வரும் உம்மை (புறநா. 212, உரை);* connective particle implying superiority or inferiority.

*[சிறப்பு + உம்மை]*

**சிறப்புமொழி** *śiṟappu-moḻi*, பெ. (n.) சிறப்பணி (திவா.) பார்க்க; see *śiṟappaṇi*.

[சிறப்பு + மொழி]

**சிறப்புலிநாயனார்** *śiṟappuli-nāyaṉār*, பெ. (n.) நாயன்மார் அறுபத்துமூவருள் ஒருவர் (பெரியபு.); a canonized Šaiva saint one of 63.

[சிறப்பு + புலி + நாயனார்]

**சிறப்புவிதி** *śiṟappu-vidi*, பெ. (n.) ஒன்றற்கே தனித்துக் கூறும் நெறி (நன்.165, உரை.); special rule, dist. fr. podu-vidi.

[சிறப்பு + விதி]

**சிறப்புழகரம்** *śiṟappu-ḻagaram*, பெ. (n.) தமிழுக்குச் சிறப்பாயுள்ள ழகரம்; the letter ḻ, as peculiar to Tamiḻ language.

[சிறப்பு + ழகரம். 'கரம்' சாரியை]

ழகரம் தமிழில் சிறப்பாகவுள்ளது எனக் குறிப்பிட்டாலும் தமிழின் இனமொழியான மலையாளத்தில் இன்றும் வழக்கில் இருக்கிறது. பழங்கன்னடம், பழந்தெலுங்கு போன்ற மொழிகளில் ழகரம் இருந்துள்ளது. ழகரம் இடம்பெற்றிருந்த சொற்களை ஒப்பு நோக்கினால் அது சில இடங்களில் முழுவதுமாக மறைந்துள்ளது. பிறவிடங்களில் க, ட, ண, த, வ போன்றனவாகத் திரிந்துள்ளது.

**சிறப்பெடு-த்தல்** *śiṟappeḍu-*, 4 செ.கு.வி. (v.i.) திருவிழாக் கொண்டாடுதல்; to celebrate a festival. "பேய்க்கே சிறப்பெடுப்பார்" (அருட்பா, 1. நெஞ்சறி. 388).

[சிறப்பு + எடு]

**சிறப்பெழுத்து** *śiṟappeḻuttu*, பெ. (n.) ஒரு மொழிக்கே சிறப்பாக உரித்தான எழுத்து (நன். 274); alphabetic letter peculiar to a language.

[சிறப்பு + எழுத்து]

**சிறப்பை** *śiṟappai*, பெ. (n.) மரத்தினாற் செய்யப்பட்டதும், பறவைகளைத் துரத்த வேனும், மாடுகளை அடையாளம் கண்டு பிடிக்குமாறு அவற்றின் கழுத்திற் கட்டுதற் கேனும், பயன்படுத்தப்படுவதுமான ஒரு வகை மணி (வின்.); a kind of bell or clapper, sometimes made of wood, used to scare away birds or tied to a bullock's neck for identification.

[சிறப்பு → சிறப்பை]

**சிறவி** *śiṟavi*, பெ. (n.) சிறகி (பதார்த்த. 899) பார்க்க; see *śiṟagi*.

[சிறகி → சிறவி]

**சிறவு** *śiṟavu*, பெ. (n.) சிறந்தசெயல்; meritorious deed. "சிறவேசெய்து வழிவந்து" (திருவாச. 5:86).

[சிற → சிறப்பு → சிறவு]

**சிறாங்கணி-த்தல்** *śiṟāṅ gaṇi-*, 4 செ.குன்றாவி. (v.t.) சிறக்கணி-த்தல் பார்க்க; see *śiṟakkaṇi-* "தோற்றமை தோற்றச் சிறாங்கணித்துப் பார்த்து" (திவ். பெருமாள். 6:3, வியா.).

[சிறக்கணி → சிறங்கணி → சிறாங்கணி]

**சிறாங்கி-த்தல்** *śiṟāṅgi-*, 4 செ.குன்றாவி. (v.t.) 1. உள்ளங்கையளவாக்குதல்; to reduce to the size of the hollow of one's palm. "கண்களைச் சிறாங்கித்துப் பருகலா யிருந்தபடி" (திருவிருத். 11, வியா, 81). 2. தன்வயமாக்குதல்; to get into one's power or control. "அவனைச் சிறாங்கிக்கும் ஸம்ஸ்லேஷ தசையில்" (ஸ்ரீவசன, 25). 3. இரத்தல்; to beg. "தன்னைச் சிறாங்கித்து இருக்கிற நம்மை அறிகிறதில்லை" (ஈடு. 6:10,அவ.). 4. கெஞ்சுதல்; to beg, entreat.

[சிறங்கை → சிறாங்கை → சிறாங்கி-,]

**சிறாங்கு** *śiṟāṅgu*, பெ. (n.) சிராங்கு பார்க்க; see *śirāṅgu*.

[சிராங்கு → சிறாங்கு]

**சிறாங்கை** *śiṟāṅgai*, பெ. (n.) சிறங்கை பார்க்க; see *śiṟaṅgai* "எனக்கும் ஒரு சிறாங்கை யிடவல்லி கோளே" (திவ். திருமாலை. 19, வியா. 72).

[சிறங்கை → சிறாங்கை]

**சிறாம்பி¹-த்தல்** *śiṟāmbi-*, 4 செ.குன்றாவி. (v.t.) ஒரு சேரத் திரட்டுதல்; to gather up in a mass. "சிறாம்பித் தனுபவிக்கலாயிருக்கை" (ஈடு, 6.9:2, ஜீ).

[சேர்த்தல் → சிறத்தல் → சிறாம்பி]

**சிறாம்பி²** *śiṟāmbi*, பெ. (n.) காவற்பரண் (யாழ்ப்.); a loft or platform for keeping watch.

ம. சிறாம்பி

**சிறாம்பு¹-தல்** *śiṟāmbu-*, 5 செ.கு.வி. (v.i.) 1. குறுகுதல்; to shrink, look small. "சிறாம்பி இரப்பாளனாய் நின்ற நிலை" (ஈடு, 2.6:1). 2. இளைத்தல்; to grow lean, become emaciated.

"இத்தலையைப் பிரிந்து வந்த சிறாம்புத லெல்லாம்" (ஈடு, 6.1:11).

[சிறுமை → சிறு → சிறா → சிறாம்பு-,]

**சிறாம்பு[2]-தல்** *ši<u>r</u>āmbu-,* 5 செ.கு.வி. (v.i.) உராய்தல் (வின்.); to graze, as a ball when passing.

[சிறாய் → சிறாம்பு-,]

**சிறாம்பு[3]-தல்** *ši<u>r</u>āmbu-,* 5 செ.குன்றாவி. (v.t.) பிறாண்டுதல் (வின்.); to scratch with a splinter or thorn.

[சிறாய் → சிறாம்பு-,]

**சிறாம்பு[4]** *ši<u>r</u>āmbu,* பெ. (n.) மரச்சிலும்பு (வின்.); fibre risings in wood shiver.

[சில் → சிலும்பு → சிலாம்பு → சினாம்பு → சிறாம்பு = மரத்திலும் மீனிலுமுள்ள நுண்பட்டை (மு.தா. 130)]

**சிறாய்[1]-த்தல்** *ši<u>r</u>āy-,* 4 செ.குன்றாவி. (v.t.) சிராய் (உ.வ.) பார்க்க; see *širāy-*.

[சிராய் → சிறாய்]

**சிறாய்[2]** *ši<u>r</u>āy,* பெ. (n.) மரத்துண்டு; chip, splinter. "ஒரு சிறாயை விசுவசித்து" (ஈடு, 3.6:8).

[சிறு → செறா → சிறா]

**சிறாயத்துக்குச்சி** *ši<u>r</u>āyattu-k-kucci,* பெ. (n.) நிலவேம்பு (யாழ்.அக.); Himalayan chiretta.

U. chirāita

**சிறார்** *ši<u>r</u>ār,* பெ. (n.) சிறுவர்; children. "திதியின் சிறாரும் விதியின் மக்களும்" (பரிபா. 3:6.)

[சிறுமை → சிறு → சிறார். 'அர்' ப.பா. ஈறு]

**சிறார்பணி** *ši<u>r</u>ār-paṇi,* பெ. (n.) சிறுவர்களைப் பணிக்கமர்த்தல்; child labour.

[சிறார் + பணி. பண் → பணி]

**சிறான்** *ši<u>r</u>ā<u>n</u>,* பெ. (n.) சிறுவன்; boy.

[சிறுவன் → சிறான்]

**சிறிக்கி[1]** *ši<u>r</u>ikki,* பெ. (n.) சிறுக்கி பார்க்க; see *širukki*.

[சிறுக்கி – சிறிக்கி (கொ.வ.)]

**சிறிக்கி[2]** *ši<u>r</u>ikki,* பெ. (n.) கொடிக்காக்கட்டான்; sky-blue bindweed.

**சிறிசு** *ši<u>r</u>išu,* பெ. (n.) *1.* சிறிது (உ.வ.) பார்க்க; see *ši<u>r</u>idu*. *2.* சிறுவன் அல்லது சிறுமி; young boy or girl.

[சிறிது → சிறிசு. ஒ.நோ. கடிது – கடிசு. 'து' ஓ.பா.ஈறு]

**சிறிஞன்** *ši<u>r</u>iñā<u>n</u>,* பெ. (n.) சிறுவன்; small insignificant boy. "அறிஞருஞ் சிறிஞரு மாதியந்தமா" (கம்பரா. ஆறுசெல்ப. 45).

[சிறியன் → சிறிஞன். 'ன்' ஆ.பா.ஈறு]

**சிறிட்டம்** *ši<u>r</u>iṭṭam,* பெ. (n.) விளாம்பட்டை (இராட்.); bark of the wood-apple.

Skt. šliṣṭa.

**சிறிதாக்கு-தல்** *ši<u>r</u>idākku-,* 5 செ.குன்றாவி. (v.t.) அளவு, வடிவு போன்றவற்றில் குறைத்தல்; to make small, reduce.

ம. சிறியிக்குக

[சிறிது + ஆக்கு – ஆகு (த.வி.) – ஆக்கு (பி.வி.)]

**சிறிது** *ši<u>r</u>idu,* பெ. (n.) பொருட்படுத்தத்தக்க தல்லாதது, சிறப்பிலாதது; that which is small, trifling or insignificant. "இறப்பச் சிறிதென்னாது" (நாலடி., 99).

ம. சிறிது, செறிது; க. கிரி, கிரிது; தெ. சிறுத; து. கிர்து; குட. செர்யெ; கோத., துட. கிர்

[சிறுமை → சிறு → சிறி → சிறிது]

**சிறிதுரை-த்தல்** *ši<u>r</u>idurai-,* 4 செ.குன்றாவி. (v.t.) இகழ்ந்து பேசுதல், பழித்துரைத்தல்; to belittle, despise, speak contemptuously or disparagingly of. "சேர்ந்தாரை யெல்லாஞ் சிறிதுரைத்து" (பழ. 123).

[சிறுமை → சிறிது. சிறிது + உரை. சிறுமை = கீழ்மை, இகழ்ச்சி. உரை = பேச்சு]

**சிறிபலம்** *ši<u>r</u>ipalam,* பெ. (n.) வில்வம் (மலை.); bael.

Skt. šri-phala

**சிறிய** *ši<u>r</u>iya,* பெ.எ. (adj.) *1.* குறைந்த; small, little. *2.* இளைய; younger in age. *3.* தாழ்ந்த, இழிந்த; base, inferior.

ம. செறிய, சிரிய; க. கிறுது; தெ. சிறுத; குட. செய்யெ

[சிறு → சிறிய]

**சிறியசிந்தையர்** *śiṟiya-śindaiyar,* பெ. (n.) கீழோர் *(சூடா.);* base petty - minded persons.

*[சிறுமை - சிறிய. சிறிய + சிந்தையர்]*

**சிறியத்தினி** *śiṟiyattiṉi,* பெ. (n.) வேலிப்பருத்தி *(மலை.);* hedge cotton.

Skt. śri hastinī

**சிறியதகப்பன்** *śiṟiya-tagappaṉ,* பெ. (n.) தந்தைக்கு இளையவன் சிறிய தாயின் கணவன்; father's younger brother; mother's younger sister's husband.

*[சிறிய + தகப்பன். தம் + அப்பன் → தமப்பன் → தவப்பன் → தகப்பன்]*

**சிறியதாய்** *śiṟiya-tāy,* பெ. (n.) தாய்க் கிளையவள், சிற்றப்பன் மனைவி, இளைய மாற்றாந்தாய்; mother's younger sister, father's younger brother's wife, junior step-mother. "சிறியதாய் சொன்ன திருமொழி" *(கம்பரா. பாசப். 41).*

க. சிக்கதாயி

*[சிறிய + தாய்]*

**சிறியதாயார்** *śiṟiya-tāyār,* பெ. (n.) சிறியதாய் பார்க்க; see *śiṟiya-tāy.*

*[சிறியதாய் → சிறியதாயார். ஆர் = உயர்வுப் பன்மையீறு]*

**சிறியதிருமடல்** *śiṟiya-tiru-maḍal,* பெ. (n.) நாலாயிரத் தெய்வப் பனுவலைச் சார்ந்ததும், திருமங்கையாழ்வாரால் செய்யப்பட்டது மான ஒரு சிற்றிலக்கியம்; a poem by Tirumaṅgai-y-āḻvār forming part of Nālāyira-tivviya-p-pirabandam.

*[சிறிய + திருமடல்]*

**சிறியதிருவடி** *śiṟiya-tiruvaḍi,* பெ. (n.) அனுமன்; hanuman.

*[சிறிய + திருவடி]*

மாலியர் கருடனை பெரியதிருவடி என்றும், அனுமனைச் சிறியதிருவடி என்றும் அழைப்பர். திருவடி பார்க்க.

**சிறியது** *śiṟiyadu,* பெ. (n.) *1.* வடிவத்திலோ தரத்திலோ தாழ்வானது; that which is small in size or imperior in quality. *2.* இளையது; that which is young.

ம. செறியது

*[சிறு → சிறியது]*

**சிறியதைலம்** *śiṟiya-tailam,* பெ. (n.) தேவைக் கேற்பக் காய்ச்சிப் பயன்படுத்தும் மருந் தெண்ணெய் (பைஷஜ. 7); medicinal oil prepared as occasion requires.

*[சிறுமை = குறைவு, சிறிது. சிறிய + தைலம்]*

Skt. taila → த. தைலம்

**சிறியநோக்கு-தல்** *śiṟiya-nōkku-,* 5 செ. குன்றாவி. (v.t.) கடைக்கணித்துப் பார்த்தல்; to cast a benignant glance to ogle. "சிறிய நோக்கா ......... நகை முகங் கோட்டி நின்றாள்" *(சீவக. 1568).*

*[சிறிய + நோக்கு]*

**சிறியபேயத்தி** *śiṟiya-pēyatti,* பெ. (n.) அத்தி வகை (இங்.வை); wild-fig.

*[சிறிய + பேயத்தி]*

**சிறியமரத்தி** *śiṟiya-maratti,* பெ. (n.) சிற்றகத்தி *(மலை.);* common sesban.

**சிறியமனம்** *śiṟiya-maṉam,* பெ. (n.) *1.* சிறுமைப் பண்பு *(யாழ்ப்.);* pettiness. *2.* கஞ்சத்தனம்; meanness.

*[சிறிய + மனம். முன் = மனக்குறிப்பு. முன் → முன்னம் → முனம் → மனம்]*

**சிறியர்** *śiṟiyar,* பெ. (n.) இழிதகவுடையவன்; low, mean person. "தேயம்வைத் திழந்தான். சீச்சீ! சிறியர் செய்கை செய்தான்" *(பாஞ். ப. 378).*

*[சிறியன் → சிறியர். 'அர்' ப.பா.ஈறு.]*

**சிறியவன்** *śiṟiyavaṉ,* பெ. (n.) சிறியன் பார்க்க; see *śiṟiyaṉ.* "செய்தேமஞ் சாராச் சிறியவர் புன்கேண்மை" *(குறள், 815).*

க. சிக்கவ

*[சிறுமை → சிறு → சிறிய → சிறியன் → சிறியவன்]*

**சிறியன்** *śiṟiyaṉ,* பெ. (n.) *1.* சிறுவன்; small, insignificant person, boy. "சிறியனென் றென்னிளஞ் சிங்கத்தை யிகழேல்" *(திவ். பெரியாழ். 1.4:8). 2.* இழிந்தவன்; mean person 'சிறியர் செயற்கரிய செய்கலாதார்" *(குறள், 26).*

ம. செறியவன்

*[சிறியவன் → சிறியன். 'ன்' ஆ.பா.ஈறு]*

**சிறியாணங்கை** *śiṟiyāṇaṅgai,* பெ. (n.) சிறியாநங்கை (வின்.) பார்க்க; see *śiṟiyānaṅgai.*

*[சிறியாநங்கை → சிறியாணங்கை]*

**சிறியாநங்கை** *śiṟiyā naṅgai,* பெ. (n.) பூடுவகை; a species of small milkwort.

**சிறியார்** *śiṟiyār,* பெ. (n.) சிறியர் பார்க்க; see *śṟiyar.* 'சிறியாரோடு இணங்காதே; சேம்புக்குப் புளிவிட்டுக் கடையாதே' (பழ.)

*[சிறியர் → சிறியார்]*

**சிறியிலை** *śiṟiyilai,* பெ. (n.) சிற்றிலை பார்க்க; see *śiṟṟilai.* "சிறியிலை நெல்லி" (புறநா. 91).

*[சிறுயிலை → சிறியிலை]*

**சிறிவில்** *śiṟivil,* பெ. (n.) அகில் (மலை.); eagle-wood.

**சிறு¹-த்தல்** *śiṟu-,* 4 செ.கு.வி. (v.i.) 1. சிறுகு¹-தல் பார்க்க; see *śiṟugu-.* "சிறுத்த செலுவதனு ளிருந்து" (திருப்பு. 227).

*[சில் → சிறு-,]*

**சிறு²-த்தல்** *śiṟu-,* 4 செ.குன்றாவி. (v.t.) 1. முட்டுக் கட்டையிடுதல்; to hinder. 2. தடுத்தல் (நாஞ்.); to resist.

*[சில் → சிறு-,]*

**சிறு³** *śiṟu,* பெ.எ. (adj.) 1. குறைந்த, சிறிய; small, little. 2. இளைய, அகவையில் குறைந்த; young.

ம. செறு, செரிய; க. கிறி, கிற, கிறு, கிறிது; தெ. சிறு, சிறுத; து. கிளி, கிறு; குட. கிர்கெ, கெர்யெ; கோத. துட. கிர்.

*[சில் → சிறு-,]*

**சிறுக்கம்** *śiṟukkam,* பெ. (n.) 1. சிறுபிள்ளைத் தனம்; trifle. 2. புன்மை (அற்பம்); triff. 3. இழிவு; baseness.

*[சிறு → சிறுக்கு → சிறுக்கம்]*

**சிறுக்கன்** *śiṟukkaṉ,* பெ. (n.) சிறுவன்; boy, youngster, a term of endearment. "ஆலினிலை வளர்ந்த சிறுக்கன்" (திவ். பெரியாழ். 1.4:7).

ம. சிறுக்கன், செறுக்கன்.

*[சிறு → சிறுவன் → சிறுக்கன். 'ன்' ஆ.பா. ஈறு]*

**சிறுக்காம்பன்சேலை** *śiṟu-k-kāmbaṉ-śēlai,* பெ. (n.) ஒரு வகை எழுத்துச்சிற்றாடை; a kind of printed saree (திவ். பெரியாழ். 1.3:8, வியா. பக். 64).

*[சிறு + காம்பு + அன் + சேலை]*

**சிறுக்கி¹** *śiṟukki,* பெ. (n.) 1. இளம்பெண்; girl, wench. "சிறுக்கிகளுற வாமோ" (திருப்பு. 145). 3. வேலைக்காரி; maidservant. "கோசலை வீட்டுச் சிறுக்கிக்குஞ் சிறுக்கி" (இராமநா. அயோத். 7.).

ம. செறுக்கி

*[சிறுக்கன் → சிறுக்கி. 'இ' பெ.பா.ஈறு]*

**சிறுக்கி²** *śiṟukki,* பெ. (n.) இழிநடத்தை யுடையவள்; woman of meniel behaviour. 'செல்லிக்குச் சிறங்கு, சிறுக்கிக்கு அரையாப்பு, பார்க்க வந்த பரிகாரிக்கும் பக்கப் பிளவு' (பழ.).

*[சிறு → சிறுக்கி]*

**சிறுக்கி³** *śiṟukki,* பெ. (n.) பகட்டாரவார மிக்கவள்; ostentatious woman.

*[செறுக்கி → சிறுக்கி]*

**சிறுக்கீரை** *śiṟu-k-kīrai,* பெ. (n.) சிறுகீரை பார்க்க; see *śiṟu-kīrai.* "சிறுக்கீரை வெவ்வடகும்" (தமிழ்நா. 57).

*[சிறுகீரை → சிறுக்கீரை]*

**சிறுக்கு-தல்** *śiṟukku-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. சிறுகச்செய்தல் (தைலவ. தைல. 1.); to reduce in size or quantity, lessen. 2. சினத்தல் (யாழ்அக.); to be angry with.

*[சில் → சிறு → சிறுக்கு]*

**சிறுக** *śiṟuga,* கு.வி.எ. (adv.) 1. சிறிதாக; a little. 2. செட்டாக, சுருக்கமாக; sparingly. "சிறுகக் கட்டிப் பெருக வாழ்" (பழ.).

*[சிறு → சிறுக]*

**சிறுகஞ்சாங்கோரை** *śiṟugañjāṅ-kōrai,* பெ. (n.) கஞ்சாங்கோரை (வின்.) பார்க்க; see *kañjāṅ-gōrai.*

*[சிறு + கஞ்சாங்கோரை]*

கஞ்சாங்கோரை வகைகளுள் வேறு பாடறிதற்காகச், 'சிறு' முன்னொட்டானது.

**சிறுகட்டுக்கொடி** *śiṟu-kaṭṭu-k-koḍi,* பெ. (n.) உப்புக்கட்டியென்னுங் கொடி (மலை.); a kind of milky medicinal creeper.

*[சிறு + கட்டுக்கொடி]*

**சிறுகடலாடி** *śiṟu-kaḍalāḍi,* பெ. (n.) நாயுருவி (மலை.); dog - prick.

ம. செறுகடுகு

*[சிறு + கடலாடி]*

நாயுருவி வகைகளுளொன்றை இனம் பிரித்துக் காட்டச் 'சிறு' முன்னொட்டானது.

**சிறுகடுக்காய்** *śiṟu-kaḍukkāy,* பெ. (n.) கடுக்காய் வகை (வின்.); a variety of chebulic myrobalan.

*[சிறு + கடுக்காய்]*

**சிறுகடுகு**[1] *śiṟu-kaḍugu,* பெ. (n.) கடுகு; Indian mustard. "மஞ்சளும் இஞ்சியும் செஞ்சிறு கடுகும்" (பெருங். மகத. 17:142).

ம. செறுகடுகு

*[சிறு + கடுகு]*

**சிறுகடுகு**[2] *śiṟu-kaḍugu,* பெ. (n.) எட்டு நுண் மணல் கொண்ட சிற்றளவு; a small unit of weight, 8 fine grains of sand.

*[சிறு + கடுகு]*

**சிறுகண்ணாகம்** *śiṟu-kaṇṇāgam,* பெ. (n.) நச்சுப்பாம்புவகை (யாழ்.அக.); a kind of venomous serpent.

*[சிறுகண் + நாகம்]*

**சிறுகத்திரி** *śiṟu-kattiri,* பெ. (n.) சூரை; hedge caper shurb.

*[சிறு + கத்திரி]*

சிறு = சிறிது, கீழ், தாழ்வு, பயனற்றது.

**சிறுகம்பில்** *śiṟu-kambil,* பெ. (n.) திக்காமல்லி; dikmali gum-plant.

**சிறுகம்மான்பச்சரிசி** *śiṟu-kammāṉ-paccariśi,* பெ. (n.) சிற்றம்மான்பச்சரிசி (நாஞ்.) பார்க்க; see *śiṟṟammāṉ-paccariśi.*

*[சிற்றம்மான்பச்சரிசி → சிறுகம்மான் பச்சரிசி]*

அம்மான்பச்சரிசி பார்க்க

**சிறுகரையான்** *śiṟu-karaiyāṉ,* பெ. (n.) கறையான் வகை; a species of small white ants.

*[சிறு + கரையான்]*

கறையான் பார்க்க

**சிறுகல்லூரி** *śiṟu-kallūri,* பெ. (n.) கல்லுருவி (சங்.அக.); blistering plant.

*[சிறு + கல்லூரி. கல்லுருவி → கல்லுரி → கல்லூரி]*

**சிறுகளர்வா** *śiṟu-kaḷarvā,* பெ. (n.) களர்வா மரம்; tooth-brush tree.

*[சிறு + களர்வா]*

**சிறுகளா** *śiṟu-kaḷā,* பெ. (n.) முட்கள் செறிந்த களாக்கீரை வகை (சங்.அக.); a low spreading spiny evergreen shrub.

ம. செறுகளாவு

*[சிறு + களா]*

**சிறுகளி** *śiṟu-kaḷi,* பெ. (n.) சிறுகளா (வின்.) பார்க்க; see *śiṟu-kaḷā.*

*[சிறுகளா → சிறுகளி]*

**சிறுகற்றாழை** *śiṟu-kaṟṟāḻai,* பெ. (n.) கடற் கரையில் வளருங் கற்றாழை; sea side aloe.

ம. செறுகற்றாழ

*[சிறு + கற்றாழை. கல் + தாழை = கற்றாழை]*

**சிறுகறி** *śiṟu-kaṟi,* பெ. (n.) பச்சடி முதலிய கறி வகை (விஞ்.); minor curry preparation.

*[சிறு + கறி]*

**சிறுகாக்கைபாடினியார்** *śiṟu-kākkai-pāḍiṉiyār,* பெ. (n.) சிறுகாக்கைபாடினியமென்னும் யாப்பிலக்கணஞ் செய்த பழம்புலவர் (தொல். பொருள். 650, உரை.); author of the śiṟu-kākkai-pāḍiṉiyam, an ancient work on prosody.

**சிறுகாசா** *śiṟu-kāśā,* பெ. (n.) காசா மரம் (திவா.); iron wood tree.

*[சிறு + காசா]*

**சிறுகாஞ்சொறி** *śiṟu-kāñjoṟi,* பெ. (n.) உடலிற் பட்டால் தினவேற்படுத்தும் இலையைக் கொண்ட செந்தொட்டிச் செடி; small climbing nettle.

ம. சிறுகாஞ்சொறி

*[சிறு + காஞ்சொறி]*

**சிறுகாடு** *śiṟu-kāḍu,* பெ. (n.) *தூறடர்ந்த காடு (வின்.);* low jungle, thicket.

*[சிறு + காடு. சிறு = அடர்த்தி, நெருக்கம்]*

**சிறுகாப்பியம்** *śiṟu-kāppiyam,* பெ. (n.) **பெருங்காப்பியவுறுப்புக்களிற் சிலகுறைந்து வரும் நூல்வகை;** short narrative poem, wanting in some of the requistes of peruṅ-kāppiyam.

*[சிறு + காப்பியம். சிறு = சிறுமை, குறைபாடு.]*

**சிறுகாய்** *śiṟu-kāy,* பெ. (n.) *சாதிக்காய் (மலை.);* nutmeg.

*[சிறு + காய்]*

**சிறுகாரிடம்** *śiṟu-kāriḍam,* பெ. (n.) *சிறுகாய் (மலை.) பார்க்க;* see *śiṟukāy.*

**சிறுகால்**[1] *śiṟu-kāl,* பெ. (n.) தென்றல் *(சூடா.);* south wind.

*[சிறு(மை) + கால். கால் = காற்று. சிறு = சிறுமை, மென்மை, குறைவு]*

குறைந்த வேகத்தில் வீசும் காற்று இயல்பான வேகத்தினின்றும் சற்று மாறுபட்டாலே தென்றல் எனும் பெயர் மாறி, காற்று என்றழைக்கப்படுவதையும், சுழன்றடிக்கும் காற்றைச் சூறைக்காற்று என்றழைக்கப் படுவதையும் நினைத்தல் நலம்.

**சிறுகால்**[2] *śiṟu-kāl,* பெ. (n.) *காவட்டம்புல் (மலை.);* citronella grass.

*[சிறு + கால்]*

**சிறுகாலே** *śiṟu-kālē,* வி.எ. (adv.) **புலர் பொழுதில், நாட்காலையில், விடியலில்;** early in the morning, in the small hours of the morning. "சிற்றஞ் சிறுகாலே வந்துன்னைச் சேவித்து" *(திவ்.திருப்பா. 29).*

*[சிறு + காலே. சிறு = சிறிது, குறைவு. கல் → கால் = ஒளி, வெளிச்சம். காலே = காலை - காலையிலே]*

**சிறுகாலை** *śiṟu-kālai,* பெ. (n.) *1.* **புலர்பொழுது, விடியல்;** early morning, dawn. "சிறுகாலை யட்டில் புகாதா ளரும்பிணி" *(நாலடி, 363).* *2.* **இளம்பருவம்;** early lifetime. "சிறுகாலையே ........... தோட் கோப்புக் கொள்ளார்" *(நாலடி, 328).*

ம. சிறுகாலம்

*[சிறு + காலை]*

**சிறுகாலைச்சந்தி** *śiṟukālai-c-candi,* பெ. (n.) *சிறுகாலை,-1 பார்க்க;* see *śiṟukālai*[1]. "சிறுகாலைச்சந்திக்கு வைத்த திருவிளக்கு" *(தெக. தொ. 3: 88).*

*[சிறு காலை + சந்தி. அந்தித்தல் = நெருங்குதல், கூடுதல். அந்தி → சந்தி]*

காலையும் பகலும் சந்திக்கும் வேளையைக் காலைச்சந்தி எனவும், மாலையும் இரவும் சந்திக்கும் வேளையை மாலைச்சந்தி எனவும் வழங்குகிறோம். அந்த வகையில் சிறுகாலை யாகிய புலர் பொழுதும், காலைவேளையும் சந்திக்கும் பொழுது சிறுகாலைச்சந்தியாகும்.

**சிறுகிராமம்** *śiṟu-kirāmam,* பெ. (n.) **நூறு குடியுள்ள ஊர்** *(சூடா.);* hamlet of 100 families, opp. to pēruṅ-kirāmam.

*[சிறு + கிராமம்]*

**சிறுகிழங்கு** *śiṟu-kilaṅgu,* பெ. (n.) **செடிவகை** *(பதார்த்த. 438);* Goa potata.

ம. செறுகிழங்நு

*[சிறு + கிழங்கு]*

**சிறுகீரை** *śiṟu-kīrai,* பெ. (n.) *1.* **கீரைத்தண்டு வகை;** a species of amarnath. *2.* **கீரைவகை** *(யாழ்.அக.);* a pot-herb.

ம. செறுகீர

*[சிறு + கீரை]*

**சிறுகு**[1]**-தல்** *śiṟugu-,7* செ.கு.வி. (v.i.). *1.* **சிறிதாதல்;** to be small, short. *2.* **வளர்ச்சிகுறைதல்;** stunted in growth. *3.* **சுருங்குதல்;** to shrink, diminish. "சீறிற் சிறுகுந் திரு" *(குறள், 568).* *4.* **நிலைதாழ்தல்;** to be impoverished, to sink low.

ம. செறுகுக

*[சிறுமை → சிறு → சிறுகு-,]*

**சிறுகு**[2] *śiṟugu,* பெ. (n.) சிலுகு-1,2,6 *(யாழ்.அக.)* பார்க்க; see *śilugu 1,2,6.*

*[சிலுகு → சிறுகு]*

**சிறுகுடல்** *śiṟu-kuḍal,* பெ. (n.) **இரைப்பைமுதல் பெருங்குடல் வரையுள்ள உணவுக்குழாயின் பகுதி;** small intestines.

ம. செறுகுடல், செறியகுடல்

*[சிறு + குடல். குழல் = துளையுள்ளது. குழல் → குடல் = குழல் போன்ற உறுப்பு]*

**சிறுகுடி** *śiṟu-kuḍi,* பெ. (n.) 1. குறிஞ்சிநிலத்து ஊர்; village in a hilly tract. "மறைவரைச் சாரற் சிறுகுடி" (பெருங். உஞ்சைக். 41.30). 2. சிற்றூர்; small village. 3. ஏழைக்குடும்பம் (வின்.); poor family.

*[சிறு + குடி. குள் → குட → குடி]*

சிறுமை = குறைவு, வறுமை.

முதற்காலத்தில் வீடுகளெல்லாம் வட்டமாய்க் கட்டப்பட்டிருந்ததால் வீடு குடியெனப் பட்டது. ஒரு கால் வழியினர் பல இல்லங்களில் குடியிருந்தாலும் ஒரே இல்லத்தைச் சார்ந்தவராகக் கருதும் மரபும் முதற்காலத்தில், பெரும்பாலும் ஒரு சிற்றூரில் ஒரு கால்வழியினர் இருந்ததனாலும் வீட்டைக் குறிக்கும் குடி சிற்றூரைக் குறித்தது.

மலையும் மலைசார்ந்ததும் குறிஞ்சி. குறிஞ்சியில் சமதளப்பகுதி குறைவு. அதனால் குடியிருப்பு அமைத்துக் கொளலரிது. ஒரு சில குடியிருப்புகளையே, ஊராகக் கருதிக் கொள்வர்.

**சிறுகுடில்** *śiṟu-kuḍil,* பெ. (n.) சிறுகுடிசை, சிற்றில்; small-hut, hovel. "சிறுகுடி லங்க ணிருமி னீரென" (சிலப். 16: 124).

*[சிறு + குடில். குள் → குட → குடி → குடில்]*

**சிறுகுரீஇயுரை** *śiṟu-kurīi-y-urai,* பெ. (n.) நகைவிளைப்பதும், வழக்கு வீழ்ந்ததுமான ஒரு பழையநூல் (தொல். பொருள். 485, உரை.); a humourous story-book of ancient times, not now extant.

*[சிறு + குருவி + உரை]*

**சிறுகுரு** *śiṟu-kuru,* பெ. (n.) உவர்மண் (வின்.); alkaline earth.

**சிறுகுரும்பை** *śiṟu-kurumbai,* பெ. (n.) உயர்தர நெல்வகையுளொன்று (வின்.); a kind of fine paddy.

*[சிறு(மை) + குரும்பை]*

**சிறுகுழி** *śiṟu-kuḻi,* பெ. (n.) 1. கீழ்வாயிலக்கப் பெருக்கம்; multiplication of fractions, opp. to peruṅ-guḻi. 2. 36 சதுரஅடி கொண்ட அளவை (இ.வ.); a superficial measure = 36 sq. ft.

*[சிறு + குழி. குள் → குழி. குழித்தல் = குழித்தெழுதுதல்]*

**சிறுகுளம்** *śiṟu-kuḷam,* பெ. (n.) குட்டை; small pond.

*[சிறு + குளம்]*

**சிறுகுறட்டை** *śiṟu-kuṟaṭṭai,* பெ. (n.) குறட்டை வகை (யாழ்.அக.); a species of snake - gourd.

*[சிறு + குறட்டை]*

**சிறுகுறிஞ்சா** *śiṟu-kuṟiñjā,* பெ. (n.) நீரிழிவு நோயை நீக்கும் பண்புடைய மருந்துக்கொடி வகை (பதார்த்த. 126); a medicinal climber.

*[சிறு + குறிஞ்சா]*


சிறுகுறிஞ்சா

**சிறுகுறிஞ்சி** *śiṟu-kuṟiñji,* பெ. (n.) 1. நேர்வாளம்; croton. 2. புளியாரை; yellow wood-sorrel.

*[சிறு + குறிஞ்சி]*

**சிறுகுறுங்கை** *śiṟu-kuṟuṅgai,* பெ. (n.) கூம்பு வடிவிலமைந்த செடிவகை; a species of conehead.

*[சிறு + குறுங்கை]*

**சிறுகுறுவை** *śiṟu-kuṟuvai,* பெ. (n.) குறுவை நெல்வகையுளொன்று; a kind of kuṟuvai paddy.

*[சிறு + குறுவை]*

**சிறுகுன்று** *śiṟu-kuṉṟu,* பெ. (n.) சிறுதிட்டை பார்க்க; see *śiṟu-tiṭṭai.*

*[சிறு + குன்று]*

**சிறுகூவரகு** *śiṟu-kūvaragu,* பெ. (n.) தவசப் புல்வகை; kora millet.

*[சிறு + (கூழ்வரகு) → கூவரகு]*

**சிறுகேசரம்** *śiṟu-kēśaram,* பெ. (n.) சிறுநாகப்பூ (சங்.அக.); iron-wood of Ceylon.

*[சிறு + கேசரம்]*

**சிறுகொட்டைக்கரந்தை** *šiṟu-koṭṭai-k-karandai,* பெ. (n.) பறவைகள் விரும்பியுண்ணும் கொட்டைக் கரந்தைவகை; a kind of chickweed.

*[சிறு + கொட்டைக்கரந்தை]*

**சிறுகொம்மட்டி** *šiṟu-kommaṭṭi,* பெ. (n.) வடிவிற் சிறிய, புளிப்புச்சுவைமிக்க காய்காய்க்கும் கொம்மட்டி வகை (யாழ்.அக.); a variety of small-sized cucumber.

*[சிறு + கொம்மட்டி]*

**சிறுகொய்யா** *šiṟu-koyyā,* பெ. (n.) வடிவிற் சிறிய கொய்யா வகையுளொன்று; dwarf guava.

*[சிறு + கொய்யா]*

**சிறுகொன்றை** *šiṟu-koṉṟai,* பெ. (n.) தரங் குறைந்த கொன்றை மரவகை (பதார்த்த. 205); a variety of small-sized cassia tree.

ம. செறுகொன்ன

*[சிறு + கொன்றை]*

**சிறுகோரை** *šiṟu-kōrai,* பெ. (n.) கோரைவகை (வின்.); a kind of sedge.

*[சிறு + கோரை]*

**சிறுகோல்** *šiṟu-kōl,* பெ. (n.) 4 முழங்கொண்ட அளவுகோல் (யாழ்.அக.); a measuring rod = 4 cubits.

*[சிறு + கோல்]*

**சிறுங்குறுந்தொட்டி** *šiṟuṅguṟun-toṭṭi,* பெ. (n.) சிற்றாமுட்டி (இங்.வை.52); yellow sticky mallow.

*[சிறும் + குறும் + தொட்டி]*

**சிறுச்சிறிது** *šiṟu-c-ciṟidu,* பெ. (n.) கொஞ்சங் கொஞ்சமாக; little by little, gradually. "செங்கண் சிறுச்சிறிதே யெம்மேல் விழியாவோ" (திவ். திருப்பா. 22).

*[சிறு + சிறிது]*

**சிறுச்செய்** *šiṟu-c-cey,* பெ. (n.) சிறுசெய் (யாழ்.அக.) பார்க்க; see *šiṟu-šey.*

*[சிறு + செய்]*

**சிறுசண்பகம்** *šiṟu-šaṇbagam,* பெ. (n.) சிறுசெண்பகம் (திவா.) பார்க்க; see *šiṟu-šeṇbagam.*

*[சிறு + சண்பகம்]*

**சிறுசணல்** *šiṟu-šaṇal,* பெ. (n.) சணல்வகை; linseed and flax plant.

ம. செறுசணம்

*[சிறு + சணல்]*

சணல் பார்க்க

**சிறுசவளம்** *šiṟu-šavaḷam,* பெ. (n.) குந்தப்படை (பிங்.); dart, javelin.

*[சிறு + சவளம்]*

*[சவள் → சவள் → சவளம் (மு.தா.250)]*

**சிறுசவுக்கு** *šiṟu-šavukku,* பெ. (n.) கோடைச் சவுக்கு (L.); tamarisk.

*[சிறு + சவுக்கு]*

**சிறுசாமம்** *šiṟu-šāmam,* பெ. (n.) மூன்றே முக்கால் நாழிகைகொண்ட பொழுது (வின்.); minor watch of an hour and a half.

*[சிறு + சாமம். யாமம் - சாமம்]*

**சிறுசாமை** *šiṟu-šāmai,* பெ. (n.) சாமைவகை (சங்.அக.); a kind of little millet.

*[சிறு + சாமை. சமை → சாமை]*

**சிறுசானல்விரை** *šiṟu-šāṉal-virai,* பெ. (n.) ஆளிவிரை (இங்.வை. 52); linseed.

*[சிறு + சானல்விரை]*

**சிறுசிட்டாஞ்சி** *šiṟu-šiṭṭāñji,* பெ. (n.) நெல் வகை; a kind of paddy.

*[சிறு + சிட்டாஞ்சி]*

**சிறுசிவிங்கி** *šiṟu-šiviṅgi,* பெ. (n.) சிறுத்தை வகையுளொன்று; a kind of small-sized panther.

*[சிறு + சிவிங்கி]*

**சிறுசின்னம்** *šiṟu-šiṉṉam,* பெ. (n.) ஊதுகுழற் கருவிவகையி லொன்று (பிங்.); a kind of clarionet.

*[சிறு + சின்னம்]*

**சிறுசின்னி** *śiṟu-śiṉṉi,* பெ. (n.) செடிவகை (பதார்த்த. 536); a species of copper leaf.

ம. செறுசின்ன

*[சிறு + சின்னி]*

**சிறுசுங்கம்** *śiṟu-śuṅgam,* பெ. (n.) வரிவகை; a kind of tax (செ.அக.).

*[சிறு + சுங்கம்]*

**சிறுசுரப்பி** *śiṟu-śurappi,* பெ. (n.) நுண்கழலை; glandule.

*[சிறு + சுரப்பி]*

**சிறுசுளகு** *śiṟu-śuḷagu,* பெ. (n.) சிறுமுறம்; a kind of small-sized winnowing fan. "சிறு சுளகும் மணலுங் கொண்டு" (திவ். நாய்ச். 2:8).

*[சிறு + சுளகு]*

**சிறுசூடு** *śiṟu-śūḍu,* பெ. (n.) இளஞ்சூடு (இ.வ.); gentle heat, luke-warm.

*[சிறு + சூடு. சுள் → சுடு → சூடு]*

**சிறுசூலி** *śiṟu-śūli,* பெ. (n.) அகச்சூலி; a kind of tree.

*[சிறு + சூலி]*

**சிறுசெங்குரலி** *śiṟu-śeṅ-gurali,* பெ. (n.) கருந்தாமக்கொடி; a mountain creeper. "சேடல் செம்மல் சிறுசெங்குரலி" (குறிஞ்சிப். 82).

*[சிறு + செங்குரலி]*

**சிறுசெண்பகம்** *śiṟu-śeṇbagam,* பெ. (n.) சண்பக மரம்; cananga flower tree. "சிறு செங்குரலியுஞ் சிறு செண்பகமும்" (பெருங். இலாவாண: 12.29).

*[சிறு + செண்பகம். செம் → செண் → செண்பகம்]*

**சிறுசெய்** *śiṟu-śey,* பெ. (n.) 1. பாத்தி (சூடா.); garden bed. 2. பயிர் செய்வதற்காகப் பண்படுத்திய நிலக்கூறு; small cultivated plot.

*[சிறு + செய்]*

**சிறுசெருப்படி** *śiṟu-śeruppaḍi,* பெ. (n.) செருப்படி வகை (வின்.); a species of śeruppaḍi with small leaves.

*[சிறு + செருப்படி]*

**சிறுசெருப்படை** *śiṟu-śeruppaḍai,* பெ. (n.) கொடிவகை; a prostrate shrub.

*[சிறு + செருப்படை]*

**சிறுசொல்**[1] *śiṟu-śol,* பெ. (n.) 1. இழிசொல்; slighting language, word of contempt. "சிறுசொற் சொல்லிய சினங்கெழு வேந்தரை" (புறநா. 72). 2. பழிச்சொல், திட்டு; censure, reproach. 'இந்தச் சிறுசொல் நமக்கு வேண்டுமா' (நெல்லை) 'சிறுசொல் சொல்லிச் சின்னபுத்தியைக் காட்டாதே' (உ.வ.). 3. குறிப்பிடத்தக்கதல்லாத பேச்சு; an insignificant word.

ம. சிக்கமாது

*[சிறு + சொல். சிறு = சிறுமை, இழிவு, பழி]*

**சிறுசொல்**[2] *śiṟu-śol,* பெ. (n.) குறுமொழி (சிலப். 16:64, உரை); gentle speech, as of women .

சிறுமை → சிறு

*[சிறு + சொல். சிறு = சிறிய, அழகிய, மென்மையான]*

**சிறுசொறிக்குட்டம்** *śiṟu-śoṟi-k-kuṭṭam,* பெ. (n.) தொழுநோய்வகையு ளொன்று (இராசவைத். 101, உரை.); a kind of leprosy.

*[சிறு + சொறி + குட்டம்]*

**சிறுசோற்றுவிழவு** *śiṟu-śōṟṟu-viḻavu,* பெ. (n.) சோற்றைத் தயிர் முதலியவற்றோடு கலந்து உருண்டைகளாக்கி அவற்றை வருவோர்க்குக் கொடுத்து மகிழுங் கொண்டாட்டம் (புறநா. 33, உரை.); a festive celebration in which balls of cooked rice mixed in curd and some other ingredients are distributed.

*[சிறு + சோறு + விழவு]*

**சிறுசோறடுதல்** *śiṟu-śōṟaḍudal,* பெ. (n.) பெண்பாற் பிள்ளைத்தமிழில் வரும் பத்துப்பருவங்களுள் தலைவி மணற்சோறு சமைக்கும் பருவத்தைப் புனைந்து கூறும் பகுதி (பிங்.); section of peṇ-pāṟ-piḷḷai-t-tamiḻ, which describes the stage of childhood in which the heroine of the poem cooks toy food of sand, one of ten.

*[சிறுசோறு + அடு. உடு → அடு. அடுதல் = சுடுதல், எரித்தல், சமைத்தல்]*

**சிறுசோறு** *śiṟu-śōṟu*, பெ. (n.) 1. பிள்ளைகள் விளையாட்டாகச் சமைக்கும் மணற்சோறு; toy food of sand, in children. "சிறுசோறமைத்தருந்த" (திருவானைக்கா உலா, 222). 2. கலவைச்சோறு; a kind of rice-preparation flavoured with spices. "சிறுசோற்றுப் பெருஞ்சிறப்பும்" (பெரியபு. சேரமான். 155).

[சிறு + சோறு. சிறு = சிறிய, குறைந்த]

**சிறுட்டாட்டி** *śiṟuṭṭāṭṭi*, பெ. (n.) சிறுசட்டி வகை (இ.வ.); a small earthen vessel.

**சிறுத்தாயார்** *śiṟu-t-tāyār*, பெ. (n.) 1. சிறியதாய்; father's younger brother's wife. 2. சித்தி; mother's younger sister (செ.அக.).

[சிறு + தாயார்]

**சிறுத்தை** *śiṟuttai*, பெ. (n.) சிறுபுலி வகை; panther.

க. சிறதெ, சிர்ச; தெ. சிறுதெ, சிறுதபுலி, சிறுபுலி

[சிறு → சிறுத்தை]

**சிறுத்தொண்டநாயனார்** *śiṟu-t-toṇḍa-nāyaṉār*, பெ. (n.) நாயன்மார் அறுபத்துமூவரில், பல்லவ அரசனது தானைத்தலைவரும், திருஞான சம்பந்தர் காலத்தவருமான சிவனடியார் (பெரியபு.); a canonized Śaiva śaint, commander-in-chief of a Pallava king and contemporary of Tiru-ñāṉa-śambandar one of 63.

[சிறுத்தொண்டர் + நாயனார்]

**சிறுதக்காளி** *śiṟu-takkāḷi*, பெ. (n.) 1. மணித்தக்காளி (மலை.); black nightshade. 2. பிள்ளைத்தக்காளி (M.M.); small Indian winter-cherry.

[சிறு + தக்காளி]

**சிறுதகரை** *śiṟu-dagarai*, பெ. (n.) தகரை (L.); fetid cassia.

[சிறு + தகரை]

**சிறுதகை** *śiṟu-dagai*, பெ. (n.) தலைவணக்கம்; humility. "பெரும்பூட் சிறுதகை....... வெண்குடையான்" (பு. வெ. 8:24).

[சிறு + தகை. சிறு = சிறப்பு]

**சிறுதகைமை** *śiṟu-dagaimai*, பெ. (n.) சிறுதகை பார்க்க; see *śiṟu-dagai*. "பெரியார் பெருமை சிறுதகைமை" (நாலடி, 170).

[சிறு + தகைமை]

**சிறுதடி** *śiṟu-taḍi*, பெ. (n.) பாத்தி; small plot of land, small salt - pan. "காயற் சிறுதடி" (அகநா. 366).

[சிறு + தடி. சிறு = சிறுமை. தடி = வயல், பாத்தி, வெட்டு]

**சிறுதரம்** *śiṟu-daram*, பெ. (n.) 1. சிறிய அளவு; small size. 2. இளம்பருவம்; boyhood, youth. 'சிறுதரத்துப் பிள்ளைகள்' (இ. வ.).

[சிறு + தரம்]

**சிறுதருப்பம்** *śiṟu-daruppam*, பெ. (n.) நாணல் (இ.வ.); lalong grass.

[சிறு + தருப்பம்]

**சிறுதவசம்** *śiṟu-davaśam*, பெ. (n.) புன்செய் கூலம்; dry crop.

[சிறு + தவசம்]

**சிறுதனம்**[1] *śiṟu-daṉam*, பெ. (n.) சிறுபிள்ளைத் தன்மை (இ.வ.); childishness.

[சிறு + தனம்]

**சிறுதனம்**[2] *śiṟu-daṉam*, பெ. (n.) 1. சொந்தப் பொருள் (நிதி); private treasure. "உடையார் ஸ்ரீ இராஜராஜ தேவர் சிறுதனத்துக் கொடுத்த பொன்னின் தட்டம்" (தெ.க.தொ. 2 : 3.). 2. சில்வானம்; small savings. "சிறுதனந் தேடுவள்" (தண்டலை. 95).

[சிறு + தனம். தனம் = செல்வம்]

**சிறுதனம்**[3] *śiṟu-daṉam*, பெ. (n.) 1. பண்டைக் காலத்திருந்த ஒருவகைப் பணியாளர் (M.E.R.p.97,1913); an inferior grade of officials, in olden days. 2. ஆடல்வல்ல மகளிருள் ஒரு பிரிவினர் (சிலப். 14:167, உரை.); a class of dancing girls.

[சிறுமை → சிறு. சிறு + தனம்]

**சிறுதாயார்** *śiṟu-tāyār*, பெ. (n.) சிறியதாயார் பார்க்க; see *śiṟiya-tāyār*.

க. சிக்கதாயி

[சிறு + தாயார். 'ஆர்' உயர்வுப் பன்மையீறு]

**சிறுதாரை** *śiṟu-dārai,* பெ. (n.) நீர்வீசுந் துருத்தி (திவா.); syringe or instrument to discharge water in jets.

*[சிறு + தாரை]*

**சிறுதாலி** *śiṟu-tāli,* பெ. (n.) *1.* சிறியதாலி வகை; a kind of small tāli or 'marriage badge'. "நல்லோன் புனைந்த நெற்சிறு தாலி" *(பெருங். வத்தவ. 16:29). 2.* கணவனது வாழ்நாள்வரை மகளிர் கழுத்தில் சரட்டுடன், எப்பொழுது முள்ள தாலி; a small tāli worn by married women and removed only on widowhood. *3.* காமக்கிழத்திக்குக் கொடுக்கும் தாலி (இ.வ.); tāli given by a paramour to his concubine.

ம. செறுதாலி

*[சிறு + தாலி]*

**சிறுதாலிக்கட்டு** *śiṟu-tāli-k-kaṭṭu,* பெ. (n.) கைக் கோளரில் மணத்திற்கிசையாத மாமன்மகள் அல்லது அத்தைமகளை விரும்பிய ஒருவன், அவள் தன்னை மணமுடித்தற் பொருட்டு, தாலியையேனும், துணியையேனும், தூங்கும் பொழுது அவள் கழுத்திற்கட்டும் மரபு (E.T.iii,40); a custom among the Kaikkōḷars by which an unwilling maiden, usually one's maternal uncle's daughter or paternal aunt's daughter is forced into marrying by a tāli or a piece of cloth being tied around her neck while asleep, a form of surreptitious marriage.

*[சிறுதாலி + கட்டு]*

**சிறுதாளி** *śiṟu-tāḷi,* பெ. (n.) தழுவுகொடியைச் சார்ந்த தாளிவகை (மூ.அ.); hairy-leaved creamy-white bindweed.

ம. சிறுதாளி

*[சிறு + தாளி]*

**சிறுதானியம்** *śiṟu-dāṉiyam,* பெ. (n.) சிறுதவசம் பார்க்க; see *śiṟu-tavaśam.*

*[சிறு + தானியம்]*

Skt. dhānya → த. தானியம்

**சிறுதிகை** *śiṟu-digai,* பெ. (n.) சிறுதிசை பார்க்க; see *śiṟu-diśai.* 'ஆழியு மாரும்போற் கீறிச் சிறுதிகைக் கண்' *(சிலப். 17, பக். 443, அரும்.).*

*[சிறு + திகை. துகு → (திகு) → திகை = முடிவு, எல்லை, பக்கம்]*

**சிறுதிசை** *śiṟu-tiśai,* பெ. (n.) வடகிழக்கு, வடமேற்கு, தென்கிழக்கு, தென்மேற்கு எனப்படும், கோணத் திசைகள் (உ.வ.); the four intermediate directions, N.E., N.W., S.E., S.W.

*[சிறு + திசை. திகை → திசை = முடிவு, எல்லை, பக்கம்]*

குணக்கு, குடக்கு, தெற்கு, வடக்கு என்பன நான்குதிசைகள். இவையே முதன்மையானவை. எஞ்சிய நான்கும் நான்கு கோணங்களைக் குறிக்குந் திசைகள். எனவே முதன்மையான வற்றைத் திசைகள் என்றும், பிறவற்றைச் சிறுதிசைகள் என்றும் குறித்தனர். ஒநோ. சிறு பொழுது, சிறுதொழில், சிறுபயிர், சிற்றுண்டி.

**சிறுதிட்டை** *śiṟu-diṭṭai,* பெ. (n.) சிறுமேடு (திவா.); hillock, mound.

மறுவ. சிறுதிடர், பொற்றை, திடல்.

*[சிறு + திட்டை. தில் → திள் → திண் திண்ணை = திரண்ட மேடு. திண் → திண்டு = பருமன், சிறு திண்ணை. திண்டு → திட்டு = சிறுமேட்டு நிலம். திட்டு → திட்டை. மேடு, மண்மேடு, சிறுகுன்று]*

**சிறுதிடர்** *śiṟu-diḍar,* பெ. (n.) சிறுதிட்டை பார்க்க; see *śiṟu-tiṭṭai.*

*[சிறு + திடர். திடம் → திடன் → திடல் = மேட்டு நிலம், பொட்டல். திடல் → திடர் = புடைப்பு, மேட்டுநிலம்]*

**சிறுதிண்டி** *śiṟu-diṇḍi,* பெ. (n.) சிற்றுண்டி பார்க்க; see *śiṟṟuṇḍi.*

தெ. சிருதிண்டி

*[சிறு + திண்டி. தின் → தின்றி → திண்டி = உணவு]*

க. திண்டி (உணவு)

தீனி = உணவு, சிற்றுண்டி, உண்டி. தின்பது தீனி. அதிகமாய் உண்டு பயனற்றிருப்பாரைத் 'திண்டி', என்றும் 'திண்டிப்பயல்' என்றும் வழங்கும் வழக்குண்மையைக் காண்க.

உடல் வளர்ந்து, உயிர் வாழ்ந்திட உணவு தேவை. அதை உணவுவேளையி லுண்டனர். உணவுவேளைக்கிடையிலுண்பதைச் சிற்றுண்டி என்றனர். அளவிற்குறைந்த உணவும் அவ்வாறே சொல்லப்பட்டது.

**சிறுதிண்ணை** *šiṟu-tiṇṇai,* பெ. (n.) வாயிலின் முன் அமைந்திருக்கும் திண்ணை; a narrow projection at the base of a verandah.

ம. செறுதிண்ண

*[சிறு + திண்ணை. தில் → திள் → திண் → திண்ணை = திரண்டமேடு]*

**சிறுதிப்பலி** *šiṟu-tippali,* பெ. (n.) திப்பலி வகை (வின்.); a species of long pepper.

ம. செறுதிப்பலி

*[சிறு + திப்பிலி]*

**சிறுதுகில்** *šiṟu-dugil,* பெ. (n.) கந்தை (பிங்.); tatters.

*[சிறு + துகில்]*

துகில் = நல்லாடை. நல்லாடை நைந்தும் கிழிந்தும், துண்டாயும், தன்னியல்பில் திரிந்தும் இருப்பதைக் குறிக்கும் வகையில் இவண் 'சிறு' முன்னொட்டானது.

**சிறுதுடி** *šiṟu-duḍi,* பெ. (n.) 1. கிலுகிலுப்பை; rattle. 2. சிறிய உடுக்கை வகை (வின்.); a kind of clapper.

*[சிறு + துடி]*

துடி = உடுக்கைவகை

ஒ.நோ. சிறுபறை, சிறுமுழவு.

**சிறுதுண்டு** *šiṟu-duṇḍu,* பெ. (n.) 1. சிறிது; little, small quantity. 2. சிறியபகுதி; small parts.

*[சிறு + துண்டு. துல் → துள் → துண்டு = சிறியது, சிறுபகுதி]*

சிறுமைப் பொருள் அடை 'சிறு', சிறியது என்னும் பொருள்படும் துண்டுக்கு வந்தது. துண்டிலும் சிறியது அதாவது மிகச்சிறியது எனப் பொருள் உணர்த்துதற்காம். எனினும் சிறு; துண்டுக்கு மீமிசைப் பொருள் உணர்த்தும் அடைமொழியாகியுள்ளது.

**சிறுதுத்தி** *šiṟu-tutti,* பெ. (n.). 1. மெல்லிழைச் செடிவகை; membraneous carpelled evening mallow. 2. துத்திச்செடிவகையு ளொன்று; five-winged capsule rose-mallow.

*[சிறு + துத்தி]*

**சிறுதுத்திரி** *šiṟu-tuttiri,* பெ. (n.) இரட்டைச் சின்னம் என்ற ஊது கருவி (தக்கயாகப். 344, உரை.); clarionet.

*[சிறு + துத்திரி]*

**சிறுதும்பை** *šiṟu-dumbai,* பெ. (n.) மருந்துச்செடி வகை; a kind of medicinal plant.

ம. செறுதும்ப

*[சிறு + தும்பை]*

**சிறுதுருமம்** *šiṟu-durumam,* பெ. (n.) பொட்டிலுப்பு (மூ.அ.); saltpetre.

*[சிறு + துருமம்]*

**சிறுதுளசி** *šiṟu-tuḷaši,* பெ. (n.) மருந்துச் செடிவகை (மூ.அ.); a kind of medicinal plant.

ம. செறுதுளசி

*[சிறு + துளசி. துளவு = துளசி. துளவு → (துளசு) → துளசி]*

த. துளசி → Skt. tulasi

**சிறுதூறல்** *šiṟu-dūṟal,* பெ. (n.) சிறுமழை பார்க்க; see *šiṟumaḷai.*

*[சிறு + தூறல். தூறு + அல். 'அல்' தொ.பெ.ஈறு]*

**சிறுதூறு** *šiṟu-dūṟu,* பெ. (n.) 1. மரஞ்செடிகளின் சிறுசெறிவு (திவா.); thicket. 2. புதர்; bushes. 3. சிறுசெடி (வின்.); small shrub. 4. இளம்வேர்; tender root.

*[சிறு + தூறு]*

**சிறுதெய்வம்** *šiṟu-deyvam,* பெ. (n.) சிற்றூர் தெய்வம்; village deity.

*[சிறு + தெய்வம். தேய் → தே = தெய்வம். தேய் → (தெய்) தெய்வு → தெய்வம்]*

**சிறுதேக்கு** *šiṟu-dēkku,* பெ. (n.) 1. பூடுவகை; bushy fire brand teak. 2. மரவகை; beetle-killer.

ம. செறுதேக்கு

*[சிறு + தேக்கு]*

**சிறுதேங்காய்** *šiṟu-dēṅgāy,* பெ. (n.) சிறிய தேங்காய் அளவினதான மருத்துவப் பண்புடைய பழம் (சமுத்திராப் பழம்) (மூ.அ.); a medicinal fruit resembling a coconut.

*[சிறு + தேங்காய். தெங்கங்காய் → தேங்காய்]*

**சிறுதேட்கொடுக்கு** *šiṟu-dēṭ-koḍukku,* பெ. (n.) ஒளிநோக்கிச் சாயும் தேட்கொடுக்குச் செடி வகை (பதார்த்த. 265); a species of heliotropium.

*[சிறு + தேள் + கொடுக்கு]*

**சிறுதேட்டு** *śiṟu-dēṭṭu,* பெ. (n.) நிலவுடைமை யாளர், பெருந்தனத்தார் முதலியோருக்குரிய பண்ணைநிலங்கள்; private property in land, as of Zamindars. "ஈயார் தேட்டைத் தீயார் கொள்வர்" (பழ.)

*[சிறு + தேட்டு. தேடு → தேட்டு]*

**சிறுதேட்டு**[2] *śiṟu-dēṭṭu,* பெ. (n.) வீட்டுச் செலவுக்குக் கொடுக்கும் பணத்தில் சொந்தச் (சிறுதனமாக) சிறுசேமிப்பாக மீத்து வைக்கும் பணம்; savings effected from the sum allotted for household expenses.

*[சிறு + தேட்டு. தேடு → தேட்டு]*

**சிறுதேர்** *śiṟu-dēr,* பெ. (n.) 1. விளையாட்டு வண்டி; child's toy cart. "விளையாடு சிறு தேரீர்த்து" (மணிமே. 7:55). 2. சிறுதேர்ப்பருவம் (இலக். வி. 806) பார்க்க; see *śiṟu-tēr-p-paruvam.*

*[சிறு + தேர். சிறு = சிறிய. தில் → திர் → தேர் = தேர் வடிவினதான வண்டி]*

இங்குச் சிறு என்பது, அளவிற் சிறிய என்னும் பொருளிலமைந்தாலும் 'போல' என்னும் உவம உருபுப் பொருளையே உணர்த்துகின்றது.

**சிறுதேர்ப்பருவம்** *śiṟu-dēr-p-paruvam,* பெ. (n.) தலைவன், சிறியதேரைச் செலுத்தும் பருவத்தைச் சிறப்பிக்கும், ஆண்பாற் பிள்ளைத்தமிழ்ப் பகுதி; section of āṇpāṟ-piḷḷai-t-tamiḻ, which describes the stage of childhood in which the hero plays with a toy cart, one of ten.

*[சிறுதேர் + பருவம்]*

**சிறுதேவபாணி** *śiṟu-dēva-pāṇi,* பெ. (n.) இசைப்பாவகை (சிலப். 6: 35, உரை.); a kind of song in praise of a deity, set to music, opp. to peru-n-dēvapāṇi.

*[சிறு + தேவபாணி]*

**சிறுதேன்** *śiṟu-tēṉ,* பெ. (n.) 1. கொசுகுத்தேன் (யாழ்அக.); honey gathered by species of small bees. 2. சிறுதேனீ பார்க்க; see *śiṟu-tēṉī.*

ம. செறுதேன்

*[சிறு + தேன்]*

சிறு = சிறிது, கொஞ்சம், கொசுறு

**சிறுதேனீ** *śiṟu-tēṉī,* பெ. (n.) தேனீ வகையு ளொன்று; small flower bee.

ம. செறுதே நீச்ச

*[சிறு + தேனீ]*

**சிறுதையல்** *śiṟu-taiyal,* பெ. (n.) நுண்ணிய தையற்றொழில் (வின்.); fine stitching.

*[சிறு + தையல். சிறு = சிறுமை, நுண்மை, நுண்ணிது.]*

**சிறுதொழில்**[1] *śiṟu-toḻil,* பெ. (n.) இகழத்தக்க செயல்; base deed. "சிறுதொழிற் கீழோய்" (கம்பரா. முதற்போர். 253).

*[சிறு + தொழில். சிறு = சிறிது, குறைவு, இழிவு, இகழத்தக்கது.]*

**சிறுதொழில்**[2] *śiṟu-doḻil,* பெ. (n.) வரையறுக்கப் பட்ட குறைந்த முதலீட்டில், குறைந்த ஆட்களின் உழைப்பைப் பயன் கொண்டு செய்யும் தொழில்; small scale industries comparatively little size or strength or power or number, consisting of minute units.

*[சிறு + தொழில். சில் → சிறு. சிறு = சிறிய, குறைந்த.]*

**சிறுநகை**[1] *śiṟu-nagai,* பெ. (n.) புன்சிரிப்பு; smile. "திருமுகத் தழகுறு சிறுநகை" (திருவாச. 2:143).

*[சிறு + நகை. சில் → சிறு. சிறு = சிறிய, குறுகிய.]*

**சிறுநகை**[2] *śiṟu-nagai,* பெ. (n.) ஏளனச்சிரிப்பு; mockery laugh. 'சித்திராபதிதான் சிறுநகை எய்தி' (மணிமே. 18 : 86).

*[சிறு + நகை. சிறு = சிறிய, குறைந்தது, இழிந்த, ஏளனமானது.]*

**சிறுநங்கூரம்** *śiṟu-naṅgūram,* பெ. (n.) சிறு படகுகள் நங்கூரமாய் பயன்படுத்தும் கல்; killick.

*[சிறு + நங்கூரம்]*

**சிறுநணி** *śiṟu-naṇi,* வி.எ. (adv.) சிறிதுநேரம்; a little while. "சிறுநணி வரைந்தனை கொண்மோ" (ஐங்குறு. 180, இரண்டாம் பதிப்பு).

*[சிறுநனி → சிறுநணி]*

**சிறுநறளை** *śiṟu-naṟaḷai,* பெ. (n.) கொடி வகை (மூ.அ.); large woolly-lobed vine.

*[சிறு + நறளை]*

**சிறுநறுவிலி** *śiṟu-naṟuvili,* பெ. (n.) நறுவிலி வகை (மூ.வ.); a kind of common sebesten.

*[சிறு + நறுவிலி]*

**சிறுநன்னாரி** *śiṟu-nannāri,* பெ. (n.) நன்னாரி வகை (L.); a species of sarsaparilla swallow - wort.

*[சிறு + நன்னாரி]*

**சிறுநனி** *śiṟu-naṉi,* வி.எ. (adv.) 1. சிறிதுநேரம்; for a short time, a little while. "சிறுநனி நீதுஞ்சி" (கலித். 12). 2. விரைவாக; quickly, expeditiously. "சிறுநனி வரைந்தனை கொண்மோ" (ஐங்குறு. 180).

*[சிறு + நனி]*

**சிறுநாக்கு** *śiṟu-nākku,* பெ. (n.) உண்ணாக்கு (பிங்.); uvula.

ம. செறுநாக்கு; க. கிரிநாலி, தெ. சிறுநாலுக, சிறுநாக; பட. கிரு நாலங்கே

*[சிறு + நாக்கு]*

**சிறுநாகப்பூ** *śiṟu-nāga-p-pū,* பெ. (n.) 1. மரவகை (பதார்த்த. 1011); iron wood of Ceylon. 2. பெரிய இலவங்கப்பட்டை (L.); cassia cinnamon.

*[சிறு + நாகப்பூ]*




**சிறுநாகம்** *śiṟu-nāgam,* பெ. (n.) 1. இருள்மரம்; iron wood of Ceylon. 2. மலர்களிற் காணப் படுவதும், மிகச்சிறிய வடிவினதும், நச்சுத் தன்மை மிக்கதுமான பூநாகம்; a species of very small snake found among flowers, considered to be very poisonous.

ம. செறுநாகம்

*[சிறு + நாகம். நகர் → நாகம் = பாம்பு. நகர்தல் = ஊர்ந்து செல்லுதல்]*

**சிறுநார்** *śiṟu-nār,* பெ. (n.) கல்நார் (யாழ்.அக.); asbestos.

*[சிறு + நார்]*

**சிறுநாவல்** *śiṟu-nāval,* பெ. (n.) செங்கறுப்பான சிறியமரவகை (மூ.அ.); ruddy black plum.

*[சிறு + நாவல்]*

**சிறுநாளிகம்** *śiṟu-nāḷigam,* பெ. (n.) காலாட் படை குதிரைப்படைகள் தாங்கிச் செல்வதற் குரிய, துமுக்கி போன்ற கருவி; a kind of machine - gun used by infantry and cavalry.

*[சிறு + நாளிகம்]*

**சிறுநான்கெல்லை** *śiṟu-nāṉkellai,* பெ. (n.) பெருநான்கெல்லைக்கு எதிராக ஊர்த் தனிநிலங்களிலமைந்த நாற்புறத்தெல்லை (இ.வ.); boundaries of small plots or sites. opp. to perunāṉgellai.

*[சிறு + நான்கெல்லை]*

நான்கெல்லையாவது, குறித்த இடத்தைச் சுற்றி நாற்புறமும் அமைந்துள்ள குறியீட்டைக் குறிப்பது. அஃதொரு தனி நிலமாயின் நாற்புறத்தமைந்த தனியார் நிலங்களையோ, பாதை போன்றவற்றையோ குறிப்பர். அது சிறுநான்கெல்லையெனப்படும். ஓர் ஊரைக் குறிப்பதாயின், நாற்புறத்து மமைந்துள்ள ஊர்களைக் குறிப்பர். அது பெருநான்கெல்லையெனப்படும்.

**சிறுநிம்பம்** *śiṟu-nimbam,* பெ. (n.) மலைவேம்பு (மலை.); Persian lilac.

*[சிறு + நிம்பம்]*

Skt. nimba → த. நிம்பம்

**சிறுநிலம்**[1] *śiṟu-nilam,* பெ. (n.) நாகரிகமற்றோர் நாடு; the Mleccha country. "தீவின் சிறுநிலத்தார்" (நீலகேசி, 83).

*[சிறு + நிலம். இங்குச் 'சிறு' என்பது இழிவை, நாகரிக மற்ற தன்மையைக் குறிக்குஞ் சொல்லாய் வந்துள்ளது]*

**சிறுநிலம்**[2] *śiṟu-nilam,* பெ. (n.) துண்டுநிலம், தீவு; island.

*[சிறு + நிலம். நில் → நிலம்]*

**சிறுநீர்** *śiṟu-nīr,* பெ. (n.) 1. மூத்திரம்; urine. "ஒண் சிறுவர் தஞ்சிறுநீர்" (அருட்பா, 1, நெஞ்சறி 1371). 2. குறைந்த நீர்; littll water. சிறுநீர் பாசனம்.

ம. செறுநீரு

*[சிறு + நீர். சிறு = சிறிது, இழிவு, தாழ்வானது.]*

**சிறுநீர்ப்பெருக்கி** *śiṟu-nīr-p-perukki,* பெ. (n.) சிறுநீர்ப் பெருகச்செய்யும் மருந்து வகை; medicine with diuretic properties.

*[சிறுநீர் + பெருக்கி. பல் → பரு - பெரு → பெருகு → பெருக்கு → பெருக்கி. 'இ' வினை முதலீறு]*

**சிறுநீருப்பு** *śiṟu-nīruppu,* பெ. (n.) சிறுநீரிலுள்ள உப்புவகை; uric acid .

*[சிறுநீர் + உப்பு]*

**சிறுநுண்மை** *śiṟu-nuṇmai,* பெ. (n.) அம்பெய்தற்குரிய, நால்வகை இலக்குகளுள் மிகவும் சிறியதான இலக்கு; very small target for an arrow, one of four ilakku. "பெருவண்மை சிறுநுண்மை சலம் நிச்சலம்" (பாரத. வாரணா. 56).

*[சிறு + நுண்மை. சிறு = சிறிது. நுல் → (நுற்பு) → நொற்பு → நொற்பம் = நுட்பம். நுல் → நுள் → நுண் → நுண்மை]*

**சிறுநெருஞ்சி** *śiṟu-neruñji,* பெ. (n.) நெருஞ்சி வகை (யாழ்.அக.); a prostrate herb found in waste places.

*[சிறு + நெருஞ்சி]*

**சிறுநெல்லி** *śiṟu-nelli,* பெ. (n.) நெல்லிவகை; otaheite gooseberry.

ம. செறுநெல்லி

*[சிறு + நெல்லி]*

**சிறுநெறி** *śiṟu-neṟi,* பெ. (n.) 1. அருநெறி; narrow path. "நிரம்பாச் செலவி னீத்தருஞ் சிறுநெறி" (பெருங்.உஞ்சைக். 49:31). 2. இழிவான வழி; despicable ways. "செல்லாரு மல்லர் சிறுநெறி" (நாலடி, 303). 3. தீயவழி; path of evil. "சிறுநெறிகள் சேராமே" (திருவாச. 51:2).

*[சிறு + நெறி. சிறு = சிறிது, குறுகியது, இழிந்தது.]*

**சிறுநொச்சி** *śiṟu-nocci,* பெ. (n.) கருநொச்சி (L.); three leaved chaste tree.

*[சிறு + நொச்சி]*

**சிறுநோக்கு** *śiṟu-nōkku,* பெ. (n.) ஏளனப் பார்வை; look of contempt, scornful look. "செல்வர் சிறுநோக்கு நோக்குங்கால்" (நாலடி, 298).

*[சிறு + நோக்கு. சிறு = சிறிது, குறைவு, தாழ்வு, இகழ்ச்சி, ஏளனம்.]*

**சிறுப்பம்** *śiṟuppam,* பெ. (n.) இளமை (நாஞ்.); youth, early life.

ம. செறுப்பம்.

*[சிறுமை (சிறு) → சிறுப்பம். ஒ.நோ: வளமை → வளப்பம். 'சி' இளமைப் பொருள் அடை முன்னொட்டு]*

**சிறுப்பனை** *śiṟu-p-paṉai,* பெ. (n.) 1. இழிவு (வின்.); baseness. 2. கஞ்சத்தனம்; meanness. 3. வறுமை (வின்.); indigence. 4. மதிப்புக்கேடு; disrespect. என்னிடத்தில் சிறுப்பனை பட வேண்டுமோ? (வின்.); 5. கவலை; worry. 6. குழப்பம், தொல்லை; trouble. 'இந்தக் குழந்தை படுத்துஞ் சிறுப்பனை பொறுக்க முடியவில்லை' (நெல்லை.).

*[சிறு → சிறுப்பனை. 'சிறு' தாழ்வுப் பொருளடை]*

**சிறுப்பி-த்தல்** *śiṟuppi-,* 4 செ.குன்றாவி. (v.t.) 1. சிறுகப்பண்ணுதல், குறைத்தல்; to reduce, diminish. 2. மதிப்புக்குறைவு காட்டுதல் (யாழ்.அக.); to show scant courtesy to, to treat disrespectfully.

*[சிறு → சிறுப்பி-,]*

**சிறுப்பிள்ளை** *śiṟu-p-piḷḷai,* பெ. (n.) வேலையாள்; servant. "வீரசோமீசுவர தேவர் சிறுப்பிள்ளை" (M.E.R.242 of 1929-30).

*[சிறு + பிள்ளை]*

**சிறுப்பெரியார்** *śiṟu-p-periyār,* பெ. (n.) சிறுமைக்குணங்கொண்டு பெரியார்போலத்

தோன்றுபவர்; small persons affecting greatness. "சினந்திருத்துஞ் சிறுப்பெரியார் குண்டர்" (தேவா, 321, 6).

[சிறு(மை) + பெரியார்]

**சிறுபகன்றை** *širu-paganrai,* பெ. (n.) பூடுவகை (மூ.அ.); a species of water - thorn.

[சிறு + பகன்றை]

**சிறுபசளை** *širu-pašalai,* பெ. (n.) பசலை வகை (A); large-flowered purslane.

[சிறு + பசளை]

**சிறுபஞ்சமூலம்** *širu-pañja-mūlam,* பெ. (n.) 1. சிறுவழுதுணை, சிறுநெருஞ்சி, சிறுமல்லிகை, பெருமல்லிகை, கண்டங்கத்தரி என்ற ஐந்தன் வேர்களும் சேர்ந்த கூட்டு மருந்து; compound medicine prepared from the roots of five herbs, viz., širuvaludunai, širuneruñji, širu-malligai, perumalligai, kandangattari. 2. ஐந்து சிறந்த மூலிகைகளைப் போன்ற, ஐந்தைந்து அரிய அறக்கருத்து (நீதி)களைத் தன்னகத்தே கொண்ட 100 செய்யுள்களால், காரியாசான் இயற்றியதும், பதினெண்கீழ்க்கணக்கு நூல்களுளொன்றுமாகிய அறநூல்; an ancient didactic work of 100 stanzas by Kāri-y-āšān, each stanza inculcating five virtues, one of padin-en-kil-k-kanakku.

[சிறு + பஞ்சமூலம்]

Skt. pañca → த. பஞ்ச (ஐந்து) மூலம் = வேர்.

**சிறுபட்டி** *širu-patti,* பெ. (n.) கட்டுக்கடங்காத இளைஞன்; unruly youngster. "நோதக்க செய்யுஞ் சிறுபட்டி" (கலித். 51).

[சிறு + பட்டி]

பட்டி = கொட்டில், கொண்டித்தொழு. இங்கு 'பட்டி' என்பது பட்டிக்குள் அடைக்கப் பட வேண்டியது என்னும் பொருளில் கட்டுக்கடங்காத, கட்டுப்பாடற்ற, காவலற்ற இளையோனைக் குறித்தது. கட்டுக்கடங்கா மாட்டைப் பட்டிமாடு என்றும், தளையறுத்துச் செல்லுதலைப் பட்டி முறித்தல் எனவும், பொலி யெருதைப் பட்டிக்கடா என்றும் வழங்கும் வழக்க முண்மையைக் காண்க.

**சிறுபடப்பு** *širu-padappu,* பெ. (n.) குட்டான்; சிறுவைக்கோற்போர்; small heap.

[சிறு + படப்பு]

**சிறுபடுகண்** *širupadukan,* பெ. (n.) அணியுறுப்பு வகை (தெ.க.தொ. 2, 396); a pendant in an ornament.

[சிறு + படுகண்]

**சிறுபண்ணை** *širu-pannai,* பெ. (n.) கோழிக் கீரை வகை (புதுவை.); a kind of greens.

[சிறு + பண்ணை]

**சிறுபதம்**[1] *širu-padam,* பெ. (n.) வழி (திவா.); path, foot-path.

[சிறு + பதம். பதி → பதம் = நிலத்திற் பதியும் காலடி. பதம் → பாதம் → பாதை = பாதம் பட்டு உண்டாகும் வழி. பாதம் → பதம்]

**சிறுபதம்**[2] *širu-padam,* பெ. (n.) தண்ணீராகிய உணவு; water, as food. "வேளாண் சிறுபதம்" (புறநா. 74).

[சிறு + பதம்]

**சிறுபயறு** *širu-payaru,* பெ. (n.) 1. பாசிப்பயறு; green gram. "சிறுபயறு நெரித்துண்டாக்கிய பருப்பு" (திவ். பெரியாழ். 2.9 : 7. வியா.) 2. பனிப் பயறு (பதார்த்த. 839); field-gram.

ம. செறுபயறு

[சிறு + பயறு]

**சிறுபயல்** *širu-payal,* பெ. (n.) 1. பிசுக்கி, இவறன்; miser. 2. குழந்தை; child.

[சிறு + பயல்; அறிவிற் குறைபாடுடையவன், சிறியவன், குழந்தை]

**சிறுபயிர்** *širu-payir,* பெ. (n.) குறைவான காலத்தில் விளையும் பயிர் (நாஞ்.); minor crop that can be raised in a short period.

[சிறு + பயிர். சிறு = சிறிய, குறுகிய, குறைந்த.]

**சிறுபருப்பு** *širu-paruppu,* பெ. (n.) பச்சைப் பயற்றம்பருப்பு; green gram, pulse. "செந்நெலரிசி சிறுபருப்புச் செய்த வக்காரம்" (திவ். பெரியாழ். 2.9 : 7).

ம. செறுபரிப்பு

[சிறு + பருப்பு]

**சிறுபருவம்** *śiṟu-paruvam,* பெ. (n.) இளமைக் காலம்; childhood, youth.

க. சிக்கப்ராய

[சிறு+பருவம். 'சிறு' இளமைப் பொருளடை]

**சிறுபறை** *śiṟu-paṟai,* பெ. (n.) 1. தோற்கருவி வகை; small drum. "யாழுங் குழலு மரிச்சிறு பறையும்" (பெருங். உஞ்சைக். 37:90). 2. சிறுபறைப்பருவம் (இலக். வி. 806) பார்க்க; see *śiṟu-paṟai-p-paruvam.*

ம. சிறுபற

[சிறு + பறை]

பறை = தோற்கருவி. பறையைப் போன்ற வடிவினதாகிய சிறிய தோற்கருவியும் தோற் கருவி போன்றே ஒலியெழுப்பும் பிறவும் சிறுபறை எனப்பட்டன.

**சிறுபறைப்பருவம்** *śiṟupaṟai-p-paruvam,* பெ. (n.) தலைவன் சிறுபறை வைத்துக் கொண்டு அடித்து விளையாடும் பருவத்தைச் சிறப்பிக்கும் ஆண்பாற் பிள்ளைத்தமிழ்ப் பகுதி; section of āṉpāṟ-piḷḷai-t-tamiḻ, which describes the stage of childhood, in which the hero plays on a small drum, one of ten.

[சிறுபறை + பருவம்]

பறையைப் போன்ற வடிவினதாகிய தோற்கருவியையும், தோற்கருவி போன்றே ஒலியெழுப்பும் பிறவற்றையுங் கொண்டு, ஒலியெழுப்பியாடும் பருவம்.

**சிறுபாடிகாவல்** *śiṟu-pāḍi-kāval,* பெ. (n.) வரிவகை (தெ.க.தொ. 7, 30); a kind of tax.

[சிறு + பாடி + காவல்]

**சிறுபாடு**[1] *śiṟu-pāḍu,* பெ. (n.) கோயிலுக்குக் கொடுத்த சிறியகொடை (தெ. க. தொ. 3, 477); small gift, as to a temple.

[சிறு + பாடு. பாடு = உழைப்பு, உழைப்பிற்கேற்ற ஊதியம், செல்வம்.]

**சிறுபாடு**[2] *śiṟu-pāḍu,* பெ. (n.) சிறுதேட்டு; small savings. "உம்முடைய சிறுபாட்டு வகையிலிருந்து ஒன்றுந் தரவேண்டாம்" (நாஞ்.).

[சிறு + பாடு. படு → பாடு = உழைப்பு, கடமை. 'பாடுபடுதல்' என்னும் வழக்குண்மையை நோக்குக. உழைப்பில் கிடைக்கும் ஊதியத்திற் சிறுபகுதியையும் பாடு என்னும் சொல் குறித்தது. சிறுபாடு= சிறுசேமிப்பு → சிறுபாடு. சிறுவாடு எனவும் வரும்]

**சிறுபாண்டரங்கன்** *śiṟu-pāṇḍaraṅgaṉ,* பெ. (n.) இடைக்கழகக் காலப் புலவருள் ஒருவர் (இறை. 1:5); a poet of the middle Tamiḻ Śaṅgam.

[சிறு + பாண்டரங்கன்]

**சிறுபாணாற்றுப்படை** *śiṟu-pāṇāṟṟu-p-paḍai,* பெ. (n.) ஓய்மா நாட்டு நல்லியக்கோடனென்ற தலைவன் மேல் நல்லூர் நத்தத்தனார் பாடியதும், பத்துப்பாட்டினுள் ஒன்றாய்த் திகழ்வதுமான கழக நூல்; an idyll by Nallūr Nattattaṉār on the chief Nalliyakkōḍaṉ of Ōymā-nāḍu one of pattuppāṭṭu.

[சிறு + பாணர் + ஆற்றுப்படை]

யாழ் இசைத்துப் பாடும் மரபினர் பாணர். அவருள் சிறியயாழ் இசைப்பவர் சிறுபாணர். ஆறு → ஆற்று + படை. படு → படை. ஆற்றுப்படை = பரிசில் பெற்றவன், அது பெறக்கருதியவனுக்கு வழிப்படுத்துவதாகப் பாடப்பெறும் இலக்கிய வகை.

**சிறுபாம்பு** *śiṟu-pāmbu,* பெ. (n.) அரிப்புத் தழும்பை உண்டாக்கக் கூடிய நச்சுயிரி வகை; a kind of small venomous reptile producing ringworm.

[சிறு + பாம்பு. பாம்பு = ஊர்ந்து செல்லும் உயிரி. தோற்றத்தில் அஃதொத்த புழுவடிவினதான நச்சுயிரியும், பாம்பெனப்பட்டது]

**சிறுபாலடை** *śiṟupālaḍai,* பெ. (n.) பூடுவகை (யாழ்.அக.); a plant.

[சிறு + பாலடை. பாலடை = பூடுவகை]

**சிறுபாலம்** *śiṟu-pālam,* பெ. (n.) சிறிய மதகு (C.E.M.); culvert.

[சிறு + பாலம்]

**சிறுபாலா** *śiṟu-pālā,* பெ. (n.) பேய்ப்புடல் (மலை.); wild snake-gourd.

[சிறு + பாலா]

**சிறுபாலி** *śiṟupāli,* பெ. (n.) கள்ளி; milk-hedge.

[சிறு + பாலி. பால் + இ = பாலி. பாலி = பாலுடைய கள்ளிச் செடி. 'இ' உடைமைப் பொருளீறு]

**சிறுபாளைச்சம்பா** *śiṟupāḷai-c-cambā*, பெ. (n.) சம்பா நெல்வகை; a kind of šambā paddy.

*[சிறு + பாளை + சம்பா]*

**சிறுபான்மை**[1] *śiṟu-pāṉmai*, வி.எ. (adv.) சில நேரங்களில்; sometimes, occasionally, opp. to perumpāṉmai. "சில சிறுபான்மை வருமே" (பன்னிருபா. 264).

*[சிறு + பான்மை. பால் = பகுப்பு, பகுதி, பண்பு, தன்மை. பால் → பான்மை]*

**சிறுபான்மை**[2] *śiṟu-pāṉmai*, பெ. (n.) சில; a few 'இவற்றுட் சிறுபான்மை யிங்ஙனம் வரும்' (உ.வ.).

*[சிறு + பான்மை]*

**சிறுபிள்ளை** *śiṟu-piḷḷai*, பெ. (n.) 1. குழவி; குழந்தை; child, infant. 'சிறுபிள்ளை இட்ட வெள்ளாமை வீடு வந்து சேராது' (பழ.). 2. இளைஞர், சிறுவர்; youngster. "என்கண் சிறுபிள்ளாய் வருகென்றே" (திருப்போ. சந். வண்ணத்தாழிசை, 1).

*[சிறு + பிள்ளை]*

**சிறுபிள்ளைத்தனம்** *śiṟu-piḷḷai-t-taṉam*, பெ. (n.) முதிர்ச்சியின்றியும், பொறுப்பின்றியும் குழவியைப் போன்று செயற்படுந்தன்மை; childness.

*[சிறு + பிள்ளை + தனம். 'தனம்' பண்புணர்த்தும் இடைச்சொல்]*

**சிறுபீங்கா** *śiṟu-pīṅga*, பெ. (n.) நாட்டு வாதுமை; wild almond myrobalan.

*[சிறு + பீங்கா]*

**சிறுபுடையன்** *śiṟu-puḍaiyaṉ*, பெ. (n.) சிறிய பாம்பு வகை (M.M.700); small wart-snake.

*[சிறு + புடையன்]*

**சிறுபுள்ளடி** *śiṟu-puḷḷaḍi*, பெ. (n.) ஒற்றை யிலைச் செடிவகை (பதார்த்த. 366); scabrous ovate unifoliate tick - trefoil.

ம. சிறுப்புள்ளடி

*[சிறு + புள்ளடி. புள் + அடி = புள்ளடி. பறவைகளின் காலடி போன்ற இலைகளையுடைய செடி]*


சிறுபுள்ளடி

**சிறுபுள்ளுநோய்** *śiṟu-puḷḷu-nōy*, பெ. (n.) மாட்டுநோய் வகை (மாட்டுவா. 121); a kind of cattle disease.

*[சிறு + புள்(ளு) + நோய். புள் = வண்டு. வண்டுகடி போன்ற நோயாயிருக்கலாம்]*

**சிறுபுறம்** *śiṟu-puṟam*, பெ. (n.) 1. பிடர்; nape, back of the neck, as the small side. "செயத்தகு கோவையிற் சிறுபுற மறைத்து" (சிலப். 6: 102). 2. முதுகு; back. "நின் னணிமாண் சிறுபுறங் காண்கம்" (அகநா. 261). 3. சிறுகொடை; small gift. "சிறுபுறமென நூறாயிரங் காணம் கொடுத்து" (பதிற்றுப். 70, பதி.).

*[சிறு + புறம். புறம் = முதுகு]*

**சிறுபுறம்பேசு-தல்** *śiṟu-puṟam-pēśu-*, 4 செ.குவி. (v.i.) காணாவிடத்துத் தூற்றுதல்; to backbite. "செப்பிள மென்முலையார்கள் சிறுபுறம் பேசித்திரிவர்" (திவ். பெரியாழ். 2. 4 : 5) (செ.அக.).

*[சிறுபுறம் + பேசு. முகத்துக்கெதிரே பேசாமல், முதுகுப்பக்கம் பேசுதல், புறம்பேசுதல்]*

**சிறுபுன்னை** *śiṟu-puṉṉai*, பெ. (n.) புன்னை வகை; small poon.

ம. செறுப்புன்ன, செறுபுன்ன

*[சிறு + புன்னை]*

**சிறுபூச்சி** *śiṟu-pūcci*, பெ. (n.) புழுவகை (இ.வ.); worm.

*[சிறு + பூச்சி]*

பெரும்பாலும், முட்டையிலிருந்து தொடங்கும் பூச்சிப்பருவங்களில், பூச்சிக்கு முந்தைய பருவம் புழு. கூட்டுப்புழு எனும் வடிவு

*பெற்றுப் பின் பூச்சிப்பருவம் எய்துவது முறைமை. எனவே பூச்சிக்கு முந்தைய புழுப் பருவத்தை, சிறுபூச்சி என வழங்கும் மரபுள்ளது.*

**சிறுபூலா** *śiṟu-pūlā,* பெ. (n.) புதர்ச்செடி வகை; a shrub.

*[சிறு + பூலா]*

**சிறுபூளை** *śiṟu-pūḷai,* பெ. (n.) நடைவழியில் முளைக்கும் ஒருவகைப் பூடு; a common wayside weed. "*அறுகு சிறுபூளை நெல்லொடு தூஉய்ச் சென்று*" *(சிலப். 9: 43).*

ம. செறுபூள

*[சிறு + பூளை]*




**சிறுபூளைக்காலி** *śiṟu-pūḷai-k-kāli,* பெ. (n.) காதணிபோல் பூக்கும் கொடிவகை, சிமிக்கிப் பூ (பதார்த்த. 577); mountain leschenault's passion - flowered.

*[சிறு + பூளை + காலி]*

**சிறுபொழுது** *śiṟu-poḻudu,* பெ. (n.) மாலை, இடையாமம், விடியல், காலை, நண்பகல், எற்பாடு (தொல். பொருள். 6, உரை.) என அறுவகையாகவும், மாலை, யாமம், வைகறை எற்பாடு, காலை, நண்பகல் (நம்பியகப். 12) என ஐவகையாகவும் கூறப்படும் நாட்பிரிவு; divisions of the day, six in number, viz., mālai, iḍai-yāmam, viḍiyal, kālai, naṉpagal, eṟpāḍu. or five in number, viz., mālai, yāmam, vaigaṟai, eṟpaḍu kālai, naṉpagal, dist. fr. perum-poḻudu.

மறுவ. அறுபொழுது

*[சிறு + பொழுது]*

பெரும்பொழுதின் மறுதலை. யாண்டின் (பருவ காலப்) பிரிவுகளைப் பெரும்பொழுது என்றும், நாளின் (காலப்) பிரிவுகளைச் சிறு பொழுது என்றும், பிரித்தமைத்து வழங்கினர் பண்டைத்தமிழர் பொழுது சிறுபொழுது பெரும்பொழுது என இருபாற்பட்டு ஒவ்வொரு பாலும் அறுவகை கொண்டிருக்கும் நம்பியகப் பொருள் ஏற்பாட்டினையும் காலையையும் ஏற்படுகாலெ என ஒன்றாகக் கொண்டமையால் சிறுபொழுது ஐந்து எனக் குறித்துள்ளது. கதிரவன் தோற்றம் முதல் பப்பத்து நாழிகை கொண்ட நாட் பிரிவுகளாகக் கொள்ளும் மரபும் பெரும்பொழுது அறுவகையாய் இருப்பதும் சிறுபொழுது அறுவகையாவதை இயல்பாயக் காட்டுகிறது.

**சிறுபோகம்** *śiṟu-pōgam,* பெ. (n.) கம்பு, கேழ்வரகு போன்ற சிறுதவச விளைவு (வின்.); harvest of the inferior kinds of grain.

*[சிறு + போகம்]*

**சிறுமகன்** *śiṟu-magaṉ,* பெ. (n.) *1.* அறிவில்லா தவன், பேதை, முட்டாள்; fool, ignoramus. "தீத்திற மொழிகெனச் சிறுமக னுரைப்போன்" *(மணிமே 16: 117). 2.* சிறியன் பார்க்க; see *śiṟiyaṉ.*

ம. செறுமகன் (பேரன்)

*[சிறு + மகன். சிறு = சிறிய, குறுகிய, தாழ்ந்த, இழிவான]*

**சிறுமட்டம்**[1] *śiṟu-maṭṭam,* பெ. (n.) *1.* சிறு குதிரை; pony, nag. *2.* யானைக்கன்று; young elephant.

*[சிறு + மட்டம். முள் → மள் → மடு = பள்ளம். மடு → மட்டு → மட்டம் = தாழ்ந்தது, சிறியது. மட்டம் = குதிரைக் குட்டி, யானைக் குட்டி]*

**சிறுமட்டம்**[2] *śiṟu-maṭṭam,* பெ. (n.) *1.* சிற்றளவு; small measure. *2.* சிறுவாழை; young plantain. *3.* குள்ளமானவ-ன்-ள்; short young man or woman.

*[சிறு + மட்டம். மட்டம் = கரும்பு, வாழை போன்றவற்றின் கன்று, அளவு, குள்ளம்.]*

**சிறுமணி**[1] *śiṟu-maṇi,* பெ. (n.) சலங்கை (சூடா.); tiny bell tied in a string around a child's waist or foot.

ம. செறுமணி

*[சிறு + மணி. மண்ணுதல் = கழுவுதல். மண் → மண்ணி → மணி = கழுவப்பெற்ற ஒளிக்கல்]*

**சிறுமணி**[1] *śiru-maṇi,* பெ. (n.) ஆறு மாதத்திற் பயிராகும் சம்பாநெல் வகை; a kind of šambā paddy maturing in six months.

ம. செறுமணி

*[சிறு + மணி. முள் → முட்டு = சிறியது. முள் → மள் → மண் → மணி = சிறியது, தவசமணி]*

**சிறுமணிக்கொட்டுவான்** *śiru-maṇi-k-koṭṭuvāṉ,* பெ. (n.) நீர்ப்புள் வகை (யாழ்.அக.); a water-bird.

*[சிறு + மணி + கொட்டுவான்]*

**சிறுமணிச்சம்பா** *śiru-maṇi-c-cambā,* பெ. (n.) சம்பா நெல்வகை; a kind of paddy.

ம. செறுமணிச்சம்ப

*[சிறு + மணி + சம்பா]*

**சிறுமணிப்பயறு** *śiru-maṇi-p-payaṟu,* பெ. (n.) காராமணி வகை; asparagus bean.

*[சிறு + மணி + பயறு]*

**சிறுமணியன்** *śiru-maṇiyaṉ,* பெ. (n.) சம்பா நெல்வகையுள் ஒன்று (தஞ்சை.); a variety of šambā paddy.

ம. செறுமணியன்

*[சிறு + மணியன். சிறுமணி = நெல்வகை. சிறுமணி → சிறுமணியன்]*

**சிறுமயிற்கொன்றை** *śiru-mayiṟ-koṉṟai,* பெ. (n.) மயிற்கொன்றை மரம்; peacock-flower tree.

*[சிறு + மயில் + கொன்றை]*

**சிறுமரம்** *śiru-maram,* பெ. (n.) சிறிய பாய்மரம்; jigger.

*[சிறு + மரம்]*

மீனவ வழக்கில் மரம் என்பது பொதுவில் கட்டுமரத்தையும் சிறப்பில் பாய் மரத்தையும் குறிக்கும்.

**சிறுமல்** *śiru-mal,* பெ. (n.) தண்ணீர் விட்டான் கிழங்குக்கொடி (மலை.); a common climber with many thickened fleshy roots.

**சிறுமல்லி** *śiru-malli,* பெ. (n.) சிறுமல்லிகை (சங்.அக.) பார்க்க; see *śiru-malligai.*

*[சிறு + மல்லி]*

**சிறுமல்லிகை** *śiru-malligai,* பெ. (n.) மல்லிகை வகை (சங்.அக.); wild jasmine.

ம. செறுமுல்ல

*[சிறு + மல்லிகை]*

**சிறுமலை**[1] *śiru-malai,* பெ. (n.) 1. பொற்றை (சூடா.); hill. 2. சிறுகுன்று; hillock.

*[சிறு + மலை]*

**சிறுமலை**[2] *śiru-malai,* பெ. (n.) திண்டுக்கல் மாவட்டத்தில், சுவைமிக்க இனிய வாழைப் பழத்திற்குப் பெயர்பெற்ற மலை; a mountain range in Diṇḍugal district noted for its plantain fruits. "தென்னவன் சிறுமலை திகழ்ந்து தோன்றும்" (சிலப். 11: 85).

மறுவ. செறுமலை.

*[சிறு + மலை]*

**சிறுமலையரியன்** *śiru-malai-y-ariayṉ,* பெ. (n.) நெல்வகை; a kind of paddy.

*[சிறு + மலை + அரியன்]*

**சிறுமழை** *śiru-maḻai,* பெ. (n.) நுண் திவலைகளாகப் பெய்யுந் தூறல்; drizzle.

மறுவ. சிறுதூறல்

ம. செறுமழ

*[சிறு + மழை]*

**சிறுமாரோடம்** *śiru-mārōḍam,* பெ. (n.) செங்கருங்காலி (குறிஞ்சிப். 78); red catechu.

*[சிறு + மாரோடம்]*

**சிறுமி** *śirumi,* பெ. (n.) 1. இளம்பெண்; maiden, girl. "சிறுமி தந்தையும்" (சீவக. 1458). 2. மகள் (பிங்.); daughter.

ம. செறுமி

*[சிறு → சிறுமி]*

**சிறுமியம்** *śirumiyam,* பெ. (n.) சேறு (சது.); mud, mire.

**சிறுமீன்** *śiru-mīṉ,* பெ. (n.) 1. அருந்ததி விண்மீன்; the star Arundadi. "சிறுமீன் புரையுங் கற்பி னறுநுதல்" (பெரும்பாண். 303). 2. நொய்ம் மீன் (பிங்.); loach.

ம. செறுமீன்; க. சிக்க

*[சிறு + மீன்]*

**சிறுமுட்டி** *śiṟu-muṭṭi,* பெ. (n.) சிறுசுத்தியல் (C.E.M.); small hammer.

*[சிறு + முட்டி]*

**சிறுமுத்தன்** *śiṟu-muttaṉ,* பெ. (n.) ஆண் பொம்மை; male toy - baby. "சிறுமுத்தனைப் பேணி" (கலித். 59).

Skt. mugdha

*[சிறு + முத்தன்]*

**சிறுமுதுக்குறைமை** *śiṟu-mudu-k-kuṟaimai,* பெ. (n.) இளமையிற் பேரறிவுடைமை; precociousness. "இனிய சொல்லாள் சிறுமுதுக்குறைமை கேட்டே" (சீவக. 1051).

*[சிறு + முதுக்குறைமை. முதுக்குறைமை = இளம் + பருவத்திலேயே பேரறிவுடைமை]*

**சிறுமுதுக்குறைவி** *śiṟu-mudu-k-kuṟaivi,* பெ. (n.) இளம்பருவத்தே பேரறிவுடையவள்; precocious girl, a term of endearment. "சிறுமுதுக் குறைவிக்குச் சிறுமையுஞ் செய்தேன்" (சிலப். 16, 68).

*[சிறு + முதுக்குறைவி. 'இ' பெண் பாலீறு.]*

**சிறுமுழவு** *śiṟu-muḻavu,* பெ. (n.) தோற்கருவி வகை; a kind of drum.

*[சிறு + முழவு]*

**சிறுமுள்ளி** *śiṟu-muḷḷi,* பெ. (n.) முள்ளிவகை (யாழ்அக.); a kind of nail dye.

ம. செறுமுள்ளி

*[சிறு + முள்ளி]*

**சிறுமுறி** *śiṟu-muṟi,* பெ. (n.) கைச்சீட்டு; small note or chit. "பரமபதம் தங்கள் சிறுமுறிப்படி செல்லும்படி" (ஈடு, 4. 3: 11).

*[சிறு + முறி]*

**சிறுமூங்கில்** *śiṟu-mūṅgil,* பெ. (n.) மூங்கில் வகை; swollen node - ringed semi-solid medium bamboo.

ம. செறுமுள

*[சிறு + மூங்கில். சிறு = மெல்லிய]*

**சிறுமூசை** *śiṟu-mūśai,* பெ. (n.) மாழைகளை யுருக்கப் பயன்படுத்தும் சிறிய மண்குகை (C.E.M.); small crucible.

*[சிறு + மூசை]*

**சிறுமூலகம்** *śiṟu-mūlagam,* பெ. (n.) 1. அரிசித் திப்பிலி; common long pepper. 2. பூடுவகை (அக.நி.); a small plant.

*[சிறுமூலம் → சிறுமூலகம்]*

**சிறுமூலம்** *śiṟu-mūlam,* பெ. (n.) 1. திப்பிலி (பிங்.); long pepper. 2. சிறுகிழங்கு (மலை.) பார்க்க; see *śiṟu-kiḻaṅgu.*

*[சிறு + மூலம். மூலம் = வேர், கிழங்கு]*

**சிறுமூளை** *śiṟu-mūḷai,* பெ. (n.) மூளையின் பகுதி; cerebellum.

*[சிறு + மூளை]*

**சிறுமை**[1] *śiṟumai,* பெ. (n.) 1. இழிவு, புன்மை; lowness, meanness, insignificance. "ஆண்டு கொண்டானென் சிறுமை கண்டும்" (திருவாச. 5: 9). 2. நுண்மை (வின்.); minuteness. 3. குறைபாடு; diminution. "சிறுமையுஞ் செல்லாத் துனியும்" (குறள், 769). 4. வறுமை; poverty, indigence. "சிந்தைநோய் கூருமென் சிறுமை நோக்கி" (சிலப். 8 : 85). 5. வறட்சி; scarcity. 6. துன்பம்; sorrow, misery. "சிறுமை பலசெய்து சீரழிக்குஞ் சூதின்" (குறள், 934). 7. பிறர்மனத்தை வருத்துகை; offence. "சிறுமையுணீங்கிய வின்சொல்" (குறள், 98). 8. இளப்பம்; disgrace. "தீர்ந்ததெஞ் சிறுமை" (கம்பரா. திருவவ. 25). 9. குற்றம்; fault. "உள்ளந் திகைத்திந்தச் சிறுமை செய்தேன்" (கம்பரா. ஊர்தே. 93). 10. நோய்; disease. "பையுளுஞ் சிறுமையும் நோயின் பொருள" (தொல். சொல். 341).

ம. செறும

*[சில் → சிறு → சிறுமை]*

**சிறுமை**[2] *śiṟumai,* பெ. (n.) 1. இளமை (இ.வ.); youth, minority. 2. கழிகாமம்; lust. "சினமுஞ் சிறுமையு மில்லார்" (குறள், 431). 3. கயமை; baseness. "சிறுமை தீரா வெவ்வழி மாயை" (கம்பரா. மாயாசனக. 1.)

*[சில் → சிறு → சிறுமை]*

**சிறுமைத்தனம்** *śiṟumai-t-taṉam,* பெ. (n.) சிறுமை [2,3,4] (இ.வ.) பார்க்க; see *śiṟumai,*[2,3,4]. 2. இளமை; youth.

*[சிறுமை + தனம். ஒ.நோ. இவறன்மை → இவறற்றனம். அடிமை → அடிமைத்தனம். வள்ளன்மை → வள்ளற்றனம். தனம் = பண்புணர்த்தற்குப் பெயரின் பின்வரும் ஈறு.]*

**சிறுமையர்** *śiṟumaiyar,* பெ. (n.) கீழ்மக்கள் (திவா.); mean, vulgar persons.

*[சிறு → சிறுமை → சிறுமையர். சிறு = தாழ்ந்த, இழிவான]*

**சிறுமொழி** *śiṟu-moḻi,* பெ. (n.) சிறுசொல்[2] பார்க்க; see *śiṟu-sol*[2].

க. சிக்கமாது

*[சிறு + மொழி]*

**சிறுலவங்கம்** *śiṟu-lavaṅgam,* பெ. (n.) சன்னக் கறாம்பூ (லவங்கப்பட்டை); Ceylon cinnamon.

*[சிறு + இலவங்கம். சிறு = சிறிய, மெல்லிய]*

**சிறுவட்டம்[1]** *śiṟu-vaṭṭam,* பெ. (n.) இளமை, இளம் பருவம்; youth, boyhood.

மறுவ. இளவட்டம்

*[சிறு + வட்டம். சுற்று, மண்டிலம், பருவம்]*

**சிறுவட்டம்[2]** *śiṟu-vaṭṭam,* பெ. (n.) பூடுவகை (வின்.); a shrub with scarlet flowers in clusters, the juice of which is pressed and given in gingelly oil to children for cutaneous eruptions.

*[சிறு + வட்டம்]*

குழந்தைகளின் தோல்நோய்க்கு, இதன் சாற்றினை நல்லெண்ணெய்யில் இழைத்துக் கொடுப்பர்.

**சிறுவட்டமணி** *śiṟu-vaṭṭa-maṇi,* பெ. (n.) குழந்தைகள் அரையிற் கட்டுஞ் சிறுமணி; tiny bells worn round the waist, by children.

*[சிறு + வட்டம் + மணி]*

**சிறுவடம்** *śiṟu-vaḍam,* பெ. (n.) சிறுவட்டம்[1] (இ.வ.) பார்க்க; see *śiṟu-vaṭṭam*[1].

*[சிறு + வடம். வட்டம் → வடம்]*

**சிறுவதும்** *śiṟuvadum,* வி.எ. (adv.) சிறிதும்; even a little, even a bit, used only with neg. verbs. "சிறுவது மஞ்சிலன்" *(கந்தபு. தானப். 2).*

*[சிறிதும் → சிறுவதும்]*

இஃது எதிர்மறைவினையில் வரும்.

**சிறுவம்** *śiṟuvam,* பெ. (n.) சிறுப்பம் (வின்.) பார்க்க; see *śiṟuppam.*

*[சிறுப்பம் → சிறுவம்]*

**சிறுவயது** *śiṟu-vayadu,* பெ. (n.) இளம்பருவம் (உ.வ.); non-age, youth.

*[சிறு + வயது. சிறு = குறைவு]*

Skt. vayas → த. வயது

**சிறுவரை[1]** *śiṟu-varai,* பெ. (n.) 1. சிறிதுநேரம்; short time, a little while. "சிறுவரைத் தங்கின் வெகுள்வர்" *(கலித். 93).* 2. சிறுதொலைவு; short distance. "சிறுவரை சென்று நின்றோர்க்குந் தோன்றும்" *(புறநா.).*

*[சிறு + வரை. வரை = காலம், தொலைவு]*

**சிறுவரை[2]** *śiṟu-varai,* பெ. (n.) சிறுமூங்கில்; small bamboo.

*[சிறு + வரை. சிறு - சிறிய, இளைய. வரை- மூங்கில்]*

**சிறுவரை[3]** *śiṟu-varai,* பெ. (n.) இழிவு, சிறுக்கம், சிறியபொருள்; trifle, small thing.

*[சிறு + வரை]*

**சிறுவல்[1]** *śiṟuval,* பெ. (n.) 1. குழந்தை (யாழ்ப்.); little child. 2. இளம்பருவம் (இ.வ.); childhood.

*[சிறு → சிறுவல். 'அல்' சொல்லாக்க ஈறு]*

**சிறுவல்[2]** *śiṟuval,* பெ. (n.) 1. தடை (நாஞ்.); obstacle. 2. இடையூறு; hindrance.

*[சிறு → சிறுவல்]*

**சிறுவலி** *śiṟu-vali,* பெ. (n.) குழவி முதிரா நிலையில், பருவந்தவறிப் பிறப்பதாலுண்டாகும் நோவு (வின்.); premature labour pains.

*[சிறு + வலி. சிறு = முதிர்வின்மை, முதிராநிலை]*

**சிறுவழுதலை** *śiṟu-vaḻudalai,* பெ. (n.) சிறுவழுதுணை (L.) பார்க்க; see *śiru-vaḻuduṇai.*

*[சிறுவழுதுணை → சிறுவழுதலை]*

**சிறுவழுதுணை** *śiṟu-vaḻuduṇai,* பெ. (n.) *1.* இரவில் மலருஞ் செடிவகை (வின்.); Indian nightshade. *2.* கண்டங்கத்தரி; species of solanum.

ம. செறுவழுதின

[சிறு + வழுதுணை. வழுதுணை = கத்திரிக் காய். சிறுவழுதுணை = கத்திரிக்காயைப் போன்ற வடிவிலிருக்கும் கண்டங்கத்திரி]

இங்கும் சிறு, 'போல' எனும் உவமஉருபுப் பொருளில் வந்தது. சிறுதேர் பார்க்க.


சிறுவழுதுணை

**சிறுவள்ளி** *śiṟu-vaḷḷi,* பெ. (n.) சிறுகிழங்கு (பதார்த்த. 438); Goa potato.

ம. செறுவள்ளிக் கிழங்நு

[சிறு + வள்ளி. வள்ளி = கொடி, கிழங்கு]

**சிறுவள்ளிக்கிழங்கு** *śiṟuvaḷḷi-k-kiḻaṅgu,* பெ. (n.) சிறுவள்ளி பார்க்க; see *śiṟu-vaḷḷi.*

ம. செறுவள்ளிக் கிழங்நு

[சிறு + வள்ளிக்கிழங்கு]

**சிறுவன்** *śiṟuvaṉ,* பெ. (n.) *1.* இளைஞன்; boy. "மால்பெருஞ் சிறப்பையச் சிறுவனும் பெற்று" (பாரத. நிரைமீட். 46). *2.* சிறியன்; lad. "உறுவருஞ் சிறுவரும்" (புறநா. 381). *3.* மகன்; son. "உலகாளுஞ் சிறுவர்ப் பயந்து" (சீவக. 2606). *4.* சிறுபுள்ளடி வகை (மலை.); species of desmodium.

ம. சிறுவன்

[சிறு → சிறுவன். 'அன்' ஆண்பாலீறு]

**சிறுவாடு** *śiṟu-vāḍu,* பெ. (n.) *1.* சிறுசேமிப்பு (வின்.); small savings in money. *2.* சிறுதேட்டு (நாஞ்.) பார்க்க; see *śiṟu-ṭēṭṭu.* *3.* பற்றடைப்பு நிலம் (C.G.); reclaimed land enjoyed by a tenant for a certain period in requital of his labour for so reclaiming it.

[சிறுபாடு → சிறுவாடு]

**சிறுவாத்தி** *śiṟu-vātti,* பெ. (n.) திருவாத்தி (L.); holy mountain ebony.

[சிறு + ஆத்தி]

**சிறுவாய்க்கயிறு** *śiṟu-vāy-k-kayiṟu,* பெ. (n.) குதிரையின் கடிவாள வார்; reins. "பிடித்த சிறுவாய்க் கயிறும்" (ஈடு, 7. 4: 5).

[சிறு + வாய் + கயிறு]

**சிறுவாலுழுவை** *śiṟu-vāl-uḻuvai,* பெ. (n.) வாலுழுவைக்கொடிவகை (L.); climbing staff - plant.

[சிறு + வாலுழுவை]

**சிறுவாழை** *śiṟu-vāḻai,* பெ. (n.) இளம்வாழை; young plantain.

[சிறு + வாழை. வழு → வாழை = வழு வழுப்பான மரம்]

**சிறுவாள்** *śiṟu-vāḷ,* பெ. (n.) கைவாள் (பிங்.); hand-saw.

[சிறு + வாள். வார் → வால் → வாள் = நீண்ட கத்தி]

**சிறுவி** *śiṟuvi,* பெ. (n.) மகள் (சூடா.); daughter.

[சிறு → (சிறுமி) → சிறுவி. 'இ' பெ.பா.ஈறு]

**சிறுவிடு** *śiṟuviḍu,* பெ. (n.) கொள்ளு (மலை.); horse-gram.

**சிறுவித்தம்** *śiṟu-vittam,* பெ. (n.) சூதாட்டத்தில் ஓட்டமாக வைக்கப்பட்ட சிறுதொகை; stake - money, as in gambling. "சிறுவித்த மிட்டான் போல்" (கலித். 136).

[சிறு + வித்தம்]

**சிறுவியர்** *śiṟu-viyar,* பெ. (n.) குறுவியர்; light or mild perspiration. "திங்கள் வாண்முகஞ் சிறுவியர் பிரிய" (சிலப். 4: 52).

க. கிறுபெமர்

[சிறு + வியர்]

**சிறுவிரல்** *šiṟu-viral,* பெ. (n.) சுண்டுவிரல்; little finger. "சிறுவிரன் மோதிரங் கொடுத்தனன்" (பெருங். வத்தவ. 13: 180).

ம. செறுவிரல்; க. கிறும், பிரலு

*[சிறு + விரல். விரி → விரல்]*

**சிறுவிரியன்** *šiṟu-viriyaṉ,* பெ. (n.) நச்சுத் தன்மை கொண்ட விரியன்பாம்பு (M.M.); small viper.

*[சிறு + விரியன்]*

**சிறுவிலை** *šiṟu-vilai,* பெ. (n.) 1. அருவிலை; high price. 2. சிறுவிலைநாள் பார்க்க; see *šiṟu-vilai-nāḷ.* "சிறு விலை யெளியவ ருணவு சிந்தினோன்" (கம்பரா. பள்ளி. 111). 3. இளைத்துள்ளது; that which is lean or slender. "சிறுவிலை மருங்குல்" (கம்பரா. தைலமாட்டு. 53).

*[சிறு + விலை. சிறு = சிறியது, அருமைப்பாடுடையது]*

**சிறுவிலைநாள்** *šiṟu-vilai-nāḷ,* பெ. (n.) வற்கடக்காலம்; times of scarcity, famine. "சிறுவிலை நாண் முந்தீந்ததொ ருணவின்பயன்" (கம்பரா. இராவணன் வதை. 52).

*[சிறுவிலை + நாள்]*

**சிறுவீட்டுப்பொங்கல்** *šiṟu-vīṭṭu-p-poṅgal,* பெ. (n.) சுறவ (தை)த்திங்களில் சிறுமியர் சிறு வீடு கட்டிப்பொங்கலிடும் பண்டிகை (இ.வ.); a festival in the month of šuṟavam in which rice is boiled and offered to God by girls, in front of the toy-houses, prepared for the occasion.

*[சிறு + வீடு + பொங்கல்]*

**சிறுவீடு**[1] *šiṟu-vīḍu,* பெ. (n.) கறப்பதற்கு முன் மாடுகளைப் புலர்பொழுதில் மேயவிடுகை; letting out cattle in the early morning to graze before they are milked. "எருமை சிறுவீடு மேய்வான் பரந்தனகாண்" (திவ். திருப்பா. 8.)

*[சிறு + வீடு. சிறு = சிறிது காலம். வீடு = மேய்ச்சலுக்கு விடுதல். விடு → வீடு]*

**சிறுவீடு**[2] *šiṟu-vīḍu,* பெ. (n.) சிற்றில்[1] 1,2 பார்க்க; see *šiṟṟil*[1] 1,2.

*[சிறு + வீடு]*

**சிறுவுடை** *šiṟu-v-uḍai,* பெ. (n.) நீருடைமரம்; buffalo thorn cutch.

*[சிறு + உடை. உடை = உடைமரம்]*

**சிறுவுமரி** *šiṟu-v-umari,* பெ. (n.) பவளப்பூண்டு (யாழ்அக.); coral plant.

*[சிறு + உமரி]*

**சிறுவெண்காக்கை** *šiṟu-veṇ-kākkai,* பெ. (n.) கழுத்திற் சிறுவெண்மையுடைய காகம்; crow having a greyish neck. "பெருங்கடற் கரையது சிறுவெண் காக்கை" (ஐங்குறு. 170).

*[சிறு + வெண் + காக்கை. கரியநிறமுள்ள காக்கையின் கழுத்தில், சிறிது வெண்ணிற முடைமையைக் குறிக்கச் 'சிறுவெண்' என வந்தது]*

**சிறுவெள்ளரி** *šiṟu-veḷḷari,* பெ. (n.) வெள்ளரி வகை (வின்.); a species of cucumber.

ம. செறுவெள்ளரி

*[சிறு + வெள்ளரி]*

**சிறுவேங்கை** *šiṟu-vēṅgai,* பெ. (n.) மலை வேங்கை மரம்; thorny blue - draped feather foil.

*[சிறு + வேங்கை]*

**சிறுவேட்டி** *šiṟu-vēṭṭi,* பெ. (n.) துண்டு; towel.

*[சிறு + வேட்டி. வெட்டி → வேட்டி]*

**சிறுவேட்டை** *šiṟu-vēṭṭai,* பெ. (n.) வரிவகை (M.E.R. 134 of 1924); a kind of tax.

*[சிறு + வேட்டை]*

**சிறுவேர்** *šiṟu-vēr,* பெ. (n.) மருந்துவேர் வகையு ளொன்று (இங்.வை. 234); a kind of medicinal root.

*[சிறு + வேர்]*

**சிறுவோர்** *šiṟuvōr,* பெ. (n.) 1. சிறுபிள்ளைகள்; children, little boys. "ஆனாவறு சிறுவோர்தமை யளித்தோன்" (கந்தபு. சரவண. 32). 2. இளைஞர்; youngsters.

*[சிறு → சிறுவோர்]*

**சிறை**[1]**-த்தல்** *šiṟai-,* 4 செ.குன்றாவி. (v.t.) 1. சிறை செய்தல்; to restrain, imprison. "தன் வயிற் சிறைப்பினும்" (தொல். பொருள். 147). 2. நீரைத்

தடுத்தல்; to dam up. "கீழ்மடைகள் சிக்கெனச் சிறைத்து" (தணிகைப்பு. திருநா. 91).

[இறு → சிறு → சிறை-,]

**சிறை²-த்தல்** *śiṟai-*, 4 செ.குன்றாவி. (v.t.) சுழல விழித்தல்; to see rolling one's eyes. "சிதரரி மழைக்கணுஞ் சிறைக்கும்" (நீலகேசி, 72).

**சிறை³-தல்** *śiṟai-*, 2 செ.குவி. (v.i.) நிறங்கெடுதல்; to turn pale, lose colour. "பொருமுரண் சீறச் சிறைந்து" (கலித். 91).

ம. சிறயுக

[சிதை → சிறை-,]

**சிறை⁴** *śiṟai*, பெ. (n.) 1. காவல்; guard, watch. "வீங்குசிறை வியலருப்பம்" (புறநா. 17: 28). 2. அரண், காப்பு; defence. 3. காவலில் அடைக்கை; confinement, restraint. 4. சிறைப் படுத்துகை; incarceration. "உன் சிறை விடுக்கற் பாலார் யாருளர்" (கம்பரா. மாயாசன. 38). 5. சிறைச்சாலை; prison, jail. "சிறையிற் போகென்று" (திருவாலவா.33: 8). 6. அடிமைத் தனம் (வின்.); captivity, slavery. 7. அடிமையாள்; captive, slave. 'அவன் சிறை கொள்ள வந்தான்' (உ.வ.). 8. பெண்டாகச் சிறைப் பிடிக்கப்பட்ட இளம் பெண் (உ.வ.); young woman taken captive to marry or to keep. 9. சிறைகொள்ளத்தக்கவள் (இ.வ.); beautiful young woman worth taking captive.

க., பட. செறெ; தெ. செர; ம. சிற

[இறு → சிறு → சிறை]

**சிறை⁵** *śiṟai*, பெ. (n.) 1. அணை; dam, bank. "சிறையு முண்டோ செழும்புனன் மிக்குழி" (மணிமே. 5: 19). 2. நீர்நிலை (பிங்.); tank. "வான் சிறை மதகுகள்" (கம்பரா. அகலிகை. 64). 3. இடம் (பிங்.); place, location. 4. பக்கம்; side of a street. "மறுகுசிறை" (பதிற்றுப். 29: 9). 5. கரை; bank, shore. "உறைசிறை வேதியர்" (பரிபா. 11:84). 6. கோட்டைமதில்; fort-wall. "சிறையை வளைத்திடு தெண்ணீரே" (இரகு. நகர. 12). 7. மதிற்சுற்று; surrounding wall of a city. 8. வரம்பு; boundary. "சாலி நெல்லின் சிறை கொள்வேலி" (பொருந. 246).

ம. சிற, செறு; க., பட. கெரெ; தெ. செறுவு; து. கெறெ, கிறெ; குட. கெரெ; கோத. கெரீ; துட. கெர்வ்; கொலா., பர். சொறு

[இறு → சிறு → சிறை]

**சிறை⁶** *śiṟai*, பெ. (n.) 1. இறகு; wing, feather. "திருந்துசிறை வளைவாய்ப் பருந்து" (புறநா. 3: 22). 2. ஒலியெழாமல் தடைப்படுத்தி வைக்கும் யாழ்நரம்புக் குற்றம் (பதிற்றுப். 43: 21, உரை.); flaw of tonelessness in a lute string.

ம. இறகு, கொ, ரெக; க. எறகெ; து. றெங்கெ. தெ. எறகு, ரெக்கு; கொலா. ரெடப, ரெப்பா; கோண்ட். றெக்க

[இற(கு) → சிதை → சிறை]

**சிறை⁷** *śiṟai-*, பெ. (n.) பாத்தி; parterre in a field. "ஓங்கு மணற் சிறுசிறை" (குறுந். 149).

[இறு → சிறு → சிறை]

**சிறைக்கணி-த்தல்** *śiṟai-k-kaṇi-*, 4 செ.குன்றாவி. (v.t.) புறக்கணித்தல்; to ignore, neglect. "அருள் செய்திட லன்றியே சிறைக்கணித்தனை" (கந்தபு. வள்ளி. 86).

[சிற → சிறை + கணி-,]

**சிறைக்களம்** *śiṟai-k-kaḷam*, பெ. (n.) சிறைக் கூடம்; prison-house. "வெய்ய சிறைக்களத்துச் சென்றனனே" (கந்தபு. மீட்சி. 4).

[சிறை + களம். கள் → களம் = இடம், அறை, கூடம்]

**சிறைக்காடு** *śiṟai-k-kāḍu*, பெ. (n.) அரசிற்குரிய காவலுள்ள காடு (எங்களூர்.174); reserved forest.

[சிறை + காடு. கடு → காடு]

**சிறைக்காவல்** *śiṟai-k-kāval*, பெ. (n.) நிறை காவலுக்கெதிராயமைந்த சிறையிலிட்டுக் காக்குங் காப்பு (இறை. 29, பக். 134); physical restraint, confinement, opp. to niṟai-kāval.

[சிறை + காவல்]

**சிறைக்கூடம்** *śiṟai-k-kūḍam*, பெ. (n.) காவற்கூடம் (இ.வ.); place of captivity, prison-house.

ம. சிறகூடம், சிறைகூடம்; க. செறெமனெ

[சிறை + கூடம்]

**சிறைக்கோட்டம்** *šiṟai-k-kōṭṭam,* பெ. (n.) *சிறைக்கூடம் பார்க்க;* see *šiṟai-k-kūḍam* . "சிறைக் கோட்டம் விருப்பொடும் புகுந்து" *(மணிமே. 19: 49).*

ம. சிறைக்கோட்டம்

*[சிறை + கோட்டம். கோட்டம் = வளைவு, வளைந்த மதில்; வளைந்த மதிலையுடைய சிறைக்கூடம்.]*

**சிறைகொள்(ளு)-தல்** *šiṟai-koḷḷu-,* 13 செ.குன்றாவி. (v.t.) *காவற்கூடத்து அடைத்தற்பொருட்டுப் பிடித்துப்போதல்;* to take captive. "பெருந்திறல் வேந்தனெம் பெருமாற் சிறைகொள" *(பெருங். இலாவாண. 1: 51).*

க. சொறெகொள்

*[சிறை + கொள்-,]*

**சிறைச்சாலை** *šiṟai-c-cālai,* பெ. (n.) *சிறைக் கூடம் (உ.வ.) பார்க்க;* see *šiṟai-k-kūḍam.*

க. செறெசாலெ, செறெமனெ, படை. செரெமனெ

*[சிறை + சாலை]*

**சிறைச்சோறு** *šiṟai-c-cōṟu,* பெ. (n.) 1. *முப்பத்திரண்டு வாழ்வியல் அறங்களுள் சிறைப்பட்டார்க்கு உணவளிக்கும் செயல் (திவா.);* distributing food to prisoners, a form of charity, one of muppattiranḍaṟam. 2. *சிறையிலிருப்பவருக்குக் கிடைக்கும் சோறு;* prisoner's food.

*[சிறை + சோறு]*

**சிறைசெய்-தல்** *šiṟai-šey-,* 1 செ.குன்றாவி. (v.t.) 1. *சிறையில்வைத்தல்;* to imprison, restrain. "ஆயிழை தன்னைச் சிறைசெய் கென்றலும்" *(மணிமே. பதி. 79 - 80).* 2. *நீரைக்கட்டுதல்;* to dam up, as water. "செம்புனலோ டுடார் மறுத்துஞ் சிறை செய்வர்" *(நாலடி., 222).*

க. செறெகாகு

*[சிறை + செய்-,]*

**சிறைசெல்(லு)-தல்** *šiṟai-šel,* செ.குன்றாவி. (v.i.) *சிறையில் அடையடுதல்;* to be enclosed, to grow captive, to be made prisoner, to get into prison.

க. செறெயாகு

*[சிறை + செல்-,]*

**சிறைத்திமிங்கிலம்** *šiṟai-t-timiṅgilam,* பெ. (n.) *திமிங்கிலவகை;* whale.

*[சிறை + திமிங்கிலம்]*

**சிறைத்தீர்வை** *šiṟai-t-tīrvai,* பெ. (n.) *அடிமை வரி (இராட்.);* tax on slaves.

*[சிறை + தீர்வை]*

**சிறைநோய்** *šiṟai-nōy,* பெ. (n.) *சிறைத்துன்பம்;* miseries of imprisonment. "செறிந்த சிறைநோய் தீர்க்கென் றிறைசொல" *(மணிமே. 23 : 34).*

*[சிறை + நோய்]*

**சிறைப்படு-தல்** *šiṟai-p-paḍu-,* 20 செ.குவி. (v.i.) 1. *சிறையில் அடைபடுதல்;* to be imprisoned; to be impounded, as stray cattle. 2. *அகப்படுதல்;* to be enslaved; taken captive, to be ensnared, encaged, as birds or animals. 3. *மறக்கப்படுதல் (யாழ்ப்.);* to be mislaid, to be forgotten.

க. செறெயாகு

*[சிறை + படு. 'படு' து. வி.]*

**சிறைப்பள்ளி** *šiṟai-p-paḷḷi,* பெ. (n.) *சிறைக் கூடம் பார்க்க;* see *šiṟai-k-kūḍam.* "வெஞ்சிறைப் பள்ளியாக" *(சீவக. 1538).*

*[சிறை + பள்ளி]*

**சிறைப்பாடு** *šiṟai-p-pāḍu,* பெ. (n.) 1. *பக்கம்;* side. "ஒரு சிறைப்பாடு சென்றணைதலும்" *(மணிமே. 23: 50).* 2. *சிறை (யாழ்ப்.);* captivity. 3. *தடை (யாழ்ப்.);* restraint hindrance. 4. *தவறி விழுந்த இடத்திற் பண்டங்கிடக்கை (யாழ்ப்.);* being dropped on the ground and lying untouched, as a thing lost.

*[சிறை + பாடு]*

**சிறைப்புறம்** *šiṟai-p-puṟam,* பெ. (n.) 1. *ஒதுக்கிடம்;* secret place . "ஒற்றிற் றெரியா சிறைப்புறத்து" *(நீதிநெறி. 32).* 2. *தோழி தலைவியர்க்குள் நிகழும் செய்திகளைத் தலைவன் மறைந்தறிதற்கு ஏதுவாகக் காவல் மனைப் புறத்தமைந்த இடம் (தொல். பொருள். 114, உரை.);* (akap) a hedge- side near a mansion from which a lover can watch unseen what passes between his sweet heart and her maid. 3. *சிறைச்சாலை;* prison-cell. "சிறைப்புறங் காத்துச் செல்லு மதனனை" *(சீவக. 1142).*

*[சிறை + புறம்]*

**சிறைபிடி-த்தல்** *šiṟai-piḍi-*, 4 செ.குன்றாவி. (v.t.) 1. அடிமையாக்குதல் (வின்.); to take captive, enslave. 2. மனைவியாகவேனும், காமக் கிழத்தியாகவேனும், கொள்ளுமாறு பெண்ணைச் சிறைப்படுத்திக்கொண்டு போதல் (உ.வ.); to take a woman captive, for the purpose of marrying or keeping her.

க. கெறெபிடி, செறெவிடி

*[சிறை + பிடி-,]*

**சிறைமீள்[1](ளு)-தல்** *šiṟai-mīḷ(ḷu)-*, 16 செ.கு.வி. (v.i.) சிறைநீங்குதல்; to be freed from slavery; to be released from prison.

*[சிறை + மீள்-,]*

**சிறைமீள்[2]-தல்** (சிறைமீட்டல்) *šiṟai-mīḷ-*, 13 செ.குன்றாவி. (v.t.) சிறையிலிருந்து விடுவித்தல்; to rescue from slavery or captivity.

க. செறெபிடிசு

*[சிறை + மீள்-,]*

**சிறைமீட்டான்** *šiṟai-mīṭṭāṉ*, பெ. (n.) நெல் வகை; a kind of paddy. "கறுத்த நிறவாலன் சிறை மீட்டான் வளர்பூசைப் பாடிவெள்ளை" (நெல்விடு. 186).

*[சிறை + மீட்டான்]*

**சிறையா** *šiṟaiyā*, பெ. (n.) மூன்றடி வரை வளரக்கூடிய சாம்பல்நிறமுள்ள கடல்மீன் வகை; grey mullet, attaining 3 ft. in length.


சிறையா

**சிறையெடு-த்தல்** *šiṟai-y-eḍu-*, 4 செ.குன்றாவி. (v.t.). சிறைபிடி-2 பார்க்க; see *šiṟai-piḍi-2*.

*[சிறை + எடு-,]*

**சிறைவன்** *šiṟaivaṉ*, பெ. (n.) காவற்பட்டவன்; a captive, slave, prisoner. "தன்னைச் சிறைவனாச் செய்வானுந் தான்" (அறநெறி. 67).

*[சிறை → சிறைவன்]*

**சிறைவீடு** *šiṟai-vīḍu*, பெ. (n.) சிறையினின்று வெளிவிடுகை; release from prison. "சிறை வீடு செய்தலும்" (மணிமே. பதி. 80).

*[சிறை + வீடு. விடு → வீடு]*

**சின்[1]** *šiṉ*, பெ. (n.) சினம்; anger. "மறையவர் பால் சின்பற்றி யென்பயன்" (இரகசிய. 1379).

*[சினம் → சின்]*

**சின்[2]** *šiṉ*, இடை. (part.) ஓர் அசைச்சொல்; an expletive generally used in poetry. "காப்பும் பூண்டிசின்" (தொல். சொல். 277).

**சின்சாசங்குமாத்திரை** *šiṉšā-šaṅgu-māttirai*, பெ. (n.) வயிற்றிலேற்படும் அனைத்து வகையான வலியினையும் போக்கும் ஆயுள் வேத மருந்து மாத்திரை; an Ayulvedic medicine in the form of pill given for all sorts of pain in the body and stomach disorders (சா.அக.).

**சின்மதி** *šiṉ-madi*, பெ. (n.) சிற்றறிவு; poor understanding. "பெரிய பேதைமைச் சின்மதிப் பெண்மையால்" (கம்பரா. சூளா. 12).

*[சில் → சின். சின் + மதி]*

**சின்மயம்** *šiṉmayam*, பெ. (n.) அறிவுக்கடல்; embodiment of pure intelligence. "சின்மய வுள்ளொளியே" (பிரபோத. 1, 2).

*[சித்து → சின் + மயம்]*

**சின்மயன்** *šiṉmayaṉ*, பெ. (n.) தூயவறிவுப் பிழம்பான ஆதன் அல்லது இறைவன்; individual soul or god, as pure intelligence. "மலின மறு சின்மயன்" (கைவல். சந். 120).

*[சின்மயம் → சின்மயன்]*

**சின்முத்திரை** *šiṉ-muttirai*, பெ. (n.) அறவுரைக் குறியாகச் சுட்டுவிரல் நுனியைப் பெருவிரல் நுனியுடன் சேர்த்துக் காட்டும் அறிவு முத்திரை; hand-pose assumed by a guru while giving spiritual instruction. "மோன ஞானமமைத்த சின்முத்திரைக்கடலே" (தாயு. பன்மாலை. 1.)

*[சித்து → சின் + முத்திரை]*




**சின்மை** *šinmai,* பெ. (n.) 1. எண்ணிக்கையின் சிறுமை; smallness, fewness. "எழுத்தின் சின்மை மூன்றே" (தொல். பொருள். 358). 2. இழிவு (சிலப். 10: 130, உரை.); coarseness, vulgarity, as of language. 3. குரலின் மென்மை; softness, lowness, as of voice. "சின்மொழி நோயோ" (திவ். இயற். திருவிருத். 20).

[சில் → சின் → சின்மை]

**சின்ன**[1] *šinna* பெ. எ. (adj.) 1. சிறிய; small, little. "சின்னத் துணி" (சீவக. 2929). 2. இழிந்த; mean, low. சின்ன மனிதன். 3. தாழ்ந்த; inferior. சின்ன பயல், சின்னக்குலம் 4. இளைய; young. 'என் சின்னத்தம்பி'.

[சின் → சின்ன]

**சின்ன**[2] *šinna,* பெ. (n.) பூண்டின் முதற்பெயர்; plant first term often indicating the size of the plant, or of its leaves, flowers or fruits.

ம. சின்ன

**சின்னக்கரடி** *šinna-k-karaḍi,* பெ. (n.) விண்மீன் தொகுதி (புதுவை.); the constellation Little Bear.

[சின்ன + கரடி]

**சின்னக்காசு** *šinna-k-kāšu,* பெ. (n.) 1/5 காசு மதிப்புள்ள பழைய சிறிய காசு (நாணய) வகை (M.M.); an ancient small coin = 1/5 pie.

[சில் → சின் → சின்ன + காசு]

**சின்னக்குடல்** *šinna-k-kuḍal* பெ. (n.) சிறுகுடல் பார்க்க; see *širu-kuḍal.*

[சின்ன + குடல். குழல் → குடல் = குழல் போன்ற உறுப்பு]

**சின்னக்குத்துழுவன்** *šinna-k-kuttuḻuvan,* பெ. (n.) சிற்றுருவமுடையதும் அலகடியில் முள்போன்ற மயிர்க் கொத்துடையதும் பச்சை நிறமுடையதுமான பறவைவகை; the small green barbet (சேரநா.).

**சின்னக்குள்ளக்கெண்டை** *šinna-k-kuḷḷa-k-keṇḍai,* பெ. (n.) கெண்டை மீன்வகையு ளொன்று; barbus vittatus.

[சின்ன + குள்ளக்கெண்டை]

**சின்னக்குறிஞ்சி** *šinna-k-kuriñji,* பெ. (n.) குறிஞ்சி (L.); a species of conehead.

[சின்ன + குறிஞ்சி]

**சின்னக்கூனி** *šinna-k-kūni,* பெ. (n.) சிறிய இறால் வகை; a kind of fish, *šenna-k-kunni.*

**சின்னக்கொக்கு** *šinna-k-kokku,* பெ. (n.) காளையின் கதறலைப் போன்ற ஒலியெழுப்பும் நாரையினப் பறவை வகை; the Indian little green bittern (சேரநா.).

ம. சின்னக்கொக்கு

[சின்ன + கொக்கு. கொள் → (கொட்கு) → கொக்கு = வளைந்த கழுத்துள்ள பறவையினம்]

**சின்னக்கொடுக்கன்** *šinna-k-koḍukkan,* பெ. (n.) நச்சுப் பூச்சி வகையுளொன்று; a kind of poisonous insect.

[சின்ன + கொடுக்கன்]

**சின்னக்கொழுஞ்சி** *šinna-k-koḻuñji,* பெ. (n.) சீனக் கொழுஞ்சி; Triphasier trifoliata.

**சின்னகை** *šinnagai* பெ. (n.) புன்னகை; smile, "முளையேர் முறுவன் முகிழ்த்த சின்னகை" (பெருங். மகத. 6:49).

[சில் + நகை]

**சின்னச்சக்கரம்** *šinna-c-cakkaram,* பெ. (n.) பழைய திருவிதாங்கூர் அரசாட்சியில் புழக்கத்திலிருந்த காசு வகை; a coin prevalent in old Tiruvidāngūr (T.S.M. (vel) iv. 264) (சேரநா.).

[சின்ன + சக்கரம்]

**சின்னச்சம்பா** *šinna-c-cambā,* பெ. (n.) நாலுமாதத்திற் பயிராகும் சம்பா நெல்வகை; a variety of *šambā* maturing in four months.

[சின்ன + சம்பா]

**சின்னச்சலவாதை** *šinna-c-cala-vādai*, பெ. (n.) சிறுநீர்விடுகை (இழி.வ.); urination.

*[சின்ன + சலம் + உபாதை → வாதை]*

**சின்னச்சாதி** *šinna-c-cādi*, பெ. (n.) கீழ்க்குலம்; low caste. 'சொன்னபடி கேட்பானா சின்னச்சாதி பயல்?' (உ. வ.).

*[சின்ன + சாதி]*

Skt. jāti → த. சாதி

**சின்னச்சிலப்பன்** *šinna-c-cilappan*, பெ. (n.) நீண்ட கால்களையுடைய இன்னிசைப் பறவை வகை; a kind of bird babbler (சேரநா.).

**சின்னச்சலபாதை** *šinna-c-cala-pādai*, பெ. (n.) சின்னச்சலவாதை பார்க்க; see *šinna-c-cala-vādai* (சா.அக.).

*[சின்னசலம் + உபாதை → பாதை]*

**சின்னசிற்கருகு** *šinna-šiṛkarugu*, பெ. (n.) வெள்ளாடு; goat (சா.அக.).

**சின்னஞ்சிறிய** *šinnañ-šiṛiya*, பெ.எ. (adj.) பென்னம்பெரிய என்னுஞ்சொல்லின் எதிர் மறைச் சொல், மிகச்சிறிய; very small, opp. to pennam periya. "சின்னஞ்சிறிய மருங்கினிற் சாத்திய செய்யபட்டும்" (அபிரா. 53).

மறுவ. சின்னஞ்சிறு.

*[சின்னம் + சிறிய]*

**சின்னஞ்சிறு** *šinnañšiṛu*, பெ.எ. (adj.) சின்னஞ் சிறிய பார்க்க; see *šinnañjiṛiya*.

*[சின்ன + சிறு]*

**சின்னட்டி**[1] *šinnaṭṭi*, பெ. (n.) 1. சின்னது (யாழ்ப்.); little thing. 2. பூடுவகை; a kind of small herb.

*[சின்ன → சின்னட்டி]*

**சின்னட்டி**[2] *šinnaṭṭi*, பெ. (n.) நெல்வகை; a kind of paddy. "சின்னட்டி பொன்னாயன்" (பறாளை. பள்ளு. 23).

*[சின் → சின்னட்டி]*

**சின்னத்தட்டு** *šinna-t-taṭṭu*, பெ. (n.) பொற் கொல்லர் துலை (தராசு)த்தட்டு (திவா. 7: 223); scale-pan used by goldsmiths.

*[சின்ன + தட்டு]*

**சின்னத்தனம்** *šinna-t-tanam*, பெ. (n.) 1. சின்மை; meanness, petty-mindedness. 2. சிறுபிள்ளைத் தனம் (இ.வ.); childishness.

தெ. சின்னத்தன

*[சில் → சின் → சின்னம் + தனம்]*

**சின்னத்தானம்** *šinna-t-tānam*, பெ. (n.) ஒரு வகை மீன்; a kind of fish. "சின்னத்தானங் கறுத்த கெளிற்று மீன்" (பறாளை. பள்ளு. 16).

*[சின்ன + தானம்]*

**சின்னத்தும்பி** *šinna-t-tumbi*, பெ. (n.) பழுப்பு நிறமுள்ள கடல்மீன் வகை; a marine fish, brown.

*[சின்ன + தும்பி]*




**சின்னது** *šinnadu*, பெ. (n.) சிறியது; little child, animal or thing.

பட. குன்னது

*[சில் → சின் → சின்னது]*

**சின்னநண்டு** *šinna-naṇḍu*, பெ. (n.) 1. சிறிய நண்டு; small crab. 2. தேள்; scorpion.

*[சின்ன + நண்டு]*

**சின்னப்பட்டம்** *šinna-p-paṭṭam*, பெ. (n.) பெரிய மடத்துத் தலைவர்க்கு அடுத்தபடியான மடத்துத் தலைவர்; person who is second in authority and is the successor - designate of the head of a mutt.

மறுவ. இளைய பட்டம்

*[சின்ன + பட்டம்]*

பட்டுதல் = தட்டுதல், அடித்தல். பட்டு → பட்டம் = பட்டையான பொருள், துணி, பெயரும் பதவியும் பொறித்து அரசன் நெற்றியிலணியும் தகடு, பதவிப் பெயர். மடத்

தலைவருக்குப்பின், பதவிமாற்றம் சிக்கல் இல்லாமல் நடைபெறுவதற்கும் தலைவருக்கு உதவுவதற்கும், தலைவருக்கு அடுத்து அப் பதவி வரவிருப்பவரை அணியமாக்குவதற்கும், கட்டப்படுவது சின்னப்பட்டம். 'சின்ன' என்னும் அடை இளமைப்பொருளைக் குறிக்கும்.

**சின்னப்படி** *śiṉṉa-p-paḍi,* பெ. (n.) *அரைப்படி;* half of a standard measure.

*[சின்ன + படி]*

**சின்னப்படு[1]-தல்** *śiṉṉa-p-paḍu-, 20* செ.கு.வி. (v.i.) *1. உடைபடுதல்;* to be broken, discomfited. *2. ஊனப்படுதல்;* to be wounded, maimed, mutilated. *3. சிதைவடைதல் (வின்.);* to be injured, as fruit; to be deflowered, as a woman.

*[சின்னம் + படு. 'படு' து.வி.]*

**சின்னப்படு[2]-தல்** *śiṉṉa-p-paḍu-, 20* செ.கு.வி. (v.i.) *இகழ்ச்சிப்படுதல்;* to be derided, disgraced. *'அந்தச் செயலைச் செய்ததால் சின்னப்பட்டுச் சீரழிந்து போனான்' (உ. வ.).*

*[சின்னம் + படு-,]*

**சின்னப்பணம்[1]** *śiṉṉa-p-paṇam,* பெ. (n.) *1. அரைப்பணம் அல்லது ஒன்றே காலணா மதிப்புள்ள பழையகாலத்துக் காசு;* an ancient coin equivalent to fifteen paise. *2. பழைய திருவிதாங்கூர் அரசாட்சியில் புழக்கத்திலிருந்த காசுவகை;* a coin prevalent in old Tiruvitāṅgūr *(சேரநா.).*

ம. சின்னப் ப்ணம்; க. சிக்ககண

*[சின்ன = சிறிய, குறைந்த, மிகக் குறைவான. சின்ன + பணம்]*

**சின்னப்பயல்** *śiṉṉa-p-payal,* பெ. (n.) *1. சிறு பையன்;* little fellow. *"காந்திமதி நாதனைப்பார் அதிசின்னப்பயல்" (பாரதியார்). 2. கீழ்மகன்; இழி குணத்தன்;* mean, petty-minded fellow.

*[சின்ன + பயல்]*

**சின்னப்பாகல்** *śiṉṉa-p-pāgal,* பெ. (n.) *மிதிபாகல்;* balsam apple, climber.

*[சின்ன + பாகல்]*

**சின்னப்பிசானம்** *śiṉṉa-p-piśāṉam,* பெ. (n.) *நெல்வகை (விவசா.1.);* a kind of paddy.

*[சின்ன + பிசானம்]*

**சின்னப்புடையன்** *śiṉṉa-p-puḍaiyaṉ,* பெ. (n.) *புடையன்பாம்பு வகையுளொன்று;* a kind small wart snake.

*[சின்ன = சிறிய. சின்ன + புடையன்]*

**சின்னப்புத்தி** *śiṉṉa-p-putti,* பெ. (n.) *1. சிற்றறிவு;* meanness, low-mindedness. *2. பிள்ளைப்புத்தி;* shallow wit.

*[சின்ன + புத்தி]*

Skt. buddhi → த. புத்தி

**சின்னப்பூ[1]** *śiṉṉa-p-pū,* பெ. (n.) *நூறு, தொண்ணூறு, எழுபது, ஐம்பது, முப்பது இவற்றுள் ஒரெண்கொண்ட நேரிசை வெண்பாக்களால், அரசனின் பத்து உறுப்புகளையும் சிறப்பித்துப் புகழ்ந்து கூறும், சிற்றிலக்கிய வகை* (இலக். வி. 846); poem celebrating the taśāṅgam of a king in 100, 90, 70, 50 or 30 nēriśai-veṇbā verses.

*[சின்ன + பூ]*

மன்னர்தம் சின்னங்களின் சிறப்பெல்லாம் தோன்றக்கூறுவதனால் 'சின்னப்பூ' என்ற பெயராயிற்று என்பர் அறிஞர் மு.அருணாசலம். தமிழிலக்கிய பரப்பினுள் தத்துவராயர் செய்த 'சின்னப்பூ வெண்பா' என்ற நூல் தவிர இப்பெயர் கொண்ட வேறு சிற்றிலக்கியம் ஏதும் காண்பதற்கில்லை.

**சின்னப்பூ[2]** *śiṉṉa-p-pū,* பெ. (n.) *1. விடுபூ;* loose, untied flowers. *"சின்னப்பூ வணிந்த குஞ்சி" (சீவக. 2251). 2. சின்னம்[3],-5 பார்க்க;* see *śiṉṉam[3],-5.*

*[சின்னம் + பூ]*

**சின்னப்பூக்கொட்டைக்கரந்தை** *śiṉṉa-p-pū-k-koṭṭai-k-karandai,* பெ. (n.) *பெண்களின் மாதவிடாய்த் தொல்லையைப் போக்கி, நோயெதிர்ப்பு ஆற்றலை அளிக்கும் மாசிப்பத்திரி;* Madras absinth, Madras wormwood. It cures obstructed menses and hysteria. It is used as antiseptic *(சா.அக.).*

*[சின்னபூக் + கொட்டை + கரந்தை]*

**சின்னபின்னம்** *śiṉṉa-piṉṉam,* பெ. (n.) *1. கண்டதுண்டம் (திவா.);* mangled, hacked pieces. *"தோளுந் தாளுஞ் சின்னபின்னங்கள் செய்தவதனை" (கம்பரா. நிந்தனை. 57). 2. கணக்கதிகாரத்திற் கூறப்படும் மிகமிகச்*

சிறிய கடைக்கோடிக் கீழ்வாய் அளவு = 1/3, 22,56,000; the smallest fraction as mathematics prevalent in Tamilnāḍu as per the book Kaṇakkadikāram.

தமிழகத்தில் வழங்கிய கீழ்வாய் இலக்க வாய்பாடு.

முந்திரி = 1/320

கீழ் முந்திரி = 1/320 X 1/320

10 சின்னம் = ஒரு நுண்மை முந்திரி

10½ இம்மி முந்திரி = ஒரு கீழ் முந்திரி

ஒரு சின்னம் = 1/3,25,56,000

ஒரு நுண்மை முந்திரி = 1/32,25,600

ஒரு இம்மி முந்திரி = 1/10,75,200

இது 1/10,00,000 அளவுக்குச் சமம்.

இங்கிருந்து ஒரு இம்மியளவு கூட எடுத்துச் செல்ல இயலாது, என்பது உலகவழக்கு.

[சின்னம் + பின்னம்]

**சின்னம்**[1] *šinnam*, பெ. (n.) 1. புன்மை (அற்பம்); smallness. 2. நுண்மை; minuteness. "சின்னமானுஞ் சின்னவுற்பவம்" (ஞானா. 59: 16). 3. சிறியது (யாழ்ப்.); anything small. 4. முறம் (பிங்.); winnowing fan. 5. மழைத்தூறல் (அகநி.); drizzling. 6. இகழ்ச்சி (இ.வ.); derision, slight.

[சில் → சின் → சின்னம்]

**சின்னம்**[2] *šinnam*, பெ. (n.) 1. அடையாளம் (பிங்.); sign, insignia. 2. குறி; mark, token. 3. பெண்குறி (பிங்.); pudendum mulibre. 4. காளம்; a kind of trumpet. "சின்னங்கள் கேட்பச் சிவனென்றே வாய் திறப்பாய்" (திருவாச. 7: 7).

L. signum; E. assign

[சில் → சின் → சின்னம் = சிறியது]

**சின்னம்**[3] *šinnam*, பெ. (n.) 1. துண்டு; piece. "வாளி ... சின்னமாக வீர்ந்திட" (திருவாலவா. 36:8). 2. முறிவுற்றது; anything broken. "கார்முகஞ் சின்னமென்றும்" (கம்பரா. கரன். 177). 3. பொடி (பிங்.); powder, pollen. "சின்னப்படுங் குவளை" (திருக்கோ. 334). 4. சின்னப்பூ[2], 1 பார்க்க; see *šinnappū*[2], 1. "நனை சின்னமு நீத்த நல்லார்" (கம்பரா. பூக்கொய். 12). 5. கிள்ளுப்பூ; petal - pieces of flowers. "நன்னுதலப்புஞ் சின்னம்" (கம்பரா. வனம். 14). 6. காசு; coin, as a piece of metal. "நாலு சின்னங் கைப்பட்ட வாறே" (ஈடு, 4. 9: 2). 7. போர்க்களம் புகுங்கால் வீரர்கள், தம் வாயிலிட்டுக் கொள்ளும் பொற்றகடு (சீவக. 2303, உரை.); gold piece put by a warrior into his mouth when starting for battle.

ம. சின்னம்; க. சின்னெ

[சில் → சின் → சின்னம்]

Skt. chinnam

**சின்னம்**[4] *šinnam*, பெ. (n.) சீந்தில்; gulancha. "சின்னமானுஞ் சின்னவுற்பவம்" (ஞானா. 59: 16).

**சின்னம்**[5] *šinnam*, பெ. (n.) சில்வானம்; odd. "முந்நூற்றுச் சின்னம் நாள்" (தெ. கல். தொ. 4, எண். 140).

[சில் → சின் → சின்னம்]

**சின்னம்**[6] *šinnam*, பெ. (n.) பயன்பாடற்றது, பழுதுற்றது; being worn out or decayed. "சின்னச்சீரை துன்னற் கோவணம்" (பதினொ. திருவிடை. மும். 7).

Pali. jinno; Skt. Jirṇa.

**சின்னம்படு-தல்** *šinnam-paḍu-*, 20 செ.குவி. (v.i.) சின்னப்படு[2] பார்க்க; see *šinna-p-paḍu*[2]-. "சின்னம்பட வருத்தஞ் செய்தாலும்" (நீதிவெண். 64).

[சின்னம்[1] + படு-,]

**சின்னம்மா** *šinnammā*, பெ. (n.) சின்னம்மாள் பார்க்க; see *šinnammāḷ*.

[சின்னம்மாள் - சின்னம்மா]

**சின்னம்மாள்** *šinnammāḷ*, பெ. (n.) சிறியதாய்; mother's younger sister; wife of father's younger brother. 2. திருமகள் (இ.வ.); Goddess of Wealth.

ம. சின்னம்ம

[சின்ன + அம்மாள்]

**சின்னம்மை**[1] *šinnammai*, பெ. (n.) சின்னம்மாள்[1] பார்க்க; see *šinnammāḷ*[1].

[சின்ன = சிறிய. அம்மை = அம்மா. சின்ன + அம்மை]

**சின்னம்மை**[2] *šinnammai*, பெ. (n.) அம்மை நோய் வகை; chicken - pox.

[சின்ன + அம்மை]

**சின்னமரம்** *šiṉṉa-maram,* பெ. (n.) பெரிய கட்டுமரத்திற்குத் துணையாகப் போகுஞ் சிறிய கட்டுமரம்; small cattamaram.

*[சின்ன + மரம்]*

**சின்னமலர்** *šiṉṉa-malar,* பெ. (n.) 1. சின்னப்பூ², 1 பார்க்க; see *šiṉṉappu², l.* "சின்னமலர்க் கோதை" (சீவக. 2369).

*[சின்ன + மலர்]*

**சின்னமனிதன்** *šiṉṉa-maṉidaṉ,* பெ. (n.) இழிகுணமுள்ளவன்; man of low character, small man.

*[சின்ன + மனிதன்]*

**சின்னமாவிலங்கம்** *šiṉṉa-māvilaṅgam,* பெ. (n.) காட்டுமாவிலங்கம்; round berried lingam tree.

*[சின்ன = சிறிய. சின்ன + மாவிலங்கம்]*

**சின்னமாவிலிங்கை** *šiṉṉa-māvilaṅgai,* பெ. (n.) மரவகை (L.); a species of garlic-pear.

*[சின்ன + மாவிலங்கை]*

**சின்னமுண்டி** *šiṉṉa-muṇḍi,* பெ. (n.) நாரையினப் பறவை; a kind of stork, little egret (சேரநா.)

**சின்னமுத்து** *šiṉṉa-muttu,* பெ. (n.) சின்னம்மை² (வின்.) பார்க்க; see *šiṉṉammai².*

*[சின்ன + முத்து]*

அம்மைநோய் கண்டவரின் உடம்பில், சிறு சிறு கொப்புளங்கள் உண்டாகும். அவை பார்ப்பதற்கு முத்துப் போன்றிருக்கும். அம்மை நோயுற்றவரை, அவருக்கு 'முத்துப் போட்டுள்ளது' யாரும் அணுகவேண்டாம் எனும்வழக்கு இன்றுமுளது.

**சின்னமுள்ளங்கி** *šiṉṉa-muḷḷaṅgi,* பெ. (n.) சுவற்று முள்ளங்கி; blumea amplectens.

*[சின்ன + முள்ளங்கி]*

**சின்னமூங்கில்** *šiṉṉa-mūṅgil,* பெ. (n.) கெட்டி அல்லது கல் மூங்கில்; solid bamboo.

*[சின்ன + மூங்கில். சின்ன = குறைந்த, நெருங்கிய, அடர்த்தியான, கெட்டியான]*

**சின்னமூச்சு** *šiṉṉa-muccu,* பெ. (n.) வயிற்றுப் பிசம், சிறுநீர்ப்பை எரிச்சல் முதலியவற்றில் வலியுண்டாகிச் சிறிதளவாகப் பொறுத்துப் பொறுத்து மூச்சுவிடல்; short breath, due to some diseases of the abdomen like ascites, enlarged liver and spleen (சா.அக.).

*[சின்ன = சிறிய, குறைந்த, சின்ன + மூச்சு]*

**சின்னமூதி¹** *šiṉṉa-mūdi,* பெ. (n.) சின்னமூதிக் கொண்டு அரசாணையைப் படைக்குச் சாற்றுவோன் (சிலப். 8: 13, உரை); royal herald who proclaims by trumpet the king's commands to his army.

*[சின்னம்² + ஊதி]*

**சின்னமூதி²** *šiṉṉa-mūdi,* பெ. (n.) பீடையுடையவள் என வையுஞ்சொல் (நெல்லை.); abusive language.

*[சின்ன + மூதி. மூதேவி → மூதி]*

**சின்னமூளை** *šiṉṉa-mūḷai,* பெ. (n.) சிறுமூளை பார்க்க; see *šiṟu-mūḷai.*

*[சின்ன + மூளை]*

**சின்னமேளம்** *šiṉṉa-mēḷam,* பெ. (n.) தண்ணுமை (மத்தளம்), துருத்தி முதலிய இன்னியங்களுடன் ஆடல் மகளிர் பாடிக் கொண்டு ஆடுதற்குரிய சதிர் மேளம் (உ.வ.); nautch music, with the accompaniment of tabor, pipe and cymbals, dist. fr. periya-mēḷam.

*[சின்ன + மேளம்]*

**சின்னமேளமோகரா** *šiṉṉa-mēḷa-mōgarā,* பெ. (n.) திருநெல்வேலியில் வழங்கிய பொற்காசுவகை (M.M.); Thirunelvēli gold coin = 3 pagodas 34 fanams 7 cash.

*[சின்ன + மேளம் + மோகரா]*

U. mohur.

**சின்னய்யா** *šiṉṉayyā,* பெ. (n.) சின்னையா பார்க்க; see *šiṉṉaiyā* (சேரநா.).

*[சிற்றப்பா → சின்னய்யா]*

**சின்னராவுத்தன்வெட்டு** *šiṉṉa-rāvuttaṉ-veṭṭu,* பெ. (n.) பழைய காசுவகை (பணவிடு. 144); an ancient coin.

*[சின்னராவுத்தன் + வெட்டு]*

**சின்னல்** *šinnal*, பெ. (n.) பகட்டு (வின்.); foppery, extravagance.

தெ. சின்னெலு

**சின்னவல்லூறு** *šinna-vallūṟu*, பெ. (n.) அரசாளிப் பருந்து; falcon.

*[சின்ன + வல்லூறு]*


சின்னவல்லூறு

**சின்னவிறால்** *šinna-viṟāl*, பெ. (n.) பொடிமீன் வகையுளொன்று; a kind of Viṟāl fish.

*[சின்ன + விறால். சின்ன = சிறிய]*

**சின்னவைசூரி** *šinna-vaišūri*, பெ. (n.) சின்னம்மை[2] பார்க்க; see *šinnammai*[2] (சா.அக.).

**சின்னறிதாரு** *šinnaṟi-dāru*, பெ. (n.) 1. கணைத் தேவதாரு; prickly deodar, a variety of deodar. 2. காட்டுத்தேவதாரு; deccany deodar (சா.அக.).

**சின்னறு** *šinnaṟu*, பெ. (n.) கொடிச் சிணுங்கி; a sensitive creeper (சா.அக.).

**சின்னன்**[1] *šinnan*, பெ. (n.) 1. இளமையானவ-ன் -ள்-து; one who is young. 2. குள்ளமான வடிவுடையவன்; a dwarf, one who is of short stature (சேரநா.).

ம. சின்னன்; க. சிண்ண; தெ. சின்னவாடு; பிரா. சுனா (குழந்தை)

*[சில் → சின் → சின்ன → சின்னன்]*

**சின்னன்**[2] *šinnan*, பெ. (n.) சிறு குழந்தை, விலங்கு அல்லது பொருள் (யாழ்ப்.); little child, animal or thing.

க. சிந்ந

*[சில் → சின் → சின்ன → சின்னன்]*

**சின்னன்பின்னன்** *šinnan-pinnan*, பெ. (n.) சிறியதும் பெரியதும் (யாழ்.அக.); small as well as large.

*[சின்னன் + பின்னன்]*

**சின்னன்பேரி** *šinnan-bēri*, பெ. (n.) இன்னிசை பாடும் பறவை; a kind of bird (சேரநா.).

**சின்னாஞ்சான்** *šinnāñjāṉ*, பெ. (n.) கப்பற் கயிறு வகை; backstay rope.

*[சின்ன + ஆஞ்சான்]*

**சின்னாஞா** *šinnāñjā*, பெ. (n.) சிற்றப்பன் (இ.வ.); father's younger brother.

*[சின்ன + ஆஞா. ஆஞா = தந்தை]*

**சின்னாணி** *šinnāṇi*, பெ. (n.) சிறியது (இ.வ.); little thing, a term of endearment applied to little children.

*[சின் → சின்ன → சின்னான் → சின்னாணி]*

**சின்னாத்தாள்** *šinnāttāḷ*, பெ. (n.) சின்னம்மா பார்க்க; see *šinnamma*.

*[சின்ன + ஆத்தாள். ஆத்தாள் - அம்மா]*

**சின்னாந்திரம்** *šinnāndiram*, பெ. (n.) அறுபட்ட குடல்; bowels parted or separated by violence or force (சா.அக.).

**சின்னாபின்னம்** *šinnā-pinnam*, பெ. (n.) சின்னபின்னம், 1 பார்க்க; see *šinnapinnam*, 1.

*[சின்னம் + பின்னம்]*

**சின்னாயி** *šinnāyi*, பெ. (n.) சின்னம்மாள் பார்க்க; see *šinnammāḷ*.

ம. சின்னாய

*[சின்ன + (ஆய் →) ஆயி. ஆயி = அம்மா]*

**சின்னாரியம்** *šinnāriyam*, பெ. (n.) கேழ்வரகு வகை (M.M. 735); small rāgi.

*[சின்ன + ஆரியம். ஆரியம் = கேழ்வரகு]*
ஆரியம் பார்க்க

**சின்னாருகம்** *šinnārugam*, பெ. (n.) சீந்தில் (மலை.); gulancha.

**சின்னாருகை** *šinnārugai*, பெ. (n.) சின்னாருகம் பார்க்க; see *šinnārugam*. 2. மூலிகை வகை;

a kind of drug capable of turning sub-kingdom of minerals into a liquid oil (சா.அக.).

[சின்னாருகம் → சின்னாருகை]

**சின்னாருகைக்கியாழம்** *šinnārugai-k-kiyāḻam*, பெ. (n.) குட்டம், மூலம், உள்மூலம், இருமல் போன்ற கொடிய நோய்களுக்குக் கொடுக்கப்படும் கியாழம், கருக்குநீர்; šinnārugai-k-kiyāḻam is prescribed for leprosy, piles, fistula, consumption, urinary and venerul diseases (சா.அக.).

[சின்னாருகை + கியாழம்]

**சின்னாருதம்** *šinnārudam*, பெ. (n.) சின்னாருகை பார்க்க; see *šinnārugai* (சா.அக.).

**சின்னான்**[1] *šinnāṉ*, பெ. (n.) சிறியவன்; younger (சா.அக.).

[சில் → சின் → சின்னான் (மு.தா. 140)]

**சின்னான்**[2] *šinnāṉ*, பெ. (n.) சிறு கொண்டையோடு கூடிய கருந்தலையும் மணற்பழுப்பான செதிள் தோற்றமுமுடைய உடலும் கொண்டதும் மாந்தர் வாழ் விடங்களைச் சார்ந்து வாழ்வதுமான குருவி வகை; red vented bulbul.

[சின் → சின்னான்]

சின்னான் குருவிவகை
1. சாம்பல் தலைச் சின்னான்
2. கருங்கொண்டைச் சின்னான்
3. சிவப்பு மீசைச் சின்னான்
4. மஞ்சள் தொண்டைச் சின்னான்
5. வெண்புருவச் சின்னான்
6. மஞ்சள் புருவச் சின்னான்
7. கருஞ்சின்னான்

**சின்னி** *šinni*, பெ. (n.) 1. சிறியது; small child, little thing. 2. முகத்தலளவைக் கருவி; a small measure. 'இரண்டு சின்னிப் பூ' (நெல்லை.). 3. சின்னிபொம்மை பார்க்க; see *šinni-pommai*. 4. புரட்டுக்காரி (இ.வ.); tricky woman. 5. மருந்துச்செடி வகை (மூ.அ.); Indian shrubby copper leaf. 6. கிராம்பு (மலை.); cinnamon. 7. குன்றிமணி; crab's eye. 8. தண்டங்கிழங்குச் செடி வகை (வின்.); a bulbous plant.

ம. சின்னி; க. சிட்டி

[சல் → சில் = சிறியது, துண்டு. சில் → சின் → சின்னான் = சிறியவன். சில் → சின் → சின்னி = சிறியது, சிறிய முகத்தலளவை, குன்றிமணி, சிறுமதியுடைய புரட்டுக்காரி]

**சின்னிக்காய்** *šinni-k-kāy*, பெ. (n.) சீயக்காய்; soap-pod wattle (சேரநா.).

ம. சின்னிக்காய்

**சின்னிக்கிழங்கு** *šinni-k-kiḻaṅgu*, பெ. (n.) சிறு சின்னி மூலம்; the root of brich leaved acalypha (சா.அக.).

[சின்னி + கிழங்கு]

**சின்னிச்சாறு** *šinni-c-cāṟu*, பெ. (n.) 1. சிறு சின்னிச்சாறு; juice of the leaves of brich leaved acalypha. 2. சிறுநீர்; urine (சா.அக.).

[சின்னி + சாறு]

**சின்னிசன்னி** *šinni-šaṉṉi*, பெ. (n.) குன்றிச் செடி; crab's eye (சா.அக.).

[சின்னி + சன்னி]

**சின்னிபொம்மை** *šinni-pommai*, பெ. (n.) பின்னல் மயிருள்ள தலையும், மரத்தால் செய்யப்பட்ட கரங்களும், நீண்டு தொங்குஞ் சட்டையுங் கொண்டதாய், ஒரு சார் இரவலர் தம் மனம் போன போக்கில் தாளமிடும்படிச் செய்து, கையில் வைத்தாட்டும் ஒருவகைப் பொம்மை; small wooden doll carried by itinerant beggar-women, who make the doll dance and clap its hands to the accompaniment of music.

[சின்னி + பொம்மை]

**சின்னிமாமுனி** *šinni-māmuṉi*, பெ. (n.) சிருகுறுங்கை மூலிகைச்செடி; a variety of conehead plant (சா.அக.).

[சின்னி + மாமுனி]

**சின்னிமார்** *šinni-mār*, பெ. (n.) சிறுசின்னிச் செடி; a species of copper leaf (சா.அக.).

**சின்னியிலை** *šinni-y-ilai*, பெ. (n.) சிறுசின்னிக் கீரை (பதார்த்த. 536); a species of copper leaf.

[சின்னி + இலை]

## சின்னான் வகைகள்




கருஞ்சின்னான்


மஞ்சள் புருவச் சின்னான்


வெள்புருவச் சின்னான்


மஞ்சள் தொண்டைச் சின்னான்


சின்னான்


கருங்கொண்டைச் சின்னான்


சிவப்புமீசைச் சின்னான்


சாம்பல்தலைச் சின்னான்

**சின்னியுரு** *šinni-y-uru,* பெ. (n.) வெள்ளைக் குன்றி; white bead vine (சா.அக.).

*[சின்னி + உரு]*

**சின்னிவிரல்** *šinni-viral,* பெ. (n.) சுண்டுவிரல் (யாழ். அக.); little finger.

*[சின்னி + விரல்]*

**சின்னிவைப்புநஞ்சு** *šinni-vaippu-nañju,* பெ. (n.) வைப்புநஞ்சு வகையுளொன்று; a prepared arsenic (சா.அக.).

*[சின்னி + வைப்புநஞ்சு]*

**சின்னீர்** *šinnīr,* பெ. (n.) 1. கலங்கலான நீர் (சீவக. 2381, உரை.); muddy water. "துடியடிக் கயந்தலை வழக்கிய சின்னீரை" (கலித்.). 2. சிறுநீர் (வின்.); urine.

*[சில் + நீர். சில் = சிறிதளவு, சின்னது, குறைந்தது, கலங்கியது, இழிந்தது]*

**சின்னீரவின்பம்** *šinnīra-v-inbam,* பெ. (n.) 1. சிற்றின்பம்; carnal pleasure. 2. கலவியின்பம்; sexual pleasure (சா.அக.).

*[சின்னீரம் + இன்பம். சில் → சின்; நேரம் → நீரம்]*

**சின்னூல்** *šinnūl,* பெ. (n.) 1. சிறுநூல்; small treatise "சின்மையைச் சின்னூல் என்றது போல்" (பதிற்றுப். 76, உரை.). 2. நேமிநாதம்; a tamil grammar, Nēminadam. "சின்னூ லுரைத்த குணவீர பண்டிதன்" (தொண்டை. சத. 32).

*[சில் + நூல்]*

**சின்னெறி** *šin-neri,* பெ. (n.) கள்ளச்சிறுவழி; secret-passage. "திமிரம் போன சின்னெறி போலு மென்பார்" (பாரத. இந்திர. 31).

*[சில் + நெறி]*

**சின்னை** *šinnai,* பெ. (n.) பெரிய கடல்மீன் வகை; large sea-fish. "கடல் வழிச் சுறவு சின்னை" (கந்தபு. ஏம. 25).

**சின்னையா** *šinnaiyā,* பெ. (n.) 1. சிற்றப்பன்; father's younger brother; mother's younger sister's husband. 2. தலைவனின் மகன்; leader's son.

ம. சின்னய்ய

*[சின்ன + ஐயா]*

**சின்னோக்கு** *šinnōkku,* பெ. (n.) 1. சிறுபார்வை; glance. 2. அமைந்த பார்வை அல்லது கிட்டப் பார்வை; short sight.

*[சில் + நோக்கு]*

**சின்னோய்** *šinnōy,* பெ. (n.) 1. சிறு நோய்; minor complaints. 2. எளியநோய்; simple diseases without complication. 3. சிலநோய்; some diseases (சா.அக.).

*[சின் + நோய்]*

**சின[1]-த்தல்** *šina-,* 3 செ.குன்றாவி. (v.t.) வெகுண்டு கடிதல், சீற்றமுறுதல்; to be enraged, to be very angry.

ம. சினக்குக; க. கினிம்பு; தெ. கினுக; து. கெணகு

*[சில் → சின் → சின-,]*

**சின[2]-த்தல்** *šina-,* 3 செ.கு.வி. (v.i.) புண் முதலியன வீங்கிச் சிவத்தல் (இ.வ.); to become red with inflammation, as tumour.

சினம் = பொங்கு. புண் பொங்கிற்று எனும் வழக்குண்மை கொண்டு, இச்சொல் சில் → சின் → சின → சினம் எனவாகியிருத்தல் கூடும். சினத்தொடு எழுந்தவனைப் 'பொங்கி எழுந்தான்' என்றும், சீறிவரும் புனலைப் 'பொங்கிவரும் புதுப்புனல் என்றும், அலை ஆர்ப்பரிக்கும் கடலைப் 'பொங்குமாங்கடல்' என்றும் இருவகை வழக்கிலும் உரைத்தல் கொண்டு இதன் பொருளை உணரலாம்.

**சினக்கடம்** *šina-k-kadam,* பெ. (n.) வெண்கடுகு; white mustard (சா.அக.).

**சினக்குவாதம்** *šinakku-vādam,* பெ. (n.) தன் பற்களால், தன் உடலையே அடிக்கடி கடித்துக் கொள்ளச் செய்யும் குதிரை முடக்குநோய் வகை (அசுவசா. 69); a rheumatic disease of horse in which it often bites itself.

*[சிணுக்கு + வாதம்]*

சிணுக்கு = சிக்குப்படுத்துதல், உடன்படாத தன்மையையுணர்த்த, முகத்தைக் கோட்டுதல்.

நோயுற்ற குதிரை, தன்னுடலின் உடன் படாமையை, அதாவது இயல்பான நிலைக்கு மாறான நிலையை வெளிப்படுத்தும் போது நிகழும் நிகழ்வுகள் எனக்கொள்வது தகும்.

**சினக்கூவை** *šina-k-kūvai,* பெ. (n.) கூகை மஞ்சள்; violen arrow root (சா.அக.).

**சினக்கெளிறு** *šiṉa-k-keḷiṟu,* பெ. (n.) எண்விரல நீளமுள்ள கெளிற்றுமீன் வகையுளொன்று; fidler macrones, attaining 8 in. in length (சா.அக.).

*[சின்ன + கெளிறு = சின்னக் கெளிறு → சினக்கெளிறு]*

**சினச்சம்** *šiṉaccam,* பெ. (n.) முளை, கிளை; a sprout, branch (சேரநா.).

மறுவ. சினப்பம்

ம. சினச்சம்

**சினந்தவிர்ந்தோன்** *šiṉandavirndōṉ,* பெ. (n.) சீற்றங்கடந்தவன், புத்தன் (சூடா.); Buddha, as one devoid of anger.

*[சினம் + தவிர்ந்தோன்]*

**சினந்திட்டவிந்து** *šinandiṭṭa-vindu,* பெ. (n.) இதளியம்; mercury (சா.அக.).

**சினப்பம்** *šiṉappam,* பெ. (n.) சினச்சம் பார்க்க; see *šinaccam.*

ம. சினப்பம்

**சினப்பு**[1] *šiṉappu,* பெ. (n.) 1. சினம்,1 (வின்.) பார்க்க; see *šiṉam, l.* 2. புண் முதலியவற்றின் வீக்கம்; inflammed condition, as of tumour.

ம. சினப்பு

*[சின → சினப்பு]*

**சினப்பு**[2] *šiṉappu,* பெ. (n.) 1. சினைப்பு; prickly heat. 2. வேனற்கட்டி; rash.

*[சின → சினப்பு]*

**சினப்பு**[3] *šiṉappu,* பெ. (n.) முளை, இளமொட்டு, கிளை; a sprout, tender bud, branch (சேரநா.).

ம. சினப்பு

*[சினைப்பு → சினப்பு]*

**சினப்புக்கிள்ளு-தல்** *šiṉappu-k-kiḷḷu-,* 5 செ.குன்றாவி. (v.t.) வேர்க்குரு, பரு முதலியவற்றை நகத்தாற்கிள்ளுதல்; to press out matter from pimples etc., with the finger nails (சா.அக.).

*[சினப்பு + கிள்ளு-,]*

**சினப்புக்குத்து-தல்** *šiṉappu-k-kuttu-,* 5 செ.கு.வி (v.i.) 1. சிறுசிரங்கு குத்துதல்; to prick small cutaneous eruptions. 2. வீண்காலம் போக்குதல் (உ.வ.); to waste time, as in pricking pimples.

*[சினப்பு + குத்து-,]*

**சினப்புக்கொள்(ளு)-தல்** *šiṉappu-k-koḷḷu,* 16 செ.கு.வி. (v.i.) 1. கொப்பளித்தல்; to rise as boil. 2. விம்முதல்; to distend with matter such as pus etc. 3. சீழ்கொள்ளுதல்; to suppuruate (சா.அக.).

*[சினப்பு + கொள்(ளு)-,]*

**சினப்புண்** *šiṉa-p-puṇ,* பெ. (n.) அழற்புண்; சீழ்ப்புண்; inflamed ulcer.

*[சினம் + புண்]*

**சினம்**[1] *šiṉam,* பெ. (n.). 1. சீற்றம்; வெகுளி; anger, fury. 'சினத்தால் அறுத்த மூக்குச் சிரித்தால் வருமா' (பழ). "செறிதீ நெஞ்சத்துச் சினநீடினோரும்" (பரிபா. 5:73). 2. நெருப்பு; fire. "எரிசினந் தவழ்ந்த விருங்கடற்று" (அகநா.75). 3. போர் (திவா.); battle, war.

ம. சிநம்., சினப்பு; க. கிநிசு; தெ. கிநுக.

*[சுள் = சுடுதற்கருத்து வேர். சுள் → சிள் → சில் → சின் → சினம். (ஒ.மொ. 307)]*

சினம் நெருப்பையொத்த குணமாதலின், நெருப்பைக் குறிக்குஞ்சொல் சினத்தையுங் குறித்தது. எரிதல் என்னுஞ்சொல் சினத்தலைக் குறித்தலையும், 'சினமென்னும் சேர்ந்தாரைக் கொல்லி என்று திருவள்ளுவர் கூறியிருத்தலையும் நோக்குக (வே.க.214).

**சினம்**[2] *šiṉam,* பெ. (n.) 1. பரு; wart (சா.அக.).

**சினம்**[3] *šiṉam,* பெ. (n.) வெம்மை; heat. "சென்று சென்றிறைஞ்சிய சினந்தீர் மண்டிலம்" (பெருங். உஞ்சைக் 33:40).

*[சில் → சின் → சினம்]*

**சினம்கொள்(ளு)-தல்** *šiṉamkoḷ(ḷu),* 16 செ.குன்றாவி. (v.i.) சின[1]-த்தல் பார்க்க; see *šina-*

ம. சினகொள்ளுக

*[சினம் + கொள்-,]*

**சினம்பு** *šiṉambu,* பெ. (n.) மிகச்சிறிது; a little (சேரநா.).

*[சில் → சின் → சின்னம் → சினம்பு]*

**சினவர்** *šiṉavar,* பெ. (n.) சினவுநர் (வின்.); foe.

ம. சினவா

*[சினம் → சினவர்]*

**சினவரன்** *šiṉavaraṉ,* பெ. (n.) சினத்தை யடக்கியவன் (சிலப். 10: 180, உரை.); one who has subdued his anger.

*[சினம் → சினவரன்]*

**சினவல்** *šiṉaval,* பெ. (n.) போர் (சூடா.); battle.

*[சினவு → சினவல்]*

**சினவு-தல்** *šiṉavu-,* 5 செ.குன்றாவி. (v.i.) 1. சினத்தல், வெகுளுதல்; கடிதல்; to be angry, indignant. "நீங்கிச் சினவு வாய்மற்று' (கலித். 116). 2. வெஞ்சினத்தால் வீறுகொண்டெழுதல்; to rise in anger or fury. "இருளுமுண்டோ ஞாயிறு சினவின்" (புறநா. 90). 3. பொருதல் (ஆ.நி.); to fight, wage war.

ம. சினியுக; க. கினிசு; தெ. கினியு. துட. சினிம்

*[சின → சினவு]*

**சினவுநர்** *šiṉavunar,* பெ. (n.) 1. பகைவர்; enemies. 2. எதிரி; adversaries. "சினவுநர்ச் சாய்த்தவன்" (பெருங். மகத. 14:174).

ம. சினவர்

*[சினவு → சினவுநர்]*

**சினன்** *šiṉaṉ,* பெ. (n.) 1. அருகன்; Aruhaṉ. 2. புத்தன்; Buddhaṉ.

Skt. jina

**சினா**[1] *šiṉā,* பெ. (n.) 1. வட்டத்திருப்பி (வின்.); Indian pareira. 2. பங்கம்பாளை; worm-killer.

**சினா**[2] *šiṉā,* பெ. (n.). சாலாம்பிசின்; gum of common saul shorea robusta (சா.அக.).

**சினாசிகா** *šiṉāšigā,* பெ. (n.) மராமரம்; tree of trees (சா.அக.).

**சினாடி** *šiṉāḍi,* பெ. (n.) சினாடிகா பார்க்க; see *šiṉāḍigā.*

**சினாடிகா** *šiṉāḍigā,* பெ. (n.) மூக்கிரட்டை (யாழ்அக.); pointed - leaved hogweed.

Skt. dvināsikā

**சினாதாக்கு** *šiṉā-tākku,* பெ. (n.) சாதிக்காய்; nutmeg (சா.அக.).

**சினாது** *šiṉādu,* பெ. (n.) 1. மெலிந்தது; that which is emaciated. 2. மெலிவு; emaciation; leanness, as of body.

*[சின்னது → சினது → சினாது. ஒ.நோ. தன்னது → தனது → தனாது]*

**சினாயு** *šiṉāyu,* பெ. (n.) இழைநார்; fibrous tissue ligaments, tendons (சா.அக.).

**சினாவட்டம்** *šiṉā-vaṭṭam,* பெ. (n.) வட்டத் திருப்பி; cissampelos parcira (சா.அக.).

*[சினா + வட்டம்]*

**சினாவில்** *šiṉāvil,* பெ. (n.) தும்பை (மலை.); white dead nettle.

**சினாவு** *šiṉāvu,* பெ. (n.) தகரை; ringworm plant (சா.அக.).

**சினிக்கிருமல்** *šiṉi-k-kirumal,* பெ. (n.) விட்டு விட்டு அடிக்கடி வரும் இருமல்; a short, frequent and feeble cough (சா.அக.).

**சினித்தகாரி** *šiṉitta-kāri,* பெ. (n.) மென்மையை யுண்டாக்கும் மருந்து வகை (இங்.வை.); demulcent emollient.

Skt. snigdha - kārin

**சினித்தம்** *šiṉittam,* பெ. (n.) மான்செவிக்கள்ளி; spiral leafy milk hedge (சா.அக.).

**சினிபம்** *šiṉibam,* பெ. (n.) வாகை (மலை.); sirissa.

**சினேகம்** *šiṉēgam,* பெ. (n.) சாதிக்காய்; nutmeg (சா.அக.).

**சினேகயம்** *šiṉēgayam,* பெ. (n.) சீமையிலந்தை; pyrus genius (சா.அக.).

**சினேகதாரு** *šiṉēgadāru,* பெ. (n.) சாதிக்காய் மரம்; nutmeg tree (சா.அக.).

*[சினேகம் → சினேகதாரு]*

**சினேந்திரநாசன்** *šiṉēndira-nāšaṉ,* பெ. (n.) நச்சுப்பாலை; minusops genus. (சா. அக.)

**சினேந்திரமாலை** *šiṉēndra-mālai,* பெ. (n.). உபேந்திராசிரியர் செய்த தமிழ்க் கணிய (ஆருட) நூல்; a treatise on horary astrology by Upēndirāširiyar.

**சினேந்திரன்** *šinēndiran*, பெ. (n.) 1. அருகன் (திவா.); Aruhan. 2. புத்தன்; Buddhan "ஆதிசினேந்திர னளவை யிரண்டே" (மணிமே. 29:47).

*[சைனேந்திரன் → சினேந்திரன்]*

**சினை¹-த்தல்** *šinai-*, 4 செ.கு.வி. (v.i.) 1. தோன்றுதல்; to form. 2. எழுதல்; உருவாகி வளர்தல்; to arise; come into being. "தும்மல் சினைப்பது போன்று" (குறள், 1203). 3. பூ அரும்புதல் (திவ். இயற். திருவிருத். 68, வியா); to bud. 4. தழைத்தல்; to branch out on all sides. "எங்குமொக்கச் சினைத்துக் கொண்டு" (ஈடு, 8 : 1:3). 5. சிரங்கு புடைத்தல் (வின்.); to rise in pimples, as prickly heat. 6. பருத்தல் (யாழ்ப்.); to grow stout or fat, as a person used in contempt. 7. கருக்கொள்ளுதல் (வின்.); to be impregnated as animals.

ம. சினய்க்குக சனய்க்குக

*[சல் → சன் (சனை) → சினை (வே.க.265)]*

**சினை²** *šinai*, பெ. (n.) 1. கொழுப்பு; fat 2. சோலை; flowers-garden, grove (சா.அக.).

**சினை³** *šinai*, பெ. (n.) 1. விலங்கு முதலியவற்றின் சூல்; embryo or foetus of animals; pregnancy. "சினைவளர் வாளையின்" (பரிபா. 7 : 38). 2. முட்டை (பிங்.); eggs. 3. பூமொட்டு (திவா.); flower-bud. 4. மரக்கிளை; branch of a tree. "குலவுச்சினைப் பூக்கொய்து" (புறநா. 11 : 4). 5. உறுப்பு (திவா.); member, component part, limb. 6. மூங்கில் (மலை.); bamboo.

ம. சின, சனெக்கு; க. ஜனெ, தான; து. தனெ, சனெ; தெ. ஜென

*[சன் → சின் → சினை (வே.க. 226)]*

**சினை⁴** *šinaigaḷ*, பெ. (n.) பெண்களின் கருப்பையில் அமைந்துள்ள சவ்வால் இணைக்கப்பட்ட அரத்த நாளம்; vesicular graffinac - ovary consisting of a close and compact Taxture united by cellular structure (சா.அக.).

**சினைக்காலம்** *šinai-k-kālam*, பெ. (n.) சினைப்பருவம் பார்க்க; see *šinai-p-paruvam*.

*[சினை + காலம். கோல் → கால் → காலம்]*

**சினைக்குழல்** *šinai-k-kuḻal*, பெ. (n.) சினை செல்லும் பாதை; fallopian tube (சா.அக.).

*[சினை + குழல்]*

**சினைக்கொழு-த்தல்** *šinai-k-koḻu-*, 4 செ.குன்றாவி. (v.t.) சினைவள மாடுதல்; fertilization of ovum (சா.அக.).

*[சினை + கொழு-,]*

**சினைக்கோளம்** *šinai-k-kōḷam*, பெ. (n.) கருவறை; ovary-gland (சா.அக.).

*[சினை + கோளம்]*

**சினைகரை-த்தல்** *šinai-karai-*, 4 செ.குன்றாவி. (v.t.) கருவழித்தல்; to miscarry, to abort (சா.அக.).

*[சினை + கரை-,]*

**சினைகொள்(ளு)-தல்** *šinai-koḷḷ(u)-*, 13 செ.குன்றாவி. (v.t.) 1. கருக்கொள்ளுதல்; கருவுண்டாதல்; to conceive. 2. கொழுத்தல்; to be fattered. 3. சினைவளர்தல்; becoming heavy with pregnancy (சா.அக.).

*[சினை + கொள்-,]*

**சினைத்தண்ணீர்** *šinai-t-taṇṇīr*, பெ. (n.) சினைநீர் பார்க்க; see *šinai-nīr*.

**சினைத்தாரை** *šinai-t-tārai*, பெ. (n.) சினைக்குழல் பார்க்க; see *šinai-k-kuḻal*.

*[சினை + தாரை]*

**சினைநண்டு** *šinai-naṇḍu*, பெ. (n.) முட்டை கொண்ட நண்டு; crab pregnated with eggs (சா.அக.).

*[சினை + நண்டு]*

**சினைநீர்** *šinai-nīr*, பெ. (n.) 1. புண்ணினின்று வடியுந்தண்ணீர்; a thin colourless discharge from wounds ulcers etc. 2. சினைப்பையினின்று வடியும் நீர்; secretion from ovary (சா.அக.).

*[சினை + நீர்]*

**சினைப்படு-தல்** *šinai-p-paḍu-*, 18 செ.குன்றாவி. (v.t.) மாவினம் கருக்கொள்ளுதல்; to be cow in calf (சா.அக.).

*[சினை + படு-,]*

**சினைப்படுத்து-தல்** *šiṉai-p-paḍuttu-,* 5 செ.குன்றாவி. (v.t.) சினையாக்கு-தல் (இ.வ.) பார்க்க; see *šiṉai-y-ākku-,*

*[சினை + படுத்து-. படுத்து- துணைவினை]*

**சினைப்பருவம்**[1] *šiṉai-p-paruvam,* பெ. (n.) நெற்கதிரில் மணிபிடிக்கும் பருவம் (வின்.); earing stage in the growth of paddy.

*[சினை + பருவம்]*

**சினைப்பருவம்**[2] *šiṉai-p-paruvam,* பெ. (n.) கருக்கொள்ளுங்காலம்; period of gestation. (சா.அக.).

*[சினை + பருவம்]*

**சினைப்பாதை** *šiṉai-p-pādai,* பெ. (n.) சினைக்குழல் பார்க்க; see *šinai-k-kuḻal* (சா.அக.).

மறுவ. சினைத்தாரை

*[சினை + பாதை. பதி → பதம் = நிலத்திற் பதியும் காலடி. பதம் → பாதம் → பாதை = பாதம் பட்டு உண்டாகும் வழி]*

**சினைப்பி-த்தல்** *šiṉaippi-,* 4 செ.குன்றாவி. (v.t.) கருக்கொள்ளச் செய்தல்; to in pregnate (சா.அக.).

*[சினை → சினைப்பி-,]*

**சினைப்பு** *šiṉaippu,* பெ. (n.) 1. வெப்பத்தால் உடலில் உண்டாகும் வியர்க்குரு; prickly heat. 2. கருக்கொள்கை; becoming pregnant. 3. கொழுப்பு; fatness.

*[சினை → சினைப்பு]*

**சினைப்புக்கிள்ளு-தல்** *šiṉaippu-k-kiḷḷu-,* 5 செகுன்றாவி. (v.t.) சினப்புக்கிள்ளு-தல் பார்க்க; see *šiṉaippu-k-kiḷḷu-.*

*[சினைப்பு + கிள்ளு-,]*

**சினைப்பூ** *šiṉai-p-pū,* பெ. (n.) கோட்டுப்பூ; flowers on branches. "சினைப்பூப் போற்றளை விட்ட" (கலித். 118).

*[சினை + பூ]*

**சினைப்பெயர்** *šiṉai-p-peyar,* பெ. (n.) 1. உறுப்பைக் குறிக்கும் பெயர் (நன். 132); noun denoting part of the whole, as kaṇ. 2. உறுப்படியாகப் பிறந்த பெயர் (நன். 281); name formed from noun, denoting part of the whole, as Kaṇṇaṉ

*[சினை + பெயர். கண் உறுப்புப்பெயர். கண்ணன் உறுப்படியாகப் பிறந்த பெயர்]*

**சினைப்பை** *šiṉai-p-pai,* பெ. (n.) சினை முட்டைகள் உருவாகும் கருக்கூடு; ovary the organ in which the eggs or their elemantary or essential parts are found developed (சா.அக.).

*[சினை + பை]*

**சினைப்பையொழுக்கு** *šiṉaippai-y-oḻukku,* பெ. (n.) சினைத்தாரையடைபட்டுக் கருக் கூட்டினின்று ஒழுகும், கருப்பை நீர்ம வொழுக்கு; a condition in which the fallopian tube is closed and consequently the tube is filled with serum until pressure causes it to escape through unterine opening (சா.அக.).

*[சினைப்பை + ஒழுக்கு]*

**சினைமுற்றிவெளிப்படு-தல்** *šiṉai-muṟṟi veḷi-p-paḍu-,* 18 செ.குன்றாவி. (v.t.) பெண்ணின் சினை முட்டை முதிர்ந்து பருவமடைந்து கருக் கூட்டினின்று வெளிப்படுதல்; formation and discharge of ova from the ovary ovulation.

*[சினைமுற்றி + வெளிப்படு-,]*

**சினையம்புலிநோய்** *šiṉai-y-ambuli-nōy,* பெ. (n.) மகளிர்தம் பிறப்புறுப்பினின்று பால்போன்று வெண்மையாக வடியும் வெட்டை நீரொழுக்கு; discharge of a milk white fluid from the uterus or vagina (சா.அக.).

*[சினை + அம்புலி + நோய்]*

**சினையழிவு** *šiṉai-y-aḻivu,* பெ. (n.) 1. கருத்திரளாமை; அஃதாவது கருப்பைக்குள் விந்து விழுவதற்கு முன்பே, உண்டாயிருக்கும் அழிவு; tubal abortion occuring from the ampulla of the oviduct-Tubal abortion. 2. கருக் கூட்டினுள், சினைமுட்டை முதிராது இளங் கருவாயிருக்கும் போது ஏற்படும் அழிவு; foetus expelled in its embryonic state (சா.அக.).

*[சினை + அழிவு]*

**சினையறை** *šiṉai-y-aṟai,* பெ. (n.) கருப்பை; ovarium (சா.அக.).

*[சினை + அறை]*

**சினையாக்கு[1]-தல்** *šiṉai-y-ākku-*, 5 செ.குன்றாவி. (v.t.) *கருவுண்டாக்குதல்;* to impregnate.

*[சினை + ஆக்கு-. ஆக்கு - து.வி.]*

**சினையாக்கு[2]-தல்** *šiṉai-y-ākku-*, 5 செ.குன்றாவி. (v.t.) *மிகுதியாகத் துன்பம் தருதல்; குழப்பஞ்செய்தல்;* to cause excessive trobule, annoy. *'அவன் ஆட்களைச் சினையாக்கி விடுகிறான்' (இ.வ.).*

*[சினை + ஆக்கு-,]*

**சினையாகு-தல்** *šiṉai-y-āgu-*, 6 செ.கு.வி. (v.i.). *சூலுறுதல்;* impregnate. *(சா. அக.)*

*[சினை + ஆகு-,]*

**சினையாகுபெயர்** *šiṉai-y-āgu-peyar,* பெ. (n.) *சினைப்பெயர் அதன் முதலுக்கு ஆகும் பெயர் (நன். 290, உரை.);* synecdoche in which part is put for the whole as **வெற்றிலை நட்டான்.**

*[சினை + ஆகுபெயர்]*

**சினையாறுபடுகை** *šiṉai-y-āṟupaḍugai,* பெ. (n.) *வெள்ளம் வருதற்குறியாக ஆற்றுநீர் பொசிகை;* oozing of water in a river - bed indicative of the coming freshet. *"சினையாறு படுகையாவது ஆறுநீர்வரஅணித்தானால் பொசிந்து உள்ளே ஜலமுண்டாயிருக்கை" (ஈடு, 1. 6 : 2, ஜீ)*

*[சினை + ஆறு + படுகை]*

**சினையிட்டலி** *šiṉai-y-iṭṭali,* பெ. (n.) *சூலுற்ற பெண்களுக்குக் கொடுக்கும் இனிப்புச் சுவைமிக்க இட்டலிவகை (நெல்லை.);* a kind of sweetened iṭṭali offered to pregnant women.

*[சினை + இட்டலி]*

**சினையெடு-த்தல்** *šiṉai-y-eḍu-*, 4 செ.குன்றாவி. (v.t.). *கருப்பையிலிருந்து சினைப்பையை அறுவை மருத்துவ முறையில் அகற்றல்;* hystertomy *(சா.அக.).*

*[சினை + எடு]*

**சினைவினை** *šiṉai-viṉai,* பெ. (n.) *உறுப்பு உணர்த்தும் பெயரின் தொழிலைக் காட்டும், வினைச்சொல் (புறநா. 9, உரை);* verb relating to part of the whole, dist, fr. mudal - viṉai, as kāl muṟindadu.

*[சினை + வினை]*

# சீ

**சீ** *cī/šī,* *தமிழ் நெடுங்கணக்கில் 'ச்' என்ற மெய்யும் 'ஈ'கார வுயிரும் சேர்ந்துருவான உயிர்மெய் எழுத்து;* the compound of c/š and ī.

*[ச் + ஈ = சீ]*

**சீ[2]** *šī,* பெ. (n.) 1. *சீழ்;* pus. *"சீயார்ந் தீமொய்த்து" (திருவாச. 25: 3).* 2. *சளி;* mucous matter, as of the nose. *"குமிழ்மூக் குவைகாணுமிழ்சீ யொழுக்குவ" (மணிமே. 20: 48).* 3. *விந்து;* semen. 4. *மகளிர்தம் அரத்தப் போக்கு;* menstrual blood. 5. *புண்ணில் வடியும் நீர்;* fluid oozing out from wound or ulcer. 6. *அரத்தமுறிவு;* purulance. 7. *நஞ்சு;* poison.

*ம. சி; க. கீவு, கீவ, கீமு, கீ; தெ. சீமு; து. கீவு; குட. சீய்; கோத. சிவ்; துட. கிதில்; கூ. சீவெஞ்சி; குவி. சீவச்சி; நா. சீம; கொலா. சீம்; குரு. கீத்னா, மா. கிதொ, கித்ரொ, ஐ; பிரா. கீழ்; பட. கீவு*

*[சீழ் → சீ]*

**சீ[3]** *šī,* இடை. (int.) *இகழ்ச்சி வெறுப்புகளின் குறிப்பு;* an exclamation of contempt, disgust, repudiation. *'சீ என்கிற வீட்டில் ஈயும் நுழையாது' (பழ.).*

*ம., க., து. சீ*

**சீ[4]** *šī,* பெ. (n.) *பாராமுகம் (அலட்சியம்);* disdain, spurn. *"சீயேது மில்லாதென் செய்பணிகள் கொண்டருளும்" (திருவாச. 10: 12).*

*ம., க., தெ., து. சீ*

Mar. cī

**சீ[5]-த்தல்** *šī-*, 4 செ.குன்றாவி. (v.t.) 1. *கீறிக் கிளறுதல்;* to scratch, as fowls; to tear up earth, as pigs; to scrape. 2. *துடைத்தல்;* to sweep off, brush away, wipe off. *"மென்பூஞ் செம்மலொடு நன்கலஞ் சீப்ப" (மதுரைக். 685).* 3. *போக்குதல்;* to expel, remove, root out. *"இருள் சீக்குஞ் சுடரேபோல்" (கலித். 100:24).* 4. *தூயதாக்குதல் (சூடா.);* to cleanse, purify. 5. *கூர்மையாகச் சீவுதல்;* to sharpen. *"கணிச்சிபோற் கோடு சீஇ" (கலித். 101:8).*

*ம. சீ.; க. சீ*

கிளறுதற் பொருள் துடைத்தலுக்கும், துடைத்தற் பொருள் துடைத்துப் போக்குதலுக்கும், புடைபெயர்ந்தது. துடைத்துப் போக்கிய பின் தூயதாதலும், கூர்மையாதலுமென விரிந்தது.

**சீக்கட்டு-தல்** *sī-k-kaṭṭu-,* 5 செ.கு.வி. (v.i.) *சீழ்பிடித்தல்;* to suppurate.

*[சீழ்கட்டு → சீக்கட்டு-,]*

**சீக்கல்**[1] *sīkkal,* பெ. (n.) *சீழ்க்கை (யாழ்.அக.) பார்க்க;* see *sīḻkkai.*

க. சிள்ளு

*[சீழ்க்கை → சீக்கை → சீக்கல்; ஒ.நோ. வாழ்க்கை → வாக்கை → வாக்கல். அவனது வகைதொகையில்லா வாக்கலைப் பற்றிப் பேசிப் பயனென்ன எனும் உலக வழக்கு இன்றுமுள்ளது]*

**சீக்கல்**[2] *sīkkal,* பெ. (n.) *கல்வகை (நாஞ்.);* laterite.

ம. சீக்கல்லு

**சீக்கல்**[3] *sīkkal* பெ. (n.) *காது;* ear *(சா.அக.).*

**சீக்காச்சா** *sī-k-kāccā* பெ. (n.) *நாய்ப்புடல் எனும் கொடிவகை;* wild snake gourd.

**சீக்காது** *sīkkādu,* பெ. (n.) *சீழ்க்காது பார்க்க;* see *sīḻ-k-kādu.*

ம. சீக்காது

*[சீழ்க்காது → சீக்காது]*

**சீக்காய்**[1] *sīkkāy* பெ. (n.) *சீழ்க்கை (யாழ்ப்.) பார்க்க;* see *sīḻkkai.*

*[சீழ்க்கை → சீக்கை → சீக்காய்]*

**சீக்காய்**[2] *sīkkāy* பெ. (n.) *பழுக்காத பனங்காய் (யாழ்ப்.);* unripe palmyra fruit.

**சீக்காய்**[3] *sīkkāy* பெ. (n.) *சீயக்காய் (இ.வ.) பார்க்க;* see *sīya-k-kāi.*

ம. சீவய்க்க, சீகக்காய்; க. சீகெகாயி; தெ. சீகாய்; து. சீகெகாயி; துட. சிங்கு.

*[சீயக்காய் → சீக்காய்]*

**சீக்காய்ச்சடங்கு** *sīk-kāy-c-cadaṅgu,* பெ. (n.) *சில இனத்தாருள் ஒரளவு அரிசியில் சீயக்காயும் எழுத்தாணியும் வைத்து மணமகன் முகத்துக்கு நேராகக் காட்டிக் கண்ணேறு கழிக்கும் மணச்சடங்கு (இ.வ.);* ceremony in marriage among certain castes for warding off the evil eye, which consists in holding up to the face of the bride-groom a measure full of rice with a piece of soap-pod and a writing style in it.

*[சீக்காய் + சடங்கு]*

**சீக்காய்ச்சி** *sīkkāycci,* பெ. (n.) *வெளிறின முகமுள்ளவள்;* woman with a sallow countenance.

*[சீக்காய்[2] → சீக்காய்ச்சி = பழுக்காத பனங்காய் போன்ற வெளிறின முகமுடையவள்]*

**சீக்காய்நிறம்** *sīkkāy-niṟam,* பெ. (n.) *வெளிறின நிறம் (யாழ்.அக.);* dull green colour.

*[சீக்காய்[2] + நிறம்]*

**சீக்காயன்** *sīkkāyaṉ,* பெ. (n.) *வெளிறின முகமுள்ளவன் (யாழ்ப்.);* man with a sallow countenance, like the unripe palmyra fruit.

*[சீக்காய்[2] → சீக்காயன்]*

**சீக்கிதாவிகம்** *sīkkidāvigam,* பெ. (n.) *பாசிப்பயறு;* green-gram *(சா.அக.).*

**சீக்கிரகாயம்** *sīkkira-gāyam,* பெ. (n.) *நரிப் புடலை;* ordinary snake-gourd *(சா.அக.).*

**சீக்கிரவீரணம்** *sīkkira-vīraṇam,* பெ. (n.) *பெரிய முள்ளங்கி;* a variety of radish-large *(சா.அக.).*

**சீக்கிராந்தி** *sīkkirāndi,* பெ. (n.) *பசலை;* Indian spinach *(சா.அக.).*

**சீக்கிராந்தூள்** *sīkkirāndūḷ,* பெ. (n.) *உசிலம் பொடி;* powder of the washing tree *(சா.அக.).*

*[சீக்கிராம் + தூள்]*

**சீக்கிராம்**[1] *sīkkirām,* பெ. (n.) *ஒருவகை மரம்;* black sirissa.

மறுவ. சீக்கிரி

**சீக்கிராம்**[2] *sīkkirām,* பெ. (n.) *சவர்க்காரத்திற்குப் பதிலாகப் பயன்படுத்தும் சீக்காய்ப்பொடி;* soap-nut powder *(சா.அக.).*

*[சீக்காய்[3] → சீக்கிராம்]*

**சீக்கிராம்பட்டை** *sīkkirām-paṭṭai,* பெ. (n.) *உசிலம்பட்டை;* albizzia amara barks *(சா.அக.).*

*[சீக்கிராம் + பட்டை]*

**சீக்கிரி** *sīkkiri,* பெ. (n.) 1. உசிலமரம்; albizzia amara. 2. வெட்டுப்பாக்கு; sliced arecanut (சா.அக.).

**சீக்கிரியன்** *sīkkiriyaṉ,* பெ. (n.) சிக்கிரி.-1 (யாழ். அக.) பார்க்க; see *sikkiri,-l.*

*[சீக்கிரி + சீக்கிரியன்]*

**சீக்கிரியான்** *sīkkiriyāṉ,* பெ. (n.) சிக்கிரி,-1 (மலை.) பார்க்க; see *sikkiri,-l.*

*[சீக்கிரி → சீக்கிரியான்]*

**சீக்கிரிவேர்** *sīkkiri-vēr,* பெ. (n.) காசினிவேர்; chicori root (சா.அக.).

*[சீக்கிரி + வேர்]*

**சீக்கு** *sīkku,* பெ. (n.) செத்தை, குப்பை (யாழ்.அக.); rubbish.

*[சீ⁵ → சீக்கு]*

**சீக்குரி** *sīkkuri,* பெ. (n.) கோழியவரை; fowl's bean.

மறுவ. தம்பட்டையவரை.

**சீக்குரு** *sīkkuru,* பெ. (n.) முருங்கை (மலை.); horse-radish tree.

*[சிக்குரு → சீக்குரு]*

**சீக்கூட்டு-தல்** *sī-k-kūṭṭu-,* 5 செ.குவி. (v.i.) சீக்கட்டு- (வின்) பார்க்க; see *sīkkāṭṭu-.*

*[சீக்கட்டு → சீக்கூட்டு. கூட்டு = சேர்]*

**சீக்கூட்டுவிரியன்** *sī-k-kūṭṭu-viriyaṉ,* பெ. (n.) தன் கடியால் சீழை உண்டாக்கும் விரியன் பாம்புவகை (இ.வ.); pus-viper, as causing pus to form by its bite.

*[சீக்கூட்டு + விரியன். விரி → விரியன் = பாம்பு வகை]*

**சீக்கை** *sīkkai,* பெ. (n.) கோழை; phlegm. "சீக்கை விளைந்தது" (திருமந். 147).

*[சீ² → சீக்கை]*

**சீக்கொள்(ளு)-தல்** *sīkkoḷḷu-,* 16 செ.குவி. (v.i.) சீழ்கட்டுதல் பார்க்க; see *sīḷkaṭṭu-.*

*[சீழ் + கொள்-,]*

**சீகஞ்சாறு** *sīgañjāṟu,* பெ. (n.) சிறுகீரையிலைச் சாறு; juice of pigs green (சா.அக.).

**சீகட்டு** *sīgaṭṭu,* பெ. (n.) சீழ்ப்பிடிப்பு; suppuration, purulence (சா.அக.).

*[சீழ் + கட்டு]*

**சீகண்டர்** *sīgaṇḍar,* பெ. (n.) சிவத்திருமேனி வகையுளொன்று (நஞ்சுண் மிடற்றர்.); a manifestation of Šiva, as having poison - stained neck. "அனந்தர் சீகண்டர் செய்யுந் தொழிலும்" (சி.சி. 1 : 19, சிவஞான.).

*[சீ² + கண்டர். கண்டம் = கழுத்து; கண்டம் → கண்டர்]*

**சீகண்டருத்திரர்** *sīgaṇḍa-ruttirar,* பெ. (n.) சீகண்டர் (சி.போ.பா. 30) பார்க்க; see *sīgaṇḍar.*

*[சீகண்டர் + உருத்திரர்]*

**சீகநாங்கூழ்** *sīga-nāṅgūḻ,* பெ. (n.) சிறு குடலடியின் கீழ் ஒட்டிச் சுருண்டு கொண்டிருக்கும் நாங்கூழ்; vermi form appendix so called from its hanging below the intestines in the shape of a worm (சா.அக.).

*[சீகம் + நாங்கூழ்]*

**சீகம்**[1] *sīgam,* பெ. (n.) தமரத்தை (மலை.); carambola apple tree.

**சீகம்**[2] *sīgam,* பெ. (n.) 1. சிறுகுடலடியுடன் தொடர்ந்திருக்கும் விரிந்த பைபோன்ற குழல்; caecum, a blind dilatation formed by the large intestine beyond the ileo-caecal valve. 2. புளியாரை; sour sorrel. 3. நாகவைப்புநஞ்சு; prepared Zinc poison.

**சீகம்புல்** *sīgam-bul,* பெ. (n.) ஊகம்புல் (வின்.); broom-grass.

*[சீகு + அம் + புல்]*

**சீகர்** *sīgar,* பெ. (n.) ஐம்பொன் (பொன், வெள்ளி, செம்பு, இரும்பு, பித்தளை); an alloy of five metals - gold, silver, copper, iron and magnet (சா.அக.).

*[சீர் + கரம் → சீகரம்]*

**சீகரம்** *sīgaram,* பெ. (n.) 1. சுக்கு; dried ginger. 2. ஐம்பொன் (பொன், வெள்ளி, செம்பு, பித்தளை, இரும்பு); an alloy of five metals - gold, silver, copper, magnet and iron.

*[சீகர் → சீகரம்]*

**சீகா**[1] *sīgā*, பெ. (n.) ஐம்பொன் (இராட்); the five metals.

Skt. sīsādi

**சீகா**[2] *sīgā*, பெ. (n.) சீயக்காய்; soap-nut powder (சா.அக.).

க. சீகெ

[சீகை → சீகா]

**சீகாமரம்**[1] *sīgā-maram*, பெ. (n.) மருத யாழ்த் திறங்களுள் ஒன்று (பிங்.); an ancient secondary melody type of the marudam class.

**சீகாமரம்**[2] *sīgā-maram*, பெ. (n.) சீயக்காய் மரம்; soap-pod tree (சா.அக.).

[சீகை → சீகா + மரம்]

**சீகாரம்** *sīgāram*, பெ. (n.) பண்வகை (சங்.அக); a melody type.

**சீகு** *sīgu*, பெ. (n.) 1. சீகம்புல்; broom-grass. 2. கருப்பு வாகை; black sirissa.

மறுவ. சீகுப்புல்

தெ. சீபுரு; க. சீபரி

[சீழ்கு → சீகு]

**சீகை** *sīgai*, பெ. (n.) 1. வழலையைப் போல் குளியலுக்கு உதவும் காயைத் தரும் மரம்; a tree the pods of which are used the soap for washing the hair, etc.

க. சீபரி

[சீத்தல் = துடைத்தல், கழுவுதல். சீ → சீகு]

**சீகைக்காய்** *sīgai-k-kāy*, பெ. (n.) சீக்காய்; soap-pod (சா.அக).

ம. சீக்காயி, சீயக்காயி; க. சீகெகாயி; தெ. தீகாயி, சீகாயி.

[சிகைக்காய் → சீகைக்காய்]

**சீங்கட்டான்** *sīṅgaṭṭāṉ*, பெ. (n.) முள் வேங்கை; spinous kino tree (சா.அக.).

**சீங்கண்ணி** *sīṅgaṇṇi*, பெ. (n.) முதலைவகை (நாஞ்.); a species of crocodile.

ம. சீங்கண்ணி

[சீ = புண்ணினின்று வடியும் நீர், கண்ணீர். சீ + கண்ணி]

**சீங்காய்** *sīṅgāy*, பெ. (n.) இண்டு (L.); eight pinnate, soap-pod.

[சீத்தல் = துடைத்தல், தூயதாக்குதல், கழுவுதல். சீ + காய் - சீங்காய் = உடம்பைத் தூயதாக்குவதற்குப் பயன்படும் காய்]

**சீங்குழல்** *sīṅguḻal*, பெ. (n.) குழல் வகை; a kind of flute. "தித்தி சிறுமுகவீணை சீங்குழல்" (குற்றா. தல. தருமசாமி. 54).

ம. சீங்குழல்

[தீங்குழல் → சீங்குழல்]

**சீங்கை** *sīṅgai*, பெ. (n.) வேலமர வகையுள் ஒன்று; acacia pennata (சா.அக.).

**சீச்சீ** *sī-c-cī*, இடை. (int.) இகழ்ச்சிக்குறிப்பு (பிங்.); an exclamation of contempt, abhorrence. 'சீச்சீ என்கிறதும் இந்த வாய்தான் சிவசிவ என்கிறதும் இந்த வாய்தான்' (பழ.).

து. சீசீ

[சீ = இகழ்ச்சிக் குறிப்பு. சீ + சீ - சீச்சீ - அடுக்குத் தொடர்]

**சீசி** *sīsi*, இடை. (int.) சீச்சீ பார்க்க; see *sī-c-cī*. "சீசியிவையுஞ் சிலவோ" (திருவாச. 7:2).

[சீச்சீ → சீசி (செய்யுள் வழக்கு)]

**சீசீ** *sīsī*, பெ. (n.) சீச்சீ பார்க்க; see *sī-c-ci*.

து. சீசீ

[சீச்சீ → சீசீ]

**சீசு** *sīsu*, பெ. (n.) கருங்காலி மரவகையுள் ஒன்று; a kind of rose-wood (சா.அக.).

**சீட்டனுப்பு-தல்** *sīṭṭaṉuppu-*, 5 செ.குன்றாவி. (v.i.) சீட்டுக்கொடு-த்தல் பார்க்க; see *sīṭṭu-k-koḍu-*

[சீட்டு + அனுப்பு-,]

**சீட்டாட்டம்** *sīṭṭāṭṭam*, பெ. (n.) 54 அட்டைகளைக் கொண்டு விளையாடும் விளையாட்டு; cards play.

ம. சீட்டுகளி, சீட்டுக்கச்சேரி

[சீட்டு + ஆட்டம்]

**சீட்டாடு-தல்** *sīṭṭāḍu-*, 5 செ.கு.வி. (v.i.) சீட்டு விளையாடுதல்; to play at cards (செ.அக.).

க. சீடாடு; பட. சீட்டாடு

[சீட்டு + ஆடு-,]

**சீட்டாள்** *sīṭṭāḷ*, பெ. (n.) மடல் கொண்டு செல்லும் வேலைக்காரன்; servant, as carrying letters. சீட்டாளுக்கொரு மூட்டாளா? 'ஆட்டாளுக்கொரு சீட்டாள்; அடைப்பக் காரனுக்கொரு துடைப்பக்கட்டை' (பழ.)

*[சீட்டு + ஆள். சீட்டு = நறுக்கோலை, ஓலைச்சீட்டு, மடல்]*

**சீட்டி** *sīṭṭi*, பெ. (n.) *1.* சீழ்க்கை; whistling. *2.* ஊதுகுழல் (வின்.); toy whistle.

Mhr. šiti

*[சீழ்க்கை → சீட்டி]*

**சீட்டியடி-த்தல்** *sīṭṭi-y-aḍi-*, 4 செ.கு.வி. (v.i.) சீழ்க்கைஅடித்தல் (இ.வ.); to whistle.

*[சீழ்க்கை → சீக்கை → சீட்டி + அடி-,]*

**சீட்டு** *sīṭṭu*, பெ. (n.) *1.* எழுத்துக்குறிப்பு; note, letter, scrap of paper or ōla containing a memorandum. *2.* ஆவணம்; bond, document, promissory note. *3.* கூட்டுச்சீட்டு வைப்பு (நிதி); association chit fund where the sum total of the premiums in each instalment is assigned either to the lowest bidder or to one whose name is decided by drawing lots. *4.* விளையாடும் சீட்டு; playing cards. *5.* பட்டியல்; list. "நூற்றொரு பேதமாய் விரியுமென்று பாடியகாரர் சீட்டுக் கொடுப்பர்" (பிவி. 17, உரை). *6.* ஓலை நறுக்கு; palm-leaf. *7.* சிற்றோலை; letter, small piese of paper. *8.* உசீட்டு; ticket. *9.* நுழைவுச் சீட்டு; pass. *10.* பற்றுச்சீட்டு; voucher.

ம., பட. சீட்டு; க. சீடு, சீடி; து. சீட், சீடி; H. ciṭṭhī - small; E. chit - a baby, a piece of paper; AS. cith - a young, lander shoot.

*[சுள் = சிறுமை. சுள்ளாணி = சிறிய ஆணி. சுள் → சுண்டு = சிறியது. சுள் → (சுட்டு) → சிட்டு → சீட்டு = ஓலைநறுக்கு (மு.தா. 140) (சு.வி.19)]*

**சீட்டுக்கச்சேரி** *sīṭṭu-k-kaccēri*, பெ. (n.) சீட்டாட்டம்; game with cards.

ம. சீட்டுகச்சேரி

*[சீட்டு + கச்சேரி]*

**சீட்டுக்கட்டு**[1] *sīṭṭu-k-kaṭṭu*, பெ. (n.) விளையாடுஞ் சீட்டுத்தொகுதி; pack of playing cards (செ.அக.).

*[சீட்டு + கட்டு. சீட்டு = விளையாட்டு அட்டை. குல் → குள் → கள் → கட்டு = தொகுதி, சேர்க்கை]*

**சீட்டுக்கட்டு**[2]**-தல்** *sīṭṭu-k-kaṭṭu-*, 5 செ.கு.வி. (v.i.) கூட்டுச்சீட்டிற் சேர்ந்து பணங்கட்டி வருதல்; to subscribe to a chit fund (செ.அக.).

*[சீட்டு + கட்டு-. சீட்டு = கூட்டுச் சீட்டு வைப்பு (நிதி). கட்டுதல் = சேர்த்தல், செலுத்துதல்]*

**சீட்டுக்கரைசுவான்** *sīṭṭu-k-karaišuvāṉ*, பெ. (n.) ஏலச் சீட்டு நடத்துபவன் (இ.வ.); foreman of a chit transaction.

க. கரெ (அழைத்தல்)

*[சீட்டு + கரைசுவான். கரைதல் சரைசுதல். ஏலத் தொகையை உரக்கக் கூவுதல்]*

**சீட்டுக்கவி** *sīṭṭu-k-kavi*, பெ. (n.) ஓலைப்பா; epistle or letter written in verse. "சேரற்குச் சீட்டுக்கவி பாடிக்கொடுத்த சொக்கே" (திருவிளை. பயகர. 55).

*[சீட்டு + கவி. சீட்டு = ஓலை நறுக்கு, சிற்றோலை]*

**சீட்டுக்கிழி-த்தல்** *sīṭṭu-k-kiḻi-*, 5 செ.கு.வி. (v.i.) ஒருவரைப் பணியிலிருந்து நீக்குதல்; to sake one from service. 'ஒழுங்காய்ப் பணி செய்யாவிடில் சீட்டைக் கிழித்து விடுவேன்' (உ.வ.).

**சீட்டுக்கிழிதல்** *sīṭṭu-k-kiḻidal*, பெ. (n.) இறக்கை (ஒருவனது வாணாள் வரையப்பட்ட சீட்டுக் கிழிகை); lit., tearing of one's life record, death.

க. சீழபரு

*[சீட்டு + கிழிதல். சீட்டு = ஓலைநறுக்கு, ஏடு, சிற்றோலை. மண்ணில் பிறந்த மாந்தருயிர் ஒவ்வொன்றிற்கும் தனித் தனியேட்டில் கணக்கெழுதி வைக்கப் பட்டிருக்கிறது என்பதும் குறித்த நாள் முடிந்ததும், தன் கணக்கு முடிவுறும் என்பதும், மக்களின் நம்பிக்கை. அந்த வகையில், ஒருவனது சாவைக் குறிக்கும்*

*போது, அவன் கணக்கு முடிந்து விட்டது என்றும், அவன் சீட்டு கிழித்தாயிற்று என்றும் கூறுதலை இன்றும் காணலாம். கடும் நோயிலிருந்தும், ஏதத்திலிருந்தும் தப்பிப் பிழைத்தோரை 'அவன் கணக்கு முடியவில்லை போலும்' என்பர். சாவுக்கு ஏங்கும் முதியவரும், நோயரும், என் ஏட்டை எப்போது பார்ப்பானோ எனப் புலம்புவர்]*

**சீட்டுக்கீறு-தல்** *sīṭṭu-k-kīṟu-*, 5 செ.கு.வி. (v.i.) ஒருவனைக் கெடுக்கச் சூழ்தல் (இ.வ.); to contrive or resolve upon one's ruin.

ம. சீட்டுகீறுக

*[சீட்டு + கீறு. சீட்டு = இறைவனால் பேணப்படும் வாழ்வுக்கணக்கு, வாழ்வு, வாழ்க்கை. கீறு = கிறுக்கு, கிழி, சீரழிவு, கேடு]*

**சீட்டுக்குலுக்கு-தல்** *sīṭṭu-k-kulukku-*, 5 செ.கு.வி. (v.i.) திருவுளச்சீட்டுக் குலுக்கிப் போடுதல்; to cast lots (செ.அக.).

*[சீட்டு + குலுக்கு. இருவேறு வினைகளில் எதைச் செய்வதென மனந்தடுமாறும் வேளையிலும், சம வாய்ப்புள்ளோரில் யாரைத் தெரிவுசெய்வது எனும் நிலையிலும், ஒரு கூட்டத்தாருள் ஒருவரைத் தெரிவுசெய்ய வேண்டிய நிலையிலும், சீட்டுக்குலுக்கித் தெரிவு செய்யும் பழக்கம் இன்றுமுளது. சீட்டாவது துண்டுச்சீட்டு. அதில் தெரிவு செய்யவேண்டிய வினைகளையோ, பெயர்களையோ தனித்தனியே எழுதிச் சுருட்டி இரு உள்ளங்கைக்குள்ளுமிட்டுக் குலுக்கிப்போட்டு, இளமகவொன்றினைக் கொண்டு ஒரு சீட்டை எடுக்கச்சொல்லி, அச்சீட்டிலுள்ளதே தெரிவுபெற்றதாக அறிவிப்பர். தேர்தல் போன்ற போட்டிகளில் சமவளவு நேரிபெற்ற வேட்பாளரிருவரு ளொருவரைத் தெரிவு செய்ய இம்முறை கையாளப்படுவதை இன்றும் காணலாம்]*

**சீட்டுக்கொடு-த்தல்** *sīṭṭu-k-koḍu-*, 4 செ.கு.வி. (v.i.) 1. மூலாவணம் முதலியன கொடுத்தல் (வின்.); to tender a bond, voucher, draft, etc. 2. வேலையினின்று விலகக் கட்டளையிடுதல் (உ.வ.); to dismiss, as giving written order to stop work. அவன் நடத்தை சரியில்லை சீட்டுக் கொடுத்து வீட்டுக்கனுப்பு. 3. குறிப்பை யுணர்த்துதல்; to send a piece of paper with a message. பேச்சை முடித்துக் கொள்ளுமாறு சீட்டுக் கொடுத்தார்.

*[சீட்டு + கொடு. சீட்டு = மடல், ஆணை, துண்டுத்தாள்]*

**சீட்டுத்தட்டு-தல்** *sīṭṭu-t-taṭṭu-*, 5 செ.கு.வி. (v.i.) சீட்டுக்குலுக்கு-தல் (நெல்லை.) பார்க்க; see *sīṭṭu-k-kulukku-*.

*[சீட்டு + தட்டு-,]*

**சீட்டுதறு-தல்** *sīṭṭu-daṟu-*, 2 செ.கு.வி. (v.i.) சீட்டுக்குலுக்கு-தல் (இ.வ.) பார்க்க; see *sīṭṭu-k-kulukku*.

*[சீட்டு + உதறு-,]*

**சீட்டுநாட்டு** *sīṭṭu-nāṭṭu*, பெ. (n.) 1. ஆதரவுமுறி (உ.வ.); note, bond. 2. கூட்டுச்சீட்டு முதலியன; chit or similar profit-earning transaction. 'சீட்டுநாட்டிற் சேர்ந்தால் பணம் பெருகும்' (நெல்லை).

*[சீட்டு + நாட்டு. மரபிணை மொழி]*

**சீட்டுநெல்** *sīṭṭu-nel*, பெ. (n.) கூட்டுச்சீட்டுப் பொருளு(நிதி)க்குப் பிறன்மூலமாக வேனும் பிறனுக்கு, அப்பொருள் (அந்நிதி) மூலமாக வேனும், சேரவேண்டிய நெல் (இ.வ.); paddy due from, or to, a chit transaction.

*[சீட்டு + நெல்]*

**சீட்டுப்பணம்** *sīṭṭu-p-paṇam*, பெ. (n.) கூட்டுச் சீட்டுப்பொருளு (நிதி)க்குப் பிறன் மூலமாக வேனும், பிறனுக்கு அப்பொருள் (அந்நிதி) மூலமாகவேனும், சேரவேண்டிய பணம்; money due from, or to, a chit fund (செ.அக.).

*[சீட்டு + பணம்]*

**சீட்டுப்பிடி[1]-த்தல்** *sīṭṭu-p-piḍi-*, 4 செ.கு.வி. (v.i.) 1. கூட்டுச்சீட்டு ஏற்படுத்துதல் (இ.வ.); to organise a chit transaction. 2. சீட்டில் ஏலமெடுத்தல் (இ.வ.); to bid, as a subscriber in a chit transaction.

*[சீட்டு + பிடி. பிடி = பற்றுதல், வெல்லுதல்]*

**சீட்டுப்பிடி²-த்தல்** *sīttu-p-pidi-*, 4 செ.கு.வி. (v.i.) சீட்டு விளையாட்டில் பிறர் சீட்டை வென்றெடுத்தல்; to win a trick in card-play.

*[சீட்டு + பிடி-,]*

**சீட்டுப்புள்ளி** *sīttu-p-pulli*, பெ. (n.) சீட்டுச் சேர்ப்பில் பணங்கட்டுவோன் (இ.வ.); subscriber to a chit-fund.

*[சீட்டு + புள்ளி. புள்ளி = ஆள் (காரண வாகுபெயர்). ஒ.நோ. பெரும்புள்ளி, நல்லபுள்ளி]*

**சீட்டுப்போடு-தல்** *sīttu-p-pōdu-*, 20 செ.கு.வி. (v.i.) 1. சீட்டுக்குலுக்கு-தல் பார்க்க; see *sīttu-k-kulukku-*. 2. கூட்டுச்சீட்டு வைப்பில் (நிதியில்) பங்கெடுத்தல்; to take up shares in a chit fund. 3. சீட்டுவிளையாடுதல்; to play at cards. 4. சீட்டாடுபவருள், ஒருவர் மற்றவர்க்குச் சீட்டுகளைக் கலைத்துப் பிரித்துப்போடுதல்; to shuffle and distribute the cards.

ம. சீட்டிடுக

*[சீட்டு + போடு. சீட்டு = நறுக்குச்சீட்டு, சிற்றோலை, விளையாட்டுச்சீட்டு (நிதியம்). போடு = நழுவவிடு, அடி, செலுத்து, சேர். 'போடு'. து.வி. போகவிடு → போடு]*

**சீட்டுவட்டமறுதி** *sīttu-vattam-arudi*, பெ. (n.) சீட்டு முடிவு (நாஞ்.); close or end of a chit transaction.

*[சீட்டு + வட்டம் + அறுதி]*

**சீட்டுவாங்கு-தல்** *sīttu-vāngu-*, 5 செ.கு.வி. (v.i.) 1. தள்ளப்படுதல்; to receive dismissal order. 2. இறத்தல் (எமனுடைய சீட்டுப்பெறுதல்); to die as receiving Yama's mandate (செ.அக.).

*[சீட்டு + வாங்கு-,]*

சீட்டுக்கிழி-தல் பார்க்க

**சீட்டுவாசகம்** *sīttu-vāsagam*, பெ. (n.) கடிதத்தில் அடங்கியுள்ள பொருள் (யாழ்ப்.); tenor or contents of a letter.

*[சீட்டு + வாசகம்]*

**சீட்டுவிழு-தல்** *sīttu-vilu-*, 2 செ.கு.வி. (v.i.) திருவுளச்சீட்டு முதலியன ஒருவன் சார்பாக உரிமையாதல்; to fall to one's lot, as a lottery, chit (செ.அக.).

*[சீட்டு + விழு-,]*

சீட்டுகுலுக்கு-தல் பார்க்க

**சீட்டை¹** *sīttai*, பெ. (n.) சீட்டி² (இ.வ.) பார்க்க; see *sītti²*.

*[சீட்டி → சீட்டை]*

**சீட்டை²** *sīttai*, பெ. (n.) சீட்டைக்கதிர் (யாழ்ப்.) பார்க்க; see *sīttai-k-kadir*.

*[சிட்டு → சீட்டு → சீட்டை]*

**சீட்டைக்கதிர்** *sīttai-k-kadir*, பெ. (n.) 1. மறுகாம்பில் (இரண்டாம் அறுவடையில்) விளையுங்கதிர் (யாழ்ப்.); ear of corn in the second growth. 2. ஏழைகள் பயன்பாட்டிற்கு விடப்பட்ட கதிர்; gleanings left for the poor.

மறுவ. மறுதாம்புப்பயிர்

*[சிட்டு → சீட்டு → சீட்டை + கதிர்]*

**சீட்டைவாங்கு-தல்** *sīttai-vāngu-*, 5 செ.கு.வி. (v.i.) மறுகாம்பில் (இரண்டாம் அறுவடையில்) கதிர்பரிதல்; to shoot for the ear of corn in the second growth (செ.அக.).

*[சீட்டை + வாங்கு-,]*

**சீடகாபி** *sīdakāpi*, பெ. (n.) இலவமரம்; silk cotton tree (சா.அக.).

**சீடிமண்** *sīdiman*, பெ. (n.) அப்பிரமண்; talc earth (சா.அக.).

**சீடு¹-தல்** *sīdu-*, 5 செ.குன்றாவி. (v.t.) மூடுதல்; to cover. "பொடிசீடின தணல்போலே யிருக்கை" (திவ். திருச்சந்த. 9, வியா, ப. 29).

**சீடு²** *sīdu*, பெ. (n.) நெசவில் பயன்படுத்தும் எட்டுக்குஞ்சவளவு நீளமுள்ள நூற்கண்டு; skein of thread = 8. kuñjam.

தெ. சீடு, க. சிடகு

*[சீர் = துலை, அளவு. சீர் → (சீட்) → சீடு]*

**சீடை** *sīdai*, பெ. (n.) 1. உருண்டை வடிவான சிறுநொறுவை வகை; small ball cakes of rice flour. "சீடைகாரெள்ளினுண்டை" (திவ். பெரியாழ். 2 : 9.9). 2. நருங்கல் (யாழ்ப்); stunted

growth, as of tree, child, etc. 3. நான்கு விரல நீளமும் மஞ்சள்கலந்த நீலநிறமுமுள்ள மீன்வகை; sardine, golden shot with purple, attaining 4 in. in length.

ம. சீட; க. சிடெ, சிடெ; தெ. சிடெலு, சீட, சிடெ.

[சில் → சிறு → சிடு → சீடு → சீடை]

**சீடைப்புழு** *sīḍai-p-puḻu*, பெ. (n.) செடிகளிலுள்ள புழுவகையுளொன்று; a worm found in plants (சா.அக.).

க. சிடெகுளு

[சீடை + புழு]

**சீடையாய்ப்போ-தல்** *sīḍai-yāy-p-pō-*, 8 செ.கு.வி. (v.i.) அதிர்ச்சியால் வளர்ச்சி குன்றல்; to be stunted in growth (சா.அக.).

[சீடையாய் + போ. சிட்டு → சீட்டு → சீடை. சிட்டு = சிறியது, குட்டையானது, வளர்ச்சியற்றது]

**சீண்டரம்** *sīṇḍaram*, பெ. (n.) தொந்தரை (உ.வ.); teasing, vexing.

தெ. சீண்டரமு

[சீண்டு → சீண்டரம்]

**சீண்டல்** *sīṇḍal*, பெ. (n.) விழல்நாற்றம்; bad or rancid smell (சா.அக.).

[சீ → சீண்டு → சீண்டல். சீ = இகழ்ச்சிக் குறிப்பு, இழிவானது]

**சீண்டிரம்**[1] *sīṇḍiram*, பெ. (n.) சீண்டரம் பார்க்க; see *sīṇḍaram*.

ம. சீண்ரம்

[சீண்டரம் → சீண்டிரம்]

**சீண்டிரம்**[2] *sīṇḍiram*, பெ. (n.) 1. அழுக்கு (கசுமாலம்) (வின்.); filthiness, nastiness, stench. 2. இகழ்வுரை (யாழ்.அக.); word of contempt.

[சீண்டு[2] → சீண்டிரம்]

**சீண்டு**[1]**-தல்** *sīṇḍu-*, 5 செ.குன்றாவி. (v.t.) 1. தீண்டியுணர்த்துதல்; to tap, touch gently, as in drawing one's attention. 2. தொந்தரவு செய்தல்; to tease, vex.

ம. சீண்டுக

[தீண்டு → சீண்டு]

**சீண்டு**[2] *sīṇḍu*, பெ. (n.) தயிர் முதலியவற்றின் கெட்டவாடை; stench, as of rancid curd. "சீண்டு நாறுவது முதலிய குற்றங்கள் இல்லாத தயிர்" (சிவதரு. பரமதரு. 35, உரை).

Tu. sīntelu

[சீ → சீண்டு. சீ - இகழ்ச்சிக்குறிப்பு, இழிவானது, தாழ்ந்தது]

**சீத்தடி-த்தல்** *sīttaḍi-*, 4 செ.குன்றாவி. (v.t.) காற்று வாரிவீசுதல்; to sweep away, as wind. "பொடியைச் சூறை சீத்தடிப்ப" (கலிங். 78).

[சீய் → சீய்த்து + அடி → சீத்தடி-,]

**சீத்தபுழுதி** *sītta-puḻudi*, பெ. (n.) உழுதும் விதைக்காத நிலம் (M.Sm.D.i. 279); land ploughed but not sown.

[சீ[5] → சீ-த்தல் + புழுதி]

**சீத்தலைச்சாத்தனார்** *sīttalai-c-cāttaṉār*, பெ. (n.) 1. கடைக்கழகப் புலவர்; a poet of the last Śaṅgam grain merchant of Madura. 2. மணிமேகலையாசிரியர்; the author of Maṇimēgalai.

[சீத்தலை + சாத்தனார்]

**சீத்தி** *sītti*, பெ. (n.) இளப்பம்; inferiority. 'அவனிலும் நான் சீத்தியா' (வின்.).

[சீத்தை → சீத்தி]

**சீத்தியம்** *sīttiyam*, பெ. (n.) சிறுதவசம் (யாழ்அக.); grain.

**சீத்தியோணான்** *sītti-y-ōṇāṉ*, பெ. (n.) ஒரு வகை சிற்றோந்தி (வின்.); a kind of bloodsucker.

[சீத்தி + ஓணான்]

**சீத்திரை** *sīttirai*, பெ. (n.) அம்மான்பச்சரிசி; raw rice plant (சா.அக.).

**சீத்து** *sīttu*, பெ. (n.) மூங்கில்வகையுள் ஒன்று; a kind of bright green bamboo (சா.அக.).

**சீத்துப்பூத்தெனல்** *sīttu-p-pūtteṉal*, பெ. (n.) 1. மூச்சுத்திணறுதற் குறிப்பு; onom. expr. of short, quick breathing. 2. பாம்பு சீறுதற்குறிப்பு; hissing, as of an irritated serpent. 3. முறுமுறுத்தற் குறிப்பு; scolding, querulousness.

**சீத்துவம்**[1] *sīttuvam,* பெ. (n.) *1.* வளம்; prosperity. "சீத்துவமாய் வாழ்வதுவும்" *(பணவிடு. 158). 2.* தூய்மை *(வின்.);* cleanliness, decency.

ம. சீத்தந; Skt. śrī-tva

*[சீர் → சீர்த்தி → சீத்தி → சீத்துவம்]*

**சீத்துவம்**[2] *sīttuvam,* பெ. (n.) *1.* ஊட்டச்சத்து; nutritiousness. "சீத்துவமில்லாத சாப்பாடு" *(யாழ்ப்.). 2.* திறன்; strength, energy. "சீத்துவங் கெட்டவன்" *(நெல்லை.). 3.* உயிர் வாழ்வதற்கு இன்றியமையாதது; anything that is necessary for life. "சீத்துவமிதார்க்குந் தெரியாதோ" *(பஞ்ச. திருமுக. 1406).*

Skt. jīva-tva

*[சீத்துவம்[1] → சீத்துவம்[3]]*

**சீத்தை** *sīttai,* பெ. (n.) *1.* குணமின்மை *(பிங்.);* want of character, lowness, badness. *2.* கைவிடப்பட்டவன்; lost person. "சீத்தையாங் ... கடியவும் ... பாய்ந்தான்" *(கலித். 86). 3.* கீழ்மகன் *(திவா.);* low, base person. *4.* அசடன் *(அக.நி.);* fool, dolt. *5.* பதனழிவு *(வின்);* decay, rottenness, unhealthiness. *6.* சீத்தைப்பூரான் *(யாழ்ப்)* பார்க்க; see *sīttai-p-pūrāṉ.*

ம. சீத்த

*[சீ[3] → சீத்தை. சீ = இகழ்ச்சி]*

**சீத்தைக்கண்** *sīttai-k-kaṇ,* பெ. (n.) புளிச்சைக் கண் *(வின்.);* blear eyes.

ம. சீக்கண்ணு

*[சீத்தை + கண்]*

**சீத்தைக்காடு** *sīttai-k-kāḍu,* பெ. (n.) அடர்ந்த காடு *(வின்.);* jungle, thicket.

*[சீத்தை + காடு]*

**சீத்தைத்தகன்** *sīttai-t-tagaṉ,* பெ. (n.) சீத்தைப் பூரான் *(வின்.)* பார்க்க; see *sīttai-p-pūrāṉ.*

**சீத்தைப்பூரான்** *sīttai-p-pūrāṉ,* பெ. (n.) கெட்டுப்போன பனந்தகன் *(யாழ்ப்.);* rotten kernel of a palmyra stone.

**சீதக்கட்டு** *sīda-k-kaṭṭu,* பெ. (n.) சீதவழும்பு *(நெல்லை.);* slimy, mucous matter voided in dysentery.

*[சீதம் + கட்டு]*

**சீதக்கடுப்பு** *sīda-k-kaḍuppu* பெ. (n.) சீதக்கட்டால் மலவாயிலில் தோன்றும் வலி; sharp, straining pain in dysentery *(செ.அக.).*

*[சீதம் + கடுப்பு]*

**சீதக்கழிச்சல்** *sīda-k-kaḻiccal,* பெ. (n.) வயிற்றுப் போக்கு *(வின்.);* dysentery.

மறுவ. சீதக்கழிவு

*[சீதம் + கழிச்சல்]*

**சீதக்காதி** *sīda-k-kādi,* பெ. (n.) 17-ம் நூற்றாண்டில் கீழக்கரையில் வாழ்ந்தவரும் புலவர்களைப் பெரிதும் போற்றி வந்தவருமாகிய ஒரு முகமதியச் செல்வர் (Rd. M. 228); Syed Kadir, a Muhammadan nobleman of Kīlakkarai near Rāmnāḍ and a great patron of learning, 17th century.

'சையத்காதிர்' எனும் முகமதியப்பெயர் தமிழ் மரபிற்கேற்பச் சீதக்காதி என்றானது.

**சீதநாடு** *sīda-nāḍu,* பெ. (n.) கொடுந்தமிழ் நாடு பன்னிரண்டனுள் கோயமுத்தூர், (நீலமலை) மாவட்டப் பகுதிகளைக் கொண்ட நாடு (நன். 273, உரை); the region where a dialect of Tamil was spoken, corresponding to portions of Coimbatore and Udaga-maṇḍalam, one of 12 koḍuntamil-nāḍu.

ம. சீதநாடு

*[சீதம் + நாடு]*

**சீந்தல்**[1] *sīndal,* பெ. (n.) *1.* மழைத்தூறல் *(வின்.);* drizzle. *2.* மூக்குச்சளி; mucous matter of the nose. "உய்க்குமிழுஞ் சீந்த லுளதேயோ" *(அருட்பா. 1, நெஞ்சறி. 320).*

*[சிந்து → சீந்து → சீந்தில்]*

**சீந்தல்**[2] *sīndal,* பெ. (n.) குளிர்ச்சி; coldness, chillness.

*[சீ → சீந்தில்]*

**சீந்தி** *sīndi,* பெ. (n.) சீந்தில்[1] (இ.வ.) பார்க்க; see *sīndil*[1].

Skt. jīvantī.

**சீந்தில்** *sīndil,* பெ. (n.) படர்கொடி வகை; gulancha, "வீழ் என்பது ஆல் . . . சீந்தில்கட் குரித்து" *(நன். 387, மயிலை).*

[தெல் → தென் → தென்பு = தெளிவு, தென் → தேன் = இனிமை, இனிய மணம். தென் → தேம் → தீம் = இனிமை. தீம் → சீம் → சீந்தில் = இனிப்புச் சுவையுடையது. ஒ.நோ. க. சீ, சீயி (இனிமை)]



சீந்தில்

**சீந்திலுப்பு** *śīndil-uppu,* பெ. (n.) சீந்திற்சருக்கரை (மூ.அ.) பார்க்க; see *śīndiṟ-śarukkarai.*

[சீந்தில் + உப்பு]

அவையல் கிளவியாக உப்பைச் சருக்கரை என வழங்கும் மரபு, இன்றுமுளது. அதனடிப் படையில் சருக்கரையை உப்பு என வழங்குவது மருந்துவக் குழூஉக்குறி போலும்.

**சீந்திற்சருக்கரை** *śīndiṟ-śarukkarai,* பெ. (n.) சீந்திற்கொடியிலிருந்து எடுக்கப்படும் மருந்துப்பு (மூ.அ.); a medicinal salt prepared from gulancha stalk.

[சீந்தில் + சருக்கரை. சருவுதல் = சாய்தல். சரிதல் → சருவு → சருகு. சருகுதல் = சரிதல். சருகு → சருக்கு → சருக்கரம் → சருக்கரை]

**சீந்து[1]-தல்** *śīndu-,* 5 செ.குன்றாவி. (v.t.) சினத்தல்; to be angry with. "சீந்தாநின்ற தீமுக வேலான்" (சீவக. 1055).

[சீறு → சீந்து-,]

**சீந்து[2]-தல்** *śīndu-,* 5 செ.கு.வி. (v.i.) சீறுதல்; to hiss as a serpent. "பைத்துச் சீந்திய வரவம்" (வாயுசங். கிரியாபூ. 40).

[சீறு → சீந்து-,]

**சீந்து[3]-தல்** *śīndu-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. சிந்துதல்; to cast, scatter. 2. மூக்குச் சிந்துதல் (வின்.); to blow, as the nose.

ம. சீந்துக, சீற்றுக; க. சீன், சீந்து, சீந்த்; தெ. சீந்து, சீது; து. சீந்த்ருனி, இம்புனி; கோண். ஈசானா; கூ. ச்ரீந்து; குவி. சிந்தலி, பர். சீந்த், தீத்; கட. சீந்த்; குரு. சீர்னா; மா. இன்செ; பட. சீன்சு

[சிந்து → சீந்து-,]

**சீந்து[4]-தல்** *śīndu-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. மதித்தல்; to have, regard for, respect. யார் உன்னைச் சீந்துவார்கள் (சென்னை). 2. விரும்புதல் (யாழ்.அக.); to desire.

[சிண்டு → சீந்து-,]

**சீந்து[5]-தல்** *śīndu-,* 5 செ.குன்றாவி. (v.t.) தீண்டுதல்; to touch. "அக்குமணியைக் கொடுத்தா லார்சீந்துவார்கள்" (பஞ்ச. திருமுக. 1998).

[தீண்டு → சீந்து-,]

**சீப்பங்கோரை** *śīppaṅ-gōrai,* பெ. (n.) கோரைவகை (யாழ்.அக.); clubrush, bulrush.

[சீப்பு + அம் + கோரை]

**சீப்பால்** *śīppāl,* பெ. (n.) சீம்பால் (வின்.) பார்க்க; see *śīmbāl.*

[சீம்பால் → சீப்பால்]

**சீப்பி** *śīppi* பெ. (n.) குழந்தைகளுண்ணும் சிற்றுண்டிவகை; a sweet meat in the form of a stick chewed by children.

[சூப்பு → சூப்பி → சீப்பி (கொ.வ.)]

**சீப்பிடு-தல்** *śīppiḍu-,* 18 செ.குன்றாவி. (v.t.) மயிர் சீவுதல் (யாழ்.அக.); to comb the hair.

[சீப்பு + இடு-,]

**சீப்பு** *śīppu,* பெ. (n.) 1. மயிர்வாருங் கருவி; comb. "பெருவெண் சீப்பிற் றிருவுற வாரி" (பெருங். உஞ்சைக். 34: 190). 2. வாழைக்குலைச் சீப்பு (உ.வ.); small cluster or bunch of plantain fruits. 3. கதவின்தாழ் (பிங்.); bolt. 4. கதவுக்கு வலியாக உள்வாயிற்படியில் நிலத்தே வீழ விடும் மரம்; wooden brace to a door, driven into the ground in bolting. "எழுவுஞ் சீப்பும்" (சிலப். 15: 215). 5. மதகிலுள்ள அடைபலகை (நாஞ்.); shutter of a sluice. 6. விலாவெலும்பு (யாழ்ப்.); rib.

7. தோட்சீப்பு (வின்.); bones of the shoulder joint. 8. நெசவுக்கருவியின் ஓர் உறுப்பு; weaver's reed frame having parallel flat strips of metal or reed between which the warp threads pass. 9. சீப்பங்கோரை (மு.அ.) பார்க்க; see sīppaṅgōrai. 10. பாளம் (நெல்லை.); lamina, flat piece. 11. காற்று முதலியவற்றால் அடித்துக் கொண்டு வரப்படுவது; that which is wafted, as fragrance by wind. "நாற்றம் . . . மலிர்கால் சீப்பு" (பரிபா. 8 : 54).

ம. சீப்பு, சீர்ப்பு; தெ. சிபு, து. சீப்பு, கீபு; கோத. சீபி; துட. கிச், பர். கீடாத்; பட. சீப்பு.

[சீர் → சீர்ப்பு → சீப்பு]


சீப்பு

**சீப்பு²-தல்** sīppu-, 5 செ.குன்றாவி. (v.t.) சப்புதல் (உ.வ.); to suck.

தெ., க. சீபு

[சப்பு → சிப்பு → சீப்பு-,]

**சீப்புக்கோரை** sīppu-k-kōrai, பெ. (n.) 1. பயிரோடு முளைக்கும் களைவகை (வின்.); a parasitic plant. 2. சீப்பங்கோரை பார்க்க; see sīppaṅgōrai.

[சீப்பு → கோரை]

**சீப்புச்சரட்டை** sīppu-c-caraṭṭai, பெ. (n.) முதுகுப்புறத்தில் சீப்புப்போன்ற செதிலுடைய மீன்வகை (வின்.); a kind of fish with comb-like fins on the back.

[சீப்பு → சரட்டை]


சீப்புச்சரட்டை

**சீப்புச்சிப்பி** sīppu-c-cippi, பெ. (n.) சீப்பின் வடிவுடைய சிப்பி (வின்.); a comb - like shell.

[சீப்பு + சிப்பி]

**சீப்புச்சுறாண்டி** sīppu-c-cuṟāṇḍi, பெ. (n.) சீப்புச்சரட்டை பார்க்க; see sīppu-c-caraṭṭai.

[சீப்பு + சுறாண்டி. சுறா → சுறாண்டி]

**சீப்புசவாய்** sīppušavāy, பெ. (n.) கப்பலின் முகப்புக்கட்டையிற் கட்டுங்கயிறு; jib-stay.

**சீப்புநூல்** sīppu-nūl, பெ. (n.) பட்டைநூல் (இ.வ.); thread wound on a card.

ம. சீப்புநூல்

[சீப்பு → நூல்]

**சீப்புப்பணிகாரம்** sīppu-p-paṇigāram, பெ. (n.) பணிகாரவகை (யாழ்ப்.); a kind of pastry.

[சீப்பு + பணிகாரம்]

**சீப்புப்போடு-தல்** sīppu-p-pōḍu-, 5. செ.கு.வி. (v.i.) அடைபலகையால் மதகையடைத்தல் (நாஞ்.); to close down the shutter of a sluice.

[சீப்பு¹ + போடு-,]

**சீபம்** sībam, பெ. (n.) சரகாண்டச்செய்ந்நஞ்சு (யாழ்.அக.) பார்க்க; see sarakāṇḍa-c-ceynnañju.

**சீபலம்** sībalam, பெ. (n.) வில்வம்; bael. "வில்வந்தானுஞ் சீபலமென்றே சாற்று நாமமும் புணரும்" (சிவதரு. பரமதரு. 32).

Skt. šri-phala

[சீ⁷ + பலம்]

**சீபன்னம்** *sībannam,* பெ. (n.) குமிழ்மர வகை (சிவதரு. சிவஞானதா. 58); a kind of kumil tree.

**சீம்பால்** *sīmbāl,* பெ. (n.) ஆவின் ஈன்றணிமைப்பால் (உ.வ.); beestings, especially of cow as impure.

ம. சீம்பால்; க. கிண்ணி

*[தீம் + பால் - தீம்பால் → சீம்பால்]*

**சீமணல்** *sīmaṇal,* பெ. (n.) நாகமணல் (யாழ்.அக.); sand containing lead ore.

Skt. sīsa

**சீமூத்திரம்** *sīmūttirum,* பெ. (n.) சீயாக வடியும் சிறுநீர்நோய் வகை (M.L.); chyluria.

*[சீழ் → சீ + மூத்திரம். மோள்திரம் → மோட்டிரம் → மூத்திரம்]*

மூத்திரம் பார்க்க

**சீமூதை** *sīmūdai,* பெ. (n.) திராட்சை (மூ.அ.); common grape vine.

**சீமூலம்** *sī-mūlam,* பெ. (n.) சீழ்மூலம் பார்க்க; see *sī-ḻmūlam.*

*[சீழ்மூலம் → சீமூலம்]*

**சீமை** *sīmai,* பெ. (n.) 1. எல்லை; boundary, limit. 2. நாட்டின் பகுதி; country, territory, province, district. "சீமைக்கணக்கு" (பணவிடு. 20). 3. மேலை நாடு (உ.வ.); western country, especially England. 'ஊசி மலிவு என்று சீமைக்குப் போகலாமா?' (பழ.).

ம. சீம; க. சீமெ, சீமா, சீம; பட. சீமெ

*[ஏய் → உயர்ச்சி, பெருமை. ஏ பெற்றாகும் (தொல். உரி. 7). ஏ → ஏண் = உயர்ச்சி. ஏண் → சேண் = உயர்ச்சி. ஏ → (ஏய்) → சேய் → சேய்மை = தொலைவு, நீளம். சேய்மை → சேமை → சீமை]*

த. சீமை → Skt. sīman

**சீமைக்கத்தரி** *sīmai-k-kattari,* பெ. (n.) செடி வகை; egg plant (செ.அக.).

*[சேய்மை → சீமை. சீமை + கத்தரி]*

**சீமைக்கமலம்** *sīmai-k-kamalam,* பெ. (n.) மேல்நாட்டில் பட்டை தீர்ந்த வயிரமணி (உ.வ.); rose diamond, as cut in foreign countries.

*[சீமை + கமலம்]*

**சீமைக்கருப்பூரம்** *sīmai-k-karuppūram,* பெ. (n.) காட்டுக்கஞ்சாங்கோரை (M.M.); sage tea plant.

*[சீமை + கருப்பூரம்]*

**சீமைக்கரி** *sīmai-k-kari,* பெ. (n.) நிலக்கரி (இ.வ.); coal.

*[சீமை + கரி]*

**சீமைக்கள்ளி** *sīmai-k-kaḷḷi,* பெ. (n.) சாதிக்காய் மரம் (இ.வ.); nutmeg-tree.

*[சீமை + கள்ளி]*

**சீமைக்கற்றாழை** *sīmai-k-kaṟṟāḻai,* பெ. (n.) தாழை வகை (L.); giant Mexican lily.

*[சீமை + கற்றாழை]*

**சீமைக்காசான்** *sīmai-k-kāśāṉ,* பெ. (n.) மரவகை (L.); ellisduranta.

**சீமைக்காடி** *sīmai-k-kāḍi,* பெ. (n.) சீமையிலிருந்து இறக்குமதி செய்யப்படுங் காடி; vinegar imported from the western countries.

*[சீமை + காடி]*

காடி பார்க்க.

**சீமைக்காவிக்கல்** *sīmai-k-kāvi-k-kal,* பெ. (n.) செந்நிறக்கல் (காவிக்கல்) (வின்); armenian bole, a soft clayey earth of bright red colour.

*[சீமை + காவிக்கல்]*

**சீமைக்கிச்சிலிக்கிழங்கு** *sīmai-k-kiccili-k-kiḻaṅgu,* பெ. (n.) கிச்சிலிக்கிழங்கு (L.); camphor zedoary.

*[சீமை + கிச்சிலி + கிழங்கு]*

**சீமைக்கிழங்கு** *sīmai-k-kiḻaṅgu,* பெ. (n.) சருக்கரை வள்ளிக்கிழங்கு; sweet-potato.

ம. சீமக்கிழங்ஙு

*[சீமை + கிழங்கு]*

**சீமைக்கொஞ்சி** *sīmai-k-koñji,* பெ. (n.) கறிவேப்பிலை (L.); China box.

*[சீமை + கொஞ்சி]*

**சீமைக்கொட்டைக்களா** *sīmai-k-koṭṭai-k-kaḷā,* பெ. (n.) மரவகை; thornless, long-leaved, sweet thorn.

*[சீமை + கொட்டைக்களா]*

கொட்டைக்களா பார்க்க

**சீமைக்கொய்யா** *sīmai-k-koyyā*, பெ. (n.) கொய்யா வகை (L.); Chinese guava.

*[சீமை + கொய்யா]*

**சீமைக்கொன்றை** *sīmai-k-koṉṟai*, பெ. (n.) கொன்றைவகை (L.); red Indian laburnum.

*[சீமை + கொன்றை]*

**சீமைச்சணல்** *sīmai-c-caṇal*, பெ. (n.) சணல் வகை (புதுவை); a kind of sunn-hemp.

*[சீமை + சணல்]*

**சீமைச்சரக்கு** *sīmai-c-carakku*, பெ. (n.) 1. வெளிநாட்டுச்சரக்கு; foreign goods. 2. கிடைத்தற்கரியசரக்கு; rare valuable commodity, often used ironically. 'இதென்ன சீமைச்சரக்கா?' (உ.வ.).

*[சீமை + சரக்கு]*

**சீமைச்சாமந்தி** *sīmai-c-cāmandi*, பெ. (n.) சாமந்திவகை (M.M. 63); chamomile, flowering shrub.

*[சீமை + சாமந்தி]*

**சீமைச்சிவதை** *sīmai-c-civadai*, பெ. (n.) ஒரு கொடிவகை (மூ.அ); a kind of ipomaea, climber.

*[சீமை + சிவதை]*

**சீமைச்சீரகம்** *sīmai-c-cīragam*, பெ. (n.) ஒருவகைப் பிளப்புச் சீரகம்; a species of cumin seed (சா.அக.).

*[சீமை + சீரகம்]*

**சீமைச்சுண்ணாம்பு** *sīmai-c-cuṇṇāmbu*, பெ. (n.) கரும்பலகை முதலியவற்றில் எழுதப் பயன்படும் சுண்ணாம்புக்கட்டி; chalk - European lime (செ.அக.).

*[சீமை + சுண்ணாம்பு. சுள் → சுண் → சுண்ணம் = பொடி, நீறு. சுண்ணம் → சுண்ணம்பு → சுண்ணாம்பு = காரக்கல் நீறு]*

**சீமைச்செம்பை** *sīmai-c-cembai*, பெ. (n.) சீமைவேல் (L.); see *sīmai-vēl*.

*[சீமை + செம்பை]*

**சீமைச்சோம்பு** *sīmai-c-cōmbu*, பெ. (n.) செடி வகை (M.M.128); caraway.

*[சீமை + சோம்பு]*

**சீமைத்தக்காளி** *sīmai-t-takkāḷi*, பெ. (n.) தக்காளிவகை (M.M. 107); tomato variety.

*[சீமை + தக்காளி]*

**சீமைத்துணி** *sīmai-t-tuṇi*, பெ. (n.) வெளி நாட்டிலிருந்து இறக்குமதி செய்யப்படும் துணி; foreign cloth.

*[சீமை + துணி]*

**சீமைத்துத்தி** *sīmai-t-tutti*, பெ. (n.) துத்திச்செடி வகை (M.M. 914); Marsh mallow.

*[சீமை + துத்தி]*

**சீமைத்தேவதாரு** *sīmai-t-tēvadāru*, பெ. (n.) நீண்டமர வகை (L.); long-leaved pine.

*[சீமை + தேவதாரு]*

**சீமைநன்னாரி** *sīmai-naṉṉāri*, பெ. (n.) நன்னாரி வகை (M.M. 364); sarsaparilla China root.

*[சீமை + நன்னாரி]*

**சீமைநாபி** *sīmai-nābi*, பெ. (n.) ஒரு வகை மருந்துச்செடி (இங்.வை); aconite.

*[சீமை + நாபி]*

**சீமைநாய்விருஞ்சி** *sīmai-nāy-viruñji*, பெ. (n.) நீண்டசெடி வகை (L.); aaron's-rod.

*[சீமை + நாய்விருஞ்சி]*

**சீமைநிலவாகை** *sīmai-nila-vāgai*, பெ. (n.) செடிவகை (வின்.); African senna.

*[சீமை + நிலவாகை]*

**சீமைநிலவேம்பு** *sīmai-nila-vēmbu*, பெ. (n.) நிலவேம்பு வகை; a bitter species of French chiretta.

*[சீமை + நிலவேம்பு]*

**சீமைநிலாவிரை** *sīmai-nilāvirai*, பெ. (n.) சூரத்தாவிரை செடிவகை (L.); African senna.

*[சீமை + நிலாவிரை]*

**சீமைநீலி** *sīmai-nīli*, பெ. (n.) அவுரிவகை (M.M.); West Indian Indigo.

*[சீமை + நீலி]*

**சீமைநூக்கு** *sīmai-nūkku*, பெ. (n.) அயல் நாட்டுமரவகை (L.); true mahogany.

*[சீமை + நூக்கு]*



சீமையகத்தி



சீயக்காய்



சுண்டை



சுருளை மருள்

**சீமைநெல்லி** *šīmai-nelli,* பெ. (n.) *1.* சிறு மரவகை; barbadoes cherry. *2.* நெல்லி மரவகை; box-leaved barbadoes cherry.

*[சீமை + நெல்லி]*

**சீமைப்பச்சைமிளகாய்** *šīmai-p-paccai-miḷagāy,* பெ. (n.) மிளகாய்வகை (L.); cayenne pepper.

மறுவ. சீனி மிளகாய்

*[சீமை + பச்சை மிளகாய்]*

**சீமைப்பருத்தி** *šīmai-p-parutti,* பெ. (n.) அயல்நாட்டுப் பருத்திவகை (L.); barbadoes cotton.

*[சீமை + பருத்தி]*

**சீமைப்பலா** *šīmai-p-palā,* பெ. (n.) ஈரப்பலா; bread-fruit.

*[சீமை + பலா]*

**சீமைப்பற்று** *šīmai-p-paṟṟu,* பெ. (n.) அதிகாரத்திற்குட்பட்ட நாட்டின் எல்லை (R.T.); territorial jurisdiction of government.

*[சீமை + பற்று]*

**சீமைப்பனை** *šīmai-p-paṉai,* பெ. (n.) பனை வகை (L.); chocolate - margined and stalked Mauritius palm.

*[சீமை + பனை]*

**சீமைப்பிரதானி** *šīmai-p-piradāṉi,* பெ. (n.) சீமையதிகாரி பார்க்க; see *šīmai-y-adigāri.*

*[சீமை + பிரதானி]*

**சீமைப்பிரப்பமரம்** *šīmai-p-pirappamaram,* பெ. (n.) இலங்கை மரவகை (வின்.); Ceylon oak.

*[சீமை + பிரப்பமரம்]*

**சீமைப்புளியன்** *šīmai-p-puḷiyaṉ,* பெ. (n.) ஆனைப்புளி (இ.வ.); baobab (செ.அக.).

*[சீமை + புளியன். புளி → புளியன்]*

**சீமைப்பூசனி** *šīmai-p-pūšaṉi,* பெ. (n.) *1.* சருக்கரைப்பூசனி (M.M. 129); squash gourd. *2.* பூசனிவகை (M.M. 130); vegetable marrows.

*[சீமை + பூசனி]*

**சீமைமகிழ்** *šīmai-magiḻ,* பெ. (n.) மகிழமர வகை (L.); iron wood of the cape.

*[சீமை + மகிழ்]*

**சீமைமணத்தக்காளி** *šīmai-maṇa-t-takkāḷi,* பெ. (n.) சீமைத்தக்காளி (M.M. 107) பார்க்க; see *šīmai-t-takkāḷi.*

*[சீமை + (மணித்தக்காளி) மணத்தக்காளி (கொ.வ.)]*

**சீமைமாதுளை** *šīmai-māduḷai,* பெ. (n.) மர வகை (L.); common quince.

*[சீமை + மாதுளை]*

**சீமைமிளகாய்** *šīmai-miḷagāy,* பெ. (n.) நேபாளத்து மிளகாய் (L.); Nepal chilly.

*[சீமை + மிளகாய்]*




**சீமையகத்தி** *šīmai-y-agatti,* பெ. (n.) செடி வகை (L.); large-leafletted eglandular senna.

*[சீமை + அகத்தி]*




**சீமையத்தி** *šīmai-y-atti,* பெ. (n.) அத்தி வகை (L.); common cultivated fig.

*[சீமை + அத்தி]*




**சீமையதிகாரி** *sīmai-y-adigāri,* பெ. (n.) நாட்டையாளும் அதிகாரி (வின்.); administrator or ruler of a country.

*[சீமை + அதிகாரி]*

**சீமையதிமதுரம்** *sīmai-y-adimaduram,* பெ. (n.) சீமைக்குன்றிமணி (இங்.வை.); liquorice.

*[சீமை + அதிமதுரம்]*

**சீமையலரி** *sīmai-y-alari,* பெ. (n.) மஞ்சளலரி வகை (L.); yellow oleander.

*[சீமை + அலரி]*

**சீமையவரை** *sīmai-y-avarai,* பெ. (n.) அவரை வகை (A.); field gram.

*[சீமை + அவரை]*

**சீமையழவனம்** *sīmai-y-alavanam,* பெ. (n.) மருதோன்றி வகை (M.M. 340); harmal.

*[சீமை + அழவனம்]*

**சீமையாமணக்கு** *sīmai-y-āmaṇakku,* பெ. (n.)
1. ஆமணக்குவகை; bronze-leaved physic nut.
2. காட்டாமணக்கு; red physic nut.

*[சீமை + ஆமணக்கு]*

**சீமையால்** *sīmai-y-āl,* பெ. (n.) ஆல்வகை (L.); Assam rubber (செ.அக.).

*[சீமை + ஆல்]*

**சீமையாவிரை** *sīmai-y-āvirai,* பெ. (n.) பிரம்புக் கொன்றை (L.); siamese tree (செ.அக.).

*[சீமை + ஆவிரை]*

**சீமையிந்துப்பு** *sīmai-y-induppu,* பெ. (n.) கழிச்சலையுண்டாக்கும் உப்பு (இங்.வை.); epsom salt.

*[சீமை + இந்துப்பு]*

**சீமையிலந்தம்பழம்** *sīmai-y-ilandam-palam,* பெ. (n.) இலந்தைவகை (M.M.); apple.

மறுவ. இரத்தி

*[சீமை + இலந்தம்பழம்]*

**சீமையிலுப்பை** *sīmai-y-iluppai,* பெ. (n.) ஒரு வகை மரம் (L.); sapodilla.

மறுவ. இருப்பை

*[சீமை + இலுப்பை. இருப்பை → இலுப்பை]*

**சீமையீஞ்சு** *sīmai-y-īñju,* பெ. (n.) ஈஞ்சுவகை (L.); common Indian fern palm.

*[சீமை + ஈஞ்சு]*

**சீமையூமத்தை** *sīmai-y-ūmattai,* பெ. (n.) வெள்ளூமத்தை (L); white-flowered thorn apple.

*[சீமை + ஊமத்தை]*

**சீமையெண்ணெய்** *sīmai-y-enney,* பெ. (n.) மண்ணெண்ணெய் (இ.வ.); kerosene.

க. சீமெயெண்ணி

*[சீமை + எண்ணெய்]*

**சீமைவாகை** *sīmai-vāgai,* பெ. (n.) தூங்குமூஞ்சி மரம் (L.); rain tree.

*[சீமை + வாகை]*

**சீமைவாத்து** *sīmai-vāttu,* பெ. (n.) வாத்துவகை (M.M.942); domestic duck.

*[சீமை + வாத்து]*

**சீமைவெள்வேல்** *sīmai-veḷ-vēl,* பெ. (n.) பேய்க் கருங்காலி; tamarind-like cutch.

*[சீமை + வெள்வேல்]*

**சீமைவெள்ளரி** *sīmai-veḷḷari,* பெ. (n.) வெள்ளரிவகை (வின்.); a kind of melon.

*[சீமை + வெள்ளரி]*

**சீமைவேல்** *sīmai-vēl*, பெ. (n.) மரவகை (L.); Jerusalem - thorn.

*[சீமை + வேல்]*

**சீமைவேலம்பட்டை** *sīmai-vēlam-paṭṭai*, பெ. (n.) 1. பெரியவேல மரவகை; black wattle. 2. சிறியவேல மரவகை; common wattle. 3. செடிவகை; mimosa wattle.

*[சீமை + வேலம்பட்டை]*

**சீய்[1]-த்தல்** *sīy-*, 4 செ.குன்றாவி. (v.t.) 1. பெருக்குதல்; to sweep. "கடைத்தலை சீய்க்கப் பெற்றால்" (திவ். திருவாய். 10. 2 : 7). 2. வெட்டுதல்; to cut down, cut with adze. "பாவக்காட்டைச் சீய்த்து" (திவ். பெரியாழ். 5, 4, 7, வியா). 3. போக்குதல்; to destroy, remove.

*[சீ → சீய்-,]*

**சீய்[2]-த்தல்** *sīy-*, 4 செ.கு.வி. (v.i.) உரைசுதல் (யாழ்.அக.); to rub.

**சீய்க்காய்** *sīy-k-kāy*, பெ. (n.) சீக்காய் பார்க்க; see *sīk-kāy*.

**சீயக்காய்** *sīya-k-kāy*, பெ. (n.) சீக்காய் பார்க்க; see *sīk-kāy*.

*[சீக்காய் → சீயக்காய் (கொ.வ.)]*

**சீயக்காய்ச்சடங்கு** *sīya-k-kāy-c-caḍaṅgu*, பெ. (n.) சீக்காய்ச்சடங்கு பார்க்க; see *sīkkāy-c-caḍaṅgu*.

**சீய்க்காய்ச்சடங்கு** *sīy-k-kāy-c-caḍaṅgu*, பெ. (n.) சீக்காய்ச்சடங்கு பார்க்க; see *sīkkāy-c-caḍaṅgu*.

**சீயகங்கன்** *sīya-gaṅgaṉ*, பெ. (n.) 13ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் நன்னூல் செய்வித்த ஒரு கங்கவரசன்; a Gaṅga prince under whose patronage Nannūl was written early in the 13th C. "திருந்திய செங்கோற் சீயகங்கன்" (நன். பாயி.).

**சீயகு** *sīyagu*, பெ. (n.) புளியீண்டு (L.); rosy-flushed white brasiletto.

**சீயங்கணக்கு** *sīyaṅ-kaṇakku*, பெ. (n.) மூன்றா முறை அணியஞ்செய்யப்பட்ட கணக்கு (வின்.); accounts prepared for the third time.

**சீயங்காய்** *sīyaṅ-kāy*, பெ. (n.) சீக்காய் (யாழ்.அக) பார்க்க; see *sīk-kāy*.

**சீயம்** *sīyam*, பெ. (n.) எருக்கம்பால் (மூ.அ.); madar juice.

**சீயம்பாக்கு** *sīyam-bākku*, பெ. (n.) தாழ் தரமான பாக்கு (இ.வ.); boiled areca-nut of inferior quality.

*[சீயம் + பாக்கு]*

**சீயன்** *sīyaṉ*, பெ. (n.) சீயான் பார்க்க; see *sīyāṉ*. "சிறுமுனிவன் சீயனம் போதிகடைந்தான்" (கந்தரந். 19).

*[சீயான் → சீயன்]*

**சீயா** *sīyā* பெ. (n.) சீக்காய் (யாழ்.அக.) பார்க்க; see *sīk-kāy*.

*[சீக்காய் → சீகைக்காய் → சீயக்காய் → சீக்காய் → சீகாய் → சீயா (கொ.வ.)]*

**சீயாக்காய்** *sīyā-k-kāy*, பெ. (n.) சீக்காய் (யாழ்ப்.) பார்க்க.; see *sīk-kāy* (செ.அக.).

*[சீக்காய் → சீயக்காய் → சீயாக்காய் (இ.வ.)]*

**சீயாள்** *sīyāḷ*, பெ. (n.) மூன்றாம்பாட்டி (வின்.); great grandmother.

*[சேயாள் → சீய்யாள் → சீயாள்]*

**சீயான்[1]** *sīyāṉ*, பெ. (n.) மூன்றாம்பாட்டன் (வின்.); great grandfather.

*[சேய்யான் → சீய்யான் → சீயான்]*

**சீயான்[2]** *sīyāṉ*, பெ. (n.) செம்பூரான்; reddish venomous centipede (செ.அக.).

*[செய்யான் → சீயான்]*

**சீயெனல்** *sī-y-eṉal*, பெ. (n.) வெறுப்புக்குறிப்பு; onom. expr. signifying disgust.

*[சீ[3] → எனல்]*

**சீர்[1]-த்தல்** *sīr-*, 4 செ.கு.வி. (v.i.) சினத்தல்; to be angry. "சுந்தரி பொறாளாய்ச் சீர்த்திடலும்" (கந்தபு. தெய்வயா. 34).

*[சீறு → சீர்-,]*

**சீர்²-த்தல்** *šīr-*, 4 செ.குன்றாவி. (v.i.) 1. சிறத்தல்; to be excellent, to be superior. "பொருள் மற்றெனக்குமோர் பொருடன்னிற் சீர்க்கத் தருமேல்" (திவ். திருவாய். 8. 7 : 6). 2. காலம் வாய்த்தல்; to be suitable, fitting, as an opportunity. "குத்தொக்க சீர்த்த விடத்து" (குறள், 490). 3. ஓசை நயம்படநிற்றல்; to fall into rhythmic movement. "சொற்சீர்த் திறுதல்" (தொல். பொருள். 324, உரை).

ம. சீர்க்குக

[சீ → சீர்]

**சீர்³-த்தல்** *šīr-*, 4 செ.கு.வி. (v.i.) நிகழ்தல், நேரிடுதல்; to happen, occur. "புலந்தலைப் பெய்தலறிவுடன் சீர்க்குமன்றே" (நீலகேசி, 509).

[சீ → சீர்-,]

**சீர்⁴** *šīr*, பெ. (n.) 1. செல்வம் (பிங்.); prosperity, wealth. 'சீர் அற்றார் கையில் செம்பொன் விளை பெறா' (பழ.). 2. அழகு; beauty, gracefulness. "சீர்கெழு சிறப்பின்" (மலைபடு. 570.). 3. நன்மை (திவா.); goodness. 4. பெருமை; greatness, excellence, superiority. "சீர்கெழு கொடியும்" (புறநா. 1). 5. தலைமை; paramount importance. "ஊரூர் கொண்ட சீர்கெழு விழவினும் . . ." (திருமுரு. 220). 6. மதிப்பு; esteem, regard. "வணக்கருஞ்சீர் . . . மன்னன்" (பு.வெ.9, 22). 7. புகழ்; reputation, fame. "ஆனாச்சீர்க் கூடலுள்" (கலித். 30). 8. இயல்பு; nature, characteristic. "கழற்பெய் குடத்தின் சீரே" (நன். பொது. 32). 9. நேர்மை; good, normal condition. 'அவன் சீராக இருக்கிறானா?' (உ.வ.). 10. செம்பொருள் (அக.நி.); literal meaning. 11. சமம்; equilibrium, evenness. "உலகுசீர்பெற விருந்தான்" (கம்பரா. அகத். 40).

Skt. šri

[சீ⁶ → சீர்]

**சீர்⁵** *šīr*, பெ. (n.) 1. சீர்தூக்குங்கோல் (தராசு) (பிங்.); balance. 2. அளவு; measure, quantity. "விரிசீர்த் தெரிகோல்" (புறநா. 6 : 8). 3. எடை; heaviness. "விழுச்சீ ரையவி" (பதிற்றுப். 22). 4. துலையோரை (சூடா.); libra of the Zodiac. 5. காவடித்தண்டு (திவா.); shoulder-staff for carrying burden. "யானைக்கோடு சீராக" (மலைபடு. 154). 6. தண்டப் படைக்கலம் (பிங்.); club, bludgeon.

[சீ → சீர்]

**சீர்⁶** *šīr*, பெ. (n.) 1. தாளம்; time-measure. "தண்குரவைச் சீர்" (புறநா. 24, 6). 2. பாட்டு; song. "சேயுய ரூசற்சீர்" (கலித். 131 : 24.). 3. செய்யுளின் ஓருறுப்பு; metrical foot. "யாத்த சீரே யடியாப்பெனா" (தொல். பொருள். 313). 4. இசைக் கருவியாலெழும் ஒலி (திவா.); sound of musical instruments. 5. ஓசை (அக.நி); sound. 6. சீர் சிறப்பு² (உ.வ.) பார்க்க; see *šīr-širappu*. 7. காலிலணிவதற்குரிய தண்டை (வின்.); tinkling ornaments for the feet.

ம. சீலு

[சீ → சீர்-,]

**சீர்⁷** *šīr* பெ. (n.) தளர்வு (அக.நி.); weak condition.

[சீ → சீர்-,]

**சீர்க்கம்** *šīrkkam* பெ. (n.) மண்டபத்தில் அமைக்கப்படும் சிற்ப வகை; an ornamental structure in a hall. "கொடுக்குஞ் சீர்க்கமு மடுத்து" (பெருங். மகத. 9 : 36).

[சீர் → சீர்க்கம்]

**சீர்க்காரம்** *šīrkkāram* பெ. (n.) எதிரொலி (யாழ்.அக.); echo.

Skt. šīlkāra

[சீழ்க்கை → சீர்க்கை → சீர்க்கார் → சீர்க்காரம்]

**சீர்க்கோழி** *šīr-k-kōḻi* பெ. (n.) நரைக்கொள்ளு (மலை.); a kind of gram.

**சீர்குலை-தல்** *šīr-kulai-*, 4 செ.கு.வி. (v.i.) 1. ஒழுங்கு முறைகெடு; to be in disorder, to be deranged. 2. ஒழுக்கங்கெடுதல்; to lose one's character, chastity, as a woman. 3. நிலை கெடுதல்; to be ruined in circumstances.

**சீர்கெடு-தல்** *šīr-keḍu-*, 20 செ.கு.வி. (v.i.) சீர்குலை- பார்க்க; see *šīr-kulai-*.

[சீர் + கெடு-,]

**சீர்கேடி** *sīr-kēḍi* பெ. (n.) மூதேவி (பிங்.); goddess of Misfortune.

*[சீர்கெடு → சீர்கேடு → சீர்கேடி]*

**சீர்கேடு** *sīr-kēḍu* பெ. (n.) 1. ஒழுங்கின்மை (உ.வ.); disorder, irregularity. 2. அழகிலி, அருவருப் புள்ளது (வின்.); ugliness, clumsiness. 3. நிலை குலைவு (வின்.); misfortune.

*[சீர் + கேடு. கெடு → கேடு]*

**சீர்கோடிகம்** *sīr-kōḍigam,* பெ. (n.) பாலைப் பண்ணின் திறங்களில் ஒன்று (சிலப். 14: 160, உரை.); ancient secondary melody-type of the pālai class.

**சீர்சிறப்பு** *sīr-śiṟappu,* பெ. (n.) 1. மிகுசெழிப்பு (வின்.); prosperity. 2. பொருட் கொடை (இ.வ.); gifts to a girl given by her parents on the occassion of her marriage.

*[சீர் + சிறப்பு]*

**சீர்செய்-தல்** *sīr-śey-,1* செ.குவி. (v.i.) திருமணம் முதலியவற்றில் உறவின் முறையார் செய்யும் சீர்வரிசை; to give presents, as to a daughter, on the occasion of her marriage and other ceremanies.

*[சீர் + செய்-,]*

**சீர்த்தவர்** *sīrttavar,* பெ. (n.) சீரியர் பார்க்க; see *sīriyar.* "சீர்த்தவர் செய்யத்தக்க கருமமே" (கம்பரா. களியாட்டு. 9).

*[சீர்³ → சீர்த்தவர்]*

**சீர்த்தி** *sīrtti,* பெ. (n.) மிகுபுகழ் (தொல். சொல். 313); great reputation, renown. 'சீவன் போனாலும் சீர்த்தி போகாது' (பழ.).

*[சீ³ → சீர் → சீர்த்தி]*

**சீர்த்துழாய்** *sīr-t-tuḻāy,* பெ. (n.) துளசி (மலை.) பார்க்க; see *duḷaśi.*

*[சீ → சீர் + துழாய்]*

**சீர்தட்டுதல்** *sīr-taṭṭudal,* பெ. (n.) தூய்மை யற்றோர் நெருங்குதலாலேனும், தொடுதலா லேனும், குழந்தைக்கு நோய்மிகுகை (இ.வ.); sickness of a child caused or aggravated by the touch or approach of impure persons.

*[சீர் + தட்டுதல். தட்டுதல் = மோதுதல், கெடுதல், தீண்டுதல்]*

**சீர்திருத்தத்திருமணம்** *sīr-dirutta-t-tirumaṇam,* பெ. (n.) மரபான சடங்குகளை முற்றுந் தவிர்த்துச் செய்யும் மணமுறை; marriage conducted according to one's self-respect rejecting all the traditional rites.

*[சீர்திருத்தம் + திருமணம்]*

சடங்கு திருமணங்களே சட்டப்படிச் செல்லும் என்ற நிலையை மாற்றிச் சீர்திருத்தத் திருமணமும் செல்லும் என்று 1969-ஆம் ஆண்டு தமிழக அரசு சட்டம் நிறைவேற்றியது.

**சீர்திருத்தம்** *sīr-diruttam,* பெ. (n.) செவ்வைப் படுத்துகை, சீர்படுத்துகை; reform, reformation, correction.

*[சீர் + திருத்தம்]*

**சீர்திருத்து-தல்** *sīr-diruttu-,5* செ.குன்றாவி. (v.t.) செவ்வைப்படுத்துதல்; to correct, rectify, reform.

*[சீர் + திருத்து-,]*

**சீர்திருந்து-தல்** *sīr-dirundu-,5* செ.குன்றாவி. (v.t.) செவ்வைப்படுதல்; to be corrected, rectified, reformed.

*[சீர் + திருந்து-,]*

**சீர்தூக்கு-தல்** *sīr-dūkku-,5* செ.குன்றாவி. (v.t.) 1. நிறையளவை வரையறுத்தல்; to determine the weight of. "சமன்செய்து சீர்தூக்குங் கோல்போல்" (குறள், 118). 2. ஆராய்தல்; to weigh in the mind, consider. "சீர்தூக்காக் கொடையும்" (பு. வெ. 9 : 1, கொளு, உரை). 3. ஒப்புநோக்குதல்; to compare. "மன்னனு மாசறக் கற்றோனுஞ் சீர்தூக்கின்" (வாக்குண். 26).

*[சீர்³ + தூக்கு-,]*

**சீர்தைத்தல்** *sīr-daittal,* பெ. (n.) சீர்தட்டுதல் (இ.வ.) பார்க்க; see *sīrdaṭṭudal.*

*[சீர் + தைத்தல்]*

**சீர்நிருவாகம்** *sīr-niruvāgam,* பெ. (n.) நிலைமை; condition, circumstances. 'இந்தச் சீர் நிருவாகத்தில் என்ன செய்வது' (வின்.).

*[சீர் + நிருவாகம்]*

**சீர்ப்படு-தல்** *sīr-p-paḍu-,20* செ.கு.வி. (v.i.) 1. செம்மைப்படுதல்; to reform, improve.

2. அளவிற்படுதல்; to be moderate. "சீர்ப்படவுண்ட சிறுகளி யேருண்கண்" (கலித். 97).

[சீர் + படு-,]

**சீர்ப்படுத்து-தல்** *šīr-p-paḍuttu-,* 5 செ. குன்றாவி. (v.t.) குணப்படுத்துதல் (இ.வ.); to bring round, cure.

[சீர் + படுத்து-,]

**சீர்ப்பாடு** *šīr-p-pāḍu,* பெ. (n.) மேம்பாடு; greatness. "திருமுனைப்பாடித் திறம்பாடுஞ் சீர்ப்பாடு" (பெரியபு. திருநாவுக். 11).

[சீர் + பாடு]

**சீர்ப்பிழை** *šīr-p-pilai,* பெ. (n.) 1. குற்றம் (வின்.); mistake, defect. 2. தடை; impediment, obstacle, untoward circumstance.

[சீர் + பிழை]

**சீர்ப்பு** *šīrppu,* பெ. (n.) சிறப்பு; excellence. "சீர்ப்பமை சிகழிகை" (பெருங். உஞ்சைக். 42, 148.).

ம. சீர்ப்பு (தடிப்பு)

[சீர் → சீர்ப்பு]

**சீர்பாடல்** *šīrbāḍal,* பெ. (n.) திருமணத்தில், பெரும்பாலும் நான்காம் நாள் நடக்குந் திருமண நிகழ்ச்சியில், மணமக்களின் பெற்றோர்களைப் புகழ்ந்துபாடுகை (மாலியம்); extolling or recounting the excellences of wedding parties, usually on the fourth day of marriage.

[சீர் + பாடல்]

**சீர்போடு-தல்** *šīr-bōḍu-,* 19 செ.கு.வி. (v.i.) காற்றாடிப் பட்டத்துக்குக்கயிறு கட்டுதல் (யாழ்ப்.); to tie the balance-string to a paper kite.

[சீர் + போடு-,]

**சீர்மடக்கு** *šīr-maḍakku,* பெ. (n.) செய்யுளுள் சீர் இடைமடக்கி வருகை (வின்.); repetition of a foot in a metrical line.

[சீர் + மடக்கு]

**சீர்மரம்** *šīr-maram,* பெ. (n.) படமரம் என்னும் நெசவுக்கருவி (வின்.); weaver's beam.

[சீர்⁴ + மரம்]




**சீர்மை¹** *šīrmai,* பெ. (n.) 1. சிறப்பு; greatness, excellence, eminence. "செறிவறிந்து சீர்மை பயக்கும்" (குறள். 123). 2. புகழ்; reputation, renown. "குடிமைக்குஞ் சீர்மைக்கும்" (தஞ்சைவா. 241). 3. நிறை; weight. "மென்மை, சீர்மை, நொய்ம்மை" (மணிமே. 27:254). 4. அளவிற்படுகை; moderateness. "நின்னை மிகாமற் சீர்மைப்பட நுகர்ந்த சிறிய களிப்பு" (கலித். 97, உரை). 5. நன்னடை; decorum, good behaviour. "சீர்மை சிறிதுமிலி" (திருப்பு. 109). 6. வழவழப்பு (வின்); smoothness, evenness, polish.

ம. சீர்ம்ம

[சீர் → சீர்மை]

**சீர்மை²** *šīrmai,* பெ. (n.) சீமை (வின்) பார்க்க; see *šīmai.*

[சீமை → சீர்மை (இ.வ.)]

**சீர்வண்டு** *šīrvaṇḍu,* பெ. (n.) நெய்வார்கருவியிலொன்று (வின்.); a weaver's instrument.

[சீர் + வண்டு]

**சீர்வரிசை** *šīrvarišai,* பெ. (n.) சீர்செய்தல் பார்க்க; see *šīršey-.*

[சீர் + வண்டு]

**சீரகக்கோரை** *šīraga-k-kōrai,* பெ. (n.) கோரை வகை (சங்.அக); a kind of sedge.

Skt. jīraka

[சீரகம் + கோரை]

**சீரகச்சம்பா** *šīraga-c-cambā,* பெ. (n.) 1. மடங்கல் (ஆவணி), கன்னி (புரட்டாசி) மாதங்களில் விதைக்கப்பெற்று ஐந்து மாதங்களிற்

பயிராகுஞ் சம்பாநெல் வகை (பதார்த்த. 814); a superior kind of paddy sown in September and maturing in five months. 2. ஒருவகைச் செந்நெல்: a variety of red paddy.

*[சீரகம் + சம்பா]*

**சீரகத்தாமன்** *śīraga-t-tāmaṉ*, பெ. (n.) 1. சீரகத்தாரோன் (வின்) பார்க்க; see *śīraga-t-tārōṉ*. 2. வணிகன் (R.); member of the Vaišya caste.

*[சீரகம் → சீரகத்தாமன்]*

**சீரகத்தாரோன்** *śīraga-t-tārōṉ*, பெ. (n.) சீரகமாலையணிந்த குபேரன் (பிங்.); Kubēraṉ, as wearing a garland of śiragam.

*[சீரகம் + தாரோன். தார் = மாலை, தார் → தாரோன்]*

**சீரகபாடி** *śīraga-pāḍi*, பெ. (n.) கோட்டம் (மலை.); Arabian costum.

*[சீரகம் + பாடி]*

**சீரகம்[1]** *śīragam*, பெ. (n.) 1. செடிவகை (பதார்த்த: 1032); cumin. 2. ஒரு நிறையளவு (தொல். எழுத்து. 170, உரை); a small measure of weight.

Skt. jīraka

*[சீர் → சீரம் → சீரகம்]*

சீரம் → சீரகம்.

உலகில் முதன்முதற் சிறந்தமுறையில் சமையல் தொழில் தொடங்கியதும், அதற்குச் சீரகத்தைப் பயன்படுத்தியதும், தமிழகமே.

"சிறுபிள்ளை யில்லாத வீடும் சீரகமில்லாத கறியும் செவ்வையாயிரா" என்பது தொன்று தொட்டு வழங்கும் பழமொழி.

சீரகக்கோரை, சீரகச்சம்பா, சீரகவள்ளி என்பன ஒப்புமைபற்றிப் பெயர்பெற்ற நிலைத்திணை வகைகள்.

பொன்னளவையிற் சீரகம் என்பது ஓர் அளவு.

5 கடுகு = 1 சீரகம், 5 சீரகம் = 1 நெல்

"அளவிற்கும் நிறையிற்கும் மொழிமுதலாகி
யுளவெனப்பட்ட வொன்பதிற் றெழுத்தே
அவைதாம்.
கசதப வென்றா நமவ வென்றா
அகர உகரமோ டவையென மொழிப" (தொல். எழுத்து. 170)

என்னும் தொல்காப்பிய எழுத்ததிகார நூற்பா வுரையில், "கழஞ்சு சீரகம், தொடி, பலம், நிறை, மா, வரை, அந்தை" என்று இளம்பூரணரும்; "கழஞ்சு சீரகம் தொடி, பலம், நிறை, மா, வரை, அந்தை இவை நிறை" என்று நச்சினார்க்கினியரும், கூறியிருத்தலையும், நோக்குக. செரி → செரியகம் → சீரகம்.

வடவர் மூலம் காட்டும் வகை: - ஜீரக = ஜீரண. ஜ்ரு = ஜீரண. ஜ்ரு - கிழமாக்கு, கட்டுக்குலை, கரை, செரிக்கச் செய். ஜ்ரு என்பது கிழ என்னும் தென்சொற்றிரிபே. (வ.மொ.வ. 153).




**சீரகம்[2]** *śīragam*, பெ. (n.) பன்றி (யாழ்.அக.); hog.

**சீரகர்** *śīragar*, பெ. (n.) புத்த மதத்தவர் (மரப் பட்டை தரித்தோர்); Buddhist, as clad in bark.

Skt. śīraka

*[சீரை = மரவுரி, மரப்பட்டை. சீரை → சீரையர் → சீரகர்]*

**சீரகரை** *śīragarai*, பெ. (n.) அரைச்சீரக அளவு (தொல். எழுத்து. 171, உரை); a measure of weight = half a śiragam.

*[சீரகம் + அரை]*

**சீரகவள்ளி** *śīraga-vaḷḷi*, பெ. (n.) 1. காட்டுக்காய் வள்ளி (L.); cultivated yam. 2. காட்டுச் சீரகவள்ளி (M.M. 463); Malacca yam.

*[சீரகம் + வள்ளி]*

**சீரங்கச்சம்பா** *śīraṅga-c-cambā*, பெ. (n.) நெல்வகை (மதி.க., 6); a kind of paddy.

*[சீரகச்சம்பா → சீரங்கச்சம்பா]*

**சீரங்கராயன்** *śīraṅga-rāyaṉ*, பெ. (n.) பழைய காசு வகை (பணவிடு. 117).; an ancient coin.

*[சீரங்கம் + அரையன் → ராயன்]*

**சீரங்கி** *śīraṅgi*, பெ. (n.) ஒருவகை நெல்; a kind of paddy.

**சீரணன்** *śīraṇaṉ*, பெ. (n.) கிழவன் (யாழ்.அக.); old man.

**சீரணி**[1] *śīraṇi*, பெ. (n.) ஓமம் (மலை.); bishop's weed.

**சீரணி**[2] *śīraṇi*, பெ. (n.) 1. காடு (திவா.); jungle, forest. 2. கூத்தின் வேறுபாடு; quick step in dancing. 3. பந்தத்தில் எரிதற்குச் சுற்றுந் துணி; fuse-cloth in a torch.

*[சீர்² + அணி]*

**சீரணி**[3] *śīraṇi*, பெ. (n.) ஒரு பணியாரம் (வின்.); a kind of pastry.

U. sīrā

**சீரணி**[4] *śīraṇi*, பெ. (n.) ஒழுங்கான அணி; systamatic parade. 'சீரணி கெட்டால் கோரணி' (பழ.).

*[சீர் + அணி]*

**சீரணிபோடு-தல்** *śīraṇi-pōḍu-*, 20 செ.குன்றாவி. (v.i.) கூத்தில் விரைந்து அடியெடுத்துவைத்தல் (வின்.); to move with quick steps in dancing.

*[சீரணி + போடு-,]*

**சீரணை** *śīr-aṇai*, பெ. (n.) பழக்கம் (யாழ்.அக); habit, custom, constant use.

*[சீர்² + அணை]*

**சீரத்துவசன்** *śīra-t-tuvasaṉ*, பெ. (n.) மேழிக் கொடியையுடைய சனகன் (அபி.சிந்.); King Janaga, as having a plough as his flag.

*[சீர் = மேழி. சீர் → சீரத்துவசன்]*

**சீரந்தாதி** *śīr-andādi*, பெ. (n.) பாட்டில் ஓரடியின் இறுதிச்சீர் அடுத்த அடியின் முதற்சீரோடு தொடுத்து வருவது (தொல். பொருள். 411, உரை); repetition of the final foot of a line as the initial foot of the following line.

*[சீர் + அந்தாதி. அந்தாதியை ஈறு தொடங்கி என்பது செந்தமிழ் வழக்கு]*

**சீரம்**[1] *śīram*, பெ. (n.) மரவுரி; bark of a tree, used as clothing. "தீரா மனத்தாள் தரவந்தன சீரம்" (கம்பரா. நகர்நீ. 147).

Skt. śīra

*[சீரை¹ → சீரம்]*

**சீரம்**[2] *śīram*, பெ. (n.) கலப்பை; plough. "சீரங்கராக மறமோது திகிரி செங்கை" (சுந்தரந். 98).

Skt. sīra

*[சீர் → சீரம்]*

**சீரம்**[3] *śīram*, பெ. (n.) பால் (வின்); milk.

Skt. ksīra

**சீரம்**[4] *śīram*, பெ. (n.) இலாமிச்சை (மலை.); cuscuss grass.

Skt. uśīra

**சீரம்**[5] *śīram*, பெ. (n.) சீரகம்,1 (மூ.அ) பார்க்க; see *śīragam,1* (செ.அக.).

*[சீரகம் → சீரம்]*

**சீரமோடா**[1] *śīram-ōḍā*, பெ. (n.) 1. வீழி (மலை.); a straggling shrub with simple oblong leaves and greenish flower. 2. நார்ச்சீலை (வின்.); cloth made of fibres.

*[சீரம்¹ → சீரமோடா]*

**சீரமோடா**[2] *śīram-ōḍā*, பெ. (n.) காட்டெருமைப் பால் (வின்.); milk of the wild buffalo.

*[சீரம்³ → சீரமோடா]*

**சீரலைவாய்** *śīr-alai-vāy*, பெ. (n.) அலைவாய் என்னும் பெயருடைய திருச்செந்தூர்; Tiruccendūr, in Tinnevelly district, as situate in the sea-shore. "விழுச் சீரலைவாய்ச் சேறலும்" (திருமுரு. 125).

*[சீர் + அலைவாய்]*

அலைவாய் பார்க்க

**சீரவட்டம்** *śīra-vaṭṭam* பெ. (n.) ஈயம் (மலை.); lead.

**சீரழி**[1]**-த்தல்** *śīr-aḻi-* 4 செ.குன்றாவி. (v.t.) 1. ஒழுங்குலைத்தல்; to cause, disorder; to disarrange. 2. கற்பழித்தல்; to ravish, as a woman. 3. நிலைகெடுத்தல் (வின்.); to ruin.

*[சீர்² + அழி-,]*

**சீரழி²-தல்** *sīrali,²* 2 செ.கு.வி. (v.i.) சீர்குலை- பார்க்க; see *sīr-kulai-*.

*[சீர் + அழி-,]*

**சீரளவு** *sīraḷavu,* பெ. (n.) நேர்மையாக அளக்கை (இ.வ.); measuring properly.

*[சீர் + அளவு]*

**சீரா¹** *sīrā,* பெ. (n.) தலைச்சீரா; helmet. "கிடந்த பேராசு சீரா" (திருவாலவா. 45 : 9).

Skt. šīrṣa

*[சீர் → சீரா]*

**சீரா²** *sīrā,* பெ. (n.) புரசமரம் (மலை.); palas tree.

மறுவ. பலாசம்

**சீரா³** *sīrā,* பெ. (n.) கவசம் (வின்.); armour, coat of mail.

U. zirāh

**சீரா⁴** *sīrā,* பெ. (n.) சிற்றுண்டிவகை; a confection.

U. sirā

**சீராகம்** *sīrāgam,* பெ. (n.) ஒருவகைப் பண் (பிங்.); a specific melody-type.

Skt. šri-rāga

*[சீர் + ராகம். அராகம் → ராகம்]*

**சீராங்கம்** *sīrāṅgam,* பெ. (n.) 1. கலப்பை (யாழ்.அக.); plough. 2. கொழு; ploughshare.

*[சீரம் → அங்கம்]*

**சீராட்டு¹-தல்** *sīrāṭṭu-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. செல்லம்பாராட்டுதல்; to caress, pet. "பேராட்டி சீராட்டும் பிள்ளையார்" (கோயிற்பு. பாயி. 7). 2. கொண்டாடுதல்; to extol, applaud; "கரத்தாற் றைவந்து சீராட்டி யுரைத்தாள்" (சிவரக. தேவியுடன். 24).

*[சீர் + ஆட்டு-,]*

**சீராட்டு²** *sīrāṭṭu,* பெ. (n.) செல்லம் பாராட்டுகை; caressing, fondling. "பாலர்க்குரிய சீராட்டுப் பண்ணி" (சேது. அநுமகுண். 12).

**சீராட்டு³** *sīrāṭṭu,* பெ. (n.) சிறுசண்டை, ஊடல் (இ.வ.); petty quarrel.

*[சீராடு → சீராட்டு]*

**சீராடிக்கொண்டுபோகை** *sīrāḍi-k-koṇḍu-pōgai,* பெ. (n.) கணவன்வீட்டில் சிறுசண்டையிட்டுக் கொண்டு அதுகாரணமாக மனைவி தன் பிறந்தகஞ் செல்லுகை (இ.வ.); going of a married girl from her husband's house to her father's on the pretext of a petty quarrel.

*[சீராடிக்கொண்டு + போகை]*

**சீராடு-தல்** *sīrāḍu-,* 5. செ.கு.வி. (v.i.) சிறு சண்டையிடுதல்; to pick petty quarrels. "ஏன் ஓயாமல் சீராடுகிறாய்?" (நெல்லை).

*[சீர் + ஆடு-,]*

**சீராமமாடை** *sīrāma-māḍai,* பெ. (n.) பழைய பொற்காசு வகை; an ancient gold coin. "ஒரு சீராம மாடையுங் கொடுத்து" (கோயிலொ. 143).

**சீராளதேவன்** *sīrāḷa-dēvaṉ,* பெ. (n.) பெற்றோராற் கொன்று, கறியாகச் சமைத்து அடியார்உருவில் வந்த சிவனுக்குப் பரிமாறப் பட்டுப் பின், அவனருளால் உயிர் பெற்றெழுந்த சிறுத்தொண்ட நாயனாரின் மைந்தன்; the son of Šiṟuttoṇḍar who was cut up cooked and served to Šivaṉ by his parents, but miraculously brought back to life by Him. "சீராள தேவரெனுந் திருமைந்த ரவதரித்தார்" (பெரியபு. சிறுத்தொண். 17).

*[சீராளன் + தேவன்]*

**சீராளன்** *sīrāḷaṉ,* பெ. (n.) 1. சிறப்புற்றவன்; distinguished person. "மனக்கினிய சீராளன்" (பதினொ. அற்புத. 44). 'சீராளனைப் பெற்றபிறகு திருச்சீலைத்துணிக்கு வருத்தமாச்சுது' (பழ.) 2. சீராளதேவன் பார்க்க; see *sīrāḷa-dēvaṉ*. "சீராளா வாராய்" (பெரியபு. சிறுத்தொண். 81).

*[சீர்² + ஆளன்]*

**சீரி¹-த்தல்** *sīri-,* 4 செ.கு.வி. (v.i.) சிறப்புறுதல்; to be magnificent. "சீரித்த வேலவன் யாரையென்று" (தணிகைப்பு. களவு. 494).

*[சீர்³ → சீரி-,]*

**சீரி²** *sīri,* பெ. (n.) முக்காடு (யாழ்.அக.); veil.

*[சீரை¹ → சீரி]*

**சீரிகை** *sīrigai,* பெ. (n.) சிள்வண்டு (யாழ்.அக.) பார்க்க; see *siḷvaṇḍu*.

ம. சீரி

*[சீர் → சீரிகை]*

**சீரிடம்**[1] *šīriḍam,* பெ. (n.) வாய்த்தஇடம்; suitable place or opportunity. *"சீரிடங்காணி னெறிதற்குப் பட்டடை" (குறள். 821).*

*[சீர்[3] + இடம்]*

**சீரிடம்**[2] *šīriḍam,* பெ. (n.) தலை (யாழ்.அக.); head.

Skt. šīrṣa

**சீரிடம்**[3] *šīriḍam,* பெ. (n.) வாகைமரம் (மலை.); siris tree.

Skt. šīriṣa

**சீரிப்பு** *šīrippu,* பெ. (n.) சீரணை (வின்.) பார்க்க; see *šīraṇai.*

*[சீர்[2] → சீரிப்பு]*

**சீரிமரம்** *šīri-maram,* பெ. (n.) புளியமரம் (மலை.); tamarind tree.

*[சீரி + மரம்]*

**சீரிய** *šīriya,* கு.பெ.எ. (adj.) சிறப்பான; of surpassing excellence. *"சீரிய சிங்காதனத் திருந்து" (திவ். திருப்பா. 23).*

*[சீர்[2] → சீரிய]*

**சீரியர்** *šīriyar,* பெ. (n.) பண்பார்ந்த செயல்களாற் சிறந்தவர்; the noble, the great. *"சீரியர் கெட்டாலுஞ் சீரியர் சீரியரே" (மூதுரை, 18).*

*[சீர்[2] → சீரியர். 'அர்' உடைமைப் பெயரீறு]*

**சீரியார்** *šīriyār,* பெ. (n.) சீரியர் பார்க்க; see *šīriyar.* *"சீரியார் கேண்மை" (நாலடி. 232).*

*[சீரியர் → சீரியார்]*

**சீருகை** *šīrugai,* பெ. (n.) சீரிகை (யாழ்.அக.) பார்க்க; see *šīrigai.*

*[சீரிகை → சீருகை]*

**சீருணம்** *šīruṇam,* பெ. (n.) செம்பு (திவா.); copper. *"சீருணத் தசும்ப ரொன்றில்" (கந்தபு. வில்வலன் வாதாவி வதை. 13).*

*[சீர்[2] + உண்(மை) = சீருண். சீருண் → சீருணம். 'அம்' சொல்லாக்க ஈறு]*

**சீருணி** *šīruṇi,* பெ. (n.) சீருணம் (வின்.) பார்க்க; see *šīruṇam.*

*[சீருணம் → சீருணி]*

**சீருள்** *šīruḷ,* பெ. (n.) 1. ஆக்கம் (பிங்.); prosperity, wealth. 2. செம்பு; copper. 3. ஈயம்; lead. 4. வெள்ளீயம்; pewter.

*[சீர்[2] → சீருள்]*

**சீருளியம்** *šīruḷiyam,* பெ. (n.) சீருணம் (அக.நி.) பார்க்க; see *šīruṇam.*

*[சீருள் → சீருளி + அம். 'அம்' = சொல்லாக்க ஈறு]*

**சீரெடு-த்தல்** *šīreḍu-,* 4 செ.கு.வி. (v.i.) சீர்செய்- பார்க்க; see *šīr-šey-.*

*[சீர் + எடு-,]*

**சீரை**[1] *šīrai,* பெ. (n.) 1. செதுக்கப்பட்ட மரவுரி; bark of a tree, used as clothing. *"சீரை தைஇய வுடுக்கையர்" (திருமுரு. 126).* 2. சீலை (பிங்.); cloth. 3. கந்தை; rags, tatters. *"செடிபடுந் துணியுடைச் சீரை சுற்றினான்" (திருவாலவா. 54:19).*

ம. சிரெ; க. செரெ

*[சிரை → சீரை (வ.மொ.வ. 153)]*

**சீரை**[2] *šīrai,* பெ. (n.) துலைத்தட்டு; scale-pan. *"சீரைபுக்க வரையா வீகை யுரவோன்" (புறநா. 43:7).*

*[சீர் → சீரை]*

**சீல்**[1] *šīl,* பெ. (n.) பருந்து (M.M.170); kite.

U. cilla

**சீல்**[2] *šīl,* பெ. (n.) நல்லொழுக்கம்; good conduct. *"சீலுறு தெக்கணை கேளா" (உபதேசகா. சிவநாம. 123).*

*[சீர் → சீல்]*

**சீலக்கேடு** *šīla-k-kēḍu,* பெ. (n.) தீயநடத்தை (இ.வ); bad manners; ill-behaviour.

*[சீலம் + கேடு]*

**சீலங்கா-த்தல்** *šīlaṅ-gā-,* 4 செ.கு.வி. (v.i.) நோன்பு முதலியவற்றை மேற்கொள்ளுதல் (சிலப். 14:11, உரை); to observe austerities.

*[சீலம் + கா-,]*

**சீலப்பேர்** *šīla-p-pēr,* பெ. (n.) ஒழுக்கத்தால் ஒருவர்க்கு வழங்கும் பெயர்; name given to a person on account of his noble conduct. *"சீலப்பேர் வீரப்பேர் அநேகமா யிருக்குமிறே" (ஈடு, 2. 5 : 6).*

*[சீலம் + பேர். பெயர் → பேர்]*

**சீலம்பாய்** *šīlam-bāy,* பெ. (n.) *கிழிந்தபாய் (யாழ்ப்.);* worn-out mat.

*[சிதிலம் → சீலம் + பாய்]*

**சீலம்பாயறுகு** *šīlam-bāy-aṟugu,* பெ. (n.) *அறுகு வகை (யாழ்ப்.);* a species of cynodon grass, as spreading like a mat.

**சீலா** *šīlā,* பெ. (n.) *1. ஐந்து அடிநீளமுள்ள கடல் மீன் வகை;* a fish attaining 5 ft. in length. *2. படகின் இறைகூடை (வின்.);* a basket or bag for baling out bilge-water from a boat. *3. நீர்வாழ் பறவைவகை (வின்.);* a water-bird.

ம. சீலாவு

*[சீல் → சீலா]*



சீலா

**சீலாந்தி** *šīlāndi,* பெ. (n.) *பூவரசு பார்க்க;* see *pūvarašu.*

ம. சீலாந்தி

*[சீரா² → சீலாந்தி]*

**சீலாப்புட்டி** *šīlā-p-puṭṭi,* பெ. (n.) *சீலா,-2 (வின்.) பார்க்க;* see *šīla,-2.*

*[சீலா + புட்டி. புட்டி = மூங்கில்கூடை, கூடைகலன்]*

**சீலாப்பூட்டை** *šīlā-p-pūṭṭai,* பெ. (n.) *சீலா² (யாழ்அக.) பார்க்க;* see *šīlā²*.

*[சீலா + பூட்டை]*

**சீலி¹-த்தல்** *šīli-,* 4 செ.குன்றாவி. (v.t.) *1. நல்லொழுக்கத்தில் நிறுத்துதல்;* to lead one in the path of virtue. "சீலிக்கு முறுதியாலே தேடரு நட்புமாகும்" *(ஞானவா. தாமவி. 15).* *2. பழகுதல் (யாழ்ப்.);* to practise, accustom oneself to. "உலக்கல் சீலிக்கப்பட்ட தோளினை யுடையான்" *(பு.வெ.11, ஆண்பாற். 2, உரை).*

*[சீலம் → சீலி-,]*

**சீலி²-த்தல்** *šīli-,* 4 செ.கு.வி. (v.i.) *சிலிர்த்தல்;* to become cool. "மேனியெல்லாஞ் சீலித்து ரோமஞ் சிலீரென்ன" *(நெல்விடு.தூது. 293).*

*[சில் → சிலிர் → சீலி-,]*

**சீலி³** *šīli,* பெ. (n.) *வழக்கமுள்ளவன்;* person who has fallen into a habit. *"பிறர் பின்செலுஞ் சீலிகட்கு" (தேவா. 859, 8).*

*[சீர் ² → சீல் → சீலி]*

**சீலை¹** *šīlai,* பெ. (n.) *1. துணி;* cloth, garment. "சீலைக் குதம்பை யொருகாது" *(திவ். பெரியாழ். 3. 3:1).* 'ஈரச்சீலையைப் போட்டுக் கழுத்தறுப்பான்' *(பழ.).* *2. புடைவை;* woman's cloth. 'சீலை இல்லையென்று சின்னாயிவீட்டுக்குப் போனாளாம்; அவள் ஈச்சம்பாயைக் கட்டிக்கொண்டு எதிரே வந்தாளாம்' *(பழ.).* *3. இரண்டேகால் முழத் துணி;* cloth of 2¹/₄ cubits. *4. நீர்ச்சீலை (கோவணம்) (இ.வ.);* man's forelap.

ம. சில; க. சேல, சீலெ; சீரெ; தெ. சீர; து. சீரெ; துட. சீல்ய; பட. சேலெ

*[சிரை → சீலை]*

த. சீலை → Skt. cīram

**சீலை²** *šīlai,* பெ. (n.) *1. செந்நிறக்கல் (மனோசிலை);* ṙed ochre. *2. வெண்காரம்;* borax.

*[சிலை → சீலை]*

**சீலை³** *šīlai,* பெ. (n.) *சீலைவாகை பார்க்க;* see *šīlai-vāgai.*

**சீலைகொடு-த்தல்** *šīlai-koḍu-,* 4 செ.கு.வி. (v.i.) *கைம்பெண்ணிற்குப் புடைவை கொடுத்து அவளை மணம் புரிதல்;* to present a cloth to a widow in taken of marrying her. 'அவளைச் சீலை கொடுத்துக் கொண்டுபோனான்' *(நாஞ்.).*

*[சீலை + கொடு-,]*

**சீலைத்துணி** *šīlai-t-tuṇi,* பெ. (n.) *1. சிறுதுண்டு (வின்.);* piece of cloth. *2. ஆடை;* clothes. *3. அழகுபடுத்தப் பயன்படுந்துணி (இ.வ.);* cloth for decoration.

*[சீலை + துணி]*

**சீலைநாட்டு-தல்** *šīlai-nāṭṭu-,* 5 செ.கு.வி. (v.i.) குட்டி, பால் குடியாதிருக்கும் பொருட்டு

ஆட்டுமடியில் துணிகட்டுதல் (இ.வ.); to cover the udder of a goat with cloth, preventing its kid from sucking.

[சீலை + நாட்டு-,]

**சீலைப்பாம்பு** *sīlai-p-pāmbu,* பெ. (n.) நஞ்சில்லாததும், வெண்புள்ளியுள்ளதுமான ஒருவகைப் பாம்பு; carpet snake non-poisonous Russell's viper with white spots.

[சீலை + பாம்பு]

**சீலைப்பாய்** *sīlai-p-pāy,* பெ. (n.) சீலம்பாய் (யாழ்ப்.) பார்க்க; see *sīlam-bāy* 'சீலைப்பாய் ஈழம் போய்ச் சீனி சக்கரை கட்டுமா' (பழ.).

[சீலம்பாய் → சீலைப்பாய்]

**சீலைப்பிள்ளை** *sīlai-p-piḷḷai,* பெ. (n.) சீலையினாற் செய்த பொம்மை (நாஞ்.); a doll made of cloth, dist. fr. ōlai-p-piḷḷai.

[சீலை + பிள்ளை. சீரை → சீலை = துணி, புடவை]

பண்டைக்காலத்தில் சிறுபிள்ளைகளின் விளையாட்டிற்குதவும் வகையில் சீலையாலும், ஓலையாலும் பொம்மைகள் செய்தளித்தனர். அடுத்த நிலையில் மரத்தாலான பொம்மைகளைக் கொடுத்தனர். சீலையாற் செய்த பொம்மை, சிறுபிள்ளைகட்குத் தீங்கு விளைவிக்காது. இன்றும் soft toys என்னும் பெயரில் துணிப் பொம்மைகளைப் பிள்ளைகட்குக் கொடுப்பதைக் காணலாம்.

**சீலைப்புடம்** *sīlai-p-puḍam,* பெ. (n.) மருந்துப் புட வகை (தைலவ. தைல. 12, உரை); a mode of calcination of medicines.

[சீலை + புடம்]

**சீலைப்புல்** *sīlai-p-pul,* பெ. (n.) புல்வகை (வின்.); a kind of grass.

[சீலை + புல்]

**சீலைப்பேன்** *sīlai-p-pēṉ,* பெ. (n.) சீலையிற் பற்றும் பேன்; lice in cloths. "பாழுந்துணி சீலைப்பே னொருநாண் மாறா" (அரிச்.பு. சூழ்வினை. 91) 'சிரிப்பாணிக் கூத்து சிரிப்பாய்ச் சிரித்துச் சீலைப்பேன் குத்துகிறது' (பழ.).

ம. சீலப்பேன்; தெ. சீரபேநு

[சீலை + பேன்]

**சீலைமண்** *sīlai-maṇ,* பெ. (n.) மருந்துச்சட்டி வாயினிற் சுற்றுந் துணிமேலிடும் மண்பூச்சு; coat of clay on cloth spread over the mouth of a calcinatory pot.

தெ. சீலமந்நு

[சீலை + மண்]

**சீலையுஞ்சை** *sīlaiyuñjai,* பெ. (n.) கருவாகை எனும் மரவகை; fragrant sirissa.

[சீலை + உஞ்சை]

**சீலைவாகை** *sīlai-vāgai,* பெ. (n.) பீலிவாகை (L.); stipulate sirissa.

**சீலைவாங்கியுடு-த்தல்** *sīlai-vāṅgi-y-uḍu-,* 4 செ.கு.வி. (v.i.) கைம்பெண்ணொருத்தி, ஒருவனிடமிருந்து புடைவைபெற்று, அவனை மணம் புரிதல் (நாஞ்.); to accept a cloth from a man in token of marrying him, as a widow.

[சீலை + வாங்கி + உடு-,]

**சீலைவாளை** *sīlai-vāḷai,* பெ. (n.) ஒன்றரையடி நீளமுள்ள சொட்டைவாளை மீன்; butter-fish, fresh-water, silvery shot with purple, attaining 1½ ft. in length (செ.அக.).

[சீலை + வாளை. வாளைமீன் வகையுள் நீண்டதாயிருப்பது]



சீலைவாளை

**சீவகசிந்தாமணி** *sīvaga-sindāmaṇi,* பெ. (n.) சீவகனைத் தலைவனாகக் கொண்டதும் திருத்தக்கதேவரால் இயற்றப்பெற்றதும், சமணஞ்சார்ந்ததும் ஐம்பேரிலக்கியங்களுள் ஒன்றுமான ஒரு தொடர்நிலைச் செய்யுள்; a Jaina epic poem of which Jīvaga is the hero, composed by Tiruttakka dēvar, one of Iim-peruṅ-kāppiyam.

[சீவகன் + சிந்தாமணி]

**சீவகன்**[1] *sīvagaṉ*, பெ. (n.) *சீவகசிந்தாமணியின் பாட்டுடைத்தலைவன்;* the hero of the epic - Šivaga-šindāmaṇi.

Skt. jīvaka.

**சீவகன்**[2] *sīvagaṉ*, பெ. (n.) *ஆசீவகன்;* member of the Ājīvaga sect among the jains. *"சீவகனுக் கிரைந்தோ டிருமூன்றாம்" (சி.சி. முகவுரை, தனிப்பா.).*

Skt. ajīvaka.

**சீவடம்** *sīvaḍam*, பெ. (n.) இழைப்பு *(வின்.);* planning, polishing.

தெ. சீவுடா

*[சீவு → சீவுடம் → சீவடம்]*

**சீவரத்தார்** *sīvarattār*, பெ. (n.) *சீவரர் பார்க்க;* see *sīvarar.* *"உடையிலார் சீவரத்தார்" (தேவா. 64. 10).*

*[சீவரர் → சீவரத்தார்]*

**சீவரம்** *sīvaram*, பெ. (n.) *புத்தத்துறவிகள் அணியும் துவரூட்டின ஆடை;* salmon. coloured dress of Buddhist monks. *"சீவரம் போர்த்தல்" (சீவக. 1427, உரை.).*

*[செவ் → செவ → சிவ = சிவப்பு. சிவ → சீவம் → சீவரம் = செவ்வாமை (காவியுடை)]*

**சீவரர்** *sīvarar*, பெ. (n.) *புத்தத்துறவியர் (சீவரம் அணிந்தோர்);* Buddhist monks as wearing sivaram *(செ.அக.).*

Skt. sīvara

*[சீவரம் → சீவரர்]*

**சீவல்** *sīval*, பெ. (n.) *1. செதுக்கப்பட்டது (வின்);* parings, shavings. *2. பாக்குச்சீவல்;* parings of areca-nut for use with betel. *3. மெலிவு;* thinness, leanness of body. *4. நெகிழ்ச்சியானது;* that which is loosely woven. *5. மெலிந்தவ-ன் -ள்;* thin person. *6. தலைமுடி ஒப்பனை;* hair-style.

ம. சீவல்; க. சிகுர், சிகுரு, சிவரு; தெ. சிச்ச; கொலா. சிவ்வ; நா. சிவ்வ (மரம்)

*[சீவு → சீவல்]*

**சீவல்வெற்றிலை** *sīval-veṟṟilai*, பெ. (n.) *வெற்றிலைபாக்கு (தஞ்சை);* betel with parings of areca-nut for chewing.

*[சீவல் + வெற்றிலை]*

**சீவலம்** *sīvalam*, பெ. (n.) *நீர்ப்பூடுவகை (யாழ்.அக);* an aquatic plant.

**சீவாளம்** *sīvāḷam*, பெ. (n.) *தம்பூருவின் நுண்ணிதாக அளவுபடுத்தற்கு அதன் நரம்பில் தொடுக்கும் சிறுநூல் (வின்.);* piece of cord or wire attached to the strings of tampūru to regulate its sound.

தெ. ஜவாளமு; க. ஜீவாலி

*[சீவு → சீவி + கட்டு-,]*

**சீவிக்கட்டு-தல்** *sīvi-k-kaṭṭu-*, 5 செ.குன்றாவி. (v.t.) *1. தலைவாரி முடித்தல்;* to comb and tie-up the hair. *2. பாளையைச் சீவிக் கள்ளுக் கட்டுதல் (யாழ்ப்.);* to pare off the spathes of a palm and attach a pot for drawing toddy.

*[சீவு → சீவி + கட்டு-,]*

**சீவிடம்** *sīviḍam*, பெ. (n.) *சீவடம் (வின்.) பார்க்க;* see *sīvaḍam.*

*[சீவடம் → சீவிடம்]*

**சீவீர்க்கு** *sīvīrkku*, பெ. (n.) *சீவியஈர்க்கு (இ.வ.);* ribs of palm leaves.

*[சீவு + ஈர்க்கு]*

**சீவு-தல்** *sīvu-*, 5 செ.குன்றாவி. (v.t.) *1. செதுக்கிக் கழித்தல்;* to pare off, shave or scrape off. *"புலவு சீவாப் புதுப்போர்வை" (காசிக. பிரமன்வே. 8). 2. மரமிழைத்தல்;* to smooth or polish by planing. *3. தலைவாருதல்;* to comb or brush the hair. *"சீவிய கூந்தல்" (இராமநா. பாலகா. 19). 4. பெருக்குதல்;* to sweep clean, as floor. *'களஞ்சீவித் தயாராயிருக்கிறது' (இ.வ.). 5. பல் முதலியவை துலக்குதல்;* to clean, as teeth. *"பற்சீவுங் கோல்" (சூடா. 7:62).*

ம. சீவுக; க. சிவ்வு; தெ. சிவ்வு; பட. சீவு.

**சீவுபுழுக்கொடியல்** *sīvu-puḻukkoḍiyal*, பெ. (n.) *புழுக்கி உலர்த்தின பனங்கிழங்கு (யாழ்ப்.);* palmyra roots, boiled, pared and dried.

*[சீவு + புழுக்கு + ஒடியல். புழுக்கு = வேகவை]*

**சீவுளி**[1] *sīvuḷi,* பெ. (n.) *1.* இழைப்புளி வகை; block-plane. *2.* மெருகிடுங் கருவி வகை (வின்.); burnishing stick.

*[சீவு + உளி]*

**சீவுளி**[2] *sīvuḷi,* பெ. (n.) பலகை சுரண்டி என்ற கருவி (இ.வ.); scraper.

**சீவுளிக்கூடு** *sīvuḷi-k-kūḍu,* பெ. (n.) இழைப்புளிக் கட்டை (வின்.); wooden stock of a plane.

*[சீவுளி + கூடு]*



சீவுளிக்கூடு

**சீவை** *sīvai,* பெ. (n.) கூத்து (அக.நி.); dance.

**சீவையர்** *sīvaiyar,* பெ. (n.) கூத்தியர் (அக.நி.); dancing girls.

*[சீவை → சீவையர்]*

**சீழ்**[1] *sīḻ,* பெ. (n.) புண்ணின் சீ; pus.

தெ. சீமு; க. கீவு

*[சீ → சீழ்]*

**சீழ்**[2] *sīḻ,* பெ. (n.) சீழ்க்கை (வின்) பார்க்க; see *sīḻkkai.*

*['சீ' ஒலிக்குறிப்புச் சொல். சீ → சீழ்]*

**சீழ்க்கட்டி** *sīḻ-k-kaṭṭi,* பெ. (n.) சீழ்ப்பிடித்த புண்கட்டி; abscess, boil, as having pus.

*[சீழ் + கட்டி]*

**சீழ்க்காது** *sīḻ-k-kādu,* பெ. (n.) காதிலிருந்து சீழ் வடியும் நோய்வகை; purulent discharge from the ear (செ.அக.).

*[சீழ்' + காது]*

**சீழ்க்கை** *sīḻkkai,* பெ. (n.) நாவின் நுனியை மடித்து எழுப்பும் ஒலி; whistling. "கொக்கரிப்பையும் சீழ்க்கையையு மெழுப்பினார்" *(சீவக. 447, உரை).*

க. சிள்ளு

*[சீ → சீழ்² → சீழ்க்கை]*

**சீழ்க்கைக்கூத்து** *sīḻkkai-k-kūttu,* பெ. (n.) சீழ்க்கையெழுப்பி ஆடுங்கூத்து; a mode of dancing accompanied with whistling. "இளையவர் சீழ்க்கைக் கூத்தோடு நெருங்குதலால்" *(சீவக. 120, உரை).*

*[சீழ்க்கை + கூத்து]*

**சீழ்க்கைவிடு-தல்** *sīḻkkai-viḍu-,* 20 செ.கு.வி. (v.i.) நாவை மடித்து ஒலியெழுப்புதல் (வின்.); to whistle, give a signal by whistling.

*[சீழ் → சீழ்க்கை + விடு-,]*

**சீழ்கட்டு-தல்** *sīḻ-kaṭṭu-,* 5 செ.கு.வி. (v.i.) சீழ்ப்பிடித்தல்; to suppurate. 'உதைத்த கால் புழுக்கிறதுக்கு முன்னே அடிவயிறு சீழ் கட்டுகிறது' (பழ.).

*[சீழ்' + கட்டு-,]*

**சீழ்கு-தல்** *sīḻgu-,* 7 செ.கு.வி. (v.i.) விம்முதல்; to fetch, heave a sob. "சீழ்கிச் சீழ்கி யழுதால்" *(ஈடு, 3.2 : 7).*

*[சிழகு → சீழ்கு-,]*

**சீழ்கு**[2] *sīḻgu,* பெ. (n.) துடைப்பப்புல் (தொல். எழுத்து. 415, உரை); broom-grass.

*[சீகு → சீழ்கு]*

**சீழ்கோ-த்தல்** *sīḻkō-,* 17 செ.கு.வி. (v.i.) சீழ்கட்டு-, பார்க்க; see *sīḻkaṭṭu.*

*[சீழ்' + கோ-,]*

**சீழ்நோய்** *sīḻ-nōy,* பெ. (n.) படைநோய் வகை (பைஷஜ. 282); gonorrhaea.

*[சீழ் + நோய்]*

**சீழ்மரம்** *sīḻ-maram,* பெ. (n.) மாமரவகை (இ.வ.); a species of mango.

**சீழ்மலடு** *sīḻ-malaḍu,* பெ. (n.) சீதமலடு (மு.அ.) பார்க்க; see *sīda-malaḍu.*

*[சீழ்' + மலடு]*

**சீழ்மூலம்** *sīḻ-mūlam,* பெ. (n.) சீழ்வடியும் மூலநோய் (வின்); piles attended with discharge of pus.

*[சீ (→ சீழ்) + மூலம்]*

**சீளைப்பறவு** *sīḷai-p-paṟavu,* பெ. (n.) ஆறுவிரல நீளமும், நீலநிறமுமுள்ள கடல்மீன் வகை; sea-fish, steel-blue, attaining 6 in. in length.

**சீற்காரம்** *śīṟ-kāram* பெ. (n.) *1. மூச்சை உள்வாங்குதலால் எழுமொலி (கந்தபு. இந்திர. 45);* sound made by drawing in the breath. *2. சீழ்க்கை (இ.வ.);* whistling.

Skt. śīl-kāra

*[சீழ்² + காரம்]*

**சீற்றம்** *śīṟṟam,* பெ. (n.) *மிகுசினம்;* anger, fury. *"சீற்றமொ டாருயிர் கொண்ட ஞான்று" (கலித். 103).*

*ம. சீற்றம்*

*[சீறு → சீற்றம்]*

**சீறடி** *śīṟaḍi,* பெ. (n.) *அழகிய சிறியகால்;* small foot, considered beautiful. *"சிலம்புங் கழலும் புலம்புஞ்சீறடி" (சிலப். 12: 64). "அஞ்செஞ் சீறடி யணிசிலம் பொழிய" (சிலப். 4 : 47).*

*[சிறு(மை) + அடி = சிற்றடி → சீறடி]*

**சீறல்¹** *śīṟal,* பெ. (n.) பெருஞ்சினம் *(திவா.);* fury, rage.

*ம. சீறல்*

*[சீறு → சீறல்]*

**சீறல்²** *śīṟal,* பெ. (n.) பெருங்காயம் (மூ.அ.); asafoetida.

**சீறல்போக்கல்** *śīṟal-pōkkal,* பெ. (n.) மருந்தின் வேகம்தணித்தல்; to root out or eradicate the virulence of medicine *(சா.அக.).*

*[சீறல் + போக்கல்]*

**சீறளவு** *śīṟaḷavu,* பெ. (n.) தலைகட்டாமல் அளக்கும் அளவு (இ.வ.); measuring grain without heaping it above the top of the measure.

*[சிறு(மை) + அளவு. சிற்றளவு சீறளவு]*

**சீறாப்புராணம்** *śīṟā-p-purāṇam,* பெ. (n.) முகமது நபியின் வரலாறு பற்றி 17ஆம் நூற்றாண்டில் உமறுப்புலவர் இயற்றிய தொன்ம (புராண) இலக்கிய நூல்; a poem on the life of Muhammad, by Umaṟu-p-pulavar, 17th C.

Arab. sīrat.

**சீறியகற்பு** *śīṟiya-kaṟpu,* பெ. (n.) *மறக்கற்பு;* chastity militant which actively guards and upholds its dignity, dist. fr. āṟiya-kaṟpu. *"ஆறிய கற்புஞ் சீறியகற்பு மெனக் கற்பு இருவகை" (சிலப். பதி. 42, அரும்.).*

*[சீறு + கற்பு]*

**சீறியழு-தல்** *śīṟi-y-aḻu-, 1* செ.கு.வி. (v.i.) *குழந்தை அலறியழுதல் (இ.வ.);* to scream out loudly, as a child.

*[சீறி + அழு-,]*

**சீறியாழ்** *śīṟi-yāḻ,* பெ. (n.) *சிறிய யாழ்;* a small lute. *"கருங்கோட்டுச் சீறியாழ்" (புறநா. 127).*

*[சிறு(மை) + யாழ். சிறுயாழ் → சீறியாழ்]*




**சீறில்** *śīṟil,* பெ. (n.) *சிறுவீடு;* small house. *"சீறின் முன்றி லிருந்த முதுவாய்ச்சாடி" (புறநா. 319).*

*[சிறு(மை) + இல். சிற்றில் → சீறில்]*

**சீறிவிழு-தல்** *śīṟi-viḻu-, 2* செ.கு.வி. (v.i.) *1. மிகு சினத்தால் ஓசையிட்டுக் கொண்டு ஒருவன் மேற் பாய்தல்;* to fall into a rage and attack. *2. சினங்கொள்ளுதல்;* to get enraged.

*[சீறி + விழு-,]*

**சீறு¹-தல்** *śīṟu-, 5.* செ.கு.வி. (v.i.) *1. பாம்பு முதலியன சீற்றத்துடன் வெகுளுதல்;* to hiss, as a serpent. *2. குதிரை முதலியன மூச்செறிதல் (வின்);* to snort, as a horse; to sniff. *3. மிகுசினங் கொள்ளுதல்;* to be infuriated, to swell with rage. *4. தீ முதலியன முழங்கியெரிதல்;* to roar and blaze forth, as a flame.

**சீறு²-தல்** *śīṟu-, 5.* செ.குன்றாவி. (v.t.) *1. சினத்தல்;* to get angry with. *"சிறுபேரழைத்தனவுஞ் சீறியருளாதே" (திவ். திருப்பா. 28). 2. அழித்தல்;* to destroy. *"எயில்கண் மூன்றுஞ் சீறு மெந்தைபிரான்" (தேவா. 45, 2).*

**சீறு³-தல்** *śīṟu-, 5* செ.கு.வி. (v.i.) *ஆந்தைபோல் கத்துதல்;* to hoot like an owl. *"ஆந்தை சீறல் அறியும் பலன்" (கவுளிசா. 16).*

**சீறு**[4] *sīṟu,* பெ. (n.) சீற்றம்; anger. "சீறில்லான்" (ஏலாதி, 34).

**சீறுசீறெனல்** *sīṟu-sīṟeṉal,* பெ. (n.) 1. அலறியழுதற்குறிப்பு; onom. expr. signifying vehemence in crying. "பிள்ளை சீறுசீறென் றழுகிறது". 2. சினமிகுதிக் குறிப்பு; violent anger.

[சீறு + சீறு + எனல்]

**சீறுபாறெனல்** *sīṟu-pāṟeṉal,* பெ. (n.) முரண்படுதற் குறிப்பு; onom. expr. signifying quarelling. "பூவோடே சீறுபா றென்னுங் கண்" (திவ். திருப்பா. 13, வியா. 140).

[சீறு + பாறு + எனல்]

**சீறுபூறெனல்** *sīṟu-pūṟeṉal,* பெ. (n.) 1. மிகுசினத்தோடு தாக்குதற்குறிப்பு; onom. expr. signifying quarelling with another, attacking with fury. 2. பெருங்குறட்டைவிடுதற் குறிப்பு; hard snoring. 3. இரைச்சற்குறிப்பு; roaring, as an approaching storm.

[சீறு + பூறு + எனல்]

**சீறுமாறு** *sīṟu-māṟu,* பெ. (n.) 1. தாறுமாறு; confusion. 2. சரியாய் நடத்தாமை (வின்.), ill-treatment.

[சீறு + மாறு]

**சீறுவாணம்** *sīṟu-vāṇam,* பெ. (n.) வெடிக்காமற் சீறிச்செல்லும் வாணம்; rocket.

[சீறு + வாணம்]

**சீறுள்** *sīṟuḷ,* பெ. (n.) 1. ஈயம்; lead or tin. 2. செம்பு; copper.

**சீறூர்** *sīṟūr,* பெ. (n.) 1. சிறிய ஊர்; small village, hamlet. "சீறூர்க் கோளிவண் வேண்டேம் புரவே" (புறநா. 297). 2. குறிஞ்சி நிலத்தூர் (பிங்.); village in hilly tracts. "தழங்கு மருவியெஞ் சீறூர் பெருமவிது" (திருக்கோ. 127).

[சிறு(மை) + ஊர் = சீறூர்]

**சீறெலி** *sīṟeli,* பெ. (n.) சுண்டெலி (பிங்.); mouse, as a small species of rat.

[சிறு + எலி = சீறெலி]

**சீனி** *sīṉi,* பெ. (n.) 1. சேணம்; saddle. 2. மர நங்கூரம் (வின்.); wooden anchor made heavy with stones.

U. zin

[சேணம் → சேணி → சீனி]

**சீனிக்கட்டை** *sīṉi-k-kaṭṭai,* பெ. (n.) சேணஞ் செய்தற்குரிய மரவச்சு (புதுவை.); saddle-tree.

[சேணம் → சேணி. சீனி + கட்டை]

**சீனிக்கயிறு** *sīṉi-k-kayiṟu,* பெ. (n.) மரநங்கூரக் கயிறு (வின்.); cable of wooden anchor.

[சேணம் → சேணி. சீனி + கயிறு]

**சீனிகட்டு-தல்** *sīṉi-kaṭṭu-,* 5 செ.குன்றாவி. (v.i.) குதிரைக்குச் சேணமிடுதல்; to saddle a horse (செ.அக.).

[சேணம் → சீனம் → சீனி + கட்டு-,]

**சீனிச்சட்டி** *sīṉi-c-caṭṭi,* பெ. (n.) வறுத்தற்குரிய இருப்புச்சட்டி (இ.வ.); frying pan.

[சில் → சின் → சினி → சீனி]

**சீனிப்பாய்** *sīṉi-p-pāy,* பெ. (n.) பாய்வகை; a kind of mat. "மெத்தைத் தலையணையும் சீனிப்பாயும் போட்டுக் கொடுத்து" (தமிழறி. 57).

[சீனி + பாய்]

**சீனிமிளகாய்** *sīṉi-miḷagāy,* பெ. (n.) மிளகாய் வகை (வின்.); a kind of chilli.

[சீனி' + மிளகாய்]

**சீனியவரை** *sīṉi-y-avarai,* பெ. (n.) கொத்தவரை; *cluster-bean.*

[சீனி + அவரை]



சீனியவரை

**சீனிவெடி** *sīṉi-veḍi,* பெ. (n.) சிறிய பட்டாசு; a kind of small crackers.

[சீனி + வெடி]

**சீனை** *sīṉai,* பெ. (n.) வன்னி (மு.அ.); Indian mesquit.



சு[1] cu/šu, சகரமெய்யும் உகரவுயிருங் கூடிய உயிர் மெய்யெழுத்து; syllable formed by adding the short vowel 'u' to the consonant 'c'/'s'.

சு[2] šu, பெ. (n.) 1. அதட்டும் ஓசை; warning sound. 2. நாய் முதலியவற்றைத் துரத்தும் ஒலி; driving sound of dog etc.

சுஃறெனல் šukrenal, பெ. (n.) சுஃஃறெனல் பார்க்க; see sukkrenal. "சுஃறெனுந் தோட்டுப் பெண்ணை" (திருவிளை. வலைவீ. 48).

சுஃஃறெனல் šukkrenal, பெ. (n.) பனையோலை போன்றன எரியும்பொழுது ஏற்படுவது போன்ற ஓர் ஒலிக்குறிப்பு; onom. expr. of rustling, as of palmyra leaves, spreading fire, etc., "சுஃஃறென்னுந் தண்டோட்டுப் பெண்ணை" (தொல். எழுத்து. 40, உரை).

சுஃறு šukru, பெ. (n.) சுஃஃறெனல் பார்க்க; see šukkrenal "சுஃறொலி வேத்திரப் படைக்கை" (திருவிளை. எல்லாம்5).

சுக்கங்கீரை šukkan-kīrai, பெ. (n.) தோட்டங்களில் பயிர் செய்யப்படுவதும், உடம்பிற்குக் குளிர்ச்சியைத் தருவதும், மலத்தை இளக்குவதும், சிறுநீரைப் பெருக்குவதுமாகிய புளிக்கீரை வகை; country sorrel, it is commonly cultivated in gardens and it is cooling and aperient and diuretic to some extent (சா.அக.).

மறுவ. புளிச்சக்கீரை

தெ. சுக்க கூர

[சுக்கன் + கீரை]

சுக்கச்சீலை šukka-c-cīlai, பெ. (n.) வங்கக்கல்; lead ore (சா.அக.).

[சுக்கான் → சுக்கன் + சீலை]

சுக்கஞ்செட்டி šukkañ-jetti, பெ. (n.) கடுஞ்செட்டுள்ளவன்; miser; hard-fistal person.

ம. சுக்குச்செட்டி

[சுக்கு + அம் + செட்டி. செட்டு → செட்டி]

சுக்கடித்தம் šukkaḍittam, பெ. (n.) அழுத்தமாக நெய்யப்பட்ட புடைவை (வின்.); linen closely woven.

தெ. சுக்கடிதமு; Skt. su-ghaṭita

[சுள் → சுக்குதல் = காய்தல், வறளுதல். சுட்டு → சுக்கு. சுக்குதல் = உலர்தல். சுக்கு → சுக்கடி = நெருங்கியிருத்தல்]

சுக்கடித்தல் šukkaḍittal, பெ. (n.) 1. ஆடவர் விளையாட்டு; a boys game. 2. பலீன்சடுகுடு பார்க்க; see palinšaḍukuḍu.

[சுக்கு + அடித்தல்]

சுக்கடைப்பஞ்சு šukkaḍai-p-pañju, பெ. (n.) 1. காதுவலிக்குப் பயன்படும் மருந்து; ear drops for pain in the ear. 2. சுக்கையிடித்துப் பஞ்சுக்குள் பொதிந்து காதில் அடைத்துக் கொள்ளும் பஞ்சு; cotton in which is concealed powdered dried ginger inserted into ear as a remedy in certain diseases of the ear.

[(சுக்கு + அடை) சுக்கடை + பஞ்சு]

சுக்கம்[1] šukkam, பெ. (n.) 1. நாட்டு வெள்ளரிக்காய், தும்மட்டி; country cucumber. 2. வெள்ளரி; mottled.

சுக்கம்[2] šukkam, பெ. (n.) களவு (யாழ்ப்.); steeling, pilfering.

[சுக்கு → சுக்கம்]

சுக்கம்பார் šukkam-pār, பெ. (n.) சுக்கான் பாறை (இவ.) பார்க்க; see šukkān-pārai.

[சுக்கான் → சுக்கம். பாறை → பார்; சுக்கம் + பார்]

சுக்கம்வைத்-தல் šukkam-vai-, 4 செ.குவி. (v.i.) காளவாயைக் கைப்பற்றுதல்; capturing of kiln.

[சுக்கம் + வை-,]

சுக்கல்[1] šukkal, பெ. (n.) சிறுதுண்டு; bit; small piece. கண்ணாடியை அவன் சுக்கலாய் நொறுக்கி விட்டான்.

ம. சுக்கிரி

[சுள் → சுண்டு = சிறியது, சிறிய முகவைக் கருவி. சுண்டு → சுண்டை = சிறிய காய் வகை. சுன் → சுட்கு → சுக்கு = சிறியது, சிறு துண்டு. சுக்கு → சுக்கல்]

**சுக்கல்**[2] *šukkal,* பெ. (n.) கண்ணில் பூவிழும் நோய்வகை; opacity of cornea.

க. சுக்கி; தெ. சுக்கலமு.

**சுக்காங்குழல்** *šukkāṅ-kuḷal,* பெ. (n.) குருவி முதலிய சிறுபறவைகளை உண்டைவைத்து அடிக்கும் ஊதுகுழாய் (இ.வ.); a long tube through which pellets of clay are shot.

*[சுக்கான் + குழல்]*

**சுக்காஞ்செட்டி** *šukkāñ-jeṭṭi,* பெ. (n.) சுக்கஞ் செட்டி (இ.வ.) பார்க்க; see *šukkañjeṭṭi.*

*[சுக்கான் + செட்டி]*

**சுக்காம்பார்** *šukkām-pār,* பெ. (n.) சுக்கான் பாறை (இவ.) பார்க்க; see *šukkāṉ-pāṟai.*

*[சுக்கான் + (பாறை) பார்]*

**சுக்காரம்** *šukkāram,* பெ. (n.) அரிமாமுழக்கம் (யாழ்.அக.); roar, as of a lion.

ம. சுக்காரம்

Skt. šukkāra

**சுக்கான்** *šukkāṉ,* பெ. (n.) 1. சுக்கான்கல், 1 (தைலவ.பாயி.26) பார்க்க; see *šukkāṉ-kal,1.* 2. சுக்கம்[1], 1 (பதார்த்த. 718) பார்க்க; see *šukkam*[1].

*[சுள் → சுள்கு → சுட்கு → சுக்கு = காய்ந்த இஞ்சி. சுக்குதல் = காய்தல். சுக்கு → சுக்கான் = சுண்ணாம்புக்கல்]*

**சுக்கான்கல்** *šukkāṉ-kal,* பெ. (n.) 1. சுண்ணாம்புக்கல்; kunkur limestone, impure concretionary carbonate of lime. "சுக்கான் கல்லாகிய பகையாலே" (பொருந. 44, உரை). 2. ஒரு வகைக்கட்டி மண் (M.M. 748); pipe clay. 3. உருக்குச் செங்கல் (இ.வ.); overburnt brick.

ம. சுக்கான் கல்லு

*[சுக்கான் + கல்]*

**சுக்கான்கல்குரு** *šukkāṉ-kal-guru,* பெ. (n.) செம்பின் ஊறலைப் போக்கும் ஒரு குரு மருந்து; lime stone quintessence prepared through alchemical process and used for purifying copper (சா.அக.).

*[சுக்கான் + கல் + குரு]*

**சுக்கான்கல்சுண்ணம்** *šukkāṉ-kal-šuṇṇam,* பெ. (n.) 1. செம்புக்களிம்பு நீக்கி; copper rust remover. 2. நீற்றிய கற்சுண்ணாம்பு; slaked lime (சா.அக.).

*[சுக்கான்கல் + சுண்ணம்]*

**சுக்கான்காய்** *šukkāṉ-kāy,* பெ. (n.) தும்மட்டிக் காய் (பதார்த்த718); unripe cucumber.

*[சுக்கான் + காய்]*

**சுக்கான்கீரை** *šukkāṉ-kīrai,* பெ. (n.) சுக்கங்கீரை (மலை.) பார்க்க; see *šukkaṅ-gīrai.*

*[சுக்கான் + கீரை]*




**சுக்கான்சுண்ணாம்பு** *šukkāṉ-šuṇṇāmbu,* பெ. (n.) சுக்கான்கல்லை நீற்றியெடுத்த சுண்ணாம்பு; kunkur lime.

மறுவ. சுட்ட சுண்ணாம்புக்கல்

*[சுக்கான் + சுண்ணாம்பு]*

**சுக்கான்தண்ணீர்** *šukkāṉ-taṇṇīr,* பெ. (n.) 1. சுண்ணாம்பு ஊறிய நீர்; water on lime-stone beds. 2. சுண்ணாம்பு கரைந்துள்ள தண்ணீர்; lime water. 3. சுண்ணாம்பு உப்புள்ள தண்ணீர்; water containing calcium salts; calcic water.

*[சுக்கான் + தண்ணீர்]*

**சுக்கான்தரை** *šukkāṉ-darai,* பெ. (n.) சுண்ணாம்பு நிலம்; soil of lime stone.

*[சுக்கான் + தரை]*

**சுக்கான்பருவதம்** *šukkāṉ-paruvadam,* பெ. (n.) சிலாவங்கம் அல்லது வங்கக்கல்; lead ore (சா.அக.).

*[சுக்கான் + பருவதம்]*

**சுக்கான்பழம்** *śukkāṉ-paḻam,* பெ. (n.) கொம்மட்டிப்பழம்; fruit of Bryonia *(சா.அக.).*

*[சுக்கான் + பழம்]*

**சுக்கான்பார்** *śukkāṉ-pār,* பெ (n.) *1.* சுக்கான் *கரை;* lime stone bed or bank. *2.* சுக்கான் *பாறை;* lime stone quarry.

*[சுக்கான் + பார்]*

**சுக்கான்பாறை** *śukkāṉ-pāṟai* பெ. (n.) சுக்கான் மயமான பாறை (பதார்த்த. 37); kunkur ledge. 'சுக்கான் பாறைத் தண்ணீர் கடுக்கும்' (உ.வ.).

*[சுக்கான்[2] + பாறை]*

**சுக்கான்பாறைநீர்** *śukkāṉ-pāṟai-nīr* பெ. (n.) *சுக்கான் தரையிலூறும் தண்ணீர்;* water comes from calcium quarry.

*[சுக்கான் + பாறை + நீர்]*

**சுக்கான்மண்** *śukkāṉ-maṇ,* பெ. (n.) *1.* சுக்கான் *நிலம்;* lime stone soil. *2. சீமைச்சுண்ணாம்புத் தரை;* soil largely impregnated with carbonate of lime *(சா.அக.).*

*[சுக்கான் + மண்]*

**சுக்கானீறு** *śukkāṉīṟu,* பெ. (n.) தாளித்த *சுண்ணாம்பு, கற்சுண்ணாம்பு;* slaked lime.

மறுவ. கற்சுண்ணாம்பு

*[சுக்கான் + (நீற்று) நீறு]*

**சுக்கிகை** *śukkigai,* பெ. (n.) புளியாரை *(சங்.அக.);* yellow wood-sorrel.

மறுவ. சுக்கான் வருத்தியம்

*[சுக்கு → சுக்கி → சுக்கிகை]*

**சுக்கிலான்** *śukkilāṉ,* பெ. (n.) வெட்பாலை; tellicherry bark *(சா.அக.).*

**சுக்கிலை** *śukkilai,* பெ. (n.) புளியமரம்; tamarind tree *(சா.அக.).*

*[சுக்கு + இலை. மரப்பட்டை உலர்ந்திருத்தலால் இப்பெயர் வந்தது போலும்]*

**சுக்கு[1]-தல்** *śukku-,* 5 செ.குன்றாவி. (v.t.) *1. புணர்தல்; கூடுதல்;* to copulate. *2. செய்தல்;* to perform, execute *(சா.அக.).*

தெ. சொக்கு

*[சுள் → சுள்கு → சுட்கு → சுக்கு (வேக211)]*

**சுக்கு[2]** *śukku,* பெ. (n.) *1.* உலர்ந்த இஞ்சி (திவா.); dried ginger. சுக்கு அறியாத கியாழம் உண்டா? (பழ.). *2.* சிறுதுண்டு; துணுக்கு (கொ.வ.); small piece; bit; fragment; small particle. 'கண்ணாடி சுக்குச் சுக்காய் உடைந்து போயிற்று' (உ.வ.). *3. பயனற்றது;* worthless thing. "அங்கு சுக்குத் தான் இருக்கிறது" (நாஞ்.).

ம. சுக்கு. க. சுண்டி; பட. சுட்டி; pkt. sukkha; Skt. śuṣka

*[சுள் → சுட்கு → சுக்கு. ஒ.நோ. வெள் → வெள்கு → வெட்கு (வே.க. 211)]*

**சுக்கு[3]-தல்** *śukku-,* 5 செ.கு.வி. (v.i.) *1. உலர்தல்* (நாஞ்.); to get dry. *2. உணக்குதல்;* to cause to dry, to dry in the sun.

ம. சுக்குக; க. சுக்கு; தெ. சுருக்கு; து. சிர்க்குனி; கோத. சுக்; துட. சுர்; கொலா. சுக்; பர். சுர்க்; கோண். சூர்

*[சுள் → சுங்கு → சுக்கு]*

**சுக்குக்களி** *śukku-k-kaḷi,* பெ. (n.) சுக்குச் சேர்த்து மருந்தாகச்செய்யப்படும் களிவகை; a pasty preparation of which dried ginger forms the main ingredient chiefly given to women in confinement.

*[சுக்கு + களி]*

**சுக்குச்சுக்காய்** *śukku-c-cukkāy,* வி.அ. (adv.) துண்டுதுண்டாய்; in pieces; shattered to pieces.

மறுவ. சுக்குச்சுக்காக, சுக்கு நூறாக, சுக்கல் சுக்கலாக

*[சுக்கு + சுக்கு + ஆய்]*

**சுக்குச்சூரணம்** *śukku-c-cūraṇam,* பெ. (n) *1. சுக்கையிடித்துச் சலித்தபொடி;* powdered and sieved dried ginger. *2.* சுக்கை முதன்மையாகக் கொண்டு பல மருந்துச் சரக்குகளைச் சேர்த்துச் செய்த சுக்குப்பொடி; powder prepared with dry ginger as cheif ingredient *(சா.அக.).*

*[சுக்கு + சூரணம்]*

**சுக்குச்செட்டி** *śukku-c-ceṭṭi,* பெ. (n.) சுக்கஞ் செட்டி (இவ.) பார்க்க; see *śukkañ-śetti.*

*[சுக்கு + செட்டி]*

**சுக்குச்செட்டு** *šukku-c-cețțu,* பெ. (n.) இவறற்றன்மை; misarliness; stinginess.

*[சுக்கு + செட்டு]*

**சுக்குச்செட்டுப்பண்ணு-தல்** *šukku-c-cețțu-p-paṇṇu-,* 5 செ.குன்றாவி. (v.i.) *1.* அதிகப்படியான சிக்கனம் கொள்ளுதல் (இவ.); to be stingy. *2.* சிறுவணிகம் செய்து ஆதாயம் பிடித்தல் (வின்.); to make profit by trading, in small articles.

*[சுக்கு + செட்டுப்பண்ணு-,]*

**சுக்குத்தண்ணீர்** *šukku-t-taṇṇīr,* பெ. (n.) *1.* சுக்கிட்டுக் காய்ச்சிக் கொதிக்க வைத்த நீர்; boiled ginger water. *2.* சுக்கும் வெல்லமுமிட்டுக் காய்ச்சியிறக்கி வடிகட்டிய பருகம்; a favourite and in vigorating beverage made by boiling dried ginger and jaggery and then filtered milk can be added and taken as coffee (சா.அக.).

*[சுக்கு + தண்ணீர்]*

**சுக்குத்தான்** *šukku-t-tāṉ,* பெ. (n.) சுங்குத்தான் குழல் பார்க்க; see *šuṅgu-t-tāṉ-kuḻal.*

**சுக்குநாறி** *šukku-nāṟi,* பெ. (n.) சுக்கு மணமுடைய சாலிமரம்; a tree having the odour of dried ginger (சா.அக.).

*[சுக்கு + நாறி. நாற்றம் = மணம். நாற்றம் → நாறி]*

**சுக்குநாறிப்புல்** *šukku-nāṟi-p-pul,* பெ. (n.) *1.* ஒருவகைப்புல்; spice or dry ginger grass. *2.* சுன்னாறிப்புல்; orange grass. *3.* மாந்தப்புல்; roussa grass. *4.* எலுமிச்சம்புல்; rusa oil plant. *5.* கருப்பூரப்புல்; andropogon citratis (சா.அக.).

ம. சுக்கு நாறிப்புல்லு

*[சுக்குநாறி + புல்]*

**சுக்குநாறிப்புல்தைலம்** *šukku-nāṟi-p-pul-dailam,* பெ. (n.) சுக்குநாறிப் புல்லிலிருந்து எடுக்கப்படும் எண்ணெய்; oil extracted from the ginger grass (சா.அக.).

*[சுக்குநாறிப்புல் + தைலம்]*

**சுக்குநாறிப்பூடு** *šukku-nāṟi-p-pūḍu,* பெ. (n.) எல்லாவகைப் புண்களையும் ஆற்றும் குணமுடைய மூலிகை; a plant supposed to cure all kind of ulcers.

மறுவ. வெட்டுப்புண் ஆற்றி, காயமாற்றி

*[சுக்குநாறி + பூடு]*

**சுக்குப்பாணிதம்** *šukku-pāṇidam,* பெ. (n.) சுக்கு நீரில் சருக்கரையிட்டு மீண்டும் காய்ச்சி எடுத்த பாகு; a strong medicated solution of sugar from the extract of dried ginger (சா.அக.).

Skt. pāṇi

*[சுக்கு + பாணிதம்]*

**சுக்குப்பால்** *šukku-p-pāl,* பெ. (n.) கண்ணோய்க்காகச் சுக்கைப் பாலில் இழைத்து கண்ணிற் பிழியும் ஒருவகைக் கலிக்கமருந்து (இ.வ.); a medicinal preparation for some kind of eye diseases from the dried ginger rubbed with milk (சா.அக.).

*[சுக்கு' + பால்]*

**சுக்குப்பொடி**[1] *šukku-p-poḍi,* பெ. (n.) சுக்குத் தூள்; dried ginger powder.

*[சுக்கு + பொடி]*

**சுக்குப்பொடி**[2] *šukku-p-poḍi,* பெ. (n.) சொக்குப்பொடி (பேச்சு வழக்கு); a kind of magic powder (சா.அக.).

தெ. சொக்குப்பொடி

*[சுக்கு + பொடி]*

**சுக்கும்பல்** *šukkumbal,* பெ. (n.) சிலந்தி; spider (சா.அக.).

**சுக்குமத்தண்டுலம்** *šukkumattaṇḍulam,* பெ. (n.) திப்பிலி; long-pepper (சா.அக.).

*[சுக்குமம் + தண்டுலம்]*

**சுக்குமம்** *šukkumam,* பெ. (n.) சிற்றேலம் (மூ.அ.); small cardamom.

Skt. sūkṣmā

**சுக்குமாத்தடி**[1] *šukku-mā-t-taḍi,* பெ. (n.) *1.* துறவிகள் கையில் கொண்டு செல்லும் கழி (வின்.); staff carried by mendicants as imbued with the power or energy of a deity. *2.* சிறு தெய்வங்கள் கையில் அமைக்கப்படுஞ் சிறு

தண்டம் (இவ.); a club with which some inferior deities are armed. 3. மந்திரக்கோல் (இவ.); magic wand.

மறுவ. சுக்குமாந்தடி

[சொக்கு → சுக்கு + மா + தடி]

**சுக்குமாந்தடி** *šukku-mãndadi*, பெ. (n.) சுக்கு மாத்தடி பார்க்க; see *šukku-mã-t-tadi*. "சுக்குமாந்தடி கொண்டு நொக்கி விடுவான்" (நந்த. கீர்த்.).

[சுக்குமாத்தடி → சுக்குமாந்தடி]

**சுக்குமி** *šukkumi*, பெ. (n.) கொத்தவரை; cluster bean (சா.அக.).

மறுவ. சீனியவரை

**சுக்குயிளகியம்** *šukku-y-iļagiyam*, பெ. (n.) சுக்கு 25 பலத்திற்கு 2 1/2 படி கியாழமிறக்கி, அதனோடு வெல்லம் 2 1/2 பலம் ஓமம் 1 1/2 பலம் நெய் 1/2 படி என இவற்றையும் சேர்த்து இளகியமாக (லேகியம்) ஆக்குதல்; an electuray prepared with the decoction of dry ginger, jaggery, ajown, curry leaves and cow's ghee. It cures diarrhoea, chronic diarrhoea indigestion, wind swelling, etc.,

[சுக்கு + இளகியம்]

இவ்விளகியம் சாப்பிட்டால், மிகு கழிச்சல், செரியாமை, மூலம், வீக்கம், முதலானவை போகுமெனச் சாம்பசிவம் பிள்ளை மருத்துவ அகரமுதலி குறிக்கின்றது.

**சுக்குலகந்தம்** *šukkula-gandam*, பெ. (n.) 1. வசம்பு; sweet flag. 2. அதிவிடயம்; Indian atees.

**சுக்குவெல்லம்** *šukku-vellam*, பெ. (n.) சுக்குப் பொடி கலந்த வெல்லம் (உவ.); jaggery mixed with pulverised dried ginger, used as a digestive.

ம. சுக்குவெல்லம்

[சுக்கு + வெல்லம்]

**சுக்குவெள்ளம்** *šukku-veļļam*, பெ. (n.) சுக்குக் கலந்த வெந்நீர் (நாஞ்.); ginger-water a stimulant.

ம. சுக்குவெள்ளம்

[சுக்கு + வெள்ளம்]

**சுக்கெலும்பு** *šukkelumbu*, பெ. (n.) மார்பு எலும்பு; bones of the chest (சா.அக.).

மறுவ. விலாவெலும்பு, நெஞ்செலும்பு

[சுக்கை (வரி) + எலும்பு]

**சுக்கை**[1] *šukkai*, பெ. (n.) முசுமுசுக்கை (மலை.); bryony or bristly.

[முசுமுசுக்கை → சுக்கை]

**சுக்கை**[2] *šukkai*, பெ. (n.) விண்மீன்; star.

தெ. சுக்க cf. ulkā; க. சுக்கெ; நாய்க். சுக்க பாலி. சுக்க; கோண்ட். சுக்கம்; கோண்டா. சுக; குவி. ஹுக

**சுக்கை**[3] *šukkai*, பெ. (n.) பூமாலை; garland. "சுக்கைப் பிறசுற்றியும்" (திருப்பு. 161).

**சுக்கை**[4] *šukkai*, பெ. (n.) கப்பற்சுங்கம் (யாழ்ப்.); passage money; freight.

[சுங்கம் → சுக்கம் → சுக்கை]

**சுகட்டான்** *šugaţţān*, பெ. (n.) 1. நாணற்புல்; kaus. 2. முடக்கொற்றான்; balloon vine, smooth leaved heart pea (சா.அக.).

**சுகட்டிகம்** *šugaţţigam*, பெ. (n.) பெருங்குமிழ மரம்; Cashmere tree (சா.அக.).

**சுகட்டிகா** *šugaţţigā*, பெ. (n.) நாணற்புல்; kaus (சா.அக.).

[சுகட்டான் → சுகட்டிகா]

**சுகட்டிரா** *šugaţţirā*, பெ. (n.) பேய்ப்புல்; a kind of poisonous grass full of little clots (சா.அக.).

**சுகண்டி** *šugaņdi*, பெ. (n.) ஒருவகை உயர் மணி (அரத்தினம்); a gem (சா.அக.).

**சுகந்திக்கல்** *šugandi-k-kal*, பெ. (n.) ஒருவகைச் செவ்வந்திக்கல்; a semi precious stone (சா.அக.).

[சுகந்தி + கல்]

**சுகந்திப்பாலை** *šugandi-p-pālai*, பெ. (n.) 1. நற்பாலைவேர்; the root of fragrant palay milky plant. 2. நன்னாரிவேர்; Indian sarasaparilla (சா.அக.).

**சுகம்பல்** *śugambal,* பெ. (n.) புளிநறளை (மலை); bristly trifoliate vine.

**சுகம்பலம்** *śugambalam,* பெ. (n.) பூனைக் காலி; cowhage plant (சாஅக.).

**சுகியன்** *śugiyaṉ,* பெ. (n.) ஒரு வகை இனிப்புப் பண்ணியம்; a kind of sweet pastry ball. "அவல்பொரி சுகியன் ..." (திருப்பு. 426).

ம. சுகியன்; தெ. சுகிய; க. சுக்ய

[சுழியன் → சுகியன் (வே.க. 229)]

**சுகிர்**[2] *śugir,* பெ. (n.) உட்டுளை (சூடா.); tubularity.

Skt. suṣira.

**சுகிர்புரி-தல்** *śugir-puri-,* 2 செ.குன்றாவி. (v.t.) யாழ் நரம்பினை வடித்து முறுக்குதல்; to rub clean and tighten the strings of a lute. "சுகிர்புரி நரம்பின் சீறியாழ் பண்ணி" (புறநா. 109).

[சுகிர்' + புரி-,]

**சுங்கடி** *śuṅgaḍi,* பெ. (n.) முடிச்சுக்கட்டிச் சாயமிடப்பெற்ற ஒருவகைச் சீலை; a kind of dyed saree with undyed spots.

தெ. சுங்கடி

**சுங்கம்**[1] *śuṅgam,* பெ. (n.) கஞ்சத்தனம்; misserlyness.

[சுள் → சுட்கு → சுக்கு → சுக்கம் → சுங்கம்]

**சுங்கம்**[2] *śuṅgam,* பெ. (n.) 1. ஆடுதின்னாப் பாலை (மலை.); worm killer. 2. கடுகு; mustard.

Skt. junga

**சுங்கம்**[3] *śuṅgam,* பெ (n.) 1. கீழறுக்கை; undermining. 2. திருட்டு; stealing, pilfering.

**சுங்கம்பிடி-த்தல்** *śuṅgam-piḍi-,* 4 செ.கு.வி. (v.i.) கடுஞ்சிக்கனம் செய்து பொருள் சேர்த்தல். (இ.வ.); to save money, as a miser.

[சுங்கம் + பிடி-,]

**சுங்கல்**[1] *śuṅgal,* பெ. (n.) விளையாட்டில் மேலும் ஓர் ஆட்டம்; an extra turn in game.

**சுங்கல்**[2] *śuṅgal,* பெ. (n.) சுங்கு,1 பார்க்க; see śuṅgu.

மறுவ. சுங்கு

தெ. சுங்கு; க: சுங்கு

[சுங்கு → சுங்கல்]

**சுங்கான்** *śuṅgāṉ,* பெ (n.) புகை பிடிக்கும் குழாய் (யாழ்அக.); tobacco pipe.

க., து. சுங்கானி; ம. சுங்கா; U. cuṅgā

[சுருங்கை → சுங்கை → சுங்கான்]

சுருங்கை என்பது சிறுவழி; புகையிலையைப் போட்டுத் தீமூட்டிச் சிறுகுழாய் வழியே புகையை உறிஞ்சுதலால் சுங்கான் என்று பெயர் பெற்றது.



சுங்கான்

**சுங்கான்களி** *śuṅgāṉ-kaḷi,* பெ. (n.) புகை பிடிக்கும் சுங்கான் செய்வதற்கேற்ற தூய, பொடியான களிமண்; pure and nice powdered clay to be used to manufacture the tobacco pipes.

[சுங்கான் + களி]

**சுங்கான்புகையிலை** *śuṅgāṉ-pugai-y-ilai,* பெ. (n.) சுங்கானில் போட்டுப் புகை பிடிப்பதற்கு அணியமாக்கப்பட்ட புகையிலை; tobacco prepared for the pipe.

[சுங்கான் + புகை + இலை]

**சுங்கு** *śuṅgu,* பெ. (n.) 1. ஆடையில் தொங்க விட்டுக் கட்டும் மூலை; end of a cloth left hanging out in dressing. 2. ஆடையின் கொய்சகம் (வின்.); pleat or fold of a garment. "சுங்குவிட்டுக் கட்டுகிறாள்" (வின்.). 3. சடைக் குச்சு; silken tassel used in plaiting girl's hair.

தெ. சுங்குலு; க. சுங்கு; கொலா. இதன

**சுங்குடு** *śuṅguḍu,* பெ. (n.) சிறுபாக்கி; trivial balance, trifling amount in arrears.

தெ. சுங்குடு; க. சுங்கடி; து. சுங்குடி

**சுங்குத்தான்குழல்** *śuṅguttāṉ-kūḻal,* பெ. (n.) பறவை முதலியவற்றை வீழ்த்த உண்டை எறியுங்குழல் (வின்.); long tube through which pellets of clay are shot at birds.

U. cōṅgā

*மறுவ. சுக்குத்தான்*

*[சுங்குத்தான் + குழல்]*

**சுச்சு**[1] *śuccu,* பெ. (n.) 1. சுக்கு (மூ.அ.); dried ginger. 2. இஞ்சி; ginger-plant. 3. வறட்சுண்டி (பிங்.); floating sensitive plant.

Skt. śuṣka

*[சுக்கு → சுச்சு]*

**சுச்சு**[2] *śuccu,* பெ. (n.) பறவைமூக்கு (பிங்); அலகு; beak of a bird.

Skt. cañju

**சுசியம்** *śuśiyam,* பெ. (n.) சுழியம் பார்க்க; see *śuḻiyam.*

*[சுழியம் → சுசியம் (வே.க. 228)]*

**சுட்கம்** *śuṭkam,* பெ. (n.) 1. வறட்சி; dryness. 2. வறண்டது; that which is dried up. 3. ஒரு நோய்; a disease. 4. பணம் முதலியவற்றின் குறைவு (இ.வ.); shortage, as of funds, provisions. 5. கஞ்சத்தனம்; stinginess. 'சுட்கஞ் செய்யாதே' (உ.வ.).

Skt. śuṣka

*[சுள் → சுட்டு → சுட்கம். ஒ.நோ: வெட்கு → வெட்கம் (வே.க.)]*

**சுட்கமூலம்** *śuṭka-mūlam,* பெ. (n.) 1. முளை சுருங்கிய ஒருவகை மூலநோய்; a kind of pile disease. 2. வறட்சி மூலம்; a kind of hemorrhoid due to the dry condition of the lower end of the rectum. 3. உலர்ந்துசுருங்கி இருப்பது; that which is dried and shrinked. 4. உலர்ந்தவேர்; dried root. 5. உலர்ந்தகிழங்கு; dried bulb or rhyzome (சா.அக.).

*[சுட்கம் + மூலம்]*

**சுட்கு-தல்** *śuṭ-ku-,* 5 செ.குவி. (v.i.) 1. வறளுதல்; to grow dry. 2. மெலிதல்; to get reduced as emaciated.

*[சுள் → சுட்கு-,]*

**சுட்சுள்** *śuṭ-śuḷ,* பெ. (n.) சுள்ளுச்சுள்ளெனல் பார்க்க; see *śuḷu-c-cuḷeṉal.*

**சுட்டகரி** *śuṭṭa-kari,* பெ. (n.) 1. எரித்தகரி; burnt charcoal, carbon. 2. சுடுவதனாலுண்டாகும் கரி; charcoal derived by burning wood fuel. 3. காந்திப்போன நிலக்கரி; the refuse of the burned coals; a hot coal that ceased to flame.

*[சுட்ட + கரி]*

**சுட்டகல்** *śuṭṭa-kal,* பெ. (n.) சுட்டசெங்கல் பார்க்க (இ.வ.); see *śuṭṭa-śeṅgal.*

ம. சுடுகல்லு

*[(சுடு) சுட்ட + கல்]*

**சுட்டசாம்பச்சி** *śuṭṭa-śāmbacci,* பெ. (n.) எவட்சாரம்; saltpetre.

**சுட்டசுண்ணாம்பு** *śuṭṭa-śuṇṇāmbu,* பெ. (n.) 1. சுட்ட சுண்ணாம்புக்கல்; burnt lime stone; quick lime. 2. நீற்றிய சுண்ணாம்பு; slacked lime.

*[சுட்ட + சுண்ணாம்பு]*

**சுட்டசெங்கல்** *śuṭṭa-śeṅgal,* பெ. (n.) சூளையிற் சுடப்பட்ட செங்கல்; burnt brick in kiln.

*[சுட்ட + செங்கல்]*

**சுட்டடிக்கொள்கை** *śuṭṭaḍi-k-koḷgai,* பெ. (n.) ஒருமொழிச் சொற்களெல்லாம் சுட்டுகளினின்று கிளைத்து வளர்ந்தன என்னும் கோட்பாடு; deietic theory.

*[சுட்டடி + கொள்கை]*

மொழியின்கண் பல்கிப்பெருகிக் காணப் படுகின்ற சொற்களெல்லாம் மிகச்சிறிய அளவிலான வேர்களினின்று வளர்ந்து வந்துள்ளன. அவ்வேர்களுக்கும் மூலமாகச் சுட்டடிகள் இருந்துள்ளன என்பது பாவாணரின் ஆய்வு முடிவு.

சேய்மை, அண்மை, முன்மை ஆகிய மூவிடங்களையும் முறையே சுட்டக்கூடிய ஒலிகள் ஆ, ஈ, ஊ என்னும் மூன்றாய்த்தான் இருக்கமுடியும். வாயை ஆவென்று விரிவாகத் திறந்து சேய்மையைச் சுட்டும் போது ஆகார

வொலியும் ஈயென்று பின்னோக்கியிழுத்துச் சேய்மைக்குப் பின்மையாகிய அண்மையைச் சுட்டும்போது ஈகாரவொலியும், ஊவென்று முன்னோக்கிக் குவித்து முன்மையைச் சுட்டும்போது ஊகாரவொலியும் பிறத்தல் காண்க. நெடிலின் குறுக்கம் குறிலும் குறிலின் நீட்டம் நெடிலுமாதலின் ஆ, ஈ, ஊ எனினும் அ, இ, உ எனினும் ஒன்றே. குறிலினும் நெடில் ஒலித்தற் கெளிதாகலானும் குழந்தைகள் குறில்களைப் பெரும்பாலும் நெடிலாகவே யொலித்தலானும் குழந்தை நிலையிலிருந்த முந்தியல் மாந்தன் வாயில் நெடில்களே முந்திப் பிறந்திருத்தல் வேண்டும் (மு.தா. 18).

**சுட்டணி** *šuttaṇi,* பெ. (n.) வீரசோழியத்தில் கூறப்பட்ட நிதரிசனம் என்னும் ஒருவகை அணி (வீரசோ. அலங். 12); a kind of figure of speech as in Vira cōḷiyam.

*[சுட்டு + அணி]*

**சுட்டபுண்** *šutta-puṇ,* பெ. (n.) 1. நெருப்பினால் சுடப்பட்ட புண்; injury caused by fire-burns. "தீயினாற் சுட்டபுண் உள்ளாறும்" (குறள், 129). 2. வெந்தபுண்; wound caused by hot substances - scalds (சா.அக.).

*[சுட்ட + புண்]*

**சுட்டபுண்ணாற்றி** *šutta-puṇṇāṟṟi,* பெ. (n.) தீச்சுட்ட புண்களை ஆற்றும் மருந்து; an agent that cures burns antipyrotic (சா.அக.).

*[சுட்ட + புண் + ஆற்றி]*

**சுட்டபுளி** *šutta-puḷi,* பெ. (n.) நெருப்பிலிட் டெடுத்த புளி; burnt tamarind used in diet (சா.அக.).

*[சுட்ட + புளி]*

**சுட்டபூக்கல்** *šutta-pūkkal,* பெ. (n.) ஒருவகை உப்பு, வழலை; a kind of salt (சா.அக.).

*[சுட்ட + உப்புக்கல்]*

**சுட்டல்** *šuttal,* பெ. (n.) சுட்டுணர்வு, 1 பார்க்க; see suttuṇarvu, 1. "சுட்ட றிரிதல்" (மணிமே. 27:22).

*[சுட்டு → சுட்டல்]*

**சுட்டவெண்காரம்** *šutta-veṇ-kāram,* பெ. (n.) வெப்பத்தால் நீர்க்கூறகற்றிய வெண்காரம்; roasted borax, dehydrated borax (சா.அக.).

*[சுட்ட + வெண்காரம்]*

**சுட்டறிவு** *šuttaṟivu,* பெ. (n.) சுட்டுணர்வு, 2 பார்க்க; see šuttuṇarvu, 2. "சுட்ட றிவாவது . . . அசத்தேயாகலின் . . ." (சி.சி. 6:2, சிவஞா.)

*[சுட்டு + அறிவு]*

**சுட்டாமுட்டி** *šuttā-mutti,* பெ. (n.) சுட்டுவிரல் (சிலப். 3:58, அரும்.); index finger, forefinger.

*[சுட்டு + ஆ + முட்டி]*

**சுட்டாவிரல்** *šuttā-viral,* பெ. (n.) சுட்டுவிரல் பார்க்க; see šuttu-viral (சா.அக.).

*[சுட்டு + ஆ + விரல்]*

**சுட்டி**[1] *sutti,* பெ. (n.) 1. குழந்தைகளும் மகளிரும் அணிந்து கொள்ளும் நெற்றியணி; a small designed ornament worn by children and women on the forehead. "சுட்டி சிதையக் குட்டத்துக் குளித்து" (பெருங். உஞ்சைக். 40:102). 2. மாட்டின் நெற்றியிலுள்ள வெண்சுழி; white curl on the forehead of bull or cow. "சுட்டியை நெற்றியிலேயுடைய கரிய எருது" (கலித். 101 : 2, உரை). 3. பாம்பு முதலிய உயிரிகளின் உச்சி வெள்ளை (வின்.); white spot on the head of a beast or serpent. 4. சிறுபட்டி (நாஞ்.); short striped border of a cloth. 5. மயிர்முடி (அக.நி); குடுமி; tuft of hair. 6. நெற்றிப்பட்டம் (அக.நி.); a plate of gold worn on the forehead, as a mark of distinction.

ம. சுட்டி; க. சுட்டி; து. சிட்டி.

Skt. cūḍiya

*[சுள் → சுட்டி (வே.க. 230)]*

**சுட்டி**[2] *šutti,* பெ. (n.) 1. துடிப்பானவன்; an active fellow. 2. குறும்புத்தனம் உள்ளவன்; a mischievous fellow. 3. ஆகூழற்றவன் (இ.வ.); luckless fellow; ill-fated person. 4. அறிவுக் கூர்மையுள்ளவன் (இ.வ.); intelligent person.

ம. சுட்டி; க., தெ. சூடி; து. சுடி

Skt. duṣṭa

*[சுடு → (சுட்டு) → சுட்டி (மு.தா. 62)]*

**சுட்டி**[3] *šutti,* பெ. (n.) பொருட்டு; for the sake of. "எனக்குச் சுட்டி ஒன்றுஞ் செய்ய வேண்டாம்" (நாஞ்.).

*[சுட்டு → சுட்டி]*

சுட்டி[4] *šuṭṭi*, பெ. (n.) நாக்கு (அகநி.); tongue.

*[சுட்டு → சுட்டி]*

சுட்டிக்காட்டு-தல் *šuṭṭi-k-kāṭṭu-*, 5 செ.குன்றாவி. (v.t.) 1. சுட்டு[1]-தல் பார்க்க; see *šuṭṭu-*, 1. 2. அடையாளங்காட்டுதல்; identity. "உன்னையே சுட்டிக் காட்டுங்காண்" (திவ். பெரியாழ். 1.4 : 4).

*[சுட்டி + காட்டு-,]*

சுட்டிகை *šuṭṭi-gai*, பெ. (n.) மகளிர் நுதலணி; an ornament worn by women on the forehead. "சூளிகையுஞ் சுட்டிகையும்......" (பதினொ. ஆதியுலா, 68).

*[சுட்டி + கை]*

சுட்டிச்சுண்ணம் *šuṭṭi-c-cuṇṇam*, பெ. (n.) உடம்பைத் தூய்மை செய்தற்குரிய நறுமணப் பொடி; scented or aromatic powder used in bathing. "சுந்தரப் பொடியுஞ் சுட்டிச் சுண்ணமும்" (பெருங். உஞ்சைக். 42 : 73).

*[சுட்டி + சுண்ணம்]*

சுட்டிசுட்டியாக *šuṭṭi-šuṭṭi-y-āga*, வி.அ. (adv.) வட்டம் வட்டமாக; in round patches. 'அவன் உடலில் சுட்டிசுட்டியாக வெள்ளை விழுகிறது' (உ.வ.).

*[சுட்டி + சுட்டி + ஆக]*

சுட்டிட்டிகை *šuṭṭiṭṭigai*, பெ. (n.) சுட்டோடு பார்க்க; see *šuṭṭōḍu*. "சுட்டிட்டிகையால் மாடமாளிகை எடுக்கப் பெறுவதாகவும்..." (தெசு. தொ. 521, 35).

*[சுட்ட + இட்டிகை]*

சுட்டித்தலை *šuṭṭi-t-talai*, பெ. (n.) 1. சுட்டித் தனம் (யாழ்அக.) பார்க்க; see *šuṭṭi-t-taṉam*. 2. சுட்டித்தலையன்[1] (இ.வ.) பார்க்க; see *šuṭṭi-t-talaiyaṉ*[1]. 3. சுட்டியுள்ள தலை; head which have a curl.

*[சுட்டி + தலை]*

சுட்டித்தலையன்[1] *šuṭṭi-t-talaiyaṉ*, பெ. (n.) குறும்பு செய்பவன், கெட்டவன்; mischievous fellow.

*[சுட்டி + தலையன்]*

சுட்டித்தலையன்[2] *šuṭṭi-t-talaiyaṉ*, பெ. (n.) உச்சி வெள்ளையுடைய விலங்கு (யாழ்ப்.); animal with a white spot on its forehead.

*[சுட்டி[1] + தலையன்]*

சுட்டித்தனம் *šuṭṭi-t-taṉam*, பெ. (n.) துடுக்குத் தனம்; mischievousness, turbulence.

*[சுட்டி + தனம்]*

சுட்டிப்பயல் *šuṭṭi-p-payal*, பெ. (n.) சுட்டிப் பையன் பார்க்க; see *šuṭṭi-p-paiyaṉ*.

*[சுட்டிப் பையன் → சுட்டிப்பயல். பையன் → பையல் → பயல்]*

சுட்டிப்பேசு-தல் *šuṭṭi-p-pēšu-*, 5 செ.குன்றாவி. (v.t.) குறிப்பாகச் சொல்லுதல் (இ.வ.); to hint, allude to in discourse.

*[சுட்டி + பேசு-,]*

சுட்டிப்பையன் *šuṭṭi-p-paiyaṉ*, பெ. (n.) 1. குறும்புசெய்யும் பையன்; mischevous boy; 2. கூர்த்த அறிவுடையோன்; brilliant boy.

*[சுட்டி[2] + பையன்]*

சுட்டிமுகடு *šuṭṭi-mugaḍu*, பெ. (n.) மகளிர் அணியும் தலையணி (இ.வ.); set of ornaments worn by women on the head.

*[சுட்டி + முகடு]*

சுட்டியன் *šuṭṭiyaṉ*, பெ. (n.) சுட்டி[2] பார்க்க; see *šuṭṭi*[2].

*[சுட்டி + சுட்டியன்]*

சுட்டு[1]-தல் *šuṭṭu-*, 5 செ.குன்றாவி. (v.t.) 1. குறிப்பிடுதல்; to point out; indicate. "துன்னுநர் சுட்டவும்" (பரிபா. 19, 54). 2. நோக்கமாகக் கொள்ளுதல், குறிக் கோளாய்க் கொள்ளுதல்; to have in view, aim at, desire. 3. நினைத்தல், உன்னுதல்; to think, consider. "சுட்டினும் பனிக்கும்" (மலைபடு. 398). 4. நன்குமதித்தல்; to honour. "இருவர்ச் சுட்டிய பல்வேறு தொல்குடி" (திருமுருகு. 178).

ம. சுட்டு; க., தெ., சுட்டு

*[சுள் → சுட்டு-,]*

**சுட்டு**[2] *šuttu,* பெ. (n.) 1. குறிப்பிடுகை; to indication, reference. "சுட்டுத்தலை போகாத் தொல்குடி" *(சிலப். 12:21).* 2. கருதப்படும் பொருள்; that which is intended, designated. "உயர்திணை யென்மனார் மக்கட் சுட்டே" *(தொல். சொல். 1).* 3. நன்மதிப்பு; honour. "பிறராற் பெருஞ்சுட்டு வேண்டுவான்" *(நீதிநெறி. 20).* 4. சுட்டெழுத்து பார்க்க; see *šutteluttu.* "அ இ உ அம்மூன்றுஞ் சுட்டு" *(தொல். எழுத்து. 31).* 5. சுட்டணி பார்க்க; see *šuttani.*

ம. சுட்டு; க. சுட்டு; தெ. சூட்டி; து. சூடி; குய். சூட்டா; குவி. ஹ˜டாலி.

*[சுள் → சுட்டு]*

**சுட்டுக்குருவி** *šuttu-k-kuruvi,* பெ. (n.) சிட்டுக்குருவி (இ.வ.) பார்க்க; see *šittu-k-kuruvi.*

*[சிட்டுக்குருவி → சுட்டுக்குருவி. சுள் → (சுட்டு) → சிட்டு = சிறியது. குள் → குரு → குருவி = சிறு பறவை]*

**சுட்டுக்குவி** *šuttu-k-kuvi,* பெ. (n.) பிணங்களைச் சுட்டுக்குவி எனப் பொருள்படும்படி அமைந்ததாகக் கருதப்படும் ஆந்தையின் ஒலிக்குறிப்பு; screeching of an owl fancied to resemble the word šuttu-k-kuvi and indicate that the corpses should be burnt and heaped. "சுட்டுக் குவியெனச் செத்தோர்ப் பயிருங் கள்ளியம் பறந்தலை" *(புறநா. 240).*

*[சுட்டு + குவி]*

**சுட்டுக்கொட்டைபரப்பு-தல்** *šuttu-k-kottai-parappu-,* 5 செ.கு.வி. (v.t.) ஊரைச்சுட்டு விதைத்தல், முற்றும் அழித்தல்; lit., to burn down a city and sow it with castor seeds. To destroy completely, devastate.

*[சுட்டு + கொட்டை + பரப்பு-,]*

**சுட்டுக்கோல்** *šuttu-k-kōl,* பெ. (n.) 1. உலையாணிக்கோல்; smith's poker. "சுட்டுக்கோல் போல வெரியும் புகுவரே நீட்டாரெனப் படுவார்" *(நாலடி, 208).* 2. தீயோன் (யாழ்ப்.); mischievous person.

*[சுட்டு + கோல்]*

**சுட்டுணர்வு** *šuttunarvu,* பெ. (n.) 1. போலி யளவைகளெட்டனுள் பொருளுண்மை மாத்திரை காணும் அறிவு (மணிமே. 27 : 6); knowledge of the mere existence of a thing without knowing its nature, one of eight piramāṇāpāšam. 2. புலன்களால் உய்த்துணரும் அறிவு; cognition by the senses. "சுட்டுணர் வின்றி நின்றறியப்படுஞ் சிவசத்தின் முன்னர்" *(சி.போ. பா. பக்.154).*

*[சுட்டு + உணர்வு]*

**சுட்டுநட்டவேப்பங்கன்று** *šuttu-natta-vēppan-kanru,* பெ. (n.) பெருங்கொடுமையன் (நெல்லை); extremely mischievous person.

*[சுட்டு + நட்ட + வேப்பங்கன்று]*

**சுட்டுப்பெயர்** *šuttu-p-peyar,* பெ. (n.) 1. சுட்டெழுத்தை முன்பெற்ற பெயர்; demonstrative pronoun, as அவன், இவன். 'சுட்டுப்பெயர்க் கிளவி முற்படக் கிளவார்" *(தொல். சொல். 38).* 2. சுட்டுமாத்திரையாய் நிற்கும் பெயர்; noun used in the place of pronoun. "கூற்றம் நமன் என்பன சுட்டுப்பெயர்" *(சீவக. 1487, உரை).*

*[சுட்டு + பெயர்]*

அ, இ, உ என்னும் சுட்டெழுத்துகளுடன் பால்ஈறுகள் சேர்ந்து உருவாகும் சுட்டுப் பெயர்கள், படர்க்கைப்பெயர்களாக ஆளப்படுகின்றன. பழந்தமிழில் சுட்டெழுத்துகள் நெடிலாக இருந்தன (இன்றளவும் தமிழின மொழிகளான மலையாளம், கன்னடம், தெலுங்கு போன்ற மொழிகளில் சுட்டு நெடில்களாக இருக்கின்றன) பின்னர், அவை குறில்களாகக் குறுக்கம் பெற்றன.

I need not call attention to the beautiful and philosophical regularity of this quadruple set of remote, proximate and intermediate demonstrative and interrogatives. In no other language or family of languages in the world shall we find its equal, or even its second. In addition to which, the circumstance that the demonstrative vowels are not only used in these languages with an invariable and exact discrimination of menaing which is not found in the Indo-European tongues (with the solitary and partial exception of the new persian) but are also associated with a corresponding interrogative vowel of which the Indo-European tongues are totally

ignorant, tends to confirm the supposition which I have already expressed, that the Dravidian family has retained some pre-Sanskrit elements of immense antiquity; and, in particular, that its demonstratives, instead of being borrowed from Sanskrit, represent those old Japhetic bases from which the demonstrative of Sanskrit itself, as well as of various other members of the Indo-European family, were derived. (C.G.D.F.L. 422).

**சுட்டுப்பொருள்** *šuṭṭu-p-poruḷ*, பெ. (n.) *1. கருதிய பொருள்;* intended meaning, object aimed at. *2. ஊழ்கத்துக்காக (தியானத்துக்காக) மனத்தில் அமைக்கப்படும் முழுத்தம் (வின்.);* image of the object of worship formed in the mind for meditation. *3. ஊழ்கத்தில் நினைத்த படி கடவுள் குருவாக எழுந்தருளல்;* god appearing in the form of a Guru in meditation.

*[சுட்டு + பொருள்]*

**சுட்டுவிடை** *šuṭṭu-viḍai*, பெ. (n.) எண்வகை விடைகளுள், இது இவன் முதலிய சுட்டுப் பெயர்களாற் கூறும் விடை (நன். 386, உரை); answer in the form of demonstrative pronouns, one of eṇ-vagai-viḍai.

*[சுட்டு + விடை]*

**சுட்டுவிரல்** *šuṭṭu-viral*, பெ. (n.) *ஆட்காட்டி விரல்;* forefinger. "சுட்டு விரறனை மாசற நீட்டி . . ." *(பரத. பாவ. 30).*

ம. சுண்டந் விரல்; தெ. சட்டு வேலு.

*[சுட்டும் + விரல்]*



சுட்டுவிரல்

**சுட்டுவை-த்தல்** *šuṭṭu-vai-*, 4 செ.குன்றாவி. (v.t.) *1. ஒருவரை நினைத்த வண்ணமாய் இருத்தல் (யாழ்.);* to think intently about a person. *2. ஊழ்கத்தில் தான்நினைத்த தெய்வத் திருமேனியிலேயே மனத்தை நிறுத்துதல்;* to fix one's mind on the image of the object of worship, in meditation.

*[சுட்டு + வை-,]*

**சுட்டுறுகோல்** *šuṭṭuṟu-kōl*, பெ. (n.) *சுட்டுக் கோல்,1 பார்க்க;* see *šuṭṭu-k-kōl,1.* 'சுட்டுறுப் புகூஉஞ் சுட்டுறுகோல் போல்" *(பெருங். இலாவாண. 8:155).*

*[சுட்டுறு + கோல்]*

**சுட்டெரி-த்தல்** *šuṭṭeri-*, 4 செ.குன்றாவி. (v.t.) *1. நெருப்பு அல்லது வெப்பம் கடுமையாகக் காய்தல்;* fire or sun shine heating hardly. 'சுட்டெரிக்கும் இந்த வெயிலில் அலைந்து திரிந்தால் சூட்டுக்கடுப்பு வரும்' *(உ.வ.).* 2. *கடுந் தீயால் எரித்தல்;* burning by fire. "சிறுவர்கள் விளையாட்டாய் மூட்டிய தீ வீட்டையே சுட்டெரித்து விட்டது" 3. *உடலையும் மனத்தையும் புண்படுத்துதல்;* hurting one's body and mind. "அவருடைய சினம் அவளைச் சுட்டெரித்தது."

ம. சுட்டெரிக்குக

*[சுட்டு + எரி-,]*

**சுட்டெழுத்து** *šuṭṭ-eḻuttu*, பெ. (n.) *சுட்டி உணர்த்தும் அ, இ, உ என்ற எழுத்துகள்;* the demonstrative sounds a, i, u. "சுட்டெழுத்தினை முதலாகவுடைய வகர வீற்றுப் பெயர் மூன்றும்" *(தொல். எழுத்து. 378, உரை).*

ம. சுட்டெழுத்து

*[சுட்டு + எழுத்து]*

**சுட்டொலி** *šuṭṭoli*, பெ. (n.) *சுட்டிக்காட்டும் ஒலிகள்;* deictic sounds.

*[சுட்டு + ஒலி]*

சேய்மையைச் சுட்டுதற்கேற்ப வாயை விரிவாய்த் திறந்தொலிக்கும் ஆகாரமும், சேய்மைக்குப் பிற்பட்ட அண்மையைச் சுட்டுதற்கேற்ப வாயைப் பின்னுக்கிழுத் தொலிக்கும் ஈகாரமும், சேய்மைக்கும் அண்மைக்கும் இடைப்பட்ட முன்மையைச்

சுட்டுதற்கேற்ப இதழ்களை முற்படக் குவித்தொலிக்கும் ஊகாரமும், முறையே சேய்மை யண்மை முன்மைச் சுட்டொலிக ளாயின. இச்சுட்டொலிகளின் தோற்றமே தமிழ்க் கருநிலையாம். இவையே முதன் முதல் தமிழில் தோன்றிய உயிர்கள்.

முதற்கண் மூவிடச்சுட்டு கைச்சைகையினால் மட்டும் நிகழ்ந்தது. பின்பு கைச்சைகையோடு கூடிய வாய்ச்சைகையினால் நிகழ்ந்தது. அதன்பின், வாய்ச்சைகையினால் மட்டும் நிகழ்ந்து வருகின்றது. ஆயின், அவ்வாய்ச் சைகைத் தன்மை இன்று மறைந்துள்ளது. முச்சுட்டொலிகளும் வாய்ச்சைகை யொலிகளாயிருப்பதனாலேயே, அவை தமிழில் எக்கரணியத்தையிட்டும் பிற மொழிகளிற் போல் இடமாறிச் சுட்டுவ தில்லை. இதனால், தமிழொடு சிறிதும் பெரிதும் தொடர்புள்ள பிறமொழிச் சுட்டுச் சொற்கட்கெல்லாம். தமிழ்ச்சொற்களே மூலமென்பதைத் தெற்றெனத் தெரிந்து கொள்ளலாம்.

எ-டு : இடம்மாறாதன

| சமற்கிருதம் | தமிழ் | ஆங்கிலம் | தமிழ் |
|---|---|---|---|
| தத்ர | அங்கு | that | அது |
| இக | இங்கு | this | இது |
| இடம் மாறியன | | | |
| அத்ர | இங்கு | it | அது |
| அதுனா | இப்பொழுது | thus | இப்படி |

(த.வ. 66, 67)

**சுட்டோடு** *šuttōḍu*, பெ. (n.) சுட்டசெங்கல்; burnt brick. "சுட்டோட்டால் மாட மாளிகை எடுக்கப் பெறுவதாகவும்" *(தெ. க. தொ. 2, 509 : 58).*

*[சுட்டு + ஓடு]*

**சுடக்கு¹-தல்** *šuḍakku-*, 5 செ.குன்றாவி. (v.t.) சொடக்கு-, (உ.வ.) பார்க்க; see *šoḍakku-*.

*[சொடக்கு → சுடக்கு-,]*

**சுடக்கு²** *šuḍakku*, பெ. (n.) சொடக்கு பார்க்க; see *šoḍakku*.

*[சொடக்கு → சுடக்கு]*

**சுடக்குடித்தவன்** *šuḍa-k-kuḍittavaṉ*, பெ. (n.) பதட்டக்காரன் (உ.வ.); hasty man. 'அவன் எப்போதும் சுடக்குடித்தவன் தானே' *(உ.வ.).*

*[சுடு → சுட + குடித்தவன்]*

**சுடகத்தி** *šuḍagatti*, பெ. (n.) பேய்க்கடலை; wild bitter gram.

**சுடகமாமிசம்** *šuḍaga-māmišam*, பெ. (n.) கருவாடு; dried fish *(சா.அக.).*

*[சூடு → சுடு → சுடகம். சுடகம் + மாமிசம்]*

**சுடங்கமூலி** *šuḍaṅga-mūli*, பெ. (n.) நிலத் துளசி; holy basil *(சா.அக.).*

*[சுடங்கம் + மூலி]*

**சுடச்சுட** *šuḍa-c-cuḍa*, வி.அ. (adv.) 1. சூடு குன்றாமல்; right hot. "சுடச்சுட இட்டலி சாப்பிட்டால் அதன் சுவையே தனி!" 2. உடனடி யாகவும், மனத்தில் பதியும்படியாகவும்; immediately and impressively. '"குறும்பு மாணவர்கள் கேட்ட வினாக்களுக்கு ஆசிரியர் சுடச்சுட மறுமொழி கொடுத்தார்".

*[சுள் → சுடு → சுட + சுட]*

**சுடர்¹** *šuḍar*, பெ. (n.) 1. ஒளி, வெளிச்சம், சுவாலை; light, brilliance, lustre. "தெறுசுட ரொண் கதிர் ஞாயிறு" *(புறநா. 6:27).* 2. ஞாயிறு; sun. "சுடர் சுட்ட சுரத்தேறி" *(புறநா. 136:18).* 3. வெயில்; sunshine. "வல்லிருள் புதைப்பச் செல்சுடர் சுருக்கி" *(பெருங். உஞ்சைக். 33:155).* 4. நிலா; moon. "சுடரொடு சூழ்வரு தாரகை" *(பரிபா. 19 : 19).* 5. கோள்; planet. "சுடர்நிலை உள்படுவோரும்" *(பரிபா. 19:7).* 6. நெருப்பு; fire. "சுரும்பு மூசாச் சுடர்ப்பூங் காந்தள்" *(திருமுரு. 43)* 7. விளக்கு; burning lamp. "இரவின் மாட்டிய விலங்கு சுடர்" *(பெரும்பாண். 349).* 8. தீக் கொழுந்து; flame. "விளக்கினுளொண் சுடரே போன்று" *(நாலடி, 189).* 9. தீப்பொறி (அக.நி.); spark. 10. சுடரெண்ணெய், 1 பார்க்க; see *šuḍer-eṇṇey, l.*

ம. சுடர்; க. சுடு, சொடர், சொட்ரு, சொடலு; தெ. சுடு; து. சுடரு, தடறு, துடரு (விளக்கு) Pkt. cuḍuli (torch); Mar. cuḍi (torch of wisps or twigs)

*[சுடு → சுடர் (வே.க.210)]*

**சுடர்²-தல்** *šuḍar-*, 2 செ.கு.வி. (v.i.) 1. ஒளி விடுதல்; to give light; to burn brightly; to shine, as a heavenly body; to sparkle, as a gem; to gleam. "சுடச்சுடரும் பொன்போல்" (குறள், 267)

*[சுள் → சுடு → சுடர் (மு.தா. 147)]*

**சுடர்க்கடை** *šuḍar-k-kaḍai,* பெ. (n.) *1.* மின்மினி; fire fly. *2.* மயில்; peacock.

*[சுடர் + கடை]*

**சுடர்க்காசம்** *šuḍar-k-kāsam,* பெ. (n.) ஈளை (காச) நோய் வகை; a kind of asthma (சா.அக.).

*[சுடர் + காசம்]*

**சுடர்க்காரி** *šuḍar-k-kāri,* பெ. (n.) சுடர்க்கடை பார்க்க; see *šuḍar-k-kaḍai* (சா.அக.).

*[சுடர் + காரி]*

**சுடர்க்காளை** *šuḍar-k-kāḷai,* பெ. (n.) சுடர்க் கொடி பார்க்க; see *šuḍar-k-koḍi* (சா.அக.).

*[சுடர் + காளை]*

**சுடர்க்கொடி** *šuḍar-k-koḍi,* பெ. (n.) ஆலத்திக் கருப்பூரம் (வின்.); incense of camphor.

*[சுடர் + கொடி]*

**சுடர்ச்சக்கரம்** *šuḍar-c-cakkaram,* பெ. (n.) ஞாலமுனைச் சக்கரம்; the great bear, polar circle. "சுடர்ச்சக்கரத்தைப் பொருந்திவரும் ஆதித்தன் முதலாக வருங் கோள்களது நிலைமையை" (பரிபா. 19, 46, உரை).

*[சுடர் + சக்கரம்]*

**சுடர்ச்செலவு** *šuḍar-c-celavu,* பெ. (n.) ஓரையை இரண்டாகப் பகிர்கை (வின்.); division of the rising sign into two equal parts for casting horoscopes.

*[சுடர் + செலவு]*

**சுடர்நிலை** *šuḍar-nilai,* பெ. (n.) *1.* விளக்குத் தண்டு (பிங்.); lampstand. *2.* விளக்கணி; a figure of speech.

ம. சுடர்நிலை

*[சுடர் + நிலை]*

**சுடர்நிலைத்தண்டு** *šuḍar-nilai-t-taṇḍu,* பெ. (n.) சுடர்நிலை,1 பார்க்க (சூடா. 11:120); see *šuḍar-nilai,[1]*.

*[சுடர்நிலை + தண்டு]*

**சுடர்நேமி** *šuḍar-nēmi,* பெ. (n.) சுடர்ச்சக்கரம் பார்க்க; see *šuḍar-c-cakkaram.* "சுடர்நேமி யொன்றிய சுடர்நிலை" (பரிபா. 19 : 46).

*[சுடர் + நேமி]*

**சுடர்ப்பொடி** *šuḍar-p-poḍi,* பெ. (n.) கருப்பூரம்; camphor (செ.அக.).

*[சுடர் + பொடி]*

**சுடர்பலதோன்றுதல்** *šuḍar-pala-dōṉṟudal,* பெ. (n.) ஒளியால் ஏற்படும் ஒருவகைக் கண்ணோய்; an eye disease casused by seeing bright lamp's light (சா.அக.).

*[சுடர் + பல + தோன்றுதல்]*

**சுடர்மணிக்கோவை** *šuḍar-maṇi-k-kōvai,* பெ. (n.) யானையின் அணிவகை; an ornament put on elephants. "சூழியு மோடையுஞ் சுடர் மணிக் கோவையும்" (பெருங்.இலாவாண. 2 : 2).

*[சுடர் + மணி + கோவை]*

**சுடர்மௌலியர்** *šuḍar-mauliyar,* பெ. (n.) ஒளிவிடுஞ் சென்னியராகிய தேவர்கள் (யாழ்.அக.); celestials or Dēvās, as having a bright halo about their heads.

*[சுடர் + மௌலியர்]*

**சுடர்விட்டெரி-தல்** *šuḍar-viṭṭeri-,* 2 செ.கு.வி. (v.i.) கொழுந்துவிட்டு எரிதல்; to burn brightly; blaze forth.

*[சுடர் + விட்டெரி-,]*

**சுடர்விடு-தல்** *šuḍar-viḍu-,* 20 செ.கு.வி. (v.i.) சுடர் விட்டெரி-தல் பார்க்க; see *šuḍar-viṭṭeri-.*

*[சுடர் + விடு-,]*

**சுடர்விளக்கு** *šuḍar-viḷakku,* பெ. (n.) சுடர் நிலை, 2 (திவா.) பார்க்க; see *šuḍar-nilai,* 2.

*[சுடர் + விளக்கு]*

**சுடரவன்** *šuḍaravaṉ,* பெ. (n.) ஒளியுடைப் பகலவன் (திவா.); sun, as emitting light.

ம. சுடரவன்

*[சுடர் → சுடரவன் (வே.க. 210)]*

**சுடரார்** *šuḍarār,* பெ. (n.) ஒளியுடையவரான கடவுள்; God as lustrous. "என்னகத் திருந்த சுடரார்" (திருநூற். 26).

ம. சுடராள்

*[சுடு → சுடர் → சுடரார் (வே.க.210)]*

'ஆர்' உடைமைப் பொருளீறு.

**சுடராவிரை** *śudar-āvirai,* பெ. (n.) சுழலாவிரை (இவ.) பார்க்க; see *śuḻalāvirai.*

*[சுடர் + ஆவிரை]*

**சுடரெண்ணெய்** *śudar-eṇṇey,* பெ. (n.) 1. சுடரிலிருந்து விழும் எண்ணெய்த்துளி; drops of burning oil dripping from lamp, torch etc. 2. ஒரு வகை மருந்தெண்ணெய்; a kind of medicinal oil. 3. மருந்துச்சரக்குகள் கூட்டி வடிக்கப்பட்ட வேப்பெண்ணெய்; margosa oil prepared with medicinal drugs.

*[சுடர் + எண்ணெய்]*

**சுடரொளி** *śudaroḷi,* பெ. (n.) கதிரவன், நெருப்பு, திங்கள் போன்றவற்றின் கதிர்; lusture of the sun, fire, moon etc.

ம. சுடரொளி

*[சுடர் + ஒளி]*

**சுடரோன்** *śudarōṉ,* பெ. (n.) சுடரவன் (பிங்.) பார்க்க; see *śudaravaṉ.* "கதிராயிரம் விரிக்குஞ் சுடரோன்" *(திருக்கருவை. கலித். 11).*

ம. சுடரோன்

*[சுடு → சுடர். சுடர் → சுடரவன் → சுடரோன் (முதா. 132)]*

**சுடல்** *śudal,* பெ. (n.) 1. சுடரெண்ணெய்,1 பார்க்க; see *śudar-eṇṇey,1.* 2. திரியின் எரிந்த முனை முடிச்சு; charred end of a burning wick. 'விளக்கெரியும்படி சுடலைத் தட்டி விடு'. *(உ.வ.)*

ம. சுடல்; க. சொடல்

*[சுடு → சுடல் (வே.க. 210)]*

**சுடலன்** *śudalaṉ,* பெ. (n.) ஒருவகைப் பூடு; phoelin paniculata *(சா.அக.).*

*[சுடல் → சுடலன்]*

**சுடலாவிரை** *śudalā-virai,* பெ. (n.) சுழலாவிரை (இவ.) பார்க்க; see *śuḻalā-virai.*

*[சுழலாவிரை → சுடலாவிரை (இவ.)]*

**சுடலை**[1] *śudalai,* பெ. (n.) 1. சுடுகை; baking. 2. சமைக்கை; cooking. 3. கொல்லுகை; killing. 4. அழிக்கை; destroying. 5. போர்செய்கை; quarrelling.

*[சுடு → சுடலை]*

**சுடலை**[2] *śudalai,* பெ. (n.) 1. சுடுகாடு பார்க்க; see *śudu-kādu.* "இவ்வழல்வாய்ச் சுடலைத் தின்னக் கண்டும்" *(மணிமே. 6:101).* 2. சுடலையாடி,2 (மூ.அ.) பார்க்க; see *śudalai-y-ādi,2.*

ம. சுடல; து. சுடலெ.

*[சுடு → சுடர் → சுடல் → சுடலை (முதா. 132)]*

**சுடலைக்கரை** *śudalai-k-karai,* பெ. (n.) சுடுகாடு (இவ.) பார்க்க; see *śudu-kādu.*

*[சுடலை + கரை]*

**சுடலைக்காடு** *śudalai-k-kādu,* பெ. (n.) சுடுகாடு பார்க்க; see *śudu-kādu.*

ம. சுடலக்களம், சுடலக்காடு

*[சுடலை + காடு]*

**சுடலைக்கான்** *śudalai-k-kāṉ,* பெ. (n.) சுடுகாடு பார்க்க; see *śudu-kādu.* "சுடலைக் கானிற் றொடுகுழிப் படுத்து" *(மணிமே. 16:25).*

*[சுடலை + கான்]*

**சுடலைக்குருவி** *śudalai-k-kuruvi,* பெ. (n.) சுடுகாட்டுக் குருவி; சாக்குருவி; a species of owl.

*[சுடலை + குருவி]*



சுடலைக்குருவி

**சுடலைகுத்தியாடு-தல்** *śudalai-kutti-y-ādu-,* 5 செ.குன்றாவி. (v.t.) செடில்குத்தியாடு-தல் பார்க்க; see *śedil-kutti-y-ādu-* *(சா.அக.).*

*[சுடலை + குத்தியாடு-,]*

**சுடலைதனில்நிருத்தன்** *śudalai-daṉil-niruttaṉ,* பெ. (n.) சிவனார்வேம்பு; Sivan's neem *(சா.அக.).*

**சுடலைநீறு** *śudalai-nīṟu,* பெ. (n.) பிணம் சுட்ட சாம்பல்; ashes left after burning the dead *(சா.அக.).*

*[சுடலை + நீறு]*

**சுடலைநோன்பிகள்** *śuḍalai-nōṉbigaḷ,* பெ. (n.) *காபாலிகச் சமயத் துறவிகள்;* a sect of Šaiva ascetics holding kābāligam doctrines. "சுடலை நோன்பிகள் ... மடைதீயுறுக்கும் வன்னி மன்றமும்" *(மணிமே. 6 : 86).*

*[சுடலை + நோன்பிகள்]*

**சுடலைப்பூச்செடி** *śuḍalai-p-pūccedi,* பெ. (n.) *ஆற்றலரி;* a kind of flower plant with tubular stipules *(சா.அக.).*

*[சுடலை + பூ + செடி]*

**சுடலைப்பூண்டு** *śuḍalai-pūṇḍu,* பெ. (n.) *சுடுகாட்டில் முளைக்கும் பலவகைச் செடிகள்;* various plants grown generally in the cremation ground *(சா.அக.).*

*[சுடலை + பூண்டு]*

**சுடலைமாடன்** *śuḍalai-māḍaṉ,* பெ. (n.) *சுடலையிலுள்ள ஒருவகைப் பேய்* (G.Tn.D.I, 118); evil spirit haunting burning-grounds.

ம. சுடலப்பேய், சுடலமாடன்

*[சுடலை + மாடன்]*

**சுடலைமுத்து** *śuḍalai-muttu,* பெ. (n.) *ஊர்ச் சிறு தெய்வம்;* a village deity. "மனச் சோபத்தை தீர்க்குஞ் சுடலை முத்து" *(பஞ்ச. திருமுக. 651).*

*[சுடலை + முத்து]*

**சுடலையாடி** *śuḍalai-y-āḍi,* பெ. (n.) 1. *சுடுகாட்டில் ஆடுவோனாகிய சிவன் (திவா.);* Sivaṉ as dancing in burning ground. 2. *சவர்க்காரம் (வின்.);* soap. 3. *சிவனார்வேம்பு;* Siva's neem

ம. சுடலயாடி

*[சுடலை + ஆடி]*

**சுடலையாவாரை** *śuḍalai-y-āvārai,* பெ. (n.) *சுடுகாட்டில் விளையும் ஆவாரஞ் செடி;* tanners cassia found grown in the grave-yard *(சா.அக.).*

*[சுடலை + ஆவாரை]*

**சுடலையூர்தி** *śuḍalai-ūrdi,* பெ. (n.) *கருமருது;* brown-hard-felted-backed-leaved winged Myrobalam.

*[சுடலை + ஊர்தி]*

**சுடலையோன்** *śuḍalai-y-ōṉ,* பெ. (n.) 1. *மயில் துத்தம்;* blue vitrol. 2. *கள்;* toddy *(சா.அக.).*

*[சுடலை → சுடலையோன்]*

**சுடவாலமல்லி** *śuḍavāla-malli,* பெ. (n.) *பவள மல்லிகை;* coral jasmine *(சா.அக.).*

*[சுடவாலம் + மல்லி]*

**சுடவை-த்தல்** *śuḍavai-,* 4 செ.குன்றாவி. (v.t.) *சூடுண்டாக்குதல்;* to heat any thing in fire *(சா.அக.).*

*[சூடு → சுடு → சுட. சுட + வை-,]*

**சுடற்காளை** *śuḍaṟ-kāḷai,* பெ. (n.) *கருப்பூரம்;* camphor *(சா.அக.).*

*[சுடர் + காளை]*

**சுடற்கொடி** *śuḍaṟ-koḍi,* பெ. (n.) *சுடர்க்கொடி பார்க்க;* see *śuḍaṟ-k-koḍi (சா.அக.).*

*[சுடர் + கொடி]*

**சுடாரி** *śuḍāri,* பெ. (n.) *கவசம்;* coat of mail.

*[சடாரி → சுடாரி]*

**சுடிகை**[1] *śuḍigai,* பெ. (n.) *பனங்கள் (வின்.);* palm-wine; palm toddy.

*[சுடு → சுடிகை]*

**சுடிகை**[2] *śuḍikai,* பெ. (n.) 1. *தலையுச்சி (திவா.);* crown of the head. 2. *மகுடம் (திவா.);* crown, crest, diadem. 3. *நெற்றிச் சுட்டி (திவா.);* ornament worn by women and girls on the forehead. 4. *நெற்றியில் இட்டுக் கொள்ளும் பொட்டு (திவா.);* a mark worn on the forehead. 5. *மயிர்முடி (திவா.), குடுமி;* hair-knot on the top of the head, hair tuft on the head. 6. *சூட்டு, கொண்டை (திவா.);* crest as of a peacock. 7. *பாம்புப்படம்;* hood of a cobra. "பஃறலைச் சுடிகை மாசுணம்" *(கந்தபு. திருநாட்டுப். 29).*

த. சுடிகை → Skt. jutikā

*[சுட்டி → சுட்டிகை]*

**சுடிநார்** *śuḍinār,* பெ. (n.) *மஞ்சள் பூக்களையுடைய காட்டிலவமரம்;* yellow flowered silk cotton *(சா.அக.).*

**சுடீகை** *šudīgai,* பெ. (n.) *1.* உச்சி; crown of the head. *2.* கள்; fermented liquor. *3.* பனங்கள்; palm toddy. *4.* பிள்ளைப்பேறு; parturition, child birth (சா.அக.).

[சூடு → சுடு → சுடி → சுடிகை → சுடீகை]

**சுடீரம்[1]** *šudīram,* பெ. (n.) பொந்து; துளை (சிவரட்.); hole, cavity.

[(சொள்ளை → சொள்) → சுள் → சுடீரம்]

**சுடீரம்[2]** *šudīram,* பெ. (n.) பீநாறி என்னும் மூலிகை; fetid tree (சா.அக.).

**சுடு[1]-தல்** *šudu-,* 20 செ.குவி. (v.i.) காய்தல்; to be hot; to burn. "வெம்பிச் சுடினும் புறஞ்சுடும்" (நாலடி, 89).

க., து. சுடு; ம. சுடு

[சுள் → சுடு-,]

**சுடு[2]-தல்** *šudu-,* 8 செ.குன்றாவி. (v.t.) காயச் செய்தல்; to warm, heat. "சுடச்சுடரும் பொன்போல்" (குறள், 267). *2.* எரித்தல்; to burn up. *3.* பணியாரம் முதலியன சுட்டுச் செய்தல்; to roast, toast, bake, fry, cook in steam. "பிட்டுச் சுட்டுக் கொடுத்தனள்" (திருவாலவா. 30, 20). *4.* காளவாயில் வேகவைத்தல்; to burn, as bricks in kiln. 'மழை வருமுன் செங்கல்லைச் சுட்டுவிட வேண்டும்' (உவ.). *5.* மருந்து நீற்றுதல்; to calcine, as medicine. *6.* சூடிடுதல்; to cauterise, brand. *7.* வெடிசுடுதல்; to fire, as gun, fire works. *8.* வருத்துதல், துன்புறுத்துதல்; to mortify, as the flesh; to injure as one's feelings. "துன்பஞ் சுடச்சுட நோற்கிற்பவர்க்கு" (குறள், 267). *9.* காயப் படுத்துதல்; to inflict pain. *10.* கெடுத்தல், அழித்தல்; to destroy, ruin. "குலஞ்சுடுங் கொள்கை பிழைப்பின்" (குறள், 1019). *11.* நெருப்பில் வாட்டுதல்; to roast. "சங்கு சுட்டாலும் வெண்மை தரும்" (மூதுரை, 4).

ம. சுடுக; க., பட. சுடு; தெ. சுடியு, சுட; து. சுடுபுனி, சுட்பினி, துடுபுனி; கோண். சுர்ரானா; குவி. குதலி; கொலா. சுட், சுடு; குரு. குக்னா; மா. குடெ

[சுள் → சுடு-, (வே.க. 209)]

**சுடு[3]** *šudu,* பெ. (n.) சுடுகை; burning, heating, scalding. "சுடுவிற் றேனுடைந்த வண்ணமே" (சீவக. 416).

[சுள் → சுடு]

**சுடு[4]** *šudu,* பெ. (n.) சும்மாடு (பிங்.); a kind of load-pad for the head.

[சூடு → சுடு]

**சுடுக்கு[1]-தல்** *šudukku-,* 5 செ.குன்றாவி. (v.t.) *1.* நெட்டிவாங்குதல்; to crack the joints and knuckles. *2.* பேன் முதலியவற்றை நெரித்தல்; to crack lice, bugs etc.,

மறுவ. சொடுக்குதல், நெரித்தல், சொடக்குப் போடுதல்

[சொடக்கு → சுடக்கு → சுடுக்கு-,]

**சுடுக்கு[2]** *šudukku-,* பெ. (n.) நெட்டிவாங்குகை; cracking the joints and knuckles.

[சொடக்கு → சுடுக்கு]

**சுடுகஞ்சி** *šudu-kañji,* பெ. (n.) சூடுள்ளகஞ்சி (பதார்த்த. 1381); hot gruel.

[சுடு + கஞ்சி]

**சுடுகண்** *šudu-kaṇ,* பெ. (n.) கொள்ளிக்கண்; evil eye.

[சுடு + கண்]

**சுடுகலம்** *šudu-kalam,* பெ. (n.) சுடப்பட்ட மட்பாண்டம்; earthen vessel.

[சுடு + கலம்]

**சுடுகாட்டுக்கோட்டம்** *šudu-kāṭṭu-k-kōṭṭam,* பெ. (n.) சக்கரவாளக்கோட்டம்; a place in the ancient city of Kāviri-p-pūm-paṭṭiṇam. "சுடுகாட்டுக் கோட்டத்துத் தூங்கிருளிற் சென்று" (சிலப். 9:20).

[சுடுகாடு + கோட்டம்]

**சுடுகாட்டுச்சித்தர்** *šudu-kāṭṭu-c-cittar,* பெ. (n.) சுடுகாட்டிலிருந்து மந்தரம் செய்தும், இறந்தோர் எலும்பு கொண்டு மாயக்கலை செய்தும், குறி சொல்லியும் வாழும் ஒருவகைச் சித்தர் கூட்டத்தார்; a kind of Šittars who are jugglers and fortune-tellers by practising their austerities in the burning-ground and carry about

human bones for working charms and in cantations.

*[சுடுகாடு + சித்தர்]*

**சுடுகாட்டுப்பாட்டம்** *śudukāṭṭu-p-pāṭṭam,* பெ. (n.) சுடலை வரி, சுடுகாட்டு வரிவகை (I.M.P.Cm. 147); fee collected in the burning-ground.

*[சுடுகாடு + பாட்டம்]*

**சுடுகாட்டுப்புகை** *śuḍu-kāṭṭu-p-pugai,* பெ. (n.) பிணம் சுடும்புகை; smoke from the burning dead body (சா.அக.).

*[சுடுகாடு + புகை]*

**சுடுகாட்டுப்பூ** *śuḍu-kāṭṭu-p-pū,* பெ. (n.) ஒருவகைக் காட்டுச் செடியில் மலரும் பூ; periwinkle, as graveyard flower, vinca.

*[சுடுகாடு + பூ]*

**சுடுகாட்டுப்பேய்** *śuḍu-kāṭṭu-p-pēy,* பெ. (n.) சுடுகாட்டில் திரியும் பேய்; spirit of dead persons hovering about the grave yard-Goblin.

*[சுடுகாடு + பேய்]*

**சுடுகாட்டுமணிபொறுக்கி** *śuḍu-kāṭṭu-maṇi-poṟukki,* பெ. (n.) 1. கொண்டையுள்ள ஒரு வகைப் பறவை; a kind of bird with crest on its head hovering around the burial ground. 2. காட்டுப்புறா; wild dove (சா.அக.).

*[சுடுகாடு + மணி + பொறுக்கி]*

**சுடுகாடு** *śuḍu-kāḍu,* பெ. (n.) சுடலை; burning-ground; crematorium. "மக்கட் பிணத்த சுடுகாடு" (நாலடி., 121).

ம. சுடுகாடு; க., து. சுடுகாடு; குட. சுடிகள; கோத. சுட்கட்

*[சுடு + காடு]*

**சுடுகாடுநக்கி** *śuḍu-kāḍu-nakki,* பெ. (n.) 1. ஏதிலி (இவ.); lit. one who licks the burning ground forsaken wretch, forlorn person. 2. மூக்கில் வெள்ளைப்பொறியுள்ள (ஆ) (இ.வ.); cow having a white spot on its nose. 3. மேல்வாய், கீழ்வாய் இதழ்களில் ஒன்று கருமையாகவும் மற்றது வெண்மையாகவும் உள்ள மாடு (இவ.); bullock having one of its lips black and the other white.

*[சுடுகாடு + நக்கி]*

**சுடுகாடுமீட்டான்** *śuḍukāḍu-mīṭṭaṉ,* பெ. (n.) முடக்கொற்றான் (மலை.); balloon vine.

*[சுடுகாடு + மீட்டான்]*

**சுடுகாடுமீட்டான்குழம்பு** *śuḍukāḍu-mīṭṭaṉ kuḻambu,* பெ. (n.) பாம்புகடித்தவரின் உடலில் ஏறிய நஞ்சை முறிக்கும் மருந்து; a medicine for snake-bite (சா.அக.).

*[சுடுகாடு + மீட்டான் + குழம்பு]*

**சுடுகாடுறையன்** *śuḍu-kāḍuṟaiyaṉ,* பெ. (n.) முடக்கொற்றான்; paly carer (சா.அக.).

*[சுடுகாடு + உறையன்]*

**சுடுகூத்தன்** *śuḍu-kūttaṉ,* பெ. (n.) கருப்பட்டி வாகை; a kind of śirissa tree.

*[சுடு + கூத்தன்]*

**சுடுகை** *śuḍugai,* பெ. (n.) சூடுகாட்டல்; process of heating calcification (சா.அக.).

*[சுடு → சுடுகை]*

**சுடுகைக்கஞ்சி** *śuḍugai-k-kañji,* பெ. (n.) சூடான கஞ்சி; hot-gruel (சா.அக.).

*[சுடுகை + கஞ்சி]*

**சுடுகோல்** *śuḍu-kōl,* பெ. (n.) 1. குறியிடப் பயன்படும் சூட்டுக்கோல்; a red hot burning iron rod used for marking purpose. 2. பற்றுக் கோல்; soldering iron. 3. சுடுகாட்டு நெருப்பைக் கிளறுங்கோல் (வின்.); rod for stirring funeral fire.

*[சுடு + கோல்]*

**சுடுங்கரிநாள்** *śuḍuṅ-karināḷ,* கரிசுக் கோள் நின்று நீங்கிய விண்மீன்; the particular nakṣatran from which an inauspicious planet has just left. "கொடுங்கோள் விடுநாள் . . . சுடுங் கரிநாள்" (விதான. குணாகுண. 94).

*[சுடும் + கரிநாள்]*

**சுடுசாப்பாடு** *śuḍu-śāppāḍu,* பெ. (n.) சுடுசோறு பார்க்க; see *śuḍu-śōṟu.*

*[சுடு + சாப்பாடு]*

**சுடுசாம்பல்** *šudu-šāmbal,* பெ. (n.) ஒத்தடம் கொடுக்கவுதவுஞ் சூடான அடுப்புச் சாம்பல்; hot ashes direct from oven used in fomantation.

*[சுடு + சாம்பல்]*

**சுடுசுடு-த்தல்** *šudu-šudu-,* 4 செ.குவி. (v.i.) சிடுசிடு; to frown.

*[சிடுசிடு → சுடுசுடு-,]*

**சுடுசுடெனல்** *šudu-šudenal,* பெ. (n.) 1. விரைவுக் குறிப்பு; onom, expr. singifying hurry. 2. சினக்குறிப்பு; onom expr. signifying irritability.

*[சுடுசுடு + எனல்]*

**சுடுசுண்ணம்** *šudu-šunnam,* பெ. (n.) 1. தாளித்த சுண்ணாம்பு; slaked lime 2. புடமிட்ட மருந்துச் சுண்ணம்; a calcined calcium compound (சா.அக.).

*[சுடு + சுண்ணம்]*

**சுடுசுண்ணச்சாந்து** *šudu-šunna-c-cāndu,* பெ. (n.) நீற்றின சுண்ணாம்பு (திவா); white wash.

*[சுடு + சுண்ணம் + சாந்து]*

**சுடுசுளாத்தி** *šudu-šulātti,* பெ. (n.) சுடுதுரத்தி பார்க்க; see *šudu-duratti* (சா.அக.).

**சுடுசெங்கற்குகை** *šudu-šengar-kugai,* பெ. (n.) சுட்ட செங்கல்லை அரைத்துப் பண்ணிய குகை; crucible made of powedered burnt brick (சா.அக.).

*[சுடு + செங்கல் + குகை]*

**சுடுசொல்** *šudu-šol,* பெ. (n.) வசை, துன்புறுத்தும் மொழி; caustic remarks. "சீறிச் சுடுசொலால் இகழ்வோர்" (கூர்மபு. 32 : 34).

க. சுடுநுடி

*[சுடு + சொல்]*

**சுடுசோறு** *šudu-šōru,* பெ. (n.) புதிதாகச் சமைத்த சோறு; fresh, cooked rice, opposite to palañ-jōru (செ.அக.).

*[சுடு + சோறு]*

**சுடுதண்ணீர்** *šudu-tannīr,* பெ. (n.) சுடுநீர் பார்க்க; see *šudunīr.*

*[சுடு + தண்ணீர்]*

**சுடுதண்ணீர்க்கொப்புளம்** *šudu-tannīr-k-koppulam,* பெ. (n.) சுடுநீர்க்கொப்புளம் பார்க்க; *šudu-nīr-k-koppulam.*

*[சுடு + தண்ணீர் + கொப்புளம்]*

**சுடுதழும்பு** *šudu-talumbu,* பெ. (n.) 1. சுட்ட வடு; scar formed by healing of wounds caused by burning or cauterization. 2. காரத்தினால் சுட்ட தழும்பு; scar caused by the application of caustics (சா.அக.).

*[சுடு + தழும்பு]*

**சுடுதி** *šududi,* பெ. (n.) விதைகளின் மேற்றோலினின்று வடிக்கும் மருந்தெண்ணெய் (இ.வ.); medicinal oil extracted from the husk of seeds.

**சுடுதிமடுதி** *šududimadudi,* பெ. (n.) விரைவு; haste.

*[சுள் → சுடு → சுடுதி; சுடுதி + மடுதி]*

சுடுதிமடுதி - எதுகை குறித்து வந்த இணைமொழி.

**சுடுதுரத்தம்** *šudu-turattam,* பெ. (n.) அம்மான் பச்சரிசி (மலை.); an annual with erect branches.

**சுடுதுரத்தி** *šudu-turatti,* பெ. (n.) சித்திரப் பாலாடை; euphorbia thymifolia or hyperici folia (சா.அக.).

**சுடுதொரட்டி** *šudu-toratti,* பெ. (n.) சூரை முள்ளி பார்க்க; see *šūrai-mulli* (சா.அக.).

**சுடுநாற்றம்** *šudu-nārram,* பெ. (n.) மயிர், பிணம் முதலியன சுடுதலால் உண்டாகும் நாற்றம் (உ.வ.); bad odour produced by burning hair or corpse.

ம. சுடுநாற்றம்

*[சுடு + நாற்றம்]*

**சுடுநிலம்** *šudu-nilam,* பெ. (n.) சுடுகாடு (தி.வா.) பார்க்க; see *sudu-kādu.*

மறுவ. சுடலை

*[சுடு + நிலம்]*

**சுடுநீர்** *šudu-nīr,* பெ. (n.) வெந்நீர்; hot water.

*[சுடு + நீர்]*

**சுடுநீர்க்கொப்புளம்** *šudu-nīr-k-koppuḷam,* பெ. (n.) கொதிநீர் உடலில் படுவதால் உண்டாகும் கொப்புளம் (M.L.); scald caused by pouring boiling water on the body.

*[சுடு + தண்ணீர் + கொப்புளம்]*

**சுடுநோக்கு** *šudu-nōkku,* பெ. (n.) 1. சுடுகண் பார்க்க; see *šudu-kaṇ.* 2. கடும் பார்வையுடைய கண்; fierce-looking eyes. "சூர்த்துக் கடைசி வந்த சுடுநோக்கு" (சிலப். 5:84).

*[சுடு + நோக்கு]*

**சுடுபடை** *šudu-padai,* பெ. (n.) சுடுகோல், 1 பார்க்க; see *šudukōl,1.* "கழுவொடு சுடுபடை சுருக்கிய தோல்" (கலித். 106).

*[சுடு + படை]*

**சுடுபுண்** *šudu-puṇ,* பெ. (n.) சுட்டதனால் உண்டான புண் (உ.வ.); scald, burn.

*[சுடு + புண்]*

**சுடுபொன்** *šudupoṉ,* பெ. (n.) புடமிட்ட பொன்; refined gold, as burnt by fire. "சுடுபொன் வளைஇய ... சுற்றொடு" (கலித். 85)

*[சுடு + பொன்]*

**சுடுமட்பலகை** *šudumaṭ-palagai,* பெ. (n.) செங்கல்; burnt brick. "சுடுமட் பலகை" (பெரியபு. ஏயர்கோன். 49).

*[சுடுமண் + பலகை]*

**சுடுமடியைப்பிடியெனல்** *šudu-madiyai-p-pidi-eṉal,* பெ. (n.) விரைவுக்குறிப்பு; expression of haste, quickness. 'வேலை சுடுமடியைப் பிடியென்று நடந்துவிட்டது' (நாஞ்.)

**சுடுமண்** *šudu-maṇ,* பெ. (n.) 1. சுடுமட்பலகை பார்க்க; see *šudu-mat-palagai.* "சுடும ணோங்கிய நெடுநகர் வரைப்பில்" (பெரும்பாண். 405). 2. சுட்ட ஓடு; burnt tile. "சுடுணேறா வடுநீங்கு சிறப்பின்" (சிலப். 14 : 146). 3. மட்பாண்டம் (சிலப் 14:146, அரும்.); earthen vessel.

*[சுடு + மண்]*

**சுடுமருந்து** *šudu-marundu,* பெ. (n.) 1. நீறுசெய்த மருந்து (வின்.); medicine prepared by calcination. 2. புண்ணைச் சுடும் மருந்து; caustic.

*[சுடு + மருந்து]*

**சுடுமூஞ்சி** *šudu-mūñji,* பெ. (n.) சினமேறிச் சிவந்த முகம்; frowning face. 'அவன் ஒரு சுடுமூஞ்சி' (உ.வ.)

மறுவ. சிடுமூஞ்சி

ம., து. சுடுமோணெ.

*[சுடு + மூஞ்சி. முகம் → மூஞ்சி]*

**சுடுமூஞ்சித்தனம்** *šudu-mūñji-t-taṉam,* பெ. (n.) சிடுசிடுத்த முகக்குறி; angry face; irritated face or temperament (சா.அக.).

*[சுடுமூஞ்சி + தனம்]*

**சுடுரத்தம்** *šudurattam,* பெ. (n.) சித்திரப்பாலை; species of euphorbia (சா.அக.).

*[சுடு + அரத்தம்]*

**சுடுவல்** *šuduval,* பெ. (n.) குருதி, அரத்தம் (திவா.); blood, as warm.

*[சுடு → சுடுவல் (வே.க. 210)]*

**சுடுவள்ளி** *šudu-vaḷḷi,* பெ. (n.) தலைச்சூடுவள்ளி பார்க்க; see *talai-c-cūdu-vaḷḷi* (சா.அக.).

*[சுடு + வள்ளி]*

**சுடுவளர்த்தி** *šudu-vaḷartti,* பெ. (n.) சூடு வளர்த்தி பார்க்க; see *šūdu-vaḷartti* (சா.அக.).

*[சூடுவளர்த்தி → சுடுவளர்த்தி]*

**சுடுவன்** *šuduvaṉ,* பெ. (n.) சுடுவல் (பிங்.) பார்க்க; see *šuduval.*

*[சுடுவல் → சுடுவன் (வே.க. 210)]*

**சுடுவனம்** *šudu-vaṉam,* பெ. (n.) 1. சுடு அரத்தம்; warm blood. 2. சுடுநீர்மம்; hot fluid. 3. அனல் வீசும்காற்று; a forest throwing hot wind. 4. பாலை நிலம்; desert (சா.அக.).

*[சுடு + வனம்]*

**சுடுவான்** *šuduvāṉ,* பெ. (n.) மரக்கலத்துள்ள சமையலறை; galley, caboose (naut.).

*[சுடு → சுடுவான்]*

**சுடுவு** *šuduvu,* பெ. (n.) சுடு[4] பார்க்க (சூடா.); see *šudu,[4].*

*[சுடு → சுடுவு]*

**சுண்ட** *šuṇda,* வி.அ. (adv.) முற்றும்; completely to the last drop. 'சுண்டக் கறந்ததினால் கன்றுக்குப் பால் இல்லை' (இவ.).

*[சுள் → சுடு → சுண்டு. சுண்டு → சுண்ட]*

**சுண்டக்கட்டுதல்** *śunda-k-kattu-*, 5 செ.குன்றாவி. (v.t.) 1. இழுத்துக்கட்டுதல் (யாழ்ப்.); to stretch tight and fasten as a rope tied to posts. 2. இறுகக்கட்டுதல்; to be hardended after boiling.

[சுண்ட + கட்டு-,]

**சுண்டக்காய்-தல்** *śunda-k-kāy-*, 2 செ.கு.வி. (v.i.) இறுகும்படிக் காய்தல்; to dry in the sun till it completely dries (சா.அக.).

[சுண்ட + காய்-,]

**சுண்டக்காய்ச்சு-தல்** *śunda-k-kāyccu-*, 5 செ.குன்றாவி. (v.t.) நீர்வற்றும்படி காய்ச்சுதல்; to heat till it completing dries (சா.அக.).

[சுண்ட + காய்ச்சு-,]

**சுண்டக்கீரை** *śunda-k-kīrai*, பெ. (n.) நீர்ச் சுண்டி; floating sensitive plant(சா.அக.).

[சுண்டை + கீரை]

**சுண்டகம்** *śundagam*, பெ. (n.) 1. கள்; toddy. 2. மூஞ்சூறு; musk rat (சா.அக.).

**சுண்டகன்** *śundagan*, பெ. (n.) கள்ளிறக்கு வோன் (யாழ்.அக.); toddy-drawer.

**சுண்டங்காய்** *śundaṅgāy*, பெ. (n.) 1. சிறுகாய்; small fruit. 2. சுண்டைக்காய் பார்க்க; see *śundai-k-kāy* (சா.அக.).

[சுண்டைக்காய் → சுண்டங்காய்]

**சுண்டப்பிடி-த்தல்** *śunda-p-pidi-*, 4 செ.கு.வி. (v.i.) 1. ஆடையை அளக்க இழுத்துப் பிடித்தல்; to hold tight, as in measuring cloth. 2. வயிற்றில் பிடித்துக்கொள்ளுதல்; to be affected with colic pains. 3. கஞ்சத்தனம் செய்தல்; to be niggardly in expenditure.

[சுண்ட + பிடி-,]

**சுண்டம்** *śundam*, பெ. (n.) 1. கள் (மூ.அ.); toddy. 2. நொதிப்படைந்த நீர்மம்; fermented liquor. 3. யானைத்துதிக்கை; elephant's trunk. "புரு சுண்டந் தாங்குந் தன்மையால் . . .' (விநாயகபு. 46:44).

Skt. šuṇḍā

[சுண்டு → சுண்டம்]

**சுண்டல்**[1] *śundal*, பெ. (n.) சுண்டுகை; getting evaporated or dried.

[சுண்டு' → சுண்டல்]

**சுண்டல்**[2] *śundal*, பெ. (n.) 1. சுண்டற்கறி பார்க்க; see *śundar-kari*. 2. பயறுகளின் சுண்டல்; boiled and spiced pulse. "பேதமாகிய பல்சுண்டல்" (விநாயகபு. 39: 38).

ம. சுண்டல்

[சுண்டு → சுண்டல்]

**சுண்டலி** *śundali*, பெ. (n.) மரவகை (L.); axillary cymed false holly.

[சுண்டு → சுண்டல் → சுண்டலி]

**சுண்டவை-த்தல்** *śunda-vai-*, 4 செ.கு.வி. (v.i.) 1. குழம்பு, கறி மறுநாளும் கெடாதிருக்குமாறு நெருப்பெரித்து நீர்வற்றவைத்தல்; to heat till it completely dries the remnants of the day's curry. 2. நீர் வற்றும் வரை நெருப்பெரித்தல்; to evaporate, to dry up. 'பாலைச் சுண்டவை' (உ.வ.)

[கள் → சுண்டு → சுண்ட + வை-,]

**சுண்டற்கறி** *śundar-kari*, பெ. (n.) எரித்த பழங்கறி (இ.வ.); a warmed up dish of the remnants of the day's curry. 'சுண்டற்கறியின் சுவையே தனிச்சுவை' (உ.வ.).

[சுண்டல் + கறி]

**சுண்டன்**[1] *śundan*, பெ. (n.) அறிவிலி (சது.); முட்டாள்; ignorant, stupid person.

Skt. šuntha

[சுண்டு → சுண்டன்]

**சுண்டன்**[2] *śundan*, பெ. (n.) மூஞ்சூறு; musk rat. 2. சுண்டெலி; mouse.

ம., தெ., க. சுண்ட; Skt. šuṇḍia-mūṣika

**சுண்டன்**[3] *śundan*, பெ. (n.) 1. 24ஆம் விண்மீனாகிய குன்று (சதயம்) (பிங்.); the 24th star. 2. கருக்குவை; holy-leaved berried spindle tree (செ.அக.).

**சுண்டாங்கி** *śundāṅgi*, பெ. (n.) 1. கறியோடு சேர்ப்பதற்காக அரைத்த சம்பாரம்; seasoning

stuffs pounded and used with curry. *2. குறைவு;* small matter, trifle. *3. அளவிற்குறைவு;* scantiness in measure or quantity.

*[சுண்டு' → சுண்டாங்கி]*

**சுண்டாங்கியார்** *šuṇḍāṅgiyār,* பெ. (n.) *சிக்கனக்காரி; கடுஞ்செட்டுக்காரி;* stingy woman *(செ.அக.).*

*[சுண்டாங்கி → சுண்டாங்கியார்]*

**சுண்டாங்கொள்ளி** *šuṇḍāṅ-goḷḷi,* பெ. (n.) *குழந்தைகள் தீக்கொளுத்தி விளையாடுங் குச்சி (இ.வ.);* stick ignited at one end, used by children, as a firework.

*[சுண்டான்[2] → கொள்ளி]*

**சுண்டாயம்** *šuṇḍāyam,* பெ. (n.) *விளையாட்டு;* sport. "இவையென்ன சுண்டாயங்களே" *(திவ். திருவாய். 7. 8 : 7).*

*[சுண்டு + ஆயம்]*

**சுண்டாலம்** *šuṇḍālam,* பெ. (n.) *யானை (யாழ்.அக.);* elephant.

**சுண்டாலி** *šuṇḍāli,* பெ. (n.) *சுண்டாலம் (பிங்.) பார்க்க;* see *šuṇḍālam.*

*[சுண்டாலம் → சுண்டாலி]*

**சுண்டான்[1]** *šuṇḍāṉ,* பெ. (n.) *கள்;* toddy *(சா.அக.).*

*[சுண்டு → சுண்டான்]*

**சுண்டான்[2]** *šuṇḍāṉ,* பெ. (n.) *கள்விற்போர் வழங்கும் ஒரு மட்பாண்டச் சிற்றளவு (யாழ்ப்.);* small earthen measure used by toddy-sellers.

Skt. šuṇḍā

*[சுண்டு → சுண்டான்]*

**சுண்டான்[3]** *šuṇḍāṉ,* பெ. (n.) *சுண்டாங்கொள்ளி பார்க்க;* see *šuṇḍāṅ-koḷḷi.*

*[சுள் → சுண்டு → சுண்டான்]*

**சுண்டான்கொளுத்து-தல்** *šuṇḍāṉ-koḷuttu-,* 5 செ.குவி. (v.i.) *குழந்தைகள் விளையாட்டாகக் குச்சியைத் தீயிற் கொளுத்துதல் (இவ.);* to ignite small sticks at one end as a firework by children.

*[சுண்டான் + கொளுத்து-,]*

**சுண்டி[1]** *šuṇḍi,* பெ. (n.) *1. கள்;* toddy. *2. புளித்த மது;* any fermented, liquor. *3. சுக்கு (அக.நி.);* dried ginger. *4. ஒருவகைக் கண்நோய்;* a kind of eye disease. *5. தொட்டால் வாடி (மலை.);* sensitive plants, mimosa pudica. *6. சுண்டிக் கீரை (மூ.வ.) பார்க்க;* see *šuṇḍi-k-kīrai. 7. வறட்சுண்டி (வின்.);* floating sensitive plant. *8. இஞ்சி;* ginger. *9. சுண்டை பார்க்க (யாழ்.அக.);* see *šuṇḍai. 10. கருஞ்சுண்டி;* mimosa rubicaulis *(சா.அக.).*

*[சுள் → சுண்டு → சுண்டி]*

**சுண்டி[2]** *šuṇḍi,* பெ. (n.) *குறும்புக்காரன்;* smart, mischieveous fellow. *'சுண்டிப்பயல்' (செ.அக.).*

*[சுட்டி → சுண்டி]*

**சுண்டிக்கிருதம்** *šuṇḍi-k-kiṟudam,* பெ. (n.) *பாண்டுவீக்கம், குளிர்க்கழிச்சல் போன்ற வற்றைச் குணமாக்கும் ஒருவகை மருந்து;* a medicine prepared to cure dysentry *(சா.அக.).*

*[சுண்டி + கிருதம்]*

**சுண்டிக்கீரை** *šuṇḍi-k-kīrai,* பெ. (n.) *நீர்ச் சுண்டி;* water mimosa *(செ.அக.).*

*[சுண்டி' + கீரை]*

**சுண்டிகை** *šuṇḍigai,* பெ. (n.) *1. உண்ணாக்கு;* uvula. *2. சுண்டைக்காய் பார்க்க;* see *šuṇḍai-k-kāy. 3. வண்டின் நாக்கு;* tongue of beetle *(சா.அக.).*

**சுண்டிப்போ-தல்** *šuṇḍi-p-pō-,* 8 செ.குவி (v.i.) *சுருங்கல்;* to be reduced by boiling or evaporation *(சா.அக.).*

*[சுண்டி' + போ-,]*

**சுண்டியம்** *šuṇḍiyam,* பெ. (n.) *1. சுக்கு;* dried ginger. *2. சுண்டி[1] பார்க்க;* see *šuṇḍi[1] (சா.அக.).*

*[சுண்டி → சுண்டியம்]*

**சுண்டியாதிக்கருக்கு** *šuṇḍi-y-āti-k-karukku,* பெ. (n.) *சுக்கு முதலியவற்றால் அணியமாக்கப் படும் ஒருவகைக் கருக்கு;* a kind of decoction prepared out of dry ginger and other materials *(சா.அக.).*

மறுவ. கசாயம், கியாழம்

*[சுண்டி + ஆதி + கருக்கு]*

**சுண்டியாதிச்சூரணம்** *śuṇḍiyāti-c-cūraṇam,* பெ. (n.) ஒருவகை ஆயுள்வேத மாத்திரை செய்யப் பயன்படும் மருந்துப்பொடி; a kind of Ayurvedic powder to make tablet *(சா.அக.).*

*[சுண்டியாதி + சூரணம்]*

**சுண்டியிலை** *śuṇḍi-ilai,* பெ. (n.) தொட்டால் வாடி இலை; leaves of mimosa pudica *(சா.அக.).*

*[சுண்டி + இலை]*

**சுண்டியுண்டை** *śuṇḍi-y-uṇḍai,* பெ. (n.) சதுரக்கள்ளி, சித்திரகம், கொஞ்சி இவற்றின் வேர்ப்பட்டையாலும், சீரகத்தாலும் செய்யப் பட்டுச் சோறு முதலியவற்றைப் புளிக்க வைப்பதற்குப் பயன்படுத்தும் குளிகை (வின்.); a pill prepared from the bark of the roots of śadura-k-kaḷḷi, śittiragam, koñji and cumin seed used to produce fermentation in rice and other food.

*[சுண்டு → சுண்டி. சுண்டி + உண்டை. உருண்டை = உண்டை]*

**சுண்டில்** *śuṇḍil,* பெ. (n.) தொட்டால் வாடி (மலை); sensitive plant.

*[சுண்டு → சுண்டில்]*

**சுண்டிலி** *śuṇḍili,* பெ. (n.) 1. மயில்; peacock. 2. மூஞ்சூறு; musk rat *(சா.அக.).*

*[சுண்டில் → சுண்டிலி]*

**சுண்டு[1]-தல்** *śuṇḍu-,* 5 செ.கு.வி. (v.i.) 1. நீர் முதலியவை வற்றுதல்; to dry up, to be evaporated by heat. 2. குன்றிப்போதல்; to look small. 'அச்செய்தியைக் கேட்டதும் அவள் முகம் சுண்டிப் போயிற்று' (உ.வ.).

*[சுள் → சுண்டு-,]*

**சுண்டு[2]-தல்** *śuṇḍu-,* 5 செ.குன்றாவி. (v.t.) வேகவைத்தல்; to boil, stew, simmer *(செ.அக.).* 'அவள் கீரையைச் சுண்டினாள்' (உ.வ.).

*[சுள் → சுண்டு-,]*

**சுண்டு[3]-தல்** *śuṇḍu-,* 5 செ.கு.வி. (v.i.) 1. நோவுண்டாகும்படி நரம்பு முதலியன இழுத்தல்; to be tight, as a string, to contract, as a muscle in cramp. 2. வயிறுஇசித்தல் (வின்.); to pinch internally, gripe.

**சுண்டு[4]-தல்** *śuṇḍu-,* 5 செ.கு.வி. (v.i.) 1. விரலால் காசு முதலியவற்றைத் தெறித்தல்; to shoot with the thumb or a finger, as marble; to flip up a coin for testing its ring; to tap with; the thumb or finger; coconut. 2. நாண் முதலியவற்றை இழுத்து; தெறித்தல்; to jerk, as reins; to snap, as a ball with a bow or a carpenters like on a plant. 3. இழுமம் (ரப்பர்) முதலியவற்றை இழுத்து விடுதல்; to draw out an elastic body and let it recoil with a jerk.

*[சுள் → சுண்டு → சுண்டு-,]*

**சுண்டு[5]** *śuṇḍu,* பெ. (n.) தெறிக்கை; jerking.

*[சுள் → சுண்டு]*

**சுண்டு[6]** *śuṇḍu-,* பெ. (n.) 1. மிகக்குறைவு (யாழ்.அக.); smallness, trifle. 2. சிறு ஏனவகை; a small vessel. 3. ஒரு சிற்றளவு; a small measure. "ஒரு சுண்டு பால்' (உ.வ.). 4. தலைப் பொடுகு; dandruff. 5. காய்ச்சுகையில் ஏனத்தடியிற் பற்றியது (யாழ்ப்.); sediment that which adheres to a pot when boiling.

க. சொண்டு; தெ. சுண்டு

*[சுள் → சுண்டு]*

**சுண்டு[7]** *śuṇḍu,* பெ. (n.) 1. மூக்கு; பறவை அலகு (இவ.); bill; beak. 2. கீழ்உதடு; lower lip.

ம. சுண்டு; க். சுண்டு; பர். சொண்டு; கூய். சுட; பிரா. சுண்டு Skt. tuṇḍa

*[சுள் → சுண்டு]*

**சுண்டுகட்டை** *śuṇḍu-kaṭṭai,* பெ. (n.) ஒரு நெசவுக்கருவி (இவ.); weaver's instrument for driving the shuttle.

*[சுண்டு[3] + கட்டை]*



**சுண்டுசாதம்** *śuṇḍu-śādam,* பெ. (n.) சுண்டு சோறு பார்க்க; see *śuṇḍu-śōṟu,*

*[சுண்டு + சாதம்]*

**சுண்டுசொல்** *śuṇḍu-śol,* பெ. (n.) சுடுசொல் பார்க்க; see *śuḍu-śol.*

*[சுண்டு + சொல்]*

**சுண்டுசோறு** *śuṇḍu-śōṟu,* பெ. (n.) மயக்கத்தைத் தரும் புளிப்பேற்றிய சோறு; fermented rice, intoxicating food.

*[சுண்டான் + சோறு]*

**சுண்டுதலை** *śuṇḍudalai,* பெ. (n.) சொறித் தலை; head with scurf.

*[சுண்டு + தலை. சுண்டு = பொடுகு, சொறி]*

**சுண்டுமணி** *śuṇḍu-maṇi,* பெ. (n.) சிறந்தமணி (கூட்டபொம். பக்.56); ruby of the finest quality.

*[சுண்டு + மணி. மன் → மண் → மணி = விளங்கும் கல்]*

**சுண்டுவாதம்** *śuṇḍu-vādam,* பெ. (n.) நரம்பு முதலியன வெட்டி வெட்டி உள்ளிழுக்கப் படும் ஒரு முடக்கி நோய் (இவ.); a disease marked by contraction of muscles, cramp.

*[சுண்டு + வாதம். சுண்டு = நெறி, இழு.]*

Skt. vāta → த. வாதம்

**சுண்டுவிரல்** *śuṇḍu-viral,* பெ. (n.) சிறுவிரல், குறுவிரல்; little finger.

*[சுண்டு ⁶ + விரல். விர் → விரி → விரல்]*




**சுண்டுவில்** *śuṇḍu-vil,* பெ. (n.) விளையாட்டுக்கு உதவும் ஒருவகை வில்; a toy bow for shooting stones or pellets. "தெறி வில்லாவது சுண்டுவில்" (திவ். பெரியாழ். 3. 4 : 3, வியா.)

ம. சுண்டுவில்லு

*[சுண்டு³ + வில்]*




**சுண்டுவிரற்கண்ணி** *śuṇḍu-viraṟ-kaṇṇi,* பெ. (n.) மகளிர் கால் விரலணி; a kind of ring, worn by women on the toe.

*[சுண்டுவிரல் + கண்ணி]*

**சுண்டெலி** *śuṇḍeli,* பெ. (n.) சிற்றெலிவகை; சிறியஎலி; mouse.

ம. சுண்டெலி; க. சுண்டிலி, சூஞ்சிலி, கொண்டிலி; தெ. சுண்டெலுக, சுஞ்செலுக; து. சுண்ட் எலி; குட. சிண்ட எலி; பட. சுண்டெலி

*[சுண்டு + எலி]*

**சுண்டை¹** *śuṇḍai,* பெ. (n.) *1.* கள் (பிங்.); toddy; an intoxicating drink. *2.* யானைத் தும்பிக்கை; elephant's trunk.

*[கள் → சுண்டு → சுண்டை]*

**சுண்டை²** *śuṇḍai,* பெ. (n.) நீர்நிலை (யாழ்.அக.); reservoir, tank.

Skt. kuṇḍa

**சுண்டை³** *śuṇḍai,* பெ. (n.) *1.* செடிவகை; turkey berry. *2.* சுண்டைவகை (L.); indian currant tomato. *3.* காட்டுச்சுண்டை; Indian tree-potato.

Skt. śuṇḍā; ம. சுண்ட

*[சுண்டு⁶ → சுண்டை]*

**சுண்டை⁴** *śuṇḍai,* பெ. (n.) நீர்யானை (புதுவை.); hippopotamus.

**சுண்டைக்காய்** *šuṇḍai-k-kāy*, பெ. (n.) மருந்தாகப் பயன்படும் ஒருவகைக்காய்; a medicinal product from šuṇḍai plant which controls many body diseases.

*[சுண்டை + காய்]*




**சுண்டைக்காயன்** *šuṇḍai-k-kāyaṉ*, பெ. (n.) மதிப்பற்றவன் (உ.வ.); an insignificant person. 'அவன் கிடக்கிறான், சுண்டைக் காய்ப் பயல்' (உ.வ.)

*[சுண்டை + காய் + அன்]*

சுண்டை அளவிற் சிறியது என்னும் பொருள் பற்றி, இவ்வழக்கு வந்ததாகலாம்.

**சுண்டைக்கீரை** *šuṇḍai-k-kīrai*, பெ. (n.) கீரை வகை; a kind of greens (செ.அக.).

*[சுண்டை + கீரை]*

**சுண்டைச்செடி** *šuṇḍai-c-ceḍi*, பெ. (n.) சுண்டைக்காய்ச் செடி அல்லது மரம்; šuṇḍai-k-kāy is a plant as a tree (சா.அக.).

*[சுண்டை + செடி]*

சுண்டை வகைகள்

1. ஆனைச்சுண்டை
2. மலைச்சுண்டை
3. இராமேசுவரச் சுண்டை
4. முட்சுண்டை
5. கருஞ்சுண்டை
6. காட்டுச்சுண்டை
7. பேய்ச்சுண்டை
8. நஞ்சுண்டை
9. இலைச்சுண்டை
10. குத்துச்சுண்டை
11. முள்ளிலாச்சுண்டை

**சுண்டைப்பிரமாணம்** *šuṇḍai-p-piramāṇam*, பெ. (n.) சுண்டைக்காய் அளவு இளகியம், மெழுகு போன்றன; குறிப்பிட்ட வடிவ அளவு; the size of sundai for prescribing the intake (சா.அக.).

*[சுண்டை + பிரமாணம்]*

**சுண்டைவற்றல்** *šuṇḍai-vaṟṟal*, பெ. (n.) சுண்டைக்காய் வற்றல்; dried unriped fruits of solanum pubescens (சா.அக.).

*[சுண்டை + வற்றல்]*

**சுண்டைவேர்** *šuṇḍai-vēr*, பெ (n.) தும்மலை யுண்டாக்கும் சுண்டைச்செடியின் வேர்; the root of solanum pubescens, causes sneezing (சா.அக.).

*[சுண்டை + வேர்]*

**சுண்ணக்கரி** *šuṇṇa-k-kari*, பெ. (n.) சுண்ணாம்பு சேர்த்த கரி; heep of calcium stones and carbon pieces (சா.அக.).

*[சுண்ணம் + கரி]*

**சுண்ணக்கல்** *šuṇṇa-k-kal*, பெ. (n.) சுக்கான்கல் பார்க்க (யாழ்அக.); see *šukkāṉ-kal*.

*[சுண்ணம் + கல்]*

**சுண்ணக்குகை** *šuṇṇa-k-kugai*, பெ. (n.) சுண்ணாம்புக்கல்லினால் செய்த குகை; crucibles made of slaked lime (சா.அக.).

*[சுண்ணம் + குகை]*

Skt. guhā → த. குகை

**சுண்ணக்குகையிலூது-தல்** *šuṇṇa-k-kugaiyl-ūdu-*, 5 செ.குன்றாவி. (v.t.) மருந்தைச் சுண்ணாம்புக் குகையில் வைத்து ஊதுதல்; to blow with belows the lime crucible containing the medicine which is to be calcified (சா.அக.).

*[சுண்ணம் + குகையில் + ஊது-,]*

**சுண்ணக்குரு** *šuṇṇa-k-kuru*, பெ. (n.) சுண்ணாம்பு நீர் மற்றும் சில பொருட்கள் மூலம் உருவாக்கப்படும் மருந்துப்பு; a salt prepared from quick lime and other ingredients (சா.அக.).

*[சுண்ணம் + குரு]*

**சுண்ணக்கூர்மை** *šunna-k-kūrmai,* பெ. (n.) நாகரவண்டு; beetle supposed to carry snake holes (சா.அக.).

*[சுண்ணம் + கூர்மை]*

**சுண்ணகக்குற்றி** *šunnaga-k-kuṟṟi,* பெ. (n.) நறுமணப்பொடி வைக்கும் சிமிழ்; a small casket for keeping aromatic bathing powder. "சுட்டிக்கலனுஞ் சுண்ணகக் குற்றியும்" (பெருங். உஞ்சைக். 38:168).

*[சுண்ணகம் + குற்றி]*

**சுண்ணகம்** *šunnagam,* பெ. (n.) சுண்ணப் பொடி பார்க்க; see *šunna-p-podi.*

*[சுண்ணம் → சுண்ணகம்]*

த. சுண்ணகம் → Skt. šūrṇaka

**சுண்ணச்சத்து** *šunna-c-cattu,* பெ. (n.) 1. சுண்ணாம்புச்சத்து; essence of lime. 2. எலும்பிலுள்ள சுண்ணச்சத்து; calcium phosphate found in bones. 3. சுண்ணாம்பில் உள்ள மாழைச்சத்து; the metalic basis of lime-Calcium. 4. சுண்ணக்குரு பார்க்க; see *šunna-k-kuru* (சா.அக.).

*[சுண்ணம் + சத்து]*

**சுண்ணச்சாந்து** *šunna-c-cāndu,* பெ. (n.) சுண்ணாம்புக்காரை; plaster, mortar (செ.அக.).

*[சுண்ணம் + சாந்து]*

**சுண்ணச்சிறுநீர்** *šunna-c-ciṟu-nīr,* பெ. (n.) அதிக சுண்ணாம்புச்சத்துள்ள சிறுநீர்; excess of calcium salt in the urine.

*[சுண்ணம் + சிறுநீர்]*

**சுண்ணச்சீலை** *šunna-c-cīlai,* பெ. (n.) சுண்ணாம்பு தடவிய சீலைத்துணி; a piece of cloth luted with lime and used for packing the container of medicine which is to be exposed to fire (சா.அக.).

*[சுண்ணம் + சீலை. சீரை → சீலை]*

**சுண்ணச்சீலைசுற்று-தல்** *šunna-c-cīlai-šuṟṟu-,* 7 செகுன்றாவி. (v.t.) சீலைச்சுண்ணம் சுற்றுதல்; to pack by winding the piece of cloth luted with lime over the container of medicine (சா.அக.).

*[சுண்ணச் சீலை + சுற்று-,]*

**சுண்ணச்சீனிநீர்** *šunna-c-cīni-nīr,* பெ. (n.) சருக்கரை கலந்த சுண்ணாம்புத்தெளிவு; saccharated solution of lime (சா.அக.).

*[சுண்ணம் + சீனி + நீர்]*

**சுண்ணத்துக்குயிர்** *šunnattu-k-kuyir,* பெ. (n.) முட்டை; egg, supposed to posses life giving virtue to lime (சா.அக.).

*[சுண்ணத்துக்கு + உயிர்]*

**சுண்ணத்துக்கூர்மையோன்** *šunnattu-k-kūrmaiyōn,* பெ. (n.) நாகரவண்டு; a beetle supposed to carry water to snake holes (சா.அக.).

*[சுண்ணத்து + கூர்மையோன்]*

**சுண்ணத்தோன்** *šunnattōn,* பெ. (n.) கருப்பூரக் கல்மதம்; foliated crystallized gypsum (சா.அக.).

*[சுண்ணம் → சுண்ணத்தோன்]*

**சுண்ணநீர்** *šunna-nīr,* பெ. (n.) சுண்ணாம்பு தெளிந்த நீர்; lime water (சா.அக.).

*[சுண்ணம் + நீர்]*

**சுண்ணநீறு** *šunna-nīṟu,* பெ. (n.) 1. நீற்றிய சுண்ணாம்பு; slaked lime. 2. நீற்றிய சுண்ண மருந்து; a calcium compound (சா.அக.).

*[சுண்ணம் + நீறு]*

**சுண்ணப்பூச்சவுடு** *šunna-p-pū-c-cavudu,* பெ. (n.) 1. உவர்மண்; dhoby's earth. 2. உவர் மண்காரம்; impure carbonate of soda (சா.அக.).

*[சுண்ணம் + பூச் + சவுடு]*

**சுண்ணப்பூமி** *šunna-būmi,* பெ. (n.) நில (பூ) நீறு எடுக்கும் நிலம்; šoil of fuller's earth (சா.அக.).

*[சுண்ணம் + பூமி]*

Skt. bhumi → த. பூமி

**சுண்ணப்பொடி** *šunna-p-podi,* பெ. (n.) 1. நறுமணப்பொடி; an aromatic powder. 2. சுண்ணாம்புத்தூள்; lime powder or dust. 3. சுண்ணநீறு பார்க்க; see *šunna-nīṟu.* 4. சுண்ண மருந்து; calcined medicine. 5. விழா முதலிய காலங்களில் மக்களின்மேல் தூவும் நறுமணப் பொடி (வின்.); aromatic powder mixed with saffron and gold or silver dust, used for spirnkling over guests or friends on festive occasions (சா.அக.).

*[சுண்ணம் + பொடி]*

**சுண்ணம்** *šunnam*, பெ. (n.) 1. பொடி; powder, dust. "செம்பொற் சுண்ணம்" (பெருங். உஞ்சைக். 33: 120). 2. சுண்ணப்பொடி பார்க்க; see *šunna-p-podi*. "பலதொகு பிடித்த தாதுகு சுண்ணத்தர்" (மதுரைக். 399). 3. பூந்தாதுத்தூள், மகரந்தத் தூள்; pollen dust. "தாழைக் கொழுமட லவிழ்ந்த ... சுண்ணம்" (மணிமே. 4 : 18). 4. மலர் (பிங்.); flower. 5. 24ஆம் விண்மீன் குன்று (சதயம்); the 24th star in the celestial area 'satayam'. 6. சுண்ணாம்பு; lime, oxide of calcium. 7. ஈரடி எண்சீரைப் பொருள் முறையின்றித் துணித்துச் செய்யுளியற்றும் முறை (தொல். சொல். 406); a mode of constructing a stanza in which the word in a pair of four-footed lines are transposed their natural order. 8. சொல்வகை நான்கனுள் நான்கு அடியாக வரும் இசைப் பாட்டு. (சிலப். 3 : 12, பக்.88); a stanza of four lines set to music, one of four col-vagai. 9. பட்டு வகை (சிலப். 14: 108, உரை); a variety of silk.

Pkl. šunna; ம. சுண்ணம்

[சுள் → சுண். சுண்ணித்தல் = நீற்றுதல். சுண் → சுண்ணம் (வே.க. 211)]

த. சுண்ணம் → cūrna

**சுண்ணம்**² *šunnam*, பெ. (n.) ஒன்பான் மணிகளும் பொன்னும் சந்தனமும் கருப்பூரம் முதலியனவும் புனுகிலும் பனிநீரிலும் நனைய வைத்திடித்தல்; bounding of nine jewells, gold, sandal wood and camphor wetted in the punugu and snow water.

**சுண்ணமண்** *šunna-man*, பெ. (n.) 1. சுண்ணாம்பு மண்; sand mixed with lime. 2. உவர்மண்; fuller's earth (சா.அக.).

ம. சுண்ணாம்பு மண்ணு

[சுண்ணம் + மண்]

**சுண்ணமாடு-தல்** *šunna-mādu-*, 5 செ.குவி. (v.i.) விழா முதலிய காலங்களில் மணப்பொடி தூவுதல் (வின்.); to spirinkle scented powder on festive occasion, etc.,

[சுண்ணம் + ஆடு-,]

**சுண்ணமானோன்** *šunnam-ānōn*, பெ. (n.) கொடுக்காய்ப்புளி; sweet babool (சா.அக.).

[சுண்ணம் + ஆனோன். சுன்னம் = சுழி, வட்டம், வளைவு. சுன்னம் – சுண்ணம்]

**சுண்ணமொழிமாற்று** *šunna-moli-māṟṟu*, பெ. (n.) சுண்ணமாக அமைந்த செய்யுளை ஏற்றபடி மொழிமாற்றிப் பொருள் கொள்ளுகை (நன். 412, மயிலை); construing a šunnam verse by suitable transposition of words.

[சுண்ணம் + மொழிமாற்று]

**சுண்ணவட்டு** *šunna-vattu*, பெ. (n.) சுண்ணங் கலந்த நீரை வீசுங்கருவி; a kind of syringe for spirnkling water mixed with aromatic powder. "சுண்ண வட்டுஞ் சுழிநீர்க் கோடும்" (பெருங். உஞ்சைக். 38 : 107)

[சுண்ணம் + வட்டு]

**சுண்ணவரத்தம்** *šunnavarattam*, பெ. (n.) சுண்ணாம்பு அதிகமுள்ள குருதி; blood having more calcium percentage.

[சுண்ணம் + அரத்தம்]

**சுண்ணவாசி** *šunna-vāši*, பெ. (n.) முல்லை (மலை.); wild jasmine.

த. வாசம்; Skt. vāsa

[சுண்ணம் + வாசி. வாசம் → வாசி. 'இ' உடைமைப் பொருளீறு]

**சுண்ணவுப்பு** *šunna-v-uppu*, பெ. (n.) சுண்ணாம்பிலிருந்து எடுக்கப்படும் உப்பு வகைகள்; lime salt (சா.அக.).

[சுண்ணம் + உப்பு]

**சுண்ணவைப்பு** *šunna-vaippu*, பெ. (n.) 1. சுட்டசுண்ணாம்பு; burnt lime stone. 2. புடமிட்டெடுத்த மருந்துச் சுண்ணம்; a kind of calcium salt obtained through calcination etc., 3. சுண்ணாம்பு வண்டல்; calcium deposits. 4. தமிழ்மருந்து முறைப்படியான மாழைச் சுண்ணம்; compound of calcium, carbonate prepared as prescribed in Tamil medicine.

[சுண்ணம் + வைப்பு]

**சுண்ணாம்படி-த்தல்** *šunnāmbadi-*, 4 செ.குன்றாவி. (v.t.) வெள்ளையடித்தல்; to white wash (செ.அக.).

[சுண்ணாம்பு + அடி-,]

**சுண்ணாம்படைதல்** *šunnāmbadaidal*, பெ. (n.) பதநீரில் சுண்ணாம்பு வண்டல் படிகை (வின்.); setling of lime in sweet toddy.

[சுண்ணாம்பு + அடைதல்]

**சுண்ணாம்பு** *šuṇṇāmbu,* பெ. (n.) 1. சுட்ட சுண்ணாம்புக்கல்; lime burnt in the kiln, quicklime. 2. நீற்றின சுண்ணாம்பு; slaked lime. "விரைப்பாகு வெள்ளிலை சுண்ணாம் பினொடு" (வாயுசங்கிரியா. 23). 3. சன்னச்சாந்தாக அரைத்த சுண்ணாம்பு; macerated lime specially prepared as fine plaster.

ம. சுண்ணாம்பு; Skt. šuṇṇa; Pkt. cuṇṇa

[சுண்ணம் → சுண்ணம்பு → சுண்ணாம்பு = காரக்கல் நீறு]

**சுண்ணாம்புக்கம்பி** *šuṇṇāmbu-k-kampi,* பெ. (n.) சுண்ணாம்புக்கரடு பார்க்க; see *šuṇṇāmbu-k-karaḍu* (சா.அக.).

**சுண்ணாம்புக்கரடு**[1] *šuṇṇāmbu-k-karaḍu,* பெ. (n.) சுண்ணாம்பு மண் நிறைந்த குன்று; hill of lime-stone.

[சுண்ணாம்பு + கரடு]

**சுண்ணாம்புக்கரடு**[2] *šuṇṇāmbu-k-karaḍu,* பெ. (n.) சுண்ணாம்புக்கல்லில் சேர்ந்த, தண்ணீரில் கரையாத, கரடான பொருள்; impurity of limestone containing magnesite (சா.அக.).

[சுண்ணாம்பு + கரடு]

**சுண்ணாம்புக்கரண்டகம்** *šuṇṇāmbu-k-karaṇḍagam,* பெ. (n.) அடைகாய்க்காக (வெற்றிலை போடுவதற்காக)ச் சுண்ணாம்பு வைக்கும் மூடுசெப்பு; small casket for lime.

[சுண்ணாம்பு + கரண்டகம்]



சுண்ணாம்புக்கரண்டகம்

**சுண்ணாம்புக்கல்** *šuṇṇambu-k-kal,* பெ. (n.) சுண்ணாம்புச்சத்துள்ள சுக்கான்கல்; lime stone (சா.அக.).

ம. சுண்ணாம்புக்கல்லு

[சுண்ணாம்பு + கல்]

**சுண்ணாம்புக்காய்** *šuṇṇāmbu-k-kāy,* பெ. (n.) சுண்ணாம்புக்கரண்டகம் பார்க்க; see *šuṇṇāmbu-k-karaṇḍagam.* 'சுண்ணாம்புக் காய் முள்ளிடுக்கி முதலிய இன்றியமையாத பொருள்களிலே' (எங்களூர், 30).

[சுண்ணாம்பு + காய்]

**சுண்ணாம்புக்காரன்** *šuṇṇāmbu-k-kāraṉ,* பெ. (n.) 1. சுண்ணாம்பு நீறு விற்கும் ஆள்; person who sells lime stone etc., 2. சுண்ணாம்பு நீறுவிற்கும் வகுப்பான்; person belonging to lime-selling caste.

[சுண்ணாம்பு + காரன்]

இவர்கள் தனி இனத்தவராகக் கருதப் பட்டதும் உண்டு. திருச்சிராப்பள்ளி போன்ற நகரங்களில் சுண்ணாம்புக்காரத் தெரு எனத் தெருப்பெயர் அமைந்துள்ளமை காண்க.

**சுண்ணாம்புக்காரை** *šuṇṇāmbu-k-kārai,* பெ. (n.) 1. கட்டடத்திற்கு உரிய சுண்ணாம்புச் சாந்து; mortar. 2. காய்ந்த சாந்து; dried plaster of chuṇṇam (செ.அக.).

[சுண்ணாம்பு + காரை]

**சுண்ணாம்புக்காளவாய்** *šuṇṇambu-k-kāḷavāy,* பெ. (n.) சுண்ணாம்பு நீற்றுஞ் சூளை; lime-kiln.

ம. சுண்ணாம்பு சூள

[சுண்ணாம்பு + காளவாய்]

காளவாய் பார்க்க

**சுண்ணாம்புக்கிளிஞ்சில்** *šuṇṇambu-k-kiḷiñjil,* பெ. (n.) சுண்ணாம்புச்சிப்பி பார்க்க; see *šuṇṇāmbu-c-cippi.*

[சுண்ணாம்பு + கிளிஞ்சல்]

**சுண்ணாம்புக்கீரை** *šuṇṇāmbu-k-kīrai,* பெ. (n.) 1. ஒருவகைக்கீரை (வின்.); a kind of greens. 2. சிறுபூளை; a common wayside weed.

[சுண்ணாம்பு + கீரை]

**சுண்ணாம்புக்குட்டான்** *šuṇṇāmbu-k-kuṭṭāṉ,* பெ. (n.) பதனீர் இறக்குவோர் சுண்ணாம்பு வைக்குஞ் சிறுகூடை (யாழ்ப்.); toddy drawer's small basket for lime.

[சுண்ணாம்பு + குட்டான். கொட்டான் → குட்டான்]

கொட்டான் பார்க்க

**சுண்ணாம்புகுத்து-தல்** *šuṇṇāmbu-kuttu-,* 5 செ.கு.வி. (v.i.) சுண்ணாம்பை மணல் கலந்து இடித்தல்; to pound lime with sand and water and make it into mortar-paste.

*[சுண்ணாம்பு + குத்து-. குற்று → குத்து-,]*

**சுண்ணாம்புச்சத்து** *šuṇṇambu-c-cattu,* பெ. (n.) சுண்ணம்; calcium (சா.அக.).

*[சுண்ணாம்பு + சத்து]*

**சுண்ணாம்புச்சிப்பி** *šuṇṇāmbu-c-cippi,* பெ. (n.) சுண்ணாம்பு நீற்ற உதவும் முத்துச் சிப்பிக் கூடு (இ.வ.); lime-shells.

*[சுண்ணாம்பு + சிப்பி]*

**சுண்ணாம்புச்சூளை** *šuṇṇāmbu-c-cūḷai,* பெ. (n.) சுண்ணாம்புக்காளவாய் பார்க்க; see *šuṇṇāmbu-k-kāḷavāy.*

ம. சுண்ணாம்புசூள

*[சுண்ணாம்பு + சூளை. சுள் → சுள்ளை → சூளை]*

**சுண்ணாம்புத்தண்ணீர்** *šuṇṇāmbu-t-taṇṇīr,* பெ. (n.) 1. ஆடை, காகிதக்கூழ் முதலியனவற்றை வெளுக்கவும், மருந்து, வண்ணம் முதலியன உண்டாக்கவும் பயன்படும் சுண்ணாம்பு கலந்த தெளிநீர்; lime-water used in bleaching and washing lines, in paper making, in dyeing and in dressing leather. 2. வீட்டுச்சுவர்க்கு அடிக்க உதவும் சுண்ணாம்பு நீர்; white-wash solution.

*[சுண்ணாம்பு + தண்ணீர்]*

**சுண்ணாம்புத்தித்திப்பு** *šuṇṇāmbu-t-tittippu,* பெ. (n.) சுண்ணாம்பு, சருக்கரை, தண்ணீர் கொண்டு உருவாக்கப்படும் குழந்தை நோய்க்கான ஒருவகை மருந்து; a medicine for children prepared from lime liquor and sugar (சா.அக.).

*[சுண்ணாம்பு + தித்திப்பு]*

**சுண்ணாம்புத்துடுப்பு** *šuṇṇāmbu-t-tuḍuppu,* பெ. (n.) வெற்றிலை போடுவதற்காகக் கரண்டகத்திலிருந்து சுண்ணாம்பு எடுக்கும் சிறுகருவி (யாழ்ப்.); a small metal rod for taking slaked lime from its casket.

*[சுண்ணாம்பு + துடுப்பு]*




**சுண்ணாம்புத்தெளிவு** *šuṇṇāmbu-t-teḷivu,* பெ. (n.) தெளிந்த சுண்ணாம்புத்தண்ணீர்; aqua calcis or liquor calcis used for some medical preparations (சா.அக.).

*[சுண்ணாம்பு + தெளிவு]*

**சுண்ணாம்புதடவு-தல்** *šuṇṇāmbu-taḍavu,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. வெற்றிலை முதலிய வற்றிற்குச் சுண்ணம் தடவுதல்; to dabu with lime, as betal leaves. 2. ஏமாற்றுதல்; to play the hypocrite. 'அவன் சிரித்துக்கொண்டே சுண்ணாம்பு தடவுகிறான்' (உ.வ.).

*[சுண்ணாம்பு + தடவு-,]*

**சுண்ணாம்புதாளி-த்தல்** *šuṇṇāmbu-dāḷi-,* 4 செ.கு.வி. (v.i.) சுண்ணாம்பு நீற்றுதல் (சென்னை.); to slake lime.

*[சுண்ணாம்பு + தாளி-,]*

**சுண்ணாம்புநீற்று-தல்** *šuṇṇāmbu-nīṟṟu-,* 5 செ.கு.வி. (v.i.) சுண்ணாம்புதாளி-த்தல் பார்க்க; see *šuṇṇāmbu-dāḷi-.*

*[சுண்ணாம்பு + நீற்று-,]*

**சுண்ணாம்புப்பட்டை** *šuṇṇāmbu-p-paṭṭai,* பெ. (n.) 1. விழாக்காலங்களிலும், நற்காலங்களிலும் சுவர், திண்ணை முதலியவற்றில், செம்மண் பட்டையை இடையிட்டு அடிக்கும் சுண்ணாம்புக்கோலம்; stripes of white wash alternating with red on the side-walls, as of temples, raised platform at the entrance of houses, etc., made on festive occasions. 2. ஓடு விலகாதிருக்கப் போடும் சாந்துப் பட்டை; chuṇṇam border over the tile roofing.

*[சுண்ணாம்பு + பட்டை]*

**சுண்ணாம்புபதநீர்** *šuṇṇāmbu-badanīr,* பெ. (n.) *பனையின் பாளையிலிருந்து வடித்துச் சுண்ணாம்பு கலந்தெடுக்கப்பட்ட, இனிய சாறு;* sweet toddy prepared with lime.

மறுவ. அக்காரநீர் (நெல்லை.); சுண்ணாம்புப் பதனி

*[சுண்ணாம்பு + பதநீர்]*

**சுண்ணாம்புப்பரவர்** *šuṇṇāmbu-p-paravar,* பெ. (n.) *ஒருவகைப் பரவர்;* a sub-sect among Parava caste.

*[சுண்ணாம்பு + பரவர்]*

**சுண்ணாம்புப்பற்று** *šuṇṇāmbu-p-paṟṟu,* பெ. (n.) இஞ்சிச் சாற்றிற் படியும் சுண்ணாம்பு வண்டல் (வின்.); sediment of lime in ginger-juice.

*[சுண்ணாம்பு + பற்று]*

**சுண்ணாம்புப்பறையர்** *šuṇṇāmbu-p-paṟaiyar,* பெ. (n.) *சுண்ணாம்பு நீற்றி விற்போர்;* cuṇṇam-sellers.

ம. சுண்ணாம்புபரவன்

*[சுண்ணாம்பு + பறையர்]*

**சுண்ணாம்புலக்கை** *šuṇṇāmbulakkai,* பெ. (n.) *சுண்ணாம்புச்சாந்து இடிக்கும் உலக்கை;* chuṇṇam beater.

*[சுண்ணாம்பு + உலக்கை. உல் → உலம் → உலக்கை]*

**சுண்ணாம்போர்** *šuṇṇāmbōr,* பெ. (n.) *சுண்ணாம்பு நீற்றி விற்போர்;* chunnam sellers. "பான்மதிக்குச் சுண்ணாம்போர்" (சினேந். 141).

*[சுண்ணாம்பு + விற்போர். சுண்ணாம்பு விற்போர் → சுண்ணாம்போர்]*

**சுண்ணாம்புவல்லி** *šuṇṇāmbu-valli,* பெ. (n.) *காட்டுக்கொடிமுந்திரிகை;* jungle angoor (சாஅக.).

*[சுண்ணாம்பு + வல்லி]*

**சுண்ணி[1]-த்தல்** *šuṇṇi-,* 4 செ.குன்றாவி. (v.t.) 1. *நீற்றுதல்* (சங்.அக.); to slake, as lime. 2. *புடமிட்டுச் சுண்ணமாகச் செய்தல்;* to calcinate a metal in air as contemplated in Tamiḻ medicine (சாஅக.).

*[உன் → சுன் → சுண் → சுண்ணி-,]*

**சுண்ணி[2]-த்தல்** *šuṇṇi-,* செ.குவி. (v.i.) *பூசுதல்;* to daub.

**சுண்ணி[3]** *šuṇṇi,* பெ. (n.) *ஆண்குறி* (கொ.வ.); male genital.

ம. சுண்ணி; க. துண்ணி, துண்ணெ; தெ. சுல்லு, சுல்லி; பட. துண்ணெ; Pkt. cunna.

**சுண்ணு** *šuṇṇu,* பெ. (n.) 1. *புனுகு* (இ.வ.); civet. 2. *ஆமணக்கு;* castor seed.

u. jund

**சுணக்கம்[1]** *šuṇakkam,* பெ. (n.) 1. *காலத்தாழ்வு;* delay. 'இப்படி நடந்தால் பள்ளிக்குச் சுணக்கமாகும்' (உ.வ.). 2. *வாட்டம்;* depression of spirits; fatigue emaciation. 'இந்தச் சுணக்கம் தீர்ந்தால் மடமடவென்று நடக்கலாம்' (உ.வ.). 3. *இன்பவிளையாட்டு;* dalliance. 'அவளோடு சுணக்கம் தகுமா?' (உ.வ.).

*[சுன் → சுணங்கு → சுணக்கம்]*

**சுணக்கம்[2]** *šuṇakkam,* பெ. (n.) *முடை;* tightness, as of market. "பண்டு போலில்லை பணச் சுணக்கம்" (பஞ்ச. திருமுக. 445).

*[சுணக்கம்[2] → சுணக்கம்[3]]*

**சுணக்கன்** *šuṇakkaṉ,* பெ. (n.) 1. *சுணங்கன்* (சங்.அக.) பார்க்க; see *šuṇaṅgaṉ.* 2. நாய் போலத் திரிபவன் (வின்.); one who wanders about as street dog, loafer. 3. இழிந்தோன் (வின்.); mean person, one who performs mean offices.

க. சொணக்; த. சுணக்கன்

*[சுணங்கன் → சுணக்கன்]*

Skt. šunaka

**சுணக்கு[1]-தல்** *šuṇakku-,* 5 செ.குன்றாவி. (v.t.) *காலந்தாழ்த்துதல்;* to delay. 'வேலையைச் சுணக்காதே' (நெல்லை).

*[சுணங்கு → சுணக்கு-,]*

**சுணக்கு[2]** *šuṇakku,* பெ. (n.) *வேலை தொடங்குவதை அல்லது செய்யும் வேலையைக் காலந்தாழ்த்துகை;* delay in starting or doing delay in the work.

*[சுணக்கம்[1] → சுணக்கு]*

**சுணக்குமுத்திரை** *šuṇakku-muttirai,* பெ. (n.) *அரக்குமுத்திரை (வின்.);* seal put upon one's property with sealing wax.

*[சுணக்கு + முத்திரை]*

**சுணங்கத்திசை** *šuṇaṅga-t-tišai,* பெ. (n.) தென்மேற்குத் திசை *(வின்.);* the South West quarter.

Skt. šunaka

**சுணங்கம்** *šuṇaṅgam,* பெ. (n.) *சுணங்கன் பார்க்க;* see *šuṇaṅgaṉ.* "*அந்தமில்லச் சுணங்கம தாயினாள்" (யசோ. 3 : 4).*

*[சுணங்கன் → சுணங்கம்]*

**சுணங்கல்**[1] *šuṇaṅgal,* பெ. (n.) *1. சுணக்கம் பார்க்க;* see *šuṇakkam. 2. சோம்பேறி; மடியாளன்;* lazy person. *'போடா சுணங்கலே' (இ.வ.). 3.* மெலிவு; emaciation.

ம. சுணங்ஙவு

*[சுணக்கம் → சுணங்கல்]*

**சுணங்கழி-தல்** *šuṇaṅgaḻi-,* 2 செ.கு.வி. (v.i.) செருக்குக்குறைதல் *(ஈடு);* to have one's pride reduced.

*[சுணங்கு[3] + அழி-,]*

**சுணங்கறை** *šuṇaṅgaṟai,* பெ. (n.) *புணர்ச்சி;* sexual union. *"சுணங்கறைப் பயனு மூடலுள் ளதுவே" (பரிபா. 9 : 22).*

*[சுணங்கு + அறு - சுணங்கறு. சுணங்கறு → சுணங்கறை]*

**சுணங்கன்**[1] *šuṇaṅgaṉ,* பெ. (n.) *1.* சோர்வுற்றவன்; tired person. *2.* மெலிந்தவன்; slender person.

ம. சுணங்ஙன்

*[சுணங்கு → சுணங்கன்]*

**சுணங்கன்**[2] *šuṇaṅgaṉ,* பெ. (n.) *நாய் (திவா.);* dog.

Skt. šunaka

**சுணங்கன்புல்** *šuṇaṅgaṉ-pul,* பெ. (n.) மஞ்சள் நிறக் கிழங்குள்ள ஒருவகைப்புல்; a kind of a grass having yellow coloured bublous root *(சா.அக.).*

*[சுணங்கன் + புல்]*

**சுணங்கன்மரம்** *šuṇaṅgaṉ-maram,* பெ. (n.) நோய்களைத் தீர்க்கும் மருத்துவப் பண்புடைய நாய்க்குட்டி மரம்; a rare kind of tree called as nāy-k-kuṭṭi *(சா.அக.).*

*[சுணங்கன் + மரம்]*

**சுணங்கன்மூலி** *šuṇaṅgaṉ-mūli,* பெ. (n.) *கற்பமூல பெருமூலி 23 வகைகளில் ஒன்றான நாய்க்குட்டிச் செடி;* a kind of medicinal plant which is one of the 23 varieties of kaṟbamūla magā-mūli *(சா.அக.).*

*[சுணங்கன் + மூலி]*

**சுணங்கி** *šuṇaṅgi,* பெ. (n.) சோம்பேறி; sluggard, idler.

*[சுணங்கு → சுணங்கி]*

**சுணங்கிப்போ-தல்** *šuṇaṅgi-p-pō-,* 8 செ.கு.வி (v.i.) மெலிந்துபோதல்; to grow weak and thin *(சா.அக.).*

*[சுணங்கி + போ-,]*

**சுணங்கிவிழு-தல்** *šuṇaṅgi-viḻu-,* 2 செ.கு.வி. (v.i.) *களைத்துவிழுதல்;* to fall by exhaustion or over exertion *(சா.அக.).*

*[சுணங்கி + விழு-,]*

**சுணங்கு**[1]**-தல்** *šuṇaṅgu-,* 5 செ.கு.வி. (v.i.) *1.* வினையிற் சோர்தல்; to be fatigued; jaded; to be emaciated. *2. காலந்தாழ்த்தல்;* to delay; loiter, linger. 'இந்த இளவயதில் இப்படிச் சுணங்குதல் சரியா?' *(உ.வ.). 3.* தடைப்படுதல்; to hindered, interrupted. *4.* பொந்திகையடையா திருத்தல்; to be dissatisfied. *'அவன் தன் திருமண முயற்சியில் சுணங்கிக் கொண்டிருக்கி றான்' (உ.வ.). 5.* கெஞ்சுதல் *(வின்.)* to cringe, persist in requesting. *6.* இன்ப விளையாட்டுப் புரிதல் *(இ.வ.);* to dally, make amorous advances. *7.* சினங்கொள்ளுதல்; to get angry. *8.* ஊடுதல்; to feign displeasure, as a wife for her husband.

ம. சுணங்ஙுக; க. சுணுகு; தெ. சுடுகு, சுணுகு

E. slack; AS. sleak; Su. slak; Ice. Slakr-

*[சுள் → சுண் → சுணங்கு (வே.க. 215)]*

**சுணங்கு**[2] *šuṇaṅgu,* பெ. (n.) மெலிவு (வின்.); reduction, emaciation.

*[சுள் → சுண் → சுணங்கு]*

**சுணங்கு**[3] *šuṇaṅgu-,* பெ. (n.) 1. அழகுத்தேமல்; yellow spreading spots on the body of women, regarded as beautiful. "மின்னுறழ் சாயற் பொன்னுறழ் சுணங்கின்" (பெருங்.மகத. 16:5). 2. பசலை; sallow complexion of a love-lorn woman. 3. படர்புண் வகை (இவ.); a spreading skin-disease, especially of animals. 4. பூந்தாது; pollen-dust. "பசுமலர்ச் சுணங்கின்" (ஐங்குறு. 76). (செ.அக.).

ம. சுணங்நு

*[சுணம் → சுணங்கு]*

**சுணங்கு**[4] *šuṇaṅgu,* பெ. (n.) சுணங்கன் பார்க்க; see *šuṇaṅgaṉ.* "சுணங்குபல பிணங்கு பெருங் குரைப்பினாலும்" (அரிச். பு. மயான. 35).

ம. சுணங்கி

*[சுணங்கன் → சுணங்கு]*

**சுணங்குபடர்-தல்** *šuṇaṅgu-baḍar-,* 2 செ.குன்றாவி. (v.i.) உடம்பில் தேமல் படர்தல் (சிறுபாண்.); to spread as yellow patches or spots on the skin especially of the woman (சா.அக.).

*[சுணங்கு + படர்-,]*

**சுணங்குபூ-த்தல்** *šuṇaṅgu-bū-,* 4 செ.குவி. (v.i.) சுணங்குபடர்-தல் பார்க்க; see *šuṇaṅgu-baḍar-* (சா.அக.).

*[சுணங்கு + பூ-,]*

**சுணங்கை** *šuṇaṅgai,* பெ. (n.) துணங்கை; a kind of devil-dancing. "ஆடுங்கள்ளும் பராய்ச் சுணங்கை யெறிந்து" (திவ்.திருவாய். 4. 6 : 7).

*[துணங்கை → சுணங்கை]*

**சுணச்சி** *šuṇacci,* பெ. (n.) 1. பவளப்புற்று நஞ்சு; a kind of prepared arsenic. 2. பேய்க்கடலை; a kind of bitter wild gram. 3. பேய்த்தும்பை; devil tumbay. 4. நாகசிங்கி; a medicinal plant available in tanks (சா.அக.).

**சுணம்**[1] *šuṇam,* பெ. (n.) அழகுத்தேமல்; yellow spreading spots on the body of women. "சுண நன் றணிமுலை யுண்ண" (திவ். பெரியாழ். 2. 3:4).

*[சுள் → சுண் → சுணம்]*

த. சுணம் → Skt. svarṇa

**சுணம்**[2] *šuṇam,* பெ. (n.) சுண்ணப்பொடி பார்க்க; see *šuṇṇa-p-poḍi.* "புரிந்த பூவொடு பொற்சுணங் கமழும்" (பெருங். உஞ்சைக். 39:46).

*[சுள் → சுண் → சுண்ணம் → சுணம்]*

**சுணவு** *šuṇavu,* பெ. (n.) சுணைவு பார்க்க; see *šuṇaivu* (சா.அக.).

*[சுணைவு → சுணவு]*

**சுணை**[1]**-த்தல்** *šuṇai-,* 4 செ.கு.வி. (v.i.) 1. தினவெடுத்தல்; to itch severely. 2. நமைச்சல்; to tingle, as tongue after eating something pungent. 3. அரிப்பெடுத்தல்; to be inflamed, as from the touch of a micro thorn plant, nettle. 4. அரித்தல்; to be inflammed, as from the hairs of a caterpillar.

ம. சுணய்க்குக

Mhr. šuṇašuṇa

*[சுனை → சுணை-,]*

**சுணை**[2] *šuṇai,* பெ. (n.) சுரணை, நெஞ்சகத்திற் குத்தும் மானவுணர்ச்சி; sense of shame; sensibility. "துகிலு மிழந்து சுணையு மழிந்து" (பட்டினத். உடற் கூற்று வண்ணம். 249). 2. கூரிய அறிவு; sense. 3. கூர்மை; keenness, sharpness. 'சுணையில்லாக் கத்தி' (உ.வ.). 4. தினவு; itching, tingling, smarting. 5. அம்மைநோய் கண்ட காலத்தில் உடம்பில் உள்ளிடமாகத் தங்கி முட்குத்துப் போன்ற உணர்ச்சியுள்ள அம்மைக்கொப்புளம் (உ.வ.); pustules, as in the alimentary canal, formed when a person is attacked with small-pox. 6. இலை, காய் முதலியவற்றின் மேலுள்ள சிறுமுள்; prickle, as in leaves stalks etc., down on fruits.

ம. சுண, சுணை (முள்.); தெ. சொந

*[சுல் → சுர் + சுரணை = குத்தும் மான வுணர்ச்சி. சுரணை → சுணை]*

த. சுணை (கூர்மை) → Skt. smaraṇa

"செ.ப. அகரமுதலி . . . நினைவு அல்லது தன்னுணர்ச்சி என்று மட்டும் பொருள்படும் ஸ்மரண என்னும் வடசொல்லை, சுரண என்னும் சொற்கு மட்டுமின்றிச், சுணை யென்னும் சொற்கும் மூலமாகக் காட்டியுள்ளது. சுணை, சுரணை என்னும் தென்சொற்கள், குத்தற்கருத்தை அடிப் படையாகக் கொண்ட, 'சுள்' என்னும்

வேரினின்றும், ஸ்மரண என்னும் வடசொல் நினை என்று பொருள்படும் ஸ்ம்ரு என்னும் வினை முதனிலையினின்றும், பிறந்துள்ளன என வேறுபாடறிக. (வே.க.206-7).

**சுணைக்கரந்தை** *šuṇai-k-karandai,* பெ. (n.) சுணையுள்ள கரந்தை; sharp sweet basil (சா.அக.).

[சுணை + கரந்தை]

**சுணைக்காணம்** *šuṇai-k-kāṇam,* பெ. (n.) பேய்க் கொள்; wild horse-gram (சா.அக.).

[சுணை + காணம்]

**சுணைக்காது** *šuṇai-k-kādu,* பெ. (n.) காது மடலின்கீழ்த் தொங்கிக் கொண்டிருக்கும் மெதுவான சதைப்பாகம்; the lower termination of the ear (சா.அக.).

[சுணை + காது]

**சுணைக்குறிஞ்சா** *šuṇai-k-kuṟiñjā,* பெ. (n.) சொரசொரப்புள்ள குறிஞ்சா; rough swallow wort (சா.அக.).

[சுணை + குறிஞ்சா]

**சுணைக்கொடி** *šuṇai-k-kodi,* பெ. (n.) முசுமுசுக்கை; bryonia scabra (சா.அக.).

[சுணை + கொடி]

**சுணைக்கேடன்** *šuṇai-k-kēḍaṉ,* பெ. (n.) வெட்கம் கெட்டவன்; person of blunted sensibilities. "தானும் ஒக்க மடலெடுப்பான் ஒருசுணைக் கேடன்" (திவ். திருப்பா. 1:20, வியா.).

[சுணை + கேடன்]

**சுணைக்கோரை** *šuṇai-k-kōrai,* பெ. (n.) ஒரு வகைக் கோரை (மலை); a kind of rough grass.

[சுணை + கோரை]

**சுணைகழியாப்பிஞ்சு** *šuṇai-k-kaḻiyā-p-piñju,* பெ. (n.) அப்பொழுது பறித்த பிஞ்சு; a fresh downy fruit (சா.அக.).

[சுணை + கழியா + பிஞ்சு]

**சுணைகெட்டவன்** *šuṇai-keṭṭavaṉ,* பெ. (n.) மானவுணர்ச்சியில்லாதவன்; person of blunted sensibilities.

ம. சுண கெட்டவன்

[சுணை + கெட்டவன்]

**சுணைச்சி** *šuṇaicci,* பெ. (n.) சிறுகாஞ்சொறி; small climbing nettle (சா.அக.).

[சுணை + ச்சி. 'இ' உடைமைப் பொருளீறு]

**சுணைத்தழும்பு** *šuṇai-t-taḻumbu,* பெ. (n.) சுணை உடம்பிற்படுவதனால் நமைச்சல் எடுத்துத் தடித்துத் தழும்புண்டாதல்; nettle rash (சா.அக.).

[சுணை + தழும்பு]

**சுணைநெரிஞ்சி** *šuṇai-neriñji,* பெ. (n.) ஒருவகை முள்நெரிஞ்சி; a kind of nettle (சா.அக.).

[சுணை + நெரிஞ்சி]

**சுணைப்பு** *šuṇaippu,* பெ. (n.) 1. குத்தும் மானவுணர்ச்சி; sense of shame, sensibility. "ஒருதரஞ் சொன்னால் தெரியாதா? உனக்குச் சுணைப்பு இல்லையா?" என்பது நாஞ்சில் நாட்டு வழக்கு. 2. கூரியஅறிவு; sense.

[சுணை + பு. 'பு' பண்புப் பெயர் ஈறு]

**சுணைப்புல்** *šuṇai-p-pul,* பெ. (n.) 1. சுணையுள்ள புல்; any grass with rough surface. 2. கோரைப் புல்; reed sedge grass (சா.அக.).

[சுணை + புல்]

**சுணையுறுகாணம்** *šuṇai-y-uṟu-kāṇam,* பெ. (n.) பேய்க்கொள் என்னும் தவசம்; wild horse-gram (சா.அக.).

[சுணையுறு + காணம்]

**சுணையுறுகொத்து** *šuṇai-y-uṟu-kottu,* பெ. (n.) சுணையுறுகாணம் பார்க்க; see *šuṇai-y-uṟu-kāṇam.*

[சுணையுறு + கொத்து]

**சுணைவண்டு** *šuṇai-vaṇḍu,* பெ. (n.) ஒருவகை வண்டு; a kind of beetle.

[சுணை + வண்டு]

**சுணைவு** *šuṇaivu,* பெ. (n.) பேய்க்கடலை (மலை.); wild bitter bengal gram.

**சுணைவெள்ளரி** *šuṇai-veḷḷari,* பெ. (n.) நரி வெள்ளரி; downy cucumber (சா.அக.).

[சுணை + வெள்ளரி]

**சுத்தல்சம்பா** *šuttal-šambā,* பெ (n.) சம்பா நெல்வகை (வேளாண்.); a kind of paddy.

**சுத்தி**[1] *šutti,* பெ. (n.) *1.* சிப்பி (பிங்.); oyster-shell. "சுத்தியின் கருப்போல்" (பிரபோத. 2:26). *2.* சங்கு (பிங்.); conch. *3.* கும்பிடு கிளிஞ்சில் (தைலவ.); a species of cackle, a bivalve. *4.* இப்பி வடிவாகத் தலை ஓட்டால் அமைக்குந் திருநீற்றுக் கலம்; skull used as receptacle for sacred ashes. "சுத்திய பொக்கணத்து ..." (திருக்கோ. 242). *5.* அகல் (சூடா.); shallow earthen vessel. *6.* நெய் முதலியன ஊற்றுஞ் சிறு ஏனம் (வின்.); small vessel for pouring ghee, oil etc.

Skt. šukti

*[சுறு → (சுற்று) → சுத்து → சுத்தி (வே.க.208.)]*

**சுத்தி**[2] *šutti,* பெ. (n.) குத்துவதுபோல் தட்டும் சிறு சம்மட்டி; small hammer.

ம. சுத்தி; து. சுத்தி

*[சுறு → (சுற்று) → சுத்து → சுத்தி (வே.க.208.)]*

சுத்தியல் பார்க்க

**சுத்தி**[3] *šutti,* பெ. (n.) அரைப்பலம் (தைலவ.); half a palam.

**சுத்தி**[4] *šutti,* பெ. (n.) வயிரத்தின் பண்புகளுள் ஒன்று (சிலப்.14:181, உரை); a quality of diamond.

**சுத்திகெந்தி** *šutti-kendi,* பெ (n.) சிவப்புக் கெந்தகம்; red sulphur (சா.அக.).

**சுத்திகை** *šuttikai,* பெ (n.) *1.* கிளிஞ்சல்; சிப்பி; shell, oyster shell. *2.* அகல் (பிங்.); pan as of a lamp. *3.* உட்கூடான தட்டு; கிண்ணம் shallow dish.

*[சுத்தி → சுத்திகை]*

**சுத்தியம்** *šuttiyam,* பெ. (n.) நல்லாடை வகை (திவா.); a kind of cloth of superior quality.

Pkt. katta; U. kātnā.

**சுத்தியல்** *šuttiyal,* பெ. (n.) ஓங்கியடிக்க உதவும் கம்மாளர் கருவி வகை; small hammer.

மறுவ. தட்டுங்கருவி, சிறு சம்மட்டி

*[சுத்து*[2] *→ சுத்தி → சுத்தியல் (மு.தா. 117: வே.க.208)]*




**சுத்திரப்பலகறை** *šuttira-p-palakarai,* பெ. (n.) கடலில் உண்டான ஒரு வகைச் சோழி; a kind of gowri grown in the ocean (சா.அக.).

**சுத்திலப்பரணி** *šuttila-p-parani,* பெ. (n.) ஏழிலைப் புன்னை என்னும் மூலிகை; seven leaved milky plant (சா.அக.).

**சுத்திலாட்டம்** *šuttilāttam,* பெ. (n.) நாணல்; reed (சா.அக.).

**சுத்திவில்முடுக்கி** *šutti-vil-mudukki,* பெ. (n.) ஒரு பக்கம் அடிப்பதற்கும் மறுபக்கம் ஆணியின் கொண்டையைப் பற்றி திருகிப் பிடுங்குவதற்கும் உதவுங் கருவி; wrench and hammer.

மறுவ. ஆணிபிடுங்கிச் சுத்தியல்

*[சுத்தி*[2] *+ வில் + முடுக்கி]*

**சுத்து-தல்** *šuttu-,* 5 செ.குன்றாவி. (v.i.) சுற்று-தல் பார்க்க; see *šurru-.*

*[சுறு → (சுற்று) → சுத்து → சுத்து-தல் (மு.தா.117)]*

**சுத்துரு** *šutturu,* பெ. (n.) கண்டங்கத்திரி (மலை.); a thorny plant.

**சுதமதி** *šudamadi,* பெ (n.) மணிமேகலையில் மாதவியின் தோழியாக வருபவள்; a female character, Madavi's friend in Manimegalai epic.

**சுதர்ச்சி** *šudarcci,* பெ (n.) சதுரக்கள்ளி; square spurge (சா.அக.).

**சுதாகு** *šudāgu,* பெ. (n.) கடம்பு மரம்; cadambo tree.

**சுதாச்சி** *šudācci,* பெ. (n.) *சதுரக்கள்ளி (மலை.);* triangular spurge.

**சுதாதாளி** *šudādāḷi,* பெ. (n.) *கிச்சிலிக் கிழங்கு;* orange root *(சா.அக.).*

**சுதுப்புநாங்காறல்** *šuduppu-nāṅgāṟal,* பெ. (n.) *1. பத்துவிரல நீளமும் வெண்ணிறமுமுள்ள மண்டைக்காறல் மீன்;* horse-mackerel, silvery, attaining 10 in. in length, ascending rivers for above tidal reach. *2. நீலவெள்ளை நிறமுடைய காறல் மீன் வகை;* horse mackerel, bluish-silver *(செ.அக.).*

**சுதும்பு** *šudumbu,* பெ. (n.) *பத்துவிரல நீளமும் சாம்பல் நிறமும் உள்ள பால் மீன்வகை;* milk-fish, leaden, attaining 10 in. in length *(செ.அக.).*




**சுதை**[1] *šudai,* பெ. (n.) *1. அமிழ்தம்;* ambrosia. *"சுதையனைய வெண்சோறு" (கம்பரா. குலமுறை. 18). 2. பால்;* milk. *"சுதைக் கணுரையைப் பொருவு தூசு" (கம்பரா. வரைக். 16). 3. சுவை (வின்.);* taste, savour, sweetness. *4. சுண்ணாம்பு;* lime, plaster. "வெள்ளி வெண்சுதை யிழுகிய மாடத்து" *(மணிமே. 6:43). 5. வெண்மை (சூடா.)* whiteness. *6. விண்மீன் (அகநி.);* star. *7. மின்னல் (சங்.அக.);* lightning.

*[சொது → சுது → சுதை]*

"ஒளியார் முன் ஒள்ளியராதல் வெளியார் முன் வான்சுதை வண்ணங் கொளல்" (குறள், 714) என்று திருவள்ளுவரும், "வெள்ளி வெண்சுதை யிழுகிய மாடத்து" (மணிமே. 6:43) என்று சீத்தலைச்சாத்தனாரும் கூறுவதால், 'சுதை' என்பது தென்சொல்லே (வே.க.243).

**சுதை**[2] *šudai,* பெ. (n.) *உதைகால் ஆன் (பிங்.);* kicking cow. "வருகன் றூட்டாப் புன்சுதை" *(குற்றா.தல. தக்கன் வேள்விச். 117).*

**சுதை**[3] *šudai,* பெ. (n.) *கேடு;* destruction. *"சுதையொன்றி யக்களத்தே விழ" (கந்தபு. அக்கினிமு. 85).*

**சுதைக்குன்று** *šudai-k-kuṉṟu,* பெ. (n.) *சுண்ணாம்பு பூசிய செய்குன்று;* an artificial hillock plastered with šuṇṇam. *"கூத்தாடிடமுங் கொழுஞ் சுதைக் குன்றமும்" (பெருங். வத்தவ. 15: 109).*

*[சுதை + குன்று]*

**சுதையம்** *šudaiyam,* பெ. (n.) *சுண்ணாம்புச் சத்து;* calcium *(சா.அக.).*

*[சுதை → சுதையம்]*

**சுந்தரத்தாது** *šundara-t-tādu,* பெ (n.) *ஒரு வகைச் செய்ந்நஞ்சு (சங்.அக.);* a mineral poison.

**சுந்தரப்பொடி** *šuṇdara-p-poḍi,* பெ. (n.) *சிந்தூரப்பொடி;* aromatic powder. *"சுந்தரப் பொடி தெளித்த" (சீவக. 1956).*

*[சிந்தூரம் → சுந்தரம் + பொடி]*

**சுந்தரம்** *šundaram,* பெ. (n.) *சிந்தூரம்;* red paint. *"சுந்தரம் பெய்த யானைத் தூமருப்பு" (சீவக. 3048).*

*[சிந்தூரம் → சுந்தரம்]*

**சுப்பல்** *šuppal,* பெ. (n.) *சுள்ளி;* dry things, especially for fuel. *'சுள்ளி சுப்பல்' என்பது உலக வழக்கிணை மொழி (வே.க.212) 'சுப்பலெடுத்துப் பல் குத்துகிறான்'*

*[சும்பு → சுப்பு → சுப்பல் (மு.தா. 150)]*

**சுப்பி** *šuppi,* பெ. (n.) *1. சுப்பல் பார்க்க;* see šuppal. *2. சுப்பிவிறகு(வின்.), உருட்டைக்குச்சி;* thin fire wood.

*[சுப்பு → சுப்பி]*

**சுப்பிவிறகு** *šuppiviṟagu,* பெ. (n.) *சுள்ளிவிறகு (வின்); காய்ந்தசுள்ளி; கட்டைவிறகு;* small sticks of firewood.

*[சுள் → சுட்பு → சுப்பு. சுப்பெனல் = விரைந்து நீர்வற்றுதல். சுப்பு → சுப்பல் = சுள்ளி. சுப்பு → சுப்பி = சுள்ளி. சுள்ளி சுப்பல் (சுப்பி) என்பது உலகவழக்கிணை மொழி. சுப்பி + விறகு (வே.க. 212)]*

**சுப்பு** *šuppu,* பெ. (n.) *நீர்வற்றற்குறிப்பு;* onom. expr. quick absorbtion of liquid.

*[சுள் → சுட்பு → சுப்பு (வே.க. 212)]*

**சுப்பெனல்** *śup-p-eṉal,* பெ. (n.) நீர் முதலியவற்றை, விரைவில் உள்ளிழுத்தற் குறிப்பு (வின்.); onom. expr. signifying quick absorption of liquid.

*[சுள் → சுட்பு → சப்பு + எனல் - சுப்பெனல் (வேக.212)*

*சூப்பு* = Ger. suppe, Fr. soupe, E. sup.

*சப்பு* = AS. supan, Ice. supa; Ger. saufen - to drink*]*

**சுபத்தி** *śubatti,* பெ. (n.) பவளப்புற்று செய்ந் நஞ்சு; a kind of arsenic (சா.அக.).

**சுபத்திரம்** *śubattiram,* பெ. (n.) 1. வெள்வேல்; white acacia. 2. காட்டாத்தி; bauhnia purpurea (சா.அக.).

**சுபரணி** *śubaraṇi,* பெ. (n.) ஏழிலைப் புன்னை; a medicinal herb named seven leaved milky plant.

மறுவ. ஏழிலைப்பாலை

**சும்பு-தல்** *śumbu-,* 5 செ.கு.வி. (v.i.) வாடிச் சுருங்குதல்; to wither (சா.அக.).

*[சும்பு → சும்பு-]*

**சும்புளி-த்தல்** *śumbuḷi-,* 4 செ.கு.வி. (v.i.) பேரொளி முதலியவற்றால் கண்கூசுதல்; to be dazed, dazzled, as the eyes. "சுமந்தநாகமுங் கண் சும்புளித்தவே" (கம்பரா. மிதிலை. 132).

ம. சிம்பு

*[கூம்பு → சூம்பு → சம்பு → சம்புளி]*

**சும்மா** *śummā,* கு.வி.எ. (adv.) 1. தொழிலின்றி, வெறுமனே; leisurely; without any occupation or work. "வாகனமேறிச் சேணிற் சும்மா திரிமூர்த்தியல்லாமல்" (தனிப்பா. 2, 246, 581). 2. இயல்பாய்; in normal condition, in health. உடம்பு சும்மா இருக்கிறான் (உ.வ.). 3. அமைதியாய்; silently, quietly, in perfect peace and rest. "சும்மா விருக்கு மெல்லையுட் செல்ல வெனைவிட்டவா" (கந்தரலங். 10). 4. வறிதாக; bare. "அவள் கழுத்துச் சும்மா இருக்கிறது' (உ.வ.). 5. காரணமின்றி; without any reason. 'சும்மா போவானேன்'. 6. பயனின்றி; uselessly. 'போய்ச் சும்மா வந்தான்'. 7. கருத்தின்றி; vaguely; unintentionally, at random. 'சும்மா சொன்னேனோ?'. 8. விளையாட்டாய்; as a joke; playfully. 'சும்மா சொன்னேன்'. 9. இலவயமாய்; freely; gratuitously gratis. 'சும்மா கொடுப்பானா?' 10. தடையின்றி; freely, unhesitatingly unceremoniously. இம்மாநாட்டிற்குச் சும்மா வரலாம். 11. அடிக்கடி; continously, repeatedly. சும்மா வந்து கொண்டிருக்கிறான்.

ம. சும்ம; க. சும்மனெ

*[சம் → சம்மா. சம் = மடிமை]*

இக்கருத்துகளையெல்லாம் "சும்மா யிருத்தல்" என்னும் மரபுச்சொல், உணர்த்துதல் காண்க.

கொண்முடிபு (சித்தாந்த) நூலாரும், மெய்ப் பொருள் (தத்துவ) நூலாரும், இச்சொல்லை இருவகைப் பற்றுமறுத்து, முற்றத்துறந்த முழு முனிவரான ஓகியர், இருவினையும் செய்யாது இறைவன்மேல் எண்ணத்தை நிலையாக நிறுத்தி, அமைதியாயிருக்கும் இணையற்ற இன்ப நிலைமையைக் குறிக்கப் பயன்படுத்தி யுள்ளனர்.

மௌன குருவடிகள் தாயுமானஅடிகளுக்குச் 'சும்மாயிரு' என்று செவியறிவுறுத்தியதையும், அதை நினைந்து தாயுமான அடிகள்,

சந்ததமு மிளமையோ டிருக்கலா மற்றொரு
சரீரத்தினும் புகுதலாம்
சலமே னடக்கலாம் கனன்மேலிருக்கலாம்
தன்னிகரில் சித்தி பெறலாம்
சிந்தையை யடக்கியே சும்மா யிருக்கின்ற
திறமரிது; சத்தாகியென்
சித்தமிசை குடிகொண்ட அறிவான தெய்வமே
தேசோ மயானந்தமே"

என்று பாடியிருத்தலையும், நோக்குக.

வெப்பத்தினால் மந்தமும் மடிமையும் உண்டாகுமாதலால், வெப்பக்கருத்தில் சோம்பற்கருத்துத் தோன்றிற்று. வெப்பக் காலத்திலும், வெப்பநாட்டிலும், வினை முயற்சி குன்றுவதையும், குளிர்காலத்திலும் குளிர்நாட்டிலும் அது மிகுவதையும் உலகியலை நோக்கிக் காண்க (வே.க.215).

'சும்மா கிடக்கிற சங்கை ஊதிக்கெடுத்தான் ஆண்டி' (பழ.).

'சும்மா இருந்த அம்மையாருக்கு அரைப் பணத்துத் தாலி போதாதா?' (பழ.)

**சும்மாடு** *śummāḍu,* பெ. (n.) 1. சுமையைத் தாங்க உதவும்படி தலையில்கொள்ளும் சுமையடை (துணிப்புரியணை); load-pad for the head. 'சும்மா டம்மா மதியாக்கி' (திருவாலவா. 30 : 9) 2. தவசமாகக் கொடுக்கும் உரிமை (R.T.); perquisites in grain. 'சும்மாட்டுக்கும் சும்மா இருப்பவனுக்கும் என்ன தெரியும்?' (பழ.)

ம. சும்மாட்டு.

*[சுமடை → சுமடு → சும்மாடு (சு.வி. 101)]*




**சும்மாடுகோலு-தல்** *šummāḍu-kōlu-*, 15 செ.கு.வி. (v.i.) *துணியைத் தலைக்குச் சும்மாடாகச் சுற்றிக்கட்டுதல்;* to coil a cloth as load-pad for the head.

*[சும்மாடு + கோலு-,]*

**சும்மாது** *šummādu*, வி.அ. (adv.) *சும்மா பார்க்க;* see *summā*. 'சும்மாது சிரந்தூக்கி யெதிராடா திருந்தார்' *(திருவிளை. பரிநரி. 41)* (செ.அக.).

*[சும்மா → சும்மாது]*

**சும்மி** *šummi*, பெ. (n.) *பெருங்குமிழி;* gmeilina arborea *(சா.அக.)*.

**சும்மெனல்** *šum-m-enal*, பெ. (n.) *ஒலிக் குறிப்பு; மூச்சுவிடுதற் குறிப்பு;* onom. expr. signifying breathing. "சும்மெனாதே கைவிட் டோடி" *(திவ். பெரியாழ். 5. 4 : 3)*.

*[சும் + எனல்]*

**சும்மை**[1] *šummai*, பெ. (n.) 1. *சுமை (பிங்.);* burden; charge. "சும்மையா லுயிர்கொள" *(கம்பரா. வீபீடண. 62)*. 2. *தொகுதி;* group, gathering, as of rays, bundle. "சுடரின் சும்மை விசும்புற" *(கம்பரா. இலங்கைகாண். 33)* 3. *நெற்போர் (பிங்.);* stack or rick of reaped paddy. 4. *ஊர் (பிங்.);* village, town. 5. *நாடு (பிங்.);* country, district. 6. *ஆவிரை (மலை.);* tanner's senna. 7. *நெற் பொரி;* fried paddy. 8. *ஆளிவிதை;* linseed *(சா.அக.)*.

ம. சும்மல்

*[சும் → சும்மை (மு.தா. 175)]*

**சும்மை**[2] *šummai*, பெ. (n.) 1. *ஓசை;* sound, noise, clamour. 'இமுமென் சும்மை யிடனுடை வரைப்பின்' *(பொருந. 65)*. 2. *யாழ்நரம்பின் ஓசை (பிங்.);* musical note.

*[சும் → சும்மை]*

**சும்மை**[3] *šummai*, பெ. (n.) *சும்மாடு;* load-pad for the head. "சும்மையாகவே கடைகளை நெருக்கியே" *(திருவிரிஞ்சைப். கௌரீ. 6)*.

*[சும் → சும்மை]*

**சும்மோதகம்** *šummōdagam*, பெ. (n.) *கொழுக்கட்டைத் தேக்கு;* bastard teak *(சா.அக.)*.

**சும**[1]**-த்தல்** *šuma-*, 3 செ.கு.வி. (v.i.) 1. *சுமையாதல்;* to become heavy, as accumulated debt, interest; to be burdened. 'இன்றைய உணவால் வயிறு சுமந்து விட்டது' *(உ.வ.)*. 2. *சார்தல்;* to devolve on, press upon. 'அவனது ஈட்டமும் இழப்பும் என்பேரிற் சுமந்தன' *(உ.வ.)*. 3. *மிகுதல்;* to increase, swell. 'பழிபாவங்கள் சுமந்தன' *(உ.வ.)*. 'சுமந்த தலையும் சும்மாடாய்த் திரிகிறது' *(பழ.)*.

*[சுமை → சும-,]*

**சும**[2]**-த்தல்** *šuma-*, 3 செ.குன்றாவி. (v.t.) 1. *தாங்குதல்;* to bear; to support; to carry a burdern, as a beast, to bear in the womb "பவழம் புனைந்த பருதி சுமப்ப" *(கலித். 80)*. 2. *மேற் கொள்ளுதல்;* to take upon oneself. "முயற்றி சுமந்தெழுந்து" *(திவ். இயற். பெரியதிருவந். 1)*. 3. *பணிதல்;* to submit to humble. "செறுநரைக் காணிற் சுமக்க' *(குறள், 488)*, 'சுமந்தவன் தலையிலே சும்மாடு பத்து' *(பழ.)*. 4. *சூல் கொள்ளுதல்;* to pregnant.

ம. சும; தெ. போசு

*[சுமை → சும-,]*

**சுமக்க** *šumakka*, கு.வி.எ. (adv.) 1. *சுமந்திட;* to carry. 2. *மிகவும்;* in abundance, plenty. 'பண் சுமக்கப் பாடி' *(ஈடு, 3. 5 : 2)*.

*[சும → சுமக்க]*

**சுமங்கை** *šumaṅgai*, பெ. (n.) 1. *ஆடு தின்னாப்பாலை;* a medicinal plant, worm killer. 2. *வறட்சுண்டி;* sensitive plant *(சா.அக.)*.

**சுமஞ்சரி** *šumañjari*, பெ. (n.) *துளசி;* holy basil *(சா.அக.).*

**சுமடம்** *šumadam*, பெ. (n.) *அறிவின்மை, முட்டாள்தனம்;* ignorance, folly. *"சுமடதாய் வம்பு மால் கொளுந்திய" (திருப்பு. 460).*

*[சுமடு → சுமடம்]*

**சுமடன்** *šumadan*, பெ. (n.) *1. கீழ்மகன் (திவா.);* mean, vulgar, person. *2. அறிவில்லாதவன்;* ignorant, illiterate person. *"உள்ளமிலாத சுமடர்கள்" (தேவா. 604. 5).*

*[சுமடு → சுமடன்]*

**சுமடு** *šumadu*, பெ. (n.) *1. சும்மாடு பார்க்க;* see *šummādu*. *"புகர்வாய்க் குழிசி பூஞ்சுமட் டிரீஇ" (பெரும்பாண். 159). 2. சுமை;* load, burden. *"இவடான் திருந்தாச் சுமட்டினள்" (கலித். 109).*

*ம. சுமடு*

*[சுமை + அடு → சுமடு]*

**சுமடை** *šumadai*, பெ. (n.) *சும்மாடு (அக.நி.) பார்க்க;* see *šummādu*.

*[சுமடு → சுமடை]*

**சுமணா** *šumanā*, பெ. (n.) *சிறுசண்பகம்;* small sampak flower *(சா.அக.).*

**சுமத்தி** *šumatti*, பெ. (n.) *1. சுமதலை, 2 பார்க்க;* see *šumadalai, 2. 'சுமத்தியான விலை' (உ.வ.). 2. மிகுதி;* abundance. *'அங்கே பண்டங்கள் சுமத்தியாயிருக்கின்றன' (உ.வ.). 3. கெட்டி;* solidity; firmness. *'இது சுமத்தியான வேலை' (உ.வ.) (செ.அக.).*

*[சுமத்து → சுமத்தி]*

**சுமத்து-தல்** *šumattu-*, *5 செ.குன்றாவி. (v.t.) 1. சுமையேற்றுதல்;* to burden, to load. *"சோற்றைச் சுமத்தி நீ பந்தித்து வைக்க" (தாயு. பெரியநாயகி. 1.). ம. சுமத்து. 2. கடன் முதலியன பொறுக்க வைத்தல்;* to impose, as a debt, obligation; to make one liable. *3. குற்ற முதலியன ஏற்றுதல்;* to impute, as fault.

*[சும் → சுமை → சுமத்து]*

**சுமதலை** *šuma-dalai*, பெ. (n.) *1. சுமைதலை பார்க்க;* see *šumai-dalai*. *2. விலை முதலியவற்றின் ஏற்றம்;* excessiveness, as of price. *'சுமதலையான விலை' (உ.வ.) (செ.அக.).*

*[சும் → சுமை → சும + தலை]*

**சுமதாகம்** *šuma-dāgam*, பெ. (n.) *சிற்றகத்தி;* common sasban *(சா.அக.).*

*[சும + தாகம்]*

**சுமதாசா** *šumadāšā*, பெ. (n.) *செம்பை;* foreign sesban.

**சுமதி**[1] *šumadi*, பெ. (n.) *1. பொறுப்பு;* responsibility, duty. *'அது உன்மேற் சுமதி' (உ.வ.). 2. சுமை (பாரம்) (சங்.அக.);* load, burden. *'குடும்பச் சுமதி அவனுக்கு அதிகம்' (உ.வ.). 4. மிகுதி;* large quantity, abundance. *'சரக்குச் சுமதியாய் வந்ததா?' (உ.வ.).*

*[சும் → சும → சுமதி (மு.தா. 175)]*

**சுமதி**[2] *šumadi*, பெ. (n.) *பேராமல்லி;* long tubed arabian jasmine *(சா.அக.).*

**சுமந்த** *šumanda*, பெஅ (adj.) *1. அதிகமான;* abundant, numerous. *'சுமந்த சனம் வந்தார்கள்' (நெல்லை).*

*[சும → சுமந்த]*

**சுமர்-தல்** *šumar-*, *3 செ.கு.வி. (v.i.) கனமாகுதல்;* to become heavy. *'சாமான் சுமருகிறது' (உ.வ.).*

*[சும் → சும → சுமர்-,]*

**சுமி** *šumi*, பெ. (n.) *செம்மரம்;* coromandel redwood, soymida febrifuga *(சா.அக.).*

**சுமூகம்** *šumūgam*, பெ. (n.) *1. கஞ்சாங்கோரை;* white-basil. *2. துளசி;* holy basil *(சா.அக.).*

**சுமை** *šumai*, பெ. (n.) *1. சுமக்கை;* bearing, carrying. *"சுமைக்கடாத மெய் விடுத்தலே நன்று" (பிரபுலிங். அக்கமா. துறவு. 21). 2. கனம்;* weight, load, burden. *3. தொகுதி;* collection. *"வார்சுமைப் பூக்கொண்டு" (திருமந். 1834.). 4. கடமை, பொறுப்பு;* duty, responsibility. *5. ஒரு விரல மழை;* one inch of rain. *6. 60 படி கொண்ட ஓர் அளவை;* a measure equal to 60 measures. *7. 180 தேங்காய்கொண்ட அளவு* (G.Tj.D.i. 134); a bundle of 180 coconuts. *8. 270 கவளி கொண்ட வெற்றிலைக் கட்டு;* a bundle of 270 kavaḷi of betel-leaves. *'சுமை எடுப்பவனுக்கு சுமைப் பளுவுத் தெரியும்' (பழ.).*

*[சும → சுமை]*

**சுமைக்காரன்** *šumai-k-kāraṉ*, பெ. (n.) *1.* மூட்டைத் தூக்குவோன் *(யாழ். அக.);* porter, carrier. *2.* குடும்பச் சுமைமிக்கவன் *(உவி.);* man of large family.

*[சுமை + காரன்]*

**சுமைக்கூலி** *šumai-k-kūli*, பெ. (n.) *1.* மூட்டைத் தூக்குவதற்கு கொடுக்கும் கூலி *(யாழ்.அக.);* porterage, wage for carrying a load. *'சுமை காற்பணம்; சுமைக்கூலி முக்காற்பணம்' (பழ.).*

*[சுமை + கூலி]*

**சுமைத்தயிர்** *šumai-t-tayir*, பெ. (n.) *1.* ஆடைத் தயிர் *(சீவக. 468, நச். உரை.);* curd with cream; a layer on the top of curd. *2.* கட்டித் தயிர்; solid curd. "சுமைத்தயிர் வேய்ந்த சோற்றின்" *(சீவக. 2617).*

*[சுமை + தயிர்]*

**சுமைதலை** *šumai-talai*, பெ. (n.) பொறுப்பு கடமை *(இ.வ.);* responsibility, burden.

*[சுமதலை → சுமைதலை]*

**சுமைதாங்கி** *šumai-tāṅgi*, பெ. (n.) சுமையை இறக்கித் தலைச்சுமை ஆற்றுதற்கு உதவியாக உயர்த்தி நிறுத்தப்பட்ட கற்கட்டு; elevated stone platform erected on the roadside to rest burdens. "சுமை தாங்கி மேற் சாத்துவர்" *(திருவிளை. விறகு. 16).* 'அவன் குடும்பத்திற்கு அவன் சுமைதாங்கியானான்' *(உ.வ.).* 'சுமைதாங்கி ஆயந்தீர்க்காது' *(பழ.)* (செ.அக.).

*[சுமை + தாங்கி]*




**சுமைதாங்கிபோடு-தல்** *šumai-tāṅgipōḍu-* செ.குன்றாவி. (v.i.) பெற்றெடுக்காமல், வயிற்றுக் குழந்தையுடன் இறந்தவள் பொருட்டு, அவள் வயிற்றுச் சுமையாலுண்டான வருத்தம் நீங்குமாறும், அவள் ஆதன் அமைதியுறும் பொருட்டும், சுமைதாங்கிக்கல் நாட்டுதல்; to erect a šumai-tāṅgi often times in memory of a woman who has died in pregnancy, the belief being that by such erection she will be relieved of her burden in the womb.

*[சுமைதாங்கி + போடு-,]*

**சுமைதி** *šumaidi*, பெ. (n.) சுமதி[1] பார்க்க *(சங்.அக.);* see *šumati*[1].

*[சம் → சம → சமதி → சுமைதி]*

**சுமையடை** *šumai-y-aḍai*, பெ. (n.) சும்மாடு பார்க்க; see *šummāḍu*. "சுமையடை மேற் கூடை கவிழ்த்து" *(திருவிளை. மண்சுமந். 16).*

*[சுமை + அடை (சு.வி. 101)]*

**சுமையன்** *šumaiyaṉ*, பெ. (n.) சுமையாள்; porter, carrier. "சுமையராயிருப்பார் சும்மாட்டுக் குள்ளே தாழைமடலைச் சொருகுமாபோலே" *(திவ். அமலனாதி, 6, வியா. பக். 73).*

*[சுமை → சுமையன்]*

**சுமையாள்** *šumai-y-āḷ*, பெ. (n.) சுமைக்காரன் பார்க்க; see *šumai-k-kāraṉ*. "எமைச் சுமையாளு மாக்கி" *(தாயு. சச்சிதா. 4).*

*[சுமை + ஆள்]*

**சுமையிறக்கி** *šumai-y-iṟakki*, பெ. (n.) சுமைதாங்கி (யாழ்ப்.) பார்க்க; see *šumai-tāṅgi*.

*[சுமை + இறக்கி]*

**சுர[1]-த்தல்** *šura-*, 3 செ.கு.வி. (v.i.) *1.* ஊறுதல்; to spring forth to stream out. "ஆழியா னவனை நோக்கி யருள் சுரந்து" *(கம்பரா. விபீடண. 142).* *2.* உடலில் நீர் முதலியன பெருகி வீங்குதல் (இ.வ.); to swell morbidly with secretion. *3.* நிறைதல், பெருகுதல்; to increase by steady accumulation, as wealth. "விருப்பஞ் சுரந்த சிலந்தி முடிசூட்டும் பெருமான்" *(திருவானை. உலா, 60).*

ம. சுரத்து; க. ஒசர்

*[சுல் → (சர்) → சுர → சுர-. (வே.க. 245)]*

**சுர[2]-த்தல்** *šura-*, 3 செ.குன்றாவி. (v.t.) *1.* பால் முதலியன சுரத்தல்; to secrete as milk. 'கன்றைக் கண்டதும் பசுவிற்குப் பால் சுருந்தது' *(உ.வ.).*

2. இடைவிடாது சொரிதல்; to pour forth continuously. "மேனின்று தான் சுரத்தலான்" (சிலப். 1, 9, உரை). 3. மிக அதிகமாகக் கொடுத்தல்; to give abundantly. "நெடுந்தேர் களிறொடு சுரக்கும் . . . முசுண்டை" (அகநா. 249).

[சுல் → (சுர்) → சுர → சுர-. (வே.க. 245)]

**சுரக்கட்டி** *šura-k-katti*, பெ (n.) வயிற்றுக் கட்டி; enlargement of the spleen.

[சுரம் + கட்டி]

இவ் வயிற்றுக்கட்டி காய்ச்சலினால் ஏற்படும் மண்ணீரல் வீக்கம் என்று சா.அக. கூறும்.

**சுரக்கணை** *šura-k-kanai*, பெ. (n.) காய்ச்சலுடன் வாய் நீரூற்றங் காணும் ஒருவகைக் கணைச் சூடு; congenital heat in children accompanion by fever and salivation (சா.அக.).

[சுரம் + கணை]

**சுரக்கரந்தை** *šura-k-karandai*, பெ. (n.) 1. சிவ கரந்தை; fever basil. 2. கொழும்புச் சிவகரந்தை; Ceylon toolsy.

[சுரம் + கரந்தை]

**சுரக்காலிக்கம்** *šura-k-kālikkam*, பெ. (n.) காய்ச்சல், இசிவு முதலிய நோய்களுக்காகக் கண்ணிலிடும் மருந்து; an eye salve used on the eye lids in cases of fever (சா.அக.).

[சுரம் + காலிக்கம்]

**சுரக்கழிச்சல்** *šura-k-kaliccal*, பெ. (n.) எளிதில் பண்டுவத்திற்கு வயப்படாத காய்ச்சலோடு கூடிய கழிச்சல்நோய்; diarrhoea with fever (சா.அக.).

[சுரம் + கழிச்சல்]

**சுரக்கள்ளி** *šura-k-kalli*, பெ. (n.) செம்மரம்; red cedar (சா.அக.).

[சுரம் + கள்ளி]

**சுரக்காமலிகம்** *šura-k-kāmaligam*, பெ (n.) செருந்தி; golden champak (சா.அக.).

**சுரக்காய்ச்சல்** *šura-k-kāyccal*, பெ (n.) 1. கடுமையானகாய்ச்சல்; a high degree of fever. 2. உடம்பில் எரிச்சலை உண்டாக்கும் காய்ச்சல்; fever causing burning sensation over the body (சா.அக.).

[சுரம் + காய்ச்சல்]

**சுரக்கியானம்** *šura-k-kiyānam*, பெ (n.) பாடுகையில் பண்புகளை (சுரங்களை)த் தனித் தனியாய் எடுத்துக் கூறவல்ல இசையுணர்ச்சி (சங்.அக.); intimate knowledge of the musical notes involving the ability to identify each of them as it occurs.

**சுரக்கினி** *šurakkini*, பெ. (n.) காய்ச்சலைத் தணிக்கும் மருந்து; remedy for dispelling as reducing fever (சா.அக.).

**சுரக்கினிநோய்** *šurakkini-nōy*, பெ (n.) ஊதையினால் உண்டாகிச் சளிக்கோளாறு அடைவதனால் காணும் தொண்டைக் கம்மல், மூச்சுத் திணறல், வறட்சி போன்ற பண்புகளைக் காட்டும் நோய்; a throat disease caused by gas and kabam making hard of speech, breathing trouble etc. (சா.அக.).

[சுரம் + அக்கினி + நோய்]

**சுரக்குடாரம்** *šura-k-kudāram*, பெ. (n.) காய்ச்சலைக் கட்டுப்படுத்தும் மாத்திரை; a medicine for fever (சா.அக.).

[சுரம் + குடாரம்]

**சுரக்குடிநீர்** *šura-k-kudinīr*, பெ. (n.) காய்ச்சலுக்கான கியாழம்; a decoction given for fever (சா.அக.).

[சுர(ம்) + குடிநீர்]

**சுரக்குளிர்** *šura-k-kulir*, பெ. (n.) குளிர்க் காய்ச்சல்; shivering accompanied fever an intermitent fever (சா.அக.).

[சுரம் + குளிர்]

**சுரக்கோடாரி** *šura-k-kōdāri*, பெ. (n.) சுரக்கோடாலி பார்க்க; see *šura-k-kōdāli* (சா.அக.).

[சுர(ம்) + கோடாரி]

**சுரக்கோடாலி** *šura-k-kōdāli*, பெ. (n.) காய்ச்சலைப் போக்கும் இணையில்லா மருந்து; an infalliable medicine for any kind of fever (சா.அக.).

[சுரம் + கோடாரி → கோடாலி]

**சுரக்கோது** *šura-k-kōdu*, பெ. (n.) காய்ச்சற் குற்றம்; vitiation caused by fever (சா.அக.).

**சுரகணரோகம்** *śuragaṇa-rōgam,* பெ. (n.) *பிறவிக் குற்றத்தினால் குழந்தைகளுக்கு வரும் காய்ச்சல்;* chronic fever by children due to congenital causes *(சா.அக.).*

*[சுரகண(ம்) + ரோகம்]*

**சுரகரகாரி** *śuragaragāri,* பெ. (n.) *காய்ச்சலை நிறுத்தும் ஒரு மருந்து;* a remedy that dispels fever *(சா.அக.).*

*[சுரம் + க ரம் + காரி]*

**சுரகரி** *śuragari,* பெ. (n.) *பேய்த்தும்பை;* devil toombay *(சா.அக.).*

**சுரகாமலிகம்** *śura-gāmaligam,* பெ. (n.) *செருந்தி;* golden champak *(சா.அக.).*

*[சுரம் + காமலிகம்]*

**சுரகுயிலம்** *śuragyilam,* பெ. (n.) *பிசின்;* gum *(சா.அக.).*

**சுரகுரு** *śura-guru,* பெ. (n.) *1. வியாழன் (திவா.), தேவர் குரு;* jupiter, as the preceptor of gods. *2. இந்திரன் (சூடா.), தேவர்க்குத் தலைவன்;* indira as the chief of gods. *3. பண்டைச் சோழர்குலத் தலைவருள் ஒருவன்;* an ancient Cōla king. *"பொன்னி நன்னாடன் சுரகுருவின் வழியோன்" (நன். 296, மயிலை.).*

*[சுரர் + குரு]*

குரவன் → குரு

Skt. guru

**சுரக்கேசரிக்குளிகை** *śura-kēśari-k-kuḷigai,* பெ. (n.) *குழந்தைகளுக்கு பலவகைக் குற்றங்களினால் வரும் காய்ச்சலுக்குரிய மருந்து;* pill used for fevers of children *(சா.அக.).*

*[சுரம் + கேசரி + குளிகை]*

**சுரகை** *śuragai,* பெ. (n.) *1. சுண்ணாம்பு;* slaked lime. *2. வசம்பு;* sweet flag *(சா.அக.).*

**சுரங்கக்காரன்** *śuraṅga-k-kāraṉ,* பெ. (n.) *1. வெடி மருந்தால் பாறைகளைப் பிளப் போன் (இ.வ.);* one whose occupation is rock-blasting. *2. சுரங்கம் தோண்டுவோன்;* one who dugs mine. *3. சுரங்கத்தில் பணியாற்றுவோன்;* one who works in a mine *(செ.அக.).*

*[சுரங்கம் + காரன்]*

**சுரங்கப்பாதை** *śuraṅga-p-pādai,* பெ. (n.) *1. சாலைகளைக் கடக்க நிலத்திற்கடியில் அமைக்கப்படும் பாதை;* sub-way. "சென்னையில் சுரங்கப்பாதைகள் பலவுள்ளன. *2. மலையைக் குடைந்து அமைக்கப்படும் பாதை;* tunnel. "புனலூர் அருகே சுரங்கப்பாதை ஓர் அயிரமாத்திரி (கிலோ மீட்டர்) நீளமுடையது".

*[சுரங்கம் + பாதை]*


சுரங்கப்பாதை

**சுரங்கம்**[1] *śuraṅgam,* பெ. (n.) *1. நிலவறை (வின்.);* under ground cellar. *2. நிலவறைப் பாதை;* subterraneous passage. *3. கீழறுக்கும் அறை;* mine, trench. *4. கனிமங்கள் தோண்டி யெடுக்கும் போது ஏற்படும் பெரும் பள்ளம்;* a large under-ground excavation dug minerals and oares. *5. திருடுவதற்காக வீட்டுச்சுவரில் கள்வரிடுங்கன்னம்;* hole cut through or under a wall to break into a house.

*[சுள் → சுர → சுரங்கு → சுரங்கம் (வேக.245)]*

**சுரங்கம்**[2] *śuraṅgam,* பெ. (n.) *1. இங்கிலிகம்;* cinnabar. *2. சிந்தூரம்;* red powder. *3. தேன்;* honey. *4. தோடம்பழம்;* citrus fruit *(சா.அக.).*

**சுரங்கவெடி** *śuraṅga-veḍi,* பெ. (n.) *1. நிலத்தில் உள்ள பெரும்பாறைகளை உடைத்துக் கிணறோ, பெரிய அகழ்வோ ஏற்படுத்தப் பயன்படும் வெடி;* to blast rock or to excavate to make a mine, a kind of detornators are used, such detonators are called 'suranga veḍi'.

*[சுரங்கம் + வெடி]*

**சுரங்கவூற்று** *śuraṅga-v-ūṟṟu,* பெ. (n.) *சுரங்கங்களிலிருந்து வரும் மாழைகளின்*

முதற்பொருள் கலப்பான நீர்; spring issuing out from mines containing minerals (சா.அக.).

[சுரங்க(ம்) + ஊற்று]

**சுரங்கம்வை-த்தல்** *śurangam-vai-*, 4 செ.கு.வி. (v.i.) 1. பாறைகளை மருந்து வைத்து உடைத்தல் (வின்.); to blast rocks. 2. கீழறுத்தல்; to lay mines under, open a subterraneous passage. 3. கன்னமிடுதல்; to break into a house through a hole cut in its wall. 4. வஞ்சகத்தால் கெடுதி செய்தல்; to undermine, ruin by insidious means, sap.

[சுரங்கம் + வை-,]

**சுரங்கமறு-த்தல்** *śurangam-aṟu-*, 4 செ.கு.வி. (v.i.) சுரங்கம்வை-, (வின்.) பார்க்க; see *śurangam-vai-* (செ.அக.).

[சுரங்கம் + அறு-,]

**சுரங்குன்று-தல்** *śuraṅ-guṉṟu-*, செ.கு.வி. (v.i.) 1. பேச்சுதாழ்தல் (உ.வ.); lowering of the voice in speaking. 2. பாட்டின் உச்சத்திலிருந்து கீழிறக்குதல்; to lower the high pitch into a low pitch.

[சுரம் + குன்றுதல். சுரம் = பண், ஓசை]

**சுரச்சதி** *śura-c-cadi*, பெ. (n.) இசைவகை (வின்.); a variety in tunes.

[சுரம் + சதி]

**சுரசகசாயம்** *śurasagaśāyam*, பெ. (n.) மிகுதியான சிறுநீர் பிரிதலைக் கட்டுப்படுத்துவதற்காக நீரிழிவு நோயாளர்க்குக் கொடுக்கும் கருக்குநீர்; a decoction prescribed for diabetes (சா.அக.).

[சுரசம் + கசாயம்]

**சுரசபிருதம்** *śuraśabirudam*, பெ. (n.) வேளைத் தாவரம்; veḷaiplant (சா.அக.).

[சுரசம் + பிருதம்]

**சுரசம்** *śuraśam*, பெ. (n.) 1. அரத்தை; galangal. 2. நறும்பிசின்; a fragrant resin (சா.அக.).

**சுரசம்மாரி** *śuraśammāri*, பெ. (n.) காய்ச்சலைப் போக்கும் மருந்து; medicine eradicating fever (சா.அக.).

[சுரம் + சம்மாரி]

**சுரசமணி** *śuraśamaṇi*, பெ. (n.) ஆடாதோடை; Malabar nut (சா.அக.).

[சுரசம் + மணி]

**சுரசமான** *śurasamāṉa*, பெ.அ. (adj.) 1. சுவையுள்ள; delicious. 2. தித்திப்புள்ள; sweetish (சா.அக.).

**சுரசவாகுதிரசம்** *śuraśavāgutiraśam*, பெ. (n.) ஒரு வகைத் துளசி; a varity of holy basil (சா.அக.).

[சுரசம் + வாகுதி + ரசம்]

**சுரசா** *śuraśā*, பெ. (n.) துளசி (மலை.); sacred basil.

**சுரசி** *śuraśi*, பெ. (n.) வெண்ணொச்சி (தைலவ. தைல. 135, 14); five leaved chaste tree.

**சுரசு** *śuraśu*, பெ (n.) வேளைப்பூடு; five leaved cleome (சா.அக.).

**சுரசுர-த்தல்** *śuraśura-*, 4 செ.கு.வி. (v.i.) சருச்சரையாதல் (இ.வ.); to be rough to have a rough surface.

[சுள் → சுர் → சுர. சுரசுர = கரடுமுரடாய் இருத்தல்]

**சுரசுரப்பு** *śura-śurappu*, பெ (n.) சருச்சரையாக இருக்கை (இ.வ.); roughness as of woollen cloth.

[சுரசுர → சுரசுரப்பு (வே.க. 206)]

**சுரசுரா** *śura-śurā*, பெ (n.) சிறுபிள்ளைகள் கொளுத்தி விளையாடும் வாணவகை; a kind of small crackers handled by the children. (வே.க. 212).

[சுர் → சுரசுரா]

**சுரசூடாமணிமாத்திரை** *śuraśūḍāmaṇi-māttirai*, பெ (n.) (ஊதை, நீங்காதகாய்ச்சல் போன்ற வற்றைப் போக்கும் குணமுடைய) இதளியம், கந்தகம், இங்குலிகம் இம்மூன்றையும் கருமத்தை விதையினால் தூய்மைசெய்து பின்பு திரிகடுகு சேர்த்துப் பழச்சாற்றால் அரைத்து உருட்டிய மாத்திரை; a pill given for fevers (சா.அக.).

[சுரம் + சூடாமணி + மாத்திரை]

**சுரசூலை** *śura-śūlai*, பெ. (n.) வெப்புநோய் வகை (சீவரட். 123); a fever, ague.

[சுரம் + சூலை]

**சுரசை** *śuraśai*, பெ. (n.) சிற்றரத்தை (தைலவ. தைல. 98); lesser galangal.

**சுரஞ்சனம்** *šurañjaṉam,* பெ. (n.) கமுகு (மலை); areca-palm.

மறுவ. பாக்கு மரம்

**சுரஞ்சா** *šurañjā,* பெ. (n.) துளசி; holy basil (சா.அக.).

**சுரஞ்சி** *šurañji,* பெ. (n.) உசிலைமரம்; sirissaticle from its clearing rancidity (சா.அக.).

**சுரடி** *šuraḍi,* பெ. (n.) பண்வகை (யாழ்.அக.); a musical mode.

[சுருட்டி → சுரடி]

**சுரண்டி**[1] *šuranḍi,* பெ. (n.) 1. புண்சுரண்டும் கருவி; a sharp instrument used for scraping wounds. 2. சட்டுவம் (சுரண்டி); an iron instrument to scrap anything (சா.அக.).

[சுரண்டி → சுரண்டி]

**சுரண்டி**[2] *šuranḍi,* பெ. (n.) 1. தவறான வழியில் பொருள்களைக் கவருபவன்; one who misappropriates. 2. சிறிது சிறிதாகப் பொருள் சோர்ப்பவன் (உ.வ.); one who scraps up money. 3. சுரண்டினபொருள் (இ.வ.); scrapings.

[சுரண்டு → சுரண்டி]

**சுரண்டு**[3]**-தல்** *šuranḍu-,* செ.குன்றாவி. (v.t.) 1. உகிர் முதலியவற்றால் பிறாண்டுதல் (வின்.); to scratch, scrape with finger's-nail. 2. உகிர் அல்லது விரல் நுனியால் உடம்பைத்தீண்டிக் குறிப்பித்தல் (வின்.) ; to scratch a person with the tip of the finger to draw his attention. 3. தூண்டிவிடுதல் (வின்.); to instigate. 4. சண்டைக்கிழுத்தல் (வின்.); to pick up a quarrel. 5. செலவாற் கரைத்தல்; to drain away one's property. "அவன் தன் சொத்தை யெல்லாம் சுரண்டி விட்டான்". 6. கவர்தல்; to misappropriate by slow degree. "என் பொருளை யெல்லாம் சுரண்டி விட்டான்".

ம. சுரண்டுக; க. கெரண்டுக, கெரெ; தெ. கீறு; து. கெரெபுனி; கோத. கெக்ர்வ்; துட. கெர்வ்; பர். கிர், கிர்வ், கிர்ப்; குரு. கெர்ச்; மா. க்வெர்செ; பிரா. கர்கிங்.

[சுள் → சுர் → சுரடு → சுரண்டு]

**சுரண்டு**[4]**-தல்** *šuranḍu-,* 5 செ.கு.வி. (v.i.) 1. பணத்திற்காகப் பலரோடு உடலுறவு கொள்ளல் (வின்.); to commit adultery, prostitution. 2. இரத்தல்; to crave, solicit meanly. 'என்னிடம் வந்து சுரண்டுகிறான்' (உ.வ.)

[சுர் → சுரடு → சுரண்டு]

**சுரணை** *šuraṇai,* பெ. (n.) 1. உணர்ச்சி; sensitiveness, consciousness. "சுரணை கெட்டவன்" (உ.வ.), "அதிக நித்திரை கொடுக்கச் சுரணைகெட்டு" (இராமநா. உயுத். 33). 2. அறிவு; sense, intelligence. "அவன் மிக்க சுரணை யுள்ளவன்" (செ.அக.).

ம. சுரண; க. சுரளெ

[சுள் → சுர் → சுரி → சுரணை (மு.தா. 130)]

சென்னைப் பல்கலைக்கழக அகரமுதலி நினைவு அல்லது தன்னுணர்ச்சி என்று மட்டும் பொருள்படும் 'ஸ்மரண' என்னும் வடசொல்லை, சுரணை என்னும் சொற்கு மட்டுமின்றிச் சுணை யென்னும் சொற்கும் மூலமாகக் காட்டியுள்ளது. அணை, சுரணை என்னும் தென்சொற்கள் குத்தற்கருத்தை அடிப்படையாகக் கொண்ட 'சுள்' என்னும் வேரினின்றும், 'ஸ்மரண' என்னும் வடசொல் 'நினை' என்று பொருள்படும், 'ஸ்ம்ரு' என்னும் வினை முதனிலையினின்றும் பிறந்துள்ளன என வேறுபாடறிக.

**சுரணைமரணை** *šuraṇai-maraṇai,* பெ. (n.) மானவுணர்ச்சி; self-respect. 'சுரணை மரணை கெட்டு அலையாதே'.

[சுரணை + மரணை]

சுரணைமரணை என்னும் இணை மொழியிலுள்ள இரண்டாம் சொல்லே வடசொல்லாகும். அஃது ஒலியொப்புமையும் இற்றைத் தமிழரின் மொழியுணர்ச்சி யின்மையும் பற்றி இணைந்ததென அறிக. (வே.க. 207).

**சுரணைமரம்** *šuraṇai-maram,* பெ. (n.) மாவகை; a speces of mango.

மறுவ. சுரணை

[சுரணை + மரம்]

**சுரத்திருமம்** *šura-t-tirumam,* பெ. (n.) நேயமரம்; a kind of medicinal tree (சா.அக.).

**சுரத்து** *šurattu,* பெ. (n.) 1. மிக அதிகமாகப் பால்தரும் கறவையினத்தின் இயல்பு; quality of a cow which gives milk in abundant. 'இந்தப் பசுமாடு நல்ல சுரத்துடையது' (உ.வ.). 2. தெம்பு;

valour, strength. நோய்வாய்ப்பட்ட பின் பையன் சுரத்தில்லாமல் இருக்கிறான். 3. ஆர்வம், ஈடுபாடு; eagerness, interest, involvement. தேர்வில் தோற்றதால், அவன் எதிலும் சுரத்தின்றி காணப்படுகிறான்.

**சுரத்துக்காதி** *śurattu-k-kādi,* பெ. (n.) திப்பிலி மூலம்; root of long pepper (சா.அக.).

*[சுரத்துக்கு + ஆதி]*

**சுரத்துய்த்தல்** *śura-t-tuyttal,* பெ. (n.) வீரர் தாம் கவர்ந்த ஆனிரையை அரியவழியில் நோவு படாதபடி நடத்திக்கொண்டு செல்லுதலைக் கூறும்புறத்துறை (பு.வெ. 1:11); theme of a warrior leading the captured cattle safe through a baren tract fraught with dangers.

*[சுரம் → சுரத்து + உய்த்தல்]*

**சுரத்தை** *śurattai,* பெ. (n.) முந்திரிப்பழம்; cashew nut fruit (சா.அக.).

**சுரதரு** *śuradaru,* பெ. (n.) தேவதாரு; deoder tree (சா.அக.).

**சுரதாக்கு** *śuradākku,* பெ. (n.) அரத்தை; galangal (சா.அக.).

**சுரதாக்குதம்** *śuradākkudam,* பெ. (n.) பேரரத்தை; greater galangal (சா.அக.).

**சுரதாகநாசினி** *śuradāga-nāśiṉi,* பெ. (n.) இருவேலி என்னும் வெட்டிவேர்; cuscuss root (சா.அக.).

மறுவ. இருவேரி

**சுரதாபதைலம்** *śuradāba-dailam,* பெ. (n.) காய்ச்சலுக்குக் கொடுக்கும் ஒருவகை மருந்தெண்ணெய்; a medicinal oil for burning fever (சா.அக.).

**சுரதாரம்** *śuradāram,* பெ. (n.) புண்களுக்குச் செய்யும் ஒருவகைப் பண்டுவம்; a treatment for ulcers (சா.அக.).

**சுரதாரு** *śuradāru,* பெ. (n.) 1. செம்பரத்தை; red shoe flower. 2. தேவதாரு; deodar (சா.அக.).

**சுரதுருமம்** *śuradurumam,* பெ. (n.) தேவதாரு; deodar (சா.அக.).

*[சுரம் + துருமம்]*

**சுரந்தா** *śurandā,* பெ. (n.) தேவதாருமரம்; deodar tree (சா.அக.).

**சுரநடை** *śura-naḍai,* பெ. (n.) அருஞ்சுரத்தில் தலைவியையிழந்து நின்ற தலைவனிலையைக் கூறும் புறத்துறை (பு.வெ.10:2); theme describing the desolate condition of a hero who lost his wife in a desert.

*[சுரம் + நடை]*

**சுரநதி** *śura-nadi,* பெ. (n.) தெய்வ ஆறென வழங்கப்படும் கங்கை; the Ganges, as the river of Gods. "சுரநதிக்கணுரையென மிதக்கவே" (கலிங். 342).

*[சுரம் + நதி]*

**சுரப்பட்டை** *śura-p-paṭṭai,* பெ. (n.) காய்ச்சலை நீக்கும் மர (கொய்னா)ப்பட்டை; Cinchona tree bark, used to avoid fever mainly Malaria (சா.அக.).

*[சுரம் + பட்டை]*

**சுரப்பட்டைச்சத்து** *śura-p-paṭṭai-c-cattu* பெ. (n.) மர (சின்கொய்னா)ப் பட்டையில் இருந்து செய்யப்படும் காய்ச்சலைப் போக்கும் ஒரு சாறு; Quinine is prepared from Cinchona bark, used for all kinds of fever.

*[சுரம் + பட்டை + சத்து]*

**சுரப்படுத்து-தல்** *śura-p-paḍuttu-,* 5 செ.குன்றாவி. (v.t.) சுரம்போடு-தல் பார்க்க; see *śuram-pōḍu-*

*[சுரம் + படுத்து-,]*

**சுரப்பாலை** *śura-p-pālai* பெ. (n.) ஒரு வகைப் பாலை; a land of Paulay much resembling downy Oleander.

*[சுரம் + பாலை]*

**சுரப்பி** *śurappi,* பெ. (n.) 1. கந்தகத்தூள்; sulphur powder. 2. கள்ளி; milk spurge. 3. சாதிக்காய்; nutmeg. 4. பனங்கள்; toddy of palmyra. 5. துளசி; holy basil. 6. மது; arrack. 7. மல்லிகை; jasmine. 8. பல்லி; lizard. 9. ஆ; cow. 10. நறுமணம்; fragrance. 11. பிரமி (மலை.); a prostrate herb. 12. இலவம் பிசின்; gum of silkcotton tree. 13. இருவாட்சி; Tuscan jasmine. 14. பசி; hunger. 15. தேள் கொடுக்கி; Indian turnsole. 16. மருத மரம்; Terminatia arjuna. 17. ஒருவகை இதளியக் குளிகை; a kind of mercurial pill. 18. மாட்டுக்

கொம்பு; cow's horn. *19.* பால்மிகுதியாய்ச் சுரக்கும் ஆ (திவா.); white cow. *20.* சண்பகம்; champak flower. *21.* வெண்கடம்பு; white cadamba. *22.* குந்துருக்கம்; Indian frank in cense. *23.* தேவருலக ஆ; celestial cow. *24.* உடம்பிலிருந்து வெளியேறுவதும் அரத்தத்தில் கலப்பதுமான நீர்மங்களைச் சுரக்கும் உள்ளுறுப்பு; gland. *உமிழ்நீர்ச் சுரப்பி, நாளமில்லாச் சுரப்பி.* *25.* அதிமதுரம்; liquorice.

*[சுர → சுரப்பு → சுரப்பி]*

"வடவர் ஸு + ரப் (bh.) எனப் பகுத்து, 'இனிதாய்த் தாக்குதல்' (affecting pleasantly) என்று வேர்ப்பொருளுரைப்பர். இருக்கு வேதத்தில் நறுமணங்கமழ்தல், வசியம் செய்தல், இன்புறுத்தல், அழகாயிருத்தல் என்னும் பொருள்களிலேயே சுரபி என்னுஞ் சொல் ஆளப்பெற்று இருப்பதாகவும், பிற்கால வட நூல்களிலேயே அது காமதேனு என்னும் ஒரு கற்பனை ஆவைக்குறித்ததாகவும், மா.வி. அகர முதலியினின்று அறியக் கிடக்கின்றது" (வ.மொா.வ.).

Skt. surabhi

**சுரப்பு** *šurappu,* பெ. (n.) *1.* சுரக்கை; welling out, flowing, gushing out. "சுரப்புறு சிறைப்புனல்" (அரிச். பு. விவாக. 107). *2.* ஊற்று; fountain, spring. *3.* வீக்கம்; swelling. 'காலிற் சுரப்பு உண்டாகி இருக்கிறது' (உ.வ.).

**சுரப்புத்தண்ணீர்** *šurappu-t-taṇṇīr,* பெ. (n.) ஊற்றுத்தண்ணீர்; spring water; fountain water.

*[சுரப்பு + தண்ணீர்]*

**சுரப்புவடிவு** *šurappu-vaḍivu,* பெ. (n.) முலைமேற்றிரள்; nipple (சா.அக.).

*[சுரப்பு + வடிவு]*

**சுரப்புவிடு[1]-தல்** *šurappu-viḍu-,* 20 செ.கு.வி. (v.i.) கறத்தற்கு ஏற்ப, மாட்டின் மடியினின்று, பால் சுரக்கத் தொடங்குதல் (உ.வ.); to start secretion of milk in the udder. 'மாடு சுரப்பு விட்டதா?

*[சுரப்பு + விடு-,]*

**சுரப்புவிடு[2]-தல்** *šurappu-viḍu-,* 18 செ.குன்றாவி. (v.t.) கன்றை ஊட்டவிட்டுப் பால்சுரக்கச் செய்தல்; to start the flow of milk by letting the calf suck cow's udder. மாட்டைச் சுரப்பு விட்டாயிற்றா?

*[சுரப்பு + விடு-,]*

**சுரபத்து** *šurabattu,* பெ. (n.) நரம்பு வாச்சிய வகை (உ.வ.); a kind of stringed instrument played with a plectrum of ivory.

**சுரபரணி** *šurabaraṇi,* பெ. (n.) முறைக் காய்ச்சல்; intermittent fever (சா.அக.).

*[சுரம் + பரணி]*

**சுரபாசாணம்** *šurabāsāṇam,* பெ. (n.) காய்ச்சற் செய்ந்நஞ்சு; a kind of prepared native arsenic (சா.அக.).

*[சுரம் + பாசாணம்]*

**சுரபாண்டம்** *šurapāṇḍam,* பெ. (n.) கருக்குழியில் இருக்கும் பனிக்குடம் என்னும் பை; foetal membrane forming the bag of water in the womb (சா.அக.).

*[சுரம் + பாண்டம்]*

**சுரபாத்திரி** *šurapāttiri,* பெ. (n.) சுரப்பி பார்க்க; see *šura-pattiri* (சா.அக.).

**சுரபானம்** *šurabāṉam,* பெ. (n.) *1.* சாராயம்; arrack. *2.* கள்; toddy (சா. அக.).

*[சுரம்[3] + பானம்; சுரம் = கள்]*

**சுரபி** *šurabi,* பெ. (n.) சுரப்பி பார்க்க; see *šurappi* (சா.அக.).

*[சுரப்பி → சுரபி]*

**சுரபிகா** *šurabigā,* பெ. (n.) தேள்கொடுக்குச் செடி; scorpion plant (சா.அக.).

**சுரபிகாசி** *šurabi-kāši,* பெ. (n.) வரிக்கற்றாழை; a kind of striped aloe (சா.அக.).

**சுரபிகோசம்** *šurabikōšam,* பெ. (n.) சுரபிபத்திரை; see *šurabipattirai* (சா.அக.).

*[சுரபி + கோசம்]*

**சுரபிசேகம்** *šurabišēgam,* பெ. (n.) வரி கொம்மட்டி; striped colocynth (சா.அக.).

**சுரபிதானி** *šurabi-dāṉi,* பெ. (n.) சண்பகம்; champak (சா.அக.).

**சுரபிபத்திரை** *śurabi-pattirai,* பெ. (n.) *சம்பு நாவல்;* jambu tree, Malay apple tree.

**சுரபிமணி** *śurabi-maṇi,* பெ. (n.) இதளியமணி; mercurial pill (சா.அக.).

*[சுரபி + மணி. மண் → மண்ணு → மணி]*

த. மணி → Skt. maṇi

**சுரபிமன்றாடி** *śurabi-maṉṟāḍi,* பெ. (n.) *ஆக்களைப் பாதுகாப்பவர், மாட்டிடையர்;* protect of cow-herds. "இந்நாயனார் சுரபி மன்றாடிகளில் கலையன் சூற்றி திருவகம்படிக் கோன்கைக் கொண்டு நாளொன்றுக்கும் அளக்கும் பால்" (தெ.க. தொ.8, கல், 73).

*[சுரபி + மன்றாடி]*

**சுரபிமுத்திரை** *śurabi-muttirai,* பெ. (n.) பூசையில் ஆவின்மடிபோற் காட்டும் முத்திரை (சங். அக.); a pose of the fingers in the form of cow's udder, assumed in worship.

*[சுரபி + முத்திரை]*

**சுரபிமேற்புல்லுருவி** *śurabi-mēṟ-pulluruvi,* பெ. (n.) மருதமரத்தின் புல்லுருவி; a parasite found grown on marudha tree (சா.அக.).

*[சுரபி + மேல் + புல்லுருவி]*

**சுரபியாங்கம்** *śurabi-y-āṅgam,* பெ. (n.) வெண்கடம்பு; white cadamba tree (சா.அக.).

**சுரபியிடையர்** *śurabi-y-iḍaiyar,* பெ. (n.) *ஆக்களை வளர்த்துப் பயன்கொள்பவர்;* cowherds. 'இக்கோயில் சுரபி இடையற் குனாயகம் கைக்கொண்ட பால்பசு பத்தும்' (தெ.க.தொ, கல். 822).

மறுவ. கோவலர், கோபாலர், மாட்டிடையர்

*[சுரபி + இடையர்]*

**சுரபியில்** *śurabi-yil,* பெ. (n.) *கோயிற்குப் பாலுதவும்படி அரசர்களால் அமைத்துக் காக்கப்பட்ட ஆ மடம்;* cow stall maintained for the supply of milk to a temple. ஸ்ரீ ராஜ ராஜீஸ்வரமுடையார் சுரபியில் அடுத்த பசு பன்னீரண்டினால்..." (அடுத்த = சேர்த்த, கூடிய)

*[சுரபி → சுரபியல்]*

**சுரபில்லை** *śurabillai,* பெ. (n.) *சுரக்கட்டி;* enlargement of spleen (சா.அக.).

*[சுரம் + பில்லை]*

**சுரபின்னை** *śurapiṉṉai,* பெ. (n.) *சுரபுன்னை பார்க்க;* see *śura-puṉṉai* (சா.அக.).

**சுரபு** *śurabu,* பெ. (n.) 1. இலவம்பிசின்; gum of silk cotton tree. 2. *துளசி;* holy basil. 3. *மல்லிகை;* jasmine. 4. இலவு; silk cotton (சா.அக.).

**சுரபுகி** *śurabugi,* பெ. (n.) *துளசி;* holy-basil (சா.அக.).

*[சுரபு → சுரபுகி]*

**சுரபுங்கு** *śurapuṅgu,* பெ. (n.) *சுனைப்புங்கு;* rusty soapnut (சா.அக.).

**சுரபுன்னை** *śura-puṉṉai,* பெ. (n.) நாக சம்பங்கி என்ற மூலிகையின் பண்பையும், கரும்பச்சை நிற இலையையும், வெண் பூவையுமுடைய சிறிய மரம்; a small tree having dark green leaves and flowers are white and its fruit pulp is medicinal properties equal to naga champak "கரையன சுரபுன்னையும்" (பரிபா. 11:17) (சா.அக.).

ம. சுரப்புன்ன; க. சுரகொன்னெ; தெ. சுரபொன்ன

Skt. surapunnāgam

**சுரபேதம்** *śura-bēdam,* பெ. (n.) 1. *காய்ச்சல் வகைகள்;* different kinds of fever. 2. *கரகரத்த தொண்டை;* hoarse throat (சா.அக.).

*[சுரம் + பேதம்]*

**சுரம்**[1] *śuram,* பெ. (n.) 1. *காய்ச்சல் (உ.வ.);* fever. 2. *பாலைநிலம்;* desert tract. "சுரமென மொழியினும்" (தொல். பொருள். 216). 3. காடு; jungle. "வெங்க லழற்சுரந் தாம் படர்ந்தார்" (பு.வெ. 2 : 3). 4. அருநெறி (திவா.); narrow and difficult path. 5. வழி (பிங்.); way.

ம. சுரம்

*[சுள் → சுர் → சுரம் (வ.வ.)]*

சுரம் என்னும் சொல் முதுவேனிற் காலத்தில் கடுமையாய்ச் சுடும் பாலைநிலத்தைக் குறிக்கப் பயன்பட்டமையால் சுரநோயைக் காய்ச்சல் என்றே சொல்ல வேண்டும் (வ.வ.).

**சுரம்**[2] *śuram,* பெ. (n.) *கள்;* toddy.

*[சுரா → சுரம்]*

**சுரம்**[3] *śuram,* பெ. (n.) *உப்பு (மூ.அ.);* salt

**சுரம்**[4] *šuram,* பெ. (n.) *1.* நகத்தின் அடி; quick tender, flesh below nail. *2.* உட்டுளை; hollow, as of horn, quill.

*[சுரை → சுரம்]*

**சுரம்போக்கு** *šuram-pōkku,* பெ. (n.) தலைவனுடன் தலைவி பாலைவழியில் செல்லும் உடன் போக்குத் துறை; theme describing the elopement of a maiden with her lover. "தோயமும் நாடுமில்லாச் சுரம் போக்குத் துணிவித்தவே" (திருக்கோ. 207).

*[சுரம் + போக்கு]*

**சுரமகம்** *šura-magam,* பெ. (n.) செருந்தி; golden champak (சா.அக.).

மறுவ. சுரகாமலிகம்

**சுரமகளிர்** *šura-magaḷir,* பெ. (n.) தெய்வப் பெண்டிர் (பிங்.); celestial damsels.

மறுவ. தேவமகளிர், அரம்பையர்

*[சுரர் + மகளிர்]*

**சுரமண்டலம்** *šura-maṇḍalam,* பெ. (n.) ஒரு வகை வாச்சியம்; harp.

*[சுரம் + மண்டிலம் → மண்டலம்]*

**சுரமணிமாத்திரை** *šura-maṇi-māttirai,* பெ. (n.) நேர்வாளத்துடன் கடைச்சரக்குகள் சேர்த்து அணியம் செய்த, கழிச்சல் மாத்திரை; a purgative pill prepared with croton seed as a chief ingredient along with other bazaar drugs and prescribed for fever gravel or urinary calculus dyspepsia testicular complaints, etc. (சா.அக.).

*[சுரம் + மணி + மாத்திரை]*

இம்மாத்திரையினால் சுரம், கல்லடைப்பு, குன்மம், அண்டவூதை ஆகியன நீங்குமெனக் குறிக்கிறது.

**சுரமதில்** *šuramadil,* பெ. (n.) சீந்தில் கொடி; moon creeper (சா.அக.).

*[சுரம் + மதில்]*

**சுரமயக்கம்** *šura-mayakkam,* பெ. (n.) காய்ச்சலினால் வரும் மயக்கம்; giddiness from fever (சா.அக.).

*[சுரம் + மயக்கம்]*

**சுரமருந்து** *šura-marundu* பெ. (n.) காய்ச்சலைப் போக்கும் மருந்து; a medicine for the cure of fever (சா.அக.).

*[சுரம் + மருந்து]*

**சுரமலி** *šuramali,* பெ. (n.) சுரமலிகம் பார்க்க; see *šuramaligam* (சா.அக.).

**சுரமலிகம்** *šuramaligam,* பெ. (n.) *1.* உடம்பில் பலவிடங்களில் வரும் அக்கி; eruptions of a fiery acrid humour in different parts of the body. *2.* செருப்படை; a low spreading plant. *3.* செருந்தி; golden champak (சா.அக.).

மறுவ. செந்திக் கரப்பான், கரகாமலிகம்

*[சுரம் + மலிகம். சுரம் = வெப்பம். இங்கு வெப்பக் = கொப்புளம், மிகுதல் = நிறைய இருத்தல்.]*

**சுரமாத்திரை** *šura-māttirai,* பெ. (n.) சுரத்திற்கு கொடுக்கும் மருந்துக்குளிகை; fever pill.

*[சுரம் + மாத்திரை]*

**சுரமாந்தம்** *šura-māndam,* பெ. (n.) செரியாமை, மந்தம் போன்றவற்றால் குழந்தைக்கு வரும் காய்ச்சலுடன் கூடிய கழிச்சல்நோய்; diarrhoea in children attended with fever due to indigestion and other disorders of bowel (சா.அக.).

*[சுரம் + மாந்தம். மந்தம் → மாந்தம்]*

**சுரமாந்தை** *šura-māndai,* பெ. (n.) அதிக உடற்சூட்டுடன் இருமல், களைப்பு, சோற்று வெறுப்பு போன்ற பண்புகள் உள்ள ஒரு வகை மாந்தநோய்; a kind of tuberculosis marked by excess of fever, cough, fatigue, loss of appetite, etc. (சா.அக.).

*[சுரம் + மாந்தை]*

**சுரமாய்கிடத்தல்** *šuramāy-kiḍattal,* பெ. (n.) காய்ச்சலினால் படுத்தபடுக்கையாகக் கிடக்கை; to be laid up with fever (சா.அக.).

*[சுரம் + ஆய் + கிடத்தல்]*

**சுரமாலிகை** *šura-māligai,* பெ. (n.) காய்ச்சல், இசிவுநோய் இவற்றைப் போக்குவதற்காக அகத்தியர் மருத்துவ காவியம் 1500ல் சொல்லியுள்ள ஒரு மருந்து; a medicinal

preparation contemplated in the Agastiyar work 1500 on medicine for curing fever, apoplexy etc. (சா.அக.).

[சுரம் + மாலிகை]

**சுரமாறாட்டம்** *šuramārāttam* பெ. (n.) காய்ச்சற் கடுமையினால் அறிவு மயங்கிப் பிதற்றல் போன்ற மாறுபாடுகள்; several bad symptoms such as loss of senses, incoherent talk etc., due to excess of fever (சா.அக.).

[சுரம் + மாறாட்டம்]

**சுரமுண்டாக்கல்** *šuramundākkal,* பெ. (n.) காய்ச்சல் வரும்படிச் செய்தல்; causing or giving room for fever - may be by irregularity or excess in diet (சா.அக.).

[சுரம் + உண்டாக்கல்]

**சுரமுண்டாக்கி** *šuram-undākki,* பெ. (n.) காய்ச்சல் உண்டாக்கும் மருந்து; anything causing or producing fever (சா.அக.).

[சுரம் + உண்டாக்கி]

**சுரமுதல்** *šuramudal,* பெ. (n.) உடம்பில் காய்ச்சல் உண்டாதல்; getting feverish (சா.அக.).

[சுரம் + முதல்]

**சுரமும்முரம்** *šura-mummuram,* பெ. (n.) காய்ச்சலின் கடுமை; severity or intensity of fever (சா.அக.).

[சுரம் + மும்முரம்]

**சுரமுறுசூலை** *šuram-uru-šūlai,* பெ. (n.) காய்ச்சல், தலைவலி, உடம்பு வீக்கம் போன்ற பல வகைத் துன்பங்களைத் தரும் ஒருவகைச் சூலை நோய்; a kind of acute arthritis or gout marked by febrile symptoms head-ache, swelling and weakness (சா.அக.).

[சுரம் + உறு + சூலை]

**சுரமெழுப்பி** *šuram-eluppi,* பெ. (n.) 1. காய்ச்சல் உண்டாக்கும் பொருள்; any substance which excites fever. 2. சுரமுண்டாக்கி பார்க்க; see *šuram-undākki* (சா.அக.).

[சுரம் + எழுப்பி]

**சுரமேற்று[1]-தல்** *šuramēru-,* 5 செ.குன்றாவி. (v.t.) காட்டிற்குத் துரத்தி அடியோடு ஒழித்தல்; to drive into the forest and dispel, remove, as darkness. "திக்குக்களில் உண்டான இருளைச் சுரமேற்றா நிற்பதும்" (திருவிருத். 31, வியா, 194).

[சுரம் + ஏற்று-. சுரம் = காடு]

**சுரமேற்று[2]-தல்** *šuram-ēru-,* 5 செ.குன்றாவி. (v.t.) தூண்டுதல்; to instigate, egg on (செ.அக.).

[சுரம் + ஏற்று-,]

**சுரர்** *šurar,* பெ. (n.) தேவர், வானோர்; celestials. "சுரரறிவரு நிலை" (திவ். திருவாய். 1. 1:8).

மறுவ. அமரர், விழியார்

**சுரர்குருநாள்** *šurar-guru-nāḷ,* பெ. (n.) கொடிறு என்னும் எட்டாவது விண்மீன் (பூசம்) (திவா.); the 8th naksatra.

[சுரர் + குருநாள்]

**சுரர்துருமம்** *šurar-turumam,* பெ. (n.) தேவதாரு; deodar tree (சா.அக.).

**சுரரிடம்** *šurar-idam,* பெ. (n.) வீட்டுலகம், சுரர் வாழும் உலகம் (பிங்.); heaven, as the world of gods.

[சுரர் + இடம்]

**சுரவல்லி** *šuravalli,* பெ. (n.) அப்பிரகம் எனும் செய்ந்நஞ்சு; a kind of mineral poison (சா.அக.).

**சுரவன்பாக்கு** *šuravan-pākku,* பெ. (n.) ஓர் உயர்ந்த வகைப் பாக்கு; a kind of superior areca-nut 'திருவாலி நாடுதாஸர் நல்லன சில சுரவன் பாக்குக்களைப் பட்டருக்குக் கொடுவந்து கொடுத்தாராய்' (ஈடு. 10. 2: 2).

[சுரர் → சுரவன் + பாக்கு]

**சுரவி** *šuravi,* பெ. (n.) 1. சண்பகம்; champaka flower. 2. ஆ; cow.

[சுரபி → சுரவி]

**சுரவிகாரநாசினி** *šuravikāra-nāšini,* பெ. (n.) பாதிரி; sterospermum suaveolens (சா.அக.).

**சுரவின்பால்** *šuravinpāl,* பெ. (n.) ஆவின் பால்; cow's milk (செ.அக.).

[சுரபி → சுரவி → சுரவின் + பால்]

**சுரவினாசி** *šura-viṉāši*, பெ. (n.) *மாம்பிசின், பனம்பிசின், கிராம்பு முதலியவற்றால் செய்யப்படும் காய்ச்சலைப் போக்குகின்ற ஒரு மருந்து;* a medicine for fever prepared from the gum of mango tree, the gum of palmyra tree and clove *(சா.அக.).*

மறுவ. இடவகம்

*[சுரம் + விநாசி]*

**சுரவீக்கம்** *šura-vīkkam*, பெ. (n.) *காய்ச்சலிற் காணும் உடம்பு, கை கால் வீக்கம்;* swelling due to fever *(சா.அக.).*

*[சுரம் + வீக்கம்]*

**சுரவெப்பம்** *šura-veppam*, பெ. (n.) *காய்ச்சலினாற் ஏற்படும் உடல்வெப்பம்;* temperature of the body during fever *(சா.அக.).*

*[சுரம் + வெப்பம்]*

**சுரவேகம்** *šura-vēgam*, பெ. (n.) *காய்ச்சலின் கடுமை;* a high degree of fever *(சா.அக.).*

*[சுரம் + வேகம்]*

**சுரவை** *šuravai*, பெ. (n.) *வீக்கம்;* swelling *(சா.அக.).*

*[சுரப்பு → சுரவை]*

**சுரழ்** *šuraḻ*, பெ. (n.) இலவம்பிசின் *(மலை.);* gum arabic, gum of silk cotton tree *(சா.அக.).*

**சுரளம்** *šuraḷam*, பெ. (n.) புன்னைமரம் *(மலை.);* common poon tree *(சா.அக.).*

**சுரளிகை** *šuraḷigai*, பெ. (n.) *பாலைமரம்;* iron wood tree *(சா.அக.).*

**சுரன்** *šuraṉ*, பெ. (n.) *1. ஞாயிறு;* Sun. *2. காய்ச்சல்;* fever. *3. ஒருவகைச் சிறுமீன்;* a small fish *(சா.அக.).*

*[சுன் → சுர் → சுரன் (ஞாயிறு)]*

**சுரனாசி** *šuraṉāši*, பெ. (n.) *மால் கரந்தை;* Viṣṇu karanthai *(சா.அக.).*

**சுரனாசினி** *šuraṉāšiṉi*, பெ. (n.) *திருநாமப் பாலை;* a pālai tree *(சா.அக.).*

*[சுரன் + நாசினி]*

**சுரனுவா** *šuraṉuvā*, பெ. (n.) *பேராமல்லி;* big jasmine *(சா.அக.).*

**சுராகாரம்** *šurākāram*, பெ. (n.) *ஒரு வகையுப்பு;* a kind of salt *(சா.அக.).*

**சுராங்கிசக்குளிகை** *šurāṅgiša-k-kuḷigai*, பெ. (n.) *அகத்தியர் வல்லாதி 600இல் சொல்லியபடி பலவகைக் காய்ச்சல்களுக்கும் உரிய மாத்திரை;* a medicinal pill described in Agasthiyar vallāthi 600 and prescribed for different kinds of fever *(சா.அக.).*

*[சுரம் → சுராங்கிசம் + குளிகை]*

**சுராசமுத்திரம்** *šurā-samuttiram*, பெ. (n.) *ஏழு கடல்களுள் ஒன்றாகிய கட்கடல்;* ocean of toddy *(செ.அக.).*

*[சுரா + சமுத்திரம்]*

**சுராட்டு** *šurāṭṭu*, பெ. (n.) *நான்கு அடியுள்ள செய்யுளில் இரண்டெழுத்து ஓரடியுள் மிக்குச் சீரொத்து வருவது (யாப். வி. 95, பக். 482);* a four lined stanza of equal metrical quantity, with two extra letters in one of the lines *(செ.அக.).*

**சுராதி** *šurādi*, பெ. (n.) *1. துளசி;* holy basil. *2. வட்டத்திருப்பி;* Indian pareira cissampeloe pareira *(சா.அக.).*

**சுராதிராசன்** *šurādi-rāšaṉ*, பெ. (n.) *சுரர்குரு;* Jupiter, as the preceptor of Gods. "சுராதிராசன் முதலாகவரு சோழன்" *(கலிங். 178).*

*[சுரர் + அதி + (அரசன் →)ராசன்]*

**சுராபகம்** *šurābagam*, பெ. (n.) *சுண்டைக் காய்;* Turkey berry *(சா.அக.).*

**சுராலயம்** *šurālayam*, பெ. (n.) *தேவர்கள் வாழிடமான மேருமலை (சூடா.);* Mount Mēru, as the abode of Gods.

*[சுரர் + ஆலயம் = சுராலயம்]*

**சுராலை** *šurālai*, பெ. (n.) *சாம்பிராணி (நறுமணப் புகைப்பொருள்) (தைலவ.தைல. 3);* frankincense.

**சுரி[1]-தல்** *šuri-*, 2 செ.கு.வி. (v.i.) *1. சுழிதல்;* to be spiral, as conch. "வெள்ளைச் சுரி சங்கொ டாழியேந்தி" *(திவ். திருவாய். 7. 3 : 1).* *2. மடிப்பு விழுதல்;* to wrinkle. *3. கடைகுழலுதல்;* curl. "சுரியிரும் பித்தை" *(பொருந. 160).*

*[சுழி → சுரி]*

**சுரி²-த்தல்** *šuri-*, 4 செ.கு.வி. (v.i.) *1. சுழிதல் (சங்.அக.);* to wind spirally. *2. திரைதல் (யாழ்.அக.);* to wrinkle. *3. சுருளுதல்;* to curl. *4. வளைவாய்க் கிடத்தல்;* to lie in a circle. "சுரிக்கு மண்டலந் தூங்குநீர்" *(கம்பரா. தேரேறு. 30).* *5. மனஞ்சுழலுதல்;* to be perturbed. 'சுரிச்சிராது நெஞ்சே யொன்று சொல்லக் கேள்" *(தேவா. 369:3).*

*[சுழி → சுரி]*

**சுரி³-த்தல்** *šuri-*, 4 செ.கு.வி. (v.i.) 1. வற்றுதல்; to get dried. "நெருப்பிடைச் சுரிக்க நீட்டும்" *(கம்பரா. இரணிய. 137).* 2. சுருங்குதல்; to shrink. 3. சேறாதல் *(யாழ்ப்.);* to muddy, miry. 4. சேற்றிற் புதைதல் *(யாழ்ப்.);* to sink, as foot in mire.

**சுரி⁴-த்தல்** *šuri-*, 4 செ.குன்றாவி. (v.t.) *1. உள்ளொடுக்குதல்;* to draw in. "ஆமை தலைபுடை சுரிப்ப" *(கம்பரா. நாட்டுப். 18.)* 2. முகஞ்சுளித்தல்; to frown. 'சுரித்த மூஞ்சி' *(வின்.).* 3. ஓலை முதலியவற்றில் துளையிடுதல் *(யாழ்ப்.);* to bore as in an da leaf.

*[சுழி → சுரி]*

**சுரி⁵** *šuri*, பெ. (n.) *1. சுழற்சி (சங். அக.);* whirling. *2. சுழி;* spiral, curl, screw. "சுரியேறு சங்கினாய்" *(திவ்.இயற்.3:49).* 3. எருத்தின் நெற்றி வெள்ளைச் சுழி; white curl on the forehead of bulls. "சுரிநெற்றிக் காரி" *(கலித். 101).* 4. அணியுறுப்பு வகை; part of an ornament. "உருத்திராக்ஷத் தாழ்வடம் ஒன்றிற் பொன்னின் சுரி" *(தெ.க.தொ. 2, 156).* 6. நரி. *(அக.நி);* jackal.

*[சுழி → சுரி]*

**சுரி⁶** *šuri*, பெ. (n.) சேறு *(யாழ்ப்.);* thin mud, mire.

**சுரி⁷** *šuri*, பெ. (n.) *1. துளை (திவா.);* hole, aperture. *2. ஏட்டுத்துளை (வின்.);* perforation through the leaves of an ōla book. *(ம. சுரி).* *3. ஏட்டில் துளையிடுங்கருவி;* instrument for boring ōla leaf or book.

*[சுரை → சுரி]*

**சுரிகுழல்** *šuri-kuḻal*, பெ. (n.) *1. சுருண்ட கூந்தல்;* curling hair. *2. சுருண்ட கூந்தலுடைய பெண் (பிங்.);* woman as having curly hair.

*[சுரி + குழல்]*

**சுரிகை¹** *šurigai*, பெ. (n.) கவசம் *(திவா.);* coat of mail.

*[சுரி → சுரிகை]*

**சுரிகை²** *šurigai*, பெ. (n.) *1. உடைவாள்;* dirk, short sword. "சுரிகை நுழைந்த சுற்றுவீங்கு செறிவுடை" *(பெரும்பாண். 73)* 2. கத்தி; knife. "சுற்கம் வழித்தற்கு— கைச்சுரிகை" *(தைலவ. தைல.)*

*[சுரி → சுரிகை; சுர் → சுரி. சுரித்தல் = துளைத்தல். வடமொழியில் 'சுரிகா' என்பதன் அடி 'சுர்'. ஆயின் மா.வி.அ. 'க்ஷுர்' என்பதை மூலமாகக் காட்டும். இவையிரண்டும் 'சுரி' என்பதன் திரிபே.*

*'சூரி' என்பது உலகவழக்கு. 'சுரிகை' என்பது செய்யுள் வழக்கு.*

*ஏட்டில் துளையிடுங்கருவியைச் 'சுரியூசி' என்பது யாழ்ப்பாண வழக்கு (வ.வ. 157).]*

Skt. Swikā, skhūr; E. Sword

**சுரிஞ்சான்** *šuriñjāṉ*, பெ. (n.) பழுப்புநிறமான கிழங்கைப் போன்ற உனானி (uṉāṉi) மருந்துச் சரக்கு; a yellowish brown bulbous root known as mercury's finger - an uṉāni drug *(சா.அக.).*

**சுரிஞ்சான்மிசிரி** *šuriñjāṉ-miširi*, பெ. (n.) சுரிஞ்சான் பார்க்க; see *šuriñjāṉ* *(சா.அக.).*

*[சுரிஞ்சான் → சுரிஞ்சான் மிசிரி]*

**சுரிஞ்சி** *šuriñji*, பெ. (n.) தணக்கு (M.M.367); small ach root *(செ.அக.).*

**சுரித்தமுகம்** *šuritta-mugam*, பெ. (n.) *1. மூப்பினால் திரைந்த முகம்;* wrinkled face. *2. வெறுப்பை அல்லது சினத்தைக் காட்டும் முகம்;* face contorted in frowning.

*[சுரித்த + முகம்]*

**சுரித்தமூஞ்சி** *šuritta-mūñji*, பெ. (n.) சுரித்த முகம் பார்க்க; see *šuritta-mugam.*

*[சுரித்த + (முகம்) மூஞ்சி]*

**சுரிதகம்¹** *šuridagam*, பெ. (n.) கலிப்பா வகையின் இறுதியுறுப்பு (காரிகை, செய். 12, உரை.); short final lines of certain kinds of kali verse.

சுரிதகம் எனினும், அடக்கியல் எனினும் வாரம் எனினும், வைப்பு எனினும், கோக்கியல் எனினும் ஒக்கும் *(யாப். 82).*

*ஆசிரிய இயலானாதல் வெண்பா இயலானாதல் பாட்டிற் கருதிய பொருளை முடித்து நிற்பது. (தொல். செய். 117).*

*உள்ளுறுப்பின் பொருளினைத் தன் கண் வைக்கப்படுவது சுரிதகம் (தொல். பொருள். 4, பேரா.).*

**சுரிதகம்**[2] *śuridagam*, பெ. (n.) 1. கூத்தில் சொல் நிகழும் வகையில் வரும் எட்டடிப்பாட்டு (சிலப். 3: 13, உரை.); eight line stanza in dialogues of drama. 2. ஒருவகைத் தலையணி; an ornament fastened to the hair with a screw. "சுரிதக வுருவினதாகி" (நற். 86).

*[சுரி + அகம்]*

**சுரிந்து** *śurintu*, பெ. (n.) 1. நீர்ச்சுழல், நீர்ச்சுழி; eddy, whirl-pool. 'நீர் . . . சுரிந்தோடு மதனைச் சுரிந்தென்றும் சுழியென்றும் வழங்குவது போல" (யாப். வி. 81. பக். 282).

*[சுரி → சுரிந்து]*

**சுரிப்புறம்**[1] *śuri-p-puram*, பெ. (n.) 1. சங்கு; conch. 2. நத்தை; snail.

ம. சுரிப்புறம்

*[சுரி + புறம்]*

**சுரிப்புறம்**[2] *śuri-p-puram*, பெ. (n.) பனை ஏடுகளின் ஓட்டையுள்ள இடது புறம் (வின்.); left side of an ōla leaf or book, as perforated.

*[சுரி + புறம்]*

**சுரிபோடு-தல்** *śuri-pōḍu-*, 8 செ.குன்றாவி. (v.i.) தமரிடுதல் (யாழ். அக.); to bore a hole, as in a plank.

*[சுரி + போடு-,]*

**சுரிமண்** *śuri-maṇ*, பெ. (n.) புதைமணல் (யாழ்ப்.); a kind of quick sand.

*[சுரி + மண்]*

**சுரிமுகம்**[1] *śuri-mugam*, பெ. (n.) 1. சுழிந்த முகமுடைய சங்கு (திவா.); conch, as having a spiral head. "முரசுடன் சுரிமுகந் தழங்க" (பாரத. அருச்சுனன்றீ. 77). 2. நத்தை (திவா.); snail.

**சுரிமுகம்**[2] *śuri-mugam*, பெ. (n.) துளையுள்ள பக்கம்; that portion having the hole (சா.அக.).

ம. சுரிமுகம்

*[சுரி + முகம்]*

**சுரியல்** *śuriyal*, பெ. (n.) 1. வளைவு; curling, "சுரியற் றாடி" (மணிமே. 3: 116). 2. குழன்ற மயிர்; curly hair. "தென்றல் . . . சுரியற் றூற்றும்" (அகநா. 21). 3. மயிர் (திவா.); lack of hair. 4. நீர்ச்சுழி; whirlpool, eddy. 5. இளையோர் மயிர்; hair of the young. 5. பெண்மயிர்; hair of the female (சா.அக.).

*[சுரி → சுரியல்]*

**சுரியகுழல்** *śuriya-kuḻal*, பெ. (n.) 1. சுருண்ட கூந்தலை உடைய பெண்; woman having curly hair. 2. பெண்கூந்தல்; female's hair.

*[சுரி + குழல்]*

**சுரியாணி** *śuri-y-āṇi*, பெ. (n.) முறுக்காணி (இ.வ.); screw.

ம. சுரியாணி, சிரியாணி

*[சுரி + ஆணி. ஆழ் → ஆழி → ஆணி = ஆழ்ந்திறங்குவது]*

**சுரியூசி** *śuri-y-ūśi*, பெ. (n.) பனையேட்டில் துளையிடுங்கருவி; instrument for boring ōlā leaf or book.

*[சுரி + ஊசி. சுள் → சுர் → சுரி. உள் → உளி → உசி → ஊசி]*

**சுரீரெனல்** *śurīreṉal*, பெ. (n.) 1. கடுமையாகச் சுடுதற் குறிப்பு; onom. expr. signifying the sensation of piercing hot. சுரீரெனச் சுட்டது. 2. கடும்வலியுடன் ஏற்படும் உணர்வு; எறும்பு, பூச்சி, தேனீ, தேள் முதலியன கடிப்பதால் ஏற்படும் கூர்மை மிகுந்த கடுமையான வலியுணர்வு; a sharp pain. 'தேள் கொட்டியது போலச் சுரீரென்றது' 3. கடுமையான சொல், செய்தி போன்றவை மனத்தில் குத்துவது போன்ற ஊறுபாட்டையேற்படுத்துகை; harsh remark, news etc., give a pang feel touched to the quick. பாவாணர் மறைந்த செய்தி தமிழர்களின் மனத்தில் சுரீரெனத் தைத்தது (உ.வ.) 4. காய்ந்த இரும்பில் நீர் சுண்டும்போது உண்டாகும் ஒலிக்குறிப்பு; onom. expr. of hissing, as of heated iron in contact with water.

*['சுல்' சுடுதற் கருத்துவேர். சுல் → சுள் → சுர் → சுரீர் + எனல்]*

**சுருக்க** *šurukka,* கு.வி.எ. (adv.) 1. விரைவாய்; quickly, hastily. 'சுருக்க வா'. 2. சுருக்கமாக; briefly, shortly.

[சுருங்க → சுருக்க]

**சுருக்கங்கோரை** *šurukkaṅ-kōrai,* பெ. (n.) கோரைவகையுள் ஒன்று; a kind of sedge.

[சுருக்கம் + கோரை]

**சுருக்கம்** *šurukkam,* பெ. (n.) 1. குறுக்கம்; brevity, conciseness. 2. குறுக்கமானது; abbreviation, epitome, abstract, gist. 3. சிறுமை (வின்.); smallness, shortness. 4. குறைவு; diminution, decrease, contraction. "சுருக்கமுற்றனரரக்கர்" (கம்பரா. முதற்போ. 189). 5. வறுமை; poverty, want. "சிறிய சுருக்கத்து வேண்டு முயர்வு" (குறள். 963). 6. கஞ்சத்தனம்; miserliness. 7. ஆடை முதலியவற்றின்சுருக்கு (இ.வ.); fold or pucker in a garment, crease.

ம. சுருக்கம்

[சுருங்கு → சுருக்கு → சுருக்கம்]

**சுருக்கம்**[2] *šurukkam,* பெ. (n.) 1. ஒடுக்கம்; ஒடுக்கல்; contracting 2. எருவாய்ச்சுருக்கம்; anal stricture. 3. தட்டுப்பாடு, பற்றாக்குறை; shortage. 'பணச்சுருக்கம் ஏற்பட்டு விட்டதால், வணிகம் மந்தமாக உள்ளது' (உ.வ.).

[சுருங்கு → சுருக்கு → சுருக்கம்]

**சுருக்கல்**[3] *šurukkal,* பெ. (n.) 1. ஒடுக்கல்; contracting. 2. குறைத்தல்; diminution as food (சா.அக.).

[சுருங்கு → சுருக்கு → சுருக்கல்]

**சுருக்களஞ்சி** *šuru-k-kaḷañji,* பெ. (n.) 1. குழைச்சு; sliding knot. 2. கண்ணி; noose, trap, snare. 3. கட்டு; tying.

[சுருக்கு → சுருக்களஞ்சி]

**சுருக்காங்கி** *šuru-k-kāṅgi,* பெ. (n.) சுருக்களஞ்சி பார்க்க; see *šuru-k-kaḷañji.*

**சுருக்கி**[1] *šurukki,* பெ. (n.) 1. ஆமை; tortoise. 2. சிறுகீரை; pig greens. 3. தொட்டாற்சுருங்கி; sensitive plant; touch me not plant. 4. இங்குலிகம்; variety of cinnabar. 5. கசப்புப் பசளை; bitter purslane (சா.அக.)

[சுருக்கு → சுருக்கி]

**சுருக்கிக்காய்ச்சல்** *šurukki-k-kāyccal,* பெ. (n.) சுண்டக்காய்ச்சுவை; boiling down to reducible quantity (சா.அக.).

[சுருக்கி + காய்ச்சல்]

**சுருக்கிக்கூறு-தல்** *šurukki-k-kūṟu,* பெ. (n.) சுருக்கிச்சொல்லு-தல் பார்க்க; see *šurukki-c-col-.*

[சுருக்கி + கூறு-,]

**சுருக்கிச்சொல்(லு)-தல்** *šurukki-c-col-,* 13 செ.கு.வி. (v.i.) சொல்லுவதை, பேசுவதைச் சுருக்கமாகக் கூறுதல்; speak abruptly. 'அவையில் சுருக்கிச் சொல்லக் கற்றுக் கொள்ளவேண்டும்' (உ.வ.).

[சுருக்கி + சொல்-,]

**சுருக்கிட்டுக்கொள்(ளு)-தல்** *šurukkiṭṭu-k-koḷ,* 16 செ.கு.வி. (v.i.) சுருக்குப்போட்டுக்கொள் பார்க்க; see *šurukku-p-pōṭṭu-k-koḷ.*

[சுருக்கு + இட்டுக்கொள்-,]

**சுருக்கிடல்** *šurukkiḍal,* பெ. (n.) 1. சுருக்குப் போடுகை; to strangulate. 2. உருக்குமுகத்தில் மாழைகளுக்கு மூலிகைக்குடிநீர் அல்லது சாறுவார்த்து அதன் சாரத்தை இழுக்கும்படி செய்கை; in medicine pouring the juice or decoction of drugs in small quantities from time to time to metals in melting state in the process of calcination so as to absorb the essence of drugs. (சா.அக.)

[சுருக்கு → சுருக்கிடல்]

**சுருக்கிடு**[1]**-தல்** *šurukkiḍu-,* 20 செ.கு.வி. (v.i.) 1. சுருக்குப் போடுதல்; to make a noose on cord 2. சுருக்கில் மாட்டுதல்; to noose. "கழுத்திற் சுருக்கிட் டிழுக்கு மன்றோ" (சுந்தரவந். 2).

**சுருக்கிடு**[2]**-தல்** *šurukkiḍu-,* 20 செ.கு.வி. (v.i.) சுருக்குக்கொடு[2] பார்க்க; see *šurukku-k-koḍu*[2].

[சுருக்கு + இடு-,]

**சுருக்கிப்பிடி-த்தல்** *šurukki-p-piḍi-,* 4 செ.குன்றாவி. (v.t.) 1. செலவு முதலியன குறைத்தல்; to curtail, as expenses; to effect retrenchement. 2. வேலை முதலியவற்றைக் குறைத்து முடித்தல்; to minimise, as labour.

[சுருக்கு → சுருக்கிப்பிடி-,]

**சுருக்கினதகடு** *śurukkiṉa-tagaḍu,* பெ. (n.) செம்பு, பித்தளை ஆகிய மாழைகளினாலான பொருள்களின் மேல் வடிவோடு இரண்டறப் பொருந்துமாறு அமைக்கப்பெறும் பொற்ற கடு (கலை); the golden plate which is fitted upon the statue plate made by copper brass alloy. "செப்புக்குடம் ஒன்று நிறைமூவாயிரத்து எண்பத்து முப்பலத்தில் சுருக்கின தகடு பல பொன் ..." (தெ. க. தொ. 2, கல். 1).

[சுருக்கின + தகடு]

**சுருக்கு[1]-தல்** *śurukku-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. குறைத்தல்; to curtail, reduce. "முன்னிக் கடலைச் சுருக்கி" (திருவாச. 7:16). 2. உள்ளிழுத்தல்; to compress, to contract, to draw in, as the tortoise its head. 3. ஆடை முதலியன சுருக்குதல்; to pucker, tuck in. 4. வலை, பை முதலியன சுருக்குதல்; to draw tight, as noose, net, string of a purse. "கழுவொடு சுடுபடை சுருக்கிய தோற்கண்" (கலித். 106). 5. குடை முதலியவற்றை யொடுக்குதல்; to close, as umbrella to fold. 6. கட்டுதல்; to tie, as an old book, to make up into a bundle. "நல்யா ழாகுளி பதலையொடு சுருக்கி" (புறநா. 64). 7. திரண்ட கருத்து வரைதல்; to epitomise, summarise. 8. ஓலை முதலியன அணிதல்; to wear, as ear-ring. "செம்பொ னோலை சேடுபடச் சுருக்கி" (பெருங். மகத. 22: 225). 9. முலாம் பூசுதல்; to gild. "இத்தேவர் பிரபையிற் சுடர்களிற் சுருக்கின பொன்" (தெ.க.தொ. 2, 419).

க. சுர்க்கு, ம. சுருக்கு

[சுருங்கு → சுருக்கு-,]

**சுருக்கு[2]-தல்** *śurukku-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. சுருங்கச்செய்தல்; causing anything to shrdink. 2. வற்றச்செய்தல்; causing to be reduced as decocdtion. 3. உருகிய மாழைக்கு மூலிகைச்சாற்றைவிடுதல்; administering juice of drugs to metals infusion.

ம. சுருக்குக; க. சுர்கு, சுக்கு; தெ. சுருக்கு; து. சிர்க்காவுனி; கோத. சுர்க்; துட. தூட்; பர். சுர்க்கிப்

[சுருங்கு (த.வி.) → சுருக்கு (பி.வி.)-,]

**சுருக்கு[3]** *śurukku,* பெ. (n.) 1. சுருங்குகை; contraction, reduction "பெரும்படை ... பரப்புஞ் சுருக்கும்" (பெருங். மகத. 20, 135). 2. ஆடை முதலியவற்றின் மடிப்பு; wrinkle fold, crease. 3. குழைச்சு; slipknot, sliding knot. அந்தத் தாம்பிற் சுருக்கு நெகிழ்ந்திருக்கிறது. 4. கண்ணி; noose, snare, trap- 'வேடன் கண்ணிவைத்துப் பறவைகளைப் பிடிப்பதில் வல்லவன்' (உ.வ.). 5. கட்டு; tying. "குழற்சுருக் குடைந்து" (இரகு.இரகுவுற். 17). 6. குறைவு; deficiency. 7. சுருக்கம்; shortness. 'விடை சுருக்கமாக இருக்கட்டும்' (உ.வ.). 8. கஞ்சத்தன்மை; miserliness. "அவர் சுருக்கிலாது தூவினார்" (இரகு. இரகுவுற். 19). 9. ஒன்றன் பிழிவு; gist, summary. "மாதவன் பேர் சொல்லுவதே யோத்தின் சுருக்கு" (திவ். இயற். 2 : 39). 10. விரைவு; haste, speed. 'அவன் வந்த சுருக்கு வியப்பானது'. (உ.வ.). 11. அக்கறை; care, attention, eagerness. 'பையன் சுருக்காய்ப் படிக்கிறான்' (உ.வ.). 12. சுரணை; sensitiveness, sense of shame. 'நான் அவனை வைதால் உனக்கென்ன சுருக்கு' (உ.வ.). 13. ஒட்டணி (வீரசோ. அலங். 24); a figure of speech.

ம. சுருக்கு; க. சுலுக்கு

[சுருங்கு → சுருக்கு-,]

**சுருக்கு[4]** *śurukku,* பெ. (n.) அடி; சவுக்கடி; whipping. 'அவனுக்குச் சுருக்கு விழுந்தது' (உ.வ.).

[சுருக்கெனல் → சுருக்கு]

**சுருக்கு[5]** *śurukku,* பெ. (n.) 1. பூமாலை வகை; a kind of garland. "தண்சுருக்குப் பைந்தொடை" (திருக்காளத். பு. 7, 54). 2. வில்வம் (மலை); bael.

**சுருக்கு[6]** *śurukku,* பெ. (n.) வேள்வியில் உதவும் நெய்த்துடுப்பு (திவா.); a ladle made of mango leaves wood or metal used for pouring clarified butter on the sacred fire. "சோதிசேர்தருஞ் சுருக்குச் சுருவமும்" (சிவ ரக. நைமி.44).

**சுருக்கு[7]** *śurukku,* பெ. (n.) கயிற்றின் ஒரு முனையை மடக்கிக் கயிற்றிலேயே நகரும் வகையில் போடப்படும் முடிச்சு; ஒன்றைப் பிணைப்பதற்காகக் கயிற்றில் போடப்படும் முடிச்சு; noose; knot. அவன் கழுத்தில் சுருக்குப் போட்டுக் கொண்டிருக்கிறார்கள்.

[சுருங்கு → சுருக்கு]

**சுருக்குக்கஞ்சிகை** *śurukku-k-kañjigai*, பெ. (n.) வேண்டியபொழுது சுருக்கிக் கொள்ளு தற்குரிய திரை; roller curtain. "சுருக்குக் கஞ்சிகை விரித்தனர்" (பெருங். மகத. 13:54).

*[சுருக்கு + கஞ்சிகை]*

**சுருக்குக்கொடு¹-த்தல்** *śurukku-k-koḍu*, 4 செ.கு.வி. (v.i.) மாழைகளைப் புடமிடும் பொழுது மருந்துநீர் சேர்த்தல்; to add a liquid preparation in the process of calcinating a metallic substance. "ஏறச் சுருக்குக்கொடுத் ததைச் சிந்தூரித்து" (பணவிடு. 230).

*[சுருக்கு + கொடு-,]*

**சுருக்குக்கொடு²-த்தல்** *śurukku-k-koḍu*, செ.கு.வி. (v.i.) 1. அடிகொடுத்தல்; to administer cuts, as punishment. 'ஆசிரியர் அவனுக்குச் சுருக்குக் கொடுத்தார்' (உ.வ.). 2. கண்டிப்புக் காட்டுதல்; to rebuke.

*[சுருக்கு + கொடு-,]*

**சுருக்குக்கொடு³-த்தல்** *śurukku-k-koḍu-*, 4 செ.குன்றாவி. (v.t.) ஓடும் சரக்குகளைக் கட்டுவதற்காக அச்சரக்கை ஓட்டிலிட்டு அடுப்பில் வைத்து, மூலிகைச் சாற்றைச் சிறுகச்சிறுக அதில் விட்டுக் கட்டியைப் புரட்டிக் கொடுத்துக் கொண்டு வருதல்; the process used to purify or consolidate such substances as cinnabar, sulphur, arsenic etc.

*[சுருக்கு + கொடு -,]*

**சுருக்குச்சதை** *śurukku-c-cadai*, பெ. (n.) வட்ட வடிவச் சதை, ஒரு துளையுடன் இயற்கையாக முடிவடைவது; ring like muscle which closes a natural orifice sphincter muscle.

*[சுருக்கு + சதை]*

**சுருக்குத்தாக்கல்** *śurukku-t-tākkal*, பெ. (n.) சுருக்கிடல் பார்க்க; see *śurukkiḍal* (சா.அக.)

*[சுருக்கு + தாக்கல்]*

**சுருக்குத்தைலம்** *śurukku-t-tailam*, பெ. (n.) தலைவலிக்குப் பயன்படுத்தும் ஒருவகை மருந்தெண்ணெய் அல்லது களிம்பு; a medicated oil or ointment applied to headache.

*[சுருக்கு + தைலம்]*

Skt. taila → த. தைலம்

**சுருக்குப்பை** *śurukku-p-pai*, பெ. (n.) வாயைச் சுருக்கக்கூடிய தையற்பை (உ.வ.); a small bag or purse drawn together at the mouth with a thong or string. 'கிழவியின் சுருக்குப்பையில் வெற்றிலைச் சருகும் சில்லறைக் காசும் இருக்கும்' (உ.வ.).

*[சுருக்கு + பை]*

**சுருக்குப்பைக்காரன்** *śurukku-p-paikkāraṉ*, பெ. (n.) குறைந்த வளவு உண்பதாகப் பாசாங்கு செய்பவன் (இவ.); one who pretends to take only a small quantity of food.

*[சுருக்கு + பைக்காரன்]*

**சுருக்குப்போட்டுக்கொள்(ளு)-தல்** *śurukku-p-pōṭṭu-k-koḷ-*, 6 செ.கு.வி. (v.i.) கழுத்தில் உருவு கயிறிட்டுத் தற்கொலை புரிந்து கொள்ளுதல்; to commit suicide by hanging. 'வறுமையால் அவன் சுருக்குப் போட்டுக் கொண்டான்' (உ.வ.).

மறுவ. நாண்டுகொள்ளுதல்.

*[சுருக்கு + போட்டுக்கொள்-,]*

**சுருக்குவலை** *śurukku-valai*, பெ. (n.) ஒரு வகை வலை; a kind of net. "சுருக்குவலைப் படுத்து" (மணிமே. 18:106).

ம. சுருக்குவல

*[சுருக்கு + வலை]*

**சுருக்குவழி** *śurukku-vaḻi*, பெ. (n.) 1. குறுக்குப் பாட்டை (பாதை); cross cut, short cut. 2. கணக்கிற்கு விடை காணும் எளிய முறை; short or easy method in solving a problem. 'சுருக்குவழி தெரிந்ததால் அவன் கணக்கில் நூற்றுக்கு நூறு மதிப்பெண் வாங்கினான்' (உ.வ.).

*[சுருக்கு + வழி]*

**சுருக்குவார்** *śurukku-vār*, பெ. (n.) விலங்குகளைப் பிடிப்பதற்குரிய கருவி வகை (நற். 82, உரை); a long rope or leather strap provided with a noose used in capturing animals.

**சுருக்குவிழு-தல்** *śurukku-viḻu-*, பெ. (n.) 1. கயிறு முதலியவற்றில் முடிச்சு விழுகை; becoming knotted as string. 2. முதியவர், மடிப்பு விழுதல்; becoming wrinkled as old man's body; becoming creased. 3. ஏமாறுகை, மோசத்துக்

குள்ளாகை (வின்.); becoming ensnared or deceived.

மறுவ. திரை

[சுருக்கு + விழு + தல். 'தல்' தொ.பெ.ஈறு.]

**சுருக்குவை-த்தல்** *šurukku-vai-*, 4 செ.குன்றாவி. (v.i.) 1. கண்ணி வைத்தல்; to set a snare. 'நரிக்குறவன் சுருக்குவைத்தான்' (உ.வ.). 2. செருக்கை ஒடுக்க வழிதேடுதல் (வின்.); to take measures for humbling a person.

[சுருக்கு + வை-,]

**சுருக்கெழுத்தர்** *šuru-k-keluttar*, பெ. (n.) சுருக்கெழுத்தில் குறித்துக்கொண்டு பின் முழுமையாகத் தட்டச்சு செய்து தரும் பணியாளர்; stenographer.

ம. சுருக்கெழுத்துகாரன்

[சுருக்கு + எழுத்தர்]

**சுருக்கெழுத்து** *šuruk-k-eluttu*, பெ. (n.) குறியீடுகளைப் பயன்படுத்தி வேகமாகப் பேச்சை எழுத்தில் பதிவு செய்யும் முறை; short-hand. தாளிகைச் செய்தியாளர்களுக்குச் சுருக்கெழுத்து தெரிந்திருந்தால் பெரிதும் உதவியாயிருக்கும்.

ம. சுருக்கெழுத்து

[சுருக்கு + எழுத்து]

**சுருக்கெனல்** *šuruk-k-enal*, பெ. (n.) 1. எறும்பு, பூச்சி, தேள், தேனீ போன்றவை கடித்தவுடன்/ கொட்டியவுடன் கடுமையான வலி ஏற்படுகை; cause a sharp pain. கட்டெறும்பு கடித்த வலி அவனுக்குச் சுருக்கென்றது. 2. கடுமையான சொல், செய்தி முதலியன மனத்தில் குத்துவது போன்ற நிலையை உணர்கை; feeling when one is insulted. 'நீ கூட உன்பெற்றோரைப் பேணாமலிருக்கிறாயே என்று அவர் கேட்டதும் அவனுக்குச் சுருக்கென்றது' (உ.வ.).

[சுருக்கு + எனல்]

**சுருக்கேற்று[1]-தல்** *šuru-k-kēṟṟu-*, 5 செ.குவி. (v.i.) 1. மேலும் மேலும் சுருக்குக் கொடுத்துக் கொண்டே போதல்; increasing the imparting of juice of drugs to substances to increase their potency (சா.அக.). 2. சுருக்குக்கொடு[1]-த்தல் பார்க்க; see *šurukku-k-koḍu[1]*- "பூரத்துக்குச் சுருக்கேற்றுவது போலவே" (பைஷஜ. 127).

[சுருக்கு + ஏற்று-,]

**சுருக்கேற்று[2]-தல்** *šuru-k-kēṟṟu-*, 5 செ.குன்றாவி. (v.t.) தூண்டிவிடுதல்; to incite egg on.

[சுருக்கு + ஏற்று-,]

**சுருக்கை** *šurukkai*, பெ. (n.) சுருக்கு[5] பார்க்க; see *šurukku[5]*.

[சுருக்கு → சுருக்கை]

**சுருங்ககம்** *šuruṅgagam*, பெ. (n.) ஒருவகை நச்சுக்கிழங்கு; an unknown drug said to resemble aconite (சா.அக.)

**சுருங்கச்சொல்லணி** *šuruṅga-c-col-l-aṇi*, பெ. (n.) அணியிலக்கண வகை; சுருக்கமாகச் சொல்வதனால் ஏற்படும் நயந்தரும் அணி; a figure of speech (அணியி. 23).

[சுருங்கு → சுருங்க + சொல் + அணி]

**சுருங்கச்சொல்லல்** *šuruṅga-c-collal*, பெ. (n.) நூலழகு பத்தனுள் விரிவின்றிச் சுருக்கமாகக் கூறுகை (நன்13); brevity, terseness of expression one of ten literary - beauty (nul-alagu).

[சுருங்கு → சுருங்க + சொல்லல்]

**சுருங்கண்** *šuruṅgaṇ*, பெ. (n.) புண்ணாகி நாளுக்கு நாள் கண்சுருங்கும் ஒருவகைக் கண்ணோய்; an eye disease (சா.அக.).

[சுருங்கு + கண் - சுருங்குகண் → சுருங்கண்]

**சுருங்கம்** *šuruṅgam*, பெ. (n.) பீச்சுங்குழல்; an instrument expelling the fluid contained in it with some force, syringe (சா. அக.).

[சுன் → சுர் → சுரு → சுருங்கு = உட்டுளையுடையது. சுருங்கு + அம்]

**சுருங்கல்[1]** *šuruṅgal*, பெ. (n.) 1. குறைகை; to reducing. 2. பட்டினியாயிருக்கை; starving. 3. திரைவு அதாவது தோல் சுருங்குகை; formation of wrinkles on the body due to old age. 4. ஒடுங்குகை; shrinking. 5. சுருங்கினது; anything shurnk, wrinkled. 6. மடிப்பு; wrinkle, crease. சரீரத்தில் சுருங்கல் விழுந்தது.

[சுருங்கு + அல். 'அல்' தொ.பெ.ஈறு]

**சுருங்கல்**[2] *śuruṅgal,* பெ. (n.) சுருங்கை, 2 பார்க்க; see *śuruṅgai, 2* (வின்.).

*[சுருங்கு → சுருங்கல்]*

**சுருங்கல்**[3] *śuruṅgal,* பெ. (n.) சுருக்கு; பூமாலை வகை; a kind of garland.

*[சுருங்கு → சுருங்கல்]*

**சுருங்கில்** *śuruṅgil,* பெ. (n.) சிறுவீடு; small house. "ஐந்து பூதங்கூடுஞ் சுருங்கிலை" (தாயு. சச்சிதா. 2).

மறுவ. குடிசை, குடி, சிற்றில்

*[சுருங்கு + இல்]*

**சுருங்கு-தல்** *śuruṅgu-,* 5 செ.கு.வி. (v.i.) 1. ஒடுங்குதல்; to shrink; to wrinkle. "வாளரப் பார்த்திறை பைத்துச் சுருங்க" (திருவாச. 6 : 42) 2. சிறுகுதல்; to lessen, dwindle. "சுருங்கு மருங்குல்" (திருக்கோ. 115). 3. சுருக்கமாதல்; to be epitomised, summarised. 4. ஆடை முதலியன சுருக்கங்கொள்ளுதல்; to be puckered, creased. 5. உள்ளடங்குதல்; to close, as flower, umbrella; to be furled, drawn in, as the limbs of tortoise. 6. ஒழுக்கம் முதலியவற்றினின்று தவறுதல்; to fail, as in duty. "சொல்லின பரிசிற் சுருங்கலன்" (பதினொ. திருக்கண்ணப்ப. திருமறம். வரி, 52).

ம. சுருங்குக; க. சுர்கு; தெ. சுருண்கு; து. சுருண்டினி, சுருட்டனி; கோத. சுர்க்; துட. தூட்; கொலா. சுக்; பர். சுர்க்; பட. சுருங்கு

*[சுள் → சுர் → சுரு → சுருங்கு-,]*

**சுருங்குகண்** *śuruṅgu-kaṇ,* பெ. (n.) 1. சுருங்கண் பார்க்க; see *śuruṅgaṇ.* 2. முதுமையில் ஏற்படும் கண் சுருக்கம்; shrunken eye due to old age.

*[சுருங்கு + கண்]*

**சுருங்குசதை** *śuruṅgu-śadai,* பெ. (n.) உடம்புத் துளையை அடைப்பதற்கு ஏதுவான சுற்றிலுமுள்ள சதைகள்; the circular muscles which contract and close the natural apertures orifices- sphincter muscle- constrictor muscle (சா. அக.).

*[சுருங்கு + சதை]*

**சுருங்குதசை** *śuruṅgu-daśai,* பெ. (n.) சுருங்கு சதை பார்க்க; see *śuruṅgu-śadai.*

*[சுருங்கு + தசை]*

**சுருங்கை** *śuruṅgai,* பெ. (n.) 1. நீர் முதலியன செல்லுதற்கு நிலத்துள் கற்களால் கரந்து படுத்தவழி; subterranean passage, underground channel, covered gutter, sewer. "பெருங்குள மருங்கிற் சுருங்கைச் சிறுவழி" (மணிமே. 12, 79). 2. கோட்டையிற் கள்ளவழி (குடா.); secret passage in a fortress. 3. நுழைவாயில் (பிங்.); creep-hole, low entrance to creep through. 4. மாளிகையின் சாளரம்; window-like opening in walls of big buildings. "மாடமேற் சுருங்கையிலிருந்து . . . மாநகரணி பார்த்திடும்" (சீகாளத். பு. நக்கீர. 30).

*[சுருங்கு → சுருங்கை]*

**சுருசி** *śuruśi,* பெ. (n.) நாவல் மரம்; jambu tree.

**சுருசுரு-த்தல்** *śurusuru-,* 4 செ.கு.வி. (v.i.) 1. ஒலித்தல் (தொல். சொல். 48, சேனா); to hiss, as dry combustibles when ignited. 2. ஊக்கமாதல்; to be active.

து. சுருசுரு.

**சுருசுருப்பு** *śuruśuruppu,* பெ. (n.) 1. ஊக்கம் (கொ.வ.); diligence; activity. 2. தளராத விறுவிறுப்பு; brisk activity.

*[சுருசுரு → சுருசுருப்பு]*

**சுருசுரெனல்** *śuruśureṉal,* பெ. (n.) 1. வேகத்தோடு தீப்பற்றுதற் குறிப்பு; expr. signifying rapid burning as of dry combustibles. 2. வலித்தற் குறிப்பு; twitching with pain. 3. உடல் சுடுதற் குறிப்பு; feeling hot in the body. 'உடம்பு சுருசுரென்றிருக்கிறது' (உ.வ.).

*[சுருசுரு + எனல்]*

**சுருட்காய்** *śuruṭ-kāy,* பெ. (n.) சுண்டைக்காய் பார்க்க; see *śuṇḍai-k-kāy.*

*[சுருள் + காய்]*

**சுருட்கொண்டை** *śuruṭ-koṇḍai,* பெ. (n.) மயிர் முடிவகை; hair dressed in a particular way.

*[சுருள் + கொண்டை]*

**சுருட்கொள்(ளு)-தல்** *šuruṭ-koḷ-*,16 செ.கு.வி. (v.i.) *சுருண்டு விழுதல்;* to faint from weakness; to wilt, as vegetation. "சோலையும் வெஞ்சுருட் கொண்டது வெப்பால்" *(திருவாலவா. 37:41).*

*[சுருள் + கொள்-,]*

**சுருட்டல்** *šuruṭṭal*, பெ. (n.) *சுருட்டிக்கொள்ளல் பார்க்க;* see *šuruṭṭi-k-koḷḷal.*

ம. சுருட்டல்

*[சுருட்டு + அல். 'அல்' தொ.பெ.ஈறு]*

**சுருட்டி** *šuruṭṭi*, பெ. (n.) *1. மயிர்ச்சிகைப்பூடு (மலை.);* peacock's crest plant; sickle leaf. *2. எடுபிடி வகை;* an item of royal paraphernahia borne in procession. "சந்திரோதயம் போற் றயங்குஞ் சுருட்டி வர" *(கூளப்ப. 69). 3. மரியாதையாகப் பெரியோர் திருமுன் சுருட்டி வீசப்படும் பாவாடை (இ.வ.);* cloth waved before great persons to serve as fan. *4. பட்டுச் சீலைச்சுருட்டு (சங்.அக.);* roll of silk. *5. ஒருவகைப் பண்;* a kind of tune.

ம. சுருட்டி

*[சுருட்டு → சுருட்டி]*

**சுருட்டிக்காரன்** *šuruṭṭi-k-kāraṉ*, பெ. (n.) *அரசர் முதலியோரது உலாவில் சுருட்டி விருது எடுப்பவன் (T.A.S. 1. 150);* one who carries šuruṭṭi in processions.

*[சுருட்டி + காரன்]*

**சுருட்டிக்கொள்(ளு)-தல்** *šuruṭṭi-k-koḷ(ḷu)-*, 6 செ.குன்றாவி. (v.t.) *தந்திரமாய்க் கைப்பற்றுதல் (வின்.);* to carry off, remove by stratagem.

*[சுருட்டி + கொள்(ளு)-,]*

**சுருட்டிக்கொள்ளல்** *šuruṭṭi-k-koḷḷal*, பெ. (n.) *1. சுருண்டு கொள்ளுகை;* winding into round folds coiling reptiles do. *2. களைப்படைகை;* to be fatigued; lying tired *(சா.அக.).*

*[சுருட்டி + கொள்ளல்]*

**சுருட்டிப்பிடி-த்தல்** *šuruṭṭi-p-piḍi-*, 4 செ.குன்றாவி. (v.t.) *1. வயிற்றில் சுருட்டி வலித்தல்;* twisting and gripping pain as in the bowls. 'வயிறு சுருட்டிப் பிடிக்கிறது' *(உ.வ.).* *2. நோய் முதலியன உடலை மெலிவித்தல்;* to prostrate, reduce to extreme physical weakness, as disease. 'நோய் இவனைச் சுருட்டிப் பிடித்து விட்டது' *(உ.வ.).*

*[சுருட்டி + பிடி-,]*

**சுருட்டிப்பிடி²-த்தல்** *šuruṭṭi-p-piḍi-*, 4 செ.கு.வி. (v.i.) *வலியுண்டாகும்படி பசியால் குடல் சுருட்டப்படுதல்;* to experience wringing sensation, as stomach with excessive hunger.

*[சுருட்டி + பிடி-,]*

**சுருட்டிமடக்கு-தல்** *šuruṭṭi-maḍakku-*, 5 செ.குன்றாவி. (v.t.) *1. சுருட்டிக்கொள்-தல் பார்க்க;* see *šuruṭṭi-k-koḷ-*. *2. சொற்போர் மற்போர் முதலியவற்றில் பிறரைக் கீழ்ப்படுத்துதல்;* to overthrow as in debate, wrestling, etc.

*[சுருட்டி + மடக்கு-,]*

**சுருட்டிமூலி** *šuruṭṭi-mūli*, பெ. (n.) *பொன் முசுட்டை;* Indian pareira gravel plant.

*[சுருட்டி + மூலி]*

**சுருட்டியடி-த்தல்** *šuruṭṭi-y-aḍi-*, 4 செ.குன்றாவி. (v.t.) *1. சுழற்றித்தள்ளுதல்;* to rush on violently, as whirlwind; to rage, as epidemic. *2. சுருட்டி மடக்கு, 2 பார்க்க;* see *šuruṭṭi-maḍakku,2.*

*[சுருள் → சுருட்டு → சுருட்டி + அடி-,]*

**சுருட்டியிழுத்தல்** *šuruṭṭi-y-iḻuttal*, பெ. (n.) *நரம்பிழுப்பு நோய்;* twitching of the nerve.

*[சுருட்டு → சுருட்டி + இழு-,]*

**சுருட்டிவாங்கு¹-தல்** *šuruṭṭi-vāṅgu-*, 5 செ.கு.வி. (v.i.) *1. மூச்சு இழுப்போடு வெளிவருதல்;* to be convulsive; spasmodic, as breathing. 'அவனுக்கு மூச்சு சுருட்டி வாங்குகிறது' *(உ.வ.).*

*[சுருட்டி + வாங்கு-,]*

**சுருட்டிவாங்கு²-தல்** *šuruṭṭi-vāṅgu-*, 5 செ.குன்றாவி. (v.t.) *1. வருத்துதல் (வின்.);* to oppress, to tyrannise over. *2. சுருட்டிப்பிடி (இ.வ.) பார்க்க;* see *šuruṭṭi-p-piḍi-*.

*[சுருட்டி + வாங்கு-,]*

**சுருட்டு[1]-தல்** *šuruṭṭu-,* 5 செ.குன்றாவி. (v.t.) *1.* *சுருளச்செய்தல்;* to roll up, coil, curl. "பைந்நாகப் பாய்சுருட்டிக்கொள்" (குருபரம். 19, ஆறா.). *2.* *கவர்தல், திருடுதல்;* to take away, steal. 'என் பொருட்களைச் சுருட்டப் பார்க்கிறான்'.

ம. சுருட்டு; க. சுருடு, சுருண்டு; தெ. தொரல்சு

*[சுருள் → சுருட்டு]*

**சுருட்டு[2]** *šuruṭṭu,* பெ. (n.) *1.* *சுருட்டுகை;* curling, coiling. *2.* *சுருள்;* anything rolled up. *3.* *புகையிலைச் சுருட்டு;* cheroot, cigarette. *4.* *சுருட்டுப் பட்டு (இ.வ.) பார்க்க;* see *šuruṭṭu-p-paṭṭu.* *5* *தந்திரம் (யாழ்.) சூழ்ச்சி;* shrewdness, cunning.

ம. சுருட்டு; தெ. சுட்டலு

*[சுருள் → சுருட்டு]*

**சுருட்டுக்கிடங்கு** *šuruṭṭu-k-kiḍaṅgu,* பெ. (n.) *புகைச்சுருட்டு செய்யும் தொழிற்சாலை. (உ.வ.);* cigar factory.

*[சுருட்டு + கிடங்கு]*

**சுருட்டுக்குடி-த்தல்** *šuruṭṭu-k-kuḍi-,* 4 செ.கு.வி. (v.i.) *சுருட்டுப்புகையை உட்கொண்டு வெளியிடல் (உ.வ.);* to smoke cigar, cigarette, etc.

*[சுருட்டு + குடி-,]*

**சுருட்டுக்கொழுக்கட்டை** *šuruṭṭu-k-koḻu-k-kaṭṭai,* பெ. (n.) ஒருவகைக் கொழுக்கட்டைப் பணியாரம் *(யாழ்.);* a kind of pastry.

*[சுருட்டு + கொழுக்கட்டை]*

**சுருட்டுப்பட்டு** *šuruṭṭu-p-paṭṭu,* பெ. (n.) உயர்ந்த வகைப்பட்டு *(உ.வ.);* a kind of superior silk.

*[சுருட்டு + பட்டு]*

**சுருட்டுப்பாசி** *šuruṭṭu-p-pāši,* பெ. (n.) *கடற்பாசி;* sea moss.

*[சுருட்டு + பாசி]*

**சுருட்டுவாதம்** *šuruṭṭu-vādam,* பெ. (n.) கை கால்களை முடக்கும் ஒருவகை முடக்குநோய்; a chronic inflammation of the joints of arms and legs with deformity.

*[சுருட்டு + வாதம்]*

Skt. vāta → த. வாதம்.

**சுருட்டுவாள்** *šuruṭṭu-vāḷ,* பெ. (n.) *சுருளும் வாள் வகை (சங்.அக.);* a kind of sword with rollable blade.

*[சுருட்டு + வாள்]*

**சுருட்டை** *šuruṭṭai,* பெ. (n.) *1.* *சுருண்டமுடி;* curly hair. *2.* *சுருட்டை மயிருள்ள பிள்ளை;* curly haired boy or girl. *3.* *மிளகாய்ச்செடிக்கு வரும் இலை சுருண்டு கொள்ளும் நோய்;* a disease attacking the chilly plant, mainly in leaves.

ம. சுருட்ட

*[சுள் → (சுரு) → சுருள் = சுருண்ட பொருள். சுருள் → சுருட்டு → சுருட்டை]*

**சுருட்டைக்கழலை** *šuruṭṭai-k-kaḻalai,* பெ. (n.) *சுருட்டிக் கொண்டிருப்பதைப் போலக் காணப்படும் ஒருவகைக் கழலை;* skin tumour having the look of coil of intestine.

*[சுருட்டை + கழலை]*

**சுருட்டைத்தலை** *šuruṭṭai-t-talai,* பெ. (n.) *சுருள்சுருளாகத் தலைமுடியுள்ள தலை;* head having curly hair.

*[சுருட்டை + தலை]*

**சுருட்டைநரம்பு** *šuruṭṭai-narambu,* பெ. (n.) *முடிச்சுகள் போலக் காணப்படும் கருநிற அரத்த நாளங்கள் தளர்ந்து சுருண்டு கிடக்கும் நோய் வகை;* enlarged veins appearing like knots; varicore veins *(சா.அக.).*

*[சுருட்டை + நரம்பு]*

**சுருட்டைப்பாம்பு** *šuruṭṭai-p-pāmbu,* பெ. (n.) *ஒருவகை நச்சுப்பாம்பு (வின்.);* a kind of venomous snake.

ம. சுருட்டப்பாம்பு

*[சுருட்டை + பாம்பு]*

**சுருட்டைமயிர்** *šuruṭṭai-mayir,* பெ. (n.) *சுருள்முடி;* curly hair.

மறுவ. அலைமுடி, சுருட்டை முடி, சுருட்டை

*[சுருட்டை + மயிர்]*

**சுருட்டையட்டை** *šuruṭṭai-y-aṭṭai,* பெ. (n.) *தொட்டால் சுருட்டிக்கொள்ளுவதும்*

அரத்தம் உறிஞ்சுவதுமாகிய ஒருவகை அட்டை; a leech which curls when touched.

[சுருட்டை + அட்டை]

**சுருட்டைவிரியன்** *šuruttai-viriyan,* பெ. (n.) விரியன் பாம்புவகை (M.M.); carpet snake.

[சுருட்டை + விரியன்]

இது சிறியதாயும் புகர் (கபில) நிறமாயும், ஓரத்தில் கருப்பாயுள்ள வெண்புள்ளிகளை உடையதாயுமிருக்கும். சீறிப்பாயும் குண முடையது. விரியன் பாம்புகளில் மிகவும் கொடிய நஞ்சுண்டு.

சுருட்டைப் பாம்பு வகைகள்

1. இரத்தச்சுருட்டை
2. அரணைவாற்சுருட்டை
3. நெடுஞ்சுருட்டை
4. செஞ்சுருட்டை
5. குறுஞ்சுருட்டை
6. ஊதுசுருட்டை
7. விரல (அங்குல)ச்சுருட்டை

**சுருட்பட்டை** *šurut-pattai,* பெ. (n.) பப்பிளி (L.); red creeper.

தெ. சுருகுதுப்பட்ட

[சுருள் + பட்டை]

**சுருட்பள்ளம்** *šurut-pallam,* பெ. (n.) காதின் மேல் வளைவின் பள்ளம்; the margin of the pinna of the ear; helix.

[சுருள் + பள்ளம்]

**சுருண்டுபோ-தல்** *šurundu-pō-,* 8 செ.கு.வி. (v.i.) 1. சோர்வடைதல்; to get exhausted. 2. வலிமை குன்றல்; to become weak. 3. ஒடுங்குதல்; a state of extreme prostration and depression. தோல்வி, இந்திய அணியின் பந்து வீச்சுத் தாளாமல் இலங்கை அணி சுருண்டு போனது. 4. வாடியொடுங்குதல்; to droop, as under scorching sun; to be weakened, as by disease. 5. இறத்தல்; to die.

[சுருள் → சுருண் → சுருண்டு + போ-,]

**சுருண்டுவிழல்** *šurundu-vilal,* தொ.பெ. (vbl.) மெலிவினால் மயங்கி விழுகை; drooping down from fatigue.

[சுருண்டு + விழல். 'அல்' தொ.பெ.ஈறு]

**சுருண்டைக்காய்** *šurundai-k-kāy,* பெ. (n.) சுண்டைக்காய் பார்க்க; see *šundai-k-kāy.*

[சுருண்டை + காய்]

**சுருணி** *šuruni,* பெ. (n.) 1. தொழுகண்ணி; unidentified plant. 2. யானைத்தோட்டி (சங்.அக.); clephant goad (செ.அக.).

**சுருணை** *šurunai,* பெ. (n.) 1. சுருட்டி வைத்த பொருள்; anything rolled up. 'இலைச் சுருணை' (நெல்லை.). 2. கணக்கு எழுதப்பட்ட ஓலைச் சுருள் (திவ். பெரியாழ். 5, 2, 2, வியா.); roll of ōla accounts. 3. சாணிச் சுருணை; rags for mopping the floor, especially with cow-dung mixture. 4. தீப்பற்றுதற்குரிய பந்தம்; ball of cloth twisted in torch for lighting. "நெருப்பானது சுருணையை வேவப்பண்ணி" (ஈடு. 5, 4, 6). 5. பூண்; ferrule, metallic cap. "கனையிருஞ் சுருணைக் கனிகாழ் நெடுவேல்" (அகநா. 113). 6. கட்டட வளைவு வகை (வின்.); a kind of curve in architecture.

[சுருள் → சுருன் → சுருணை]

**சுருணைகட்டு-தல்** *šurunai-kattu-,* 5 செ.குன்றாவி. (v.t.) நெல்விதையைக் கோட்டையாகக் கட்டி வைத்தல் (இ.வ.); to store in straw bundles, as paddy seeds.

[சுருணை + கட்டு-,]

**சுருணைவெள்ளை** *šurunai-vellai,* பெ. (n.) புன்செய்யில் பயிராகும் நெல்வகை; a kind of paddy raised on dry land.

[சுருணை + வெள்ளை]

**சுருபவேர்** *šurubavēr,* பெ. (n.) அந்திமல்லிகை; a flower which blossoms in the evening twilight (சா.அக.).

மறுவ. அந்தி மந்தாரை, அந்திப்பூ

**சுரும்பர்** *šurumbar,* பெ. (n.) 1. வண்டு, சுரும்பு (சூடா.); bee. 2. ஆண் வண்டு; male bee, drone.

[சுரும்பு → சுரும்பர்]

**சுரும்பாநோய்** *šurumbānōy,* பெ. (n.) மூளைக்கோளாறினால் அடிக்கடி முறுக்குக் கொட்டாவி விடும் நோய்; the act of stretching and yawning frequently by the disorder in the cerebral system (சா.அக.).

[சுரும்பா + நோய்]

**சுரும்பாயன்** *śurumbāyaṉ,* பெ. (n.) சுரும்பாவன் (சங்.அக.) பார்க்க; see *śurumbāvaṉ.*

**சுரும்பாவன்** *śurumbāvaṉ,* பெ. (n.) வண்டாகிய வின்னாணை உடைய காமன் (யாழ்.அக.); Kāma, the Hindu Cupid, as having bees for his bow-sting.

மறுவ. மதன், மாறன்

*[சுரும்பு → சுரும்பாவன்]*

**சுரும்பி-த்தல்** *śurumbi-,* 4 செ.கு.வி. (v.i.) ஒலித்தல்; to hum, as bees. "சுரும்பித்த வண்டினங்கள்" (தேவா. 969, 4).

*[சுரு → சுரும்பி-,]*

**சுரும்பு**[1] *śurumbu,* பெ. (n.) 1. வண்டு; bee. "சுரும்பு மூசாச் சுடர்ப்பூங்காந்தள்" (திருமுரு. 43). 2. ஆண் வண்டு (திவா.); male bee, drone. 3. மலை (சூடா.); mountain. "சுரும்பறை மணித்தோள்" (மணிமே. 20:107).

*[சுரு → சுரும்பி → சுரும்பு]*

**சுரும்பு**[2] *śurumbu,* பெ. (n.) 1. சுதும்பு பார்க்க; see *śudumbu.* 2. மலைவண்டு; mountain beetle (சா.அக.).

*[சுதும்பு → சுரும்பு]*

**சுருமா** *śurumā,* பெ. (n.) ஈயத்தைப்போல் சாம்பல்நிறமாய் இருக்கும் கருநிமிளை; native sulphide of antimony (சா.அக.).

மறுவ. சுக்கான்கல், சுருமாக்கல்

Persn. surmā

**சுருமாரம்** *śurumāram,* பெ. (n.) சாரணை; purslane-leaved trianthema (சா.அக.).

**சுருமாலாடு** *śurumā-lāḍu,* பெ. (n.) ஒருவகைப் பணியாரம் (இந்து பாக. 379); a confection ball.

மறுவ. சுருமாலட்டு

**சுருவம்**[1] *śuruvam,* பெ. (n.) 1. வேள்விகளில் பயன்படுத்தும் நெய்த் துடுப்பு; a ladle used to pour clarified butter in sacrificial fire. "சீரைச் சுருக்குச் சுருவமெலாம்" (உத்தரரா. அனுமப். 41). 2. ஒருவகை அகப்பை (அக.நி.); a kind of ladle.

**சுருவம்**[2] *śuruvam,* பெ. (n.) வடிவம்; image. "நரசிங்கமெனுஞ் சுருவத்தொடு" (பிரபோத. 19:16).

*[உருவம் → சுருவம்]*

**சுருவவாசனி** *śuruvavāsaṉi,* பெ. (n.) கற்றாழை; aloes (சா.அக.).

**சுருவை** *śuruvai,* பெ. (n.) சுருவம்,1 பார்க்க; see *śuruvam,1.* "அந்தணாளர்க்குச் சுருவையும் சமிதை குறைக்குங் கருவியு முதலாயின" (தொல். பொருள். 629, உரை).

*[சுருவம் → சுருவை]*

**சுருள்**[1]**(ளு)-தல்** *śuruḷ-,* 16 செ.கு.வி. (v.i.) 1. சுருளாதல்; to become coiled; to roll; to curl, as hair. "நீண்டு குழன்று . . . கடைசுருண்டு" (கம்பரா. உருக்காட்டு. 57). 2. சுருங்குதல்; to shrivel, shrink, as leaf. 3. சோர்தல்; to droop, as from heat, hunger. 4. துன்பத்திற்குள்ளாதல்; to be reduced to severe straits.

*[சுள் → (சுரு) → சுருள் (மு.தா. 247)]*

**சுருள்**[2] *śuruḷ,* பெ. (n.) 1. சுருட்டை; curl; coil. 2. தாமரை உட்சுருள்; the inner fold of the young lotus flower. "தாமரை மென் சுருள்" (சூளா. நாட்டுப் 18). 3. சுருள்பட்டை பார்க்க; see *śuruḷ-paṭṭai.* 4. பெண்மயிர்; ஐம்பான் முடிகளுள் ஒன்று; கூந்தல், அளகம்; female hair curled and tied up.

*[சுள் → (சுரு) → சுருள்]*

**சுருள்**[2] *śuruḷ,* பெ. (n.) 1. சுருளுகை; rolling. 2. சுருண்ட பொருள்; roll, scroll, curl. 3. கட்டு; bundle, as of leaves. 'இலைச் சுருள்' (உ.வ.) 4. ஓலைச்சுருளின் மடிப்பு; fold of an ōlā roll. "சுருள்பெறு மடியை நீக்கி" (பெரியபு. தடுத்தாட். 58). 5. மகளிர் காதணி வகை; women's ear ornament. "செம்பொன் செய் சுருளுந் தெய்வக் குழைகளும்" (கம்பரா. பூக்கொய். 5). 6. வெற்றிலைச் சுருள்; roll of betel leaves. "சுருளைச் சேடியர் செப்பொடு மேந்த" (சீவக. 197, உரை). 7. திருமணத்தில் மணமக்களுக்கு வெற்றிலைத் தட்டுடன் கொடுக்கும் பரிசு (இ.வ.); presents with betel given to bride and bride-groom.

க. சுருளி; ம. சுருள்; து. சுருள்

*[சுரு → சுருள்]*

**சுருள்கல்** *šuruḷ-kal,* பெ. (n.) ஒருவகைக் கல்; ring stone.

*[சுருள் + கல்]*

**சுருள்தங்கம்** *šuruḷ-taṅgam,* பெ. (n.) இழைப்பிற் குதவும் மெல்லிய தங்கத் தகடு (உ.வ.); gold leaves.

*[சுருள் + தங்கம்]*

**சுருள்தேவதாரு** *šuruḷ-dēvadāru,* பெ. (n.) சீமைச் செம்மரம்; long-leaved pine.

*[சுருள் + தேவதாரு]*

**சுருள்நாரி** *šuruḷ-nāri,* பெ. (n.) மலையில் வளர்வதும், காயகற்பத்திற்கேற்றதுமான மயிர்மரம் என்னும் பெருமூலிகைகள் இருபத்து மூன்றில் ஒன்று; an unknown tree said to be rarely found on mountain tops, as one of the twenty three all healing drugs of high potency, capable of rejuvenating the system (சா.அக.).

*[சுருள் + நாரி]*

**சுருள்பட்டை** *šuruḷ-paṭṭai,* பெ. (n.) சாயப் பட்டை; dye root of red creeper bark or felse, peacock's foot tree (சா.அக.).

மறுவ. வேட்பாடம் பட்டை, செங்கத்தாரிப் பட்டைக்கொடி

*[சுருள் + பட்டை]*

சுருட்டுப்பட்டை பார்க்க

**சுருள்பட்டைக்கொடி** *šuruḷ-paṭṭai-k-koḍi,* பெ. (n.) சுருள்பட்டை பார்க்க; see *šuruḷ-paṭṭai* (சா.அக.).

*[சுருள் + பட்டை + கொடி]*

**சுருள்பலகாரம்** *šuruḷ-palakāram,* பெ. (n.) சிப்புப்பணியாரம்; a kind of pastry.

*[சுருள் + பலகாரம்]*

**சுருள்பாக்கு** *šuruḷ-pākku,* பெ. (n.) கொட்டைப் பாக்கிலிருந்து எந்திரத்தால் சீவப்பட்ட சுருள் வடிவச் சீவல்; curled shavings of areca-nut.

*[சுருள் + பாக்கு]*

**சுருள்பீலி** *šuruḷ-pīli,* பெ. (n.) மகளிர் தம் காலின் மூன்றாம் விரலில் அணியும் ஆழி; ring worn by women on the third toe.

மறுவ. மிஞ்சி

*[சுருள் + பீலி]*

**சுருள்பூச்சி** *šuruḷ-pūcci,* பெ. (n.) நிலக்கடலைச் செடியை அரித்துக் கெடுக்கும் இலைப் பூச்சி வகை; insect which blights groundnut plant.

*[சுருள் + பூச்சி]*

**சுருள்வை-த்தல்** *šuruḷ-vai-,* 4 செ.கு.வி. (v.i.) மணமக்களுக்கு வெற்றிலைப் பாக்குடன் பரிசுப் பொருள் அளித்தல் (இ.வ.); to offer presents with betel to bride and bridegroom.

*[சுருள் + வை-,]*

**சுருளட்டை** *šuruḷ-aṭṭai,* பெ. (n.) சுருண்டு கொள்ளும் ஒருவகை அட்டைப்பூச்சி; a leech capable of coiling round.

*[சுருள் + அட்டை]*

**சுருளமுது** *šuruḷ-amudu,* பெ. (n.) வெற்றிலைப் பாக்கு; betel and areca-nut, a term of respectful offering. "சுருளமுது முதலானதும்" (கோயிலொ. 62).

*[சுருள் + அமுது]*

**சுருளல்** *šuruḷal,* பெ. (n.) மயிர் முதலியவற்றின் சுருள் (வின்.); ringlet, coil.

*[சுருள் → சுருளல்]*

**சுருளவதக்கல்** *šuruḷa-vada-k-kal,* பெ. (n.) பச்சிலையைச் சுருங்கும்படி வாட்டல்; roasting leaves for medicinal purposes till they are completely shrunk (சா.அக.).

*[சுருள் → சுருள + வதக்கல்]*

**சுருளவாட்டு-தல்** *šuruḷa-vāṭṭu-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. வருந்தவேலை வாங்குதல்; to exact hard work from. 2. சுருட்டிப்பிடி- பார்க்க; see *šuruṭṭi-p-piḍi-.*

*[சுருள் → சுருள + வாட்டு-,]*

**சுருளி** *šuruḷi,* பெ. (n.) 1. தலைச்சுருளி; Indian birth wort. 2. தொழுகண்ணி (சங்.அக.); telegraph plant. 3. சந்தனவேம்பு; sandal neem.

4. சாவக நாட்டுப் பூமரம்; Java flower tree (சா.அக.).

[சுருள் → சுருளி]

**சுருளிமாமுனி** *šuruḷi-māmuṉi,* பெ. (n.) செடிவகை, குறிஞ்சிப்பூடு; wing stemmed cone head (சா.அக.).

[சுருளி + மாமுனி]

**சுருளுப்பட்டை** *šuruḷu-p-paṭṭai,* பெ. (n.) செங்கத்தாரிப்பட்டை; bark of the false peacock's foot tree.

மறுவ. வெம்பாடம்பட்டை, வேட்பாடம் பட்டை, சாயப்பட்டை

[சுருள் → சுருளு + பட்டை]

**சுருளுப்பூலா** *šuruḷu-p-pūlā,* பெ. (n.) நச்சுப் பூலா என்னும் மூலிகை; poisonous poolah (சா.அக.).

[சுருள் → சுருளு + பூலா]

**சுருளெடு-த்தல்** *šuruḷ-eḍu-,* 4 செ.கு.வி. (v.i.) மணமக்கள் பரிசுப்பொருளை ஏற்றுக் கொள்ளுதல்; to accept presents given on one's marriage occasion.

[சுருள் + எடு-,]

**சுருளை** *šuruḷai,* பெ. (n.) 1. சுருள்; coil, roll. 2. குருத்து; tender shoot. "வாழையுள்ளெழு சுருளை வாங்கி" (சூளா. சுயம். 87). 3. காதணி வகை; an ear ornament. "செம்பொன் செய் சுருளை மின்ன" (சூளா. சுயம். 79).

க. சுருளை

[சுருள் → சுருளை]

**சுரே** *šurē,* பெ. (n.) கொத்தான்; green thread creeper.

மறுவ. முடக்கொற்றான்; முடக்கறுத்தான்

**சுரை**[1] *šurai,* பெ. (n.) 1. சுரக்கை; streaming, flowing, as of milk. "கடுஞ்சுரை நல்லான்" (குறுந்.132). 2. பெற்றம் முதலியவற்றின் மடி; udder, teat of cow and other animals. "வருடை மான்மறி சுரைபொழி தீம்பால்" (குறுந். 187). 3. கறவை ஆன் (திவா.); milch cow. "சுரைமலி யமிர் தீம்பால்" (சூளா. தூது. 90). 4. ஒருவகைக் கொடி; calabash, climber. "சுரைவித்துப் போலுந்தம் பல்" (நாலடி. 315).

ம. சுர; க. சொரெ

[சுர → சுரை]

**சுரை**[2] *šurai,* பெ. (n.) 1. கள் (திவா.); toddy. "புரையுற்றிடு சுரையூன் றுய்யுற்றவள்" (கந்தபு. அசமுகிப். 7). 2. தேன்; honey. "வாவிக் கமலச் சுரைதேக்கி" (கம்பரந். 72).

[சுர → சுரை]

**சுரை**[3] *šurai,* பெ. (n.) 1. குழிந்த இடம்; hollowness, hollow interior of a vessel. "பாத்திரத் தகன்சுரைப் பெய்த வாருயிர் மருந்து" (மணிமே. 11:117). 2. உட்டுளை (பிங்.); tubularity, cavity. 3. மூங்கிற்குழாய்; bamboo tube. "அகன்சு லஞ்சுரைப் பெய்த வல்சியர்" (அகநா. 113). 4. திரிக்குழாய்; a kind of oil-can. "சொரிசுரைக வருநெய்" (பதிற்றுப். 47). 5. திருகாணியைச் செலுத்தும் சிறுகுழாய்; female screw. 6. மூட்டுவாய்; joint. "சுரையம்பு மூழ்க" (கலித். 6). 7. அம்புத்தலை. (அக.நி.); head of an arrow. 8. பூண்; ferrule. "செறிசுரை வெள்வேல்" (அகநா. 216). 9. கூரான கடப்பாரை வகை; a kind of sharp crow - bar. "உளிவாய்ச் சுரையின் மிளிர மிண்டி" (பெரும் பாண். 92).

[சுர → சுரை]

**சுரை**[4] *šurai,* பெ. (n.) சுரைக்கொடி பார்க்க; see *šurai-k-koḍi* (சா.அக.).

சுரைவகைகள்:

| | |
|---|---|
| 1. கற்சுரை | 6. காட்டுச்சுரை |
| 2. பேய்ச்சுரை | 7. கும்பச்சுரை |
| 3. காய்ச்சுரை | 8. கருஞ்சுரை |
| 4. கறிச்சுரை | 9. கின்னரச்சுரை |
| 5. காட்டுக்காய்ச்சுரை | 10. பாத்திரச்சுரை. |



**சுரைக்கந்தகம்** *śurai-k-kandagam*, பெ. (n.) ஒரு வைப்புச்சரக்கு, நாற்றமில்லாத கந்தகம், நெருப்பிற்கு இளகி ஒடாத தன்மையுடையது; brim stone in round pieces or sticks, prepared sulphur, which is odourless and not melting or affected by fire (சா.அக.).

*[சுரை + கந்தகம்]*

**சுரைக்கந்தி** *śurai-k-kandi*, பெ. (n.) 1. சுரைக் கந்தகம் பார்க்க; see *śurai-k-kandagam*. 2. வாணகந்தி; sulphur used in fire works. 3. மச்சமுனி 800இல் கூறியபடியான துருசு, நாகம், இரசம், வீரம், இலிங்கம், மனோசிலை, அரிதாரம், சத்திசாரம் ஆகியவற்றினாலாகிய மருந்துப் பொடி; it is a kind of prepared sulphur copper sulphate, zinc, mercury, corosire sublimate, cinnabar, red orpiment, yellow orpiment and sathi sarnam powdered and burnt,as told by Matcha muni 800. The resultant is surai-k-kendi (சா.அக.).

*[சுரை + கந்தி]*

**சுரைக்கரந்தை** *śurai-k-karandai*, பெ. (n.) கரந்தைவகை (வின்.); fever basil.

மறுவ. சுரக்கரந்தை

*[சுரை + கரந்தை]*

**சுரைக்கருவி** *śurai-k-karuvi*, பெ. (n.) நெஞ்சாங்குலை; the heart.

*[சுரை + கருவி]*

**சுரைக்காய்** *śurai-k-kāy*, பெ. (n.) வயிற்று வலியை ஆற்றுவதும், நுண்ணுயிரிகளை அழிப்பதும், உருண்டையான தடித்த அடிப் பகுதியையும் சிறுத்த மேற்பகுதியையும் உடைய வெளிர்பச்சை நிறக்காய்; fruit of bottle gourd which reduces the stomach pain, kills germs.

*[சுரை + காய்]*

**சுரைக்காய்க்கந்தகம்** *śuraikkāy-k-kandagam*, பெ. (n.) சுரைக்கந்தகம் பார்க்க; see *śurai-k-kandagam*.

**சுரைக்காய்முலை** *śuruaikkāy-mulai*, பெ. (n.) தளர்ந்தமுலை; a loose breast (சா.அக.).

*[சுரை + காய் + முலை]*

**சுரைக்குடம்** *śurai-k-kuḍam*, பெ. (n.) சுரைக் காயால் அமைந்த குடம்; a pitcher - like vessel made of the shell of bottle-gourd. "சுரைக்குட மெடுத்து ... தெளிபுன லுண்டும்" (கல்லா.12).

*[சுரை + குடம்]*

**சுரைக்குடுக்கை** *śurai-k-kuḍukkai*, பெ. (n.) சுரைக்காய் ஒட்டுக்குப்பி; bowl made of the shell of bottle-gourd.

*[சுரை + குடுக்கை]*

**சுரைக்குடுக்கைக்கின்னரம்** *śurai-k-kuḍukkai-k-kinnaram*, பெ. (n.) சுரைக்குடுக்கையால் அமைந்த, வாச்சிய வகை (வின்.); lute with calabash of bottle-gourd shell.

*[சுரை + குடுக்கை + கின்னரம்]*

**சுரைக்குழல்** *śurai-k-kulal*, பெ. (n.) சிறுநீர்க் குழல்; the coiled corticle portion of the urinary tube - spiral tubule (சா.அக.).

*[சுரை + குழல்]*

**சுரைக்கெந்தி** *śurai-k-kendi*, பெ. (n.) வாண கெந்தி; sulphur used in fire works (சா.அக.).

*[சுரை + கெந்தி]*

**சுரைக்கொடி** *śurai-k-koḍi*, பெ. (n.) குடுவை வடிவத்தில் காய் தரும் ஒருவகைப் படரும் கொடி; bottle-gourd climber.

*[சுரை + கொடி]*

**சுரைச்செப்பு** *śurai-c-ceppu*, பெ. (n.) சுரைக் குடுக்கை பார்க்க; see *śurai-k-kuḍukkai*.

*[சுரை + செப்பு]*

**சுரைபவனி** *śurai-bavaṇi*, பெ. (n.) கள்; toddy.

*[சுரை + பவனி]*

**சுரைப்பரணி** *śurai-p-paraṇi*, பெ. (n.) சுரையிலை; leaf of bottle gourd creeper (சா.அக.).

*[சுரை + பரணி]*

**சுரைப்பழம்** *śurai-p-palam*, பெ. (n.) 1. பழுத்த சுரைக்காய்; riped fruit of bottle gourd. 2. பயனற்றவன்; worthless person. 'தம்பி சுரைப்பழம்' (வின்.).

*[சுரை + பழம்]*

**சுரையிலந்தை** *šurai-y-ilandai,* பெ. (n.) ஒருவகை யிலந்தைப் பழம்; gourd jujube (சா.அக.).

*[சுரை + இலந்தை]*

**சுரையிலை** *šurai-y-ilai,* பெ. (n.) கீரையாக உண்ணப்படுவதும், உடம்புவீக்கம், முக்குற்றம் போக்குவதும், மலத்தை இளக்குவதும் சிறுநீர்ப்பெருக்கியுமான சுரையின் இலை; bottle gourd leaf useful in cases of anemia, swelling due to dropsy derangement of the three humours in the system which is used as laxative and digestive (சா.அக.).

*[சுரை + இலை]*

**சுரையிலைச்சுவரம்** *šurai-y-ilai-c-cuvaram,* பெ. (n.) 1. சூரல் இனச் சிறுமர வகை; spleen tree. 2. செம்மரம்; red tree (சா.அக.).

*[சுரையிலை + சுவரம்]*

**சுரைவிளக்கு** *šurai-viḷakku,* பெ. (n.) மருந்தெரிக்கப் பயன்படும் விளக்கு; lamp used for heating medicine (சா.அக.).

*[சுரை + விளக்கு]*

**சுல்லம்** *šullam,* பெ. (n.) செம்பு (மலை.); copper. "சுல்வதீதா லமைத்த நெடுங்களத்தின்" (சேதுபு.தனுக்கோ. 9).

*[சுல் → சுல்லு → சுல்லம்]*

**சுல்லி** *šulli,* பெ. (n.) 1. அடுப்பு (திவா.); oven. "சுல்லி யுரலுலக்கை" (சைவச.பொது.266). 2.மடைப்பள்ளி (இலக்.அக.); kitchen.

*[சுல் → சுல்லி]*

**சுல்லு** *šullu,* பெ. (n.) வெள்ளி (சூடா.); silver.

*[சுல் → சுல்லு]*

**சுல்வம்** *šulvam,* பெ. (n.) சுல்லம் பார்க்க; see *šullam.* "சுல்வதீதா லமைத்த நெடுங்களத்தின்" (சேதுபு.தனுக்கோ. 9)

*[சுல் → சுல்லு → சுல்வம்]*

**சுலவடை** *šulavaḍai,* பெ. (n.) சொலவடை; பழமொழி; proverb.

*[சுலவம் + அடை]*

**சுலவம்** *šulavam,* பெ. (n.) சொலவம் பார்க்க; see *šolavam.*

*[சொலவம் → சுலவம்]*

**சுலவு[1]-தல்** *šulavu-,* 5 செ.கு.வி. (v.i.) 1. சுழலுதல்; move round to revolve, hover about. "சுலவுற் றெதிர் போகிய தூவியனம்" (நைட.தஅன்னத்.45).

**சுலவு[2]-தல்** *šulavu-,* 5 செகுன்றாவி. (v.t.) 1. சுழலச் செய்தல் (யாழ்ப்.); to coil round as a cord, to surround. "அரவூறு சுலாய்மலை தேய்க்கும்" (திவ்.திருவாய். 7. 4:2).

*[சுல் → சுலவு-,]*

**சுலாவு[3]-தல்** *šulāvu-,* 5 செ.குன்றாவி. (n.) சுலவு பார்க்க; see *šulavu-.* "விரைகமழ் சோலை சுலாவி யெங்கும்" (தேவா. 418:1).

*[சுலவு → சுலாவு-,]*

**சுலாவு[4]** *šulāvu,* பெ. (n.) காற்று; wind. "சுலாவாகி" (தேவா. 1227, 3).

*[சுலவு → சுலாவு]*

**சுவட்டவர்** *šuvaṭṭavar,* பெ. (n.) காடையைப் பழக்கிப் போர் மூட்டுபவர்; those who train quails to fight. "சொல்லுஞ் சுவட்டவர் சொல்லுக" (பு.வெ. 12, வென்றிப் 9) (செ.அக.).

*[சுவடு → சுவட்டு → சுவட்டவர்]*

**சுவட்டிலக்கம்** *šuvaṭṭilakkam,* பெ. (n.) நெல்லிலக்கம்; table of grain measure.

*[சுவடு[1,7] + இலக்கம்]*

**சுவடன்** *šuvaḍaṉ,* பெ. (n.) சுவைஞன்; person of refined taste. "சுவடர் பூச்சூடும்போது புழுகிலே தோய்த்துச் சூடுமா போலே" (திவ்.திருப்பல். 9 வியா.) (செ.அக.).

*[சுவடு[2] → சுவடன், சுவடு = சுவை]*

**சுவடி[1]** *šuvaḍi,* பெ. (n.) 1. ஏட்டுப் புத்தகம்; ōlai book. "பாட்டுப்புற மெழுதிய கட்டமை சுவடி" (பெருங். மகத. 1:121). மறுவ. ஓலைச்சுவடி. 2. பொத்தகம்; book in general. 3. கோவையாக அமைத்த ஆவணத் தொகுதி; fill bundle, as of records. "எங்கள் ஆவணங்களைச் சேர்த்துச் சுவடியாக வைத்திருக்கிறேன்' (நாஞ்.).

*[சுவடு[1] → சுவடி]*

**சுவடி[2]-த்தல்** *šuvaḍi-*, செ.குன்றாவி. (v.t.) **தின்னுதல்;** to eat, devour. *"கர்க்கடகத்தைச் சுவடிச் சியங்கும் சூனரி" (பதினோ. ஆளு. திருமும். 25).*

*[சவடு → சுவடு → சுவடி-. சவட்டுதல் = மெல்லுதல், விழுங்குதல்]*

**சுவடி[3]-த்தல்** *šuvaḍi-*, 4 செ.குன்றாவி. (v.t.) **ஒப்பனை செய்தல்;** to decorate. "கோயிலில் இப்பொழுது வாகனஞ் சுவடிக்கிறார்கள்" *(நாஞ்.).*

*[சோடி → சுவடி-,]*

**சுவடிசேர்-த்தல்** *šuvaḍi-šēr-*, 4 செ.கு.வி. (v.i.) **பிள்ளைகள் படிக்க ஏடுசேர்த்தல்** (வின்.); to make up an ōla book for a child.

*[சுவடி + சேர்-. சுவடி → எழுது-,]*

**சுவடியெழுது-தல்** *šuvaḍi-y-eḻudu-*, 5 செ.கு.வி. (v.i.) **எழுத்து எழுதப் பழகுதல்;** to practise writing of the alphabet.

*[சுவடி + எழுது-,]*

**சுவடியைக்கட்டு-தல்** *šuvaḍiyai-k-kaṭṭu-*, 5 செ.கு.வி. (v.i.) Lit., to tie-up ōlai books. *(ஏட்டைக் கட்டுதல்). 1.* **படிப்பைநிறுத்துதல்;** to discontinue one's study. *2.* **பேச்சு முதலியவற்றை நிறுத்திவிடுதல்;** to stop. close, as one's argument, action. 'மேல் பேச வேண்டாம், சுவடியைக் கட்டு' *(உ. வ.).*

*[சுவடி + கட்டு-,]*

**சுவடு[1]** *šuvaḍu*, பெ. (n.) *1.* **அடித்தடம்;** track; foot stop. "பூவா ரடிச்சுவடென் றலை மேற் பொறித்தலுமே" *(திருவாச. 11:7). 2.* **அடிச் சுவட்டின் ஒலி; காலடியோசை;** noise caused by foot-fall. "செல்வர் வருகின்ற சுவட்டை யோர்ந்தான் செவிகளால்" *(கம்பரா. மருத்து மலைப். 17). 3.* **ஒன்று பதிதலால் உண்டாகுங் குறி;** impression "கண்கடோய் சுவடு ... தங்குமார் பினனே" *(திருவாச. 29:5). 4.* **அடையாளம்;** sign, indication. 'அன்னமிவை யுள்ள சுவடில்லை' *(கம்பரா. பிலநீங்கு. 40). 5.* **தழும்பு** (பிங்.); scar, cicatrice. *6.* **ஆற்றல்** (தொல். பொருள். 558); strength, power. *7.* **பழக்கம்** (பெருங். உஞ்சைக், 34:79, உரை.); practice, experience. *8.* **வழிவகை;** means, method. "வினவுஞ் சுவடுதனக் கின்மையின்" *(பெருங். உஞ்சைக். 34:79). 9.* **வயிரக்கவசம்** (சூடா.); impenetrable armour. *10.* **சுவட்டிலக்கம்** (சூடா.): table of grain measures. *11.* **360 நெற்கொண்ட அளவு** (நாஞ்.); a unit of grain measure, containing 360 paddy grains. *12.* **கட்டுதற்குக்கருவியான கயிறு முதலியவை** (வின்.); tie; strap, as of harness; band, as of the ridge of a house. *13.* **அடிதாங்கி** (வின்.); stir up.

**சுவடு[2]** *šuvaḍu*, பெ. (n.) **சுவை;** taste, sweetness. *"அடிமையிற் சுவடறிந்த" (ஈடு, 2. 6:5).*

*[சுவை → சுவடு]*

**சுவண்டிலை** *šuvaṇḍilai*, பெ. (n.) **திருகோண மலைச் செம்மரம்;** Tirukkoṇamalai red wood.

மறுவ. சவண்டிலை, சவண்டலை

*[சுவண்டு + இலை]*

**சுவண்டு** *šuvaṇḍu*, பெ. (n.) **பொருத்தம்;** propriety; fitness "பேய்கள்சூழ நடமாடிச் சுந்தரராய்த் தூமதியஞ் சூடுவது சுவண்டே" *(தேவா. 677. 4).*

*[சுவடு[2] → சுவண்டு]*

**சுவண்டை** *šuvaṇḍai*, பெ. (n.) **இன்சுவை;** taste. 'சுவண்டையாய்த் தின்னத் திரிகிறான்' *(உ.வ.).*

*[சுவண் → சுவண்டு → சுவண்டை (வ.வ.)]*

**சுவணம்[2]** *šuvaṇam*, பெ. (n.) *1.* **ஒருபறவை;** a bird. *2.* **கருடன்** (சங்.அக.). *3.* **கழுகு** (யாழ்.); eagle.

*"கலுழனும், கழுகும் உயரப் பறக்கும் பருந்தினத்தைச் சேர்ந்தனவாகலின் அப்பெயர் பெற்றன". "உயரவுயரப் பறந்தாலும் ஊர்க்குருவி பருந்தாகுமா?' என்னும் பழமொழியை நோக்குக.*

*உவணன் = கலுழன் (திவா.)*

*[உவணம் → சுவணம்]*

*ஒ.நோ. உதை → சுதை. உருள் → சுருள். உழல் → சுழல்*

*வடவர் சுவணம் என்பதை, ஸுபர்ண என்று திரித்தும், ஸு+பர்ண என்று பிரித்தும் அழகிய இலை, அழகிய இலையுடையது, இலைபோன்ற அழகிய சிறகுகளை உடையது, பெரும்பறவை, கலுழன் என்று பொருள் விரித்தும், தம் ஏமாற்றுத்திறத்தின் பேரெல்லையைக் காட்டியுள்ளனர்.*

*ஸு = நல்ல, பர்ண = இலை (வ.வ)]*

**சுவத்துமுள்ளங்கி** *šuvattu-mullangi,* பெ. (n.) சுவர்முள்ளங்கி பார்க்க; see *šuvar-mullangi.*

*[சுவர் + முள்ளங்கி]*

**சுவர்** *šuvar,* பெ. (n.) 1. மேற்கூரையைத் தாங்கி நிற்பதற்கோ, காப்பு ஏற்படுத்துவதற்கோ, அறைகள் ஆக்குவதற்கோ கருங்கல், செங்கல், மண் போன்றவற்றால் எழுப்பப்படும் தடுப்பு; wall. "மரத்தினுஞ் சுவரினுங் கண்ணிய தெய்வம்" (மணிமே. 21:125). 2. தேரின் ஒருறுப்பு; fence round the seat of war-chariot. "நெரிந்தன தடஞ்சுவர்" (கம்பரா. சம்புமாலி. 27).

ம. சுமர், சுவர், சுமரு; பழங். க. சேர்; துட. சோவ்; குட. கெவன்; H., U. divar; Heb: shur; Pers: dīvār.

*[உல் → உலவு → உலாவு. உலாவுதல் = சூழ்தல். உல் → சல் → சுற்று → சுற்றம். சுற்றுதல் = சூழ்தல். சுல் → சுள் → சூழ். சூழ்தல் = நாற்புறமும் வளைதல். சுல் → சுவல் → சுவர் = சூழநிற்றல், மறைப்பை ஏற்படுத்தும் தடுப்பு]*

**சுவர்க்கடிகாரம்** *šuvar-k-kadigāram,* பெ. (n.) சுவரில் மாட்டக்கூடிய பெரிய கடிகாரம்; wall clock.

*[சுவர் + (கடிகை + ஆரம்) கடியாரம்]*



சுவர்க்கடிகாரம்

**சுவர்க்கருவிலி** *šuvar-k-karuvili,* பெ. (n.) சுவர்நாகம் (யாழ்ப்.) பார்க்க; see *šuvar-nāgam.*

*[சுவர் + கருவிலி]*

**சுவர்க்காயம்** *šuvar-k-kāyam,* பெ. (n.) உறுப்பு அல்லது உட்கிளையின் சுவர்; walls of an organ or cavity- parietes (சாஅக.).

*[சுவர் + காயம்]*

**சுவர்க்கால்** *šuvar-k-kāl,* பெ. (n.) 1. சுவரடி, அடிச்சுவர்; bottom of the wall. 2. சுவர்மேல் கட்டும் நீர்க்கால் (இவ.); water way on the wall.

*[சுவர் + கால்]*

**சுவர்க்கோழி** *šuvar-k-kōli,* பெ. (n.) 1. சுவர் இடுக்கில் வாழ்வதும் இறக்கைகளை வேகமாக ஒன்றோடொன்று உரசுவதால் ஒருவகை ஒலி எழுப்பக்கூடியதுமான சிறிய பழுப்பு நிறப்பூச்சி; cricket.

மறுவ. உறைவி, (வெண்பழுப்பு நிறமாய் உள்ளது) வெள்ளைப்பாய்ச்சான்; (கரு நிறமாக உடல் வலுப்பெற்றிருப்பது) கரும்பாய்ச்சான், பாய்ச்சல் (தஞ்.)

*[சுவர் + கோழி]*

**சுவர்ச்சாதி** *šuvar-c-cādi,* பெ. (n.) ஒருவகைக் கார உப்பு (சத்தி சாரம்); a kind of acid salt.

*[சுவர் + சாதி]*

**சுவர்தாங்கி** *šuvar-dāngi,* பெ. (n.) அணைசுவர்; buttress.

மறுவ: அணைப்புச் சுவர், தடுப்புச் சுவர்

*[சுவர் + (தாங்கு→) தாங்கி]*

**சுவர்நாகம்** *šuvar-nāgam,* பெ. (n.) நச்சுப்பாம்பு வகை (வின்.); a kind of poisonous snake.

*[சுவர் + நாகம்]*

**சுவர்ப்பலகை** *šuvar-p-palagai,* பெ. (n.) 1. பெட்டியின் சுற்றுப்பலகை (வின்.); upright boards of a box, especially of a wardrobe. 2. எழுதுபலகையாகப் பயன்படுத்தப்படும் சுவர் (இவ.); wall black-board.

*[சுவர் + பலகை]*

**சுவர்மாடம்** *šuvar-mādam,* பெ. (n.) 1. சுவர்ப் புரை (வின்.); niche, vaulted recess in house walls. 2. மாடக்குழி; ஒளி வழிபாட்டிற்காகவும் முன்னோர் வழிபாட்டிற்காகவும் வீட்டுச் சுவரில் அகல்விளக்கு வைப்பதற்கான இடம்; a planed niche on the wall intended to light a small lamp for the sake of light-worship and forefather's-worship.

மறுவ. புரை

*[சுவர் + மாடம்]*



சுவர்மாடம்

**சுவர்முள்ளங்கி** *šuvar-mullangi,* பெ. (n.) *சுவரில் பற்றிப் படரும் ஒருவகைப் பூடு (வின்.);* parasitic plant growing on the walls.

*[சுவர் + முள்ளங்கி]*

**சுவர்மேற்பிதுக்கம்** *šuvar-mēṟ-pitukkam,* பெ. (n.) *சுவரின் எழுதகவகை;* string course (C.E.M.).

*[சுவர் + மேல் + பிதுக்கம்]*

**சுவர்மேற்பூனை** *šuvar-mēṟ-pūṉai,* பெ. (n.) 1. ருமனத்தனாக இருப்பவன்; person sitting on the fence, person of dubious attitude. 2. அதுவோ இதுவோ என்ற ஐயநிலை; uncertain state.

*[சுவர் + மேல் + பூனை]*

**சுவர்வளையன்** *šuvar-vaḷaiyaṉ,* பெ. (n.) சுவர் நாகம் பார்க்க; see *šuvar-nāgam.*

*[சுவர் + வளையன்]*

**சுவர்விரியன்** *šuvar-viriyaṉ,* பெ. (n.) சுவர் நாகம் (வின்.) பார்க்க; see *šuvar-nāgam.*

*[சுவர் + விரியன்]*

**சுவரகழ்கருவி** *šuvar-agaḻ-karuvi,* பெ. (n.) *கன்னக்கோல் (பிங்.);* iron crow-bar used in house breaking.

*[சுவர் + அகழ் + கருவி]*

**சுவரம்** *šuvaram,* பெ. (n.) *காய்ச்சல் (சங்.அக.);* fever (செ.அக.).

ம. சுரம்; தெ. கன்; து., வ.இ.மொ. H., U. jvara

*[சுரம் → சுவரம்]*

**சுவரறை** *šuvar-aṟai,* பெ. (n.) *சுவர்ப்பேழை;* cupboard; shelved recess in wall.

*[சுவர் + அறை]*

**சுவருத்தரம்** *šuvaruttaram,* பெ. (n.) சுவரின் மேல் வைக்கும் உத்தரம் (இ.வ.); wall plate.

*[சுவர் + உத்தரம்]*

**சுவரொட்டி**[1] *šuvaroṭṭi,* பெ. (n.) *1. சுவர்முள்ளங்கி (வின்.) பார்க்க;* see *šuvar-mullangi. 2. சுவரில் மாட்டும் சிறு கைவிளக்கு (இ.வ.);* small wall lamp. *3. காப்பாகச் சுவரில் மாட்டும் ஆட்டீரல் (யாழ்ப்.);* the liver of a sheep stuck to a wall,as a charm. 4. பிறரை ஒட்டியிருக்கும் பண்புடையவன்-ள் (இ.வ.); one who sticks like a burr. *5. ஒற்றுக்கேட்போன் (இ.வ.);* eaves dropper. *6. சுவர்தாங்கி பார்க்க;* see *šuvar-dāngi.*

*[சுவர்' + ஒட்டி]*

**சுவரொட்டி**[2] *šuvar-oṭṭi,* பெ. (n.) பலரும் புரிந்து கொள்ளும் வகையில் பொது இடத்தில் ஒட்டி வைக்கப்படும் அச்சடிக்கப்பட்ட அல்லது எழுதப்பட்ட பெரிய அளவுத்தாள்; wall poster. 'திரைப்படங்களின் வெற்றிக்கு வண்ண வண்ணச் சுவரொட்டிகளும் ஒரு கரணியம்'. *(உ.வ.).*

*[சுவர் + ஒட்டி]*

**சுவல்** *šuval,* பெ. (n.) *1. பிடர் (பிங்.);* nape of the neck. *2. தோட்கட்டு;* upper part of the shoulder. "கூழை சுவன்மிசைத் தாதொடு தாழ" *(கலித். 56)* 3. முதுகு; back. "சுவலோடு வாரலையப் போவார்" *(பெரியபு. திருநாளைப். 18).* 4. குதிரைப் பிடரி; கழுத்துமயிர்; horse's mane. "பன்மயிர்க் கொய்சுவல்" *(கலித். 96).* 5. மேடு (பிங்.); hillock "வேங்கைச் செஞ்சுவல்" *(புறநா. 120).* 6. தொல்லை (அகநி.); trouble, hardship.

ம. சுவல்

**சுவலை** *šuvalai,* பெ. (n.) அரசமரம் (மலை.).

**சுவலொட்டி** *šuvaloṭṭi,* பெ. (n.) சுவரொட்டி[1], 3 பார்க்க; see *šuvar-oṭṭi*[1],3.

*[சுவரொட்டி → சுவலொட்டி]*

**சுவவு** *šuvavu,* பெ. (n.) *1. பறவைமூக்கு;* bird's beak. *2. மூஞ்சூறு;* grey musk - shrew.

**சுவற்று-தல்** *šuvaṟṟu-*, 5 செ.குன்றாவி. (v.t.) 1. வற்றச்செய்தல்; to dry up, absorb, cause to subside. "துயர்க்கடல் சுவற்றினை" (கந்தபு. அக்கினி. 229) 2. முற்றும்அழித்தல்; to extirpate destroy utterly. "வீரஞ் சுவற்றிய பின்" (காஞ்சிப்பு. வீரரா. 28).

[சுவறு → சுவற்று-,]

**சுவற்றுப்பல்லி** *šuvaṟṟu-p-palli*, பெ. (n.) சுவரில் சத்தமிடும் ஒருவகைப் பல்லி; wall lizard (சா.அக.)

[சுவர் + பல்லி]

**சுவற்றுப்பாசி** *šuvaṟṟu-p-pāši*, பெ. (n.) சுவரில் படரும் பாசி; the yellow wall lichen; the stone crop; wall moss (சா.அக.).

[சுவர் + பாசி]

**சுவற்றுப்பூ** *šuvaṟṟu-p-pū*, பெ. (n.) சுவரில் முளைக்கும் மஞ்சள்நிற நறுமண மலர்; plant with yellow flowers in its wild state on old walls (சா.அக.).

[சுவர் + பூ]

**சுவற்றுப்பேன்** *šuvaṟṟu-p-pēṉ*, பெ. (n.) மூட்டைப் பூச்சி; bug (சா.அக.).

[சுவர் + பேன்]

**சுவற்றுமுள்ளங்கி** *šuvaṟṟu-muḷḷaṅgi*, பெ. (n.) சுவர்முள்ளங்கி பார்க்க; see *šuvar-muḷḷaṅgi*.

[சுவர் + முள்ளங்கி]

**சுவறக்குழை-த்தல்** *šuvaṟa-k-kuḻaittal*, 4 செ.கு.வி. (v.i.) ஊறும்படி கலத்தல்; mixing so as to soak well (சா.அக.).

[சுவறு → சுவற + குழை-,]

**சுவறப்பூசு-தல்** *šuvaṟa-p-pūšu-*, 5 செ.குன்றாவி. (v.t.) மருந்தெண்ணெய் முதலியவற்றைச் சூடுபெறத் தேய்த்தல்; rubbing with pressure on the surface of the body so as to create heat, as is done with ointment or medicated oil (சா.அக.).

[சுவறு → சுவற + பூசு-,]

**சுவறிநில்(ற்)-(ற)தல்** *šuvaṟinil*, செ.கு.வி. (v.i.) உடம்பில் நோய் ஊறியிருத்தல்; continuing a long time as a disease in the system.

மறுவ. சுவறியிருத்தல்

[சுவறு → சுவறி + நில்-,]

**சுவறு-தல்** *šuvaṟu-*, 5 செ.கு.வி. (v.i.) 1. வற்றுதல்; to dry up, evaporate. "கடல் சுவறின தோற்றம்" (கம்பரா. முதற்போர். 191). 2. உறிஞ்சப்படுதல்; to be imbibed absorbed. 'வறண்ட நிலத்தில் நீர் சுவறிவிடும்' (உ.வ.)

**சுவாக்கீரை** *šuvā-k-kīrai*, பெ. (n.) ஒரு வகைப்பூண்டு; a plant.

[சுவை → சுவா + கீரை]

**சுவை[1]-த்தல்** *šuvai-*, 4 செ.குன்றாவி. (v.t.) 1. சுவையறிதல்; to taste. 2. உண்ணுதல்; to eat, chew, suck. "சுவைத்தொ றழூஉந்தன் மகத்துமுக நோக்கி" (புறநா. 164). 3. முத்தமிடுதல்; to kiss. "புல்லுதல் சுவைத்திடல்" (கந்தபு. இந்திரபுரி. 38). 4. புணர்ச்சியின்பம் நுகர்தல் (சங்.அக.); to experience, enjoy.

ம. சுவய்க்குக; க. சவி; தெ. சவிகொனு; து. சம்பி, சவி; கோத. சய்வ்; நா. சவத்; கொலா. சவ்வி (இனிப்பு)

[அசைத்தல் = கூறுபடுத்துதல், அறுத்தல். அசை → சசை → சவை. சவைத்தல் = மெல்லுதல், மென்று உண்ணுதல். சவை → சுவை. சுவைத்தல் = மெல்லுதல், மென்று உண்ணுதல், உண்டு சுவையறிதல்]

**சுவை[2]-த்தல்** *šuvai-*, 4 செ.கு.வி. (v.i.) சுவையாதல்; to be palatable, agreeable, pleasing. "இக்கரும மென்றனுக்குச் சுவைப்பதிலை" (திருக்காளத்.பு.ஞானயோ.1).

**சுவை[3]** *šuvai*, பெ. (n.) 1. சுவையும் மணமும்; taste and flavour. "அறுசுவையுண்டி" (நாலடி. 1). 2. இனிமைத்தன்மை (பிங்.); sweetness, deliciousness. 3. இனிமையானது (சூடா.); that which is pleasing or gratifying to the senses. 4. புலன்களுள் நாவின் உணர்வு; the sense of taste, one of ai-m-pulaṉ. "சுவையொளி யூறோசை நாற்றம்" (குறள், 27). 5. அறுசுவையும்

தோன்றுவதற்குக் காரணமான உமிழ்நீர்ச் சுரப்பு; the subtle matter from which water is said to have evolved. *6. செய்யுளின் சாரத் தன்மை (இலக். வி. 665);* poetic sentiment. *7. பதினாலாவது விண்மீனான நெய்ம்மீன் (சித்திரை) (திவா.);* the l4th naksatra. *8. அறிவால் உணரப்படும் மெய்ப்பாடு;* taste which is understood by brain. "சுவை என்பது காணப்படும் பொருளால் காண்போரகத்தின் வருவதோர் விகாரம்" *(இளம். தொல். பொருள்.245).*

ம. சுவ; தெ., க. சவி.

**சுவைக்காட்டு-தல்** *šuvai-k-kāṭṭu-,* 5 செ.குன்றாவி. (v.t.) *1. சுவையாதல்;* to be tasteful. *2. சுவை தருதல்;* to give a taste. *3. ஆசை காட்டுதல்;* to entice, allure, decoy. *4. இனிப்புக் காட்டல்;* to make agreeable.

*[சுவை + காட்டு-,]*

**சுவைக்கேடு** *šuvai-k-kēḍu,* பெ. (n.) *சுவை இழக்கை;* loss of sensation of taste *(சா.அக.).*

*[சுவை + கேடு. கெடு → கேடு]*

**சுவைகமம்** *šuvai-gamam,* பெ. (n.) *மலை ஆமணக்கு;* hill castor plant *(சா.அக.).*

**சுவைகாணல்** *šuvai-kāṇal,* பெ. (n.) *சுவையறிகை;* to taste by the tongue and palate *(சா.அக.)*

*[சுவை + காணல்]*

**சுவைஞர்** *šuvaiñar,* பெ. (n.) *இலக்கியம், கலை ஆகியவற்றை ஆழ்ந்து நுகரும் பண்புடையவர்;* connoisseur of literature.

**சுவைதட்டு[1]-தல்** *šuvai-taṭṭu-,* 5 செ.கு.வி. (v.i) *சுவை தோன்றல்;* finding agreeable to taste. 'கூட்டில் கொஞ்சம் உப்புச்சேர்த்த பின்னரே சுவை தட்டுகிறது' *(உ.வ.) (சா.அக.).*

*[சுவை + தட்டு-,]*

**சுவைநரம்பு** *šuvai-narambu,* பெ. (n.) *சுவை அறியும் நரம்பு;* nerve pertaining to the sense of taste-Gustatory nerve *(சா.அக.).*

மறுவ. சுவையரும்பு

*[சுவை + நரம்பு]*

**சுவைப்படுத்து-தல்** *šuvai-p-paḍuttu-,* 5 செ.குன்றாவி. (v.t.) *சுவைக்காட்டு-தல் பார்க்க;* see *šuvai-k-kāṭṭu-.*

*[சுவை + படுத்து-,]*

**சுவைப்பரீட்சை** *šuvai-p-parīṭcai,* பெ. (n.) *சுவைத்து அறிதல்;* examination by the sense of taste *(சா.அக.).*

Skt. parīkṣa → த. பரீட்சை

*[சுவை + பரீட்சை]*

**சுவைப்பொருள்** *šuvai-p-poruḷ,* பெ. (n.) *சிற்றுண்டி; தின்பண்டம்;* eatables *(சா.அக.).*

*[சுவை + பொருள்]*

**சுவைமிகுதி** *šuvai-migudi,* பெ. (n.) *அறுசுவைப் பண்டங்களை முறையாகக்கொள்ளாமல் அதிகமாக ஏற்பது;* instead of eating substances of each taste in equal measure to eat substances of certain taste in excess *(சா.அக.).*

*[சுவை + மிகுதி]*

**சுவைமூலம்** *šuvai-mūlam,* பெ. (n.) *நாவில் சுவையறியும் பகுதி;* end organs of the gustatory nerve in the papillae of the tongue *(சா.அக.).*

*[சுவை + மூலம்]*

**சுவைமை** *šuvaimai,* பெ. (n.) *சுவைத்தன்மை;* taste, flavour. "சுவைமை யிசைமை" *(பரிபா. 13,14).*

*[சுவை → சுவைமை]*

**சுவையணி** *šuvai-y-aṇi,* பெ. (n.) *உண்ணிகழுந் தன்மை வெளிப்பட்ட எண்வகை மெய்ப் பாட்டினாலும் விளங்கும் அணியழகு (தண்டி. 68);* a figure of speech which consists in describing the eight sentiments.

*[சுவை + அணி]*

**சுவையாதீதம்** *šuvai-y-ā-tīdam,* பெ. (n.) *சோற்றுப்பு;* common salt *(சா.அக.).*

*[சுவை + அதீதம்]*

**சுவையிலசுவரம்** *šuvaiyilasuvaram,* பெ. (n.) *செம்மரம்;* amoora rohituka *(சா.அக.).*

**சுவையின்மை** *šuvaiyiṉmai,* பெ. (n.) சுவை யில்லாமை; tastelessness; inspidity (சா.அக.).

*[சுவை + இன்மை]*

**சுவையுள்ள** *šuvai-yuḷḷa,* பெ.எ. (adj.) சுவையுடைய; palatable; sapid savoury (சா.அக.).

*[சுவை + உள்ள]*

**சுழல்¹(லு)-தல்** *šuḻal(lu)-,* 13 செ.கு.வி. (v.i) 1. உருளுதல்; to whirl, spin, rotate, roll, turn on an axis, as wheel. "தேர்க்காலாழியிற் சுழன்றவை" (பெருங். வத்தவ. 12:205). 2. வட்டமாகச் சுற்றுதல்; to revolve in an orbit. "சுழன்றிலங்கு வெங்கதிரோன்" (திவ். பெரியதி. 9, 4:6). 3. சுற்றித் திரிதல்; to roam, wander. "குழலின்படி சுழலும்" (கம்பரா. கங்கைப். 3). 4. அலைவுபடுதல்; to be tossed about, driven to and fro. 'காற்றால் கப்பல் சுழல்கின்றது' (உ.வ.). 5. மனங்கலங்குதல்; to be agitated, troubled, distressed in mind. "சுழலுஞ் சுராசுர்க ளஞ்ச" (திவ். இயற். 1, 48). 6. சோர்தல்; to droop, faint, languish. 'அவன் பசியினாற் சுழன்று போனான்' (உ.வ.). 7. பொறிமயங்குதல்; to be dizzey to swim, as eyes. "கண்ணுஞ் சுழன்று பீளையோடு" (திவ். பெரியதி. 7. 4:1).

ம. சுழலுக; தெ. சுடியு

**சுழல்²** *šuḻal,* பெ. (n.) 1. சுழற்சி; whirling, revolving. "சுழற்கண் வேதாளமானான்" (சேதுபு. வேதாள. 72). 2. வளைவு; curl. "சுழலிடு கூந்தலும்" (கம்பரா. மிதிலை. 43). 3. சுழிநீர்; eddy, whirl-pool. 4. சுழல்காற்று பார்க்க; see *šuḻal-kāṟṟu.* 5. காற்றாடி (சூடா.); machine on an axle turned by the wind; whirliging, kite. 6. பீலிக்குடை (பிங்.); umbrella made of peacock's feathers. 7. சுழல்படை (வின்.) பார்க்க; see *šuḻalpaḍai.* 8. கலக்கம்; agitation. "சுழலார் துயர்" (தேவா. 294:19). 9. ஏமாற்று (வின்); deception, frau

ம. சுழல்

**சுழல்காற்று** *šuḻal-kaṟṟu,* பெ. (n.) சுழன்று வீசும் காற்று; whirl-wind.

ம. சுழலிகாற்று, சுழல்க்காற்று

*[சுழல் + காற்று]*

**சுழல்நாற்காலி** *šuḻal-nāṟkkāli,* பெ. (n.) சுற்றிடும் நாற்காலி; rotating chair.

*[சுழல் + நாற்காலி]*




**சுழல்நோய்** *šuḻal-nōy,* பெ. (n.) ஆடுமாடுகள் திடீரெனச் சுழன்றுவிழும் ஒருவகை நோய்; a disease in cattle causing them to swing and fall down suddenly (சா.அக.).

*[சுழல் + நோய்]*

**சுழல்வண்டு** *šuḻal-vaṇḍu,* பெ. (n.) எப்போதும் நீரில் சுழன்றுகொண்டிருப்பதும், மந்திர வித்தைக்கு உதவுவதுமான ஒருவகை வண்டு; an insect found whirling in water; water beetle (சா.அக.).

*[சுழல் + வண்டு]*

**சுழல்படை** *šuḻal-paḍai,* பெ. (n.) வளைதடி (சூடா.); a kind of boomerang.

*[சுழல் + படை]*

**சுழல்மரம்** *šuḻal-maram,* பெ. (n.) கட்டைத் திருகாணி (வின்.); winding screw made of wood.

*[சுழல் + மரம்]*

**சுழல்மாறித்தனம்** *šuḻal-māri-t-taṉam,* பெ. (n.) ஏமாற்று (உ.வ.); deceit, fraud.

*[சுழல்மாறு → சுழல்மாறி + தனம்]*

**சுழல்மாறு-தல்** *šuḻal-māṟu-,* 5 செ.குன்றாவி. (v.t.) திருடுதல்; to sted. "சாமானைச் சுழல் மாறிவிட்டான்" (நாஞ்.).

*[சுழல் + மாறு-,]*

**சுழல்வண்டெரிவு** *šuḻal-vaṇḍerivu-,* பெ. (n.) சுழல்வண்டெரி பார்க்க; see *šuḻal-vaṇḍeri* (சா.அக.).

*[சுழல் + வண்டெரிவு]*

**சுழல்வண்டெரி** *šuḻal-vaṇḍeri-,* பெ. (n.) விழித்திருக்கும் நிலையிலும் தூங்கும்போதும் பூச்சிபறப்பது போன்று கண்கூச்சம் கண் புகைச்சல் முதலிய பண்புகளோடு விளக்கைப் பார்க்கப் பலவகையாகக் காணப்படுவதுமான ஒரு வகைக் கண்ணோய்; a disease of the eye in which the vision is severely affected due to a derangement of the muscular coordination of the eye. It is marked by a condition of a subjective appearance in which mote appears to be floating, where ever seen both in a waking state and in sleep, extreme sensitiveness to light dullness of vision, etc.,

[சுழல் + வண்டு + எரிவு]

**சுழல்விழியெரிவு** *šuḻal-viḻi-erivu-,* பெ. (n.) கண்களில் எரிச்சலெடுத்து நேராகப் பார்க்க வொட்டாமலும், இமைகனத்துக் கீழ் தொங்கி மிகுந்த அரிப்பும் வலியும் தருவதும், பீளை பிடித்து நீர்வடிந்து தூக்கந்தராத ஒருவகைக் கண்நோய்; an affection of the eye marked by varied sensation of burning in ability to look straight at an object, thickening and drooping of the eye-lids, itching and slight pain muco purulent and watery discharge, sleeplessness etc., (சா.அக.).

[சுழல் + விழி + எரிவு]

**சுழல்வு** *šuḻalvu,* 5 செ.கு.வி. (v.i.) சுழற்சி பார்க்க; see *šuḻarcci* (சா.அக.).

**சுழலவெரி-த்தல்** *šuḻala-v-eri-,* 4 செ.குன்றாவி. (v.t.) நான்கு பக்கமும் தீப்படும் படியாக எரித்தல்; to burn rotating the material so that the fire or heat is extensively affected all the parts of the thing (சா.அக.).

[சுழல + எரி-,]

**சுழலமாடு[1]-தல்** *šuḻalamāḍu-,* 5 செ.கு.வி. (v.i.) தலைசுற்றல்; to reel of the head; swim of the head (சா.அக.).

[சுழல(ம்) + ஆடு-,]

**சுழலமாடு[2]-தல்** *šuḻalamāḍu-,* 5 செ.கு.வி. (v.i.) 1. ஒன்றைப் பெறுவதற்கு இடைவிடாது முயலுதல்; to make persistent effort for a thing. 2. அடிக்கடி போய் வணங்குதல் (இவ.); to frequent; dance attendence on.

[சுழல் → சுழலம் + ஆடு-,]

**சுழலமாடு[3]-தல்** *šuḻalamāḍu-,* 5 செ.கு.வி. (v.i.) 1. ஒன்றைப் பெறுவதற்கு இடைவிடாது முயலுதல்; to make persistent effort for a thing. 2. அடிக்கடி போய் வணங்குதல் (இவ.); to frequent; dance attendence on.

[சுழல் → சுழலம் + ஆடு-,]

**சுழலல்** *šuḻalal,* பெ. (n.) 1. பொறிமயங்கல்; being dizzy. 2. கிறுகிறுத்தல் அல்லது சுற்றல்; reeling of head. 3. அலைவுபடுதல்; being restless (சா.அக.).

[சுழல் → சுழலல்]

**சுழலாரை** *šuḻal-ārai,* பெ. (n.) சுழலாவிரை பார்க்க; see *šuḻal-āvirai* (சா.அக.).

[சுழல் + (ஆவிரை→) ஆரை]

**சுழலாவிரை** *šuḻalāvirai,* பெ. (n.) பொன்னா விரை; rounded poded cassia (சா.அக.).

ம. சுழலாவர

[சுழல் + ஆவிரை]

**சுழலி** *šuḻali,* பெ. (n.) மாந்தத்தினால் வரும் வலிப்பு; convulsions or fits from fever due to digestive disorders (சா.அக.).

[சுழல் → சுழலி]

**சுழலை[1]** *šuḻalai,* பெ. (n.) ஆடுமாடுகள் தலைசுற்றிச் சோர்வுற்றுத் திடீரெனவிழும் ஒருவகை நோய்; a disease a sort of giddiness causing cattle to fall down fatigued suddenly without apparent cause (சா.அக.).

மறுவ. சுழல் நோய்

[சுழல் → சுழலை]

**சுழலை[2]** *šuḻalai,* பெ. (n.) 1. கொள்கலம்; receptacle. "துக்கச்சுழலையை" (திவ். பெரியாழ். 5. 3:1). 2. ஏய்ப்பு; deception, fraud. "சுழலை பெரிதுடைத்துச் சோதனை" (திவ்.பெரியாழ். 1,8,5).

**சுழலையாடு[1]-தல்** *šuḻalai-y-āḍu-,* 5 செ.கு.வி. (v.i.) களைப்பினால் சோர்ந்துவிழுதல்; களைத்துப் போதல்; to be fatigued, to faint (சா.அக.).

[சுழலை + ஆடு-,]

சுழலையாடு²-தல் *šulalai-y-āḍu-*, 5 செகுன்றாவி. (v.i.) *1.* அலைக்கழித்தல்; to harass as a person. *2.* வீணாகச் செலவழித்தல்; to waste, as property.

*[சுழலை + ஆடு-,]*

சுழற்கண் *šular-kaṇ*, பெ. (n.) சுற்றுக்கண் பார்க்க; see *šuṟṟu-k-kaṇ*.

*[சுழல் + கண்]*

சுழற்கத்தி *šular-katti*, பெ. (n.) கண்ணின் படலத்தை அறுப்பதற்காகப் பயன்படுத்தும் ஒருவகைக் கத்தி; a kind of knife used in a circular extraction of cataract (சா.அக.).

*[சுழல் + கத்தி]*

சுழற்காய் *šular-kāy*, பெ. (n.) சுண்டைக்காய் பார்க்க; see *šuṇḍai-k-kāy*.

*[சுழல் + காய்]*

சுழற்கேடயம் *šular-kēḍayam*, பெ. (n.) (தனிப் பரிசாக அல்லாமல்) வெற்றிபெறுவோர்க்கு அடுத்த ஆண்டுவரை வைத்திருக்கக்கூடிய பரிசுச் சின்னம்; a shield or trophy only for one year to the winner.

*[சுழல் + கேடயம்]*

சுழற்கோப்பை *šular-kōppai*, பெ. (n.) (தனிப் பரிசாக அல்லாமல்) வெற்றி பெறுவோர்க்கு அடுத்த ஆண்டுவரை வைத்திருக்க கூடிய தற்காலிக வெள்ளி அல்லது தங்கக்கோப்பை; a gold or silver cup only for one year to the winner.

*[சுழல் + கோப்பை]*

சுழற்சி *šularci*, பெ. (n.) *1.* சுழல்கை; whirling, spinning, rotating, brandishing. *2.* அலைகை; wondering, moving to and fro. *3.* மனக்கலக்கம்; trouble, agitation.

ம. சுழல்

*[சுழல் → சுழற்சி]*

சுழற்பந்துவீச்சு *šular-pandu-vīccu*, பெ. (n.) மட்டைப் பந்து விளையாட்டில் தரையில் பட்டு எழும்போது திசைமாறிப் பாயத்தக்கதாக மெதுவாகப் பந்துவீசுகை; spin bowling in cricket.

*[சுழல் + பந்து + வீச்சு]*

சுழற்றல் *šularral*, பெ. (n.) கிறுகிறுப்பு; giddiness. தலை சுழற்றலாயிருக்கிறது (உ.வ.).

*[சுழல் + தல் = சுழற்றல்]*

சுழற்றி¹ *šularri*, பெ. (n.) *1.* கருவண்டு; a black beetle. *2.* சுழற்கத்தி பார்க்க; see *šular-katti*.

*[சுழல் → சுழற்றி]*

சுழற்றி² *šularri*, பெ. (n.) *1.* சுழற்றுகருவியின் கைப்பிடி (வின்); handle, as of a spinning wheel. *2.* துளையிடுங்கருவி (உ.வ.); brace and bit.

ம. சுழற்றி

*[சுழல் → சுழற்றி]*

சுழற்றித்துரப்பணம் *šularri-t-turapaṇam*, பெ. (n.) துளையிடுங்கருவி; gimlet (C.E.M.).

*[சுழற்றி + துரப்பணம்]*

சுழற்றியடி-த்தல் *šularri-y-aḍi-*, 4 செ.கு.வி. (v.t.) *1.* பெருவாரி நோய்களில் உயிரைக் கொள்ளை கொண்டுபோதல்; to sweep away of innumerable lives in epidemics. *2.* புயற் காற்றடித்தல்; to fierce blowing to wind in stormy weather. *3.* சுழன்றுவீசுதல்; to blow violently, to devastate, as whirlwind. 'காற்றுச் சுழற்றியடிக்கிறது' (உ.வ.).

*[சுழற்றி + அடி-,]*

சுழற்றிடுபில்லம் *šularriḍu-pillam*, பெ. (n.) விழியழற்சியால் சதைவளர்ந்து கருவிழி குவிந்து சிறுக்கும் ஒருவகைக் கண்ணோய்; an eye disease causing inflammation of the eye growth flesh and shrinking of the black portion of the eye (சா.அக.).

*[சுழற்றிடு + பில்லம்]*

சுழற்று¹-தல் *šularru-*, 5 செ.கு.வி. (v.i.) *1.* சுழலச் செய்தல்; to whir, spin, swing round, turn; to roll. "நமுசியை வானிற் சுழற்றிய மின்னுமுடியன்" (திவ்.பெரியாழ். 1,8,8). *2.* சுற்றியாட்டுதல்; to brandish, flowish, wave. 'சிலம்பக் கழியைச் சுழற்றுகின்றான்' (உ.வ.). *3.* கிறுகிறுக்கச் செய்தல்; to cause dizziness, make giddy. 'பித்தம் தலையைச் சுழற்றுகின்றது' (உ.வ.).

ம. சுழற்று

*[சுழல் → சுழற்று-,]*

**சுழற்று**[2] *šuḻaṟṟu*, பெ. (n.) சுழற்றுகை; whirling, wheeling, spinning. 'அவனை ஒரு சுழற்றுச் சுழற்றினான்' (உ.வ.).

ம. சுழற்று

[சுழல் → சுழற்று]

**சுழற்றுதடி** *šuḻaṟṟu-daḍi*, பெ. (n.) சிலம்பத்தடி; a kind of fencing staff, quarter-staff.

[சுழற்று + தடி]

**சுழன்மரம்** *šuḻaṉ-maram*, பெ. (n.) தவசங்களைத் திரிக்கும் மரவெந்திரம்; wooden machine for grinding corn. "சுழன்மரஞ் சொலித்த ... வெண் காழ்" (அகநா. 393).

[சுழல் + மரம்]

**சுழன்மாறி** *šuḻaṉ-māṟi*, பெ. (n.) தந்திரமாய் ஏமாற்றுபவ-ன்-ள்; a skilful cheat. "எனை யிக்கோலங் கண்ட சுழன்மாறி" (விறலிவிடு. 901).

[சுழல் + மாறி]

**சுழனி** *šuḻaṉi*, பெ. (n.) குழந்தைநோய்களைத் தீர்க்கவுதவும் வலம்புரிக்கொடி; a kind of creeper whirling on to the right side. It is used in children's diseases (சா.அக.).

[சுழல் → சுழனி]

**சுழணோய்** *šuḻaṇōy*, பெ.(n.) சுழல்நோய் பார்க்க; see *šuḻal-nōy* (சா.அக.).

[சுழல் + நோய்]

**சுழாரை** *šuḻārai*, பெ. (n.) சுழலாவிரை பார்க்க; see *šuḻalāvirai* (சா.அக.).

**சுழாவிரை** *šuḻāvirai*, பெ. (n.) சுழலாவிரை பார்க்க; see *šuḻalā-virai* (சா.அக.).

[சுழல் + ஆவிரை]

**சுழி**[1]**-தல்** *šuḻi-*, 4 செ.கு.வி. (v.i.) 1. சுழிபோல் வளைவாதல்; to become curved, curled, involved, to form eddies, as on the surface of water. "சுழியுங் குஞ்சிமிசை" (கம்பரா. எழுச்சி.34). 2. வெறுப்பு முதலியவற்றின் குறியாக முகஞ் சுருங்குதல்; to be contracted, screwed up as one's face in disgust. "தழலுமிழ்ந்தும் மதம் பொழிந்தும் முகஞ்சுழிய" (தேவா. 1148, 7). 3. கவடமாதல்; to be cunning, guileful. சுழியப் பேசினான் (யாழ்ப்.). 4. மனங்கலங்குதல்; to be distracted, agitated. "வரிவிழிகொண்டு சுழிய வெறிந்து" (பட்டினத். திருப்பா. உடற். 3). 5. இறத்தல்; to die. 'அவன் சுழிந்து விட்டான்' (இ.வ.).

ம. சுழி; தெ. சுடியு; க. சுளி

[சுளி → சுழி-,]

**சுழி**[2]**-த்தல்** *šuḻi-*, 4 செ.கு.வி. (v.i.) 1. சுழற்காற்றுப் போல் சுழலுதல்; to whirl, as whirlwind. "சண்டமாருதஞ் சுழித்தடித் தாஅர்த்து" (திருவாச. 4:55). 2. நீர்ச் சுழியுண்டாதல்; to form whirlpools eddies. "சுழித்துநீர் வருதுறை யாற்றை" (கம்பரா. குகப். 63). 3. உடற்சுழியுண்டாதல்; to form curls; to have curl-marks, as on the head or body. 4. கண்குழிதல் (வின்.); to be sunk, as eyes by age. 5. வேறிடத்தின்றி யொருங்கே திரண்டுநிற்றல்; to be gathered in one place, concentrated. "சுழித்து நின்றறாத கற்பிற் சுநந்தை" (சீவக. 2551). 6. அடிபடாமல் ஒதுங்குதல்; to shrink, recoil, as from blows. 'அவனடிக்குச் சுழித்துக் கொண்டான்' (உ.வ.). 7. தவறிப்போதல்; to fail, as rain in drought, as candidate in examination. 'இவ்வாண்டு மழை சுழித்து விட்டது' (உ.வ.).

ம. சுழிக்குக; க. சுழிடு, சுளி; தெ. சுடியு

[சுல் → சில் = சக்கரம். சுல் → சுள் → சுழி = வட்டம். சுழித்தல் = வட்டம் வரைதல்]

**சுழி**[3]**-த்தல்** *šuḻi-*, 4 செ.குன்றாவி. (v.tr.) 1. சுழி உண்டாக்குதல்; to curl, incurve, curve, "சுழித்த செம்பொனின் றொளை புரை யுந்தி" (கம்பரா. சித்திர. 21). 2. அலையச்செய்தல்; to cause to roam. "வெங்கா னென்கான்முளையைச் சுழிக்கும் வினையால்" (கம்பரா. நகர். நீங்கு. 49). 3. தேர்வில் தேறாதபடிச் செய்தல்; to plough cause to fail in examination. "ஆசிரியர் மாணவனை இந்த ஆண்டுத்தேர்வில் சுழித்துவிட்டார்". 4. செலவினங்களைக் குறைத்தல்; to curtail, as expenses. "உள்ளதற்கேற்பச் செலவைச் சுழிக்க வேண்டும்". 5. மறைத்தல்; to conceal, deposit, to hide. 'பணத்தை எங்கேயோ சுழித்துவிட்டான்' (உ.வ.). 6. சினத்தல்; to be angry "எமை யெமர்கள் சுழியாரோ" (தேவா. 1148, 7).

[சுள் → சுழி-,]

சுழி[4] *šuḷi-*, பெ. (n.) 1. *சுழலுகை;* whirling. *'சுழிக்காற்று' (உ.வ.).* 2. *நீர்ச்சுழி;* whirl, vortex, eddy. *"கங்கையின் சுழியிற் பட்ட" (சீவக. 1096).* 3. *எழுத்துச்சுழி;* incurvature, curl in the formation of letters, circlet, as in ண (ṇ), ன (ṉ) etc. 4. *சுழியம்;* cipher, zero. 5. *மயிர்ச்சுழி;* curl of the hair. 6. *ஆகூழ் அல்லது போகூழைக் குறிப்பதாகக் கருதப்படும் உடற்சுழி;* circular or curved marks on the head or body indicating one's luck. *"சுழிகொள் வாம்பரி" (கம்பரா. எழுச். 32).* 7. *ஊழ்வினை;* fate. *'அவன் சுழியால் அலைகிறான்' (உ.வ.).* 8. *உச்சி (திவா.);* crown of the head. 9. *உச்சிப்பூ (இ.வ.);* a kind of ornament for child's head. 10. *சூழ்ச்சியறிவு;* wickedness. *"சுழியுடைத் தாயுடைக் கொடிய சூழ்ச்சியால்" (கம்பரா.பள்ளி. 74).* 11. 2 1/2 *அணா (15 புதுச்சல்லி) கொண்ட சிறு காசுவகை;* a small coin = 2 1/2 annas. 12. *மழையின் ஒரு விரல அளவு;* an inch, a unit of rainfall. 13. *கடல்;* sea. *"கொண்ட சுழியுங் குலவரை யுச்சியும்" (திருமந். 2966).* 14. *சுழிமுனை[1] பார்க்க;* see *šuḷi-muṉai[1]*.

ம. சுழி; க. சுழி, சுளி; தெ. சுடி; து. சுளி; கோத. சுளி; துட. தூள்ய; பட. சுயி

*[சுள் → சுளி → சுழி]*

**சுழிக்காற்று** *šuḷi-k-kāṟṟu*, பெ.(n.) *சூறைக்காற்று;* whirl-wind.

க. சுழிகாளி

*[சுழி + காற்று]*

**சுழிக்கு-தல்** *šuḷikku-*, 5 செ.குன்றாவி. (v.t.) *சுழித்துவாங்கு-தல் பார்க்க;* see *šuḷittu-vāṅgu-*. (சா.அக.).

*[சுழி → சுழிக்கு-,]*

**சுழிகணநோய்** *šuḷi-kaṇa-nōy*, பெ. (n.) *ஒருவகைக் கண்ணோய்;* a kind of eye disease. (சா.அக.).

மறுவ. சுழிக்கணம்

*[சுழி + கணம் + நோய்]*

காய்ச்சல், மூச்சுத்திணறல் போன்ற அறிகுறிகளுடன் இந் நோய் காணப்படும்.

**சுழிகணம்** *šuḷigaṇam*, பெ. (n.) *குழந்தைகளின் விலாவைச் சுழிக்கச்செய்யும் கணைநோய் (பாலவா. 40);* a variety of taber mesenterica causing twitching of the sides, in children.

*[சுழி + கணம்]*

**சுழிகுளம்** *šuḷi-kuḷam*, பெ. (n.) *ஒரு செய்யுளை எவ்வெட்டெழுத்தாய், நான்குவரியாக எழுதி மேனின்று கீழிழிந்தும் கீழ்நின்று மேலேறியும், புறநின்று வந்து உள்முடிய பலுக்கினாலும், அவ் வரி நான்குமே ஆகி, அச்செய்யுளாலேயே முற்றுப்பெறும் மிறைக்கவி (தண்டி. 98);* a four lined stanza of eight letters each, so composed that the letters are arranged in a series of incurving loops, one with in another.

*[சுழி + குளம்]*

எ-டு. : "கவிமுதி யார் பாவே
விலையரு மா நற்பா
முயல்வ துறுநர்
திருவ திந்து மாயா" *(தண்டி. 98, விளக்.)*

**சுழிகுற்றி** *šuḷi-kuṟṟi*, பெ. (n.) *சுழியாணிக்கட்டை பார்க்க (நாஞ்.);* see *šuḷi-y-āṇi-k-kaṭṭai*.

ம. சுழிக்குற்றி, சுழுக்குற்றி

*[சுழி + குற்றி]*

**சுழிகை** *šuḷigai*, பெ. (n.) *கள்;* toddy (சா.அக.).

*[சுடு → சுடிகை = கள். சுடிகை → சுழிகை]*

**சுழிகோதை** *šuḷi-kōdai*, பெ. (n.) *மூக்கடைப்பு நோய் நீக்கும் புல்வகை;* a kind of grass (சா.அக.).

*[சுழி + கோதை]*

**சுழிச்சக்கரம்** *šuḷi-c-cakkaram*, பெ. (n.) *மதுரையில் வழங்கிய பழைய பொற்காசு வகை;* an ancient gold coin of Madurai.

*[சுழி + சக்கரம்]*

**சுழித்துவலி-த்தல்** *šuḷittu-vali-*, 4 செ.கு.வி. (v.i) *மூச்சுவிடுங்காலை இசிவுடன் வலித்தல்;* to have stitches or spasms in breathing.

*[சுழித்து + வலி-,]*

**சுழித்துவாங்கு-தல்** *šuḷittu-vāṅgu-*, 5 செ.குன்றாவி. (v.t.) 1. *கண்சுழலல்;* to whirl as of the eyes. 2. *மூச்சைச்சுழற்றி, உள்ளேயிழுத்தல்;* to draw in as whirlpool, eddy, to engulf. 3. *மடக்கிவிடுதல் (இ.வ.);* to over throw, prostrate.

*[சுழித்து + வாங்கு-,]*

**சுழித்தோடல்** *šuḷi-t-tōḍal,* பெ. (n.) *சாக் குறியைக் காட்டும் நாடியோட்டம்;* whirling and drawing in of the pulse- this is a death sign.

*[சுழித்து + (ஓடு) → ஓடல்]*

**சுழிப்பணம்** *šuḷi-p-paṇam,* பெ. (n.) இரண்டணாவையொத்த பழைய காசு வகை; an ancient coin = 2 annas *(செ.அக.).*

*[சுழி + பணம்]*

**சுழிப்பிழையன்** *šuḷi-p-piḻaiyaṉ,* பெ. (n.) *1. தீய சுழியுள்ள விலங்கு;* any domestic animal having unlucky curl-marks. *2. ஆகூழ் கெட்டவன்;* ill-fated person.

*[சுழி + பிழையன்]*

**சுழிபுத்தி** *šuḷi-putti,* பெ. (n.) தீக்குணம் (யாழ்ப்); wickedness, knavery.

*[சுழி + புத்தி]*

Skt. buddhi → த. புத்தி

**சுழிபேதம்** *šuḷi-bēdam,* பெ. (n.) ஏய்ப்பு, *(மோசம்);* cheating fraud. *'அவன் என்னைச் சுழிபேதம் பண்ணிவிட்டான்' (வின்).*

*[சுழி + பேதம்]*

Skt. bhēda → த. பேதம்

**சுழிமாந்தக்கழிச்சல்** *šuḷi-mānda-k-kaḻiccal,* பெ. (n.) குழந்தைகளுக்குச் செரியாமையால் வரும் கழிச்சல்நோய்; purging or distortion of bowels in children due to indigestion marked by whirling of the eyes *(சா.அக.).*

*[சுழி + மாந்தம் + கழிச்சல்]*

**சுழிமாந்தம்** *šuḷi-māndam,* பெ. (n.) கண்களின் சுழற்சியோடு கூடிய மாந்த நோய்வகை; colic attended with rolling of the eyes, one of eight māndam.

*[சுழி + மாந்தம்]*

**சுழிமின்னல்** *šuḷi-miṉṉal,* பெ. (n.) *கவருள்ள மின்னல் (யாழ்.அக.);* forked-lightning.

க. சுழிமின்சு

*[சுழி + மின்னல்]*

**சுழிமுனை** *šuḷi-muṉai,* பெ. (n.) *1. சுழுமுனை பார்க்க;* see *šuḷumuṉai. 2.* பெண்குறி; a misnomer for clitoris *(சா.அக.).*

*[சுழி + முனை]*

**சுழிமுனைக்கோளம்** *šuḷi-muṉai-k-kōḷam,* பெ. (n.) *1. அமுதநிலை;* eternal bless. *2. நாளமில் சுரப்பிகளுள் ஒன்று;* pituitary gland *(சா.அக.).*

*[சுழி + முனை + கோளம்]*

**சுழிமுனைமூளையன்** *šuḷi-muṉai-mūḷaiyaṉ,* பெ. (n.) *மூளையின் அடிப்பாகம் பருத்தவன்;* a large headed idiot having swollen lower brain *(சா.அக.).*

*[சுழி + முனை + மூளையன்]*

**சுழிமை** *šuḷimai,* பெ. (n.) *காற்று உள்ளே பூரித்தல்;* inhalation of the vital air *(சா.அக.).*

*[சுழி → சுழிமை]*

**சுழியச்சு** *šuḷi-y-accu,* பெ. (n.) பொன்னை உருக்கி வார்க்கும் அச்சு *(யாழ்.அக.);* gold-smith's matrix.

*[சுழி + அச்சு. அட்டுதல் = வார்த்தல், உருக்கி வார்த்தல். அட்டு → அச்சு]*

**சுழியப்பேசு-தல்** *šuḷiya-p-pēšu-,* 5 செ.குன்றாவி. (v.t.) வருந்தச்சொல்லுதல் *(யாழ்ப்.);* to speak wounding words *(செ.அக.).*

*[சுழிய + பேசு-,]*

**சுழியம்**[1] *šuḷiyam,* பெ. (n.) *மகளிர்தலையணி வகையுளொன்று;* a kind of ornament worn by women on the head. *"சுழியம் சூடி" (கம்பரா. கடிமணப். 52).*

ம. சுழியம்

*[சுழி → சுழியம்]*

**சுழியம்**[2] *šuḷiyam,* பெ. (n.) ஒருவகை இனிப்புத் தின்பண்டம்; a kind of sweet pastry cake.

*[சுழி → சுழியம்]*

**சுழியல்**[1] *šuḷiyal,* பெ. (n.) *1. தலைமுடி;* hair *(சா.அக.). 2. சுழிந்திருக்கை;* curling, as of hair. *3. சுருளாக மயிரை முடிகை;* a mode of dressing the hair.

*[சுழி → சுழியல்]*

**சுழியல்**[2] *šuḷiyal,* பெ. (n.) *கள்;* toddy *(சா.அக.).*

*[சுழி → சுழியல்]*

**சுழியன்** *šuḷiyaṉ,* பெ. (n.) *1. ஏமாற்றுக்காரன், (வஞ்சகன்) (யாழ்.அக.);* cunning schemer, deceitful person. *2. அறிவாளி;* intelligent

person. 3. எதற்கும் சினம்கொள்பவன்; irritable man. 4. கொடிய குறும்பன் (இவ.); wicked, mischievous man. 5. சுழற்காற்று; whirlwind "சித்திரைச் சுழியன்" (சங்.அக.).

[சுழி → சுழியன்]

**சுழியாணி** *šuḷi-y-āṇi*, பெ. (n.) கதவுக்குடுமியின் முள்ளாணி; projecting-pin of a door serving as pivot to move on.

ம. சுழியாணி

[சுழி + ஆணி]

**சுழியாணிக்கட்டை** *šuḷi-y-āṇi-k-kaṭṭai*, பெ. (n.) குடுமிக்கதவின் முள்ளாணியைத் தாங்கும் கட்டை; block or stone to receive the projecting pin of a door.

[சுழி + ஆணி + கட்டை]

**சுழியாணிக்கதவு** *šuḷi-y-āṇi-k-kadavu*, பெ. (n.) குடுமிக்கதவு (யாழ்.அக.); door moving on projecting pins instead of wings.

[சுழி + ஆணி + கதவு]

**சுழியிலெழுத்து** *šuḷi-yil-eḻuttu*, பெ. (n.) ஊழ்வினை; fate, destiny. 'சுழியிலெழுத்தைத் தான் நோவ வேண்டும்' (வ.வ.)

[சுழி → சுழியில் + எழுத்து]

**சுழியோடு-தல்** *šuḷi-y-ōḍu-*, 5 செ.கு.வி. (v.i.) 1. முக்குளித்தல் (யாழ்.அக.); to dive into water. 2. மனத்தை ஆராய்தல் (சங்.அக.); to study one's mind.

[சுழி + ஓடு-,]

**சுழிவு** *šuḷivu*, பெ. (n.) 1. மறைவு; concoalment, seclusion; circumvention. 'சுழிவு பார்த்து வந்துவிட்டான்' (வின்.) 2. மனக்கவலை; anxiety solicitude, care. "சுழிவுறேன் மன்ன வென்றான்" (பெரியபு. திருஞான. 693).

[சுழி → சுழிவு]

**சுழிவோகம்** *šuḷi-v-ōgam*, பெ. (n.) சிவவோகம், 64 ஓகங்களில் ஒன்று, மற்ற ஓகங்களைக் காட்டிலும் மிகச்சிறந்ததும், மேன்மையானதும் ஆகும்; this is one of the 64 yogas and is by far superior to other kinds of yōga (சா.அக.).

[சுழி + ஓகம்]

**சுழுகு** *šuḷugu*, பெ. (n.) சுளுவு (யாழ்ப்.) பார்க்க; see *šuḷuvu*.

**சுழுத்தி** *šuḷutti*, பெ. (n.) 1. நினைவுகெட்டுத் தன்னை மறந்து உறங்கும் காலத்தில் உயிர், வளி, ஓசை ஆக இரண்டு கருவிகளைக் கொண்டு ஆதன் நெஞ்சாங்குலையின்று உடம்பைப் பாதுகாக்கும் நிலை; in the yōgā philosophy it is a state of insensibility to one's surroundings, when the soul is said to take its a stand in the region of the heart with the aids of vital power and sound and guard the human body trance. 2. ஏழு நிலைமைகளில் (அவத்தைகளில்) ஒன்று; in the Āgama philosophy an intellectual faculty that argues future events from the present circumstances. 3. ஆழ்ந்தவுறக்கம்; deep sleep; a state of deep thought or abstraction - Reverie. 4. மூன்றாவது நிலைமை (அவத்தை); the third stage dreamless slumber. 5. புலன்கள் செயலற்றுத் தன்னை யறியாமல் ஆழ்ந்தவுறக்கத்தில் இருக்கும் ஒரு நிலைமை; cosmic dreamless state (சா.அக.).

**சுழுந்து** *šuḷundu*, பெ. (n.) சுளுந்து பார்க்க; see *šuḷundu*.

[(சுள்ளி → சுளு- ) சுளுந்து → சுழுந்து]

**சுழுமுணா** *šuḷumuṇā*, பெ.(n.) சுழிமுனை பார்க்க; see *šuḷi-muṉai* (சா. அக.).

[சுழு + முணா]

**சுழுமுனை** *šuḷumuṉai*, பெ. (n.) சுழிமுனை பார்க்க; see *šuḷi-muṉai* (சா.அக.).

[சுழு + முனை]

**சுழுனா** *šuḷuṉā*, பெ. (n.) சுழிமுனை பார்க்க; see *šuḷi-muṉai* (சா.அக.).

**சுழுனை** *šuḷuṉai*, பெ. (n.) சுழிமுனை பார்க்க; see *šuḷi-muṉai* (சா.அக.).

**சுள்**[1] *šuḷ*, பெ. (n.) 1. உறைப்பு; pungency; acrimony. 2. சுள்சுள்ளெனல் பார்க்க; see *šuḷšuḷḷeṉal*. 3. கருவாடு; dried fish. "சுள்ளிணைக் கறித்தனர்" (கந்தபு. அசமுகிநகர். 18) (சா.அக.).

க. சுள்

[சுல் → சுள்]

**சுள்**[2] *šuḷ,* பெ. (n.) *சிறுமை (இலக்அக.);* littleness, smallness.

ம. சுள்ளு

**சுள்ளக்கம்** *šuḷḷakkam,* பெ. (n.) *1.* வேர்க்குரு *(சங்அக.);* prickly heat. *2. சினம் (யாழ்.அக.);* anger, fury. *3.* மேட்டிமை *(சங்.அக.);* haughtiness, affectation.

ம. சுள்ளம்

*[சுள் → சுள்ளக்கம்]*

**சுள்ளக்காய்** *šuḷḷa-k-kāy,* பெ. (n.) *மிளகாய் (யாழ்ப்.);* red-chilly.

*[சுள்' → சுள்ளம் + காய். சுள் = உறைப்பு]*

**சுள்ளம்** *šuḷḷam,* பெ. (n.) *சுள்ளக்கம்*[2] *பார்க்க;* see *šuḷḷakkam.*

ம. சுள்ளம்

*[சுள் → சுள்ளம்]*

**சுள்ளல்** *šuḷḷal,* பெ. (n.) மென்மை *(யாழ்ப்.);* tenderness, flexibility.

*[சுள் = சிறுமை, மென்மை. சுள் → சுள்ளல்]*

**சுள்ளலன்** *šuḷḷalaṉ,* பெ. (n.) மெலிந்தவன் *(யாழ்ப்.);* an emaciated person.

*[சுள்ளல் → சுள்ளலன். சுள் = மென்மை]*

**சுள்ளலி** *šuḷḷali,* பெ. (n.) *1.* **மெலிந்தவள்; உயரத்திற்கேற்ற பருமனில்லாத பெண்;** a thin girl, slender woman. *2.* மெல்லிதான *மரம்;* thin, slender tree *(சாஅக.).*

*[சுள்ளல் → சுள்ளலி. சுள் = மென்மை]*

**சுள்ளற்கோல்** *šuḷḷaṟ-kōl,* பெ. (n.) *1.* வளையும் தடி *(வின்.);* flexible stick or rod. *2. சாட்டை (சவுக்கு);* whip. "குதிரை மேலிருந்து 'கோல்தா' என்றால் . . . சுள்ளற் கோலாம் ஆகலானும்" *(தொல். சொல். 53, இளம்.).*

*[சுள்ளல் + கோல்]*

**சுள்ளாக்காய்** *šuḷḷā-k-kāy,* பெ. (n.) சுள்ளக்காய் *பார்க்க;* see *šuḷḷa-k-kāy.*

*[சுள்' → சுள்ளக்காய் → சுள்ளாக்காய். சுள் = உறைப்பு]*

**சுள்ளாணி** *šuḷḷāṇi,* பெ. (n.) *சிறியஆணி (மலைபடு. 27, உரை);* small nail.

ம. சுள்ளாணி

*[சுள் (சிறுமை) + ஆணி]*

**சுள்ளாப்பி-த்தல்** *šuḷḷā-p-pi-,* 4 செ.குன்றாவி. (v.t.) *1.* சூடுகாட்டல்; to render hot. *2. அடித்தல்;* to beat, lash, strike.

*[சுள்ளாப்பு + சுள்ளாப்பி-,]*

**சுள்ளாப்பு** *šuḷḷāppu,* பெ. (n.) *1.* **உறைப்பு;** pungency. *2.* **முனைப்பு;** hastiness, quickness. *3.* **மழையின்பின் அடிக்கும் கடுவெயில்;** piercing heat of the sun after rain. *4.* **அடி;** stroke, cut. *5.* **பழிச்சொல்;** cutting, sarcasm 'சுள்ளாப்பெல்லாம் பொல்லாப்பு' *(உ.வ.).* *6.* வெப்பம்; heat.

*[சுள் + சுள்ளாப்பு]*

**சுள்ளான்** *šuḷḷāṉ,* பெ. (n.) *1.* சுள்ளெறும்பு பார்க்க; see *šuḷḷeṟumbu. 2.* ஒரு வகைக் கொசு *(இ.வ.);* a kind of mosquito.

*[சுள் → சுள்ளான்]*

**சுள்ளி** *šuḷḷi,* பெ. (n.) *1. அனிச்சப்பூடு;* pimpernel *2. ஆச்சாமரம்;* Ceylon ebony tree. "எரிபுரை யுறமுஞ் சுள்ளி" *(குறிஞ்சிப். 66). 3.* ஞாழல் *(திணைமாலை. 2);* a species of fragrant tree. *4. கதம்பம்;* different shrubs used in perfumes and unguents. *5. மாமரம்;* mango tree. *6. மல்லிகை;* Jasmine. *7.* **மயிற் கொன்றை** *(மலை.);* peacock's crest. *8.* **மாந்துளிர்;** tender leaves of mango tree. *9.* **நாகதாளி;** snake charmingroot. *10.* **குங்குமம்** *(அகநி.);* saffron. *11.* **எலும்பு;** bone. "சுள்ளி யியற்றிய குரம்பை" *(பதினொ. ஆளு. திருக்க. 37) 12.* நாகமல்லி *(மலை.);* ring-worm root. *13.* **கருப்பூரவகை;** cinnomum genus. *14. மரக்கிளை;* branch,bough "சுள்ளியி னிருந்துறை குரங்கு" *(கம்பரா. யுத். மந்திரப். 25).15.* **உலர்ந்த சிறுகொம்பு;** dry twigs, especially for fuel. "சுள்ளிக்கேன் கோடாலி" *(தனிப்பா. 1, 227:20). 16.* **சிறுமை;** smallness. "சுள்ளி வெள்ளிப் பற்கொண்டும்" *(கம்பரா.யுத். முதற்போ. 139) . 17.* மாமரம் *(மலை.);* mango tree.

ம. சுள்ளி; க. சுள்க்கு; தெ. சிடுகு

*[சுள் → சுள்ளி]*

**சுள்ளிக்கோல்** *šuḷḷi-k-kōl,* பெ. (n.) குதிரைச் சாட்டை; whip. "மாமேலிருந்தொரு கோறா வெனிற் சுள்ளிக்கோல் தரலும்" *(சிசி. அளவை.).*

*[சுள்ளி + கோல்]*

**சுள்ளிடு-தல்** *šuḷḷiḍu-, 20* செ.கு.வி. (v.i) *1.* உறைத்தல்; being pungent to taste. *2.* வலித்தல்; paining. *3.* மனம்வருந்துதல்; being troubled in mind, to be stung to the quick.

*[சுள் + இடு-,]*

**சுள்ளிடுவான்** *šuḷḷiḍuvāṉ,* பெ. (n.) *1.* சுள்ளெனக் கடிக்கும் ஒருவகைப் பூச்சி; தெள்ளுப்பூச்சி; a kind of insect flea. *2.* மிளகு; pepper. *3.* மிளகாய்; chilly *(சாஅக.).*

*[சுள் + இடுவான்]*

**சுள்ளிவிறகு** *šuḷḷi-viṟagu,* பெ. (n.) காய்ந்த மிலாறு; dry twigs for fuel.

ம. சள்ளிவிறகு

*[சுள்ளி + விறகு]*

**சுள்ளு** *šuḷḷu,* பெ. (n.) *1.* கள்; toddy. *2.* வெப்பம்; heat. *3.* உறைப்பு; pungency.

*[சுள் → சுள்ளு]*

**சுள்ளுக்கருவாடு** *šuḷḷu-k-karuvāḍu,* பெ. (n.) ஒருவகைச் சிறிய கருவாடு; a kind of small dried fish *(சாஅக.).*

*[சுள் → சுள்ளு + கருவாடு]*

**சுள்ளுச்சுள்ளெனல்** *šuḷḷu-c-cuḷḷeṉal,* பெ. (n.) *1.* வளி (வாயு) முதலிய தொல்லைகளால் உண்டாகும் குத்தல் நோய்; a minute pain experienced at times due to deranged Vāyu in the body system *(சாஅக.). 2.* கடுப்புக் குறிப்பு; expr. signifying sharp pricking sensation.

**சுள்ளுப்பூச்சி** *šuḷḷu-p-pūcci,* பெ. (n.) சுள்ளிடுவான்,1 பார்க்க; see *šuḷḷiḍuvāṉ,1 (சாஅக.).*

*[சுள் → சுள்ளு + பூச்சி]*

**சுள்ளெறும்பு** *šuḷḷeṟumbu,* பெ. (n.) சிவப்புக் கொள்ளியெறும்பு; a species of red ant.

மறுவ. செவ்வெறும்பு

*[சுள் + எறும்பு]*

**சுள்ளை** *šuḷḷai,* பெ. (n.) *1.* மட்கலஞ்சுடுஞ் சூளை *(தொல்.சொல். 449, உரை);* potter's kiln. *2.* காளவாய்; kiln, furnace.

ம. சூள

*[சுள் → சுள்ளை]*

**சுள்ளைபிரி-த்தல்** *šuḷḷai-piri-, 4* செ.கு.வி. (v.i.) கருப்பத்துடன் இறந்தவள் பொருட்டுச் சூளையைப் பிரித்து மட்பாண்டம் ஏழைகட்கு வழங்குதல்; to purchase and distribute to the poor a kilnful of baked pots for propitiating the spirit of a woman deceased in pregnancy.

*[சுள் → சுள்ளை + பிரி-,]*

**சுளகம்** *šuḷagam,* பெ. (n.) உள்ளங்கை *(பிங்.);* hollow of the palm.

*[சுளகு + அம்]*

**சுளகு** *šuḷagu,* பெ. (n.) *1.* முறவகை; a kind of winnowing fan for separating chaff from grain. "சுளகிற் சீறிட நீக்கி" *(புறநா. 249). 2.* சுளகைப் போன்ற பதினாராவது (விசாக) விண்மீன் *(பிங்.);* the 16th nakṣatra, as resembling fan.



சுளகு

**சுளகுக்கொழுக்கட்டை** *šuḷagu-k-koḻukkaṭṭai,* பெ. (n.) கொழுக்கட்டைப் பணியார வகை *(யாழ்ப்.);* a kind of pastry.

*[சுளகு + கொழுக்கட்டை]*

**சுளகுகட்டு-தல்** *šuḷagukaṭṭu-, 5* செ.கு.வி. (v.i.) சுளகுமுடைதல்; to braid a winnowing fan.

*[சுளகு + கட்டு-,]*

**சுளகுப்பின்னல்** *šuḷagu-p-piṉṉal,* பெ. (n.) *1.* ஓலை முதலியவற்றிற் பின்னும் ஒருவகை முடையல்; a kind of braiding with coconut

leaves, rattan, etc. 2. ஒருவகைத் தலைப் பின்னல்; loose and wide plaiting of hair.

[சுளகு + பின்னல்]

**சுளி¹-தல்** *šuḷi-*, 2 செ.கு.வி. (v.i.) சினத்தல்; to be angry. "கழை காண்டலுஞ் சுளியுங் களியானை" (திருக்கோ. 111).

[சுள் → சுளி-,]

**சுளி²-த்தல்** *šuḷi-*, 4 செ.குன்றா.வி. (v.t) 1. சினத்தல்; to be angry with. "சுளிமுகக் களிறனான்" (சீவக. 298). 2. காலால் துகைத்தல்; to tread or trample upon in fury. "கொலை வேழம். . . . நிழலையுந் தான் சுளிக்கும்" (பு.வெ.12, வென்றிப். 8). 3. வெறுத்தல் (சைவச. மாணாக். 33); to dislike, detest.

[சுள் → சுளி-,]

**சுளி³-த்தல்** *šuḷi-*, 4 செ.கு.வி. (v.i.) வருந்துதல்; to feel pain. சுளிக்கச் சொல்லேல்.

[சுள் → சுளி-,]

**சுளி⁴** *šuḷi*, பெ. (n.) புளியாரைக்கீரை; sour sorrel (சா.அக.).

**சுளிக்கு** *šuḷikku*, பெ. (n.) முனை கூர்மையான ஒருவகைக் கைக்கோல் (வின்.); pike staff, sharp pointed stick carried by travellers.

க. சுளிக்கெ

**சுளிகா** *šuḷigā*, பெ. (n.) வாகை; sirissa tree (சா.அக.).

**சுளிகாமேற்புல்லுருவி** *šuḷiga-mēr-pulluruvi*, வாகை மரத்துப் புல்லுருவி; a parasite on sirissa tree (சா.அக.).

[சுளிகா + மேல் + புல் + உருவி]

**சுளிகை¹** *šuḷigai*, பெ. (n.) 1. முருங்கை; drum stick tree. 2. பாலை; iron wood tree (சா.அக.).

**சுளிகை²** *šuḷigai*, பெ. (n.) அணிவகை; a kind of ornament. "சுளிகையும் சுட்டிகையும்" (ஆதியுலா, 68).

**சுளிசனம்** *šuḷisaṉam*, பெ. (n.) சுளிகை¹ பார்க்க; see *šuḷigai¹* (சா.அக.).

**சுளிவு¹** *šuḷivu*, பெ. (n.) சினம்; anger. "மகிபதி சுளிவின்றி" (பாரத. பதினாறாம் போ. 77).

ம. சுளிவு

[சுளி → சுளிவு]

**சுளிவு²** *šuḷivu*, பெ. (n.) சுளுவு பார்க்க; see *šuḷuvu*.

[சுளி → சுளிவு]

**சுளீரென்று** *šuḷīr-eṉṟu*, வி.அ. (adv.) (வலி, வெயில் முதலியவை உடலைத் தாக்கும் போது) கடுமையாக; சுரீரென்று; a term denoting the severity or acuteness of pain or hot sun-shine etc. 'வெயில் சுளீரென்று முகத்தில் அடித்தது'.

[சுளீர் + என்று]

**சுளுக்கு¹-தல்** *šuḷukku-*, 5 செ.கு.வி. (v.i.) நரம்பு பிசகிக் கொள்ளுதல்; to be sprained; to be deranged, dislocated.

ம. சுளுக்குக

[சுளி → சுளுக்கு-,]

**சுளுக்கு²-தல்** *šuḷukku-*, 5 செ.குன்றாவி. (v.t.) வெறுப்புக்குறியாக முகத்தைச் சுருக்குதல்; to screw one's face in dissatisfaction, frown.

[சுளி² → சுளுக்கு-,]

**சுளுக்கு³** *šuḷukku*, பெ. (n.) நரம்புப்பிறழ்ச்சி (பதார்த்த. 289.); sprain.

ம., க., சுளுக்கு; தெ. இளுக்கு; து. உளுக்கு; பட. சிக்கு

**சுளுக்குக்காய்ச்சல்** *šuḷukku-k-kāyccal*, பெ. (n.) எலும்புமுறிவு அல்லது சுளுக்கினால் ஏற்படும் ஒருவகைக் காய்ச்சல்; fever following the sprain or fracture (சா.அக.).

[சுளுக்கு + காய்ச்சல்]

**சுளுக்குச்சுரம்** *šuḷukku-c-curam*, பெ. (n.) சுளுக்குக்காய்ச்சல் பார்க்க; see *šuḷukku-k-kāyccal* (சா.அக.).

[சுளுக்கு + சுரம்]

**சுளுக்குத்தசை** *šuḷukku-t-tašai*, பெ. (n.) 1. நரம்பு பிசகுதல்; sprain. 2. மூட்டுப்பிசகி மென் தோலில் காணும் வீக்கம்; the wrenching of a

joint with inflamation of the mucous membrane (சா.அக.).

*[சுளுக்கு + தசை]*

**சுளுக்குநாயகம்** *šuḷukku-nāyagam,* பெ. (n.) நரம்புச்சுளுக்கைப் போக்கும் மருந்துச்செடி வகை (பதார்த்த. 289); a medicinal plant capable of removing or curing all kinds of sprain.

*[சுளுக்கு + நாயகம்]*

**சுளுக்குப்பார்-த்தல்** *šuḷukku-p-pār-,* 4 செ.கு.வி. (v.i.) சுளுக்கு நீங்க மந்திரித்தல் (யாழ்ப்.); to utter magic spell for curing sprain.

*[சுளுக்கு + பார்-,]*

**சுளுக்குப்பிடி-த்தல்** *šuḷukku-p-piḍi-,* 4 செ.கு.வி. (v.i) சுளுக்கேறு-தல் பார்க்க; see *šuḷukkeṟu-*.

*[சுளுக்கு + பிடி-,]*

**சுளுக்குருவு-தல்** *šuḷukuruvu-,* 5 செ.கு.வி. (v.i.) சுளுக்குவழி பார்க்க; see *šuḷukku-vaḻi.*

மறுவ. சுளுக்கு வழித்தல்

*[சுளுக்கு + உருவு -,]*

**சுளுக்குவழி-த்தல்** *šuḷukku-vaḻi-,* 4 செகுன்றாவி. (v.i.) எண்ணெய் முதலியவற்றால் சுளுக்கு நீங்கும்படி மந்திரித்து உருவுதல் (உ.வ.); to masage a sprained limb with oil, ashes, leaves, etc., by way of cure.

*[சுளுக்கு + வழி]*

**சுளுக்கெடுப்போன்** *šuḷukkeḍuppōṉ,* பெ. (n.) எலும்புமுறிவு, சுளுக்கு முதலியவ்றறைத் தீர்ப்பவன்; an authorised person who professes skill in treating fractures and dislocations (சா.அக.).

*[சுளுக்கு + எடுப்போன்]*

**சுளுக்கேற்றிவிடல்** *šuḷukkeṟṟi-v-iḍal,* பெ. (n.) சுளுக்கினை அதிகப்படுத்துதல்; causing sprain to grow worse by improper handling or massage (சா.அக.).

*[சுளுக்கு + ஏற்றிவிடல்]*

**சுளுக்கேறு-தல்** *šuḷukkēṟu-,* 5 செ.கு.வி. (v.i.) சுளுக்கிக்கொள்ளுதல் (வின்.); to be sprained.

*[சுளுக்கு + ஏறு-,]*

**சுளுகன்** *šuḷugaṉ,* பெ. (n.) 1. சதுரப்பாட்டுப் பேச்சாளன் (யாழ்.அக.); clever ready - witted person.

ம. சுளுகன்

*[சுளுகு → சுளுகன்]*

**சுளுகு**[1] *šuḷugu,* பெ. (n.) 1. நுட்பவறிவு; keen intellect. 2. சதுரப்பாட்டுப் பேச்சு; clever talk 3. வலக்காரப்பேச்சு; enticing speech, cunning speech. "சுளுகுகள் விவரமொ டுரையிடுவார்" (திருச்செந் பு. செயந்திபுர. 55).

**சுளுகு**[2] *šuḷugu,* பெ. (n.) சுளுவு பார்க்க; see *šuḷuvu.*

**சுளுந்து** *šuḷundu,* பெ. (n.) 1. தீப்பந்தமாகப் பயன்படும் சுளுந்துக்கோரான் அல்லது வெள்ளை வெட்சி எனப்படும் ஒரு சிறிய மரம்; a kind of small tree its branches can be used as torch. 2. சுள்ளி முதலியவற்றாலான தீப்பந்தம்; torch made of dired twigs and leaves.

*[சுள்ளி → சுளு → சுளுந்து]*

**சுளுந்துக்கட்டை** *šuḷuntu-k-kaṭṭai,* பெ. (n.) சுளுந்து மரக்கழியில் எரிக்கும் தீப்பந்தம் (வின்); torch of ixora sticks.

*[சுளுந்து + கட்டை]*

**சுளுந்துக்காரன்** *šuḷundu-k-kāraṉ,* பெ. (n.) 1. தீப்பந்தக்காரன்; torch-bearer. 2. தீப்பந்தம் பிடிக்கும் வலையன்; person of Valaiyan sub caste whose occupation is torch-bearing.

*[சுளுந்து + காரன். காரன் உடைமைப் பெயரீறு]*

**சுளுந்துக்கோல்** *šuḷundu-k-kōl,* பெ. (n.) சுளுந்து பார்க்க; see *šuḷundu* (சா.அக.).

*[சுளுந்து + கோல்]*

**சுளுவு** *šuḷuvu,* பெ. (n.) 1. எளிமை; ease, facility. 2. இலேசு; lightness. சுமை சுளுவானது. 3. தணிவு; cheapness, as of price. விலை சுளுவாயுள்ளது.

தெ., க. சுளுவு

*[சுள் → சுளுவு]*

**சுளை** *šuḷai,* பெ. (n.) பலாப்பழ முதலியவற்றின் சதைப்பற்று; the pulp as of jack fruit. "சாரற் பலவின் சுளையொடு" (அகநா. 2).

**சுளைப்பிடாம்** *šuḷai-p-piḍām,* பெ. (n.) கம்பளி; (திவ். பெரிய. தி. 8,1,1. வியா.); woollen stuff.

[சுளை + படாம் → பிடாம்]

**சுளையம்** *šuḷaiyam,* பெ. (n.) திருட்டு (இ.வ); thieft, fraud.

**சுளையமாடு-தல்** *šuḷaiyam-āḍu-,* 5 செ.குன்றாவி. (v.t.) திருடுதல் (இ.வ.); to steal, defraud.

[சுளையம் + ஆடு]

**சுளையாக** *šuḷai-y-āga,* வி. அ. (adv.) மொத்தமாக, கணிசமாக; a good lumpsum or round sum. 'இந்தச் சேலைக்குச் சுளையாக ஐந்நூறு ரூபாய் பெற்றுக் கொண்டார்' (உ.வ.).

[சுளை → சுளையாக]

**சுற்கம்** *šuṟkam,* பெ. (n.) பெண்கொள்வோன் பெண்ணின் தந்தைக்குக் கொடுக்கும் பரிசம், (விவகார சங். சிறப். 89); marriage fee paid to the father of a maid by her suitor 2. பெண்ணுக்குக் கொடுக்குஞ் சீர்வரிசை; dowry. 3. வரி; tax, duty. "சுற்கத்தில் வரு செம்பொன்னும்" (திருக்காளத். பு. 11, 23).

**சுற்பம்** *šuṟpam,* பெ. (n.) செம்பு; copper "சுற்பம் பூரிசந்திரம் பொருவ" (ஞானா. 68; 15).

[சுல் → சுல்லம் = செம்பு. சுல்லம் → சுற்பம்]

**சுற்றத்தார்** *šuṟṟattār,* பெ. (n.) 1. உறவினர்; kinsmen, relations. "கணங்கொண்டு சுற்றத்தார் கல்லென் றலர" (நாலடி, 25). 2. அரசனோடு எப்போதும் உடனிருக்கும் அரசு அலுவலர்கள்; officials, attendants. "அரசர்க் குறுதிச் சுற்றத்தார்" (சூடா.).

ம. சுற்றத்தார்

[சுற்றம் → சுற்றத்தார்]

**சுற்றந்தழால்** *šuṟṟandaḻāl,* பெ. (n.) கிளைஞரை அணைத்துக் கொள்ளுகை (குறள்,அதி.53); cherishing one's kindred.

[சுற்றம் + (தழுவு →) தழால்]

**சுற்றம்** *šuṟṟam,* பெ. (n.) 1. சுற்றத்தார் பார்க்க; see *šuṟṟattār.* "நகைப்புறனாக நின் சுற்றம்" (புறநா. 29:25). 2. அரசர்க்குறுதிச் சுற்றம்; confidential servants of kings. 3. ஆயத்தார்; friends, attendants. "தொடிமாண் சுற்றமு மெம்மு முள்ளாள்" (அகநா. 17). 4. கூட்டம்; crowd, gathering. "ஓவியச் சுற்றத் துரையவிந் திருப்ப" (சிலப். 22 : 11).

ம. சுற்றம்; தெ. த்ச்சுட்டமு

[சுற்று → சுற்றம்]

**சுற்றளவு** *šuṟṟaḷavu,* பெ. (n.) வட்டவளவு; circumference, perimeter, girth.

ம. சுற்றளவு

[சுற்று + அளவு]

**சுற்றறிக்கை** *šuṟṟaṟikkai,* பெ. (n.) ஓர் அலுவலகத்தில் அல்லது அமைப்பில் செய்திகளைத் தொடர்புடைய அனைவருக்கும் தெரிவிக்க அனுப்பும் அறிக்கை; circular in an office or department etc. சுற்றறிக்கை வந்த பின்பே அயல்நாட்டுச் செல்கை பற்றித் தெரிய வந்தது'.

[சுற்று + அறிக்கை]

**சுற்றாடை** *šuṟṟāḍai,* பெ. (n.) 1. கட்டுத்துணி; a strip of cloth used in dressing bandage. 2. மாதவிடாயின்போது பெண்கள் உள்ளாகச் சுற்றிக் கொள்ளும் பழஞ்சீலை; a strip of old cloth, used by females as an underwear during menustrual period. 3. பிள்ளைப்பேறான பெண்டிர்க்கு 'வயிறு விழாமலிருக்க' வயிற்றைச் சுற்றி இறுகக்கட்டும் சீலை; a tight bandage used round the abdomen of a women immediately after delivery (சா.அக.).

[சுற்று + ஆடை]

**சுற்றாலை** *šuṟṟālai,* பெ. (n.) திருச்சுற்றாலை; temple enclosure.

க. சுட்டாலெ

[சுற்று → ஆலை]

**சுற்றிக்கட்டு[1]-தல்** *šuṟṟi-k-kaṭṭu-,* 5 செ.குவி. (v.i.) 1. எழுத்துச்சுழி வரைதல்; to write the curls of alphabetic letters. 2. தீச்செயலுக்கான

கலந்தாய்வு செய்தல், சூழ்ச்சிசெய்தல்; to form a conspiracy.

[சுற்றி + கட்டு-,]

**சுற்றிக்கட்டு[2]-தல்** *šuṟṟi-k-kaṭṭu-,* 5 செ.குன்றா.வி. (v.t.) 1. நீரை வேறுவழியில் திருப்புதல்; to divert water into a new channel. 2. பொய்யாகக் கற்பித்தல்; to fabricate. 3. கையூட்டுக் கொடுத்தல்; to bribe.

[சுற்றி + கட்டு-,]

**சுற்றிச்சுழல்(லு)-தல்** *šuṟṟi-c-cuḻal-,* 7 செ.குன்றா.வி. (v.t.) சுற்றுக்காலிடு- பார்க்க; see *šuṟṟu-k-kāliḍu-*. "என்னைச் சுற்றிச் சுழன்று போகானால்" (திவ். நாய்ச். 13:5).

[சுற்றி + சுழல்-,]

**சுற்றிச்சுழற்றி** *šuṟṟi-c-cuḻaṟṟi,* வி.எ. (adv.) 1. ஒரு மிக்க; altogether. 2. நேரின்றி; indirectly, in a circumlocutory fashion (செ.அக.).

[சுற்றி + சுழற்றி]

**சுற்றிச்சுழற்று-தல்** *šuṟṟi-c-cuḻaṟṟu-,* 5 செ.குன்றாவி. (v.i.) விளக்கமின்றி வளர்த்துப் பேசுதல்; to be vague, indirect or circumlocutory, as in speech.

[சுற்றி + சுழற்று-,]

**சுற்றித்திரி-தல்** *šuṟṟi-t-tiri-,* 2 செ.கு.வி. (v.i.) 1. அங்குமிங்கும் சென்று வருதல்; roam, wander 'மேய்ப்பாரின்றி ஆடுமாடுகள் அங்கு மிங்கும் சுற்றித் திரிந்தன'. 2. ஒரு பற்றுக்கோட்டிற்காக அலைதல்; wandering for a purpose. வேலைக்காக அவன் பலவிடங்களில் சுற்றித் திரிந்து இன்று ஒரு நல்ல வேலையில் அமர்ந்து விட்டான்.

[சுற்று → சுற்றி + திரி-,]

**சுற்றிப்பார்-த்தல்** *šuṟṟi-p-pār-,* 4 செ.கு.வி. (v.i.) 1. நேரில்சென்று பார்வையிடுதல்; to inspect. 'தீப்பிடித்த குடிசைகளை அமைச்சர் சுற்றிப் பார்த்தார்'. 2. பொழுதுபோக்காகச் சென்று பார்த்தல்; to visit, to go on a tour, sight see. 'குற்றாலத்தைச் சுற்றிப்பார்க்க இன்றளவும் எனக்கு வாய்ப்புக் கிட்டவில்லை'.

[சுற்று → சுற்றி + பார்-,]

**சுற்றிப்பிடி[1]-த்தல்** *šuṟṟi-p-piḍi-,* 4 செ.கு.வி. (v.i.) வயிறு மிகவும் நோதல்; to suffer from colic, to have acute, griping pain in the stomach.

[சுற்றி + பிடி-,]

**சுற்றிப்பிடி[2]-த்தல்** *šuṟṟi-p-piḍi-,* 9 செ.குன்றாவி. (v.t.) பற்றிக் கொள்ளுதல்; to hold in one's grip. (பாவம்) கரிசு அவனைச் சுற்றிப்பிடிக்கும்.

[சுற்றி + பிடி-,]

**சுற்றிப்போடு-தல்** *šuṟṟi-p-pōḍu-,* 9 செ.குன்றா.வி. (v.t.) 1. மிளகாய், உப்பு, சந்திமண், கிழிந்த துணி இவற்றை நோயாளி தலைமேற் சுற்றிப் பின் நெருப்பிலிட்டுக் கண்ணேறுகழித்தல்; to avert the effects of evil eye by waving round the affected person by chillies, salt, earth from cross roads and rags and throwing. 2. சுற்றியெடு-, பார்க்க; see *šuṟṟi-y-eḍu*.

[சுற்றி + போடு-,]

**சுற்றியெடு-த்தல்** *šuṟṟi-y-eḍu-,* செ.குன்றா.வி. (v.t.) மணமக்கள் முதலியோரின் தலை முடியைச் சுற்றிப் பணியாரம் முதலியவற்றை எறிந்து கண்ணேறு கழித்தல்; to wave cakes and other things round a newly married couple for averting evil eye.

[சுற்றி + எடு-,]

**சுற்றியெறி-தல்** *šuṟṟi-y-eṟi-,* 2 செ.குன்றாவி. (v.t.) சுற்றிப்போடு,1 பார்க்க; see *šuṟṟi-p-pōḍu,1-*.

[சுற்றி + எறி-,]

**சுற்றிலும்** *šuṟṟilum,* வி.அ. (adv.) சுற்றுமுற்றும், எங்கும்; on all sides; around. 'வீட்டைச் சுற்றிலும் தீப்பிடித்தபோது தெருக்காரர்கள் தீயை அணைத்தனர்'.

[சுற்று → சுற்றிலும்]

**சுற்றிலை** *šuṟṟilai,* பெ. (n.) சுருட்டுப் புகையிலையைச் சுற்றும் இலை (வின்.); wrapper or cover-leaf of cigar.

[சுற்று + இலை]

**சுற்றிவலி-த்தல்** *šuṟṟi-vali-,* 4 செ.குன்றாவி. (v.t.) வஞ்சனை முதலியவற்றால் வலிந்து கொள்ளுதல்; to extort by fraud or stratagem.

[சுற்று + வலி-,]

**சுற்றிவரு-தல்** *šuṟṟi-varu-, 18* செ.கு.வி. (v.i.) *1.* **உலா வருதல்;** go round as a pleasure tour or as an excursion 'உலகைச் சுற்றிவர எல்லாருக்கும் ஆசைதான்'. *2.* **பணிவுடன் அல்லது பத்தியுடன் சுற்றுதல்;** to go around due to obedience or prayers. கோயிலையோ கடவுள் திருவுருவையோ மூன்று முறை சுற்றிவருவது உலக நடைமுறை. *3.* **சுற்றிலும், சுற்றுமுற்றும்;** on all side, around.

*[சுற்று → சுற்றிவரு-,]*

**சுற்றிவளை-த்தல்** *šuṟṟi-vaḷai-, 4* செ.கு.வி. (v.i.) *1.* **நாலாப்பக்கமும் சூழ்ந்து கொள்ளுதல்;** to encircle on all sides. 'படைகள் எதிரியின் கோட்டையைச் சுற்றி வளைத்தன'. *2.* **செய்தியை நேரிடையாகக் கூறாது தேவையற்ற பிறவற்றையும் சேர்த்து விரிவாக்கிக்கூறுதல்;** to beat about the bush. 'தன் தோல்வியை ஒப்புக்கொள்ளாமல் சுற்றி வளைத்துப் பேசினான்.'

*[சுற்று → சுற்றி + வளை-,]*

**சுற்றிவாங்கு** *šuṟṟi-vāṅgu,* பெ. (n.) **தேசிக் கூத்திற்குரிய கால்வகை** (சிலப்.பக். 90, உரை) (nāṭyā.); a kind of leg pose.

*[சுற்றி + வாங்கு]*

**சுற்று[1]-தல்** *šuṟṟu-, 5* செ.கு.வி. (v.i.) *1.* **சுழன்று செல்லுதல்;** to revolve, circulate, turn around, spin, whirl. 'சக்கரம் சுற்றுகிறது'. *2.* **சுற்றிப் போதல்;** to take a circuitous or indirect course, meander, wind about. "அவன் நேர்வழியிற் போகாமற் சுற்றிப்போகின்றான்." *3.* **அலைதல்;** to move here and there, roam, wander about. "அவன் சும்மா சுற்றுகிறான்" *4.* **வளைந்தமைதல்;** to be coiled, to lie encircling. "காலிற் சுற்றிய நாகமென்ன" (கம்பரா.நீர்விளை. 11). *5.* **கிறுகிறுத்தல்;** to be giddy, dizzy. "பித்தத்தினால் தலை சுற்றுகிறது". *6.* **மனங் கலங்குதல்;** to be perplexed with difficulties.

ம. சுற்றுக; க. சுற்று; தெ. சுட்டு; து. சுத்துளி; கோத. சுச்; துட. தூத்; குட. சுதித்; கொலா. சுட்; நா. சுட்டி; பர். சுத்த; கட. சுடட்; குவி. சுத்தலி; பட. சுத்து

*[சல் → சுர் → சுற் → சுற்று]*

**சுற்று[2]-தல்** *šuṟṟu-, 5* செ.குன்றாவி. (v.t.) *1.* **சுற்றி வருதல்;** to go round, to circle. "போகா தெறும்பு புறஞ்சுற்றும்" (நாலடி, 337). *2.* **தழுவுதல்;** to entwine, embrace. "கொடிகள் ஒன்றையொன்று சுற்றிக்கிடக்கின்றன" *3.* **விடாதுபற்றுதல்;** to follow unceasingly. "அவன் அவனைச் சுற்றிக் கொண்டே இருக்கிறான்" *4.* **சூழ்ந்திருத்தல்;** to encompass, surround. "தோகை மாதர்கள் மைந்தரிற் றோன்றினர் சுற்ற" (கம்பரா. பிணிவீ. 45). *5.* **வளையச் சூடுதல்;** to wear around. "குடர் நெடுமாலை சுற்றி" (திருவாச. 6:30). *6.* **உடுத்துதல்** (திவா.); to tie around the waist, invest, gird. "கூறையரைச் சுற்றி வாழினும்" (நாலடி, 281). *7.* **வளையக்கட்டுதல்;** to coil up, as rope. "சுற்றுஞ் சடைக் கற்றைச் சிற்றம்பலவர்" (திருக்கோ. 134). *8.* **சுருட்டுதல்;** to roll up, as mat. "பாயைச் சுற்றுக". *9.* **சுழற்றுதல்;** to wave, whirl, brandish. "சிலம்பஞ் சுற்றுகிறான்". *10.* **கம்பி கட்டுதல்;** to string, fasten with fine wire, as coral beads, pearls. "பவழ மாலையைச் சுற்றிக் கொண்டு வா". *11.* **கவர்தல்;** to grasp, appropriate, steal. "அவனுடைய பொருளை யெல்லாம் சுற்றிக் கொண்டான்" (தெ.க.தொ. 2, 194). *12.* **வஞ்சித்தல்;** to circumvent, accomplish by trickery.

*[சல் → சுர் → சுற் → சுற்று]*

**சுற்று[3]** *šuṟṟu,* பெ. (n.) *1.* **வட்டமாய்ச் செல்லுகை** (சூடா.); passing round in an orbit, moving around. *2.* **அச்சின் மேற்சுழற்சி;** whirling on an axis, revolving, spinning. *3.* **சுருளுகை;** rolling, coiling. *4.* **சுற்றுவட்டம்;** circumference, periphery, bounding space. "ஏழுமுழச் சுற்றுடைய பிரபை". *5.* **சுற்றளவு;** circuit, compass, range, girth. "இதன் சுற்று மூன்றரைக் கல்". *6.* **சுற்றுவழி;** circuitous run, round about way zigzag route. "இந்தவழி சுற்று". *7.* **சுற்றிடம்;** regions on the border; neighbourhood. "சுற்றுறு முனிவர்யாரும்" (கம்பரா. மிதிலை. 113). *8.* **சுற்றப் பட்ட பொருள்;** coil, roll. *9.* **கால் விரலணி;** toe ring. "சுடுபொன் வளைஇய வீரமை சுற்றொடு" (கலித். 85). *10.* **மதில்** (பிங்.); fortification, compound wall. *11.* **கோயிலின் திருச்சுற்று;** surrounding arcade of a temple. "அந்த வாலயச் சுற்றெலாந் தெற்றிகள்" (சிவரக. மேரு. 10).

12. சொற்பொருள்களின் சிக்கல்; complication in thought and expression. "இந்தப் பாட்டின் கருத்துச் சுற்றாயிருக்கிறது".

க. சுட்டு., ம. சுற்று

[சல் → சர் → சுற் → சுற்று]

**சுற்றுக்கட்டு** *śuṟṟu-k-kaṭṭu,* பெ. (n.) 1. வீட்டைச் சுற்றியுள்ள புறக்கட்டு (இ.வ.); verandahs adjoining main house. 2. சுற்றுப்புறம் பார்க்க; see *śuṟṟu-p-puṟam.* 3. உறவினர்களின் கூட்டம்; large circle of relations. 4. கட்டுக்கதை; fabrication, fiction. 5. கையூட்டு; bribery.

[சுற்று + கட்டு]




**சுற்றுக்கட்டை** *śuṟṟu-k-kaṭṭai,* பெ. (n.) பணியாசிக் கட்டை (தஞ்சை.); mason's plastering plane.

[சுற்று + கட்டை]

**சுற்றுக்கடிதம்** *śuṟṟu-k-kaḍitam,* பெ. (n.) சுற்றுத் தரவு (இ.வ.) பார்க்க; see *śuṟṟu-t-taravu.*

[சுற்று + கடிதம்]

**சுற்றுக்கடுக்கன்** *śuṟṟu-k-kaḍukkaṉ,* பெ. (n.) கடுக்கன் வகை; a kind of ear-ring.

[சுற்று + கடுக்கண்]

**சுற்றுக்கண்** *śuṟṟu-k-kaṇ,* பெ. (n.) சுழற்கண்; whirling eye (சா.அக.).

[சுற்று + கண்]

**சுற்றுக்கல்** *śuṟṟu-k-kal,* பெ. (n.) கொப்பு முதலிய அணிகலன்களைச் சுற்றி வட்டமாக அமைக்கும் மணிகள்; precious stones set circularly on the fringe of koppu and similar ornaments. சுற்றுக்கற் கொப்பு.

[சுற்று + கல்]

**சுற்றுக்காரியம்** *śuṟṟu-k-kāriyam,* பெ. (n.) சுற்றுவேலை பார்க்க; see *śuṟṟu-vēlai* (செ.அக.).

[சுற்று + காரியம்]

**சுற்றுக்கால்** *śuṟṟu-k-kāl,* பெ. (n.) 1. சுற்றுப்புறம் பார்க்க; see *śuṟṟu-p-puṟam.* "சுற்றுக்காலில் கேட்டால் தெரியும்" (இவ.) 2. பக்கங்களிலிருந்து கசியும் நன்னீரையொதுக்கி விடுவதற்காக உப்பளத்தைச் சுற்றியெடுக்கப்படும் கால்வாய்; ring-channel round a salt pan for keeping off fresh water.

[சுற்று + கால்]

**சுற்றுக்காலிடு-தல்** *śuṟṟu-k-kāliḍu-,* செ.குன்றா.வி (v.t.) 1. விடாதுபற்றித் தொடர்தல்; to cling to one's legs. 2. விடாதுகெஞ்சுதல்; to importune.

[சுற்றுக்கால் + இடு-,]

**சுற்றுக்குடல்** *śuṟṟu-k-kuḍal,* பெ. (n.) வயிற்றுக்குள் சுற்றிக் கொண்டிருக்கும் குடல்; the position of the intestine attached to the abdominal wall by the fold of peritonium (சா.அக.).

[சுற்று + குடல்]

**சுற்றுக்குடுமி** *śuṟṟu-k-kuḍumi,* பெ. (n.) குடுமியைச் சுற்றி வளர்க்கும் மயிர்; short hair-growth round the tuft.

[சுற்று + குடுமி]

**சுற்றுக்குலைவு** *śuṟṟu-k-kulaivu,* பெ. (n.) இமை மயிர் உதிர்ந்து, கண்ணில் நீர்வடிதல், வீக்கம், வலி இவற்றையுண்டாக்கும் ஒருவகைக் கண்ணோய்; a disease of the eyelids an ulcerous form of margiral blepharitis marked by chornic inflammable of hair fedlicles and sebaceous glands of the margin of the eyes.

[சுற்று + குலைவு]

**சுற்றுக்கொடி** *śuṟṟu-k-koḍi,* பெ. (n.) நஞ்சுக் கொடி; naval card, umbilical cord (சா.அக.).

[சுற்று + கொடி]

**சுற்றுக்கொழுப்பு** *śuṟṟu-k-koḻuppu,* பெ. (n.) கொழுப்புக்குடல்; the lower part of the intestine or colon the outer part of which is covered with fat.

[சுற்று + கொழுப்பு]

**சுற்றுக்கோயில்** *śuṟṟu-k-kōyil*, பெ. (n.) பெருங்கோயிலின் சுற்றாலையில் உள்ள சிறு தெய்வக் கோயில்கள்; subordinate shrines connected with a main temples.

[சுற்று + கோயில்]

**சுற்றுக்கோள்** *śuṟṟu-k-kōḷ*, பெ. (n.) சுற்றிக் கொள்ளுகை; surrounding, enclosing. "நடுவூருள் வேதிகைச் சுற்றுக் கோட் புக்க" (நாலடி, 96).

[சுற்று + கோள்]

**சுற்றுச்சுவர்** *śuṟṟu-c-cuvar*, பெ. (n.) சுற்றுப்புற மதில்; compound wall.

[சுற்று + சுவர்]

**சுற்றுச்சுழல்** *śuṟṟu-c-cuḻal*, பெ. (n.) சுற்றுச் சுழற்சி பார்க்க; see *śuṟṟu-c-cuḻaṟci*.

**சுற்றுச்சுழற்சி** *śuṟṟu-c-cuḻaṟṟci*, பெ. (n.) 1. சுற்று வழி; meandering, zigzag route. 2. செயலில் வரும் முட்டுப்பாடு; intricacy, as of an affair. 3. குறித்த செய்தியை நேராகக் கூறாது வளர்த்துக் கூறுகை; circumlocutory expression; confused complicated treatment of a subject.

[சுற்று + சுழற்சி]

**சுற்றுஞ்சுழற்றுமாய்** *śuṟṟuñ-śuḻaṟṟumāy*, எ.வி. (adv.) நேரின்றி வளைந்து; in a zigzag or indirect manner. 'வழி சுற்றுஞ்சுழற்றுமா யிருக்கிறது' (கொ.வ.).

[சுற்றும் + சுழற்றும் + ஆய்]

**சுற்றுச்சூழல்** *śuṟṟu-c-cūḻal*, பெ. (n.) உயிரினங்கள் வாழும் பகுதியில் உள்ள காற்று, நீர் போன்றவை அடங்கிய இயற்கைச் சூழ்நிலை; environment. 'தொழிற்சாலைகள் பெருக்கத்தால் சுற்றுச்சூழல் கெட்டுவிட்டது'.

[சுற்று + சூழல்]

**சுற்றுடைமை** *śuṟṟuḍaimai*, பெ. (n.) வட்டவடிவு; roundness, plumpness "சுற்றுடைமைக்குஞ் செவ்வைக்கும் மூங்கில் போலே இருந்துள்ள தோள்" (ஈடு, 2, 5).

[சுற்று + உடைமை]

**சுற்றுத்தரவு** *śuṟṟu-t-taravu*, பெ. (n.) பலரும் ஒரே நேரத்திலறியும்படி அதிகாரிகள் பிறப்பிக்கும் ஆணை; circular order (C.G.).

[சுற்று + தரவு]

**சுற்றுத்தேவதை** *śuṟṟu-t-tēvadai*, பெ. (n.) 1. திருக்கோயில்களின் திருச்சுற்றுகளிலுள்ள உடன்சுற்றத் தெய்வம்; group of subordinate deities surrounding the chief deities of a temple. 2. பெரியோரை அடுத்திருப்பவர் (கொ.வ.); satellites of greatmen.

[சுற்று + தேவதை]

**சுற்றுப்பக்கம்** *śuṟṟu-p-pakkam*, பெ. (n.) சுற்றுப்புறம் பார்க்க; see *śuṟṟu-p-puṟam*.

**சுற்றுப்பட்டு** *śuṟṟu-p-paṭṭu*, பெ. (n.) சுற்றுப்புறம் பார்க்க; see *śuṟṟu-p-puṟam*.

தெ. த்ச்சுட்டுப் பட்டு

[சுற்று + பட்டு]

**சுற்றுப்படாகை** *śuṟṟu-p-paḍāgai*, பெ. (n.) சுற்று வட்டகை பார்க்க (நாஞ்.); see *śuṟṟuvaṭṭagai*.

[சுற்று + படாகை]

**சுற்றுப்பயணம்**[1] *śuṟṟu-p-payaṇam*, பெ. (n.) 1. அதிகார முறையில் அதிகாரிகள் பல ஊர்களுக்கும் சென்று வருகை; circuit, tour, as of an officer. "சுற்றுப்பயணம் வந்து ஐகந்நிர்வாகம் பண்ணுகை" (ஈடு, 4,5,1). 2. சுற்று வழி பார்க்க; see *śuṟṟuvaḻi*.

[சுற்று + பயணம்]

**சுற்றுப்பயணம்**[2] *śuṟṟu-p-payaṇam*, பெ. (n.) சுற்றுலா பார்க்க; see *śuṟṟulā*.

**சுற்றுப்பலி** *śuṟṟu-p-pali*, பெ. (n.) 1. கோயிலைச் சுற்றித் திக்குத்தேவதைகளுக்கு இடும் படையல்; offerings to the regents of the eight cardinal points, made round a temple in the respective directions. 2. கீழதிகாரிகளுக்குக் கொடுக்கும் கையூட்டு; bribe offered to persons in subordinate position.

[சுற்று + பலி]

**சுற்றுப்பாதை** *śuṟṟu-p-pādai*, பெ. (n.) 1. சுற்றுவழி; நேர்பாதையல்லாத வழி; way which is not short-cut. 2. மாற்றுவழி; by-pass.

3. விண்வெளியில் கோள் அல்லது செயற்கைக் கோள் சுற்றி வரும் நீள்வட்டப் பாதை; orbit. 'இந்தியா பறக்கவிட்ட செயற்கைக்கோள் சுற்றுப் பாதையை விட்டு விலகிவிட்டது'.

*[சுற்று + பாதை]*

**சுற்றுப்பிரகாரம்** *šuṟṟu-p-piragāram,* பெ. (n.) கோயிற்றிருச்சுற்று; surrounding arcade of temple.

*[சுற்று + பிரகாரம்]*

**சுற்றுப்புடை** *šuṟṟu-p-puḍai,* பெ. (n.) 1. பக்க வீக்கம்; swelling at the sides or in the surroundings. 2. பக்கம் புடைத்தல்; protruding at the sides (சா.அக.).

*[சுற்று + புடை]*

**சுற்றுப்புடைகொள்(ளு)-தல்** *šuṟṟu-p-puḍai-koḷ-* செ.குன்றாவி. (v.i.) பக்கம் புடைத்திருத்தல் (சிலப். 13, 162, அரும்.); to be pretruding at the sides.

*[சுற்று + புடைகொள்ளு-,]*

**சுற்றுப்புறம்** *šuṟṟu-p-puṟam,* பெ. (n.) 1. அயலிடம்; adjacent place, neighbourhood, vicinity. 2. குறிப்பிட்ட இடத்தை ஒட்டியுள்ள அல்லது சார்ந்த பகுதி; surroundings. 'நம்முடைய சுற்றுப்புறத்தை நாம்தான் தூய்மையாக வைத்துக்கொள்ள வேண்டும்'.

*[சுற்று + புறம்]*

**சுற்றுப்பூசை** *šuṟṟu-p-pūšai,* பெ. (n.) 1. சுற்றுக் கோயில்களில் செய்யும் பூசை; worship in *šuṟṟu-k-kōil.* 2. சுற்றுப்பலி பார்க்க; see *šuṟṟu-p-pali.*

*[சுற்று + பூசை]*

**சுற்றுப்பேழை** *šuṟṟu-p-pēḻai,* பெ. (n.) பேழைபோற் சுருண்டுகிடக்கும் பாம்பின் உடம்புமண்டலம்; coils of the lower part of snake's body, as basket-shaped. "நாபிக்குக் கீழ் மூன்று சுற்றுப் பேழை செய்துகொடு . . . ஸ்ரீ பதஞ்சலி தேவர்" (தெ.க.தொ. 2, 119).

*[சுற்று + பேழை]*

**சுற்றும்** *šuṟṟum,* கு.வி.எ. (adv.) சூழ; all around. "காலவான் கடுங்கணை சுற்றுங் கவ்வலால்" (கம்பரா. வருணனை. 55).

ம. சுற்றும்

*[சுற்று → சுற்றும்]*

**சுற்றும்பிற்றும்** *šuṟṟum-piṟṟam,* கு.வி.எ. (adv.) சுற்றுமுற்றும் பார்க்க; see *šuṟṟumuṟṟum.*

*[சுற்றும் + பிற்றும்]*

**சுற்றுமண்** *šuṟṟu-maṇ,* பெ. (n.) 1. ஓலை முடங்கலில் இடும் முத்திரை மண்; clay cover of an ōlai-letter for impressing stamp. "சுற்றுமண் மூடுதோட்டின் முடங்கல்" (கம்பரா. பள்ளி. 6). 2. வார்ப்புக்கருவின் புறம்பூசிய மண்; outer coating of the clay-mould for receving molten metal, as in casting brass.

*[சுற்று + மண்]*

**சுற்றுமணி** *šuṟṟu-maṇi,* பெ. (n.) மகளிர் கழுத்திலணியும் அணிவகை; an ornament worn by women round the neck.

*[சுற்று + மணி]*

**சுற்றுமதில்** *šuṟṟu-madil,* பெ. (n.) கோயில் முதலியவற்றைச் சூழ்ந்துள்ள மதில் (சிலப். 10, 31, அரும்.); surrounding wall, as of temple.

*[சுற்று + மதில்]*

**சுற்றுமுற்றும்** *šuṟṟu-muṟṟum,* கு.வி.எ. (adv.) நான்கு பக்கமும்; all around, on all sides. "சுற்றுமுற்றும் புதை நின்னை" (திருக்கோ. 43).

தெ. சுட்டுமுட்டு; க., து. சுட்டுமட்ட

*[சுற்றும் + முற்றும்]*

**சுற்றுலா** *šuṟṟulā,* பெ. (n.) பொழுது போக்காகவோ, ஓய்வாகவோ பிறவற்றிற்காகவோ மேற்கொள்ளும் சுற்றுச் செலவு; tour, excursion. 'வழக்கம் போல இந்த ஆண்டும் பள்ளிமாணவர்கள் குற்றாலத்திற்குச் சுற்றுலா சென்றுள்ளனர்'.

*[சுற்று (ம்) + உலா]*

**சுற்றுலாத்தலம்** *šuṟṟulā-t-talam,* பெ. (n.) சுற்றுலா மேற்கொள்ளுமிடம்; place of tourist importance.

*[சுற்றுலா + தலம்]*

**சுற்றுலாத்துறை** *šuṟṟulā-t-tuṟai,* பெ. (n.) சுற்றுலா மேற்கொள்ளும் அயல் நாட்டவரையும், உள்நாட்டவரையும் ஆற்றுப்படுத்தும் ஓர் (அரசுத்) துறை; a department intended to increase the tourism from the people as well as foreigners. 'இந்த

ஆண்டு சுற்றுலாத்துறை மூலம் அரசிற்கு ஐநூறுகோடி உருபா வருமானம் கிட்டியுள்ளது'.

*[சுற்றுலா + துறை]*

**சுற்றுலாப்பயணிகள்** *śurrulā-p-payaṇigaḷ,* பெ. (n.) சுற்றுலாச் செல்வோர்; tourists. 'இந்தியாவிற்கு இந்த ஆண்டு ஐம்பது இலக்கம் சுற்றுலாப்பயணிகள் வந்துள்ளனர்'.

*[சுற்றுலா + பயணிகள்]*

**சுற்றுலாமாளிகை** *śurrulā-māḷigai,* பெ. (n.) சுற்றுலாச் செல்வோர் தங்கும் விடுதி, விருந்தினர் விடுதி; tourist lodge or hotel, government's guest house.

*[சுற்றுலா + மாளிகை]*

**சுற்றுவட்டகை** *śurru-vaṭṭagai,* பெ. (n.) சுற்றுப்புறச் சிற்றூர்கள்; surrounding country or villages.

*[சுற்று + வட்டகை]*

**சுற்றுவட்டம்** *śurru-vaṭṭam,* பெ. (n.) சுற்றுவட்டகை பார்க்க; see *śurru-vaṭṭagai.*

*[சுற்று + வட்டம்]*

**சுற்றுவட்டாரம்** *śurru-vaṭṭāram,* பெ. (n.) சுற்றுவட்டகை பார்க்க; see *śurru-vaṭṭagai.*

*[சுற்று + வட்டாரம்]*

**சுற்றுவரவு** *śurru-varavu,* பெ. (n.) 1. சூழ்ந்து வருகை; moving in a circle, passing around. 2. வட்டமிட்டோடும் குதிரைச்சாரியை வகை; running of a horse in a circular course. "பதினெட்டு வகைப்பட்ட சுற்றுவரவினையும்" (பு.வெ. 12, வென்றிப். 13, உரை). 3. விழாக் காலங்களில் வரும் மேல்வரும்படி; extra income, as at festival.

*[சுற்று + வரவு]*

**சுற்றுவழி** *śurru-vaḻi,* பெ. (n.) 1. நேரற்ற பாதை; roundabout or circuitous way, indirect course. 2. தந்திரச்செயல், கீழறுப்பு; secret, underhand method.

*[சுற்று + வழி]*

**சுற்றுவளையம்**[1] *śurru-vaḷaiyam,* பெ. (n.) 1. உருட்டி விளையாடும் சக்கரம்; hoop trundled along by children. 2. வட்டம்; round, circuit. "இந்தச் சாமான்கள் ஒரு சுற்று வளையத்திற்குக் கூடக் காணாது". 3. தெருவிற் சுற்றிக் கொண்டிருக்கை; wandering in the street. "ஊரைச் சுற்றுவளையம் போடுகிறான்". 4. கை கட்டிப் பணிபுரிதல்; dancing attendance, as at court.

*[சுற்று + வளையம்]*

**சுற்றுவளையம்**[2] *śurru-vaḷaiyam,* பெ. (n.) கருப்பை நழுவாமல் இருக்கும்படி அல்குலிற் புகட்டும் வளையம்; a ring pessary placed in the vagina to support the uterus (சா.அக.).

*[சுற்று + வளையம்]*

**சுற்றுவாடை** *śurru-vāḍai,* பெ. (n.) சுற்றுப்புறம்; அண்டையயல் பகுதிகள்; nearby places. 'சாத்தூர் சுற்றுவாடையில் தீப்பெட்டித் தொழிற்சாலைகளே உள்ளன'.

*[சுற்று + வாடை]*

**சுற்றுவாரி** *śurru-vāri,* பெ. (n.) சுவருக்கப்பால் நீண்டுள்ள கூரை; projecting roof of a house, eaves.

*[சுற்று + வாரி]*

**சுற்றுலாவிடுதி** *śurrulā-viḍudi,* பெ. (n.) சுற்றுலாமாளிகை பார்க்க; see *śurrulā-māḷigai.*

*[சுற்றுலா + விடுதி]*

**சுற்றுவீதி** *śurru-vīdi,* பெ. (n.) 1. கோயிலைச் சுற்றியுள்ள தெரு; streets surrounding a temple. 2. வளைந்து செல்லும் தெரு; winding street.

*[சுற்று + வீதி]*

**சுற்றுவேலை** *śurru-vēlai,* பெ. (n.) உதவித் தொழில்; minor work, as of household.

*[சுற்று + வேலை]*

**சுற்றோட்டம்** *śurrōṭṭam,* பெ. (n.) 1. வட்டமாகச் சுற்றிவரல்; movement in a regular or circuitous course. 2. அரத்தம் நாடிநாள வழியாக உடம்பினுள் சுற்றி வரல்; the blood circulation in the body (சா.அக.).

*[சுற்று + ஓட்டம்]*

**சுற்றொத்தி** *śurrotti,* பெ. (n.) சிற்றொத்தி பார்க்க; see *śirrotti.*

**சுற** *šura,* பெ. (n.) சுறா; shark. "சுறவழங்கு மிரும்பௌவத்து" *(பொருந. 203).*

*[சுற → சுறா]*

**சுறட்டன்** *šurattan,* பெ. (n.) தொந்தரைக்காரன் *(யாழ்ப்.);* abstinate person, one who creates trouble.

*[சுறட்டு → சுறட்டன்]*

**சுறட்டு** *šurattu,* பெ. (n.) 1. இணக்கமின்மை; stubbornness, pertinacity, obstinacy. 2. தொந்தரை; troublesomeness, quarrelsome ness. 3. சிக்கு; difficulty, intricacy. 4. தலையிடுகை; meddling, interference.

*[ஒருகா. துறட்டு → சுறட்டு]*

**சுறட்டுக்கோல்** *šurattu-k-kōl,* பெ. (n.) துறட்டுக் கோல்; an iron crook.

*[சுறட்டு + கோல்]*



சுறட்டுக்கோல்

**சுறட்டுப்பிடி** *šurattu-p-pidi,* பெ. (n.) 1. முரட்டுப் பிடி; holding tightly and roughly. 2. முரட்டுத் தனம்; stubborness, obstinacy *(சா.அக.).*

*[சுறடு + பிடி]*

**சுறட்டுவலி** *šurattu-vali,* பெ. (n.) 1. தொந்தரவான வலி; persistent pain giving much trouble. 2. குறட்டைவலி; cram. 3. குறண்டல்வலி; spasmodic pain. 4. விடாப்பிடி; stubbornness *(சா.அக.).*

*[சுறடு + வலி]*

**சுறட்டை** *šurattai,* பெ. (n.) பசையற வறண்டது; that which is dried up. "சுறட்டைத்தலை" *(சங்.அக.).*

*[சுறண்டு → சுறட்டு → சுறட்டை]*

**சுறட்டைத்தலை** *šurattai-t-talai,* பெ. (n.) தலைப்பொடுகு; dandruff *(சா.அக.).*

*[சுறட்டை + தலை]*

**சுறண்டி** *šurandi,* பெ. (n.) ஒருவகைக்கரண்டி; a kind of spoon for scraping; a scraper *(சா.அக.).*

*[சுறண்டு → சுறண்டி]*

**சுறண்டு-தல்** *šurandu-,* 5 செ.குன்றாவி. (v.t.) சுரண்டியெடுத்தல்; removing by scraping as in wound *(சா.அக.).*

ம. சுரண்டு; க. கெரண்டு

*[சுரண்டு → சுறண்டி]*

**சுறணகி** *šuranagi,* பெ. (n.) காட்டுக்கரணை; wild suran *(சா.அக.).*

**சுறணம்** *šuranam,* பெ. (n.) காறாக்கரணை; white yam *(சா.அக.).*

**சுறவம்** *šuravam,* பெ. (n.) 1. சுறவு பார்க்க; see *šuravu.* "எயிற்றிறப் பாய்ந்தது சுறவம்" *(திருவிளை. வலைவீசி, 37).* 2. தமிழாண்டின் முதல் மாதம் (தை); the first month of the Tamil year.

*[சுறவு → சுறவம்]*

**சுறவு** *šuravu,* பெ. (n.) 1. சுறாமீன்; shark-fish. 2. சுறாவினம்; fish of shark family. "சுறவினத் தன்ன வாளோர் மொய்ப்ப" *(புறநா. 13:7).*

*[சுற → சுறவு]*

**சுறவுக்குழை** *šuravu-k-kulai,* பெ. (n.) சுறவுமீன் வடிவாகச் செய்த காதணி (இலக்.அக.); an ear ornament shaped like fish.

*[சுறவு + குழை]*

**சுறவுக்கோடு** *šuravu-k-kōdu,* பெ. (n.) நெய்தல் நில மக்கள், தெய்வமாகவைத்து வணங்கும் சுறாமீன்கொம்பு (பட்டினப், 86, 87, உரை); jaw-bone of the swordfish, worshipped by the people of the coastal regions.

*[சுறவு + கோடு]*

**சுறவுவாய்** *šuravu-vāy,* பெ. (n.) சுறவுவாய் என்னுந் தலைக்கோலம்; an ornament shaped like a shark's mouth, worn by women on the head. "சுறவுவா யமைத்த" *(பெரும்பாண். 385).*

*[சுறவு → வாய்]*

**சுறவை** *šuṟavai*, பெ. (n.) *1. சுரப்பு அல்லது வீக்கம்;* swelling. *2. உணர்ச்சி;* sensitiveness. *3. சுறுசுறுப்பு;* diligence. *4. வேர்க்குரு;* prickly heat *(சா.அக.).*

மறுவ. சுள்ளக்கம்

*[சுர → சுற → சுறவை]*

**சுறா**[1] *šuṟā*, பெ. (n.) *1.* **கடல்மீன்களில் பெருங்கேடு தரும் பேரின மீன்வகையான சுறாமீன்;** shark fish. *2. சுறவவோரை;* capricorn of the zodiac. *3. கோலாமீன்;* flyingfish, sword fish. *4. நாய்மீன்;* dog fish. *5. கொட்டை வாளை;* two spotted shark-butter fish *(சா.அக.).*

ம. சுறா; க. கொற; தெ. சொற

**சுறா வகைகள்**

*1. குரங்கன்சுறா; 2. வழுவன்சுறா; 3. செஞ்சுறா; 4. புள்ளிச்சுறா; 5. கொம்பன்சுறா; 6. வெள்ளைச் சுறா; 7. பால்சுறா; 8. மணிச் சுறா; 9. ஓங்கிற்சுறா; 10. மட்டிச்சுறா; 11. வெண்ணெய்ச்சுறா; 12. கோலாச்சுறா; 13. வெள்ளைக்கோலாச்சுறா; 14. காலன்சுறா; 15. நெளிஞ்சுறா; 16. ஆரணிச்சுறா; 17. பேய்ச் சுறா; 18. மேயுஞ்சுறா; 19. ஒரு கொம்பன்சுறா; 20. புடுக்கன்சுறா; 21. புலிச்சுறா; 22. பறங்கிச் சுறா; 23. பருவாய்ச்சுறா.*



சுறா

**சுறா**[2] *šuṟā*, பெ. (n.) *1. உடம்பின் அழுக்கு;* filth or dirt of the body. *"சுறாப் பிடித்திருக்கிறது"* *2. உடம்பிற் பூக்கும் உப்பு;* a kind of eczema giving white saltish appearance to the skin.

*[சிராய் → சிரா → சுறா]*

**சுறாக்கவடி** *šuṟā-k-kavaḍi*, பெ. (n.) *சிறுவர் விளையாட்டு வகை (யாழ்.அக.);* a kind of boy's game.

*[சுறா + கவடி]*

**சுறாக்களிறு** *šuṟā-k-kaḷiṟu*, பெ. (n.) *ஆண் சுறா;* male-shark.

*[சுறா + களிறு]*

**சுறாக்கொம்பு** *šuṟa-k-kombu*, பெ. (n.) *சுறவுக் கோடு பார்க்க;* see *šuṟāvu-k-kōḍu.*

*[சுறா + கொம்பு]*

**சுறாச்சிறை** *šuṟa-c-ciṟai*, பெ. (n.) *சுறாமீன் இறகு;* shark fins.

*[சுறா + சிறை]*

**சுறாத்தலைக்கல்** *šuṟa-t-talai-k-kal*, பெ. (n.) **மந்திரக் கலைக்குப் பயன்படும் சுறாமீன் தலையிலிருந்து எடுக்கப்படும் கல்;** a stone from the shark's head, used in magic *(சா.அக.).*

*[சுறா + தலை + கல்]*

**சுறாத்துருமம்** *šuṟā-t-turumam*, பெ. (n.) தேவதாரு; deodar tree *(சா.அக.).*

*[சுறா + துருமம்]*

**சுறாநெய்** *šuṟā-ney*, பெ. (n.) **வழவழப்பும் வெகுட்டலும் உடையதாகவும், ஊதைநோய், இருமல் போன்றவற்றை நீக்கி, உடம்பிற்கு வலுவைக் கொடுப்பதுமான ஒருவகை நெய்;** shark oil used as a substitute for codliver oil *(சா.அக.).*

மறுவ. திருவிதாங்கோட்டுநெய், மங்காரநெய்

*[சுறா + நெய்]*

**சுறாப்பாரை** *šuṟā-p-pārai*, பெ. (n.) *1.* **ஒருவகைக் கடல்மீன்** *(யாழ்ப்.);* a sea fish, shark pauray. *2.* **குமரப்பரை என்னும் கடல் மீன்;** a kind of sea fish *(சா.அக.).*

*[சுறா + பாரை]*

**சுறாமீன்செப்பட்டை** *šuṟāmīṉ-šeppaṭṭai*, பெ. (n.) **சுறாமீன்சிறகு;** shark's fin *(சா.அக.).*

*[சுறா + மீன் + செப்பட்டை]*

**சுறாமீனெய்** *šuṟā-mīṉey*, பெ. (n.) **சுறாநெய்** பார்க்க; see *šuṟā-ney* *(சா.அக.).*

*[சுறா + மீன் + நெய்]*

**சுறாமுள்** *šuṟā-muḷ*, பெ. (n.) **சுறாமீன் எலும்பு;** shark bones *(சா.அக.).*

*[சுறா + முள்]*

## சுறாமீன் வகைகள்

சென்னை-600



குரங்கன் சுறா



வழுவன் சுறா



செஞ்சுறா



புள்ளிச் சுறா



கொம்பன் சுறா



வெள்ளைச் சுறா



பால் சுறா



ஓங்கிற் சுறா

**சுறாவேறு** *šuṟā-vēṟu,* பெ. (n.) சுறாக்களிறு பார்க்க; see *šuṟā-k-kaḷiṟu* (சா.அக.).

*[சுறா + ஏறு]*

**சுறாளம்** *šuṟāḷam,* பெ. (n.) 1. சினம்; anger. 2. வேகம்; swiftness, as of horse.

*[சுறு + ஆலாம்]*

**சுறிமுகத்தந்தம்** *šuṟi-muga-t-tandam,* பெ. (n.) யானைக்கொம்பு; elephant's tusk (சா.அக.).

*[சுறி + முகம் + தந்தம்]*

**சுறீரெனக்கடி-த்தல்** *šuṟīr-eṉa-k-kaḍi-,* 4 செ.குன்றாவி. (v.i.) 1. கொட்டுதல்; to sting as a scorpion, or ant or honey bee etc. 2. கடுமையான வலியுண்டாகும்படிக் கடித்தல்; to bitting vehamently so as to cause acute pain. 3. கடுத்தல்; to sting pain.

*[சுறீர் + என + கடி-,]*

**சுறீரெனல்** *šuṟīr-eṉal,* பெ. (n.) 1. கடுத்தற்குறிப்பு; stinging, smarting excessively. 'எறும்பு சுறீரென்று கடித்தது' (உ.வ.). 2. ஓர் ஒலிக்குறிப்பு; hissing, as water when in contact with fire. 3. அச்சக்குறிப்பு; being struck with fear or horror.

க. சறீரென

*[சுறீர் + எனல்]*

**சுறீரெனவலி-த்தல்** *šuṟīr-eṉavali-,* 4 செ.கு.வி. (v.i.) கடுத்துவலித்தல்; to shoot as quick darting pain (சா.அக.).

*[சுறீர் + என + வலி-,]*

**சுறு** *šuṟu,* பெ. (n.) மயிர் முதலியன, தீயிற் பொசுங்குதலால் உண்டாகும் நாற்றம்; stench, as of burning hair "கூந்தலின் சுறு நாறுகின்றது" (கம்பரா. இராவணன். மந்திர. 13).

*[சுள் + சுறு]*

**சுறுக்கன்** *šuṟukkaṉ,* பெ. (n.) 1. சுறுசுறுப் புள்ளவன்; active, diligent person. 2. சினமுடையவன்; hasty, irritable person.

*[சுருக்கு → சுறுக்கன்]*

**சுறுக்கு** *šuṟukku,* பெ. (n.) 1. விரைவு; quickness, rapidity. 2. சுறுசுறுப்பு; diligence, briskness. 3. பரபரப்பு; haste, hastiness. 4. கடுமை; irritableness, severity. 5. கூர்மை; sharpness, keenness. 6. காரம்; pungency, poignancy. 7. விலையேற்றம்; high-price. 'புதுநெல் இப்போது சுறுக்காயிருக்கிறது' (உ.வ.). 8. சந்தை விலை; demand, as in market. 'சம்பாவுக்கு இப்போது சுறுக்குண்டு' (உ.வ.).

ம. சுறுக்கு; க. சுறுகு; தெ. சுருக்கு; து. சுருக்கு; கோத. சுர்கு; குட. சுரிகி

*[சுள் → சுறு → சுறுக்கு]*

**சுறுக்குக்காட்டு-தல்** *šuṟukku-k-kāṭṭu-,* செ.கு.வி. (v.i.) அடிகொடுத்து அச்சங்காட்டுதல்; to give warning cut, as to a school boy.

*[சுறுக்கு + காட்டு-,]*

**சுறுக்குத்தாக்கு-தல்** *šuṟukku-t-tākku-,* 5 செ.கு.வி. (v.i.) சுறுக்குக்காட்டு-, பார்க்க; see *šuṟukku-k-kāṭṭu-.*

*[சுறுக்கு + தாக்கு]*

**சுறுக்கெனல்** *šuṟukkeṉal,* பெ. (n.) 1. விரைவுக் குறிப்பு; onom. expr. signifying, quickness. 2. கடுத்தற்குறிப்பு; onom. expr. signifying stinging, smarting. "பாந்தள்சீறிச் சுறுக்கெனவே கடிக்க" (சிவரக. அபுத்திபு. 13). 3. திடீரென்று குத்துதற்குறிப்பு; onom. expr. signifying sudden prick.

க. சுருக்கெனெ

*[சுறுக்கு + எனல்]*

**சுறுக்கொள்(ளு)-தல்** *šuṟu-k-koḷ(ḷu)-,* 16 செகுவி. (v.i.) 1. மயிர்க்கூச்செறிதல், மயிர்ச்சிலிர்த்தல்; stand on end as hair to get the goose-skin. "மீசை சுறுக்கொள" (பிரபோத. 25 : 34). 2. தீய்ந்து போதல்; to become chared or scorched. "மாலைவண்டொடுஞ் சுறுக்கொண்டேற" (கம்பரா. அட்ச. 1).

*[சுறு + கொள்(ளு)-,]*

**சுறுசுறு-த்தல்** *šuṟu-šuṟu-,* 4 செ.கு.வி. (v.i.) விரைவுபடுதல்; to be in a hurry; to be very active (செ.அக.).

*[சுறு + சுறு-,]*

**சுறுசுறுப்பு** *šuru-šuruppu*, பெ. (n.) 1. ஊக்கம்; diligence industry. 2. மிகுவிரைவு (வின்.); bustling, hurrying.

ம. சுறுசுறுப்பு, சுறுகுறுக்கு; க. சுருகுருக; தெ. சுரட்சுர

*[சுறுசுறு → சுறுசுறுப்பு]*

**சுறுசுறெனல்** *šuru-šurenal*, பெ. (n.) 1. தீயில் தண்ணீர் பட்டாற் போன்ற ஓர் ஒலிக்குறிப்பு; onom. expr. signifying hissing, as water when in contact with fire. 2. விரைவுக் குறிப்பு; quick rising, as of anger; rapid spreading as of fire, poison in the system. 3. உட்செல்லுதற்குறிப்பு; penetrating, going down with ease, as in quicksand. 4. கடுத்தற்குறிப்பு; stinging, as thorn.

க. சுறுசுரெனெ

*[சுறுசுறு + எனல்]*

**சுறுதி** *šurudi*, பெ. (n.) மிகுவிரைவு; swiftness, quickness, alacrity. 'சுறுதியா யோடு' (வின்.).

ம. சுறுதி

*[சுறு + தி → சுறுதி]*

**சுறுமாக்கல்** *šurumā-k-kal*, பெ. (n.) அஞ்சனக் கல்; black antimony (சாஅக.).

மறுவ. சுருமாக்கல்

U. surmā

*[சுறுமா + கல்]*

**சுறை** *šurai*, பெ. (n.) கொற்றான் (மலை.); parasitc leafless plant.

*[சுறு → சுறை]*

**சுறோணிதம்** *šurōṇidam*, பெ. (n.) நாகமல்லி (பச்.மூ.); ringworm root.

**சுறோணிதவழலை** *šuroṇida-vaḻalai*, பெ. (n.) இந்துப்பு; rock salt (சாஅக.).

*[சுறோணிதம் + வழலை]*

**சுன்** *šun*, பெ. (n.) 1. வெண்மை; whiteness. 2. பாழ்; சுன்னம்; சுழி; zero, cipher (சாஅக.).

**சுன்னக்குகை** *šunna-k-kugai*, பெ. (n.) 1. சுண்ணாம்பினாற் செய்த மூசை; crucible made of lime stone. 2. சுண்ணமருந்தால் செய்து பொன்னாக்கத்திற்குப் பயன்படுத்தப் படும் மூசை; a crucible made of alkaline salts and used in alchemy (சாஅக.).

*[சுன்னம் + குகை]*

**சுன்னச்சி** *šunnacci*, பெ. (n.) சத்திசாரம்; an acrid salt (சாஅக.).

*[சுன்னம் + சி]*

**சுன்னப்புச்சவுடு** *šunnappu-c-cavuḍu*, பெ. (n.) உழமண்; fuller's earth (சாஅக.).

*[சுன்னப்பு + சவடு]*

**சுன்னமேகம்** *šunna-mēgam*, பெ. (n.) சிறுநீரில் சுன்னச்சத்து அதிகமாகவரும் ஒருவகை நோய்; a kind of mega disease in which the urine comes with plenty of calcium salts (சாஅக.).

*[சுன்னம் + மேகம்]*

**சுன்னம்**[1] *šunnam*, பெ. (n.) 1. சுண்ணாம்பு; lime 2. மாழைகளைப் புடமிட்ட தமிழ் மருந்து; a calcium compund prepared from metals (சாஅக.).

*[சுன் → சுன்னம்]*

**சுன்னம்**[2] *šunnam*, பெ. (n.) சுழி, பாழ்; zero, cipher, circular mark.

*[சுல் → சுன் → சுன்னம் (வே.க.)]*

த. சுன்னம் → Skt. šunnya

Pkt. sunna

**சுன்னம்**[3] *šunnam*, பெ. (n.) வெண்மையான மருந்துச் சரக்கு; a kind of white medicine (சாஅக.).

*[சுன் → சுன்னம்]*

**சுன்னாகம்** *šunnāgam*, பெ. (n.) வெண்ணாவல்; white jamoon.

**சுன்னாரிப்புல்** *šunnāri-p-pul*, பெ. (n.) சுக்குநாறிப்புல்; ginger grass spice grass, citronella grass or roussa oil grass (சாஅக.).

மறுவ. காவட்டம்புல்; மாந்தப்புல்

*[சுன்னாரி + புல்]*

**சுன்னிதம்** *šunnidam*, பெ. (n.) நுண்மை; very minute (சாஅக.).

*[சுன்னம்[2] → சுன்னிதம்]*

**சுன்னுக்கட்டி** *šuṉṉu-k-kaṭṭi,* பெ. (n.) 1. பாற்கட்டி (வின்.); cheese (சா.அக.). 2. திரட்டுப்பாற்கட்டி; condensed milk.

*[சல் → சன் → சன்னு + கட்டி. சல் → சன் = வெண்மை]*

**சுனக்குடம்** *šuṉa-k-kuḍam,* பெ. (n.) சதுரக்கள்ளி (மலை.); square spurge.

*[சன் → சனம் + குடம்]*

**சுனை[1]-தல்** *šuṉai-,* 4 செ.கு.வி. (v.i.) 1. குழைதல் (பிங்.); to be soft and pulpy to be mashed. 2. வாடுதல்; to fade, droop.

*[சள் → சன் → சனை]*

**சுனை[2]-த்தல்** *šuṉai-,* 4 செ.கு.வி. (v.i.) தினவெடுத்தல்; to tingle, itch. "சுனைத்தெழுதல் காமுறுவர்" (நாலடி., 313).

ம. சுனெக்க

*[சல் → சன் → சனை-,]*

**சுனை[3]** *šuṉai,* பெ. (n.) 1. தினவு; itching. "நாத்தின்னு நல்ல சுனைத்து" (நாலடி., 335). 2. சுரசுரப்பு; roughness, sharpness. 3. கரும்பு, சோளம் போன்றவற்றின் தோகைகளிலும், கம்பு சோளம் போன்றவற்றின் கதிர்களிலும் காணப்படும் முட்போன்ற பகுதி; prickle. as in leaves, stalks, etc., down on fruits.

ம. சுன; க. டொனெ, தொனெ; தெ. தொன

**சுனை[4]** *šuṉai,* பெ. (n.) 1. நீருற்று; spring. 2. நீர்நிலையும் நிழல் மரமுமுள்ள பசும்புல் தரை; grassy. 3. மலைச்சுனை; mountain spring. "பூவமன் றன்று சுனையுமன்று" (கலித். 55).

**சுனைக்கரந்தை** *šuṉai-k-karandai,* பெ. (n.) மேனியில் பட்டால் அரிக்கும் ஒருவகைக் கரந்தைச்செடி; a kind of basil coming in contact with the body causes itching sensation (சா.அக.).

மறுவ. திருநீற்றுப்பச்சை

*[சுணை → சுனை[3] + கரந்தை]*

**சுனைக்காஞ்சொறி** *šuṉai-k-kāñjoṟi,* பெ. (n.) செந்தொட்டி; stinging nettle (சா.அக.).

*[சுனை + காஞ்சொறி]*




**சுனைக்கொடி** *šuṉai-k-koḍi,* பெ. (n.) முசுமுசுக்கை; rough bryony (சா.அக.).

*[சுனை + கொடி]*

**சுனைக்கோரை** *šuṉai-k-kōrai,* பெ. (n.) நமைச்சலை உண்டாக்கும் ஒருவகைக் கோரை; a kind of bristly sedge grass causing itching when touched bristly kōray (சா.அக.).

*[சுனை + கோரை]*

**சுனைத்தவம்** *šuṉai-t-tavam,* பெ. (n.) பூலாங்கிழங்கு; poolah root (சா.அக.).

**சுனைத்தவிடு** *šuṉai-t-taviḍu,* பெ. (n.) உமித்தவிடு; bran (சா.அக.).

*[சுனை + தவிடு]*

**சுனைத்துளசி** *šuṉai-t-tuḷaši,* பெ. (n.) எலிக்கடி நஞ்சைப் போக்கும் முள்துளசி; thorny basil, it cures rat bite (சா.அக.).

*[சுனை + துளசி]*

**சுனைத்தேவதாரி** *šuṉai-t-tēvadāri,* பெ. (n.) முள்ளுத்தேவதாரு; a kind of bristly deodar. (சா.அக.).

*[சுனை + தேவதாரி]*

**சுனைத்தோரிதம்** *šuṉai-t-tōridam,* பெ. (n.) பூனைக்காஞ்சொறி; a small climbing nettle jragia involucrate (சா.அக.).

*[சுனை + தோரிதம்]*

**சுனைப்பாசி** *šuṉai-p-pāši,* பெ. (n.) கொடிப்பாசி; moss creeping upon water (சா.அக.).

*[சுனை + பாசி]*

**சுனைப்புல்** *šuṉai-p-pul,* பெ. (n.) ஒருவகைப் புல்; a coarse grass (சா.அக.).

[சுனை + புல்]

**சுனைப்புன்கு** *šuṉai-p-puṉgu,* பெ. (n.) மணிப்புன்கு; rusty soapnut (சா.அக.).

[சுனை + புன்கு]

**சுனைமேலாதி** *šuṉai-mēlādi,* பெ. (n.) சுனைக் கொடி பார்க்க; see *šuṉai-k-koḍi* (சா.அக.).

[சுனை + மேலாதி]

**சுனைவள்ளி** *šuṉai-vaḻḻi,* பெ. (n.) முள்வள்ளி; the root of a winding plant of the Dioscorea genus (சா.அக.).

[சுனை + வள்ளி]

**சுனைவாகினி** *šuṉai-vāgiṉi,* பெ. (n.) முசுட்டை; clove scented creeper (சா.அக.).

**சுனைவீரம்** *šuṉai-vīram,* பெ. (n.) கொச்சிவீரம்; corrosive sublimate prepared formerly in Cochin.

[சுனை + வீரம்]

**சுனைவு**[1] *šuṉaivu,* பெ. (n.) பேய்க்கடலை (மலை.); bitter bengal-gram.

**சுனைவு**[2] *šuṉaivu,* பெ. (n.) சுனைநீர் (வின்.); rock water.

[சுனை → சுனைவு]

**சுனைவெண்டை** *šuṉai-veṇḍai,* பெ. (n.) முள்வெண்டை; rough lady's finger (சா.அக.).

[சுனை + வெண்டை]

**சுனைவெப்பிலி** *šuṉai-veppili,* பெ. (n.) கரும்புத் தோகை; the tail portion of sugar cane (சா.அக.).

[சுனை + வெப்பிலி]

**சுனைவெள்ளரி** *šuṉai-veḻḻari,* பெ. (n.) முள்வெள்ளரி; common cucumber (சா.அக.).

[சுனை + வெள்ளரி]

**சுனைவேப்பிலை** *šuṉai-vēppilai,* பெ. (n.) மலைவேப்பிலை; mountain neem (சா.அக.).

[சுனை + வேப்பிலை]

# சூ

**சூ**[1] *cu/šū,* பெ. (n.) சகரமெய்யும் ஊகார நெடிலும் சேர்ந்து பிறந்த உயிர்மெய் யெழுத்து; the compound of ச் and ஊ.

[ச் + ஊ = சூ]

**சூ**[2] *šū,* பெ. (n.) 1. நாயை ஏவும் ஒலிக்குறிப்பு; sound uttered in setting dogs on. 2. வெறுப்பு முதலியவற்றை உணர்த்தும் ஒலிக்குறிப்பு; sound uttered to express disgust or aversion. 3. பன்றி முதலிய விலங்குகளையும், காகம், கோழி முதலிய பறவைகளையும் விரட்டப் பயன்படுத்தும் ஒலிக்குறிப்புச் சொல்; sound uttered in setting pigs and some birds like crow, cock, etc.

**சூ**[3] *šū,* பெ. (n.) 1. பனங்கதிர் முதலியவற்றைக் கருக்கிப் பொடித்துத் துணியிற்கட்டி யமைக்கும் வாணவகை; a kind of home - made firework encased in cloth. 'கார்த்திகையில் சூவிடுதல் வழக்கம்' (இ.வ.). 2. சுளுந்து (நாஞ்.); a kind of torch.

**சூக்காட்டு-தல்** *šū-k-kāṭṭu-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. நாயை ஏவுதல்; to set dogs on. 2. எவற்றையும் 'சூ'வென்று ஓசையிட்டு வெருட்டுதல்; to drive away with the sound šū, as dogs. (செ. அக.)

[சூ (ஒலிக்குறிப்பு) + காட்டு-,]

**சூக்காய்** *šūkkāy,* பெ.(n.) கடுக்காய் நண்டு (யாழ்ப்.); a kind of small crab. 2. கடுக்காய்; gall-nut, one of the tiri palai (சா.அக.)

**சூக்கீடம்** *šūkkīḍam,* பெ.(n.) கம்பளிப்பூச்சி (யாழ்ப்.); hairy caterpillar.

**சூக்கொட்டு-தல்** *šū-k-koṭṭu-,* 5 செ.குவி. (v.i.) 1. 'சூ' வொலியிட்டு இசைவு காட்டுதல்; to express assent with the sound-'šū'. 2. வெறுப்புக் குறி காட்டுதல்; to hiss in aversion or dissent.

[சூ + கொட்டு-,]

**சூகரை** *šūgarai,* பெ. (n.) குளத்தில் உடைப்பு நீர் வெளிப்போகாதபடி இடும் அணை (Rd.);

ring- bound, a temporary bund preventing escape of water through breaches.

[சூழ் + கரை → சூகரை]

**சூகை**[1] *śūgai*, பெ. (n.) 1. சுழற்சி; whirling 2. தலைச்சுழற்சி; reeling of the head.

[சூழ்கை → சூகை]

**சூகை**[2] *śūgai*, பெ. (n.) 1. கரிய சிற்றெறும்பு வகை; small black ant. 2. யானை; elephant. 3. நீர்அட்டை; a kind of irritating water leech (சாஅக.).

**சூகை**[3] *śūgai*, பெ.(n.) வீட்டின் பின்புறம்; back part of the house. "சூகையொண்டிக் கேட்டான்" (யாழ்ப்.).

**சூகை**[4] *śūgai*, பெ. (n.) வற்றியுலர்ந்தது; that which is withered or shrunken. 'சூகை முலை'.

**சூகைக்கண்** *śūgai-k-kaṇ*, பெ. (n.) 1. கிட்டப் பார்வை (யாழ்ப்.); shorted sight-ness, as causing one to keep the eyes nearly shut. 2. சுழற் கண்; whirling eye.

மறுவ. கூச்சக்கண்

[சூகை + கண்]

**சூகைக்கை** *śūgai-k-kai*, பெ. (n.) சூம்பியகை; withered arm (சாஅக.).

[சூகை + கை]

**சூகைமுலை** *śūgai-mulai*, பெ. (n.) வற்றிப் போன முலை; shrunken breast of a female (சாஅக.).

[சூகை[4] + முலை]

**சூகையாடு-தல்** *śūgai-y-āḍu-*, 5 செ.குவி. (v.i.) கிறுகிறுத்தல், தலை சுற்றுதல் (யாழ்ப்.); to be dizzy.

[சூகை[1] + ஆடு-,]

**சூங்குமம்** *śūṅgumam*, பெ. (n.) வேலிப்பருத்தி (மலை.); a hedge-twiner.

மறுவ. உத்தாமணி, சூக்குலம்

**சூச்சான்** *śūccāṉ*, பெ. (n.) கிட்டிப் புள் (யாழ்ப்.); game of tipcat.

**சூச்சூவெனல்** *śūcśūveṉal*, பெ. (n.) 1. ஒலியை (சத்தத்தை) அடக்கும் குறிப்பு; onom. expr. of silencing. 2. நாய், பன்றி, பறவை போன்றவைகளை விரட்டும் ஒலிக்குறிப்பு; onom. to drive dog, pig, birds.

**சூசம்** *śūśam*, பெ. (n.) செம்மறியாட்டுக் கடா (வின்.); a species of ram.

**சூசாக்கிரம்** *śūśakkiram*, பெ. (n.) ஊசி மல்லிகை; needle jasmine (சாஅக.).

**சூட்சம்** *śūṭśam*, பெ. (n.) 1. பெருவழுதலை; big brinjal. 2. வெள்ளைக்காக்கணம்; white mossel shell creeper. 3. குக்கில்; குங்கிலியம்; Indian bedellium (சாஅக.).

**சூட்சி**[1]**-த்தல்** *śūṭści-*, 4 செ.குன்றாவி. (v.t.) ஆராய்ந்து அறிதல்; to understand thoroughly. "சூட்சித்துப் புத்ரசங்கை சொல்லுவது தானே" (சாதகசிந். 1704).

[சூழ் + சி - சூழ்ச்சி → சூட்சி]

**சூட்சி**[2] *śūṭśi*, பெ. (n.) 1. கலந்தாய்வு; counsel, deliberation. "சூட்சியின் கிழவரை நோக்கிச் சொல்லினான்" (கம்பரா. உயுத்த. மந்திர. 11). 2. வழி; means, device. 'இச்சிக்கலுக்கு மீளும் சூட்சி யாது?' (உ.வ.). 3. ஏய்ப்பு; deceit. "சூட்சி சிறிது மிலாதாய் போற்றி" (தேவா. 1164, 4).

[சூழ்ச்சி → சூட்சி]

**சூட்சியன்** *śūṭśiyaṉ*, பெ. (n.) 1. அமைச்சன், (மந்திரி); minister as skilled in deliberation. "நல்லோர் யாரென நலங்கிளர் சூட்சியன்" (ஞானா. 26: 17).

[சூட்சி → சூட்சியன்]

**சூட்டடி** *śūṭṭaḍi*, பெ. (n.) 1. அடித்த கதிரைக் கடாவிட்டு உழக்குகை (நெல்லை.); beating or treading of sheaves for the second time. 2. முதன் முறையாக நெற்களத்தில் கதிர்ச்சூட்டை அடிக்கை (வின்.); beating sheaves for the first time.

[சூடு + அடி]

**சூட்டடுப்பு** *śūṭṭaḍuppu*, பெ. (n.) அடுப்புவகை; a kind of domestic oven. "சூட்டடுப்பிற் செழுந்தாட் பவளத் துவரடுக்கி" (குமர. பிர. மீனாட். பிள்ளைத். 23).

ம. சூட்டடுப்பு

[சூட்டு + அடுப்பு]




**சூட்டளவை** *šūṭṭaḷavai,* பெ. (n.) வெப்பமானி; an instrument to measure the temperature; thermometre (சா.அக.).

*[சூடு + அளவை. உடல் சூட்டை, வெப்பத்தை அளக்கும் கருவி]*

**சூட்டாணி** *šūṭṭāṇi,* பெ. (n.) சூட்டுக்கோல் பார்க்க; see *šūṭṭu-k-kōl.* "செவிச் சூட்டாணியிற் புகையழல் பொத்தி" (சிலப். 23: 48).

*[சுடு → சூடு + ஆணி]*

**சூட்டிக்கை** *šūṭṭikkai,* பெ. (n.) 1. அறிவுக்கூர்மை; ingenuity. 'சிறுவயதிலேயே அவன் சூட்டிக்கையாக இருந்தான்' (உ.வ.). 2. சுறுசுறுப்பு; smartness. 'வேலைசெய்வதிலே அவன் படு சூட்டிக்கை' (உ.வ.).

க. சூடி

**சூட்டிஞ்சி** *šūṭṭiñji,* பெ. (n.) ஏவறைகளை கொண்ட மதில்; crenelated wall. "இடு சூட்டிஞ்சியி னேணி சாத்தின்று" (பு.வெ. 6 : 18, கொளு).

*[(சூடு →) சூட்டு + இஞ்சி]*

**சூட்டிவிடு-தல்** *šūṭṭiviḍu-,* 18 செ.குன்றாவி. (v.t.) 1. பெண்ணை மணம்செய்து கொடுத்தல்; to give a girl in marriage. 2. அமர்த்துதல்; to appoint, destine. 3. ஒப்படைத்தல்; to assign make over, transfer, as property. 4. பட்டங் கட்டி விடுதல், மகுடம் சூட்டுதல்; to offer royal title or to crown a person as king.

*[சூட்டு → சூட்டி +விடு-,]*

**சூட்டிறைச்சி** *šūṭṭiṟaicci,* பெ. (n.) சுட்ட இறைச்சி (பிங்.); roasted-meat.

*[சுடு → சூடு + இறைச்சி]*

**சூட்டு**[1]**-தல்** *šūṭṭu-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. அணிவித்தல்; to adorn, as with garlands, chain-ornaments, etc. "பாதமலர் சூடுகின்றிலை, சூட்டுகின்றதுமிலை" (திருவாச. 5:31). 2. ஒருவரை பாமாலையாற்புனைதல்; to honour, as with a poem. 3. மணிமுடி புனைவித்தல்; to crown, as with diadem. "தொன்னெடு முடி சூட்டுகின்றான்" (கம்பரா. அயோத். மந்திரப். 90). 'மன்னன் தன் மகனுக்கு மணிமுடி சூட்டினான்' (உ.வ.). 4. பட்டம் முதலியன கொடுத்தல்; to confer, as title. பாவாணருக்குப் பாவலரேறு 'மொழி ஞாயிறு' என்று பட்டஞ் சூட்டினார். 5. பரப்புதல்; to spread over, as an army. "நிலவரை சூட்டிய நீணெடுந் தானை" (புறநா. 228: 6). 6. ஆணை முதலியன செலுத்துதல்; to extend, as one's sway. 'நீரக விருக்கை யாழிசூட்டிய . . . முன்னோர்போல' (புறநா. 99: 3). 7. சுமத்துதல் (யாழ்ப்.); to attribute. 8. சூட்டிவிடு-தல் பார்க்க; see *šūṭṭi-viḍu-*[2]. 9. இயலாத ஒன்றை மேற்கொள்ளும்படி தூண்டிவிடுதல் (இக்வ.); to encourage one in undertaking a task beyond his means, yoke a person to a difficult task.

*[சூடு → சூட்டு-,]*

**சூட்டு**[2] *šūṭṭu,* பெ. (n.) 1. சூட்டுகை; investing adorning, as with crown, head-dress. முடிசூட்டு. 2. பூமாலை; wreath, garland. "மல்லிகை நறுஞ்சூட்டு வெள்ளிதின் விளங்க" (பெருங். உஞ்சைக். 46: 233). 3. பெண்களுக்குரிய நுதலணி (பிங்.); நெற்றிச்சூட்டு; ornament for women's forehead. 4. நெற்றிப்பட்டம்; a golden plate worn on the forehead, as ornament or badge of distinction. 5. மயில், கோழி முதலியவற்றின் உச்சிக்கொண்டை; peacock's crest, cock's comb. "காட்டுக்கோழிச் சூட்டுத் தலைச்சேவல்" (பெருங். உஞ்சைக், 52:62). 6. பாம்பின் படம்; snake's hood. "செங்கணாயிரஞ் சூட் டராவி னறிதுயி லமர்ந்து" (கூர்மபு. வருணாச். 3). 7. வண்டிச்சக்கரத்தின் விளிம்பைச் சூழ அமைக்கப்பட்ட வளைவுச் சட்டம்; felloe of a wheel. "கொழுஞ் சூட்டருந்திய திருந்துநிலை யாரத்து" (பெரும்பாண். 46). 8. ஏவறை; a kind of casemate in a fortress for shooting arrows from "இடுசூட் டிஞ்சியின்" (பு.வெ. 6: 18. கொளு).

*[சூடு → சூட்டு]*

சூட்டு[3] *šūṭṭu*, பெ. (n.) 1. சுடப்பட்டது; that which is burnt or cooked. சூட்டிறைச்சி, சூட்டாங்கறி. 2. ஓலை, நாணல் முதலியவற்றால் ஆன தீவட்டிவகை (நாஞ்.); a kind of ōla torch.

ம. சூட்டு; க. சூடெ; தெ. சூடு; து. சூடெ, தூடெ; குட. துடி
Pkt. cuḍuli; Mar. cūḍ
[சுடு → சூட்டு]

சூட்டு[4] *šūṭṭu*, பெ. (n.) தூணின்தலைக்கல் (இ.வ.); capital of a pillar.

சூட்டு[5] *šūṭṭu*, பெ. (n.) சூட்டிக்கை பார்க்க; see *šūṭṭikkai*.

**சூட்டுக்கணம்** *šūṭṭu-k-kaṇam*, பெ.(n.) சுழிக்கணம்; ஒருவகைக் கணநோய்; atroply due to excess of heat in the system resulting in diarrhoea (சா.அக.).

[சூடு + கணம் = சூட்டுக்கணம்]

**சூட்டுக்கத்திகை** *šūṭṭu-k-kattigai*, பெ. (n.) பூமாலை வகை (இறை. 2, பக். 42, உரை); a kind of garland.

[சூட்டு + கத்திகை]

**சூட்டுக்கறி** *šūṭṭu-k-kaṟi*, பெ. (n.) முகமதியரின் பக்கிரீத்துப் பண்டிகையில் வழங்கப்படும் இறைச்சி; Bakri-id, the Muhammadan festival, as time for meat.

[சூட்டு + கறி]

**சூட்டுக்காரன்** *šūṭṭu-k-kāraṉ*, பெ. (n.) திறமையாகவும், சுவையாகவும், சிரிப்பாகவும் பேசுபவன் (வின்.); wittly person.

க. சூடுக்காற
[(சூடு→) சூட்டு + காரன்]

**சூட்டுக்குத்தல்** *šūṭṭu-k-kuttal*, பெ. (n.) சூட்டினால் கண்சதை வளர்ந்து கண்ணில் ஏற்படும் குத்தல்நோய்; irritation due to abnormal growth of flesh in the eye arising from constitutional heat-ophthalmia (சா.அக.).

[சூடு + குத்தல்]

**சூட்டுக்குச்சூடுகொடுத்தல்** *šūṭṭukku-c-cūḍu koḍuttal*, பெ. (n.) தமிழ்மருத்துவ முறையில் சிலபோது, சூட்டுக்குச் சூடுகொடுத்தால் உடம்பு குளிர்ச்சி ஆகும் எனுங் கொள்கை; in Tamil medicine the principle of treating with a remedy apparently hot for internal heat on the theory that such treatment would result in rendering the system cool (சா.அக.).

[சூட்டுக்குச்சூடு + கொடுத்தல்]

**சூட்டுக்கோல்** *šūṭṭu-k-kōl*, பெ. (n.) 1. மாடு முதலியவற்றின்மேல் அடையாளச் சூடு இடுதற்குரிய கம்பி (உ.வ.); branding iron. instrument for cauterising. 2. குழந்தைகளின் சில நோய்களுக்காகச் சூடுபோடும் ஊசி அல்லது இரும்புக்காம்பு; heated branding iron used as a treatment in children suffering from convulsions for fits accompanying diseases (சா.அக.).

ம. சூடுகோல், சூட்டுக்கோல்
[சுடு → சூடு → சூட்டு +கோல்]

**சூட்டுக்கோலிடு-தல்** *šūṭṭu-k-kōliḍal*, 5 செகுன்றாவி. (v.t.) வலிப்புவந்த குழந்தைகளுக்கு ஊசி அல்லது இரும்புக்கம்பியினால் சூடு போடுதல்; cauterising with a red hot needle or rod children suffering from convulsion (சா.அக.).

[சூட்டுக்கோல் + இடு-,]

**சூட்டுடம்பு** *šūṭṭuḍambu*, பெ. (n.) வெப்பம் கொண்ட உடல்; body, which is over heated. 'அவனுக்குச் சூட்டுடம்பு' (உ.வ.).

[சூடு + உடம்பு]

**சூட்டுத்தலைவலி** *šūṭṭu-t-talai-vali*, பெ. (n.) உடம்பின் வெப்பத்தால் ஏற்படும் தலைவலி; head-ache due to excess of heat in the body (சா.அக.).

[சூடு → சூட்டு + தலைவலி]

**சூட்டுப்பாய்** *šūṭṭu-p-pāy*, பெ.(n.) சூடடித்த நெற்குவியலைப் போர்த்துவைத்தற்குரிய பாய் (யாழ்.அக); mat used to cover the threshed corn.

[(சூடு) → சூட்டு + பாய்]

**சூட்டுப்புண்** *šūṭṭu-p-puṇ*, பெ. (n.) 1. சுட்டபுண்; burns. 2. வெப்பத்தினால் ஏற்பட்ட புண்; boil arising from the internal heat in the system (சா.அக.).

[சூடு → சூட்டு + புண்]

**சூட்டுமணல்** *šūttu-maṇal,* பெ. (n.) கருமணல்; black sand (சா.அக.).

*[சூடு → சூட்டு + மணல்]*

**சூட்டுமாலை** *šūttu-mālai,* பெ. (n.) தோளணி மாலை (யாழ்அக.); a kind of garland.

*[சூட்டு + மாலை]*

**சூட்டுமிதி** *šūttu-midi,* பெ. (n.) நெற்சூட்டைக் கடாவிட்டு மிதித்து உழக்குகை (யாழ்அக.); threshing sheaves of corn by treating with cattle.

*[சூட்டு + மிதி]*

**சூட்டுவடு** *šūttu-vaḍu,* பெ. (n.) சூட்டுக் கோலிட்ட வடு; a scar or cicatrix left after cautery (சா.அக.).

*[சூட்டு + வடு]*

**சூட்டுவலி** *šūttu-vali,* பெ. (n.) 1. வெப்பத்தால் உடம்பில் ஏற்படும் நோவு; ache in the body due to heat in the system. 2. பிள்ளைப்பேற்று நோவு (இ.வ.); labour, pains of child-birth.

*[சூடு + வலி]*

**சூட்டெண்ணெய்** *šūttenney,* பெ. (n.) 1. எரித்து வடிக்கும் வேப்பெண்ணெய்; margosa oil extracted from the seeds of margosa by boiling them. 2. உடற்சூட்டைத் தணித்துக் குளிர்ச்சி தரும் எண்ணெய்; a medicated oil prescribed for reducing the heat in the body (சா.அக.).

*[சூடு + எண்ணெய்]*

**சூட்டோடுசூடாக** *šūttōḍu-šūḍāga,* கு.வி.அ. (adv.) 1. முந்தைய செயல் செய்த வேகத்திலேயே அல்லது நடந்த விரைவிலேயே; the speedy velocity with which prior work or speech has happened. 2. தொடர்ச்சியாக அல்லது உடனடியாக; continuously or immediately. 'வீட்டுமனை வாங்கிய கையோடு, சூட்டோடு சூடாக அவன் வீட்டையும் கட்டிமுடித்தான்' (உ.வ.).

மறுவ. சூட்டோடு சூடாய்.

*[சூடு + ஓடு + சூடு + ஆக]*

**சூடகம்** *šūḍagam,* பெ. (n.) கைவளை; bracelet. 'பாடகத் தரவமுஞ் சூடகத் தோசையும்' (பெருங். வத்தவ. 12: 210).

தெ. சூடிகமு; க. சூடக; து. சூடக

*[சூடு → சூடகம்]*


சூடகம்

**சூடங்கேட்டுப்போ-தல்** *šūḍaṅ-gēttu-p-pō-,* செ.கு.வி. (v.i.) நிலைகெட்டு முடிவடைதல்; to come to an end. "அவன்பாடு சூடங்கேட்டுப் போயிற்று" (நாஞ்).

*[சூடங்கெட்டு + போ-,]*

**சூடசத்திரி** *šūḍašattiri,* பெ. (n.) சுவையுணர்வு இல்லாமற் செய்யும் ஒரு வகை மூலிகை; a plant that destroys the sense of taste (சா.அக.).

**சூடடி-த்தல்** *šūḍaḍi-,* 4 செ.குன்றாவி. (v.t.) கதிரைக் கடாவிட்டுழக்குதல் (வின்.); to thresh sheaves of corn by treading with cattle.

மறுவ. சூட்டடி

*[சூடு + அடி-,]*

**சூடம்**[1] *šūḍam,* பெ. (n.) சூடன், 1 பார்க்க; see *šūḍaṉ,1.*

*[சூடு → சூடம்]*

**சூடம்**[2] *šūḍam,* பெ. (n.) தலையின் உச்சி; crown of the head. "புரவிசயன் சூடந்தரு பாகீரதி" (பாரத. அருச்சுனன்றீர், 7).

*[சூடு → சூட்டு → சூடம்]*

**சூடம்**[3] *šūḍam,* பெ. (n.) சூளம் (நெல்லை.) பார்க்க; see *šūḷam.*

*[சூளம் → சூடம்]*

**சூடமூலி** *šūḍa-mūli,* பெ. (n.) கற்பூரவல்லி; thick leaved lavender (சா.அக.).

*[சூடம் + மூலி]*

சூடவல்லி *šūḍa-valli*, பெ. (n.) சூடமூலி பார்க்க; see *sūḍa-mūli* (சா.அக.).

*[சூடம் + வல்லி]*

சூடறுத்தல் *šūḍaṟuttal*, பெ. (n.) கண்ணில் சூட்டினால் வளர்ந்த தசையை, அறுவை மருத்துவம் செய்தோ, சுணையுள்ள இலையினால் தேய்த்தோ நீக்குகை; the scraping of an affected part of the eye due to growth of flesh with a scraping knife or rough leaf (சா.அக.).

*[சூடு + அறுத்தல்]*

சூடன் *šūḍaṉ*, பெ. (n.) 1. கருப்பூரவகை; prepared camphor (சிலப். 14: 109, உரை.). 2. மீன்வகை (யாழ்.அக.); a kind of fish.

*[சூடு → சூடன்]*

சூடன்கருப்பூரம் *šūḍaṉ-karuppūram*, பெ. (n.) கருப்பூர வகை (வின்.); prepared camphor.

ம. சூடன் கர்ப்பூரம்

*[சூடன் + கருப்பூரம்]*

சூடன்வைப்பு *šūḍaṉ-vaippu*, பெ. (n.) வாழைக் கிழங்கு, நீர் வெடியுப்பு, கருவாப்பட்டை நெய் (தைலம்) போன்ற சரக்குகளைச் சேர்த்துச் செய்யப்படும் சூடம்; a medicine it is prepared from plantain bullouspart, nitre, karuvāppaṭṭai etc. (சா.அக.).

*[சூடன் + வைப்பு]*

சூடனி *šūḍaṉi*, பெ. (n.) சிற்றரத்தை; lessar galangal (சா.அக.).

சூடனிந்து *šūḍaṉintu*, பெ. (n.) சூடன்செயநீர்; a pungent water prepared with camphor as chief ingredient (சா.அக.).

*[சூடன் + இந்து]*

சூடனுப்பு *šūḍaṉuppu*, பெ.(n.) கருப்பூரவுப்பு; camphor salt; preparing from a mixture salts (சா.அக.).

*[சூடன் + உப்பு]*

சூடா[1] *šūḍā*, பெ.(n.) 1. கைவளை; bracelet. 2. கழுத்திலணியும் பொற்கொடியிற் கோத்த அக்கமணி (உருத்திராக்கம்); sacred eleocarpus bead enclosed in gold and hung round the neck in a gold band. 3. குடுமி; tuft of hair in the head.

த. சூடு → H., U. chudi

சூடா[2] *šūḍā*, பெ. (n.) ஒருவகைத் தின்பண்டம்; an eatable cake (சா.அக.).

*[சூடு → சூடா]*

சூடாக்கல் *šūḍā-k-kal*, பெ. (n.) சூடாலைக்கல் பார்க்க; see *šūḍālai-k-kal*.

சூடாகரணம் *šūḍā-karaṇam*, பெ. (n.) ஒன்று, மூன்று, ஐந்தாம் அகவையில் குழந்தைகட்குக் குடுமிவைக்கும் விழா (சடங்கு) (சங்.அக.); tonsure - ceremony of a child performed in its first, third or fifth year.

*[சூடு → சூடா + கரணம்]*

சூடாகருமம் *šūḍā-karumam*, பெ. (n.) சூடாகரணம் பார்க்க; see *šūḍā-karaṇam*.

*[சூடா + கருமம்]*

சூடாதிக்கம் *šūḍādikkam*, பெ. (n.) உடம்பின் சூடு அல்லது வெப்பம்; increase of heat in the system (சா.அக.).

*[சூடு + ஆதிக்கம்]*

Skt. ādhikyā → த. ஆதிக்கம்

சூடாமணி[1] *šūḍā-maṇi*, பெ. (n.) வடமொழியில் எழுதிய அமரகோசத்தைப் போல், தமிழில் சமணத்துறவிகளால் விலங்குத்தொகுதி, மரத்தொகுதி முதலியவற்றை வரிசை முறையாய்ச் செய்த மூன்றுவகை நிகண்டுகளில் ஒன்று; a poetical lexicon on the plan of Sanskrit Amarakōšam written by a Jainya ascetic. It is one of the three classical diction aries, consisting the names of beasts, plants etc. together with explanations of the 64 sciences (சா.அக.).

*[சூடா + மணி]*

சூடாமணிநிகண்டு பார்க்க

சூடாமணி[2] *šūḍā-maṇi*, பெ. (n.) 1. குன்றிமணி; jeweller's bead. 2. வெட்பூலா; white poolah (சா.அக.).

**சூடாமணி**[3] *šūḍā-maṇi,* பெ. (n.) *1.* முடிமணி; jewel in a crest or diadem. "சூடாமணிப் படலம்" (கம்பரா.). *2.* தெய்வ மணிவகை (பிங்.); a celestial gem.

ம. சூடாமணி

[சூடா + மணி]

**சூடாமணிக்கயிறு** *šūḍā-maṇi-k-kayiṟu,* பெ.(n.) மணிக்கட்டை அளந்து, பிறகு அதைக் கொண்டு விரற்கடை அளவுக்கு ஒத்துப் பார்த்து, அதன் வேறுபாட்டால் நோய்களை விளக்கும், ஒரு தமிழ மருத்துவநூல்; a treatise in Tamiḻ describing the several diseases indicated by the various differences caused in the calculation of lengths of strings with which wrist and fingers are measured according to rules mentioned there in (சா.அக.).

[சூடாமணி + கயிறு]

**சூடாமணிக்குளிகை** *šūḍāmaṇi-k-kuḷigai,* பெ. (n.) வேதமுனி முறைப்படி செய்து குளிர்க் காய்ச்சல், இசிவு, பிதற்றிசிவு முதலிய நோய்களுக்குக் கொடுக்கப்படும் மாத்திரை; a pill prepared as per process of Vēdamuṉi and used for ague apoplexy delirium etc. (சா. அக.).

[சூடாமணி + குளிகை]

**சூடாமணிநிகண்டு** *šūḍāmaṇi-nigaṇḍu,* பெ. (n.) 16ஆம் நூற்றாண்டில் மண்டல புருடன் என்ற சமண ஆசிரியரால் மண்டிலச் செய்யுளால் இயற்றப்பட்ட நிகண்டு; a Tamiḻ lexicon in verse, by Maṇḍalapuruḍaṉ, a Jaiṉa of 16th c.

[சூடாமணி + நிகண்டு]

**சூடாமணியுள்ளமுடையான்** *šūḍāmaṇi-y-uḷḷam-uḍaiyāṉ,* பெ.(n.) 12ஆம் நூற்றாண்டில் திருக்கோட்டி நம்பியால் இயற்றப்பெற்ற ஒரு கணியநூல்; an astronomical work by Tiru-k-kōṭṭi-nambi, 12th c.

[சூடாமணி + உள்ளம் + உடையான்]

**சூடாலம்** *šūḍālam,* பெ.(n.) சணல்விதை (தைலவ. தைல. 74); seed of sunn-hemp.

**சூடாலைக்கல்** *šūḍālai-k-kal,* பெ. (n.) ஒருவகைக் காந்தக்கல் (வின்.); a kind of magnetic stone.

[சூடாலை + கல்]

**சூடி**[1] *šūḍi,* பெ. (n.) எரியுப்பு; sal ammoniac (சா.அக.).

**சூடி**[2] *šūḍi,* பெ. (n.) சீலை (பிங்.); cloth.

[சூடு' → சூடி]

**சூடிக்கயிறு** *šūḍi-k-kayiṟu,* பெ. (n.) சூடுகயிறு (யாழ்ப்.) பார்க்க; see *šūḍu-kayiṟu.*

[சூடு → சூடி + கயிறு]

**சூடிக்கை** *šūḍikkai,* பெ. (n.) சூட்டிக்கை பார்க்க; see *šūṭṭikkai.*

**சூடிக்கொடுத்தநாச்சியார்** *šūḍi-k-koḍutta-nācciyār,* பெ. (n.) தான் சூடிய பூமாலையைத் திருமால் சூடக்கொடுத்த ஆண்டாள்; Āṇḍāḷ, a female devotee of Thirumāl, as one who offered to God wreaths worn by her.

[சூடி + கொடுத்த + நாச்சியார்]

**சூடிக்கொடுத்தாள்** *šūḍi-k-koḍuttāḷ,* பெ. (n.) சூடிக்கொடுத்தநாச்சியார் பார்க்க; see *šūḍi-k-koḍutta-nācciyār.*

[சூடி + கொடுத்தாள்]

**சூடிகம்** *šūḍigam,* பெ. (n.) கள்; toddy (சா.அக.).

மறுவ. சொல்விளம்பி

**சூடிகை**[1] *šūḍigai,* பெ. (n.) *1.* மணிமுடி (பிங்.); crown bejewelled diadem. *2.* கோயில் முதலியவற்றிலுள்ள கோபுரக்கும்பம்; ornamental rounded crest, as of temple tower. "சூட னீத்தன சூடிகை சூளிகை" (கம்பரா. பள்ளி24).

[சுடிகை → சூடிகை]

**சூடிகை**[2] *šūḍigai,* பெ. (n.) பாம்பின் படத்திலுள்ளதாகச் சொல்லப்படும் மணி; fabulous gem on a cobra's hood. "படத்தெடுத்த சூடிகை பறித்துமே" (தக்கயாகப். 362).

[சூடு→ (சூட்டி →) சூடிகை]

**சூடிகை**[3] *šūḍikai,* பெ. (n.) சூலிக்கு உண்டாகும் நோய்; a disease to the pregnant ladies. கருப்பக் காலத்தில் செரிமானக் கோளாறும் காய்ச்சலும் பிறகு நாளுக்கு நாள் அரத்தக் கேட்டினால் சோர்வும் உண்டாக்கும் எனச் சா.அக. கூறும்.

சூடிச்சி śūḍicci, பெ. (n.) வெடியுப்பு (வின்.); salt petre.

மறுவ. யவட்சாரம்

[சூடு → சூடிச்சி]

சூடிணர் śūḍiṇar, பெ. (n.) கோங்கிலவு (மலை.); false tragacanth.

[சூடு' + இணர்]

சூடு[1] -தல் śūḍu-, 5 செ.குன்றாவி. (v.t.) 1. அணிதல்; to wear, especially on the head. "கோட்டுப் பூச் சூடினுங் காயும்" (குறள், 1313). 2. பெயர் முதலியன சூட்டிக்கொள்ளுதல்; to be invested, as with a title. தமிழர்கள் தம் பிள்ளைகளுக்குத் தமிழ்ப் பெயர் சூடுதலே தகவாகும்.

[சூட்டு → சூடு-,]

சூடு[2] -தல் śūḍu-, 5 செ.குவி. (v.i.) 1. பரவுதல்; to spread. 2. வளைந்துபோதல்; to become bent. warped. "வண்டிப் பாதை சூடியிருக்கிறது" (நாஞ்.). 3. கவிதல்; to surround, envelope. "வானஞ் சூடிய மலர்தலை யுலகத்துள்ளும்" (பெரும்பாண். 409) 4. உண்ணுதல்; to eat. "பிரசாதத்தைச் சூடி" (ஈடு. 2. 7. 5.).

சூடு[3] śūḍu, பெ. (n.) 1. சுடப்பட்டது; that which is heated, burnt, roasted. "கடலிறவின் சூடுதின்றும்" (பட்டினப். 63). 2. சுடுபுண்; burn, scald. 3. வெப்பம்; heat. 'உடம்பு சூடாயிருக்கிறது' (உ.வ.). 4. ஒத்தடம்; fomentation. 5. சின முண்டாக்குவது; that which provokes. அவன் பேசுவது சூடாக இருக்கிறது. 6. சினம்; anger. 'அவன் சூடாக இருக்கிறான்' (உ.வ.). 7. உணர்ச்சி; feeling, sensibility. 'எவ்வளவு சொன்னாலும் அவனுக்குச் சூடில்லை' (உ.வ.). 8. விலையேற்றம்; increase or enhancement, as of prices. விலை சூடாயிருக்கிறது 9. கண்ணோய்வகை; opthalmia. கண்ணில் சூடு வளர்ந்திருக்கிறது. 10. சூட்டுக்குறி; brand. "கருநரைமேற் சூடேபோல்" (நாலடி, 186). 11. வடு; scar, callosity "பாடகஞ் சுமந்த சூடுறு சேவடி" (பெருங். மகத. 8: 14).

ம. சூடு; க. தூடு; தெ. சூடு; து. சூடு.

[சுடு → சூடு]

சூடு[4] śūḍu, பெ. (n.) அரிக்கட்டு; bundle of sheaves. "அகவய லிளநெல் கரிகாற் சூடு" (பரிபா. 7: 27).

ம. சூட்டு; க. சூடு; து. சூடி

சூடு[5]-தல் śūḍu-, பெ. (n.) சூடுபோடுதல்; to brand, as cattle; to cauterise. 'மாட்டைச்சூடினான்' (சென்னை.).

க. சூடு; தெ. கூடு

[சுடு → சூடு-,]

சூடு[6] śūḍu, பெ. (n.) 1. குடுமி; hair-tuft. "கானிறை குஞ்சிச் சூட்டில்" (திருவிளை. யானையெய். 25) 2. உச்சிக்கொண்டை; crest, comb.

[சூட்டு → சூடு]

சூடு[7] śūḍu, பெ. (n.) கண்டனம்; condemnation; strong protest. 'ஆங்கில நாளேட்டிற்குத் தமிழறிஞர்கள் சூடு' (உ.வ.).

[சூட்டு → சூடு]

சூடுகயிறு śūḍu-kayiṟu, பெ. (n.) வரிச்சல் கட்டும் தென்னைநார்க் கயிறு (யாழ்ப்.); coir used for tying bamboo laths in tiling a roof.

[சூடு' + கயிறு]

சூடுகாட்டு-தல் śūḍu-kāṭṭu-, 5 செ.குவி. (v.i.) 1. ஒத்தடங்கொடுத்தல்; to apply fomentation. 2.. சூடாக்குதல்; to warm, heat. உடம்பு சூடு காட்டுகிறது. 3. சுரக்குறி தோற்றுதல்; to feel hot, as in fever. 4. கடுமைக்குறி காட்டுதல்; to warn, show severity, give deterrent punishment.

[சூடு + காட்டு-,]

சூடுகுத்தல் śūḍu-kuttal, பெ. (n.) சூடறுத்தல் பார்க்க; see śūḍaṟuttal (சா.அக.).

[சூடு + குத்தல்]

சூடுகுத்து-தல் śūḍu-kuttu-, பெ. (n.) நோய் வகை (M.L.); conjunctivitis.

[சூடு + குத்து -,]

சூடுகொள்ளல் śūḍu-koḷḷal, பெ. (n.) 1. உடம்பு வெப்பங்கொள்ளுகை; becoming heated in ansitution. 2. உடம்பு அனலுகை; becoming feverish (சா.அக.).

[சூடு + கொள்ளல்]

**சூடுசுடு-தல்** *šūḍu-šuḍu-*, 18 செ.குன்றாவி. (v.t.) சூடு போடுகை; branding. *காமாலைக்குச் சூடுசுட வேண்டும்.*

*[சூடு + சுடுதல்]*

**சூடுசுரணை** *šūḍu-šūraṇai*, பெ. (n.) உணர்ச்சி; feeling or sensibility *(சா.அக.).*

*[சூடு + சுரணை]*

**சூடுசுள்ளாப்பி-த்தல்** *šūḍu-šūḷḷappi-*, 4 செ.குவி. (v.i.) களத்தில் கடாவிட்டு உழக்குதற்கு முன், கதிர்க்கற்றைகளை விரித்துப்பரப்புதல் *(யாழ்ப்.)*; to loosen and spread sheaves on the threshing-floor preparatory to treading out the grain.

*[சூடு + சுள்ளாப்பி-,]*

**சூடுசெய்-தல்** *šūḍu-cey-*, பெ. (n.) வெப்பம் கொள்ளும்படிச் செய்தல்; causing warmth. உணவை சூடு செய்

*[சூடு + செய்-,]*

**சூடுண்டா-தல்** *šūḍuṇḍā-*, 5 செ.குன்றாவி. (v.t.) உடம்பு சூடு கொள்ளுதல்; to get increased in warmth of body *(சா.அக.).*

*[சூடு + உண்டாகு-,]*

**சூடுதாவு-தல்** *šūḍu-tāvu-*, பெ. (n.) சூடு உறை *(வின்.)*; radiation of heat. *'காலைக் கதிர் மலை மீது பட்டு அடிவாரம் எங்கும் சூடு தாவிற்று' (உ.வ.).*

*[சூடு + தாவு-,]*

**சூடுதுரத்தி** *šūḍu-duratti*, பெ. (n.) சூடுபோக்கி பார்க்க; see *šūḍu-pōkki (சா.அக.).*

*[சூடு + துரத்தி]*

**சூடுபறக்கத்தேய்-த்தல்** *šūḍu-paṟakka-t-tēy-*, செ.குவி. (v.i.) உடம்பில் மருந்தெண்ணெய் பூசிச் சூடு உண்டாகும்படித் தேய்த்தல்; rubbing with hand forcibly after applying ointment to the affected part so as to create heat, the act of anointing or of applying oil with friction Inunction *(சா.அக.).* சுளுக்கு விழுந்த இடத்தில் எண்ணெய் தடவி சூடுபறக்கத் தேய்.

*[சூடு + பறக்க + தேய்-,]*

**சூடுபிடி-த்தல்** *šūḍu-piḍi-*, 4 செ.குவி. (v.i.) நீர்க்கடுப்பு உண்டாகுதல்; to be attacked with strangury. *'வெயிலில் அலைந்ததால் அவனுக்குச் சூடுபிடித்தது' (உ.வ.).*

*[சூடு + பிடி-,]*

**சூடுபொறுக்காமை** *šūḍu-poṟukkāmai*, பெ. (n.) சூடு தாங்காமை; extreme sensitiveness to heat *(சா.அக.).*

*[சூடு + பொறுக்காமை]*

**சூடுபோக்கி** *šūḍu-pōkki*, பெ. (n.) உடம்பின் வெப்பத்தைத் தணிக்கும் மருந்து; antipyretic *(சா.அக.).*

*[சூடு + போக்கி]*

**சூடுமிதி-த்தல்** *šūḍu-midi-*, 4 செ.குவி. (v.i.) கதிர்ச்சூடடித்தல்; to tread sheaves of corn.

*[சூடு + மிதி-,]*

**சூடுவளர்த்தி** *šūḍu-vaḷartti*, பெ. (n.) சூட்டினால் கண்ணில் சதை வளருதல்; granular ophthalmia *(சா.அக.)*

மறுவ. சூடுவளர்க்கை, சூடுவளர்தல

*[சூடு + வளர்த்தி]*

**சூடுறல்** *šūḍuṟal*, பெ. (n.) உடம்பு காய்தலின் உணர்ச்சி; feeling feverish *(சா.அக.).*

*[சூடு + உறல்]*

**சூடை**[1] *šūḍai*, பெ. (n.) 1. தலை; head. "சூடையின் மணி" *(கம்பரா. சூளா. 88).* 2. குடுமி; hair-tuft. "சூடை விளங்கு மாமணி" *(சேதுபு. சேதுவந்த. 15).*

*[சூடு → சூடை]*

**சூடை**[2] *šūḍai*, பெ. (n.) 1. பசிய நிறமுள்ள மீன் வகை; sardine, bluish-green, clupea fimbriata.



சூடை

2. நான்குவிரல நீளமும், பொன் நிறமும் உள்ள மீன்வகை; sardine, with purple colour growing upto four inches. 3. இருபது விரல நீளம் வளரக்கூடிய வெண்ணிறமுள்ள கடல்மீன் வகை; silvery sea fish growing upto twenty inches.

**சூடைக்காசு** *šūḍai-k-kāsu*, பெ. (n.) சூடாமணி (இலக். அக.) பார்க்க; see *šūḍā-maṇi.*

*[சூடை + காசு]*

**சூடைப்பொடி** *šūḍai-p-poḍi*, பெ.(n.) சூடை²,1 (யாழ்ப்.) பார்க்க; see *šūḍai*,²,1.

*[சூடை + பொடி]*

**சூணம்** *šūṇam*, பெ. (n.) கண்ணின் கருவிழிச் சவ்வு; the dark brown vascular of the eye between the sclera and the retina (சா.அக.).

*[சூண் + அம்]*

**சூணித்துச்சொல்(லு)-தல்** *šūṇittu-c-col-*, 8 குன்றாவி. (v.t.) / 3 செ.குவி. (v.i.) குறைகூறுதல் (இ.வ.); to criticise, expose defects.

*[சூணித்து + சொல்]*

**சூத்தாங்கரடு** *šūttāṅ-garaḍu*, பெ. (n.) எருவாயின் தடிப்பு (யாழ்ப்.); roughness of the anus or perineum.

*[சூத்து + ஆம் + கரடு. ஆம் = சாரியை]*

**சூத்தழகி** *šūttaḻagi*, பெ. (n.) ஒரு வகை மாம்பழம் (இ.வ); a kind of mango.

மறுவ. குரங்குச் சூத்து மாம்பழம்

*[சூத்து + அழகி]*

**சூத்தாட்டி** *šūttāṭṭi*, பெ. (n.) 1. வேலை கழப்புகிறவன் (இ.வ); an indolent, shirking workman; eye-servant. 2. தகுதிகடந்து உடன்பட்டு அருள் ஈட்டுபவன்; one who curries favour by unworthy complaisance.

*[சூத்து + ஆட்டு → சூத்தாட்டி]*

**சூத்தாட்டிக்குருவி** *šūttāṭṭi-k-kuruvi*, பெ. (n.) சூத்தாட்டியுள்ளான் பார்க்க; see *šūttāṭṭi-y-uḷḷāṉ.*

*[சூத்தாட்டி + குருவி]*

**சூத்தாட்டியுள்ளான்** *šūttāṭṭi-y-uḷḷāṉ*, பெ. (n.) வாலை எப்பொழுதும் ஆட்டிக்கொண்டிருக்கும் சிறுபறவை; வலியன்குருவி; pied wagtail.

மறுவ. வலியன்

*[சூத்தாட்டி + உள்ளான்]*




**சூத்தாட்டு-தல்** *šūttāṭṭu-*, 5 செ.கு.வி. (v.i.) 1. வேலைகழப்புதல்; to make a show of working. 2. தகுதிகடந்து உடன்பட்டுக் கருணை ஈட்டுதல்; to acquire favour by unworthy means.

*[சூத்து + ஆட்டு-,]*

**சூத்தாம்பட்டை** *šūttām-paṭṭai*, பெ. (n.) பிட்டம் (உ.வ.); buttocks.

மறுவ. புட்டம், புட்டாணி

*[சூத்து + (ஆம்) + பட்டை]*

**சூத்திரகண்டகாரி** *šūttira-kaṇḍakāri*, பெ. (n.) சிறுகண்டங்கத்திரி; dwarf prickly night shade (சா.அக.).

**சூத்திரகுட்டம்** *šūttira-kuṭṭam*, பெ. (n.) 1. சாந்தகுட்டம்; a mild form of leprosy. 2. ஒருவகைத் தோல்நோய்; itch thyosis eruptions in the form of fish scales (சா.அக.).

**சூத்து** *šūttu*, பெ. (n.) 1. எருவாய் (மலவாயில்); anus. 2. புட்டம்; buttocks, rump. 'சூத்திலடித் தானாம், பல்லுப் போச்சாம்' (பழ.).

ம. சூத்து; க. சுதி

H. cūt (பெண்குறி); Mar. cūtaṭ (பெண்குறி); Skt. cūta

*[சூறு → சூற்று → சூத்து. சூறல் (சூலுதல்) = தோண்டுதல். சூறு = துளை, எருவாயில். (வே.க. 247)]*

**சூத்தை** *šūttai*, பெ. (n.) கேடுற்றது *(சங்அக.)*; that which is decayed.

*[சொத்தை → சூத்தை]*

**சூத்தைப்பல்** *šūttai-p-pal*, பெ. (n.) சொத்தைப் பல்; decayed tooth *(சாஅக.)*.

*[சூத்தை + பல்]*

**சூத்தைப்பாக்கு** *šūttai-p-pākku*, பெ. (n.) சொத்தைப்பாக்கு; worm eaten arecanut *(சாஅக.)*.

*[சூத்தை + பாக்கு]*

**சூத்தொட்டல்** *šūttoṭṭal*, பெ. (n.) புட்டம் வற்றிப் போதல்; a slang for atrophy of buttocks *(சாஅக.)*.

*[சூத்து + ஒட்டல்]*

**சூத்தொட்டி** *šūttoṭṭi*, பெ. (n.) இளைத்துப் போனவன்; a slang or contemptuous term for an emaciated person ove one with skin and bones *(சாஅக.)*.

*[சூத்து + ஒட்டி]*

**சூத்தொட்டிப்போதல்** *šūttoṭṭi-p-pōdal*, பெ. (n.) புட்டம் ஒட்டிப்போகை; shrinking or diminution in bulk of the buttocks found in an emaciated person *(சாஅக.)*.

*[சூத்து + ஒட்டிப்போதல்]*

**சூதடி[1]-த்தல்** *šūdaḍi-*, 4 செ.குன்றாவி. (v.t.) ஏமாற்றுதல்; to cheat, decieve. "வீட்டிற் சூதடித்து நாமிருக்கிற்போமோ" *(குருகூர்ப்.)*.

**சூதடி[2]** *šūdaḍi*, பெ. (n.) வஞ்சகம் (உவ.); ஏய்ப்பு; deception, trick.

*[சூது + அடி]*

**சூதர்** *šūdar*, பெ. (n.) 1. அரசன் முன்பு நின்றேத்துவார்; bards whose duty was to praise kings standing in their presence, encomiasts. "சூதரேத்திய துயிலெடை நிலையும்" *(தொல். பொருள். 91)*. 2. பாணர் *(அகநி.)*; a caste of singers, lute-players.

**சூதன்** *šūdaṉ*, பெ. (n.) 1. சூதாடுபவன் *(சூடா.)*; gambler. 2. தந்திரக்காரன்; cunning person, deep.

*[சூது → சூதன்]*

**சூதாட்டம்** *šūdāṭṭam*, பெ. (n.) 1. சூதாடுகை; gambling. 2. தந்திரம், கரவு; trick.

*[சூது + ஆட்டம்]*

**சூதாடி** *šūdāḍi*, பெ. (n.) சூதாடுவோன் *(உவ.)*; gambler.

*[சூது + ஆடி]*

**சூதாடு-தல்** *šūdāḍu-*, 5 செ.குவி. (v.i.) 1. பணம், பொருள் ஈடாகவைத்து ஆடுதல்; gamble by betting money or materials. 'தருமன் நாடுநகரம் மனைவியை வைத்துச் சூதாடித் தன்பெருமைக்கு இழுக்குச் சேர்த்தான்' *(உவ.)*.

*[சூது + ஆடு-,]*

**சூதாடுகருவி** *šūdāḍu-karuvi*, பெ. (n.) 1. தாயம் உருட்டும் பாய்ச்சிகைக் கவறு *(யாழ்அக.)*; dice. 2. சூதாட்டக்கட்டத்தில் வைக்குங்காய் *(புறநா. 52, உரை)*; conical pieces moved on the chess-board according to the throw of dice.

*[சூது + ஆடு + கருவி]*

**சூதாளி** *šūdāḷi*, பெ. (n.) சூதன், 2 பார்க்க; see *šūdaṉ*, 2.

க. ஜூடாலி, ம. சூதாளி

*[சூது → சூதாளி]*

**சூது[1]** *šūdu*, பெ. (n.) ஏமாற்றுகை; cheat.

**சூது[2]** *šūdu*, பெ. (n.) 1. சூதாட்டம்; gambling. "வேண்டற்க வென்றிடினுஞ் சூதினை" *(குறள், 931)*. 2. சூதுக்கட்டத்தில் வைக்குங்கருவி; conical pieces in dice-play. "சூதும் பங்கய முகையுஞ் சாய்த்து" *(பெரியபு. தடுத்தாட். 21)*. 3. வழி; means, .device. "களவு கடனாகக் கடிந்திடுதல் சூதே" *(சீவக. 2870)*. 4. வெற்றி; victory, success. "வெல்வது சூதென வேண்டி" *(சீவக. 879)*. 5. மந்தணம்; secret. 6. தந்திரம்; trick. இந்தச் சூது எங்கிருந்து கற்றான்?

க., ம. சூது

**சூதுக்காரன்** *šūdu-k-kāraṉ*, பெ. (n.) சூதுகாரன் (இவ.) பார்க்க; see *šūdu-kāraṉ*.

*[சூது + காரன்]*

**சூதுகருவி** *šūdu-karuvi*, பெ. (n.) சூதாடுகருவி பார்க்க *(புறநா. 52, உரை)*; see *šūdāḍu-karuvi*.

*[சூது + கருவி]*

சூதுகளி *šūdu-kaḷi,* பெ. (n.) *சூதாட்டம் (நாஞ்.) பார்க்க;* see *šūdāṭṭam.*

*[சூது + களி]*

சூதுகாரன் *šūdu-kāraṉ,* பெ. (n.) தந்திர முள்ளவன்; cunning person. *'சூதுகாரன் கை சும்மா இராது'.*

ம. *சூதுகாரந்,* க. *சூதுகார*

*[சூது + காரன்]*

சூதுபாய்ச்சிக்கை *šūdu-pāyccikkai,* பெ. (n.) தாயம் உருட்டுஞ் சொக்கட்டான்காய் (வின்.); dice.

*[சூது + பாய்ச்சிகை → பாய்ச்சிக்கை]*



சூதுபாய்ச்சிக்கை

சூதுபொரு-தல் *šūdu-poru-,* 4 செ.கு.வி. (v.i.) சூதாடுதல்; to gamble. *"சூதுபொரு கழகத் தருகலும்" (பெருங். இலாவாண 8: 62).*

ம. சூதுபொருக

*[சூது + பொரு-,]*

சூதுமாதவம் *šūdu-mādavam,* பெ. (n.) ஓரிதழ்த் தாமரை; viola suffruticosa *(சா.அக.).*

சூதுமுத்து *šūdu-mutiu,* பெ. (n.) போலிமுத்து *(தஞ்சை.);* artificial pearl.

*[சூது + முத்து]*

சூதுவாது *šūdu-vādu,* பெ. (n.) கள்ளங்கபடு; cunning. *'அவள் சூதுவாது தெரியாதவள்' (உ.வ.).*

*[சூது + வாது]*

சூதுவென்றி *šūdu-veṉṟi,* பெ. (n.) சூதாட்டத்தில் பெற்ற வெற்றியைக் கூறும் புறத்துறை (பு.வெ. *12: 16);* theme describing success in gambling.

*[சூது + வென்றி]*

சூநாறி *šūnāṟi,* பெ. (n.) ஒரு வகைப் பிசின்மரம் *(L.);* umbelled yellow flowered resin seed.

சூப்பல் *šūppal,* பெ. (n.) *சூப்பு-தல் பார்க்க;* see *šūppu- (சா.அக.).*

*[சூப்பு → சூப்பல்]*

சூப்பான் *šūppāṉ,* பெ. (n.) *சூப்பி பார்க்க;* see *šūppi.*

*[சூப்பு + சூப்பான்]*

சூப்பி *šūppi,* பெ. (n.) 1. குழந்தைகள் வாயில் வைத்துச் சுவைத்தற்கு முலைக்காம்பு போல் அமைந்த குமிழ்க்கருவி; artifical nipple for a child to suck. 2. குழந்தைகள் உண்ணும் சிற்றுண்டி வகை; a sweetmeat in the form of a stick chewed by children. 3. இரந்துண்ணி *(யாழ்ப்.);* one who sponges on others. 4. கைவிரலைச் சப்பும் சிறுகுழந்தை; a child sucking its finger *(சா.அக.).*

*[சூப்பு → சூப்பி]*



சூப்பி

சூப்பிடி *šūppiḍi,* பெ. (n.) நாட்டுக்கோட்டைச் செட்டிமார்தம் திருமணத்திற்கு முன் நிகழும் ஒருவகை நிகழ்வு; a preliminary ceremony in marriage among Nāṭṭu-k-koṭṭai Chetti people.

சூப்பியம் *šūppiyam,* பெ. (n.) பாம்பு கொல்லி *(மலை.);* snake killer, common rue *(சா.அக.).*

சூப்பியகால் *šūppiya-kāl,* பெ. (n.) துவண்ட கால்; atrophied leg *(சா.அக.).*

*[சூம்பு → சூப்பு → சூப்பிய + கால்]*

சூப்பு-தல் *šūppu-,* 5 செ.கு.வி. (n.) சப்புதல்; to suck, sip.

க. சீபு

**சூம்படை[1]-தல்** *šūmbaḍai-*, 4 செ.கு.வி. (v.i.) நிலைகெடுதல் (வின்.); to be reduced in circumstances to be ruined. "அவனுடைய வணிகம் சூம்படைந்தது" (உ.வ.).

*[சூம்பு + அடை-,]*

**சூம்படை[2]-த்தல்** *šūmbaḍai-*, 4 செ.கு.வி. (v.i.) சோம்பல்கொள்ளுதல் (நெல்லை.); to be indolent.

*[சோம்பு → சூம்பு + அடை-,]*

**சூம்படைந்தவன்** *šūmbaḍaindavaṉ*, பெ. (n.) 1. சுறுசுறுப்பற்றவன் (நெல்லை.); one who is gloomy and indolent. 2. நிலைகெட்டவன் (வின்.); ruined person, one whose hopes have been blasted.

*[சோம்பு → சூம்பு + அடைந்தவன்]*

**சூம்பு[1]-தல்** *šūmbu-*, 5 செ.கு.வி. (v.i.) மெலிந்து வாடுதல்; to wither, as hand to be blighted, as fruit; to be shrunk as countenance by sorrow. "மல்லாரும் புயுமென்றேன் சூம்பற் றோளை" (தனிப்பா. 1, 274, 16).

*[சோம்பு → சூம்பு-,]*

**சூம்பு[2]-தல்** *šūmbu-*, 5 செ.குன்றாவி. (v.t.) சவைத்தல் (இ.வ.); to suck, fondle with lips.

*[சோம்பு → சூம்பு-,]*

**சூம்பு[3]-தல்** *šūmbu*, 5 செ.குன்றாவி. (v.t.) 1. கை கால் முதலிய உறுப்புகள் குச்சியாகமெலிதல்; limb becoming thin as a stick. 'அவளது வலது கால் சூம்பியிருக்கிறது' (உ.வ.). 2. (முகத்தைக் குறிக்கும்போது) சிறிதாதல், குறுகுதல்; shrunken face. 'செய்தித்தாளில் தேர்வில் அவன் தோல்வியுற்றான் என்று கண்டதும் அவன் முகம் சூம்பிவிட்டது' (உ.வ.).

*[சோம்பு → சூம்பு-,]*

**சூம்பு[4]-தல்** *šūmbu-*, 5 செ.குன்றாவி. (v.t.) 1. நீர் அல்லது அரத்தம் சுண்டிச்சிறுத்து வாட்டமடைதல்; wasting or diminution in the size of a part or sliphy of the eye due to leed of blood circulation. 2. உறுப்புஉலர்தல்; drying up or withering as wasting of a part of the organism ss whole as limbs (சா.அக.).

மறுவ. சூம்பல், வாடுதல், கூம்புதல்

*[சோம்பு → சூம்பு-,]*

**சூமந்திரம்போடு-தல்** *šū-mandiram-pōḍu-*, 20 செ.கு.வி. (v.i.) 1. நோய், அச்சம் முதலின தீங்குவதற்கு மந்தரித்தல்; to exorcise. 2. கமுக்கமாகக் கெடுமதிகூறல்; to exercise evil influence in secret.

*[சூ = ஒலிக்குறிப்பு. சூ + மந்திரம் + போடு-,]*

**சூர்[1]** *šūr*, பெ. (n.) 1. அச்சம்; fear. "சூருறு மஞ்ஞையிற் சோர்ந்த கூந்தலர்" (பெருங். உஞ்சைக். 44 : 22). 2. துன்பம்; suffering. "சூர்தான்வந் தழிவேன்றனை" (இரகு. சீதைவ. 133). 3. நோய் (பிங்); disease. 4. கடுப்பு; pungency. 'சூர்நறா வேந்தினாள்" (பரிபா. 7: 62). 5. ஏய்ப்பு (அக.நி.); deceit, guile. 6. கொடுமை; cruelty. சூரரமகளிர் ஆடுஞ்சோலை" (திருமுரு.41). 7. கொடுந்தெய்வம்; malignant deity. "உருமுஞ் சூரும்" (குறிஞ்சிப். 255). 8. தெய்வ மகளிர்; celestial maidens. "சுனைவாய் நிறைக்குஞ் சூருடைச் சிலம்பில்" (பெருங். உஞ்சைக். 50 : 40). 9. மிளகு (மலை.); black- pepper. 10. வால்மிளகு (மலை.); cubeb.

ம. சூர்.

*[சுள் → சுர் → சூர் (வே.க.)]*

**சூர்[2]-த்தல்** *šūr-*, 4 செ.குன்றாவி. (v.t.) அச்சுறுத்தல்; to frighten. "சூர்த்துக் கடை சிவந்த சுடுநோக்கு" (சிலப். 5: 84).

*[சூர் → சூர்[2]]*

**சூர்[3]-த்தல்** *šūr-*, 4 செ.கு.வி. (v.i.) 1. கொடுமை செய்தல் (திருமுரு. 48, உரை); to be cruel. 2. சுழலுதல்; to revolve, whirl round. "சூர்த்த நோக்கு" (அக.நி.).

*[சூர்[1] → சூர்[3]]*

**சூர்[4]-தல்** *šūr-*, 4 செ.குன்றாவி. (v.t.) கவர்தல் (யாழ்ப்.); to get by unfair means, as property.

*[சூர்[1] → சூர்[4]]*

**சூர்[5]-தல்** *šūr-*, 4 செ.குன்றாவி. (v.t.) 1. தனிமைப் படுத்துதல், பொறுக்குதல்; to pick, separate. 2. வகிர்தல், பிளத்தல்; to bore, to pierce, scoope out. 'பழம் நல்லதா என்று சூர்ந்து பார்' (இ.வ.)

ம. சூருக

*[சுள் → சுளி→ சுகி (சுகிர்) → சூர்-,]*

**சூர்**[6] *šūr,* பெ. (n.) சூரபதுமன் பார்க்க; see *sūrapaduman.* "சூர்நவை முருகன்" (புறநா. 23: 4).

[சுள் → சுர் → சூர்]

**சூர்**[7] šūr, பெ. (n.) 1. ஆண்மை; valour. "வான் பகையின் சூரழிந்திட" (கம்பரா. பிரமாத். 76). 2. அஞ்சாமை (சூடா.); fearlessness, courage.

[சூர்[6] → சூர்[7]]

**சூர்**[8] *šūr,* பெ. (n.) சூரன்[2], 1 பார்க்க; see *šūran*[2], 1. "சூர்புகலரியது ... தொன்மதில்" (கம்பரா. கவந்த. 21).

[சுள் → சுர் → சூர்]

**சூர்க்கத்தி** *šūr-k-katti,* பெ. (n.) சூரிக்கத்தி பார்க்க; see *šūri-k-katti.*

[சூர் + கத்தி]

**சூர்க்கோடரி** *šūr-k-kōḍari,* பெ. (n.) ஈட்டி எனப்படும் படைக்கருவி; pole-axe.

[சூர் + கோடரி]

**சூர்த்தநோக்கு** *šūrtta-nōkku,* பெ. (n.) கொடுமை (அக.நி.); cruelty.

[சூர்[2] + நோக்கு → சூர்த்தநோக்கு]

**சூர்த்தம்** *šūrttam,* பெ. (n.) நடுக்கம் (திருமுரு. 48, வேறுரை); trembling.

[சூர் → சூர்த்தம்]

**சூர்ப்பகை** *šūrppagai,* பெ. (n.); சூரபதுமனின் பகைவனான முருகக்கடவுள்; Lord Murugan, as the foe of Šūran. 'சூர்ப்பகை தொட்ட தோரார்" (கந்தபு. வள்ளியம். 154).

[சூர் + பகை]

**சூர்ப்பு** *šūrppu,* பெ. (n.) 1. கொடுந்தொழில்; cruel, ferocious deed. "விறல் விளங்கிய விழுச் சூர்ப்பின்" (மதுரைக். 33). 2. சுழற்சி (சங்.அக.); whirling, revolving. 3. கைக்கடகம்; bracelet "சுடர்விடு பசும்பூட் சூர்ப்பமை முன்கை" (புறநா. 153: 3).

[சூர் → சூர்ப்பு]

**சூர்ப்புகா** *šūrppugā,* பெ. (n.) கழற்கொடி; bonduc nut creeper (சா.அக.).

**சூர்மகள்**[1] *šūrmagaḷ,* பெ. (n.) வீராங்கனை; amazon.

[சூர் + மகள்]

**சூர்மகள்**[2] *šūr-magaḷ,* பெ. (n.) 1. கொற்றவைக்கு ஏவற்றொழில் புரியும் இடாகினி அல்லது ஓகினி என்ற பெண்பேய் (பிங்.); Iḍākiṉi or Yōgiṉi, the female attendant of Koṟṟavai. 2. ஏமாற்றுப்பெண் (அக.நி.); deceitful, wily woman.

[சூர் + மகள்]

**சூர்மிளகு** *šūrmiḷagu,* பெ. (n.) வால்மிளகு; pepper (சா.அக.).

[சூர் + மிளகு]

**சூர்வு** *šūrvu,* பெ. (n.) வகிர்தல் (சங்.அக.); piercing, boring.

[சூர்[3] → சூர்வு]

**சூரகாசிதம்** *šūragāšidam,* பெ. (n.) சிறுகடலை; small bengal gram (சா.அக.).

**சூரசூதன்** *šūra-šūdaṉ,* பெ. (n.) கதிரவனின் தேரோட்டியாகிய அருணன் (சங்.அக.); sun's charioteer.

[சூரன் (கதிரவன்) → சூரசூதன்]

**சூரசேனம்** *šūra-šēṉam,* பெ. (n.) ஐம்பத்தாறு நாடுகளில் வடமதுரையைச் சூழ்ந்துள்ள நாடு (சங்.அக.); the country around vada Mathurai one of the 56 countries.

**சூரடி-த்தல்** *šūraḍi-,* 4 செ.கு.வி (v.i.) மயிர் முதலியன தீப்படுதலால் கருகல் நாற்றம் வீசுதல் (யாழ்ப்.); to emit offensive smell, as burning hair or wool.

[சூர் + அடி-,]

**சூரணக்கிழங்கு** *šūraṇa-k-kiḻaṅgu,* பெ. (n.) கரணைக்கிழங்கு; elephant yam (சா.அக.).

[சூரணம் + கிழங்கு]

**சூரணஞ்சம்** *šūraṇañjam,* பெ. (n.) காட்டுக் கரணை; wild foot yam (சா.அக.).

[சூரணம் → சூரணஞ்சம்]

**சூரணஞ்சனி** *šūraṇañjaṉi,* பெ (n.); 32 பரங்கி வைப்புநஞ்சுகளில் ஒன்றான செய்ந்நஞ்சு; one of the thirty two kinds of prepared poisons (சா.அக.).

**சூரணத்தண்டு** *šūraṇa-t-taṇḍu,* பெ. (n.); *கரணைக்கிழங்கின் தண்டு;* stem of elephant yam *(சா.அக.).*

*[சூரணம் + தண்டு]*

**சூரத்ததிவிடயம்** *šūrattadiviḍayam,* பெ. (n.) *மருந்துப்பண்டம்;* a medicinal drug.

*[சூரத்து² + அதிவிடயம்]*

**சூரத்தனம்** *šūra-t-taṉam,* பெ. (n.) சூரம்¹ பார்க்க; see *šūram¹.*

*[சூரம் + தனம்]*

**சூரத்தாவிரை** *šūrattāvirai,* பெ. (n.) சூரத்து நிலாவிரை பார்க்க; see *šūrattu-nilāvirai,* srican senna, as from Sūrat.

*[சூரத்து² + ஆவிரை]*

**சூரத்து¹** *šūrattu,* பெ. (n.) சூரம்¹ பார்க்க; see šūram¹. மிகவும் சூரத்துக் காட்டுகிறான் *(இ.வ.).*

*[சூரம் → சூரத்து]*

**சூரதாரு** *šūradāru,* பெ. (n.) தேவதாரு; deodar cedar *(சா.அக.).*

**சூரப்பட்டைச்சத்து** *šūrap-p-paṭṭai-c-cattu,* பெ. (n.) சுரப்பட்டைச்சத்து பார்க்க; see *šura-p-paṭṭai-c-cattu* (சா.அக.).

*[சூரம் + பட்டை + சத்து]*

**சூரப்பத்திரி** *šūra-p-pattiri,* பெ. (n.) ஒருவகைச் *சாதிப்பத்திரி;* myristica attenanata available *(சா.அக.).*

**சூரப்பழம்** *šūra-p-paḻam,* பெ. (n.) சூரைப்பழம் பார்க்க; see *šūrai-p-paḻam* (சா.அக.).

**சூரப்பானு** *šūra-p-pāṉu,* பெ. (n.) ஒருவகைச் *சாதிக்காய்;* Travance or nutmeg *(சா.அக.).*

*[சூரை + பானு]*

**சூரப்புத்தி** *šūra-p-putti,* பெ. (n.) *அறிவாற்றல் (யாழ்ப்.);* ingenuity, intellectual ability.

*[சூரன் + புத்தி]*

**சூரப்புலி** *šūra-p-puli,* பெ. (n.) *அஞ்சா மறவன் (வீரன்) (உ.வ.);* dauntless hero, generally used in contempt.

*[சூரன் + புலி]*

**சூரபதுமன்** *šūra-padumaṉ,* பெ. (n.) *முருகக் கடவுளாற் போரில் இருகூறாக்கப்பட்ட அசுர* வேந்தன் *(கந்தபு.);* an Asura king slained in battle by Lord Murugaṉ.

*[சூரன் + பதுமன்]*

**சூரபற்பன்** *šūra-paṟpaṉ,* பெ. (n.) சூரபதுமன் *(சங்.அக.)* பார்க்க; see *šūra-padumaṉ.*

**சூரபன்மன்** *šūra-paṉmaṉ,* பெ. (n.) சூரபதுமன் பார்க்க; see *šūra-padumaṉ.* "துண்ணென மீள்வனாற் சூரபன்மனே" *(கந்தபு. இந்திரன்க.4).*

**சூரம்¹** *šūram,* பெ. (n.) *மறம் (சூடா.);* valour, bravery, heroism.

*[சள் → சர் → சூர் → சூரம்]*

**சூரம்²** *šūram,* பெ. (n.) *1. கொண்டைக்கடலை;* Bengal gram. *2. வால்மிளகு;* tail pepper *(சா.அக.).*

*[சூர் → சூரம்]*

**சூரம்³** *šūram,* பெ. (n.) ஒருவகை *மரம்* (M.M. 787); evergreen cyprus tree.

**சூரம்⁴** *šūram,* பெ. (n.) *அச்சம் (அக.நி.);* fear, terror.

*[சூர் → சூரம்]*

**சூரமானம்** *šūra-māṉam,* பெ. (n.) சூரத்தனம் *(யாழ்.அக.)* பார்க்க; see *šūra-t-taṉam.*

*[சூரம் + மானம்]*

**சூரரமகளிர்** *šūrara-magaḷir,* பெ. (n.) தெய்வப் பெண்கள் *(பிங்.);* celestial maidens.

*[சூர்¹ + அர + மகளிர்]*

**சூரல்¹** *šūral,* பெ. (n.) *சுழித்தடிக்கை;* whirling, as of wind. "சூரலங் கடுவளி யெடுப்ப" *(அகநா. 1.).*

*[சூர் → சூரல்]*

**சூரல்²** *šūral,* பெ. (n.) *1. பிரம்பு;* common rattan. "வள்ளியும் வகுந்துஞ் சுள்ளியுஞ் சூரலும்" *(பெருங். உஞ்சைக். 46: 276). 2.* செடி வகை; oblique-leaved jujube. "விரிமல ராவிரை வேரல் சூரல்" *(குறிஞ்சிப். 71). 3. நரியிலந்தை;* small round-errate-obtuse-leaved jujube.

ம. சூரன்

*[சூர் → சூரல்]*

**சூரவிதளம்** *šūravidaḷam*, பெ. (n.) செழுமலர்க் கொன்றை; a kind of cassia.

**சூரளம்** *šūraḷam*, பெ. (n.) கரணைக்கிழங்கு; elephant foot yam (சா.அக.).

**சூரன்**[1] *šūraṉ*, பெ (n.) 1. மறவன் (பிங்.); warrior, man of valour, hero. "துறப்பில ரறமெனல் சூர ராவதே" (கம்பரா. தைலமாட்டு. 30). 2. சூரபதுமன் (பிங்.) பார்க்க; see *šūra-padumaṉ*. "சூரனென் றுரைபெற்றுள்ள தொல்லையோன்" (கந்தபு. இரண். சூரபன்மன். 248) 3. நாய் (பிங்.); dog.

மறுவ. வீரன்

[சுள் → சுர் → சூர் → சூரன்]

**சூரன்**[2] *šūraṉ*, பெ. (n.) 1. ஞாயிறு; Sun. "காதற் சூரனை யனைய சூரா" (பாரத. பதினேழாம். 49). 2. நெருப்பு (பிங்.); fire.

[சுள் → சுர் → சுரம் → சுரன் → சூரன்]

**சூரன்**[3] *šūraṉ*, பெ (n.) 1. ஒருவகைச் செய்ந்நஞ்சு; a prepared arsenic. 2. மீன்; fish. 3. அரிமா; lion. 4. மூஞ்சூறு; musk rat. 5. எரியுப்பு; sal ammoniac. 6. சேவல்; cock. 7. மாமரம்; mango tree. 8. கரடி; bear (சா.அக.).

**சூரன்கனி** *šūraṉ-kaṉi*, பெ (n.) 1. மாம்பழம்; mango fruit. 2. மாங்காய்; raw mango fruit.

[சூரன் + கனி]

**சூரன்பாசாணம்** *šūraṉ-pāšāṇam*, பெ (n.) கொச்சிவீரம்; a corrosive sublimate formerly prepared at Cochin.

[சூரன் + பாசாணம்]

**சூராட்டி** *šūrāṭṭi*, பெ. (n.) தேவராட்டி; a female devil-dancer. "மற்றவன்றன் மொழிகேட்ட வரைச் சூராட்டி" (பெரியபு. கண்ணப்ப. 51.)

[சூன் → சூர் + ஆட்டி]

**சூராதிபூடு** *šūrādi-pūḍu*, பெ. (n.) அழுகண்ணி; Indian weeping tree (சா.அக.).

[சூராதி + பூடு]

**சூரி**[1] *šūri*, பெ. (n.) 1. நத்தைச்சூரி; bristly button weed. 2. புளிச்சை; Indian brown hemp.

[சுரி → சூரி]

**சூரி**[2] *šūri*, பெ. (n.) 1. மறக்குடி மகள்; heroic woman. 2. மாகாளி (பிங்.); goddess Durgā. "நான்முகன் வணங்கு மலர்த்தாட் சூரி" (அரிச். பு.பாயி.9). 3. காடுகாள் (பிங்.); goddess of the forest.

[சூரன் → சூரி]

**சூரி**[3] *šūri*, பெ (n.) 1. ஞாயிறு (அக.நி.); Sun. 2. எருக்கு (மலை.); madar plant.

[சூர் → சூரி]

**சூரி**[4] *šūri*, பெ (n.) 1. சூரிக்கத்தி பார்க்க; see *šūri-k-katti*. 2. எழுதும் ஓலையில் துளையிட உதவுங்கருவி; a small double-pointed iron style for boring ōlai leaves.

ம., க., து. சூரி; தெ. ச்சூரி

[சுள் → சுர் → சூர் → சூரி]

**சூரி**[5] *šūri*, பெ (n.) வெப்பு நோய்; small - pox.

[சூர் → சூரி]

**சூரிக்கத்தி** *šūri-k-katti*, பெ (n.) கூர்மையான ஒருவகைக் கத்தி (உ.வ.); a kind of sharp knife.

க. சூரிக்கத்தி; தெ. சூரிக்கத்தி

[சூரி + கத்தி]



சூரிக்கத்தி

**சூரிக்காய்** *šūri-k-kāy*, பெ (n.) புளிச்சைக்காய்; acid cucumber tree (சா.அக.).

[சூரி + காய்]

**சூரிக்காயளவு** *šūri-k-kāyaḷavu*, பெ (n.) இளகிய மருந்தின் அளவைச் சுட்டிக்காட்டக் கூறப்படும் ஒப்பளவு; a measure of medicine about the size of Šūri-k-kāy (சா.அக.).

ஒ.நோ. கழற்சிக்காயளவு

[சூரிக்காய் + அளவு]

**சூரிக்கிளிஞ்சல்** *šūri-k-kiliñjal,* பெ (n.) *பிளவுக் கிளிஞ்சில்;* bivalve shell.

*[சூரி + கிளிஞ்சல்]*

**சூரிக்கொழுந்து** *šūri-k-kolundu,* பெ. (n.) *புளிச்சைக்கீரைத் துளிர்;* young shoot or tender leaves of hemp leaved hibiscus *(சா.அக.).*

*[சூரி + கொழுந்து]*

**சூரிப்பட்டை** *šūrippattai,* பெ. (n.) *கூரையின் முகவாய்ப்பட்டை;* cave board.

ம. சூருப்பட்டெ

*[சூரி + பட்டை]*

**சூரிப்பலகை** *šūri-p-palagai,* பெ. (n.) *கதவு நிலையின் தலையிற் பொருத்தும் பார்வைப் பலகை;* plank placed on the transom of a door.

*[சூரி + பலகை]*

**சூரிப்புகை** *šūri-p-pugai,* பெ (n.) *ஒட்டடை;* smoky deposit on the spider web *(சா.அக.).*

*[சூரி + புகை]*

**சூரிபத்திரம்** *šūri-pattiram,* பெ (n.) *புளிச்சைக் கீரையிலை;* leaves of hibiscus *(சா.அக.).*

*[சூரி + பத்திரம்]*

**சூரிமீன்** *šūri-mīn,* பெ (n.) *கடல்மீன் வகையு ளொன்று;* a kind of sea fish.

*[சூரி + மீன்]*

**சூரிமுள்ளு** *šūri-mullu,* பெ (n.) *சூரையிலந்தை;* jujube *(சா.அக.).*

*[சூரி + முள்ளு]*

**சூரியாணி** *šūriyāni,* பெ (n.) *1. கத்தியைக் கொண்டு செய்யப்படும் அறுவைமருத்துவம்;* surgical operation. *2. முரட்டு மருத்துவம்;* barbarous way of treating diseases *(சா.அக.).*

*[சூரி → சூரியாணி]*

**சூரியிண்டு** *šūriyindu,* பெ (n.) *கழற்சிக்காய்;* seed of caesalpinia bonducella *(சா.அக.).*

*[சூரி + இண்டு]*

**சூரியிலந்தை** *šūri-y-ilandai,* பெ (n.) *ஒருவகை இலந்தை;* a kind of jujube *(சா.அக.).*

*[சுள் (முள்) → சுர் → சூர் → சூரி]*

**சூரிவித்து** *šūri-vittu,* பெ (n.) *நத்தைச்சூரி விதை;* seed of the button weed plant *(சா.அக.).*

*[சூரி (முள்) + வித்து]*

**சூரினர்** *šūrinar,* பெ (n.) *தெய்வப் பெண்கள் (கந்தபு. மலை. 47);* celestial maidens.

*[சூர் → சூரி → சூரினர்]*

**சூருக்கத்தி** *šūru-k-katti,* பெ (n.) *சூரிக்கத்தி (இ.வ.) பார்க்க;* see *šūri-k-katti.*

*[சூரி → சூரு + கத்தி]*

**சூருசரக்கல்** *šūrušarakkal,* பெ. (n.) *சுக்கான்கல்;* lime stone *(சா.அக.).*

*[சூரி → சூரு + சரக்கல்]*

**சூருமகந்தம்** *šūrumagandam,* பெ. (n.) *தருப்பைப்புல்;* sacrificial grass *(சா.அக.).*

மறுவ. நாணல்

*[சூரு + மகந்தம்]*

**சூருமம்** *šūrumam,* பெ. (n.) *1. கருப்பூரப்புல்;* lemon grass. *2. சூருமகந்தம் பார்க்க;* see *šūrumagandam (சா.அக.).*

*[சூர் → சூருமம்]*

**சூருறை** *šūr-urai,* பெ. (n.) *கத்தியால் அறுக்கும் மருத்துவம்;* surgical operation *(சா.அக.).*

*[சூர் + உறை]*

**சூரேகம்** *šūrēgam,* பெ (n.) *பேய்ப்புடல்;* wild snake gourd, devils gourd *(சா.அக.).*

**சூரை** *šūrai,* பெ. (n.) *1. இலந்தை;* oblique leaved jubube. *"கான்றையுஞ் சூரையுங் கள்ளியும் அடர்ந்து" (மணிமே 6:81). 2. தூது வளை (மலை.);* three lobed nightshade. *3. கருஞ் சூரை (K.R.);* hedge coper shrub. *4. மணி பிடியாப்பயிர் (வின்.);* growing grain not eared. *5. பயிரில் விழும் நோய்வகை (இ.வ.);* a blight affecting growing corn. *6. மீன்வகை;* tunny species of fish. *7. இரண்டடி நீளமும் நீலநிறமுமுள்ள மீன்வகை;* tunny-fish, bluish, attaining 2 ft. in length.

*[சூர் → சூரை]*

**சூரைக்காற்று** *šūrai-k-kāṟṟu,* பெ. (n.) *சூறைக்காற்று (வின்.) பார்க்க;* see *šūṟai-k-kāṟṟu.*

*[சூரை + காற்று]*

**சூரைக்காரை** *šūrai-k-kārai,* பெ. (n.) *1. முடி மயிர்;* tuft of hair on the crown of the head. *2. சூரைப்பழம்;* a fruit *(சா.அக.).*

*[சூரை + காரை]*

**சூரைமான்** *šūrai-mān,* பெ. (n.) *பொன்னாங் கண்ணி;* water olive *(சா.அக.).*

*[சூரை + மான்]*

**சூரைமுள்ளி** *šūrai-mulli,* பெ. (n.) *சூரையிலந்தை;* oblique leaved jujubi *(சா.அக.).*

மறுவ. சூரைமுள்ளு

*[சூரை + முள்ளி]*

**சூல்[1](லு)-தல்** *šūl-, 3* செ.கு.வி. (v.i.) *கருக் கொள்ளுதல்;* to become pregnant. "சூலாமை சூலிற் படுந்துன்பம்" *(சிறுபஞ். 75).*

*[சல் → சூல்]*

**சூல்[2](லு)-தல்** *šūl-, 8* செ.குன்றாவி. (v.t.) *1. தோண்டுதல்;* to scoop, dig out, pierce. "நுங்கு சூன்றிட்டன்ன கண்ணீர்மை" *(நாலடி. 44).* *2. அறுத்தல்;* to cut off.

*[சல் → சூல்]*

**சூல்[3]** *šūl,* பெ. (n.) *1. கருப்பம்;* conception, pregnancy. "இளம்பிடி ஒரு சூல் பத்தீ னும்மோ" *(புறநா. 130: 2). 2. முட்டை;* egg. "ஞமலி தந்த மனவுச் சூலுடும்பின்" *(பெரும்பாண். 132).* *3. முகில் நீர் நிரம்பியிருக்கை;* wateriness of clouds. "சூன்முதிர் முகில்" *(பரிபா., 20: 3).*

ம. சூல்; க. சூல்; தெ. சூலு

*[சல் → சூல்]*

**சூல்[4]** *šūl,* பெ. (n.) *சூலம்;* trident of Šivan. "குலிசங் கதைசூல்" *(சேதுபு. தேவிபுர. 27).*

*[சல் → சூல்]*

**சூல்[5]** *šūl,* பெ. (n.) *யானை, குதிரை முதலியவற்றிற்கு இடும் அழகணிப் போர்வை;* ornamental cloth cover for elephants, horses etc.

U. Jhūl

*[சூழ் → சூல்]*

**சூல்கலியாணம்** *šūl-kaliyāṇam,* பெ. (n.) *சீமந்தம் (இ.வ.) பார்க்க;* see *šīmandam.*

*[சூல்[2] + கலியாணம்]*

**சூல்காண்(ணு)-தல்** *šūl-kāṇ(ṇu)-, 16* செ.குன்றாவி. (v.t.) *முதல் கருப்பம் கொண்டிருக்கும் பெண்ணைப் பணியாரங்களோடு சென்று பார்த்தல் (இ.வ);* to visit a woman in her first pregnancy with presents of savoury eatables.

*[சூல்[2] + காண்-,]*

**சூல்காப்பு** *šūl-kāppu,* பெ. (n.) *சூற்காப்பு (இ.வ.) பார்க்க;* see *šūṟ-kāppu.*

*[சூல் + காப்பு]*

**சூல்சாதம்** *šūl-šādam,* பெ. (n.) *சூல்விருந்து பார்க்க;* see *šūlvirundu.*

*[சூல் + வாதம்]*

**சூல்வயிறு** *šūl-vayiṟu,* பெ. (n.) *கருப்பிணியாய் இருக்கும் போது வயிறு அதிகமாகப் பருத்துக் காணல்;* abnormal enlargement of the abdomen during pregnancy *(சா.அக.).*

*[சூல் + வயிறு]*

**சூல்விருந்து** *šūl-virundu,* பெ. (n.) *கருக் கொண்டவள் பொருட்டுச் சமைக்கும் பல்சுவை விருந்து;* feast given in honour of pregnant woman.

*[சூல் + விருந்து]*

**சூலக்கல்** *šūla-k-kal,* பெ.(n.) *1. சிவன் கோயில்களுக்கு விடப்பட்ட நிலங்களின் எல்லையில் நடப்படும் சூலக்குறியுள்ள கல் (கல்.);* boundary-stone bearing trident mark for lands granted to Šivan temples. *2. அளவைக்கல் (இ.வ.);* survey stones.

*[சூலம் + கல்]*

**சூலக்கால்** *šūla-k-kāl,* பெ. (n.) *சூலக்குறி பொறிக்கப் பெற்ற சிவன் கோயில் அளவை மரக்கால் (தெ.க.தொ. 5,8);* measure of capacity marked with trident, used in Šivan temples.

*[சூலம் + கால்]*

**சூலக்கால்வண்டி** *šūla-k-kāl-vaṇḍi,* பெ. (n.) சிவன்கோயிலில் பயன்படும் கட்டைவண்டி வகை (இ.வ.) a kind of strong rough-made cart, used generally in Šivaṉ temples.

*[சூலம் + கால் + வண்டி]*

**சூலக்காளை** *šūla-k-kāḷai,* பெ. (n.) *1.* சிவன் கோயிலுக்காகச் சூலம்பொறித்து விடப்பட்ட காளை; bull branded with trident mark and dedicated to Šivaṉ shrine. *2.* மனம் போன போக்கில் திரிபவன்; loafer.

*[சூலம் + காளை]*

**சூலக்கினி** *šūla-k-kiṉi,* பெ. (n.) *1.* பேய்ப்புல்; devil grass. *2.* கருஞ்சீரகம்; black cumin (சா.அக.).

**சூலக்குழி** *šūla-k-kuḻi,* பெ. (n.) ஈமக்கடன் செய்தற்குரிய பிணக்கற்குழி (பிராமண.); pit for stones set up in funeral ceremonies.

*[சூலம் + குழி]*

**சூலக்குறடு** *šūla-k-kuṟaḍu,* பெ. (n.) சூட்டுக் கோல் (யாழ்ப்.); branding instrument.

*[சூலம் + குறடு]*

**சூலகக்கேசரி** *šūlaga-k-kēšari,* பெ. (n.) எல்லா வகைச் சூலைநோய்களும் தீரக்கொடுக்கும் ஆயுள்வேத மருந்து; an Āyurvedic preparation for all stabing pain, colic pain etc. (சா.அக.).

*[சூலகம் + கேசரி]*

**சூலகிருது** *šūla-kirutu,* பெ. (n.) பெருங்காயம் (மூ.அ.); as afoetida.

*[சூலம் + கிருது]*

**சூலசத்துரு** *šūla-šatturu,* பெ. (n.) ஆமணக்கு வித்து; castor seed.

*[சூலம் + சத்துரு]*

**சூலத்திசை** *šūl-t-tišai,* பெ. (n.) சிவனது சூலம் நிற்பதால் இன்ன இன்ன திக்கு இன்ன கிழமையில் செல்கைக்கு ஆகாதென்று விலக்கப்பட்ட திக்கு; the direction believed to be affected by vārašūlai as inauspicious.

*[சூலம் + திசை]*

**சூலத்தீபம்** *šūla-t-tībam,* பெ. (n.) கோயில் விளக்கு வகை (பரத. ஒழிவி. 41-43); a kind of temple lamp.

*[சூலம் + தீபம்]*

**சூலத்தீவர்த்தி** *šūla-t-tīvartti,* பெ. (n.) சூலம் போன்று, மூன்றுகவருள்ள தீப்பந்தம் (வின்.); torch with three prongs in the form of trident, used in temples.

*[சூலம் + தீவர்த்தி]*

**சூலதாபனம்** *šūla-dābaṉam,* பெ. (n.) சூல வடிவினைப் பொறித்த கற்களை நிலையாக நடுகை; erecting permanently border stones embossed trident.

*[சூலம் + தாபனம் ]*

**சூலநட்டம்** *šūla-naṭṭam,* பெ. (n.) வரிக்கூத்து வகை (அபி. சிந்.); a masquerade dance.

*[சூலம் + நட்டம்]*

**சூலநாசனம்** *šūla-nāšaṉam,* பெ. (n.) கருவையழிக்கும் ஒருவகையுப்பு; a kind of salt causing abortion (சா.அக.).

*[சூலம் + நாசனம்]*

**சூலநாமா** *šūla-nāmā,* பெ. (n.) செழுமலர்க் கொன்றை; a kind of cassia an unknown plant (சா.அக.)

**சூலப்பிராந்தம்** *šūla-p-pirāndam,* பெ. (n.) நிரயவகையுளொன்று (சேதுபு. தனுக்கோ. 4) ; a hell.

*[சூலம் + பிராந்தம்]*

**சூலபாணி** *šūla-pāṇi,* பெ. (n.) சூலப்படையைக் கையிலுடைய சிவன் (சூடா.); Šivaṉ as holding the trident.

*[சூலம் + பாணி (கை)]*

**சூலபீங்கா** *šūla-pīṅgā,* பெ. (n.) நாய்வேளை; wild or dog mustard (சா.அக.).

**சூலம்**[1] *šūlam,* பெ. (n.) *1.* முக்கவரான முனையுடைய வேல்; trident, the three-pronged dart of Šivaṉ. "ஊனக மாமழுச் சூலம் பாடி" (திருவாச. 9: 17). *2.* இடிதாங்கி; lightning rod, as three-pronged. "ஒள்ளிலைச் சூல . . . மாடம்" (சீவக. 2527). *3.* கூரியமுனையுள்ள கழு (வின்.);

impaling stake. 4. சூலவேல் வடிவில் மாட்டுக்கு இடுஞ் சூட்டுக்குறி; brand-mark on cattle, usually trident-shaped. 5. தோணி (இரேவதி) விண்மீன் (பிங்.); the 27th nakṣatra. 6. சூலை; supposed position of Šivan's trident during week-day, considered inauspicious.

வ. சூல.

சூலம் வேல்வகைகளுள் ஒன்றென்பது "உருகெழு சூலவேல் திரித்து" (சங்.அக.) என்னும் தொடரால் அறியப்படும். "சூல வேலைப் போல மூன்று வழி" (சிலப். 11: 73, உரை.)

வேல், முருகனது சிறப்புப்படைக்கலமாகக் கொள்ளப்பட்டதுபோல், சூலவேல் சிவனது சிறப்புப் படைக்கலமாகக் கொள்ளப்பட்டதனால், சிவன்கோயிலுக்கு விடப்பட்ட நிலங்களின் எல்லைகளில் நடப்படும் சூலக்குறியுள்ள கல், 'சூலக்கல்' என்றும், சூலக்குறி பொறிக்கப்பெற்ற சிவன்கோயில் அளவைமரக்கால், 'சூலக்கால்' என்றும், சூலக்குறியிடப்பெற்ற சக்கரமுள்ள சிவன் கோயில் வண்டி, சூலக்கால்வண்டி என்றும், சிவன்கோயிலுக்காகச் சூலவடிவிற் சூடிட்டு விடப்பெற்ற காளை 'சூலக்காளை' என்றும், பெயர்பெறும் (வே.க.204).

"சிவபிரானது சூலம் குறுக்கே நிற்பதால் இன்னின்ன திசை, இன்னின்ன கிழமைகளில் வழிப்போக்கிற்கு ஆகாதென்றும் விலக்கப் பட்ட கிழமைக்குற்றம், கிழமைச்சூலம் எனப்படும். அஃது இன்று 'வாரசூலை' என இலக்கியத்தில் வழங்குகிறது. 'சூலம்' என்பதே உலக வழக்கு. "திங்கள் கிழமை தெற்கே சூலம்" என்றே மக்கள் கூறுதல் காண்க (வே.க. 204).

[சூல் → சூலம்]

**சூலம்**[2] *šūlam*, பெ. (n.) சதுரக்கள்ளி; square spurge (சா.அக.).

**சூலம்**[3] *šūlam*, பெ. (n.) 1. குத்தலுங் குடைச்சலுமுள்ள பல்வகைச் சூலைநோய்; a severe colic pain in the region of abdomen. 2. குத்தல்; pricking pain.

[சூல் → சூலம்]

**சூலம்பிரி-தல்** *šūlam-piri-*, 4 செ.கு.வி. (v.i.) நீர்கட்டப் பெறுதலால் பயிர் கிளைவிட்டுத் தோன்றுதல் (இ.வ.); to branch out and grow luxuriantly, as plant when well-watered.

[சூலம் + பிரி-,]

**சூலமருது** *šūlamarudu*, பெ. (n.) பேய்க் கடுக்காய்; Travancore myrobalan (சா.அக.).

[சூலம் + மருது]

**சூலவரி** *šūlavari*, பெ. (n.) பழைய வரிவகை (I.M.P.N.A. 255); an ancient tax.

[சூலம் + வரி]

**சூலவாசனம்** *šūla-v-āšanam*, பெ. (n.) ஒரு வகை உப்பு; a kind of salt (சா.அக.).

**சூலவிளக்கு** *šūla-viḷakku*, பெ. (n.) சூல வடிவிலான விளக்குவகை (யாழ்ப்.); temple lamp in the form of trident.

[சூலம் + விளக்கு]

**சூலவேல்** *šūla-vēl*, பெ. (n.) சூலப்படைக்கலம்; the trident weapon. 'உருகெழு சூலவேல் திரித்து' (சங்.அக.).

[சூலம் + வேல்]

**சூலனாதி** *šūlanādi*, பெ. (n.) சிறுதும்பை; small tombay (சா.அக.).

**சூலாக்கினி** *šūlā-k-kiṉi*, பெ. (n.) நச்சுப்பாலைக் கொடி; a poisonous creeper of the mimusops genus (சா.அக.).

[சூலம் → சூலா + அக்கினி]

**சூலாதவிருத்தி** *šūlātavirutti*, பெ. (n.) சிவப்பாமணக்கு; red castor seed (சா.அக.).

**சூலாய்தம்** *šūlāydam*, பெ. (n.) நீண்டதண்டின் நுனியில் மூன்றுகூரிய முனைகளையுடைய ஒருவகை வேல்; trident. 'கையில் சூலாய்தத்துடன் நிற்கும் காளியின் உருவம், அச்சமூட்டுவதாக உள்ளது' (உ.வ.).

[சூல் + ஆய்தம்]



**சூலானோன்** *šūlāṉōṉ*, பெ. (n.) வழலைக்கட்டி; soap.

**சூலி**[1] *šūli*, பெ. (n.) கருவுற்றவள் (சூடா.); pregnant woman. "சூலி முதுகிற் சுடச்சுட" (திருக்கை வழக்கம், கண்ணி, 12).

[சூல் → சூலி]

**சூலி**[2] *šūli*, பெ. (n.) 1. சூலமேந்திய சிவன்; lord Šivaṉ, as holding the trident. "சூலி தன்னருட் டுறையின் முற்றினான்" (கம்பரா. நட்புக். 37). 2. சூலப்படை கொண்ட காளி; Kāḷi, as holding the trident. "சூலி நீலி மாலவற் கிளங்கிளை" (சிலப். 12: 68).

[சூல் → சூலம் → சூலி (வேக. 205)]

**சூலிகணம்** *šūliganam*, பெ. (n.) சூலைக்கணம் பார்க்க; see *šūlai-k-kaṇam*.

[சூலி + கணம்]

**சூலிகம்** *šūligam*, பெ. (n.) கோழி; fowl (சா.அக.).

[சூல் → சூலிகம்]

**சூலிகை** *šūligai*, பெ. (n.) இடிதாங்கி; lightening rod, as three-pronged. "மாட நெடுமுகட்டின் சூலிகை" (திவ். பெரியதி. 8. 3 : 3).

[சூல் → சூலம் → சூலிகை]

**சூலியா** *šūliyā*, பெ. (n.) பிள்ளைத்தாய்ச்சி மரம்; an unknown tree (சா.அக.).

[சூல் → சூலியா]

**சூலிலை** *šūlilai*, பெ. (n.) வெற்றிலை; betel leaf (சா.அக.).

[சூல் + இலை]

**சூலினி**[1] *šūliṉi*, பெ. (n.) சூலத்தையேந்திய மலைமகள் (அபிரா. 50); goddess Pārvati as holding the trident.

[சூல் → சூலம் → சூலினி]

**சூலினி**[2] *šūliṉi*, பெ. (n.) வெற்றிலை (தைலவ. தைல. 70); betel leaf.

[சூலம் → சூலி → சூலினி]

**சூலினி**[3] *šūliṉi*, பெ. (n.) முதல் பண்களுள் (மேளகர்த்தாக்களுள்) ஒன்று (சங்.சந்.47); a primary rāga.

[சூல் → சூலினி]

**சூலினி**[4] *šūliṉi*, பெ. (n.) வழலை (வின்.); soap.

**சூலுண்டா-தல்** *šūḷ-uṇḍā-*, 6 செ.கு.வி. (v.i.) கருப்பிணியாய் இருத்தல்; to conceive (சா.அக.).

[சூல் + உண்டா-,]

**சூலுளை-தல்** *šūluḷai-*, 4 செ.கு.வி. (v.i.) 1. மகப்பேற்றுத் துன்பப்படுதல்; to travail in labour. "சங்கு சூலுளைந் தலறிய தடம்பணை" (நைடத. நாட்டுப். 5). 2. சூலைக்குடைச்சல்; a boring pain experienced in arteritis (சா.அக.).

[சூல் + உளை-,]

**சூலெலியன்** *šūleliyaṉ*, பெ. (n.) ஒருவகை எலிக்கடி நச்சு நோய்; a disease due to the poison of rat bite (சா.அக.).

[சூல் + எலியன்]

**சூலேதம்** *šūlēdam*, பெ. (n.) புன்னை; a flowering tree - Alexandrian laural (சா.அக.).

**சூலை** *šūlai*, பெ. (n.) காலந்தவறி நிகழும் மாதவிடாயால் ஏற்படும் மூட்டுவலி நோய், முடக்குவலி நோய், வயிற்றுளைவு நோய் முதலிய நோய்கள்; a clan of diseases including arthritic complaints, stiffness or contraction of the muscls or nerves, scrofula, rheumatism, gout, colic, spasmodic pain, complaints from irregular menses. "அன்னவனை யினிச்சூலை மடுத்தாள்வன்" (பெரியபு.4, திருநாவுக். 48).

[சூல் → சூலை]

**சூலைக்கட்டி** *šūlai-k-kaṭṭi*, பெ. (n.) 1. தாங்க முடியாத குத்தலை உண்டாக்கும் ஒரு வகைக் கட்டி; a small kind of abscess attended with an unbearable excruiating pain. 2. அளவுக்கு அதிகமான புணர்ச்சியினால் உண்டாகும் கட்டி; venereal bubo (சா.அக.).

[சூலை + கட்டி]

**சூலைக்கட்டு** *šūlai-k-kaṭṭu*, பெ. (n.) ஊதையினால் கெட்ட காற்று, அரத்தம் மூலம் மூட்டுகளிற் பரவி நடக்க முடியாத அளவிற்குக் குத்தலைத் தரும் ஒரு நோய்; a disease of metabolism dependent on the morbid vāyu which by the spread of blood, makes pain in the bone-joints so much as to make painful movement (சா.அக.).

[சூலை + கட்டு]

**சூலைக்கடுப்பு** *šūlai-k-kaḍuppu,* பெ. (n.) சூலைவலி; piercing pain (சா.அக.).

*[சூலை + கடுப்பு]*

**சூலைக்கணம்** *šūlai-k-kaṇam,* பெ. (n.) குழந்தைகளுக்கு வாய்முதல், நெஞ்சுவரை புண்ணாகி, மூச்சுடன் இருமல்காணும் ஒரு வகைக் கணநோய்; an affection of congenital heat in children marked by inflamation of the oesophagus hard breath and cough (சா.அக.)

*[சூலை + கணம்]*

**சூலைக்கிராணி** *šūlai-k-kirāṇi,* பெ. (n.) மிகு கழிச்சலில் காணும் (தாங்க முடியாத) வயிற்றுவலி; an acute and unbearable darting pain in the stomach in an attack of chronic diarrhoea (சா.அக.).

*[சூலை + கிராணி]*

**சூலைக்கிருது** *šūlai-k-kirudu,* பெ. (n.) சூலைகிருது பார்க்க; see *šūlai-kirudu* (சா.அக.).

*[சூலை + கிருது]*

**சூலைக்குச்சம்** *šūlai-k-kuccam,* பெ. (n.) நோய்வகை (கடம்ப. இலீலா. 110); a kind of disease.

*[சூலை + குச்சம்]*

**சூலைக்குடைச்சல்** *šūlai-k-kuḍaiccal,* பெ. (n.) சூலைநோயில் உண்டாகும் திருகுவலி (வின்.); writhing pain in certain arthritical diseases.

*[சூலை + குடைச்சல்]*

**சூலைக்குத்து** *šūlai-k-kuttu,* பெ. (n.) மாதவிடாய் தடைபடுவதால் பெண்களுக்குப் பிறப்புறுப்பினுள் உண்டாகும் ஒரு வகைக் குத்தல் நோய்; acute pain in the vagina in a female due ot the obstruction of menstrual discharge (சா.அக.).

*[சூலை + குத்து]*

**சூலைக்குன்மம்** *šūlai-k-kuṉmam,* பெ. (n.) பித்தத்தில் வெப்புதோன்றி அதனால் வறட்சி கண்டு வீங்கி, அந்திநேரத்தில் குடலூதை யோடி அனற்றுமொருவகைக் குன்மநோய்; chronic dyspepsia of acute type.

*[சூலை + குன்மம்]*

**சூலைகரப்பான்** *šūlai-karappāṉ,* பெ. (n.) குழந்தைகளுக்கு உடல் முழுவதும் வெடித்துப் புண்ணாகி முகம் வாடி, கைகால் முடக்கிச் சூலத்தாற் குத்துவதைப் போல் குத்தலை உண்டாக்கும் ஒரு வகைக் கரப்பான் நோய்; a kind of eruption in children marked by cracked sores all over the body - with unbearable pain (சா.அக.).

*[சூலை + கரப்பான்]*

**சூலைகிருது** *šūlai-kirudu,* பெ. (n.) பெருங்காயம்; assafoetida.

மறுவ. சூலகிருது

*[சூலை + கிருது]*

**சூலைகிருமி** *šūlai-kirumi,* பெ. (n.) ஊதைப் பிடிப்பில் காணப்படும் நீளப்பூச்சி; a long shaped bacillus found in the effusion of articular rheumatism (சா.அக.).

*[சூலை + கிருமி]*

**சூலைச்சத்துரு** *šūlai-c-catturu,* பெ. (n.) ஆமணக்கு; castor plant (சா.அக.).

*[சூலை + சத்துரு]*

**சூலைத்திரட்சி** *šūlai-t-tiraṭci,* பெ. (n.) சூலை நீரின் திரட்சி; an accumulation of morbid fluid-sebum (சா.அக.).

*[சூலை + திரட்சி]*

**சூலைநாசனி** *šūlaināšaṉi,* பெ. (n.) 1. பெருங்காயம்; asaafoetida. 2. குக்கில்; bedellium. 3. மூக்கிரட்டை; spreading hog weed. 4. சூலைநோயைத் தீர்க்கும் மருந்து; any medicine for the relief of acute pain in gout rheumatism. 5. செம்பை; bastard sensitive plant. 6. நறுங்குறிஞ்சா; naruṅ-kuriñjā.

மறுவ. சுற்றத்தி

*[சூலை + நாசினி]*

**சூலைநிவாரணசூரணம்** *šūlai-nivāraṇa-šūraṇam,* பெ. (n.) சூலை, குன்மம் இவற்றிற்குக் கொடுக்கும் ஒருவகை ஆயுள்வேத மருந்து; an ayurvedic medicine for relief of šūlai (சா.அக.).

*[சூலை + நிவாரணம் + சூரணம்]*

**சூலைநீர்** *šūlai-nīr,* பெ. (n.) 1. பால்வினை நோயால் பிறப்புறுப்பிலிருந்து வெளிவரும் சீழ்; whites, diseased discharge from the urethra. 2. மேகநீர் (யாழ்ப்.); ill-humours of the body causing šūlai diseases.

[சூலை + நீர்]

**சூலைநோய்** *šūlai-nōy,* பெ. (n.) சூலத்தாற் குத்துவது போன்று உடம்பின், பக்கம், வயிறு, பொருத்து முதலிய பல உறுப்புகளில் காணும் வலி; on affection of a very acute shooting pain experienced, as if inflicted or caused with a trident in any part of the body such as sides, stomach, joints, etc. (சா.அக.).

[சூலை + நோய்]

**சூலைப்பிடிப்பு** *šūlai-p-piḍippu,* பெ. (n.) சூலையினால் கைகால் பொருத்துகளில் உண்டாகும் பிடிப்பு; arthrites due to gout (சா.அக.).

[சூலை + பிடிப்பு]

**சூலைப்பித்தரோகம்** *šūlai-p-pitta-rōgam,* பெ. (n.) கொப்பூழில் குத்தல், மிகுநீர் வேட்கை, வியர்வை, தினவு, நடுக்கம், குத்தல் போன்ற அறிகுறிகளுடன் உள்ளங்கை, உள்ளங்கால் எரிச்சலையும், தலை சுற்றலையும் உண்டாக்கும் பித்தநோய்; a bilious disease marked by burning sensation of the palm and the sole and whirling of the head.

[சூலை + பித்தநோய்]

**சூலைப்புகைச்சல்** *šūlai-p-pugaiccal,* பெ. (n.) சூலைநோய்களுக்குக் கொடுக்கும் மருந்துப் புகை; fumigation applied in cases of šūlai diseases (சா.அக.).

[சூலை + புகைச்சல்]

**சூலைபூபதி** *šūlai-būpadi,* பெ. (n.) சூலை, இசிவு, கீல்பிடிப்பு ஆகியவற்றைச் சீர்படுத்தும் ஓர் ஆயுள்வேத இதளியக்குளிகை; an ayurvedic mercurial pill prescribed for contraction of the joints such as arthritis rheumatism, gout etc attended with acute pain and apoplexy.

[சூலை + பூபதி]

**சூலைவாயு** *šūlai-vāyu,* பெ. (n.) 1. சூலையை உண்டாக்கும் காற்று; flatulence giving rise to šūlai diseases such as colic, iliac passium gout. 2. முடக்குநோய்; rheumatism (சா.அக.).

[சூலை + வாயு]

**சூவாரை** *šūvārai,* பெ. (n.) ஒரு வகை மீன் (யாழ்ப்.); a kind of fish.

**சூவானம்** *šūvānam,* பெ. (n.) அட்டில் (யாழ்.அக.); kitchen.

மறுவ. அடுமனை, அடுக்களை.

தெ. சுவாரமு

[சூடு → சூ + வானம்]

**சூவி** *šūvi,* பெ. (n.) நெல்குத்தும்போது 'சூவி' என்று முடித்துப்பாடும் உலக்கைப்பாட்டு (இவ); song used when pounding grain, in which every line ends with the sound of šūvi.

தெ., க. சுவ்வி

[சூ + இ. மூச்சுவிடற் குறிப்பு]

**சூவிடு-தல்** *šūviḍu-,* 18 செ.குன்றாவி. (v.t.) நாயைப் பாய ஏவுதல்; to set on, as dogs to attack.

[சூ + விடு-. 'சூ' ஒலிக்குறிப்புச் சொல்]

**சூவெனல்** *šū-v-eṉal,* பெ. (n.) நாயைப் பாய ஏவுதற்குறிப்பு; onom. expr. of urging dogs to attack.

[சூ + எனல். 'சூ' ஒலிக் குறிப்புச் சொல்]

**சூழ்[1]-த்தல்** *šūḻ-,* 4 செ.குன்றாவி. (v.t.) 1. சுற்றுதல்; to wind, wrap round. "பூப்பால் வெண்டுகில் சூழ்ப்ப" (பரிபா. 10 : 80). 2. சுற்றிமொய்த்தல்; to surround, hover about. "சூழ்த்து மதுகர முரலும்" (திருவாச. 5:16).

[சுள் → சுழ் → சூழ்-,]

**சூழ்[2]-தல்** *šūḻ-,* 2 செ.குன்றாவி. (v.t.) 1. சுற்றி யிருத்தல்; to encompass, surround, envelope "அறைகடல் சூழ்வையம்" (நாலடி., 230). 2. சுற்றி வருதல்; to go round, as in temple from left to right, hover about, flow around. "சூழ்கதிர் வான் விளக்கும்" (பு. வெ. 9:16). 3. ஆராய்தல்; to consult, to deliberate. "நின்னொடு சூழ்வ றோழி" (கலித். 54). 4. கருதுதல்; to intend, to think over. "புலைசூழ்வேள்வியில்" (மணிமே. 13 : 28).

*5. தீயசூழ்ச்சிக்குத் திட்டமிடல்;* to conspire. *"கொடியவன் கடிய சூழ்ந்தான்" (சீவக. 261).* 6. தேர்ந்தெடுத்தல்; to select. "சூழ் புரவித்தேர்" *(பு.வெ. 9 16).* **7. அறிதல்** *(சங்.அக.);* to know. **8. பண்ணுதல்;** to construct, to create. "பாவை சூழ்ந்தும்" *(பட்டினப். 102).* 9. எழுதுதல்; to draw. "தொய்யில்சூ ழிளமுலை" *(கலித். 125).* **10. தாக்குதல்** *(யாழ்ப்.);* to encounter.

ம. சூழுக; க. சொழல்; தெ. சுடியு; து. சுயிபுனி, சுலிபினி; துட. துட்ய; கூ. டொட்க; குவி. தூர்லிகியாலி

*[சூள் → சுழ் → சூழ்-,]*

**சூழ்**[3] *šūḷ,* பெ. (n.) *1. கலந்தாய்வு;* deliberation, counsel. *2. ஆராய்ச்சி;* investigation. *"கற்றார் சூழ் சொல்லுமாங்கண்டு" (சி.போ. 8. 1:1).* 3. சுற்று; surrounding. *"சூழா மெட்டே யாயிரவேதி" (கந்தபு. அசுரர்யா. 61).* **4. தலைக்கணி மாலை;** wreath of flowers for head. *"மென்பூச் சூழு மெழுதி" (திருக்கோ. 79).* **5. கடலை** *(மலை.);* Bengal gram.

**சூழ்ச்சம்** *šūḷccam,* பெ. (n.) *சூழ்ச்சி, 2,4 பார்க்க (யாழ்.அக.);* see *šūḷcci, 2,4*

*[சூழ் → சூழ்ச்சம்]*

**சூழ்ச்சி** *šūḷcci,* பெ. (n.) *1. பரப்புகை;* spreading. "சூழ்ச்சி ஞானச் சுடரொளியாகி" *(திவ். திருவாய். 3. 2 : 4).* 2. கலந்தாய்வு; counsel, consultation. "போற்றார் பொறுத்தலுஞ் சூழ்ச்சிய தகலமும்" *(புறநா. 2:7).* 3. நுண்ணறிவு; wisdom. "கருமக் கிடக்கையுங் கலங்காச் சூழ்ச்சியும்" *(பெருங். உஞ்சைக். 46:117).* **4. செய்வழி;** plan means. "சொல்லா யானுன்னைச் சார்வதோர் சூழ்ச்சியே" *(திவ். திருவாய். 3. 2:3).* **5. மனத் தடுமாற்றம்;** mental disturbance. "மைம்மிக னலிதல் சூழ்ச்சி" *(தொல். பொருள். 260).*

ம. சூழ்ச்ச

*[சூழ் → சூழ்ச்சி]*

**சூழ்ச்சித்துணைவர்** *šūḷcci-t-tuṇaivar,* பெ. (n.) *அமைச்சர்கள்;* counsellers, ministers. "சூழ்ச்சித் துணைவராகிய அமைச்சரோடு கூட விருந்து" *(சி. போ. சிற். 4, பக். 90).*

*[சூழ்ச்சி + துணைவர்]*

**சூழ்த்து-தல்** *šūḷttu-,* 5 செ.குன்றாவி. (v.t.) சூழச் செய்தல்; to cause to surround, to involve. 'உனைப்பாடாதவர்களைப் பல்வினைக்கே சூழ்த்துதி" *(திருநூற். 20).*

*[சூழ்[2] → சூழ்த்து-,]*

**சூழ்தாழை** *šūḷtāḷai,* பெ. (n.) தாமரை (மலை); lotus flower.

*[சூழ் + தாழை. தாழ் → தாழை]*

**சூழ்ந்து** *šūḷntu,* பெ. (n.) சுளுந்து பார்க்க; see *šuḷundu* (சா.அக.).

**சூழ்நிலை** *šūḷ-nilai,* பெ. (n.) *1.* **செய்தி அல்லது நிகழ்ச்சிக்குப் பின்னணி, நிலைமை;** circumstances, conditions. *'மாணவன் தேர்வு எழுதமுடியாத சூழ்நிலைக்காக ஆசிரியர் வருந்தினார்'.* **2. மாந்தர் வாழும் இடத்தைச் சுற்றியிருக்கும் இயற்கைப்பொருள்களின் தொகுதி;** surroundings.

*[சூழ் + நிலை]*

**சூழ்போ-தல்** *šūḷ-pō-,* 9 செ.குன்றாவி. (v.t.) *1. சுற்றிப்போதல்;* to go round. 'சுடுமண்ணேற்றி யரங்கு சூழ்போகி" *(மணிமே. 18 : 33).* **2. வலம் வருதல்;** to go round from left to right as in temple. "தோகையோர் பங்கன்றாளி லுவகையின் வணங்கிச் சூழ்போந்து" *(கூர்மபு. தக்கன்வேள். 18).* **3. வளைத்தல்** *(திவா.);* to surround, hover about. **4. சுற்றிக்கிடத்தல்;** to lie around. "சுணங்குந் திதலையுஞ் சூழ்போந்து" *(ஆதியுலா. 177).* **5. ஆராய்தல்;** to deliberate. "மன்னு நரகன் றன்னைச் சூழ்போகி வளைத்தெறிந்து" *(திவ். பெரியாழ். 4. 3:3).*

*[சூழ் + போ-,]*

**சூழ்வல்லோர்** *šūḷ-vallōr,* பெ. (n.) *அமைச்சர்;* ministers. "எதிராடா திருந்தாரச் சூழ்வல்லோர்கள்" *(திருவிளை. பரிநரி. 41).*

*[சூழ் + வல்லோர்]*

**சூழ்வளி** *šūḷvaḷi,* பெ. (n.) சுழல்காற்று, சூறாவளி; whirlwind, cyclone. "சூழ்வளி சுழற்ற வாழ்கயத் தழுந்தினன்" *(பெருங். நரவாண 1, 24).*

ம. சூழ்வல்லோர்

*[சூழ் + வளி]*

**சூழ்வார்** *šūḻvār*, பெ. (n.) சூழ்வோர் பார்க்க; see *šūḻvōr*. "சூழ்வார் கண்ணாக ஒழுகலான்" (குறள். 445).

*[சூழ் + ஆர். 'ஆர்' பலர்பாலீறு]*

**சூழ்வினை** *šūḻvinai*, பெ. (n.) சூழ்ச்சி, 4 பார்க்க; see *šūḻcci, 4*. "தோழர்க் குணர்த்துஞ் சூழ்வினை தொடங்கி" (பெருங். இலாவாண, 10, 84) (செ.அக.).

*[சூழ் + வினை]*

**சூழ்வு** *šūḻvu*, பெ. (n.) 1. சூழல்[1] பார்க்க; see *šūḻal*. "சூழ்வுற வமரர் துதைந்தனர்" (கோயிற்பு. பதஞ்சலி, 45). 2. சூழ்ச்சி, 2 பார்க்க; see *šūḻcci, 2*. 3. சூழ்ச்சி, 4 பார்க்க; see *šūḻcci, 4*. "ஏகாதொழிவது சூழ்வன்று" (கந்தபு. ஏமகூட. 2).

*[சூழ் → சூழ்வு]*

**சூழ்வோர்** *šūḻvōr*, பெ. (n.) 1. அமைச்சர் (பிங்.); counsellors, ministers. 2. உறவினர் (வின்.); relations; friends. 3. சூழ்ந்து நிற்பவர்; spectators, neighbours.

*[சூழ் + ஏர் → சூழ்வேர்]*

**சூழ** *šūḻa*, கு.வி.எ. (adv.) 1. கூட்டமாகப் பின் தொடர; to accompany. 'இக்கால அரசியலார் பலர் புடைசூழ வருவதில்தான் மகிழ்ச்சி கொள்கின்றனர்'. 2. வெள்ளம் போன்று சூழ வருதல்; encircling like flood water 'வெள்ளம் சிற்றூரைச் சூழ்ந்தது'.

*[சூழ் → சூழ]*

**சூழகழிருக்கை** *šūḻagaḻ-irukkai*, பெ. (n.) தோணாமுகம் (பிங்.); a fortified capital.

*[சூழ் + அகழ் + இருக்கை]*

**சூழகம்** *šūḻagam*, பெ. (n.) வெள்ளைக்கடலை; Bengal gram (சா.அக.).

*H., Ur. Chenna.*

*[சூழ் + அகம்]*

**சூழவரினி** *šūḻavarini*, பெ. (n.) பொற்சீந்தில்; moon creeper (சா.அக.).

*[சூழ + வரினி]*

**சூழல்** *šūḻal*, பெ. (n.) 1. சூழ்கை; surrounding. 2. இடம் (பிங்.); place, locality. 3. மணற்குன்று; sand-hill. "விளையாடு சூழல்" (திவ். திருவாய். 6, 2, 4. பன்னீ.). 4. கூட்டம்; company, crowd. "வானவர் சூழலோடு" (கந்தபு. மேருப். 48). 5. கலந்தாய்வு; counsel. 6. சூழ்ச்சி[4] பார்க்க; see *šūḻcci*. "சூழல்கள் சிந்திக்கில்" (திவ். திருவாய். 5, 5). 7. தோற்றரவு; incarnation. "சூழலென்று அவதாரத்தைச் சொல்லக் கடவதிறே" (ஈடு. 2, 7, 6). 8. தந்திரம்; trick, stratagem.

ம. சூழல்

*[சூழ் + அல். 'அல்' தொ.பெ.ஈறு.]*

**சூழி**[1] *šūḻi*, பெ. (n.) 1. சேணம் (பிங்.); saddle. 2. யானையின் முகபடாம்; ornamental covering for the elephant's face. "யானைச் சூழியிற் பொலிந்த" (மலைபடு. 228). 3. நீர்நிலை; pool in hilly tracts, tank, pond. "அலங்கு கதிர் சுமந்த கலங்கற் சூழி" (புறநா. 375). 4. கடல் (அக.நி.); sea, ocean. 5. சூழியல் பார்க்க (யாழ்ப்.); see *šūḻiyal*.

*[சூழ் → சூழி. 'இ' பெயராக்க ஈறு]*

**சூழி**[2] *šūḻi*, பெ. (n.) 1. உச்சி (பிங்.); crown of the head. 2. சூழியம் பார்க்க (இ.வ.); see *šūḻiyam*. 3. மேலிடம்; top portion. 'நெடுமதிற் சூழி" (பு. வெ. 6: 15).

**சூழிகணம்** *šūḻiganam*, பெ. (n.) சூலிகணம் (பை. ஷஜ. 209) பார்க்க; see *šūliganam*.

*[சூழ் → சூழி + கணம்]*

**சூழிகை** *šūḻigai*, பெ. (n.) கள் (அக.நி.); toddy.

மறுவ. மது, சொல்விளம்பி.

**சூழியப்படை** *šūḻiya-p-paḍai*, பெ. (n.) சூழியற் படை பார்க்க; see *šūḻiyar-paḍai*.

*[சூழியம் + படை]*

**சூழியம்** *šūḻiyam*, பெ.(n.) 1. உச்சிக்கொண்டை; hair-knot on the crown of the head (திருவிருத். 60. வியா. பக். 330). 2. உச்சிக்கொண்டையில் அணியும் அணிகலன்; ornament worn on the crown of the head. "விட்டிலகு சூழியம் விழுங்கு சிறுகொண்டை" (திருவிளை. தடாதகை. 16).

*[சூழி[2] → சூழியம்]*

**சூழியல்** *šūḻiyal*, பெ. (n.) வீட்டிறப்புத் தாங்கும் கழி (யாழ்ப்.); supporting stakes in wall or the eaves of a house.

ம. சூழிக

*[சூழ்[2] → சூழியல்]*

**சூழியற்கம்பு** *šūḻiyar-kambu*, பெ. (n.) *சூழியல் (வின்.) பார்க்க;* see *šūḻiyal.*

*[சூழியல் + கம்பு]*

**சூழியற்படை** *šūḻiyarpaḍai*, பெ. (n.) *வீட்டுச் சுவரின் எடுத்துக்கட்டி;* sloping cornice of a house-wall.

*[சூழியல் + படை]*

**சூழியற்படைதட்டு-தல்** *šūḻiyarpaḍai-taṭṭu-*, 5 செ.கு.வி. (v.i.) *பிறரது பாட்டைச் சிறிது மாற்றித் தன்னதாக்குதல்;* lit. to knock off cornice and slightly raise the wall, to adopt another's composition as one's own, making slight alterations, to plagiarise. *சூழியற்படையை இடித்துச் சுவரையெழுப்புதல்.*

*[சூழியல் + படை + தட்டு-,]*

**சூள்**[1]**-தல்** *šūḷ-*, 5 செ.கு.வி. (v.i.) *1. ஆணையிடுதல்;* to take an oath. "ஐய சூளி னடிதொடு குன்றொடு" *(பரிபா. 8:70).* 2. *வஞ்சினங்கூறுதல்;* to vow. "சூட்கின்ற வீரம்" *(கம்பரா. நிகும்ப. 82).*

*[உள் → சுள் → சூள்]*

**சூள்**[2] *šūḷ*, பெ. (n.) *1. பூட்கை (சபதம்);* vow. "சூள் பேணான் பொய்த்தான் மலை" *(கலித். 41).* 2. *ஆணை;* oath. "இன்னாத் தொல்சூ ளெடுத்தற் கண்ணும்" *(தொல். பொருள். 147).* 3. *சாவிப்பு (சாபம்);* malediction, curse. "கருப்பமோ டிருத்திர் பல்காலம் . . . என்று சூளிசைத்தாள்" *(கந்தபு. துணைவ. 10).*

ம. சூழ்; க. சுருள்; தெ. சூசு; து. சூலு; கூ. சூள; பர். சூள்; E. jury

*[உள் → சுள் → சூள்]*

**சூள்**[3] *šūḷ*, பெ. (n.) *தீப்பந்தம் (யாழ்ப்);* torch, flambeau.

**சூளம்** *šūḷam*, பெ. (n.) *சீழ்க்கை (நாஞ்.);* whistle.

ம. சூள

*[சூள் + அம்]*

**சூளரவு** *šūḷaravu*, பெ. (n.) *சூளுறவு பார்க்க;* see *šūḷuṟavu.* "இன்னோர் சான்ற சூளரவு சாற்றி" *(கந்தபு. அசமுகிபு. 29).*

*[சூள் + அரவு]*

**சூளாமணி** *šūḷāmaṇi*, பெ. (n.) *1. முடிமணி;* chief gem in a crest or diadem. "சூளாமணி சிந்தித்திரியுமன்றே" *(சீவக. 786).* 2. *தேவர்கோன் (இந்திரன்) அணியும் மணி (பிங்.);* gem worn by Indra. 3. *திவிட்டனைக் காப்பியத் தலைவனாகக் கொண்டு தோலாமொழித் தேவர் இயற்றிய தொடர்நிலைச் செய்யுள்;* a Jaina poem with Tiviṭṭaṉ- as hero by Tōlā moḻi-t-tēvar.

ம. சூளாமணி

*[சூடாமணி → சூளாமணி]*

**சூளி** *šūḷi*, பெ. (n.) *சூழியம், 1 (யாழ்அக.) பார்க்க;* see *šūḻiyam,1.*

**சூளிகம்** *šūḷigam*, பெ. (n.) *அப்பவகை (சங். அக.);* flour cakes cooked in ghee.

*[சூள் → சூளிகம்]*

**சூளிகை**[1] *šūḷigai*, பெ. (n.) *1. நீர்க்கரை;* shore. "நன்னீர்ச் சூளிகைதோறும்" *(அரிச். பு. விவாக. 46).* 2. *செய்குன்று;* an artificial mound. "கோபுர மன்றஞ் சூளிகை" *(கந்தபு. வரைபுனை. 7).* (இலக்.அக.).

*[சூழ்*[2] *→ சூழிகை → சூளிகை]*

**சூளிகை**[2] *šūḷigai*, பெ. (n.) *1. யானைச் செவியடி (பிங்.);* the root of elephant's ear. 2. *நிலாமுற்றம் (பிங்.), மொட்டைமாடி;* open terrace. "மாடமலி சூளிகையிலேறி மடவார்கள் பாடலொலி செய்ய" (தேவா. 324. 2). 3. *தலை அணிகலன்களில் ஒன்று;* an ornament for the head. "சூளிகையுஞ் சூட்டும் . . . மின் விலக" *(ஆதியுலா. 68).*

*[சூடிகை → சூளிகை]*

**சூளுதல்** *šūḷudal*, தொ.பெ. (vl.n.) *குடைகை;* boring pain *(சா.அக.).*

*[சூள் → சூளுதல்]*

**சூளுரை** *šūḷurai*, பெ. (n.) *பூட்கை;* vow. *'தன் சூளுரை நிறைவேறுமா நிறைவேறாதா என்று அவனுக்குத் தெரியாது' (உ.வ.).*

*[சூள் + உரை]*

**சூளுரை-த்தல்** *šūḷurai-*, 4 செ.குன்றாவி. (v.t.) *சூளுறு-தல் பார்க்க;* see *šūḷuṟu-.*

**சூளுறவு** *šūḷ-uṟavu,* பெ. (n.) ஆணையிடுகை; oath. "தோழி சூளுறவாகக் கருதினாள்" (இறை. 18. பக். 107, உரை).

*[சூள் + உறு → உறவு]*

**சூளுறு-தல்** *šūḷuṟu-,* 20 செ.கு.வி. (v.i.) 1. ஆணையிடுதல்; to swear, to take oath. 2. வஞ்சினம் கூறுதல்; to take a vow. "உண்ணா நோன்பி தன்னொடுஞ் சூளுற்று" (மணிமே. 3:102).

க. சூருளிசு

*[சூள் + உறு-,]*

**சூளை**[1] *šūḷai,* பெ. (n.) 1. செங்கல் முதலியன சுடுங்காளவாய்; kiln, furnace. "அகலிரு விசும்பி னூன்றுஞ் சூளை" (புறநா. 228:3). 2. ஈமவிறகு; funeral pile.

ம. சூள. Pkt. culli; H. cūlliyā; Mar. cūn; Skt. cūlli (உலை)



சூளை

**சூளை**[2] *šūḷai,* பெ. (n.) கணிகை; prostitute. "பலர்ப் புணர்ந்து முயங்கு சூளையாய் முடிந்தனள்" (உபதேச. உருத்திரா. 113).

ம. சூள., க., து. குட., பட. சூளெ. கோத. சூள். Skt. šūlā

*[சூள் → சூளை]*

**சூளைக்கல்** *šūḷai-k-kal,* பெ. (n.) 1. செங்கல்; brick. 2. சுண்ணாம்புக்கல்; lime stone. 3. ஒரு வகைக்கல்; a kind of stone (சா.அக.).

*[சூளை + கல்]*

**சூளைச்சக்கரம்** *šūḷai-c-cakkaram,* பெ. (n.) 1. பானையோடு; piece of broken pot. 2. அகல் விளக்கு; an earthern lamp (சா.அக.).

*[சூளை + சக்கரம். சருக்கரம் → சக்கரம்]*

**சூளைபிரி-த்தல்** *šūḷaipiri-,* 4 செ.கு.வி. (v.i.) கருப்பத்துடன் இறந்தவள் பொருட்டுச் சூளையினின்று மட்கலம் வாங்கிப் பிறர்க்கு அளித்தல் (இ.வ.); to purchase pots from a kiln and distribute them to the poor in memory of a woman who died in pregnancy.

*[சூளை + பிரி-,]*

**சூற்கருப்பை** *šūṟ-karuppai* பெ. (n.) கருப்பந் தாங்கிய பை; the pregnant uterus - gravid uterus (சா.அக.).

*[சூல் + கருப்பை]*

**சூற்காப்பு** *šūṟ-kāppu,* பெ. (n.) முதன்முறையாக கருக்கொண்ட கருப்பிணிகட்கு ஐந்தாவது அல்லது ஏழாவது மாதங்களில் அணிவிக்கப் படும் வளைகாப்பு; bracelets put ceremonially on the arms of pregnant lady in the 5th or 7th month after conception (செ.அக.).

*[சூல் + காப்பு]*

**சூற்கொள்ளல்** *šūṟ-koḷḷal,* பெ. (n.) கருப்பங் கொள்ளுகை; to conceive, to be pregnant (சா.அக.).

*[சூல் + கொள்ளல்]*

**சூற்கொள்ளாமை** *šūṟkoḷḷāmai,* பெ. (n.) கருத்தரிக்காமை; absence of pregnancy (சா.அக.).

*[சூல் + கொள்ளாமை]*

**சூற்சங்கு** *šūṟšaṅgu,* பெ. (n.) முத்திருக்கும் சிப்பி (யாழ்ப்); shell, oyster containing pearls.

*[சூல் + சங்கு]*

**சூற்சராயு** *šūṟšarāyu,* பெ. (n.) சூற்கருப்பை பார்க்க; see *šūṟ-karuppai* (சா.அக.).

*[சூல் + சராயு]*

**சூற்சாதம்** *šūṟsādam,* பெ. (n.) முதன்முறையாக கருக்கொண்ட பெண்ணுக்குச் சுற்றத்தார் இடும் விருந்து (தஞ்சை.); feast given by relatives to a woman in her first pregnancy.

*[சூல் + சாதம்]*

**சூற்பிபாசம்** *šūṟpipāšam,* பெ. (n.) நிரய (நரக) வகை (சி.போ.பா. 2, 3, பக். 204); a hell.

*[சூல் + பிபாசம்]*

**சூற்பெண்டு** *šūṟ-peṇḍu*, பெ. (n.) சூலி; pregnant woman. 'சூற்பெண்டுகள் சுரமேறுமாபோலே' (ஈடு, 2. 10 : 2).

*[சூல் + பெண்டு]*

**சூறல்** *šūṟal*, பெ. (n.) தோண்டுகை; scooping digging out.

ம. சூறல்

*[சூல் → சூறல்]*

**சூறன்** *šūṟaṉ*, பெ. (n.) மூஞ்சுறு (பிங்.); grey musk - shrew.

*[சூறு + அன்]*

**சூறாவளி** *šūṟāvaḷi*, பெ. (n.) சுழற்காற்று, கடுங்காற்று; whirlpool, tempest "சூறாவளிபோற் சுழற்றுஞ் சிறுபுன் றுரும்பு" (நன்னெறி. 11).

ம. சூறாவளி; தெ. சூரகருவலி; பட. சுற்றிகாயி

*[சூறா + வளி]*

**சூறாவளிக்கிணறு** *šūṟāvaḷi-k-kiṇaṟu*, பெ. (n.) உள்ளுறைக் கிணறு (இ.வ.); under-well inside a well.

*[சூறாவளி + கிணறு]*

**சூறாவளிச்சட்டம்** *šūṟāvaḷi-c-caṭṭam*, பெ. (n.) கிணற்றினடியில் வைக்கும் நெல்லிமரச் சட்டம் (வின்.); frame of nelli wood placed at the bottom in constructing a well.

*[சூறா + வளி + சட்டம்]*

**சூறாவாரி** *šūṟāvāri*, பெ. (n.) சூறாவளி பார்க்க; see *šūṟāvaḷi*.

*[சூறா + வாரி]*

**சூறு-தல்** *šūṟu-*, 5 செ. குன்றாவி. (v.t.) சூழ்தல்; to surround, encompass. "சூறிய விமையோர்" (பாரத. காண்டவ. 31).

**சூறு** *šūṟu*, பெ. (n.) எருவாய்; anus.

*[சூத்து → சூற்று → சூறு]*

**சூறை**[1] *šūṟai*, பெ. (n.) 1. நெற்றி; forehead. 2. தூதுவளை; three lobed night shade (சா.அக.).

**சூறை**[2] *šūṟai*, பெ. (n.) கழுத்தின் பின்குழி (பிங்.); hallow in the nape of the neck.

**சூறை**[3] *šūṟai*, பெ. (n.) 1. சுழல்காற்று; whirl wind. "சூறைமாருதத்து" (திருவாச. 3:10). 2. கொள்ளை (திவா.); decoity. 3. பயிரில் விழும் நோய்வகை; a blighting disease of crops. 4. பனிச்சை என்ற மயிர்முடிவகை; a kind of dressing the hair in a knot. "வட்டச் சூறையர்" (சீவக. 632). 5. சல்லடம் (சீவக. 632. விசேடக் குறிப்பு); loin cloth. 6. இரண்டடி நீளமும் கருநீல நிறமுமுள்ள கடல் மீன்; tunny fish bluish attaining 2 ft. in length. 7. சூறைக்குருவி (பதார்த்த. 894) பார்க்க; see *šūṟai-k-kuruvi*.

ம. சூற

*[சூறு + ஐ]*

**சூறைக்காரன்** *šūṟaikkāraṉ*, பெ. (n.) கொள்ளையடிப்பவன்; robber, plunderer. "நிருதர்புரச் சூறைக்காரப் பெருமாளே" (திருப்பு., 170).

*[சூறை + காரன்]*

**சூறைக்காற்று** *šūṟai-k-kāṟṟu*, பெ. (n.) சுழல் காற்று (இ.வ.); whirlwind.

*[சூறை + காற்று]*

**சூறைக்குருவி** *šūṟai-k-kuruvi*, பெ. (n.) சோள வயலிற் கூட்டங்கூட்டமாய்க் காணப்படும் குருவி வகை; rose coloured starling, found in flocks on the chōḷam fields, pastor roscus (M.M. 181).

*[சூறை + குருவி]*

**சூறைக்குருவிக்கறி** *šūṟai-k-kuruvi-k-kaṟi*, பெ. (n.) குட்டம், சோகை, குன்மம், வீக்கம், ஆறாப்புண் இவற்றைப் போக்கும் சூறைக் குருவியின் கறி; the flesh of the šūṟai kuruvi controls leprosy, worms, severe rheumatic affections (சா.அக.).

*[சூறைக்குருவி + கறி]*

**சூறைகொள்(ளு)-தல்** *šūṟaikoḷ-*, 7 செ.குன்றாவி. (v.t.) சூறையாடுதல்; to plunder. "சோதியான் சூழ் பனிநீர் சூறைகொளு மாறே போல்" (பட்டினத். திருப்பா., நெஞ்சொடு. 32).

*[சூறை + கொள்-,]*

**சூறைகோட்பறை** *šūṟaikōṭpaṟai*, பெ. (n.) வழிப்பறி செய்வோர்க்குரிய பாலைப்பறை (தொல். பொருள். 18. உரை); robber's drum.

*[சூறை + கொள் + பறை - சூறை கோட்பறை]*

**சூறைச்சின்னம்** *šūṟai-c-cinnam*, பெ. (n.) கொள்ளையிடுவோர்க்குரிய ஊதுகொம்பு; robber's horn. "ஆறெறி பறையுஞ் சூறைச் சின்னமும்" (சிலப். 12. 10).

*[சூறை + சின்னம்]*

**சூறைத்தேங்காய்** *šūṟai-t-tēṅgāy*, பெ. (n.) நேர்த்திக் கடனாகத் தெய்வத்தின் முன்னிலையில் உடைக்கும் சிதறுதேங்காய்; coconuts dashed on the ground before a shrine in fulfilment of vow.

*[சூறை + தேங்காய்]*

**சூறையர்** *šūṟaiyar*, பெ. (n.) பரத்தையர்; prostitute "தயங்கு குழற் சூறையர்" (தஞ்சை.வா. 377).

*[சூளை² → சூறை → சூறையர்]*

**சூறையாடு¹-தல்** *šūṟai-y-aḍu-*, 5 செ.குன்றாவி. (v.t.) கொள்ளையடித்தல்; to plunder, pillage. "அறிவினைச் சூறையாட" (கம்பரா. நகர்நீ. 200.).

*[சூறை + ஆடு-,]*

**சூறையாடு²-தல்** *šūṟai-y-aḍu-*, செ.கு.வி. (v.i.) தலைசுற்றல்; to be dizzy from disease, from hunger (செ.அக.).

*[சூறை + ஆடு-,]*

**சூறைவிடு-தல்** *šūṟaiviḍu-*, 18 செ.குன்றாவி. (v.t.) 1. கொள்ளையிடச் செய்தல்; to permit plunder. 2. சொத்தைப் பிறர்க்கு வாரிவிடுதல்; to give one's things to be appropriated promiscuousiy.

தெ. சூரவிடுச்சு; க. சூறெவிடு.

*[சூறை + விடு-,]*

**சூறைவேடன்** *šūṟai-vēḍan*, பெ. (n.) சுறாமீன் வகையுளொன்று; a kind of shark sea-fish (சா.அக.).

*[சூறை + வேடன்]*

**சூன்** *šūn*, பெ. (n.) 1. பிதுக்கம்; swelling. 2. வளைவு; crookedness, bend, irregular-shape. சூன்நிலம். 3. கை முதலியன சூம்பியிருத்தல்; whithering, as of a limb. 4. குற்றம்; defect. 5. கவடம்; guile. "அவன் மனத்திலிருக்கும் சூனுக்கு அளவில்லை". 6. கமுக்கம் (இரகசியம்); secret, inner meaning. "காரியத்தின் சூனெல்லாம் தெரிந்து கொள்ள வேண்டும்." 7. இரண்டு வீட்டுச்சுவர்களின் இடைச்சந்து (இ.வ.); narrow lane between the walls of adjacent houses. 8. புறம்போக்குநிலம்; a piece of unoccupied land.

*[சுல் → சுன் → சூன் (வே.க. 244)]*

**சூன்பிடித்தவன்** *šūn-piḍittavan*, பெ. (n.) வயிறு பெருத்தவன்; one with swallow belly (சா.அக.).

*[சூன் + பிடித்தவன்]*

**சூன்மி** *šūnmi*, பெ. (n.) கற்பழித்தவரை, காய்ந்து கொதிக்கும் இருப்புப்பாவையைத் தழுவும் படிச் செய்து, வருத்தும் நிரயவகை (சேதுபு. தனுக்கோ. 3); a hell where immortal people are punished by being forced embrace red-hot iron statues.

*[சூன் → சூன்மி]*

**சூன்றல்** *šūnṟal*, பெ. (n.) தோண்டுகை (திவா.); scooping out.

*[சூல் → சூன்றல்]*

**சூனம்¹** *šūnam*, பெ. (n.) மான் (பிங்.); deer.

**சூனம்²** *šūnam*, பெ. (n.) முழுவதும் மலந்த மலர் (யாழ்.அக.); full blown flower.

**சூனம்³** *šūnam*, பெ. (n.) வயிற்றுவீக்கம் (தஞ்சை.); swelling of the abdomen.

*[சூன் → சூனம்]*

**சூனம்வயிறு** *šūnam-vayiṟu*, பெ. (n.) 1. பெரு வயிறு; a distanded abdomen. 2. குழந்தைக்கு உண்டாகும் (கல்லீரல் வீக்கம்) பெருவயிறு; pot belly in children.

*[சூனம் + வயிறு]*

**சூனர்** *šūnar*, பெ. (n.) ஊன்விற்போர்; dealers in meat.

*[சூன் + அர்]*

**சூனன்** *šūṉaṉ*, பெ. (n.) 1. பெருவயிற்றோன்; man with a big belly. 2. நோயால் வயிறு பெருத்தோன்; a patient with distended abdomen (சா.அக.).

*[சூன் → சூனன். சூன் = பிதுக்கம்]*

**சூனாம்வயிறு** *šūṉām-vayiṟu*, பெ. (n.) சூனம்வயிறு பார்க்க; see *šūṉam-vayiṟu*.

*[சூனாம் + வயிறு]*

**சூனாவயிறு** *šūṉā-vayiṟu*, பெ. (n.) பெருவயிறு (இ.வ.); swollen abdomen, as of diseased children.

*[சூனம் + வயிறு → சூனவயிறு → சூனாவயிறு]*

**சூனி** *šūṉi*, பெ. (n.) கவடன் (இ.வ.); cunning person (செ.அக.).

மறுவ. வஞ்சகன், ஏமாற்றுக்காரன், ஏய்ப்பவன்.

*[சூன் → சூனி]*

**சூனை**[1] *šūṉai*, பெ. (n.) 1. சிறுமூளைக்குள் உண்ணாக்கைப் போற் புதைந்துகிடக்கும் சதை; மொத்தை; a lobe or small fleshy mass found demarcated in the little brain, intertonsillar lobe or uvula of the cerebellum (சா.அக.). 2. வயிற்று வீக்கம்; swelling of abdomen. 3. குற்றம்; fault. 4. சொத்தை; that which is decayed.

**சூனை**[2] *šūṉai*, பெ. (n.) ஆடு வெட்டப்படும் இடம்; slaughter - house. "சொன்ன சூனைத் துறந்த வற்றட்டன்ன" (நீலகேசி. 314).

**சூனை**[3] *šūṉai*, பெ. (n.) மகள்; daughter.

**சூனைப்பற்று-தல்** *šūṉai-p-paṟṟu-*, செ.கு.வி. (v.i.) வயிறு வீக்கமடைதல்; to swell as of the abdomen (சா.அக.).

*[சூனை + பற்று-,]*

**சூனைவயிறு** *šūṉai-vayiṟu*, பெ. (n.) சூனம் வயிறு பார்க்க; see *šūṉam-vayiṟu* (சா.அக.).

மறுவ. பானைவயிறு

*[சூனை + வயிறு]*

**சூனைவிழு-தல்** *šūṉai-viḻu-*, 2 செ.கு.வி. (v.i.) சொத்தை விழுதல்; to be rotten at the core as teeth.

*[சூனை + விழு-,]*

